*Ubhaya Vedanta Granthamala*

# *Sri Bhagavad Gita*

*with*

***Tamil Translation named** GITARTHAM*

*(with Tamil Transliteration, and word to word meaning)*

*by*



***Abhinava Desika Uttamur***

## *T. Viraraghavacharya*



ஸ்ரீ:

# உபயவேதாந்த க்ரந்தமாலை

# ஸ்ரீ பகவத்கீதையும்

★

(முன்னோர் உரைகளின் பொருள் விளங்க)



அபிநவ தேசிக உத்தமூர்

## தி. வீரராகவாசார்யர்



இயற்றிய பதவுரையும் பொழிப்புரையுமாய் மொழிபெயர்ப்பான

## கீதார்த்தமும்



விலை ] 1972 [ ரூ. 20

*Ubhaya Vedanta Granthamala*

# *Sri Bhagavad Gita*

*with*



*Tamil Translation named GITARTHAM*

*(with Tamil Transliteration, and word to word meaning)*

*by*

*Abhinava Desika Uttamur*

## *T. Viraraghavacharya*

ஸ்ரீ:

# உபயவேதாந்த க்ரந்தமாலை
# ஸ்ரீ பகவத்கீதையும்

★

(முன்னோர் உரைகளின் பொருள் விளங்க)

அபிநவ தேசிக உத்தமூர்

## தி. வீரராகவாசார்யர்

இயற்றிய பதவுரையும் பொழிப்புரையுமாய் மொழிபெயர்ப்பான

## கீதார்த்தமும்

விலை ] 1972 [ ரூ. 20



गीतार्थाः पार्थमोहः स्थिरचिदुपगतिः कर्मयोगोऽस्य धीत्वं
शैघ्र्यं योगोऽथ भक्ताः तदभिगतिभिदा भक्तिरूपं विभूतिः ।
ऐशं रूपं च (स्वदृग्घेतुश्च), पर्वक्रम इह भजनात् प्रागथ क्षेत्रतज्ज्ञौ
त्रैगुण्यं पूरुषोऽग्र्योऽसुरकृति(हृति)रिह दुश्श्रद्धता सर्वसारः ॥



**Sriman Vavajikottai Madabhusi**

***Dharmikarathnam R. Srinivasan***

*(Partner, Bharat Skin Corporation, Madras-3) has borne the entire cost of printing the book GITHARTHAM (Rs. 5001/-)*

# UBHAYA VEDANTA GRANTHAMALA

(Sri U. Ve. Abhinava Desika Uttamur T. VIRARAGHAVACHARYA)

" SIDDHASRAMAM "

25, NATHAMUNI STREET, MADRAS-17

ஸ்ரீ தேசிக ஸ்ரீ ஸூக்திகள் எல்லாம் அச்சிடும் முறையில் தாத்பர்ய சந்த்ரிகையுடன் ஸ்ரீகீதாபாஷ்யம் அச்சாகும்போது பலர் கோரினர் — உலகமெங்கும் பரவிய ஸ்ரீகீதைக்கு நமது ஸித்தாந்தப்படி பாஷ்யகாரரும் தேசிகனும் அருளிய கருத்துக்கள் நன்கு விளங்க தமிழ்மொழிபெயர்ப்பு மிகவும் அவசியமாகும்; வெளியிட வேணுமென்றவாறு. பாஷ்யத்தையும் தாத்பர்ய சந்திரிகையையும் உள்ளபடி மொழி பெயர்த்து விளக்கினுல், அதை ஸம்ஸ்கிருதம் படித்தவர்கள் அந்த க்ரந்தங்களின் அந்வயம் தெளிவதற்குப் பயன்படுத்திக் கொள்ளலாமல்லது ஸம்ஸ்கிருதப் படிப்பில்லாதார் அதனின்று தெளிவு பெறமாட்டார் என்று பலகால் அனுபவித்திருப்பதால் முன்னோர்களின் கருத்துக்களை கீதையின் மொழிபெயர்ப்பும் பொழிப்புரையும் இயற்றித் தெளிவிக்கலாமென்று இவ்வாறு செய்து இப்போது அச்சிட்டுளோம். பாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகைகளில் பல பிற மதவுரைகளிலுள்ள குறைகளை விளக்கியிருப்பினும் அவற்றை வெளியிட இப்போது நோக்குக் கொள்ளவில்லை. இப்போது வெளியிட்டிருப்பதை நன்கு ஊன்றிப் படித்தால் இதிலுள்ள ரஸமும் சுவைத்தால் வேறு உரைகளைக் காணும்போது அவற்றிலுள்ள குறைகளும் சொல்லாமலே விளங்கும்.

மதத்ரயத்திலும் இசையப் பெற்றதும் மஹாபாரதத்தில் பீஷ்ம பர்வத்தில் அச்சேறியதுமான கீதாபாடத்தை விட்டு வேறுவிதமாக கீதா பாட கல்ப்பனைக்கு முயல்வதும் பாரதத்தில் ப்ரக்ஷிப்தமான கீதா ச்லோக எண்ணிக்கையை நம்பி அவ்வாறு எங்கே கிடைக்குமென்ற ஆராய்ச்சியும் வீணே என்றும், வியாஸர் கீதையின் ச்லோக எண்ணிக்கையைக் கூறவில்லையென்று ஸ்ரீதேசிகன் அருளியதே சரியானதென்றும், கீதைக்குப் பிறர் பணிக்கும் பொருளைவிட நமது ஸித்தாந்தத்தில் ஆளவந்தார் காட்டியபடி யமைந்த பொருளே பாங்கானதென்றும், இவ்வுரைகளின்மேல் சிலர் சொல்லும் குற்றங்கள் சாரா என்றும் ஸம்ஸ்கிருதத்தில் பூமிகையில் விரிவாகக் கூறியுளோம்.

முதல் அத்தியாயம் 10வது ச்லோகத்தில் இந்த கீதார்த்த புத்தகத்திற்கு அனுபந்தமும் சேர்க்கப்படுமென்று குறித்தோம். ஆனுல் இப்போது சேர்க்கவில்லை. அந்த ச்லோகத்தில் ஸ்ரீதேசிகன் பாஷ்யகாரரின் கருத்தை விளக்கி, வேறு பொருள் அதற்குப் பொருந்தாதென்று விரிவாகக் கூறியுள்ளார். பிறமதங்களிலும் ஏறக்குறைய ஸ்ரீதேசிகனின் கருத்திற்கிணங்கவே பொருள் தெரிகிறபடியால் அந்தச் சர்ச்சை நிறுத்தப்பட்டது. தவிர இந்த ச்லோகத்திற்கு அத்வைதிமுதலானோர் செய்த

உரைகளிலுள்ள குறைகளை யெடுத்துக் கூறுவது சிலருக்கு அவசியமாகத் தோன்றலாம். ஸம்ஸ்க்ருதம் கற்காதவர்களுக்கு கீதையிலுள்ள சொற்களினின்று தெளியவிருக்கும் விசேஷங்களைக் காட்டி அந்த மதங்களின் நிலைமையை யுணர்த்துவதில் அதிக விரிவாகும். ஸ்ரீ கீதாபாஷ்யம் அச்சிடும்போது பூமிகையிலேயே வடமொழியில் அந்த விசாரம் செய்துள்ளோம். ஆகையால் அனுபந்தம் சேர்க்கப்படவில்லை.

சுருக்கமாக அறிய வேண்டியதாவது:—கீதையில் பகவானுடைய உபதேசமானது போரினின்று விலக முடிவு செய்த விரக்தனான அர்ஜுனனுக்குப் போர் என்ற தர்மத்தை விடலாகாதென்றும் அது ஆத்மாவின் க்ஷேமமாம் மோக்ஷத்திற்கு அவசியமாகுமென்றும் தெரிவிக்கவேயாம். இதில் ஞானம், கர்ம, பக்தி என்ற மூன்றும் கூறப்பெற்றுள்ளன. பலனைக் கோரி கர்மாவைச் செய்யாமல் எதையும் நிஷ்காமமாக பகவானுக்கு அர்ப்பணமாகச் செய்யவேண்டுமென்று கர்மோபதேசமாம். தேஹத்தைவிட வேறானது ஆத்மா என்று ஜ்ஞாநோபதேசமாம். பகவானிடத்தில் பக்தி வேண்டுமெனகிறது மேலே. இவ்வளவு எல்லோரும் இசைந்ததே. இவற்றில் கர்மாவை எனக்கு அர்ப்பணமாகச் செய் என்று கீதாசார்யனை கிருஷ்ணமூர்த்தியான விஷ்ணு அருளிச் செய்திருக்க அதை ஈச்வரார்ப்பணமென்று பொதுவாக்கி பரமசிவனுக்கு—பார்வதீபதிக்கு அர்ப்பணமென்று மாற்றி உலகத்தில் அனுஷ்டானம் செய்வது கீதைப்படி நியாயமாகாது. ஜீவனை தேஹத்தைவிட வேறாக உபதேசிப்பது அவன் தன்னைத் தெரிந்துகொண்டு தனக்கேற்றவாறு மோக்ஷம் பெற பகவானிடம் பக்தி செய்ய வேண்டுமேன்றே. ஜீவ ஜ்ஞானமும் பக்திக்கு வேண்டியதாகும். பகவானின் ஞானமின்றி அவனிடம் பக்தி செய்யலாகாதாகையால் அந்த ஞானமும் அவசியமென்று தெரிந்த விஷயமே. அதையும் கீதை தெரிவிக்கிறது. எனவே பக்தி மோக்ஷத்திற்கு நேராய் முக்கியமான வழி என்றதாம். இங்கே ஜ்ஞானத்தினால் மோக்ஷம், பக்தி அதற்குத் துணை என்பர் அத்வைதிகள். பகவானிடம் பக்தி செய்தால் அவரது அருளால் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றென ஜ்ஞானம் பெறலாம்; அதனால் மோக்ஷமென்று அவர்கள் கருத்தாகும். அப்போதும் இந்த பக்தி பகவத்பூஜை நமஸ்காரம் போன்றதேயன்றி, உபநிஷத்தில் ஓதப்பெற்ற பலவகையான பக்தி மார்க்கங்களல்ல. அவை ஸகுணோபாஸனங்கள். அவற்றால் அர்ச்சிராதி மார்க்கத்தினாலே பரமபதம் சென்று அவனை யனுபவிப்பது வரையிலான பலன்களே ப்ரஹ்மஸூத்திரத்திலும் குறிக்கப்பெற்றன. முக்கியமான அந்த பக்திமார்க்கங்கள் கீதையில் கூறப்படவில்லையென்றால் உபதேசம் பூர்ணமாகாது. 12ஆவது அத்தியாயத்தில் மோக்ஷத்திற்கான அந்த பக்தியைக் கூறுகிறார். அங்கே 'ஏவம் ஸததயுக்தா: என்று தொடங்குவதால் முன் சொன்ன பக்தியும் அவையே' ஆக 'ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே' என்றவிடத்திலும் அவையே கருதப்பெற்றனவாம். ஆதலால் சாதாரண பக்தியைப் பணிப்பது தகாது. அவை இவ்வுலகில் பெற நினைத்த ஜீவப்ரஹ்மைக்யஜ்ஞானத்திற்குக் காரணமாகா. ஆகையால் பக்திக்கு ஜ்ஞானம் அங்கம் பக்தியால் பரமபதம். அதாவது 'தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு ஸம்ஸாரஸாகராத்' என்றபடி ஸம்ஸாரத்தினின்று விடுபடுகை. இந்த ஜ்ஞானம் ஜீவனையுள்ளபடி உணர்தலென்றும் அதன்பிறகே பக்தியென்றும் 18ஆவது அத்தியாயத்தில்

தெளிவாகக் கூறினர். பக்திக்கு உபயோகப்படும்படியான ஜ்ஞான மென்றால் அது—ஜீவன் கீழ்ப்பட்டவன், பகவான் மேம்பட்டவனென்ற ஜ்ஞானந்தானேயாகும். இவ்வாறு ஆராய்ந்தாலே அத்வைதம் கீதையின் பொருளல்லவென்று தேறும். வேண்டுமவர் ஒவ்வொரு வாக்கியத்தை யும் ஊன்றி கவனிக்கலாம். நிற்க.

போதுமளவில் எழுதவான இப்புத்தகத்திற்கே யாரிடம் அச்சுக்குப் பணம் பெறுவது என்று தெரியாமலே, இதை எழுதத் தனி முயற்சி செய்யப் பின்னே ஸந்தர்பம் நேர்படாதென்று துணிந்து ஸம்ஸ்க்ருதம் அச்சாகும் போதே இதை இயற்றி அச்சிட்டுவிட்டோம். ஆசார்யர்களின் திருவுள் ளத்திற்கு இணங்க ஸ்ரீ பகவான் கண்ணன் இதற்குப் பணத்திற்குத் தானே வழி செய்துவிட்டான். ஸ்ரீமான் R. கண்ணன் மூலமாக ஸ்ரீமான் தார்மிகரத்னம் பெருகவாழ்ந்தான் மாடபூசி R. ஸ்ரீநிவாஸன் என்பவர் (4-A. Halls Road, Kilpauk, Madras-10) இதற்கு முழுவுதவி செய்ய முன்வந்தார் என்பது இத்துடன் சேர்ந்திருக்கும் உருவப்படத் தினின்று விளங்கும். சிறு வயதினின்றே ஸகுடும்பமாகவே எவ் வளவோ தர்மங்கள் செய்து வருகின்ற, இவரை இனியும் ஸ்ரீதேசிக க்ரந்தங்களை அச்சிட மிக்க உதவியளிக்கப்போகிறாரென்று எமது நம் பிக்கை. இவர் எல்லாச் செல்வத்துடன் இன்புற்று நீடூழி வாழ்க.

---

## திருத்தம்

கீதை 2ஆவது அத்தியாயத்தில் 30ஆவது ச்லோகத்திற்கு மொழிபெயர்ப்பு விடப்பட்டது. அதை இங்குள்ளவாறு சேர்த்துக் கொள்க :—

தேஹத்தைவிட ஆத்மா வேறாயினும் தேஹத்திலுள்ள ஜாதி நிறம் முதலான தர்மங்கள் ஆத்மாவிற்கு இல்லையாயினும் ஸுகம் துக்கம் ராகம் த்வேஷம் என்ற வேறுபாடுகள் சிலருக்குக் காண்பதுபோல், அழி வுறுகை, அழிவற்றிருக்கை என்ற பேதமும் இருக்கலாகாதோ என்ன, எல்லா ஆத்மாக்களும் ஒருபடிப்பட்டவையே யென்கிறார் :—

See AHC. p. 2

தேஹீ நித்யம் அவத்யோயம் தேஹே ஸர்வஸ்ய பாரத.
தஸ்மாத் ஸர்வாணி பூதாநி ந த்வம் சோசிதும் அர்ஹஸி.

ஸர்வஸ்ய – எல்லா ஜீவனுடையவும்
தேஹே – உடலிலிருககும்
அயம் – கீழ்க்கூறியவாறான
தேஹீ – ஆத்மதத்துவம்
நித்யம் அவத்ய :– எங்கும் கொல்லப்பட மாட்டாது

தஸ்மாத் – ஆகையால்
ஸர்வாணி பூதாநி - எல்லா ப்ராணிகளைப் பற்றியும்
த்வம் – நீ
சோசிதும் - அழியுமோ என்று வருந்த
ந அர்ஹஸி – தகாதவனாகிறாய்.

## BOOKS READY FOR SALE

| No. | Title | Rs. | P. |
|---|---|---|---|
| 1. | Sri Bhashya with Sruta Prakasika | 50 | 00 |
| 2. | Sri Bhashya with Bhashyartha Darpana | 25 | 00 |
| 3. | Vedanta Dipa | 4 | 00 |
| 4. | Paramartha Bhushana | 25 | 00 |
| 5. | Vaiseshika Darsana with Rasayana | 7 | 00 |
| 6. | Tarkasangraha with Sukha Pravesini | 1 | 00 |
| 7. | Upayukta Parayana | 2 | 50 |
| 8. | Rakshagranthas — by Srimad Vedanta Desika | 10 | 00 |
| 9. | Seswara Mimamsa and Mimamsa Paduka with Commentary | 10 | 00 |
| 10. | Yadavabhyudaya with Appayya Dikshita's Commentary and Tamil Translation | 40 | 00 |
| 11. | Paduka Sahasra with ,, ,, | | |
| 12. | Sankalpa Suryodaya with Sanskrit and Tamil Commentaries | 30 | 00 |
| 13. | Subhashita Nivi ,, ,, | 15 | 00 |
| 14. | Sri Bhagavad Gita with Sri Ramanuja Bhashya & Sri Desika's Commentary and footnotes | 35 | 00 |
| 15. | ஸ்ரீ பகவத்கீதை தமிழ் பெயர்ப்பு—கீதார்த்தம் | 20 | 00 |

**All other Sri Desika's works are being published.**

# Ubhaya Vedanta Granthamala

**25, Nathamuni Street, T. Nagar**

**Madras - 17**

श्रीः

# श्रीमद्भगवद्गीताश्लोक-अकारादि

## प्रथमषट्कम्

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| तत्रैकस्थं | 11 | 13 | नमां दुष्कृति | 7 | 15 | भूमिरापो | 7 | 4 |
| तपाम्यहं | 9 | 19 | न मे विदुः | 10 | 2 | भूयएव महा | 10 | 1 |
| तस्मात्प्रणम्य | 11 | 44 | न वेदयज्ञा | 11 | 48 | मच्चित्ता मद्गत | 10 | 9 |
| तस्मात्त्व | 11 | 33 | नान्तोऽस्ति | 10 | 40 | मत्कर्म | 11 | 55 |
| तस्मात्सर्वेषु | 8 | 7 | नाहं प्रकाश | 7 | 25 | मत्तः परतरं | 7 | 7 |
| तुल्यनिन्दा | 12 | 19 | नाहं वेदैर्न | 11 | 53 | मदनुग्रहाय | 11 | 1 |
| ते तं भुक्त्वा | 9 | 21 | नैते सृती | 8 | 27 | मनुष्याणां | 7 | 3 |
| तेषामहं | 12 | 7 | पत्रं पुष्पं | 9 | 26 | मन्मना | 9 | 34 |
| तेषामेवानु | 10 | 11 | परस्तस्मात्तु | 8 | 20 | मन्यसे यदि | 11 | 4 |
| तेषां सतत | 10 | 10 | परं ब्रह्म परं | 10 | 12 | मया तत | 9 | 4 |
| तेषां ज्ञानी | 7 | 17 | पवनः पव | 10 | 31 | मयाध्यक्षेण | 9 | 10 |
| त्रिभिर्गुण | 7 | 13 | पश्य मे | 11 | 5 | मया प्रसन्नेन | 11 | 47 |
| त्रैविद्या मां | 9 | 20 | पश्यादि | 11 | 6 | मय्यावेश्य | 12 | 2 |
| त्वमक्षरं | 11 | 18 | पश्यामि | 11 | 15 | मय्यासक्त | 7 | 1 |
| त्वमादिदेवः | 11 | 38 | पितासि | 11 | 43 | मय्येव मन | 12 | 8 |
| दण्डो दम | 10 | 38 | पिताहमस्य | 9 | 17 | महर्षयस्सप्त | 10 | 6 |
| दंष्ट्राकरा | 11 | 25 | पुण्यो गन्धः | 7 | 9 | महर्षीणां | 10 | 25 |
| दिवि सूर्य | 11 | 12 | पुरुषस्स | 8 | 22 | महात्मा | 9 | 13 |
| दिव्यमाल्या | 11 | 11 | पुरोधसां | 10 | 24 | मा ते व्यथा | 11 | 49 |
| दृष्ट्वेदं मा | 11 | 51 | प्रकृतिं स्वाम | 9 | 8 | मामुपेत्य | 8 | 15 |
| दैवी ह्येषा | 7 | 14 | प्रयाणकाले | 8 | 10 | मांहि पार्थ | 9 | 32 |
| द्यावापृथि | 11 | 20 | प्रह्लादश्चा | 10 | 30 | मृत्युस्सर्व | 10 | 34 |
| द्यूतं छलय | 10 | 36 | बलं बलव | 7 | 11 | मोघाशा | 9 | 12 |
| द्रोणं च | 11 | 34 | बहूनां जन्म | 7 | 19 | यच्चापहा | 11 | 42 |
| धूमो रात्रि | 8 | 25 | बीजं मां | 7 | 10 | यच्चापि | 10 | 39 |
| नच मत्स्था | 9 | 5 | बुद्धिर्ज्ञान | 10 | 4 | यत्करोषि | 9 | 27 |
| नच मां ता | 9 | 9 | बृहत्साम | 10 | 35 | यत्र काले | 8 | 23 |
| नतु मां शक्यसे | 11 | 8 | भक्त्या त्वन | 11 | 54 | यथाकाश | 9 | 6 |
| नभस्स्पृशं | 11 | 24 | भवाप्ययौ | 11 | 2 | यथा नदी | 11 | 28 |
| नमः पुरस्ता | 11 | 40 | भूतग्राम | 8 | 19 | यथा प्रदीप्त | 11 | 29 |

## तृतीयषट्कम्

श्रीः



ஸ்ரீ:

ஸ்ரீக்ருஷ்ணாய பரஸ்மை ப்ரஹ்மணே நம:

# கீதார்த்தம்

श्रीकृष्णं व्यासयोगीन्द्रं यामुनार्यं यतीश्वरम् ।
देशिकञ्च गुरूंश्चान्यान् नत्वा गीतार्थ उच्यते ॥

ஸ்ரீயாமுனமுனிகள் அருளிச் செய்த கீதார்த்த ஸங்க்ரஹத்தின் விரிவாக ஸ்ரீபாஷ்யகாரர் அருளிய கீதாபாஷ்யத்திற்கும் அதன் உரையாக ஸ்ரீதேசிகன் அருளிய தாத்பர்ய சந்த்ரிகைக்கும் இணங்க, பிறமத தூஷணமில்லாமல் பகவத்கீதையின் மொழிபெயர்ப்பும் சுருக்கமான விளக்கமும்.

ஸ்ரீபகவான் சுத்தனாய் ஸர்வவிலக்ஷணனாய் ஜ்ஞாநாநந்தஸ்வரூபனாய் குறையொன்றுமில்லாத குணக்கடலாய், திவ்யமங்கள விக்ரஹமென்ற திருமேனி, அற்புதமான பூஷணம், ஆயுதம், பெரியபிராட்டி இருவிபூதிகள் எல்லாம் உடையனாகி எப்போதும் நித்ய ஸூரிகளால் நுவலப் படுகின்றவன், தான் படைக்கும் ப்ரஜைகளின் க்ஷேமத்திற்காகப் பல அவதாரங்கள் செய்கின்றவன் ஸ்ரீக்ருஷ்ணாவதாரம் செய்து பல மஹான்களை பாகவதோத்தமர்களாக்கியதோடு அர்ஜுனனைப் போரில் விழிய உத்ஸாஹப் படுத்துவது வியாஜமாக, உலகமே உய்வதற்காக, ஜீவாத்மாவைக் காண்பதற்கான கர்மயோகம் ஜ்ஞாநயோகமென்ற உபாயங்களையும் தன்னைப் பெறுவதற்காகப்பிறகு செய்யவேண்டும் பக்தி யோகத்தையும் உபதேசித்தான். அதே பகவத்கீதை.

இவ்வுபதேசம் இத்தனை ஸௌலப்ய ஸௌசீல்யங்களுக்கேற்ப அவன் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் நடந்த போரில் அனைவரும் காணும்படி அர்ஜுனனுக்குத் தேர்ப்பாகனாயிருந்தபோது. இத்தகைய கண்ணனுடைய பெருமையையும் அவன் பாண்டவர்களுக்கு உதவுகின்றமையையும் அறிந்திருந்தும் பிறவிக்குருடனாமையோடு உட்கண்ணுமிழந்ததாலே த்ருதராஷ்ட்ரன் (सुयोधनविजयबुभुत्सया) துர்யோதனனுக்கு வெற்றி வருமா என்று வழி அறிய விரும்பி ஸஞ்ஜயரைக் கேட்டான். இதனின்று கீதையின் 18 அத்யாயங்கள்.

धृतराष्ट्र उवाच—த்ருதராஷ்ட்ரன் சொன்னதாவது.

धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः ।
मामकाः पाण्डवाश्चैव किमकुर्वत सञ्जय ॥ १ ॥

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: |
மாமகா: பாண்டவாச்சைவ கிம்அகுர்வத ஸஞ்ஜய || 1 ||

பதவுரை—

सञ्जय—ஸஞ்ஜயரே!

धर्मक्षेत्रे—தர்மங்கள் விளையுமிடமான --போர் என்ற தர்மத்திற்குப் பாங்காக வெகு விஸ்தாரமான

कुरुक्षेत्रे—(நம் குல கூடஸ்த்தரான குருவின் பெயரால் ப்ரஸித்தமான) குருக்ஷேத்ரத்தில்

युयुत्सवः--போர் புரிய விரும்பினராகி

समवेताः—ஒருவரை ஒருவர் எதிர்த்துச் சேர்ந்தவர்களாய்

मामकाः—என் மக்களும்

पाण्डवाः च एव—பாண்டுவின் மக்களுமேயானவர்

किम् अकुर्वत—என்ன செய்தார்கள்.

धृतराष्ट्र उवाच—இதனின்று பீஷ்மஸ்தவத்தில் 25வது அத்யாயத்தின் தொடக்கம். இதற்கு முன் போர் நடக்கப்போவதை நிறுத்தினால் நலமென்று வ்யாஸ பகவான் உபதேசிக்க, த்ருதராஷ்ட்ரன், 'எவ்வளவு உபதேசம் கேட்டாலும் என் மனம் என் மக்களுக்கே இராஜ்யம் இருக்கவேண்டுமென்ற நோக்கை விடவில்லை. முன்வினைக்கு வசப்பட்டேன்' என்று சொல்லிவிட்டான். போரைக் காணக் கண் கொடுக்கிறேன் என்று வ்யாஸர் சொல்ல, 'காணவேண்டாம். கேட்டால் போதும்' என்றான். ஆகில் உனக்கு ஸஞ்ஜயன் எல்லாம் சொல்வான் என்று சொல்லி வ்யாஸர் சென்றார். ஸஞ்ஜயர் பிறகு பூமியின் விஸ்தாரம், தற்சமயப் போர்நிலை எல்லாம் சொல்லிவிட்டுப் போர் காணச் சென்று பீஷ்மர் சேனைத்தலைவராய் 10நாள் போர்புரிந்து முடிவில் விழும் வரை இருந்து கண்டு உடனே த்ருதராஷ்ட்ரனிடம் வந்து நேர்ந்த ஆபத்தை எடுத்துரைத்தார். அதன்மேல் அதுவரையில் நடந்ததை விரிவாகக் கேட்கவேண்டுமென்று கருதி ஸஞ்ஜயரோடு சொல்வதாம் இது. கீழே 23வது அத்யாயத்திலேயே यतो धर्मस्ततः कृष्णो यतः कृष्णस्ततो जयः—'தர்மமுள்ளவிடத்திலேயே கண்ணன். கண்ணன் உள்ள பக்கத்திற்கே வெற்றி' என்று சொல்லியிருந்தும், முக்கியரான பீஷ்மரே விழுந்து விட்டாரென்று கேட்டும் த்ருதராஷ்ட்ரனுக்கு மகன் வெற்றி பெற வழியறிய விருப்பம் குறையவில்லை. 10வது நாள் இரவில் இப்போது. நடந்ததை எல்லாம் விரிவாக அறியக் கேட்டதும் துர்யோதன் இனியாவது ஜயம் பெற என்ன வழி செய்யலாமென்று தனக்குள் ஒரு முடிவு வரவேண்டுமென்ற அவா அவனுக்கு இருந்ததாலென்க. அதற்குக் காரணம் வ்யாஸரிடம் அவன் சொன்னபடி உட்கண்ணும் கெட்டிருந்ததேயாம். கண்ணன் ஸர்வேச்வரன் அவதாரம்செய்து உலக பாரம் தீர்க்க நினைத்திருக்கிறான் என்று தெரிந்திருந்தும் கண்ணனை விச்வரூபத்தில் கண்டிருந்த பிறகும் எல்லாக் கண்களும் போயின. இப்படியாகி இவ்வாறு கேட்டான் என்றபடி. இதனையுணர்ந்தே ஸஞ்ஜயர் முன்னமே கண்ணனுள்ள பக்கத்திற்கு வெற்றி என்று சொன்னது போதாதென்று கீதோபதேச வரலாற்றின் முடிவில் மீண்டும் இப்படிக்

काश्यांस्तु स्थले मुक्तिः अन्तर्वेद्यां स्थले जले।
कुरुक्षेत्रे त्रिधा मुक्तिः अन्तरिक्षे स्थले जले॥



கண்ணனும் அர்ஜுனனும் ஒரே மனம் பெற்ற பிறகு அங்கேயே வெற்றியும் நீதியும் என்று இருவரையும் சேர்த்து அவனுக்குச் சொல்லுவர்.

धर्मक्षेत्रे कुरुक्षेत्रे—கீழே 'குருக்ஷேத்ரே தப:க்ஷேத்ரே' (பீஷ். 1-2.) என்று தவத்திற்கு க்ஷேத்ரமாகக் கூறப்பட்டது. ஹரிவம்சத்தில் 32வது அத்யாயத்தில் ऋक्षात् संवरणो जज्ञे कुरुः संवरणात् तथा। यः प्रयागादतिक्रम्य कुरुक्षेत्रं चकार ह(85) तद्वैतत् स महाबाहो वर्षाणि सुबहून्यथ। तप्यमाने तदा शक्रो यत्रास्य वरदो बभौ। पुण्यञ्च रमणीयञ्च पुण्यकृद्भिर्निषेवितम् என்றபடி குருவென்பவன் தவம் புரிந்து இந்திரனிடம் வரம் பெற்ற புனிதமான க்ஷேத்ரம் இது. விதை வயலில் விளைகின்றதுபோல் தர்மம் ஒன்று பலவாக விளையும் இடமாகையாலே க்ஷேத்ரமெனப்படுகிறது. பதினெட்டு அக்ஷௌஹிணீ சேனைகளும் சேர்ந்து போர் புரியவேண்டுமளவு பரந்து சிறந்திருப்பதாலும் தர்ம க்ஷேத்ரமாம்.

मामकाः—என் மக்கள் என்றது அவர்களே வெற்றி பெறவேண்டுமென்று இவனுக்கு உள்ள ஆசையைக் காட்டும். மாமக என்ற சொல்லினின்று அஹங்கார-மமகாரமுள்ளவரென்றும் பாண்டு என்பதற்கு வெளுப்பென்ற பொருளாகையால் ஸத்துவகுணம் குறிக்கப்படுவதால் பாண்டவர்கள் அவ்வாறின்றி ஸாத்விகர்களென்றும் தோன்றும். த்ருதராஷ்ட்ரனுக்கு இக் கருத்தில்லையானாலும் தானே தோன்றுவது இது.

चैव; च என்று இருதரத்தாரையும் சேர்த்ததால் அவரவர் செய்ததெல்லாம் அறிய விரும்புகிறான் என்றதாயிற்று. एव என்பதெதற்கு என்னில், एव—அவர்களே, மற்றவர்கள் இவ்விருவரில் உட்பட்டவரானபடியால் அவர்கள் ஏதேனும் போருக்கு முன்னே செய்திருந்தாலும் அது முக்கியமல்ல. சொல்லாமல் விடலாமென்று குறித்ததாம். இனி இவர்களே, சேர்ந்து வாழவேண்டும் ப்ராதாக்களான அண்ணன் தம்பி பிள்ளைகளே என்று வருத்தமும் இதனின்று தோற்றும்.

किमकुर्वत। போர் புரிய விரும்பிச் சேர்ந்தவர்கள் போர்தானே புரிவார்கள். என்ன செய்தார்களென்பதென் என்னில்—இது பீஷ்மபர்வத்தில் 25வது அத்யாயம். இதற்குப் பிறகு (44வது அத்யாயத்திலே) மீண்டும் த்ருதராஷ்டரன் கேட்கப்போகிறான், 'இரு பக்ஷத்தினரும் சேர்ந்தபோது யார் முதலில் அடித்தவர்கள், யார் பிறகு' என்று. ஆகையால் போர் தவிர வேறேதேனும் அதற்காக அவர்கள் செய்திருந்தால் அவை எவை என்று கேள்வி முடிகிறது. உண்ணவிரும்பி உட்கார்ந்தவர்கள் என்ன செய்தார்களென்றால் உண்பதற்குப் பூர்வாங்கமாக என்ன நடத்தினார்கள் என்று கேட்டதாகுமே, அது போலென்க. இதற்கு ஸஞ்ஜயரது மறுமாற்றம் 43வது அத்யாயம்வரை என்னல் வேண்டும், இதில் துர்யோதனனின் மனநிலையும் பேச்சும் அர்ஜுனனின் மனநிலையும் அதை மாற்ற கீதோபதேசமும், அவன் போருக்கு முனைந்ததும், தர்ம புத்ரர் தேரைவிட்டு இறங்கியதும், பீஷ்மத்ரோணக்ருபர்களை தெண்டனிட்டு அனுமதி பெறுவதற்காக இறங்கினார் என மேல் அறியப்பெற்ற

31.2. दृष्ट्वा तु - Duryodhana who started without any fear for the war, became afraid on seeing the army of the opp. side which he did not expect to be of that size. तु indicates this. तु has the meaning of भेद, [illegible] अवधारण emphasis. It can be taken with each word in the sloka — दृष्ट्वा तु, पाण्डवानीकं तु, दुर्योधनस्तु etc. दृष्ट्वा तु - on seeing the Pandava army, he became afraid. पाण्डवानीकं तु = He did not see the [illegible]

ஆம் இங்கு அடங்கியவை. இவற்றில் இங்கு நமக்கு வேண்டியது கீதோபதேசம் வரையில்.

सञ्जय उवाच  ஸஞ்ஜயர் சொன்னதாவது—

दृष्ट्वा तु पाण्डवानीकं व्यूढं दुर्योधनस्तदा ।
आचार्यमुपसंगम्य राजा वचनमब्रवीत् ॥ २ ॥

த்ருஷ்ட்வா து பாண்டவாநீகம் வ்யூடம் துர்யோதநஸ் ததா |
ஆசார்யம் உபஸங்கம்ய ராஜா வசனம் அப்ரவீத் || 2 ||

तदा—இருவகையாரும் போருக்குச் சேர்ந்தபோது,
राजा दुर्योधनः—அரசனை துர்யோதனன்,
व्यूढम्—அணிவகுக்கப்பட்ட,
पाण्डव-अनीकम्—பாண்டவசேனையை,
दृष्ट्वा तु—பார்த்தமட்டிலே,
आचार्यम्-குருவை த்ரோணாசார்யரை
उपसंगम्य—நெருங்கி,
वचनम् अब्रवीत्—சொல் சொன்னான்.

तु என்ற சொல்லானது துர்யோதனனின் நிலை மாறியதைக் குறிக்கும். பாண்டவரைப் பொருட்படுத்தாமல் இருந்தவனுக்கு அணி வகுத்த அவர்கள்சேனையைப் பார்த்தவுடன், இனி மிக்க பலனாம் செலுத்தாமற் போனால் விபரீதமாம் என்ற அச்சம் உண்டாயிற்றென்பதைக் குறிப்பது இது. மேலே இது தெளியப் பெறும்.

पश्यैतां पाण्डुपुत्राणामाचार्य ! महतीं चमूम् ।
व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥ ३ ॥

பச்யைதாம் பாண்டுபுத்ராணாம்ஆசார்ய மஹதீம் சமூம் |
வ்யூடாம் த்ருபதபுத்ரேண தவ சிஷ்யேண தீமதா || 3 ||

आचार्य—ஆசிரியரே!
द्रुपदपुत्रेण—த்ருபதனின் புதல்வனும்
तव शिष्येण—உமது சீடனும்
धीमता—புத்திமானுமான த்ருஷ்டத்யும்னனால்
व्यूढाम्-செம்மையாக வகுக்கப்பட்ட
एताम् महतीम्—இந்த, பெரிதான
पाण्डुपुत्राणां—பாண்டவர்களின்
चमूम्—சேனையை
पश्य—பாரும்.

महतीम्— தன் சேனை பதினொன்று அக்ஷௌஹிணிகள் ; இது ஏழு. ஆயினும் இதைப் பெரிது என்றது, இவ்வளவு சேனை அவர்களுக்குச் சேருமென்று இவன் முன் நினையாமையாலும்-மேல் கூறப்படுகிறபடி சக்தியில் அது மேம்பட்டிருப்பதாலுமென்க. தகப்பன் மூலமாயும் குரு மூலமாயும் இயற்கையாயும் த்ருஷ்டத்யும்னனுக்கு உள்ள பெருமைகளை அறிவிக்க மூன்று அடைமொழிகள்.

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।

அத்ர சூரா: மஹேஷ்வாஸா: பீமார்ஜுநஸமா யுதி |

but on merely seeing their army, he became afraid. दुर्योधनस्तु = not any one else redoubtable Duryodhana who had assured his father abt victory. As Arjuna the clearheaded became confused, Duryodhana the fearless became afraid. Dury-

अत्र—இந்தச் சேனையில்
युधि—போரில்
महेष्वासाः—பெரும்வில் ஆள்கின்ற
शूराः—சூரர்கள்
भीम अर्जुनसमाः—பீமனுக்கும் அர்ஜு னனுக்கும் ஈடானவர்.

முன் एताम् என்றும் இங்கே अत्र என்றும் கூறியது பாண்டவ சேனைக்கு அருகில் தான் இருந்து காண்பிப்பதால். பீமஸேனன் மூலம் தங்களுக்குக் கேடென்ற இவன் நினைவும், 'அகாராதீநி நாமாநி அர்ஜுந த்ரஸ்த சேதஸ:' என்று இவன் (ஸபா.) சொன்னதும் பீமார்ஜுந என்றவிடத்தில் குறித்ததாம். इष्वासமாவது அம்புகளையும் எறியும் வில். असु-क्षेपे ।

யார் அவர் சூரர்கள் என்னில்—

युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥ ४ ॥
धृष्टकेतुश्चेकितानः काशीराजश्च वीर्यवान् ।
पुरुजित् कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गवः ॥ ५ ॥
युधामन्युश्च विक्रान्त उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥ ६ ॥

யுயுதாநோ விராடச்ச த்ருபதச்ச மஹாரத: || 4 ||
த்ருஷ்டகேதுச் சேகிதாந: காசிராஜச்ச வீர்யவாந் |
புருஜித் குந்திபோஜச்ச சைப்யச்ச நரபுங்கவ: || 5 ||
யுதாமந்யுச்ச விக்ராந்த உத்தமௌஜாச்ச வீர்யவாந் |
ஸௌபத்ரோ த்ரௌபதேயாச்ச ஸர்வ ஏவ மஹாரதா: || 6 ||

யுயுதானனும், விராடனும், மஹாரதனான த்ருபதனும், த்ருஷ்டகேதுவும், சேகிதானனும், வீர்யம் மிக்க காசிராஜனும், புருஜித்தும், குந்திபோஜனும், புருஷச்ரேஷ்டனான சைப்யனும், பராக்ரமமுள்ள யுதாமன்யுவும், வீர்யம் மிக்கனான உத்தமௌஜஸ்ஸும், ஸுபத்ரையின் புதல்வனான அபிமன்யு த்ரௌபதியின் புதல்வர்கள் எல்லோருமான மஹாரதர்களும்.

महारथः—ரதன், அதிரதன், மஹாரதன் என்ற பிரிவுகள் உண்டு. (உத். ப. 165) தேரில் நின்று எல்லாம் காத்துப் போர் புரிகின்றவன் ரதன், பலரோடு அவ்வாறு போர்புரிபவன் அதிரதன். லக்ஷம் வில்லாளிகளோடும் போர் செய்யும் வில்வித்யை வல்லன் மஹாரதன். एको दशसहस्राणि योधयेत् यस्तु धन्विनाम् । शस्त्रशास्त्रप्रवीणश्च विज्ञेयस्स महारथः ।

अस्माकं तु विशिष्टा ये तान् निबोध द्विजोत्तम ।
नायका मम सैन्यस्य संज्ञार्थं तान् ब्रवीमि ते ॥ ७ ॥

அஸ்மாகம் து விசிஷ்டா யே தாந் நிபோத த்விஜோத்தம |
நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்த்தம் தாந் ப்ரவீமி தே || 7 ||

द्विजोत्तम!—அந்தணரே!
अस्माकं तु—நமக்குள்ளே
विशिष्टाः—சிறந்தவர்களாய்
मम सैन्यस्य—எனது சேனைக்கு
नायकाः ये—நாதர்கள் யாரோ,
तान्—அவர்களையும்
निबोध—கேளும்.
तान्—அவர்களை
ते—உமக்கு
संज्ञार्थम्—சேர்த்து யறிவதற்காக
ब्रवीमि—சொல்லுகிறேன்.

अस्माकं तु विशिष्टाः—நமக்குள்ளேதான் சிறந்தவர், எதிரிகளைவிடச் சிறந்தவரல்லர் என உட்கருத்து. संज्ञार्थम्—ஸம்ஜ்ஞையாவது இங்கு நன்றாக அறிதல், பெயரைச் சொன்னவுடனே அவர்களின் திறமெல்லாம் நினைவுறுமாகையால் இரு தரத்தாரையும் சேர்த்துச் சீர் தூக்கிப் பார்க்கலாகும்.

भवान् भीष्मश्च कर्णश्च कृपश्च समितिञ्जयः ।
अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिस्तथैवच(जयद्रथः) ॥ ८ ॥
अन्ये च बहवः शूराः मदर्थे त्यक्तजीविताः ।
नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥ ९ ॥

பவாந் பீஷ்மச்ச கர்ணச்ச க்ருபச்ச ஸமிதிஞ்ஜய: |
அச்வத்தாமா விகர்ணச்ச ஸௌமதத்திஸ் ததைவச(ர்ஜயத்ரத:) || 8 ||
அந்யே ச பஹவ: சூரா: மதர்த்தே த்யக்த ஜீவிதா: |
நாநாசஸ்த்ரப்ரஹரணா: ஸர்வே யுத்தவிசாரதா: || 9 ||

समितिञ्जयः-போர்த் திரளை வெல்லும்
भवान्—நீரும்
भीष्मः च—பீஷ்மரும்
कर्णः च—கர்ணனும்
तथा एव—அப்படியேயுள்ள
अश्वत्थामा—அச்வத்தாமாவும்
विकर्णः च—விகர்ணனும்
सौमदत्तिः—ஸோமதத்தன் பிள்ளையான ஜயத்ரதனும்
अन्ये बहवः च—மற்றும் பலரும்
शूराः—சூரர்கள்
मदर्थे—எனக்காக
त्यक्तजीविताः—பலகால் உயிர்விட்டு உழைத்தவர்கள்
नानाशस्त्रप्रहरणाः—பல படைகளால் அடிப்பவர்
सर्वे—எல்லோரும்
युद्धविशारदाः-போரைப் பற்றி நன்கு அனுபவமுள்ளவர்களத்தனை.

கௌரவம் தோற்ற ஆசிரியரை முதலில் எண்ணினான். பாண்டவ சைன்யத்தில் இருபது பேர்களைக் குறித்தான், தன் அணியில் குறித்தது மிகக் குறைவு. அங்குப் பல அடைமொழிகள் ; இங்கு பலருக்குப் பேரும் ப்ரஸித்தமாயில்லை. உயர்விட்டவரென்றது முன்னமே உழைத்தவர் என்பதைக் காட்டுமல்லது தனக்கு வெற்றியைத் தந்தவர் என்னாது. அங்கு எல்லோரும் மஹாரதர் என்றான். இங்கு யுத்த விசாரதர் என்றான். போர் புரியும் வழி தெரியுமத்தனை. இதனால்தான் அந்த சேனையை மஹதீம் என்றான்.

இதனால் தேர்ந்ததென்னவெனில், அதையும் சொல்லுகிறான்.

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥ १० ॥

அபர்யாப்தம் தத் அஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் |
பர்யாப்தம் த்விதமேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் || 10 ||

तत्—ஆகையால்
भीष्म अभिरक्षितम्—பீஷ்மரால் காக்கப்படும்
अस्माकं बलं—நமது படையானது
अपर्याप्तम्—இவர்களைவெல்லப் போதாது.
भीम अभिरक्षितम् इदम्—பீமனால் காக்கப்படும் இந்த
एतेषां बलम्—இப்பாண்டவர்களின் படையானது
पर्याप्तम्—நம்மை வெல்லப் போதுமானது.

20 வது அத்யாயத்தில் த்ருதராஷ்ட்ரனே ஒரு சேனை பீஷ்மநேத்ரம், மற்றொன்று பீமநேத்ரமென்று கூறினான். 19ல் அர்ஜுனன் பீமசேனனை த்ருஷ்டத்யும்னனுடன் சேர்த்து ப்ரதானமாக்கி அணிவகுப்பதாகச் சொன்னான். இந்த ச்லோகத்திற்கு இவ்வாறே உரை செய்ய வேண்டும். வேறு தகாதென்பதை தாத்பர்ய சந்திரிகையைக் கொண்டு அனுபந்தத்தில் விளக்குவோம். மூன்று மதபாஷ்யகாரர்களும் முதல் அத்யாயத்திற்கு விரிவாக உரை எழுதவில்லை. நம் பாஷ்யத்திலேயே சிறிது விரிவு. மூவர் கருத்தும் ஒன்றே. பாண்டவர்களைக் கொல்லமாட்டேன் என்ற பீஷ்மர் காக்கும் படை நமது. தார்தராஷ்ட்ரர்கள் நூறு பேரையும் கொல்லுவேன் என்று ப்ரதிஜ்ஞை செய்துள்ள பீமஸேனன் முன் நின்று காக்கும் படை அவர்களது. அதனாலும் கீழ்க்கூறிய காரணத்தினாலும் அதற்கும் இதற்கும் வாசியுண்டு என்று கருத்தாகுக.

இப்படி தனக்கு உள்ள அச்சத்தை தனியே குருவிடம் வெளியிட்டு கவனத்துடன் இனி நடத்த வேண்டியதை யறிவிக்கிறான்.

अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः ।
भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि ॥ ११ ॥

அயநேஷு ச ஸர்வேஷு யதாபாகம் அவஸ்த்திதா: |
பீஷ்மம் ஏவாபிரக்ஷந்து பவந்தஸ் ஸர்வ ஏவஹி || 11 ||

सर्वेषु च अयनेषु—எல்லாப்பாதைகளிலும்
यथाभागम्—அவரவருக்குப் பிரித்த பாகத்தின்படி
अवस्थिताः—நிலைத்திருந்து
सर्वे भवन्तः—நீங்கள் எல்லோரும்
भीष्मम् एव—பீஷ்மரையே
अभिरक्षन्तु—காக்கவேணும்.
हि—ப்ரஸித்தமே-இது தெரிந்த விஷயமே.

भवन्तः । भवांश्च कर्णकृपादयश्च भवन्तः । இதுவரையில் துர்யோதனனின் பேச்சாக ஸஞ்ஜயர் சொன்னது—இனி ஸஞ்ஜயருடையதே.

तस्य संजनयन् हर्षं कुरुवृद्धः पितामहः ।
सिंहनादं विनद्योच्चैः शंखं दध्मौ प्रतापवान् ॥ १२ ॥

*தஸ்ய ஸஞ்ஜநயந் ஹர்ஷம் குருவ்ருத்த: பிதாமஹ:.*
*ஸிம்ஹநாதம் விநத்யோச்சை: சங்க்கம் தத்ம்ெள ப்ரதாபவாந் ||12||*

तस्य—அந்த துர்யோதனனுக்கு
हर्षं संजनयन्—துக்கம் போக்கி ஸந்தோஷம் அதிகம் உண்டு பண்ண
कुरुवृद्धः—கௌரவர்களில் முதிர்ந்த
प्रतापवान्—பராக்ரமம் மிக்கருமான
पितामहः—பாட்டனார்முறையுமான பீஷ்மர்
सिंहनादं विनद्य—தாமே சிங்கநாதம் செய்து
उच्चैः शंखं दध्मौ—உரப்பாக சங்கமும் ஊதினர்.

**ततः शंखाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।**
**सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत् ॥ १३ ॥**

*தத: சங்க்காச்ச பேர்யச்ச பணவாநககோமுகா: |*
*ஸஹஸைவாப்யஹந்யந்த ஸ சப்தஸ் துமுலோऽபவத் || 13 ||*

ततः—பீஷ்மர் ஊதியறிவித்ததால்
शंखाः च—சங்குகளும்
भेर्यः च—பேரீவாத்யங்களும்
पणव आनक गोमुखाः-பணவம், ஆனகம் கோமுகமென்ற வாத்யங்களும்
सहसा एव—அதிகவிரைவிலேயே
अभ्यहन्यन्त—முழங்கப்பெற்றன.
स शब्दः—அந்த ஓசையானது
तुमुलः अभवत्—நெருக்கமாயிற்று.

शंखाश्च भेर्यश्च—பேரீ முதலான வாத்யங்கள் போலே சங்குகளும் இன்னார் இன்னார் ஊதுகின்றனர் என அறியவியலாதபடி ஊதப்பட்டன பீஷ்ம சேனையில் என்று கருத்தாம். அந்த சங்கங்களுக்குத் தனிப் பேரும் தெரியவில்லை. பாண்டவர்பக்கலில் அதன் வாசி மேலே கூறப்படும்.

**ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ ।**
**माधवः पाण्डवश्चैव दिव्यौ शंखौ प्रदध्मतुः ॥ १४ ॥**
**पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनञ्जयः ।**

*தத: ச்வேதைர் ஹயைர் யுக்தே மஹதி ஸ்யந்தநே ஸ்த்திதௌ |*
*மாதவ: பாண்டவச்சைவ திவ்யௌ சங்க்கௌ ப்ரதத்மது: || 14 ||*
*பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேசோ தேவதத்தம் தநஞ்ஜய: |*

ततः-கௌரவர்பக்கல் வாத்யவொலி கிளர்ந்த பிறகு
श्वेतैः हयैः—வெண்குதிரைகளுடன்
युक्ते—கூடிய
महति स्यन्दने—பெரிய தேரில்
स्थितौ—வீற்றிருந்த
माधवः—திருமாலும்
पाण्डवः च एव—அர்ஜுனனுமே
दिव्यौ शंखौ-சிறந்த சங்குகளை
प्रदध्मतुः—முழங்கினார்கள்.
हृषीकेशः—ஸர்வேச்வரன் ஊதியது
पाञ्चजन्यम्—பாஞ்சன்னியமென்ற அவர் சங்கை
धनञ्जयः—அர்ஜுனன் ஊதியது
देवदत्तम्—தேவதத்தமென்கிற வன்சங்கை.

கண்ணன் போர் புரிகின்றவனல்லனாகிலும் ஸஹாயமாயிருப்பதாகச் சொல்லியிருந்ததால் அவன் சொல்படி தாங்கள் நடப்பது தெரிய அவனையே முன்னிட்டனர் பாண்டவர். அவனது அந்தரங்கனை அர்ஜுனன் அடுத்தபடி ஊதினான். பாடக்ரமப்படியும் முதலில் திருமால், பிறகு அர்ஜுனன் என்று கொள்க. பாஞ்சஜன்யமென்ற வாக்யம் அவரவர் சங்கின் பெயரைக் குறிக்கவாகையால் மீமிசையாகாது.

पौण्ड्रं दध्मौ महाशंखं भीमकर्मा वृकोदरः ॥ १५ ॥
अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः ।
नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६ ॥

युधिष्ठिरः - யுத்தத்தில் ஸ்திரமாக நிலைத்திருப்பவர்
See Ar P 26-2-74/76

பௌண்ட்ரம் தத்மௌ மஹாசங்க்கம் பீமகர்மா வ்ருகோதர: ‖ 15 ‖
அநந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்ட்டிர: |
நகுல: ஸஹதேவச்ச ஸுகோஷமணிபுஷ்பகௌ ‖ 16 ‖

भीमकर्मा—பயங்கரமான செயல்களையுடைய
वृकोदरः—பீமஸேனன் (செந்நாயின் வயிறு போன்ற வயிறு உடையன்)
पौण्ड्रं—பௌண்ட்ரமென்ற பேர் உடைய
महाशंखं—பெரிய சங்கை
दध्मौ—முழங்கினான்.
कुन्तीपुत्रः—குந்தியின் புதல்வனாய்
राजा—அரசனுமான
युधिष्ठिरः—தர்மபுத்ரர்
अनन्त विजयम्—அழிவற்ற வெற்றியுடையதாய் அப்பெயர் கொண்ட சங்கை முழங்கினார்.
नकुलः सहदेवः च—நகுலஸஹதேவர்களும்
सुघोषमणिपुष्पकौ—ஸுகோஷம், மணிபுஷ்பகமென்ற சங்கங்களை முழங்கினார்கள்.

அர்ஜுனனுக்கு அடுத்தபடி (19. அ-ல் கூறியவாறு) போரில் பங்கெடுப்பவன் பீமஸேனனாகையால் அவனை முழக்குவித்து தர்மபுத்திரர் முழங்கினார். மற்றவரும் குந்தீ புத்ரர்களேயானாலும், மூத்தவராகி, குந்தியை புந்நரகத்தினின்று நீக்கியவர் இவராகையால் இவரையே குந்தீ புத்ரரென்றது. குந்தீ புத்ரரானபடியால் இவரும் பீமார்ஜுன ஸமரென்றதுமாம்.

काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः ।
धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥ १७ ॥
द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।
सौभद्रश्च महाबाहुः शंखान् दध्मुः पृथक् पृथक् ॥ १८ ॥

காச்யச்ச பரமேஷ்வாஸ: சிகண்டீ ச மஹாரத: |
த்ருஷ்டத்யும்நோ விராடச்ச ஸாத்யகிச்சாபராஜித: ‖ 17 ‖

*த்ருபதோ த்ரௌபதேயாச்ச ஸர்வத: ப்ருதிவீபதே |*
*ஸௌபத்ரச்ச மஹாபாஹு: சங்காந் தத்மு: ப்ருதக் ப்ருதக் || 18 ||*

परमेष्वासः—மிக்க வில்லாளியான
काश्यः च—காசியனும்
महारथः—மஹாரதனான
शिखण्डी च—சிகண்டியும்
धृष्टद्युम्नः—சேனாபதியான த்ருஷ்டத்யும்னனும்
विराटः च—விராடனும்
अपराजितः—தோற்கடிக்கப்படாத
सात्यकिः च—ஸாத்யகியும்
पृथिवीपते-அரசரான த்ருதராஷ்டரே
द्रुपदः—த்ருபதனும்
द्रौपदेयाः च—த்ரௌபதியின் பிள்ளைகளும்
महाबाहुः—புஜபலம் உடைய
सौभद्रः च—அபிமன்யுவும்
सर्वतः--அங்கங்கு இருந்து கொண்டு
पृथक् पृथक्—தனித்தனியே
शंखान् दध्मुः—சங்கு முழங்கினர்.

**स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।**
**नभश्च पृथिवींचैव तुमुलोऽभ्यनुनादयन् ॥ १९ ॥**

*ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத் |*
*நபச்ச ப்ருதிவீஞ் சைவ துமுலோऽப்யநுநாதயந் || 19 ||*

सः—அந்த ஒவ்வொரு
घोषः—சங்கொலியும்
तुमुलः—நெருங்கியதாய்
नभः च—வானத்தையும்
पृथिवीं च—பூமி முழுதுமே
अनुनादयन् अपि — எதிரொலியுள்ளதாக்கியதாலும்
धार्तराष्ट्राणाम् एव--த்ருதராஷ்ட்ரரான உமது புதல்வர்களுடையவே
हृदयानि—ஹ்ருதயங்களை
व्यदारयत्-- பிளந்தது.

अनुनादयन्नपि என்றும் धार्तराष्ट्राणामेव என்றும் அந்வயமாம். எங்கும் பரவினாலும் அதனால் உமது பிள்ளைகளின் நெஞ்சுகளே பிளக்கப் பட்டன என்ற இப் பேச்சினின்று தன் மக்களுக்குத் தோல்வி என்று த்ருதராஷ்ட்ரன் தெளியலாம். ஸஞ்ஜயர் போரைப் பற்றி இவனுக்குச் சொல்வதெல்லாம் இனியாவது மஹாராஜர்மனம் திருந்துமா என்ற நோக்கினாலென்க.

**अथ व्यवस्थितान् दृष्ट्वा धार्तराष्ट्रान् कपिध्वजः ।**
**प्रवृत्ते शस्त्रसंपाते धनुरुद्यम्य पाण्डवः ॥ २० ॥**
**हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।**

*அத வ்யவஸ்த்திதாந் த்ருஷ்ட்வா தார்த்தராஷ்ட்ராந் கபித்வஜ: |*
*ப்ரவ்ருத்தே சஸ்த்ரஸம்பாதே தநுருத்யம்ய பாண்டவ: || 20 ||*
*ஹ்ருஷீகேசம் ததா வாக்யம் இதம் ஆஹ மஹீபதே |*

अथ—ஒலியால் நெஞ்சு பிளக்கப் பட்ட பிறகும்
व्यवस्थितान्—போருக்கு நிலைத்திருப் பவராக
धार्तराष्ट्रान्—உமது பிள்ளைகளை
कपिध्वजः—ஹனுமானைக் கொடியில் உடைய
पाण्डवः—அர்ஜுனன்
दृष्ट्वा—பார்த்து
शस्त्रसम्पाते—படையெறிதலாம்போர்
प्रवृत्ते—தொடங்கவிருக்கும்போது
धनुः—காண்டிவத்தை
उद्यम्य—கையில் உயரவேந்தி
तदा—அப்போது
हृषीकेशम्—பகவானைக் குறித்து
इदं वाक्यं—இவ்வார்த்தையை
महीपते—மஹாராஜரே!
आह—சொன்னான்.

कपिध्वजः—என்ற அடைமொழி சங்குகள் முழங்கின பிறகு அனுமானும் கர்ஜனை செய்து பிறருக்கு பயமுறுத்தினரென்று குறிக்கவாம். அவர் பீமஸேனனுக்கு அவ்வாறு வரம் அளித்திருக்கின்றாரே. हृषीकेशम्—எல்லாம் ஏவுகின்றவனை இவன் குதிரை ஏவ ஏவுகிறான்-இதுவும் அவன் ஏவலே. எல்லா இந்திரியங்களையும் குதிரையாக உபநிஷத்தும் கூறும்.

अर्जुन उवाच—அர்ஜுனன் சொன்னதாவது—

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥ २१ ॥
यावदेतान् निरीक्षेऽहं योद्धुकामान् अवस्थितान् ।
कैर्मया सह योद्धव्यमस्मिन् रणसमुद्यमे ॥ २२ ॥

ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்த்தாபய மேऽச்யுத || 21 ||
யாவதேதாந் நிரீக்ஷேऽஹம் யோத்துகாமாந் அவஸ்த்திதாந் |
கைர் மயா ஸஹ யோத்தவ்யம் அஸ்மிந் ரணஸமுத்யமே || 22 ||

अच्युत—நழுவாத பகவானே!
उभयोः सेनयोर्मध्ये—இருசேனைகளின் இடையில்
मे रथं—எனது தேரை
स्थापय—கொண்டு நிறுத்த வேணும்.
योद्धुकामान्—போர்புரிய விரும்பிய
अवस्थितान्—நிலைநின்ற
एतान् अहं—இவர்களை நான்
यावत् अवेक्षे—காண்பேன்.
अस्मिन् रणसमुद्यमे—இந்தப் போரெழுச்சியில்
मया सह—என்னோடு சேர்ந்திருந்து
कैर्योद्धव्यम्—எவர் போர்புரிவரோ?

उभयोर्मध्ये—இங்கே நம் சேனையைமட்டும் காணலாமல்லது பிற சைன்யம் காணவாகாது. अच्युत—உனது ஸ்வரூப ஸ்வபாவங்கள் என்றும் அழியாதவை. ஆச்ரிதர்களை நழுவாமற் காப்பவனும் நீயே. (சேனையைக் கண்டவுடன் அர்ஜுனன் நழுவப் போகிறான். கண்ணன் நழுவாமல் அவனையும் நழுவாதபடி செய்யப் போகிறானென்பது தோன்றும்.)

यावत्—முழுமையும். அல்லது நான் பார்க்கும் வரையில். அல்லது இனி நான் காண வேண்டுமென்று எதிர்காலக் குறிப்பு இது. எதிரி

களைக் காண்பதை இங்குச் சொல்வதாகில் மேல் ச்லோகம் மீமிசையா மென்னில், அதற்கு துர்யோதநாதிகளின் புத்தியைப் பழிப்பதிலே நோக்கு. அல்லது இது தன் பக்கல் சேர்ந்து உதவுகின்றவரைப் பற்றவென்க. மேல் ச்லோகம் எதிரிசைன்யத்திலிருப்பவரைப் பற்ற வென்பது தெளிவு—

योत्स्यमानान् अवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३ ॥

யோத்ஸ்யமாநாந் அவேக்ஷேऽஹம் ய ஏதேऽத்ர ஸமாகதா: ।
தார்த்தராஷ்ட்ரஸ்ய துர்புத்தேர் யுத்தே ப்ரியசிகீர்ஷவ: ॥ 23 ॥

अत्र—இந்த இடத்திலே
ये एते—யாவர் இவர்
युद्धे—போரில்
दुर्बुद्धेः—புத்தி கெட்டவனை
धार्तराष्ट्रस्य—த்ருதராஷ்ட்ரர் மகனுக்கு
प्रियचिकीर्षवः—இஷ்டம் செய்ய விரும்பி
समागताः—வந்திருக்கின்றனரோ,
योत्स्यमानान्—போர் புரியப் போகின்ற அவர்களை
अहं अवेक्षे यावत्—நான் காண்பேன்.

सञ्जय उवाच—ஸஞ்ஜயன் சொன்னதாவது—

एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥ २४ ॥
भीष्मद्रोणप्रमुखतः सर्वेषाञ्च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान् समवेतान् कुरूनिति ॥ २५ ॥

ஏவம் உக்தோ ஹ்ருஷீகேசோ குடாகேசேந பாரத ।
ஸேநயோ ருபயோர் மத்யே ஸ்த்தாபயித்வா ரதோத்தமம் ॥ 24 ॥
பீஷ்மத்ரோணப்ரமுகத: ஸர்வேஷாஞ்ச மஹீக்ஷிதாம் ।
உவாச பார்த்த பச்யைதாந் ஸமவேதாந் குரூந்இதி ॥ 25 ॥

भारत—பரதவம்சத்தில் தோன்றியவரே!
गुडाकेशेन—அர்ஜுனனால்
एवम् उक्तः—இப்படி கூறப்பெற்ற
हृषीकेशः—ஸர்வேச்வரன்
उभयोः सेनयोः मध्ये—இருசேனைகளின் இடையில்
भीष्मद्रोणप्रमुखतः-பீஷ்மத்ரோணர்கள் முன்னிலையில்
सर्वेषां महीक्षितां च—எல்லா அரசர்கள் எதிரிலேயே
रथोत्तमम्—உயர்ந்த தேரை
स्थापयित्वा—நிறுத்தி
पार्थ—அத்தை மகனே!
समवेतान्—போர் புரியச் சேர்ந்த
एतान् कुरून्—இந்தக் கௌரவர்களை
पश्य—காண்பாயாக
इति उवाच—என்று சொன்னான்.

गुडाकेशन் பெரிய மயிர் முடியுடையன், அல்லது गुडाका—உறக்கம், அதற்கு ஈசன் ஆள்பவன், அதை வென்றவன். भारत—துஷ்யந்தன்

மகனை பரதனையிட்டு வம்சப்ரஸித்தி (ஆதிபர்வம்). கண்ணன் தேரோட்டி நிறுத்தியதும் பேசியதும் அவர்கள் எதிரில். एतान् कुरून्— குருக்களை एतान् என்று கைநீட்டிக் காண்பித்தபோதே அவர்கள் தேசழிந்து நின்றனர். கண்ணனுக்கு அர்ஜுனன்பக்கத்தினரைக் காண்பிப்பதிலே நோக்கில்லை.

तत्रापश्यत् स्थितान् पार्थः पितॄनथ पितामहान् ।
आचार्यान् मातुलान् भ्रातॄन् पुत्रान् पौत्रान् सखींस्तथा २६ ॥
श्वशुरान् सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।

*தத்ராபச்யத் ஸ்த்திதாந் பார்த்த: பித்ரூந் அத பிதாமஹாந் |*
*ஆசார்யாந் மாதுலாந் ப்ராத்ரூந் புத்ராந் பௌத்ராந் ஸகீம்ஸ்ததா ||*
*ச்வசுராந் ஸுஹ்ருதச்சைவ ஸேநயோருபயோரபி |*

अथ पार्थः—பிறகு அர்ஜுனன்
तत्र—அப்போர்க்களத்தில்
उभयोः सेनयोः अपि-இருசேனைகளிலும்
स्थितान्—இருந்த
पितॄन्—தமப்பன்மார்களையும்
पितामहान्—பாட்டனார்களையும்
आचार्यान्—ஆசிரியர்களையும்
मातुलान्—அம்மான்களையும்
भ्रातॄन्—ஸஹோதரர்களையும்
पुत्रान्—பிள்ளைகளையும்
पौत्रान्—பேரன்களையும்
तथा सखीन्—அவ்வாறே தோழர்களையும்
श्वशुरान्—மாமனார்களையும்
सुहृदश्च एव—சிநேகிதர்களையுமே
अपश्यत्—பார்த்தான்.

सखीन् - ஸமவயதிலிருக்கும் தோழர்களை. सुहृदः-வயது ஸமமின்றியே அன்பரானவரை. एव என்றதால் அங்குள்ளார் எல்லோரையும் ஒவ்வொரு உறவு முறையிலேயே கண்டான். च என்பது மற்றும் பல உறவுகளைச் சேர்ப்பதற்கு. உறவுக்கு உறவானவரும் உறவினரே. உறவாகக் காண்பதே தயக்கத்திற்குக் காரணம்.

तान् समीक्ष्य स कौन्तेयः सर्वान् बन्धून् अवस्थितान् ॥ ॥ २७
कृपया परयाऽऽविष्टो विषीदन् इदमब्रवीत् ।

*தாந் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வாந் பந்தூந் அவஸ்த்திதாந் ||*
*க்ருபயா பரயாऽऽவிஷ்டோ விஷீதந் இதம் அப்ரவீத் |*

कौन्तेयः सः—குந்தியின் குமரனவன்
अवस्थितान् तान्—நிற்கும் அவர்களை
सर्वान्—எல்லோரையும்
बन्धून् समीक्ष्य-- பந்துக்களாகக்கண்டு
परया कृपया—பிறர் துக்கம் பொறுக்க மாட்டாமையின் மிகுதியால்
विषीदन्—பிரிவுக்கு வருந்தி
इदम् अब्रवीत्-கீழ்வருமாறு கூறினான்.

கிருபையாவது பிறர் துக்கம் போக்க வேண்டுமென்ற நோக்கு. விஷாதமாவது அதை நினைத்துத் தானும் துக்கப்படுகை.

अर्जुन उवाच—அர்ஜுனன் சொன்னதாவது—

दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम् ॥ २८ ॥
सीदन्ति मम गात्राणि मुखञ्च परिशुष्यति ।
वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥ २९ ॥
गाण्डीवं स्रंसते हस्तात् त्वक्चैव परिदह्यते ।
न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ॥ ३० ॥

த்ருஷ்ட்வேமம் ஸ்வஜநம் க்ருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்த்திதம் ||28||
ஸீதந்தி மம காத்ராணி முகஞ்ச பரிசுஷ்யதி |
வேபதுச்ச சரீரே மே ரோமஹர்ஷச்ச ஜாயதே || 29 ||
காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக்சைவ பரிதஹ்யதே |
ந ச சக்நோம்யவஸ்த்தாதும் ப்ரமதீவ ச மே மந: || 30 ||

कृष्ण !—கிருஷ்ணு!
युयुत्सुं समुपस्थितम्—போர் புரிய விரும்பிச் சேர்ந்த
इमं स्वजनम्—இந்த சொந்த ஜனத் தொகையை
दृष्ट्वा मम—கண்டவுடனே எனக்கு
गात्राणि—அங்கங்கள்
सीदन्ति—சோர்கின்றன.
मुखं च—முகமும்
परिशुष्यति—உலர்கின்றது.
मे शरीरे—எனது உடலில்
वेपथुः च—நடுக்கமும்
रोमहर्षः च—மயிர் சிலிர்ப்பும்
जायते—உண்டாகின்றது.
गाण्डीवम्—காண்டீவமென்ற வில்
हस्तात्—கையினின்று
स्रंसते—நழுவுகின்றது.
त्वक् च एव—தோலுமே
परिदह्यते—எரிக்கப்படுகிறது
अवस्थातुं च—நிற்கவும்
न शक्नोमि—மாட்டிலேன்.
मे मनः च—என் மனதும்
भ्रमति इव—சுழல்கின்றது போலும்.

निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ।
न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥ ३१ ॥

நிமித்தாநி ச பச்யாமி விபரீதாநி கேசவ |
ந ச ச்ரேயோऽநுபச்யாமி ஹத்வா ஸ்வஜநம் ஆஹவே || 31 ||

केशव—ஸர்வேச்வரனே!
निमित्तानि—துர்நிமித்தங்களையும்
विपरीतानि—எதிரிகளுக்கு முழுமையும் கேடாக
पश्यामि—பார்க்கிறேன்.
आहवे—போரில்கூட
स्वजनं—சொந்த ஜனங்களை
हत्वा—கொல்வதால்
श्रेयः—நன்மையை
न अनुपश्यामि च—சிந்தித்தும் காண்கிறேனல்லேன்.

எதிரிகளைக் கொன்றால் தானே இராஜ்யம் பெறலாமென்றால், அதற்குச் சொல்லுகிறான்—

**न कांक्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ।**

*ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகாநி ச |*

| | |
|---|---|
| **कृष्ण**—கிருஷ்ணா! | **राज्यं**—ராஜ்யத்தையும் |
| **विजयं**—எனக்கு வெற்றியை | **सुखानि च**—சுகங்களையும் |
| **न कांक्षे**—நான் விரும்பவில்லை | **न च कांक्षे**--விரும்புகிறேனுமல்லேன். |

வெற்றி இராஜ்யம் பெறவாம். இராஜ்யம் பல சுகங்களுக்காகவாம். ஒன்றும் வேண்டா. ஏனெனில்—

**किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा ॥ ३२ ॥**

**येषामर्थे कांक्षितं नो राज्यं भोगाः सुखानि च ।**

**त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥ ३३ ॥**

*கிம் நோ ராஜ்யேந கோவிந்த கிம் போகைர் ஜீவிதேந வா || 32 ||*

*யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகா: ஸுகாநி ச |*

*த இமேऽவஸ்த்திதா யுத்தே ப்ராணாம்ஸ் த்யக்த்வா தநாநி ச || 33 ||*

| | |
|---|---|
| **गोविन्द**—கோவிந்தா! | **येषाम् अर्थे**—எவர்களுக்காக |
| **राज्येन**—ராஜ்யத்தினால் | **नःकांक्षितम्**-நமக்கு வேண்டுவனவோ |
| **नः किम्**—எமக்கென்ன ? | **ते इमे**—அவர்களே இவர்கள் |
| **भोगैः**—ஸுகங்களால் | **प्राणान् धनानि च**—உயிரையும் பணத்தையும் |
| **जीवितेन वा**—உயிரினால்தான் | |
| **नः किम्**—எமக்கென்ன ? ராஜ்யமும் போகங்களும் ஸுகங்களும் | **त्यक्त्वा**—உபேக்ஷித்து |
| | **युद्धे अवस्थिताः**—போரில் நின்றனரே. |

நாம் ராஜ்யாதிகளை விரும்பினது இவர்களுக்காக என்பதென் என்னில்—

**आचार्याः पितरः पुत्राः तथैव च पितामहाः ।**

**मातुलाः श्वशुराः पौत्राः स्यालाः संबन्धिनस्तथा ॥ ३४ ॥**

*ஆசார்யா: பிதர: புத்ரா: ததைவ ச பிதாமஹா: |*

*மாதுலா: ச்வசுரா: பௌத்ரா: ஸ்யாலா: ஸம்பந்திநஸ்ததா || 34 ||*

ஆசிரியர்களும் தந்தைகளும், பிள்ளைகளும் அப்படியே பாட்டன்மார்களும், மாமன்மார்களும், மாமனார்களும், பேரன்களும், மைத்துனர்களும், அவ்வாறே ஸம்பந்திகளுமாகின்றனரே இவர்கள். 34

உறவினர்களேயாயினும் வதை செய்ய முயன்றிருக்கின்றனரே. பகைவரான பிறகு அவர்களோடு ராஜ்யம் ஆள்வதோ என்னில்—

**एतान् न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।**

**अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥ ३५ ॥**

*ஏதாந் ந ஹந்தும் இச்சாமி க்நதோऽபி மதுஸூதந |*

*அபி த்ரைலோக்ய ராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு மஹீக்ருதே || 35 ||*

मधुसूदन—மது என்ற அசுரனைக் கொன்ற மஹானே!
घ्नतः अपि—என்னைக்கொல்கின்றவ ராலும்
त्रैलोक्य राज्यस्य—மூவுலகும் ராஜ்யமா கும் அதின் காரணத்திற்காகவும்
एतान् हन्तुम्—இந்த பந்துக்களைக் கொல்ல
न इच्छामि—விரும்புகிறேனல்லேன்.
महीकृते—இந்த பூமிக்காக மட்டும்
किं नु—ஏனோ? (விரும்புவேனு)

ஆகில் போரில் கூடுமான வரையில் இந்த பந்துக்களை உயிரோடு விட்டு துர்யோதநாதிகளை மட்டுமாவது கொல்லலாமென்னில்—

निहत्य धार्तराष्ट्रान् नः का प्रीतिः स्याज्जनार्दन ।

நிஹத்ய தார்த்தராஷ்ட்ராந் ந: கா ப்ரீதி: ஸ்யாத் ஜநார்தந |

जनार्दन—மோக்ஷமளிப்பவனே!
धार्तराष्ट्रान्—துர்யோதநாதிகள் நூறு பேரை
निहत्य—கொல்வதால்
नः—நமக்கு
का प्रीतिः स्यात्—என்ன ஸந்தோஷம் வரும்.

அவர்கள் செய்த தீம்புகளுக்கு ப்ரதி செய்வதில் ப்ரீதி ஏன் இல்லை யென்னில்—

पापमेवाऽऽश्रयेदस्मान् हत्वैतान् आततायिनः ॥ ३६ ॥

பாபமேவாச்ரயேத் அஸ்மாந் ஹத்வைதாந் ஆததாயிந: || 36 ||

आततायिनः—தீம்புகள் செய்த
एतान्—இவர்களை
हत्वा—கொல்வதால்
अस्मान्—நமக்கு
पापम् एव—பாபந்தான்
आश्रयेत्—சேரும்.

आततायिन.—தீம்பு செய்பவராகிற

இவர்கள் अग्निदो गरदश्चैव शस्त्रपाणिर्धनापहः। क्षेत्रदारहरश्चैव षडेते आततायिनः ஏன்கிறபடி, நெருப்பு வைத்தவர், விஷமிட்டவர், படையெடுத்தவர், பணம்பறித்தவர், பூமியைப் பறித்தவர், பெண்டாட்டியைப் பறிக்க முயன்றவர். ஒவ்வொரு தோஷமிருப்பினும் ஆததாயியே. எல்லா தோஷ முள்ளவர் முழு ஆததாயிகள் என்பது உண்மை. ஆயினும் இவர்களைக் கொல்வதும் பாபமே. நமக்கு ராஜ்யாதிகள் வேண்டிராத போது அவசியமாய் இது பாபமே யாகும். படையெடுப்பதும் பணம் பறிப்பதும் நமக்கும் தானே நேரும்.

இது வரையில் சொன்னதை முடிக்கிறான்—

तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान् सबान्धवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥ ३७ ॥

தஸ்மாத் நார்ஹா வயம் ஹந்தும் தார்த்தராஷ்ட்ராந் ஸபாந்தவாந் |
ஸ்வஜநம் ஹி கதம் ஹத்வா ஸுகிந: ஸ்யாம மாதவ || 37 ||

आततायिनमायान्तं हन्यादेवाविचारयन् ।
नाततायिवधे दोषः हन्तुर्भवति कश्चन ॥
ஆததாயிகளைக் கொல்வது தீங்காகாது
See Nr. p. 26-3-29/30

| | |
|---|---|
| तस्मात्—ஆகையால் | माधव—மதுவம்சத்தில் தோன்றிய திருமாலே! |
| सबान्धवान्—பந்துக்களையும் | स्वजनम्—சொந்த ஜனத்தை |
| धार्तराष्ट्रान्—துர்யோதநாதிகளையும் | हत्वा—கொன்று |
| हन्तुं—கொல்வதற்கு | कथं हि—எப்படிதான் |
| वयं—விவேகிகளான நாம் | सुखिनः स्याम—சுகம் பெற்றிருப்போம்? |
| न अर्हाः—தகுந்தவரல்லோம். | |

இங்கும் ஸுகமில்லை. பாபம் நேர்ப்படுவதால் பின்னும் ஸுகமில்லை. இந்த விவேகம் அவர்களுக்கு இல்லையா என்பீர். இல்லையே. மேலும் ஆததாயிகளைக் கொன்றால் குற்றமில்லை யென்று சாஸ்த்ரம் உண்டே என்பீர். ஒருவர் இருவராகில் ஏதோ பொறுக்கலாம். இவர்களைக் கொல்வதால் குலத்திற்கே க்ஷயமென்கிறான்—

**यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः ।**
**कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥ ३८ ॥**
**कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।**
**कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥ ३९ ॥**

*யத்யப்யேதே ந பச்யந்தி லோபோபஹதசேதஸ: |*
*குலக்ஷயக்ருதம் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம் || 38 ||*
*கதம் ந ஜ்ஞேயம் அஸ்மாபி: பாபாத் அஸ்மாந்நிவர்திதும் |*
*குலக்ஷயக்ருதம் தோஷம் ப்ரபச்யத்பிர் ஜநார்தந || 39 ||*

| | |
|---|---|
| लोभोपहतचेतसः—பேராசையால் மனம் கெட்டவராகி | जनार्दन—பகவானே! |
| एते—இந்த துர்யோதநாதிகள் | कुलक्षयकृतं-குலங்களின் அழிவாலாம் |
| कुलक्षयकृतं—குலத்தை அழிப்பதால் ஆக்கப்படும் | दोषं...குறையை |
| दोषं—குறையையும் | प्रपश्यद्भिः—தெளிவாகக் காண்கிற |
| मित्रद्रोहे—சிநேகமுள்ள நம்மை த்ரோஹம் செய்வதில் | अस्माभिः—நம்மால் |
| पातकं च—மஹாபாபத்தையும் | अस्मात् पापात्—இப்பாபத்தினின்று |
| न पश्यन्ति यद्यपि—பார்க்கவில்லையாலும் | निवर्तितुं—விலகுவது |
| | कथं न ज्ञेयम्—அறியப்படாதது என்னே? |

குல க்ஷயத்தால் வரும் தோஷமென்னவெனில்—

**कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।**
**धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४० ॥**

*குலக்ஷயே ப்ரணச்யந்தி குலதர்மா: ஸநாதநா: |*
*தர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்நம் அதர்மோऽபிபவத்யுத || 40 ||*

कुलक्षये—தலப் பெரியோர் அழிவில்
सनातनाः—தொன்று தொட்டு வரும்
कुलधर्माः—குலதர்மங்கள்
प्रणश्यन्ति—அழியும்.
धर्मे नष्टे—தர்மம் நஷ்டமானல்
कृत्स्नं कुलं—அக் குலம் முழுமையும்
अधर्मः उत—அதர்மமும்
अभिभवति—அமுக்கி மேலோங்கும்.

பொதுவான தர்மங்கள் நிற்க, ஒவ்வொரு குலத்திற்கும் குலதர்மம் என்பது வேறு. அதுவும் ஸநாதனமேயாகும். அக் குலத்திலுள்ள பெரியோர் அழிந்தால் அதை யனுஷ்டிப்பவரில்லாமையால் சிறுவர் அந்த தர்மத்தைக் கைவிடுவதாம். (குலதர்மம் அழியக்கூடாதென்றே குரங்குக்கும் அரக்கனுக்குங்கூட அரசு அளித்தான் ஸ்ரீராமபிரான்.) தர்மானுஷ்டானம் பாபத்தைக் குறைத்து வரும். க்ருத்யங்களைச் செய்யாமை நேர்ந்தால் அக்ருத்யம் தலையோங்கும். பந்து ஜனமல்லவே யென்றாலும் இது தகாது.

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसंकरः ॥ ४१ ॥

அதர்மாபிபவாத் க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய: ।
ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸங்கர: ‖ 41 ‖

कृष्ण—கிருஷ்ணா!
अधर्म-अभिभवात्- அதர்மம் பலத்தைக் குறைப்பதால்
कुलस्त्रियः—குலஸ்த்ரீகள்
प्रदुष्यन्ति—கெட்டுவிடுகின்றனர்.
वार्ष्णेय—விருஷ்ணிவம்ச திலகமே!
स्त्रीषु—ஸ்த்ரீகள்
दुष्टासु—கெட்டார்களாகில்
वर्णसंकरः—வேறு வர்ணக்கலப்பு
जायते—நேர்படும்.

அதர்மத்தினல் அபிபவமாவது மனம் கெடுகை. ப்ரதுஷ்யந்தி என்று உடல்கேட்டைக் கருதியாம். ஸ்த்ரீகளில் வேசிகள் என்றும் குலஸ்திரீகள் என்றும் இருவகுப்பு உண்டு. குலஸ்த்ரீகள் தம் வர்ணத்தினனை பர்த்தா ஒருவனோடு மட்டும் சேர்ந்து பதிவ்ரதையாயிருப்பாள். பர்த்தாவுக்கு வேசி முதலான வேறு ஸ்த்ரீ ஸம்பந்தம் இருப்பினும் ஸ்த்ரீ கெட்டால் வர்ணத்தை நிர்ணயிக்க முடியாது. நம்மால் பர்த்தாக்களை இழந்த குலஸ்த்ரீகளும் அதர்மம் ஓங்கினல் கெடுவதாம்.

संकरो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः ॥ ४२ ॥

ஸங்கரோ நரகாயைவ குலக்நாநாம் குலஸ்ய ச ।
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்தபிண்டோதக க்ரியா: ‖ 42 ‖

संकरः—வர்ணக்கலப்பானது
कुलघ्नानां—குலத்தை அழித்தவர்களுக்கும்
कुलस्य च—குலத்தினருக்கும்
नरकाय एव—நரகத்திற்கேயாம்
एषां पितरः—அந்தந்தக் குலத்து முன்னோர், பித்ருலோகத்தைச்சார்ந்தவர்கள்
लुप्तपिण्ड उदकक्रियाः—பிண்டப்ரதானம் தர்ப்பணம் எல்லாம் இழந்தவராய்
पतन्ति हि...கீழ் விழுவரே.

தாங்கள் கெட்டதோடு பித்ருலோகத்தைச் சார்ந்தார்களுக்கு ச்ராத்தம் தர்ப்பணம் செய்ய உரிமையற்ற பிள்ளைகளே குலத்திற்கு ஏற்படுவதால் பித்ருக்கள் பசியால் வருந்தி கெடும்படியும் செய்வதால் இவர்களுக்கு நரகமே.

பித்ருக்கள் விழுவதற்குக் காரணம் கூறுகிறான்—

**दोषैरेतैः कुलघ्नानां वर्णसंकरकारकैः ।**

**उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥ ४३ ॥**

*தோஷைரேதை: குலக்நாநாம் வர்ணஸங்கரகாரகை: |*

*உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா: குலதர்மாச்ச சாச்வதா: || 43 ||*

एतैः—கீழ்க்கூறிய
वर्णसंकरकारकैः—வர்ணக்கலப்புக்குக் காரணமான
कुलघ्नानां दोषैः-குலத்தையழிப்பவரின் குற்றங்களால்
शाश्वताः—அநாதியாய் வந்த
कुलधर्माः—குலதர்மங்களும்
जातिधर्माः च—ஜாதிதர்மங்களும்
उत्साद्यन्ते—அழிக்கப்படுகின்றன.

குலதர்மங்ககள் அழிவது முன்னமே கூறினேன். அநாதியான ஜாதி தர்மமும் அழியும். (43)

**उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।**

**नरके नियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४ ॥**

*உத்ஸந்நகுலதர்மாணும் மநுஷ்யாணும் ஜநார்தந |*

*நரகே நியதம் வாஸோ பவதீத்யநுசுச்ரும || 44 ||*

**उत्सन्नकुलधर्माणां**—குலதர்மம் அழிந்தொழிந்த
**मनुष्याणां**—மனிதர்களுக்கு
**नरके नियतं**--எப்போதும் நரகத்திலே
वासः भवति—குடியாம்.
जनार्दन—பகவானே!
इति अनुशुश्रुम—என்று ஸம்ப்ரதாயமாகக்கேட்டோம்.

பித்ருக்களின் வீழ்ச்சியால் குலத்திற்கு நரகமென்றேன். குலதர்மம் விட்டிருப்பதாலும் நரகமே நிலைக்குமென்று வேதம் ஓதும்.

**अहो बत महत् पापं कर्तुं व्यवसिता वयम् ।**

**यत् राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यताः ॥ ४५ ॥**

*அஹோ பத மஹத் பாபம் கர்த்தும் வ்யவஸிதா வயம் |*

*யத் ராஜ்யஸுகலோபேந ஹந்தும் ஸ்வஜநம் உத்யதா: || 45 ||*

**राज्यसुखलोभेन** -ராஜ்யம் பெறுதலாம் ஸுகத்தில் ஆசையால்
**स्वजनम्**—சொந்த ஜனத்தை
**हन्तुम् उद्यताः यत्**—கொல்ல முயன்றோமென்ற
**महत् पापम्**—மஹாபாபத்தை
**कर्तुम् वयम्**—செய்வதற்கு நாம்
**व्यवसिताः**—முடிவு கட்டினோம்.
**अहो बत**—மிகவும் வருத்தம்.

இப்போது நீ வெறுமனே யிருக்கில் உன்னை அவர்கள் படைகளால் வதைப்பர். सर्वत एवाऽऽत्मानं गोपायेत् ; தன்னைக் காத்துக் கொள்ள வேணுமே என்னில்—

**यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।**
**धार्तराष्ट्रा रणे हन्युः तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६ ॥**

*யதி மாம் அப்ரதீகாரம் அசஸ்த்ரம் சாஸ்த்ரபாணய: |*
*தார்த்தராஷ்ட்ரா ரணே ஹந்யு: தந்மே க்ஷேமதரம் பவேத் || 46 ||*

| | |
|---|---|
| धार्तराष्ट्राः—துர்யோதநாதிகள் | शस्त्रपाणयः—கையில் படை கொண்டு |
| रणे—போரில் | हन्युः यदि—கொல்லுவார்களாகில், |
| अप्रतीकारम्—ப்ரதி செய்யாமல் | तत् मे—அது எனக்கு |
| अशस्त्रम्—படையும் கைவிட்ட | क्षेमतरं—மிகவும் க்ஷேமமாக |
| माम्—என்னை | भवेत्—ஆகும். |

அவர்கள் அடிக்கும் போது நான் ப்ரதி செய்யாமல் படையையும் விட்ட பிறகும் இது தான் சமயமென்று அவர்கள் என்னைக் கொன்றால், குலங்கள் பல அழிவதைவிட எனக்கு ஒருவனுக்குக் கேடு கூடுமென் பேன். அவர்களை காப்பதாலான தர்மமும் காக்கும்.

அப்ரதீகாரம் அசஸ்த்ரமென்றதால் நான் போர் புரியப் போவ தில்லை யென்றதாயிற்று.

सञ्जय उवाच—இப்படி அர்ஜுனன் சொன்னதைச் சொல்லி ஸஞ்ஜயர் தாமே மேலே சொன்னார்—

**एवमुक्त्वाऽर्जुनः संख्ये रथोपस्थ उपाविशत् ।**
**विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥ ४७ ॥**

*ஏவம் உக்த்வாऽர்ஜுந: ஸங்க்யே ரதோபஸ்த்தே உபாவிசத் |*
*விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்நமாநஸ: || 47 ||*

| | |
|---|---|
| अर्जुनः—அர்ஜுனன் | संविग्नमानसः—மனம் சலித்தவனாய் |
| संख्ये—போர்க்களத்தில் | सशरं चापं—அம்புடன் வில்லை |
| इति उक्त्वा—இவ்வாறு கூறி | विसृज्य—விட்டுவிட்டு |
| शोक—இத்தனைபேரும் குலங்களும் அழிவதாகுமே என்ற சோகத் தினால் | रथोपस्थे—தேர்த்தட்டில் |
| | उपाविशत्—உட்கார்ந்துவிட்டான். |

தனக்கு அழிவு நேர்படினும் போர் புரியேன் என்று கூறி, குலங் களின் அழிவுக்காக வருந்தி, முன்னமே நழுவியதாய் விழாமலிருந்த வில்லை ஒரு கையினின்றும் மற்றொரு கையினின்று அம்பையும் தானே விட்டுத் தேரில் போருக்கு நிற்கும் இடத்தை விட்டு அதன் மடியில் உட்கார்ந்துவிட்டான்.

ஸ்ரீபகவத்கீதை யென்ற உபநிஷத்தாம்
யோக சாஸ்த்ரமாகிற க்ருஷ்ணார்ஜுன ஸம்பாஷணத்தில்
முதல் அத்யாயம் முற்றும்.

सशरं चापं - [illegible]
[illegible] 26-4-31

யோக சாஸ்த்ரத்திற்கிணங்க

அர்ஜுநவிஷாதயோகமென்ற முதலத்யாயத்திற்குப் பிறகு

## 2வது அத்யாயம்

सञ्जय उवाच--முன் தொடங்கிய ஸஞ்ஜயரே சொல்லுகிறார்—

**तं तथाकृपयाऽऽविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।**
**विषीदन्तमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥ १ ॥**

*தம் ததாக்ருபயாऽऽவிஷ்டம் அச்ருபூர்ணாகுலேக்ஷணம் |*
*விஷீதந்தம் இதம் வாக்யம் உவாச மதுஸூதந; ‖ 1 ‖*

तथा कृपया आविष्टम् } தகாத இடத்தில் துக்கம் நீக்கநோக்குடையனாய்
विषीदन्तं—அவர்களின் அழிவுக்கு வருந்துகின்ற
अश्रुपूर्ण आकुल ईक्षणम् } கண்ணீர் நிறைந்து கலங்கிய கண்களையுமுடைய
तं—சொல்லித் தேரில் உடகார்ந்துவிட்ட அர்ஜுனனைக் குறித்து
मधुसूदनः—மதுவை ஸம்ஹரித்த பகவான்
इदं वाक्यं—இந்த வாக்யத்தை
उवाच—சொன்னார்.

முதலில் க்ருபை அதாவது பிறர்கஷ்டம்பொறாமை, பிறகு வருத்தம், அதனால் கண்ணீர்பெருக்கு என்ற அடைவு இங்கே ச்லோகத்தில்.

**कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।**
**अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥ २ ॥**

*குதஸ் த்வா கச்மலம் இதம் விஷமே ஸமுபஸ்த்திதம் |*
*அநார்யஜுஷ்டம் அஸ்வர்க்யம் அகீர்த்திகரம் அர்ஜுந ‖ 2 ‖*

अर्जुन—அர்ஜுனா!
त्वा—உனக்கு
अनार्यजुष्टम्—அறிவிலிகளால் பெறப்படுவதும் (அறிஞர்களால் கொள்ளப்படாததும்)
अस्वर्ग्यं—மறுமைக்கு விரோதமானதும்
अकीर्तिकरं—அபகீர்த்தியை விளைவிப்பதுமான
इदं कश्मलम्—இந்த அழுக்கு-சோகம்
विषमे—அஸ்த்தானத்தில் (தகாத விஷயத்தில்)
कुतः—ஏனோ
समुपस्थितम्—நேர்ந்தது?

கச்மலமாவது அழுக்கு. இங்கு அஸ்த்தானத்தில் தயையும் சோகமும் கச்மலமாகும். अनार्यजुष्टम्-போருக்கு முனைந்த பிறகு இதுவரையில் க்ஷத்ரிய குலத்தில் யாராவது போர்க்களத்தில் ஜீவகாருண்யத்தினால் அதை நிறுத்தியதுண்டா? குலதர்ம நாசம், குல ஸ்திரீகளுக்குக் கேடு என்றவாறான காரணங்கள் அவர்களுக்குப் புலப்படவில்லையா, பாபிகளைக் கொன்று தானே தர்மத்தைக் காக்கவேண்டும். நீ ஒருவன் நின்றாலும் மற்றவர் ஆர்யர்களானபடியாலே போரை நிறுத்தாமல் நடத்தும்போது எல்லாம் வருவதே. அதை உன்னால் நிறுத்த முடியுமா? என்றவாறாக அவனுடைய குறைகளுக்கெல்லாம் மறுமாற்றம் இங்கு அடங்கியது காண்க. (இங்கு பகவானுக்குச் சிற்றம் சிறிது தோற்றும்.)

स्वर्गं---பாபிகளான பல வீரர்களுக்கும் வரும் வீர ஸ்வர்க்கத்தை நீக்குவதும் அதர்மமான படியாலே உனக்கும் மறுமைக்கு ஹானியே. இவ்விடத்தில் அவன் ராஜ்யத்தை விரும்பாமையால் இம்மைப் பலனின் இழவைக் குறிக்காமல் மறுமையை மட்டும் எடுத்தது.)

**मा क्लैब्यं गच्छ कौन्तेय नैतत् त्वय्युपपद्यते ।**

**क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परन्तप ॥ ३ ॥**

*மா க்லைப்யம் கச்ச கௌந்தேய நைதத் த்வய்யுபபத்யதே |*

*க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட்ட பரந்தப || 3 ||*

कौन्तेय—குந்தியின் புதல்வனே!
क्लैब्यं—அதைர்யத்தை
मा गच्छ—பெறுதே
एतत् त्वयि—இது உன்னிடத்தில்
न उपपद्यते—இருக்கத்தகாது.
क्षुद्रम्—ஆபாஸமான
हृदयदौर्बल्यं-நெஞ்சின் பலவீனத்தால் வந்த சோகத்தை
त्यक्त्वा—விட்டு
परन्तप-பகைவரை எரிக்கின்றவனே!
उत्तिष्ठ—எழுந்திரு.

क्लैब्यम्—அலியாகை ; பொதுவாக இங்கு சோகம் கருதப்பெறும். ஸ்ரீபாஷ்யத்தில் ஸாங்க்யாதிக்ரணத்தில் "தயையாவது பிறரின் துக்கத்தைப் பொறுமை" என்று கூறி அந்த தயையைத் தகாத இடத்தில் உபயோகித்தால்—அதாவது வதைக்க வேண்டியவரை தயை கூர்ந்து வதைக்காமல் விட்டால் அது அவனுக்கு अपुंस्त्वमेव आपादयति...புருஷனல்லன் என்கிற இகழ்ச்சியை விளைவிக்கும் என்றார். அர்ஜுனன் அஸ்த்தானத்தில் தயை வைப்பதால் அவனுக்கும் இதாமென்று இச்சொல்லினின்று தோற்றும். மேலே उपहतस्वभाव என்ற பதத்தாலே அதைர்யத்தைச் சொல்லப் போவதால் அதே क्लैब्य என்ற சொல்லின் பொருளாகக்கூடும். मा क्लैब्यं गच्छ कौन्तेय என்றவிடத்தில் क्लैब्यं मा स्म गमः पार्थ என்றும் பாடமுண்டு.

अर्जुन उवाच—அர்ஜுனன் சொல்வதாவது—

**कथं भीष्ममहं संख्ये द्रोणञ्च मधुसूदन ।**

**इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन ॥ ४ ॥**

*கதம் பீஷ்மம் அஹம் ஸங்க்யே த்ரோணஞ்ச மதுஸூதந |*

*இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதந || 51 ||*

मधुसूदन!—மது என்ற அஸுரனை அழித்தவனே!
अरिसूदन!—பகைவர்களை எல்லாம் அழிக்கின்றவனே!
अहं संख्ये—நான் போரில்
पूजार्हौ—பூஜிக்கத்தக்கரான
भीष्मं द्रोणञ्च—பீஷ்மரையும் த்ரோணாசார்யரையும்
कथं—எப்படி
इषुभिः—அம்புகளைக்கொண்டு
प्रतियोत्स्यामि—எதிர்ப்பேன்?

குலம் கெடும், ஜாதியும் கெடும், பாபிகளுமாவோம் என்றவாறுன இவனுடைய வருத்தங்களுக்குக் கண்ணன் பரிஹாரம் குறித்துவிட்டார். இவன் தெளிந்தான்; ஆயினும் போர் செய்வது வெற்றியையும் ராஜ்யத்தையும் விரும்பினுல் தானே. முன்னோர்கள் செய்ததுமெல்லாம் அந்த நோக்குடன் தானே. எனக்கு அவற்றில் விருப்பம் இல்லையாகையால், உண்மையில் நமக்கு விரோதிகளல்லாதவரும் நமக்கு நன்மையே தேடுகின்றவருமான பீஷ்ம த்ரோணுதிகளைக் கொன்று ராஜ்யம் பெறுவது நியாயமில்லை என்கிருன். अर्जुन! நீர் கொல்வதும் விரோதிகளையே தானே!

गुरून् अहत्वा हि महानुभावान् श्रेयश्चर्तुं भैक्षमपीह लोके ।
हत्वाऽर्थकामांस्तु गुरूनिहैव भुञ्जीय भोगान् रुधिरप्रदिग्धान् ॥ ५ ॥

குருந் அஹத்வா ஹி மஹாநுபாவாந்
ச்ரேயச்சர்த்தும்பைக்ஷமபீஹ லோகே |
ஹத்வா அர்த்த காமாம்ஸ்து குருந் இஹைவ
புஞ்சீய போகாந் ருதிரப்ரதிக்தாந் || 5 ||

महानुभावान्--மிக்கப்ரபாவம் உடையராய்
गुरून्—ஆசார்யர்களுமான பீஷ்மாதிகளை
अहत्वा—கொல்லாமல்
इह लोके—யாம் அரசாண்ட இவ்வுலகிலேயே
भैक्षं चर्तुमपि—பிச்சைக்குத் திரிவதும்
श्रेयो हि—சிறந்ததன்றே!
अर्थकामान्—சொத்தை விரும்பும்
गुरून्—பெரியோர்களை
हत्वा—கொன்றுவிட்டு
इहैव—அவர்களைக்கொன்ற விடத்திலேயே
रुधिरप्रदिग्धान्--அவர்களுடைய இரத்தக்கறை ஏறியிருக்கும்
भोगान्—அவர்களுக்கு இஷ்டமான போக்யவஸ்துக்களை
कथं भुञ्जीय?—எப்படி அனுபவிப்பேன்?

4-வது ச்லோகத்திலிருந்து कथं என்கிற சொல்லை இங்கு भुञ्जीय என்றதோடும் சேர்க்க. பெரியோர்கள்...நம்மால் ஆராதிக்கப்பட வேண்டியவர்கள், போகங்களை அநுபவிக்க விரும்பி இருக்கும் போது அதற்கு மாருக அவர்களுடைய இரத்தம் சிந்திப் பட்டிருக்குமவற்றை நாம் அனுபவிக்க விரும்புவதைவிட அவற்றை அவர்களுக்கே விட்டுவிட்டு பிச்சை யெடுத்துப் பிழைப்பதே சிறந்தது. (5)

பெரியோர்களைக் கொல்வது தகாது என்ருன். துரியோதனுதிகளைக் கொல்வதும் தகாதென்று அன்பு வைத்துச் சொல்லுகிருன்.

न चैतद् विद्मः कतरन्नो गरीयो यद्वा जयेम यदि वा नो जयेयुः ।
यानेव हत्वा न जिजीविषामः तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः ॥ ६ ॥

ந சைதத் வித்ம: கதரந் நோ கரீயோ
யத்வா ஜயமே யதிவா நோ ஜயேயு: |

யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாம:
தேऽவஸ்த்திதா: ப்ரமுகே தார்த்தராஷ்ட்ரா: || 6 ||

धार्तराष्ट्राः—துரியோதனாதிகள்
नः यदि वा जयेयुः—நம்மை வெல்லு வார்கள் என்பதா
यत् वा जयेम—நாமே அவர்களைக் கொல்வதா
कतरत् नः—எது நமக்கு
गरीयः—சிறந்ததாகும்?
एतत् च—இதையும்
न विद्मः—நாங்கள் அறியோம்.
यान् एव—எந்த துர்யோதனாதிகளையே
हत्वा—கொன்றுவிட்டு
न जिजीविषामः—உயிர் தரிக்க விரும்பாமல் இருக்கிறோமோ
ते—அந்த துர்யோதனாதிகளே
प्रमुखे—போரில் எதிரில்
अवस्थिताः—நிற்கின்றனர்.

உண்மையில் துர்யோதனாதிகள் பகைவராயினும் அவர்களைக் கொன்றுவிட்டு நாம் வாழ விரும்பவில்லை. இப்படியிருக்க நாம் அவர்களை வெல்வதா, நம்மை அவர்கள் வெல்வதா, எது சிறந்தது? (அவர்களை வென்றால் நாமும் வாழப் போவதில்லையாகையால் இருவருக்கும் அழிவு. அவர்கள் வென்றால் நமக்கு மட்டும் அழிவு. போரே செய்யவில்லை யென்றால் ஒருவருக்கும் அழிவில்லை என்று உட்கருத்தாம்.)

கண்ணபிரான் மோக்ஷம் என்கிற பலனுக்காகப் போரை நடத்த விரும்பியிருக்கிறார் என்பதை அறியமாட்டாமல் அர்ஜுனன் வெற்றிக்காகவே போர் புரிவதென்று நினைத்து அதை மறுப்பானாய், அவர் கருத்தை நன்கு அறிய விரும்பித் தன்னைச் சீடனாகக் கொண்டு உபதேசிக்க வேண்டுமென்று சரணாகதி செய்து வேண்டுகிறான்.

कार्पण्यदोषोपहतस्वभावः पृच्छामि त्वा धर्मसंमूढचेताः ।
यच्छ्रेयः स्यात् निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम् ॥ ७ ॥

கார்ப்பண்யதோஷோபஹதஸ்பாவ:
ப்ருச்சாமி த்வா தர்மஸம்மூடசேதா: |
யச்ச்ரேயஸ் ஸ்யாத் நிச்சிதம் ப்ரூஹி தந்மே
சிஷ்ய ஸ்தேऽஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம் || 7 ||

धर्म—தர்ம விஷயத்திலே
संमूढ चेताः—மோகங் கொண்ட மனமுடையவனாய்
कार्पण्यदोष—சோகந் தவிர்க்க உபாயம் அறியாமையால்
उपहतस्वभावः—ஸ்வபாவமான தைர்யத்தை இழந்தவனாகி
त्वा पृच्छामि—உம்மைக் கேட்கிறேன்.
मे—எனக்கு
श्रेयः स्यात्—நன்மையாகும் என்று
यत् निश्चितं—எது நிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ
तत् ब्रूहि—அதை அருள வேணும்
अहं—நான்
ते शिष्यः—உமது சீடன்
त्वां प्रपन्नं—உமக்கு அடைக்கலமான
मां शाधि—எனக்கு உபதேசிக்க வேணும்.

कार्पण्यமாவது ஏழ்மை. எதைச் செய்ய வேண்டும் என்பதே அறியாமையும், சோகம் போக்க வழி பெறுமையும். விடவேண்டியதை விடாமை कार्पण्यं இங்கென்பர் சிலர். கண்ணன் தயை கூரும்படி தோற்றும் தீனதசை कार्पण्यं என்றும் கூறுவர்.

धर्मसम्मूढचेताः—ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று தர்மத்தில் மூன்று பிரிவுகள் உண்டு. மோக்ஷம் விரும்பாதவரும் போருக்கு வந்த பிறகு ராஜ்யம் வேண்டாமென்று தோன்றினாலும் நைமித்திகமாக நேர்பட்ட போரைச் செய்தேயாக வேண்டும் என்கிற தர்ம நிலையும் இவன் அறியான். மோக்ஷத்திற்கு இது உதவும் என்று எவ்வாறு அறிவான் ?

இந்த ச்லோகத்தை சிஷ்யன் ஆசார்யனை ஆச்ரயிக்கும் போது உபதேச ரூபமாகக் கேட்டு அடைக்கலம் புகுவது ஸம்ப்ரதாயம். மோக்ஷ தர்மம் அறியாமல் கதியற்று ஸம்ஸாரத்தில் உழன்றுவரும் எனக்கு நற்கதி உபதேசிக்க வேண்டும். அடியேன் இனி சிஷ்யனானேன் என்று தெரிவித்து வேண்டுவதாம். இக்கருத்தில் श्रेयः என்கிற பதத்திற்கு श्रेयश्च प्रेयश्च என்ற कठोपनिषத்தின்படி மோக்ஷோபாயம் என்று பொருள் கூறலாம். (7)

கார்ப்பண்யம் என்கிற தோஷம் தனக்குத் தலையேறி இருக்கிறது என்பதை விளக்குகிறான்—

न हि प्रपश्यामि ममापनुद्यात् यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।
अवाप्य भूमावसपत्नमृद्धं राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८ ॥

ந ஹி ப்ரபச்யாமி மமாபநுத்யாத்
யச்சோகமுச்சோஷணமிந்த்ரியாணாம் |
அவாப்ய பூமாவஸபத்நம்ருத்தம்
ராஜ்யம் ஸுராணாமபி ச ஆதிபத்யம் || 8 ||

भूमौ—பூமியில்
असपत्नम्—பகைவர் அற்ற
ऋद्धम्—மிக்க வளமுள்ள
राज्यं—ராஜ்யத்தையும்
सुराणां—தேவதைகளுக்கு
आधिपत्यं च—அரசனாயிருப்பையும்
अवाप्य अपि—அடைந்த பிறகு கூட அல்லது அடைவித்தும்
यत्—எந்த உபாயமானது
मम—எனக்கு
इन्द्रियाणां—இந்திரியங்களை
उच्छोषणं—அவ்வின்பத்தைச் சுவைக்கவிடாதபடி உலர்த்துகின்ற
शोकं—பலமான வருத்தத்தை
अपनुद्यात्—நீக்குமோ,
न प्रपश्यामि हि—அதை ஆராய்ந்து காண்கிறேனல்லேனே.

இங்கு न प्रपश्यामि என்று அறிவின்மை என்ற கார்ப்பண்யமும் अपनुद्यात् यत् शोकं என்று உபாயமில்லாமை என்ற கார்ப்பண்யமும் குறிக்கப் பெற்றன.

**सञ्जय उवाच**—அர்ஜுனன் சொன்னதாகச் சொன்னபிறகு ஸஞ்ஜயர் தாமே நேரில் சொல்லுகிறார்.

**एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परन्तपः ।**
**न योत्स्य इति (नयोत्स्यामीति)गोविन्दमुक्त्वा तूष्णीं बभूव ह ॥ ९ ॥**

*ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேச: பரந்தப: |*
*ந யோத்ஸ்ய இதி( ந யோத்ஸ்யாமீதி) கோவிந்தம்*
*உக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ ‖ 9 ‖*

परन्तपः—பகைவரை எரிக்கும் ஸ்வபாவமுடையனும்
गुडाकेशः—அக்ஞானமற்றவனுமான அர்ஜுனனே
हृषीकेशं—இந்த்ரியங்களை ஆளுகின்ற
गोविन्दं—கண்ணனைக் குறித்து
एवम् उक्त्वा—மறுபடியும் இவ்வாறு கூறி
न योत्स्यामि—நான் போர் புரியேன்
इति उक्त्वा—என்றும் சொல்லி
तूष्णीं बभूव—மௌனமாக இருந்துவிட்டான்.
ह !—ஆச்சர்யம்!

எப்பொழுதும் 'போர் செய்யப் பரபரப்பு உடையனான அர்ஜுனனுக்கு இந்நிலை வந்ததும், கண்ணபிரான் இது தகாதென்று சொன்ன பிறகுங்கூட அவன் மறுத்துச் சொல்லுகின்றதும் ஆச்சர்யமே! இந்த ச்லோகத்தில் एवमुक्त्वा என்பதே போதுமாயிருக்க, மீண்டும் न योत्स्यामी-त्युक्त्वा என்றது எதற்காக என்னில், முதல் அத்யாயத்தில் अशस्त्रं என்ற பதத்திலும் विसृज्य सशरं चापं என்பதாலும் போர் செய்யப் போவதில்லை என்பது சொல்லாமலே விளங்கிற்று. மறுபடி க்ருஷ்ணன் இகழ்ந்து கூறியதன் மேல் தனக்கு உண்மையை உபதேசிக்க வேண்டுமென்று இவன் வேண்டுவதால் போர் செய்யலாமா வேண்டாமா என்ற ஐயப்பாட்டுடன் சொல்லி நின்றான் என்று நாம் நினைக்கலாகாது, போர் செய்யலாகாது என்ற விபரீதமான மனவுறுதியே அவனுக்குத் தொடர்ந்து வந்துள்ளது என்பதை விளக்குவதற்காக இவ்வாறு கூறியதாம். (முதல அத்யாயத்தில் பாஷ்யத்தில் न योत्स्यामीति என்று அநுவாதம் செய்திருப்பதால் इषुभिः प्रतियोत्स्यामि என்ற விடத்திற் போல் இங்கும் योत्स्यामि என்கிற பாடமே பாஷ்ய ஸம்மதமென்னலாம். வேறு பாடமும் காண்கிறது.)

**तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत ।**
**सेनयोरुभयोर्मध्ये सीदमानमिदं वचः ॥ १० ॥**

*தமுவாச ஹ்ருஷீகேச: ப்ரஹஸந்நிவ பாரத |*
*ஸேநயோருபயோர் மத்யே ஸீதமாநமிதம் வச: ‖ 10 ‖*

भारत!—பரதவம்சத்தில் தோன்றிய த்ருதராஷ்ட்ரரே
उभयोः सेनयोः—இரு ஸேனைகளுடைய
मध्ये—இடையில்
सीदमानं—வருந்தி ஒன்றும் செய்யா மலிருக்கிற
तं—அந்த அர்ஜுனனைக் குறித்து
इदं वचः—பின்வரும் வார்த்தையை
हृषीकेशः—ஸர்வேச்வரன்
प्रहसन्निव—பரிஹஸிப்பவன்போல
उवाच—சொன்னான்.

प्रहसन्निव—மேல் ச்லோகத்திலே அவனுடைய அவிவேகத்தை வெளியிடப் போகிறாராகையாலே விவேகியான உனக்கும் இவ்வளவு அவிவேகமா என்று அத்தானைப் பரிஹஸிக்கிறார் போலும் என்னலாம். (1) தவறாகப் பேசிச் சொன்னபடி நடக்காதவனாயினும் சரணாகதனாகையால் அவனிடம் சீற்றமில்லையெனக் குறிக்கச் சிரித்தார் போலும் என்னலாம். (2) விவேகியான அர்ஜுனனுக்கும் புத்தியை மாற்றி அவனை வ்யாஜமாக்கி உலகுக்கு வேதாந்த உபதேசம் செய்ய வாய்த்ததற்கு ஸந்தோஷித்துச் சிரித்தார் போலும் என்னலாம். (3) அரும் பொருள்களை யெல்லாம் தாம் ஸர்வக்ஞராய் ஸர்வ சக்தரான படியினாலே அநாயாஸமாய் ஸரஸமாய் எளிதில் அறியுமாறு உபதேசிப்பதால் பரிஹாஸ வாக்யம்போல் தோன்றி போரில் பிறர் இது உபதேசமென்றறியவாகாதபடி யிருந்தது என்னலாம். (4) அவருக்கு இயற்கையில் உள்ள மந்தஹாஸம் இப்போது பரிஹஸிப்பதாகவும் அநாயாஸத்தைக் காண்பிப்பது போலவும் தோன்றிற்று. मत्तःस्मृतिर्ज्ञानमपोहनञ्च என்றபடி தாமே அவன் புத்தியை மாற்றி இருப்பதால் தாம் பரிஹஸிக்கவும் ந்யாயமில்லை; அறியாத சிடனிடம் சீற்றத்திற்கும் இடமில்லை.

[உபதேச ஆரம்பம்]

श्रीभगवानुवाच—பகவான் விரிவாகச் சொன்னதாவது—

अशोच्यान् अन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।
गतासून् अगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥ ११ ॥

அசோச்யாந் அந்வசோசஸ்த்வம் ப்ரக்ஞாவாதாம்ச்ச பாஷஸே |
கதாஸூந் அகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா: || 11 ||

अशोच्यान्—சோகிக்கத்தகாதவர்களைக்குறித்து
त्वं अन्वशोचः - நீ தொடர்ந்த சோகம் உள்ளவனாகிறாய்.
प्रज्ञावादान् च—விசேஷமான அறிவினால்வரும் பேச்சுக்களையும்
भाषसे—விரிவாகப் பேசிவருகிறாய்.
पण्डिताः—அறிஞர்கள்
गतासून्—உயிர் இல்லாதவற்றை (உடல்களை)குறித்தும்
अगतासून् च—உயிருடன் இருப்பவற்றை (ஆத்மாக்களை)க் குறித்தும்
न अनुशोचन्ति—கவலைப்படமாட்டார்கள்.

எத்தகைய உறவினரே யாயினும் போரில் எதிர்த்து வந்த பிறகு வருந்தக் கூடியவர் ஆகார். தேஹம் வேறு ஆத்மா வேறு என்ற விவேகத்தினுல் வரும் பேச்சுக்களை விரிவாகப் பேசி உள்ளாய். பாஷஸே—பெரிய பாஷ்யம் போலுளது உன் பேச்சு. புண்யம் பாபம் நரகம், பித்ருக்களுடைய வருத்தம் எல்லாவற்றையும் சொன்னுயே. நீ சோகிப்பது எதிரிகளின் தேஹத்தையே ஆத்மாவாக நினைத்தா ? அல்லது வேருக நினைத்தா ? எவ்விதத்திலும் சோகிக்க வழியில்லை. நீ சோகிப்பதால் அந்த பாண்டித்யம் உனக்கு இல்லை என்று தெரிகிறது.

गतासून् अगतासून् என்கிற சொற்களுக்கு முறையே மரணமடைந்தவர் களை பிழைத்திருப்பவர்களை என்றே பொருள் என்னலாம். அதில் உயிரோடிருப்பதைப் பற்றி அர்ஜுனன் வருந்தவில்லை. இருவரையும் பற்றிப் பண்டிதர்கள் சோகிப்பதும் உண்டு. மரணம் அடைந்தவனைப் பார்த்து, அப்பா, நீ உள்ள காலத்தில் உய்ய வழி செய்துகொள்ளாமல் இறந்தாயே ! நீ ஊண் துணை ஒன்றுமின்றி நரகம் போகும் பாதையில் புகுந்து என்ன படுவாயோ என்று வருந்துவர். உயிரோடு இருப்பவர்களைப் பற்றியும், இவர்கள் செய்த அக்ரமங்களுக்கு, பின்னே என்ன நரகம் அனுபவிக்கப் போகிருர்களோ என்று வருந்துவதுண்டு. இனி உயிருடன் இருந்தாற் போல் உயிர் நீங்கினுலும் வருந்த நியாயமில்லை ஆத்மாவுக்கு அழிவில்லையாதலின் என்று ஒரு நிலைக்கு மற்றென்றை த்ருஷ்டாந்தமாக்கலாம். அதைவிட மேலே அர்ஜுனனைப் பார்த்து, தேஹத்தைக் காட்டிலும் ஆத்மா வேறு என்ற பக்ஷத்திலும் தேஹமே ஆத்மா என்ற பக்ஷத்திலும் சோகிக்க இடமில்லை என்று விரிவாகக் கூறப்போவதால் அதனையே இங்குச் சுருங்க அருளினுர் என்னல் தகும். ஆகவே गतासून् என்று தேஹங்களையும் अगतासून् என்று ஆத்மாக்களையும் குறித்ததென்க. தேஹத்தினின்று ஆத்மா பிரிந்து வேறு தேஹத்திற்குப் போம்போதெல்லாம் ப்ராணனுடனேயே போகிறபடியால் தேஹம் गतासु, ஆத்மா अगतासु என்க.

அர்ஜுனனுக்கு தேஹம் வேறு ஆத்மா வேறு என்ற அறிவு இருந்தும் அவன் பேச்சு அவனுக்கு தேஹாத்ம ப்ரமத் தொடர்ச்சியைக் குறிப்பதால், அவனுக்கு அந்த விவேகத்தை நிலைநிறுத்த வேண்டும் அவனுக்கு ராஜ்யத்தில் விருப்பமில்லையாகையால் போர் புரிதல் தகாது என்கிற எண்ணமிருப்பதால் பலனை விரும்பாமற் போனுலும் ஆத்மாவின் க்ஷேமத்திற்காகவே போர் புரிந்தாக வேண்டும் என்றும் இந்த ஆத்மக்ஷேமமும் மோக்ஷமாய் இருந்தாலொழிய அவன் விரும்பமாட்டானுகையால் மோக்ஷத்திற்காகவே போர் நடத்த வேண்டும் என்றும் உபதேசிக்க வேண்டும் என முடிவு கட்டி முழு வேதாந்த உபதேசம் செய்யத் தொடங்குகிருர்.

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः ।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥ १२ ॥

*ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா: |*
*ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் || 12 ||*

अहम्—ஸர்வேச்வரனான நான்
अतः जातु—இதற்குமுன் எக்காலத்திலும்
न नासम्—இல்லாமலில்லை.
त्वं न न—நீயும் இல்லாமல் இல்லை
इमे जनाधिपाः न न—இந்த அரசர்களும் இல்லாமல் இல்லை.
सर्वे वयं—நான், நீ இவர்கள் என்ற எல்லோரும்
अतः परं च जातु-இதற்குப்பிறகும் ஒரு காலத்திலும்
न एव न भविष्यामः—இல்லாமல் இருக்கப்போவதில்லை என்பதே.

எல்லா ஆத்மாக்களும் எல்லாக் காலங்களிலும் இருக்கின்றவையே என்று இதனால் சொல்லியாயிற்று. இங்கு ஜீவாத்மாவுக்கு அழிவுண்டு என்கிற ஸந்தேஹம் தீர்ப்பதற்கு அது நித்யம் என்பதே போதுமாயிருக்க, ஸர்வேச்வரனுக்கும் அழிவில்லை என்று எதற்காகச் சொல்வதெனில்—த்ருஷ்டாந்தமாகச் சொன்னதென்க. என்னைப் போல் நீங்களும் எப்போதும் இருக்கின்றீர்கள் என்று உபதேசிக்கின்றார். மேலும், नारायणः परं ब्रह्म गीताशास्त्रे समीरितः என்றபடி மோக்ஷத்துக்குப் ப்ரதான உபாயமான பகவானை கீதை முக்கியமாகச் சொல்ல வேண்டியிருப்பதால் தொடங்கும் போதே தன்னையே முதலில் உபதேசிப்பது சாலப் பொருந்தும். கர்மயோக க்ஞானயோகங்களிலும் ஜீவாத்மா பரமாத்மா எல்லோரும் ஸமர் என்கிற அறிவு வேண்டியிருப்பதால் தன்னையும் மற்று எல்லோரையும் இங்கு முதலில் கூறினார் என்னலுமாம். அழிவுறும் தேஹங்களைவிட வேறாக ஆத்மாக்களை எடுத்து நான் நீ 'எதிரில் தெரியும் தேஹங்களில் உள்ள ஆத்மாக்கள் எல்லோரும் எப்போதும் இருக்கின்றவர்கள் என்றதாலே ஜீவாத்மாக்கள் பலர், அவர்களைவிட ஈச்வரன் ஒருவன் வேறு, எதிர்காலத்திலும் ஜீவாத்மாக்களுக்கு ஒருவரோடு ஒருவர்க்கோ பரமாத்மாவுடனோ ஐக்கியம் வாராது என்று இந்த முதல் ச்லோகம் தெளிவாக்குவதால் இதற்கு இணங்கவே முழு கீதைக்கும் பொருள் கொள்ளவேண்டும்.

இந்த ச்லோகமும் இதற்கு மேலுள்ள மூன்று ச்லோகங்களும் சேர்ந்து முழு கீதையின் சுருக்கமென்னலாம். (12)

கண்ணன் தன்னை எப்போதும் இருப்பதாகக் கூறினாரே! வஸுதேவ புத்ரராக சில காலமே இவர் இருப்பதானாலும் இந்தத் திருமேனியில்லாமலே முன்னும் பின்னும் இருப்பவர் என்று அர்ஜுனன் எப்படி தெரிந்துகொள்வானோ அவ்வண்ணமே ஜீவர்களும் இப்போது காணும் உடலின்றி இருப்பர் என்றும் தெரிந்துகொள்ளலாம். ஆனால் ஜீவன் பிறந்தான், இறந்தான் என்ற உலக வழக்கு எவ்வாறு கூடும் என்று அவனுக்கு தோன்றவே தேஹத்தோடு சேருவதால் ஜனனம் என்றும் தேஹத்தை விடுவதால் மரணம் என்றும் சொல்வதென்றும், வேறு தேஹம் எடுத்துக்கொள்வதால் ஜீவன் போகம் பெற்றிருக்கக் குறையில்லை என்றும் அறிவிக்க மேலே கூறுகிறார்—

देहिनोऽस्मिन् यथा देहे कौमारं यौवनं जरा ।
तथा देहान्तरप्राप्तिः धीरस्तत्र न मुह्यति ॥ १३ ॥

*தேஹிநோऽஸ்மிந் யதா தேஹே கௌமாரம் யௌவனம் ஜரா |*
*ததா தேஹாந்தர ப்ராப்தி: தீரஸ் தத்ர ந முஹ்யதி || 13 ||*

अस्मिन् देहे—இங்குக் காணப்படும் தேஹத்தில் இருக்கின்ற
देहिनः—ஜீவனுக்கு
यथा—எப்படி
कौमारं—குமாரனான தன்மையும்
यौवनं—யுவாவான தன்மையும்
जरा—கிழவன் என்பதும் முறையே வருகின்றனவோ,
तथा—அப்படியே
देहान्तरप्राप्तिः—அவனுக்கு வேறு தேகம் அடைதலுமாம்
तत्र—இப்படியிருக்க
धीरः—விவேகியானவன்
न मुह्यति—மோஹம் பெறுன்.

யௌவன நிலையிலே கௌமாரம் கழிந்ததற்கு வருந்தாம லிருப்பது போல் வேறு தேஹம் பெறுகிறவன் இந்த தேஹம் விடுத லுக்கு வருந்த ந்யாயமில்லை. ஆகையால் ஆத்மா நித்யமானது மோக்ஷம் பெருவிடினும் வேறு தேஹம் பெறுவது திண்ணமாகையால் சோகிக்க இடமில்லை என்பதாயிற்று. (13)

ஆனல் இப்படி நித்யமான ஆத்மா தேஹம் பெற்றுப் பெற்று மரிப்பது என்றதின்றி ஸுகமாயிருக்க வழி உண்டோ என வினவ லாம். அதற்கு முக்கியமாக வேண்டுவது பொறுமை ; ஸுகத்தையும் துக்கத்தையும் ஸமமாக நினைப்பது என மேல் இரண்டு ச்லோகங் களாலே தெரிவிக்கிறுர். இதனல் மோக்ஷ உபாயமும் மோக்ஷமும் சுருங்கச் சொன்னதாம்.

मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्ण सुख दुःखदाः ।
आगमापायिनोऽनित्याः तांस्तितिक्षस्व भारत ॥ १४ ॥

*மாத்ரா ஸ்பர்சாஸ்து கௌந்தேய சீதோஷ்ண ஸுக து:கதா: |*
*ஆகமாபாயிநோऽநித்யா: தாந் திதிக்ஷஸ்வ பாரத || 14 ||*

कौन्तेय—குந்தியின் புதல்வனே!
भारत—பரதவம்சத்தில் தோன்றிய வனே!
मात्रास्पर्शाः तु—சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற, ஐந்து இந்திரியங்களுக்கு விஷயமான வஸ்துக்களுக்கு இந்திரியங்களோடு சேர்க் கைகளே
शीत-उष्ण—குளிர்ச்சியாகவும் சூடா கவும் (அனுகூலமாகவும் ப்ரதிகூலமாகவும்) இருந்து
सुखदुःखदाः—ஸுகத்தையும் துக்கத் தையும் தருவனவை
आगम अपायिनः—வருவனவும் போ வனவுமாய் இருக் கின்றனவாகி
अनित्याः—அந்நிலையும் கழிந்து ஒழி கின்றன.
तान्—சாச்வதமாகாமல் வாதை செய்கின்ற இவற்றை
तितिक्षस्व—பொறுத்துக்கொள்.

ஸம்ஸாரத்தில் ஸுகதுக்கங்கள் ஸஹஜம். இவை சீதம் உஷ்ணம் என்றும் போன்ற அனுகூல ப்ரதிகூலங்களான விஷயங்கள் இந்திரியங்களால் உணரப்படும் போது வருமவை. இவை மாறி மாறி வந்த வண்ணம் இருக்கும். இந்நிலை நீடிக்க வேண்டிய அவச்யம் இல்லை. நீடிக்காமல் இருக்கச் செய்ய உபாயம் உண்டு. அதில் முதலாக வேண்டுவது பொறுமை என்றபடி. (14)

இப் பொறுமை பெரும் பேற்றைப் பெறுவிக்கும் என்கிறார்.

यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥ १५ ॥

யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப |
ஸமதுக்க ஸுகம் தீரம் ஸோ஽ம்ருதத்வாய கல்பதே || 15 ||

पुरुष ऋषभ—புருஷச்ரேஷ்டனே !
धीरं—தைர்யமுடையவனும்
समदुःखसुखं—நேரும் துக்கத்தையும் ஸுகம்போல் நினைப்பவனுமான
यं—எந்த (பொறுமையுள்ள)
पुरुषं—புருஷனை
एते—இந்த விஷய உணர்ச்சிகள்
न व्यथयन्ति—அசைக்கவில்லையோ,
सः—அவன் (பொறுப்பவன்)
अमृतत्वाय—மோக்ஷத்திற்கு
कल्पते—உரியவனாகிறான்.

ஒருவன் தனக்கு நேரும் ஸுகதுக்கங்களில் கவனம் செலுத்தினால் அதனால் புத்திக்குச் சலனம் (அசைவு) ஏற்பட்டு உபாயத்தை ஒழுங்காக அனுஷ்டியாமலொழிவான். ஆகவே எல்லா ஸமயங்களிலும் அவற்றைப் பொறுத்து உபாயங்களை முறையே அனுஷ்டித்தால் மோக்ஷம் திண்ணம். அவ்வுபாயத்தில் இப் பொறும் சேர்ந்தது என்பது கருத்து. (15)

இதுவரையில் சொன்ன பொருள்களுக்கே இனி விரிவாம். முன்னமே गतासून्, अगतासून् என்று தேஹங்களைப் பற்றியோ ஆத்மாக்களைப் பற்றியோ சோகிக்க இடமில்லை என்றார். அதை மேலே விரித்துரைக்கிறார்—அதாவது ஆத்மா அழிக்கமுயன்றாலும் அழிக்கப்படாதது—தேஹம் காக்கப்பட்டாலும் அழிவதே என்று தெரிவிக்கிறார்—

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।
उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥ १६ ॥

நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத: |
உபயோரபி த்ருஷ்டோ஽ந்தஸ்த்வநயோஸ்தத்வதர்சிபி: || 16 ||

असतः-மாறுதலுறும் தேஹத்திற்கு
भावः—நிலைத்திருக்கை
न विद्यते—இல்லை (காணப்படுகிறதில்லை)
सतः—நிலைத்திருக்கும் ஆத்மாவுக்கு
अभावः—ஒரு ஸமயம் இல்லாமை
न विद्यते—இல்லையாம்.
अनयोः उभयोः अपि—இவ்விரண்டு விஷயங்களிலும்
तत्त्वदर्शिभिः तु—உண்மையைக் கண்டவர்களாலேயே
अन्तः—இம்முடிவானது
दृष्टः—கொள்ளப்பட்டது.

உலகிலுள்ள வஸ்துக்களெல்லாம் ஸத்து அஸத்து என இருவிதமாகும். பலவிதமாக மாறியே வரும் வஸ்து அஸத்து எனப்படும். அது நிலைத்து ஒரே விதமாக இருக்கவில்லை. இவ்வாறே தேஹமுமாம். இதற்கு மாறாக ஸத்துக்களென்ற ஆத்மாக்கள் மாறாமல் ஒரே விதமாய் இருக்கும். இவ்வாறு முடிவு செய்தனர் முன்னோர்.

(தத்த்வதர்சி என்று பராசராதிகளைக் கொள்ளலாம். விஷ்ணு புராணத்தில் ஸத் அஸத் என்ற சொற்களின் பொருள் விரிவாம்.) (16)

ஆத்மா மட்டும் ஏன் அழியாது என்னில் சொல்லுகிறார்.

अविनाशि तु तद् विद्धि येन सर्वमिदं ततम् ।
विनाशमव्ययस्यास्य न कश्चित् कर्तुमर्हति ॥ १७ ॥

அவிநாசி து தத் வித்தி யேந ஸர்வமிதம் ததம் |
விநாசமவ்யயஸ்யாஸ்ய ந கச்சித் கர்த்துமர்ஹதி || 17 ||

येन—எந்த வஸ்துவினால்
इदं सर्वं—இதெல்லாம்
ततम्—பரவப்பெறுமோ
तत्—அந்த ஆத்ம வஸ்துவை
अविनाशि तु—அழிவற்றதாகவே
विद्धि—அறிவாயாக.
अव्ययस्य—அழியத்தகாத
अस्य—இந்த ஆத்மதத்துவத்திற்கு
विनाशम्—அழிவை
कश्चित्—ஒரு பதார்த்தமும்
न कर्तुम् अर्हति—செய்யவியலாது.

ஆத்மாக்கள் அனேகங்கள் என்று முதலிலேயே மொழிந்திருப்பதால் முன் ச்லோகத்திலும் இந்த ச்லோகத்திலும் ஒருமையானது ஆத்மஜாதியை அல்லது ஆத்ம ஸமுதாயத்தைப் பற்றவாம். முன் ச்லோகத்தில் அஸத் அசேதனங்கள் பல இருந்தும் ஒருமையாகக் கூறியது போலாம் இது. ஒவ்வொரு ஜீவாத்மா ஒவ்வோரிடத்தில் ஸூக்ஷ்மமாய் புகுந்திருப்பதால் மொத்தத்தில் ஆத்மாவினால் எல்லாம் புகப்பெற்றதென்றார். ஸர்வம் என்ற சொல்லைக் கொண்டு ஒவ்வொரு ஆத்மாவும் எல்லா இடமும் புகுந்திருப்பதாக நினைக்க வேண்டா. எல்லாமே ஆத்மா உட்புகும்படியாமேயன்றி ஆத்மாவினுட் புக ஒன்றும் வல்லதல்ல என்பதற்காக அச்சொல் என்க. (ஜீவாத்மா அணுவானபடியால் ஒரே ஸமயத்தில் எங்கும் புகாது.) ஆக உலகில் அழிக்கும் வஸ்து உட்புகுந்தே வஸ்துக்களை அழிக்குமாகையால் ஆத்மாவினுள் ஒன்றும் புகாதது பற்றி ஆத்மா அழியாதென்றதாயிற்று.

न कश्चित्—மேலே अच्छेद्योऽयं என்றவாறு சொல்லப் போவதால் ப்ருதிவி, ஜலம், அக்நி, வாயு ஒன்றும் அழிக்காது என்றபடி. அம்பு அக்னி முதலானவை வஸ்துக்களின் உள்ளே புகுந்து அவயவங்களைப் பிரித்தே அழிக்கும். ஆத்மா மிகவும் ஸூக்ஷ்மமாகையால் இதனுள் ஒன்றும் புகமாட்டாது. தடியினால் அடித்து வெளி வஸ்துவை அழிக்கும் போதும் அவ்வடியினால் கிளர்ந்த காற்று உள்ளே விரைவாகப் புகுந்து அவயவங்களைப் பிரித்து அந்தந்த வஸ்துவை அழிக்குமென்க. 17.

தேஹங்களுக்கு அழிவே இயற்கை---

अन्तवन्त इमे देहाः नित्यस्योक्ताः शरीरिणः ।
अनाशिनोऽप्रमेयस्य तस्मात् युध्यस्व भारत ॥ १८ ॥

அந்தவந்த இமே தேஹா: நித்யஸ்யோக்தாச் சரீரிண: |
அநாசிநோऽப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத || 18 ||

भारत !—பரதவம்சத்தவனே !
अप्रमेयस्य—வெளியில் அறியப்படும் வஸ்துவைப்போலன்றி அஹம் என்று தோன்றுவதாய்
अनाशिनः—அழியத்தகாததாய்
नित्यस्य—ஆகவே அழிவற்றதாய்
शरीरिणः—சரீர ஸ்வாமியுமான ஆத்மாவுக்கு ஸம்பந்தப்பட்ட
इमे—இப்பஞ்சபூதங்களாலாகி
देहाः—வளர்ந்துவரும் உடல்கள்
अन्तवन्तः—அழிவுறுவனவாகவே
उक्ताः—சாஸ்திரங்களாற் சொல்லப் பட்டன.
तस्मात्—இரண்டு விஷயமாகவும் சோகிக்க இடமிராமையால்
युध्यस्व—யுத்தம் செய்.

சாஸ்திரங்கள் சொல்லுகிறதோடு தேஹம் அழியும் என்பதற்கும் ஆத்மா அழியாது என்பதற்கும் சில யுக்திகளும் இங்குக் குறிக்கப்படுகின்றன. इमे—ஸத்தூலமாய் பஞ்சபூதங்களால் ஏற்பட்டவை என்றதால் உண்டானவை அழியும் என்பதாயிற்று. देह शरीर என்ற சொற்களால் விருத்தி க்ஷயங்கள் உள்ள பல அவயவங்கள் சேர்ந்தவை என்பது தெளிவாம். இதனால் அவயவங்கள் பிரிகின்றபோது வஸ்துக்கள் அழியுமென்று தேறும். शरीरिणः என்ற சொல்லால் ஆத்மாவுக்கு ஸுகதுக்க அனுபவம் கொடுக்க வந்தவை என்பதால் கர்மபல அனுபவ காலம் வரையில்தான் நீடிக்கும் என அறிவித்ததாம். ஆக (1) வேறு வஸ்துக்கள் உட்புகும்படி ஸ்தூலமாய் இருப்பதாலும் (2) பஞ்சபூதங்களின் சேர்க்கையாகையாலும் (3) பல அவயவங்கள் கூடியதாகையாலும் (4) வினைப்பயன் விளைவிக்குமளவே இருப்பதாலும் தேஹம் அநித்யம், இதற்கு மாறாக ஆத்மாக்கள் (1) வேறொன்றால் உண்டுபண்ணப்படாததாலும் (2) வேறொன்றும் தம்முள் புகாதபடி ஸூக்ஷ்மமாகையாலும் (3) அஹம்=நான் என்று சேதநமான போக்தா (அனுபவிக்கின்ற வஸ்து)வாகத் தெரிவதாலும் (4) நான் என்று தனக்குள் அனுபவிக்கும்போது பல அவயவங்கள் உள்ளதாக அனுபவத்திற்கு வராமல் ஒன்று என்றே அவரவரால் அறியப்படுவதால் அவயவம் இல்லாமலிருப்பதாலும் ஒவ்வொரு ஆத்மாவும் நித்யம். (18)

இப்படி அழியாதிருக்கும் போது ஆத்மாவைப் போரில் அழிப்பதாக நினைப்பது தவறு என்கிறார்:—

य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतम् ।
उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥ १९ ॥

ய ஏநம் வேத்தி ஹந்தாரம் யச்சைநம் மந்யதே ஹதம் |
உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹந்யதே || 19 ||

एनं—அழியாத இவ்வாத்மாவைக் குறித்து
हन्तारं—அழிக்கும் வஸ்து ஒன்று இருப்பதாக
यः वेत्ति—எவன் நினைக்கிறானோ,
एनं—இந்த ஆத்மாவை
हतम्—அழிக்கப்படுவதாக
यः च मन्यते—எவனும் நினைக்கிறானோ
तौ उभौ—அவ்விருவரும்
न विजानीतः—உண்மை அறிகிறவரல்லர்.
न अयं हन्ति—ஆத்மாவைக் கொல்லும் வஸ்து ஒன்று இல்லை.
न हन्यते—ஆத்மா கொல்லப்படுகிறதும் இல்லை.

ஆத்மா அழியாத வஸ்துவாகையால் அதை அழிக்க ஒருவராலும் ஆகாது. அக்நி, ஜலம் முதலானவற்றாலும் ஆகாது என்று பொதுவாகக் கூறவேண்டியிருப்பதால் हन्तारं என்பதற்குக் கொல்லுகிற புருஷனை என்ற பொருளை விட்டு அழிக்கிற வஸ்துவை என்று பொதுவாகப் பொருள் கொண்டது. ஆத்மா அழியாததாலும் அழிக்கும் சக்தியும் இல்லாதது என்னலாகாது. அசேதன உருக்களை அவரவர் அழிக்கின்றது அநுபவத்தில் உள்ளதே. சில கார்யங்களுக்குக் கர்த்தாவாயிருப்பதால்தான் ஜீவஹிம்ஸை செய்யக்கூடாது என்று வேதம் விதிக்கின்றது. ஆத்மா நிச்யமானபோது ஹிம்ஸைக்கே இடமில்லையாகையால் ஜீவஹிம்ஸை கூடாது என்று விதிப்பதென் என்னில் அங்கு ஹிம்ஸை என்பதற்கு ஆத்மாவை அழித்தல் என்ற பொருளல்ல. தேஹத்தைவிட்டு ஆத்மாவைப் பிரிப்பதே ஹிம்ஸை. சாஸ்திரம் விதித்த இடம் நீங்கலாக அவ்வாறு பிரிக்கக்கூடாது என்பது அதன் கருத்து. யாகத்தில் பசுஹிம்ஸை, போரில் எதிரிகளின் ஹிம்ஸை போன்றன சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டவையேயாம். இதனால் ஆத்மா அழியும் என்று நினைக்க வேண்டாம் என்கிறார் இங்கு அர்ஜுனனுக்கு. (19)

न जायते म्रियते वा कदाचित् नायं भूत्वा भविता वा न भूयः ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे ॥ २० ॥

ந ஜாயதே ம்ரியதே வா கதாசித்
நாயம் பூத்வா பவிதா வா ந பூய: |
அஜோ நித்ய: சாச்வதோऽயம் புராணோ
ந ஹந்யதே ஹந்யமாநே சரீரே || 20 ||

अयं—இந்த ஆத்மா
कदाचित्—ஸ்ருஷ்டியின் நடுவில் ஒரு பொழுது
न जायते म्रियते वा—பிறந்தழியுமென்ற தில்லை
भूत्वा—முன்னமே பிறந்திருந்து
भूयः—ஸ்ருஷ்டியின் முடிவிலாவது
न भविता न—அழியப்போகிறதென்பதும் இல்லை
अयं—இந்த ஆத்மா
अजः—பிறக்காதவன்
नित्यः—அழிவற்றவன்
शाश्वतः—(ஸ்வரூபத்தில்) எவ்வித மாறுதலும இல்லாதவன்
पुराणः—எவ்வளவு காலமாய் இருந்தும் புதிதுபோல் ஆச்சர்யமானவன்.
शरीरे हन्यमाने—உடல் அழிக்கப்படுகின்றதாயிருக்க
न हन्यते-இது அழிக்கப்படுகிறதில்லை

இங்கு இதனையும் கொள்க—ஆத்மாவுக்கு ஜனன மரணங்கள் ப்ரஸித்தமாகையால் அவற்றை இல்லையென்னலாமோ என்ன, 2ம் பாதம் விவரணமாகும். இல்லாமல் உண்டாகை (अभूत्वा भवनम्) என்ற ஜனனமும், இருந்த பிறகு இல்லாமை (भूत्वा अभवनम्) என்ற மரணமும் இங்கே ஆத்மாவுக்குக் கழிக்கப்படும். தேஹ ஸம்பந்தமென்ற ஜனனமும் தேஹத்தினின்று பிரிவு என்ற மரணமும் இருப்பதை மறுக்கவில்லை யென்றதாயிற்று. இது சாங்கர மதத்தின் கருத்து. जायते म्रियते वा என்றவிடத்தில் वा என்றது சேராது. ஜனனமோ மரணமோ ஏதேனுமொன்றில்லை யென்றால் சில ஆத்மாவுக்கு ஜனனமுண்டு, மரணமில்லை; சிலவற்றிற்கு மரணமுண்டு, ஜனனமில்லை யென்றதாகுமே. இது பொருந்தாது. மேலே जातस्य हि ध्रुवो मृत्युः ध्रुवं जन्म मृतस्य च என்பதால் அதோடு முரண்படுவதுமாம். ஆகையால் वा என்பதற்கு च என்பதின் பொருளே எல்லோரும் இசைந்தனர். இங்கு जायते म्रियते என்ற சேர்க்கையையும் भूत्वा भविता என்ற இறந்தகால எதிர்கால ஸ்வாரஸ்யத்தையும் கொண்டு ஸ்ருஷ்டி மத்தியில் விரைவாகப் பிறந்தழிவதோ, ஊழி முதலில் பிறந்து ஊழி முடிவில் அழிவதென்பதோ இல்லையென்று இரு பாதங்களுக்குத் தனித்தனி கருத்துக் கூறுவர். முதலில் वा என்ற சொல்லுக்கு சாங்கரமதப்படி च என்ற பொருளானாலும் இப்பொருள் கிடைப்பதற்குத் தட்டில்லை. இதனால் முதற்பாதம் தேஹமே நான் என்றாற் போன்ற பக்ஷத்தைத் தள்ளும் (कदाचित्—ஒரே தடவை ஜனன மரணமென்ற பிறதேச மதத்தையும் விலக்கும்.) இரண்டாம் பாதம் அந்தக்கரணமே நான் என்பது; அது ஊழி முதலில் பிறந்து ப்ரளயத்திற்கு முன் அழிகிறது என்கிற வாதத்தை விலக்குமெனவுமாராய்க. இந்த ச்லோகம் கடோபநிஷத்திலும். कदाचित् என்ற இடத்தில் विपश्चित् என இரண்டு எழுத்தே வேறு. ஆக ஆத்மாவுக்கு ஜனன மரணம் இல்லை. உலகில் ஜனன மரணங்களைச் சொல்வதெல்லாம ஆத்மாவுக்கு தேஹத்தோடு சேர்க்கையும் பிரிவும் உண்டென்ற பொருளிலாம்.

वेदाविनाशिनं नित्यं य एनमजमव्ययम् ।
कथं स पुरुषः पार्थ कं घातयति हन्ति कम् ॥ २१ ॥

வேதாவிநாசிநம் நித்யம் ய ஏநம் அஜம் அவ்யயம் |
கதம் ஸ புருஷ: பார்த்த கம் காதயதி ஹந்தி கம் || 21 ||

| | |
|---|---|
| यः—யாவனொருவன் | पार्थ—அர்ஜுனா! |
| अजं—பிறக்கவாகாததும் | सः पुरुषः—அந்த விவேகியான புருஷன் |
| अविनाशिनं—அழிய இயலாததும் | |
| अव्ययं—வேறு விகாரத்துக்கு இடமாகாததுமான | कथं—எப்படி |
| | कम्—எந்த ஆத்மாவை |
| एनं—இந்த ஆத்மாவை | घातयति—அழிக்கத்தூண்டுவான்? |
| नित्यं—அழிவற்றதாக | कम् हन्ति—எந்த ஆத்மாவைத் தானும் அழிப்பான்? |
| वेद—அறிகின்றனோ. | |

ஆத்மா நித்யமானபடியால் அதை அழிக்க நானோ பிறரோ தூண்டுவதாகவும், அழிக்கும் செயலில் எவரையும் கர்த்தாவாகவும் நினைக்கலாகாது.

ஆத்மா அழியாமற் போனாலும் உடலினின்று ஆத்மாவைப் பிரிப்பதால் அதற்குக் கேடு செய்ததாகாதா என்னில், போரில் அழிப்பதால் நன்மையே என்கிறார்—

वासांसि जीर्णानि यथा विहाय नवानि गृह्णाति नरोऽपराणि ।
तथा शरीराणि विहाय जीर्णान्यन्यानि संयाति नवानि देही ॥ २२ ॥

Sec 15-8 + 15-7

வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா விஹாய
நவாநி க்ருஹ்ணாதி நரோऽபராணி |
ததா சரீராணி விஹாய ஜீர்ணாநி
அந்யாநி ஸம்யாதி நவாநி தேஹீ || 22 ||

| | |
|---|---|
| यथा नरः—எப்படி மனிதன் | गृह्णाति—கொள்கிறானோ. |
| जीर्णानि वासांसि—கந்தையான ஆடைகளை | तथा देही—அதுபோல ஜீவன் |
| | जीर्णानि शरीराणि-மூப்புற்ற உடல்களை |
| विहाय—விட்டுவிட்டு | विहाय--விட்டொழித்து |
| अपराणि नवानि—வேறு புதிய ஆடைகளை | अन्यानि नवानि-வேறு புதிய உடல்களை |
| | संयाति—பெறுகிறான். |

பழைய வஸ்த்ரத்தைவிட்டுப் புதிய ஆடையணிவதுபோல் அறிந்தவனுக்குப் பழைய உடல்விட்டுப் புத்துடல் பெறுவதில் பெருமகிழ்ச்சியே. (போரில் அழிந்தார்க்கு வரும் உடல் மிக்க உயர்ந்ததுமாகும்.)

येन सर्वमिदं ततम् என்று எல்லாம் ஆத்மாவினுட்புகாதவையாகையால் அழிக்கமாட்டா எனக் கூறியதை விரித்துரைக்கிறார்—

नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।
न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः ॥ २३ ॥

நைநம் சிந்தந்தி சஸ்த்ராணி நைநம் தஹதி பாவக: |
ந சைநம் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருத: || 23 ||

शस्त्राणि—ஆயுதங்கள்
एनम्—இவ்வாத்மாவை
न छिन्दन्ति—வெட்டா
पावकः—நெருப்பு
एनं न दहति—இதனைக்கொளுத்தாது.
आपः एनं—நீர் இதனை
न क्लेदयन्ति—கரைக்கா
मारुतः—காற்று
न शोषयति—உலர்த்தாது.

ஆயுதம் முதலானவற்றிற்கு இதனை அழிக்கவல்லமையில்லை. ஏனெனில்

अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।
नित्यः सर्वगतः स्थाणुः अचलोऽयं सनातनः ॥ २४ ॥

அச்சேத்யோऽயம் அதாஹ்யோऽயம் அக்லேத்யோऽசோஷ்ய ஏவ ச |
நித்ய: ஸர்வகத: ஸ்த்தாணுரசலோऽயம் ஸநாதந: || 24 ||

अयम्—இவ்வாத்மா
अच्छेद्यः—வெட்டக்கூடியதன்று
अयम् अदाह्यः—இது எரிக்கக்கூடியது மன்று.
अक्लेद्यः—கரைக்கக்கூடியதுமன்று.
अशोष्य एव च—உலர்த்தவுமேயாகாதது.
अयम्—இவ்வாத்மாவானது
नित्यः—அழிவற்றது
सर्वगतः—எந்த வஸ்துவிலும் உட்புகுவது
स्थाणुः—இயற்கையில் மாறுதல் பெருதது
अचलः—வேருென்ருலும் மாறுதல் பெருதது
सनातनः—அநாதியுமாம்.

अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते ।
तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥ २५ ॥

अव्यक्तः अयम्—அழிக்ககூடியதாக ப்ரமாணம் காட்டும் வஸ்துக்களிற் சேராதிது.
अयम् अचिन्त्यः—அழிக்கவாகுமென்று ஊஹிக்ககாரணமற்றதிது.
अविकार्यः—ஒரு மாறுதலுக்கும் தகாததாக
अयम् उच्यते—இது சொல்லப்படும்.
तस्मात्—ஆகையினுல்
एनम् एवम्—இதை இவ்வாருக
विदित्वा—தெளிந்த பிறகு
अनुशोचितुम्—சோகப்படுவதற்கு
न अर्हसि—தகுதி பெறவாகாய்.

தேஹத்தைவிட ஆத்மா வேறு, அழியாதது என்று விளக்கப் பெற்றது. இனி, தேஹமே ஆத்மா என்ற பக்ஷத்திலே நின்றும் சோகிக்க லாகாதென்கிருர்—

अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम् ।
तथापि त्वं महाबाहो नैवं शोचितुमर्हसि ॥ २६ ॥

*அத சைநம் நித்யஜாதம் நித்யம் வா மந்யஸே ம்ருதம் |*
*ததாபி த்வம் மஹாபாஹோ நைவம் சோசிதுமர்ஹஸி || 26 ||*

अथ—*இனி*
एनम्—*இவ்வாத்மாவை*
नित्यजातं-*பிறப்பின்றியமையாததும்*
नित्यं मृतं वा—*இறப்பின்றியமையா ததுமான தேஹமாகவே*
मन्यसे च--*நினைக்கிறாயாகில்*
तथापि—*அப்பக்ஷத்திலும்*
महाबाहो—*திரண்ட புஜமுடையனே!*
त्वं—*நீ*
एवं शोचितुं—*இவ்வளவு சோகம் பெற்றிருக்க*
न अर्हसि...*தக்கவனல்லே*

*பிறவியும் அழிவும் இன்றியமையாதவை யானபிறகு வருத்தப்பட வாகுமோ.*

जातस्य हि ध्रुवो मृत्युः ध्रुवं जन्म मृतस्य च ।
तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि ॥ २७ ॥

*ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு: த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச |*
*தஸ்மாத் அபரிஹார்யேऽர்த்தே ந த்வம் சோசிதும் அர்ஹஸி || 27 ||*

जातस्य...*பிறந்ததற்கு*
मृत्युः...*அழிவானது*
ध्रुवः हि—*வந்தே தீருமே.*
मृतस्य च—*அழிந்ததற்கும்*
जन्म—*பிறப்பு*
ध्रुवम्—*விடாமல் வருவதேயாம்.*
तस्मात्—*ஆகையால்*
अपरिहार्ये अर्थे—*தவிர்க்கவாகாத விஷயத்திலே*
त्वं न शोचितुम् अर्हसि—*நீ கவலைப் படுவது தகாது*

*பிறந்ததெல்லாம் அழியுமென்பது கண்கூடு, அழிந்ததும் பிறக்குமென்பது எவ்வாறு? ப்ராணிகளோ அசேதனங்களான துணிமணிகளோ அழிந்தவை மீண்டும் பிறக்கக் காண்கிறோமல்லோமே என்னில். பிறப்பு அழிவு என்ற சொற்களின் பொருளை நன்கு நாமறியவேண்டுமென்று இவ்வாறு கூறியுள்ளார். மண் குடமாக உண்டாகின்றது. அங்கே பிறப்பாவது—மண் என்கிற வஸ்துவானது உண்டையாம் (பிண்டமாயிருக்கும்) நிலை கழிந்து, குடமென்னலாம்படி வேறு உருவைக் கொள்கை. பிறகு குடம் அழிந்ததென்றால் அவ்வுருமாறி ஓடாகும் உருவை கொண்டதென்றே கூறுவதாம். அப்போது குடத்திற்கு அழிவும் ஓட்டுக்குப் பிறவியுமொன்றுதானே, ஆனாலும் அழிந்தவுருவை மறுபடி அந்த த்ரவ்யம் பெறுமோ என்னில், சில விடங்களில் அதுவும் கூடும். மண் உடலாய், உடல் சாம்பலாய், சாம்பல் மீண்டும் மண்ணாய் மண் உடலாய் மாறுமே. சில நூல் துணியாய், துணி நூலாய் மீண்டும் நூல் துணியாய்*

ஆவதுமுண்டு. அவ்வாறாகாதவிடத்திலும் உருமாற்றம் நிச்சயமான படியால் அது தவிர்க்கமுடியாததாகையால் அதிகமாக சோகிக்கலாகா தென்றபடி. (அழியும் தேஹத்தினும் வேறு விதமாக ஆத்மா இல்லை யென்ற பக்ஷத்திலும் சொல்வேன் என்று முன் ச்லோகத்தில் தொடங்கி யதை விரித்துரைப்பது இந்த ச்லோகமாகையால் இந்த ச்லோகத்தில் ஆத்மாவுக்கு ஒரு தேஹம் போனாலும் மற்றொரு தேகத்துடன் சேர்க்கை திண்ணமென்ற பொருள் கொள்ளலாகாது. மேல் ச்லோகமும் ஒரு த்ரவ்யம் பலவிதமாக மாறி மாறி வந்தவண்ணமிருக்குமென்பதையே விளக்குகிறபடியால் வேறு பொருள் இங்கே சேராது.)

தேஹத்திற்கு மாறுதல் நிச்சயமாகையாலே சோகிக்க வேண்டா என்றார். முன்னும் பின்னும் எந்நிலை இதற்கு என்பதும் அறியவியலா தாகையாலும் சோகமென் என்கிறார்.

अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत ।
अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना ॥ २८ ॥

அவ்யக்தாதீநி பூதாநி வ்யக்த மத்யாநி பாரத |
அவ்யக்தநிதநாந்யேவ தத்ர கா பரிதேவநா || 28 ||

भारत—பரதவம்சத்தவனே !
भूतानि—தேஹங்கள்
अव्यक्तादीनि—காணப்படாத முன் நிலை யுடையவை
व्यक्तमध्यानि—தேஹமாயிருக்கும் போது காணப்படும்
अव्यक्तनिधनानि एव—பின் நிலையும் (அழிவும்) காணப்படாததே.
तत्र—இவ்வாறிருக்கும் போது
का परिदेवना—அழுகை என்ன எத்தகையது?

முன்பின் நிலைகள் நல்லவையல்ல, ஆபாஸமானவை என்ற முடிவில்லை. முன் நிலை நல்லதாகில் தேஹம் உண்டானதற்கே சோகிக்க வேண்டும். மீண்டும் வரும் நிலை நல்லதாகில் அழிவதற்கே ஸந்தோஷிக்க வேண்டும்.

மூன்று ச்லோகங்களால் பிறப்பும் இறப்பும் ஆத்மாவுக்கு இசைந் தாலும் வருந்த நியாயமில்லை யென்று தேஹாத்ம வாதத்தை ஏற்றிட்டுச் சொல்லி, மீண்டும் முன் சொன்ன உண்மையான நிலையை யே உறுதிப்படுத்துகிறார். தேஹத்தைவிட ஆத்மா வேறாகில் அவ்வாறு ஏன் நன்றாகத் தெரியவில்லை என்ன வேண்டா. அது மிகவும் ஸூக்ஷ்ம மானதென்கிறார்—

आश्चर्यवत् पश्यति कश्चिदेनमाश्चर्यवत् वदति तथैव चान्यः ।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाऽप्येनं वेद न चैव कश्चित् ॥ २९ ॥

ஆச்சர்யவத் பச்யதி கச்சித் ஏநம்
ஆச்சர்யவத் வததி ததைவ சாந்ய: |
ஆச்சர்யவச்சைநம் அந்யச் ச்ருணோதி
ச்ருத்வாப்யேநம் வேத ந சைவ கச்சித் || 29 ||

கஶ்சித்—கண்டு கொண்டேயிருப்பவன்
ஏனம்—தேஹத்தினும் வேறான இவ்வாத்மாவை
ஆஶ்சர்யவத்—இதுவரையிற் காணாதது போலவே
பஶ்யதி—காண்கிறான்.
ததா ஏவ—அப்படியே
அன்ய: ச—வேறொருவனும் (சொல்லுகிறவனும்)
ஆஶ்சர்யவத் வததி—சொல்லாததைப் போலவே சொல்லுகிறான்.
அன்ய: ச கேட்கின்ற வேறொருவனும்
ஏனம்—இவ்வாத்மாவை
ஆஶ்சர்யவத்—கேட்காதது போலவே
ஶ்ருணோதி—கேட்கிறான்
கஶ்சித் ஶ்ருத்வாऽபி—ஒருவன் கேட்டும்
ஏனம்—இதை
ந வேத—அறிகிறானல்லன்.

முதலில் கேட்பது, பிறகு சொல்லவாகும்படி மனனம் செய்வது பிறகு தர்சனம் என்ற அடைவிருக்க இங்கே மாறாகச் சொன்னதன் கருத்தாவது—நன்றாகப் பார்த்தவனும் சொல்லவியலான். பார்த்துச் சொல்லுகிறவனிடமும் கேட்டறிவது போதாது. அப்படி கேட்டாலும் தெளிவு பெறல் அரிதென்பதாம். இனி காண்பது முடியாதென்பதென்? சொல்வதும் முடியாததே. அஃதென்? கேட்பதும் முடியாததேயென்க. நன்றாகக் கேட்டு விட்டால் மனனம் தர்சனமெல்லாம் எளிதில் உண்டாமென்றும் நினைக்கலாகாதென்கிறார் நான்காம் அடியினால். பகவானுக்கு மேலான ஆச்சர்ய வஸ்து உலகில் இல்லை. அவனைப் போலவே அபூர்வமாகவே எப்போதும் உணரும்படி உளது ஜீவாத்மா என்றபடி. (29)

அர்ஜுனன் தகாதவிடத்திலே கருணை கொண்டும், தர்மாதர்ம விவேகமின்றியும் பேசினான். இந்தக் கருணை தகாதென்பதை யறிவித்தார் தேஹாத்ம விவேகத்தை உண்டுபண்ணி. இனி தர்மத்தை அதர்மமாக நினைத்ததும் தவறென்கிறார்—

*inserted here by mistake in printing - see p. for meaning of the same.*

स्वधर्ममपि चावेक्ष्य न विकम्पितुमर्हसि ।
धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत् क्षत्रियस्य न विद्यते ॥ ~~30~~ 31 ॥

ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதும் அர்ஹஸி |
தர்ம்யாத்தி யுத்தாச் ச்ரேயோऽந்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே || ~~30~~ 31 ||

அபி ச—மேலும்
ஸ்வதர்மம் தனது தர்மமாக
அவேக்ஷ்ய—கண்டு
விகம்பிதும் நார்ஹஸி—தொடங்கினதினின்று விலகக் கூடாதவனாகிறாய்.
தர்ம்யாத் யுத்தாத் } எதிராப்பவனோடு மட்டும் போர் புரிவதால் தர்மத்தை விட்டு விலகாத போரைவிட
அன்யத் ஶ்ரேய:—வேறு சிறந்தது
க்ஷத்ரியஸ்ய—க்ஷத்திரிய ஜாதிக்கு
ந வித்யதே—இல்லை.

यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।
सुखिनः क्षत्रियाः पार्थ लभन्ते युद्धमीदृशम् ॥ ३१ ॥

யத்ருச்சயா சோபபந்நம் ஸ்வர்கத்வாரம் அபாவ்ருதம் |
ஸுகிந: க்ஷத்ரியா: பார்த்த லபந்தே யுத்தமீத்ருசம் || 31 ||

पार्थ—குந்திபுத்ரனே!
ईदृशम् – இதைப்போன்றதாய்
यदृच्छया उपपन्नं—எதிர்பாராமல் தானே நேர்ந்ததும்
अपावृतं स्वर्गद्वारम्—திறந்த ஸ்வர்க வாசலுமான
युद्धम्—போரை
सुखिनः—ஸுகானுபவத்திற்கான புண்யசாலிகளான
क्षत्रियाः—க்ஷத்ரியர்களே
लभन्ते—அடைகின்றனர்.

நாமே வலுவில் போருக்கு இழுப்பதென்றவாறின்றி அது தானாகவே செய்ய வேண்டியதாக நேர்ந்த போர் ச்லாக்யமானது அதில் ஸம்பந்தப்பட்ட ஸமஸ்த ப்ராணிகளுக்கும் சிறந்த ஸுகம் இடையூறின்றி கிடைப்பதாகும். எவ்வளவு பாபியும் போரில் மாண்டால் சுவர்க்கம் பெறுவது நிச்சயம். ஸுவர்கலோகம் வேண்டாதவர்களுக்கும் சிறந்த ஸுகம் உண்டு. ஸ்வர்கமென்றால் துக்கம் கலக்காத ஸுகமென்றே பொருளாம். (31)

செய்தால் வரும் நன்மையைச் சொன்னார், செய்யாத போது நேரும் பலவித பாபத்தையும் குறிக்கிறார்—

अथ चेत् त्वमिमं धर्म्यं संग्रामं न करिष्यसि ।
ततः स्वधर्मं कीर्तिञ्च हित्वा पापमवाप्स्यसि ॥ ३२ ॥

அத சேத் த்வம் இமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி |
தத: ஸ்வதர்மம் கீர்த்திஞ் ச ஹித்வா பாபம் அவாப்ஸ்யஸி || 32 ||

अथ इमं—இனி இந்த
धर्म्यम्—தர்மத்தினின்று விலகாத
संग्रामम् त्वं—போரை நீ
न करिष्यसि चेत्—செய்யாமற்போனால்
ततः—அதனால்
स्वधर्मम्—இதனால் நீ பெறவாகும் ஸுகத்தையும்
कीर्तिं च हित्वा-புகழையும் விடுவதோடு
पापम्—கொடிய பாபத்தையும்
अवाप्स्यसि—அடைவாய்.

போர் தர்மமானபடியாலே, போரை விடுவதும் தர்மத்தை விடுவதுமொன்றே. ஆகையால் 'போரை விட்டால் ஸ்வதர்மத்தை விட்டு' என்பதற்கு போரைவிட்டால் போரைவிட்டு என்பது பொருளல்ல; அது செய்தால் வரும் பலனை விட்டு என்பதாம், கடமையான தர்மத்தைச் செய்வதால் ஸுகம், பாபக்ஷயம் என்றாற் போன்ற பலன்கள் உண்டு. (32)

பாபம் விலகுவதற்கு மாறாகப் பாபம் சேருமா போலே கீர்த்தியை இழப்பது மட்டுமன்றி அபகீர்த்தியும் சேருமென்கிறார்—

अकीर्तिं चापि भूतानि कथयिष्यन्ति तेऽव्ययाम् ।
संभावितस्य चाकीर्तिर्मरणादतिरिच्यते ॥ ३३ ॥ 34

அகீர்த்திஞ்சாபி பூதாநி கதயிஷ்யந்தி தேऽவ்யயாம் |
ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர்மரணாத் அதிரிச்யதே || 33 || 34

भूतानि अपि—ஸாதாரண ஜனங்களும்
ते—உனக்கு
अव्ययाम्—என்றும் அழியாத
अकीर्तिं च—அர்ஜுனன் அஞ்சி ஓடினுனென்ற அபகீர்த்தியையும்
कथयिष्यन्ति—கதையாகக் கூறுவர்.
संभावितस्य—மிகவாக மதிக்கப்பட்டவனுக்கு
अकीर्तिः—அபகீர்த்தியானது
मरणात् च अतिरिच्यते—மரணத்திற்கும் மேலாக அநிஷ்டமாகும்.

மரணத்தைச் சிலர் அநிஷ்டமாக நினைக்காமலிருக்கலாம். அவர்களும் மரணத்திற்குத் தாமே இடமளிப்பதை இசையலாகாது. அபகீர்த்தி என்பதும் எல்லோருக்கும் அநிஷ்டமே. அநிஷ்டத்தை விளைவிப்பதுமாம் அது. (உத்தரராமாயணத்தில்-'அகீர்த்திர்யஸ்ய' இத்யாதி தா. சா.) (33) 34

அஞ்சி விலகவில்லையே, அன்பினுல் தானே விலகுகிறேனென்னில், இது அஸ்த்தாநஸ்நேஹம், தகாதென்ற கருத்துடன் கூறுகிறுர்—

भयात् रणादुपरतं मंस्यन्ते त्वां महारथाः ।
येषाञ्च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥ ३४ ॥ 35

பயாத் ரணுத் உபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதா: |
யேஷாம் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம் || 34 || 35

येषां त्वं—எவர்களுக்கு நீ
बहुमतः भूत्वा—இது வரையில் கௌரவிக்கப் பெற்றவனுயிருந்து
लाघवम्—இப்போது இலகுவாகப் பிடிக்குட்படுகையை
यास्यसि—அடைவாயோ,
महारथाः—அந்த மஹாரதர்கள்
त्वाम्—உன்னை
भयात्—அச்சத்தினுல்
रणात् उपरतं—போரினின்று விலகினவனுகவே
मंस्यन्ते—அவசியம் நினைக்கப் போகிறுர்கள்,

போரில் வெற்றி யென்பது என்றும் ஒருவன் பக்கமே யென்ற நிலையில்லை. மாபெரும் கூட்டமான எதிரிகளின் வலிவு இப்போதே மிகவாயிருப்பதால், நீயும் உட்புகுந்து பார்த்து விலகுகிற படியால் அச்சத்தினுல் நீ விலகினுய் என்ற அவர்களது அனுமானம் தான் உலகஸம்மதமாகும். மஹாரதர்களல்லரோ அவ்வாறு ஊஹிப்பவர். வீர க்ஷத்ரியன் விவேகியானவன் போரிலிழிந்தவரிடத்தில் ஸ்நேஹம் வைப்பதுண்டோ? அஸ்த்தாந ஸ்நேஹமாகையால்—தகாதவிடத்தில் அன்பாகையால் அதை அனுமானம் செய்யார். (மம்ஸ்யந்தே என்றதே சரியான பாடம்.)

விரோதிகளான மஹாரதர்களும் மற்றவரும் சொல்லப் போவதையும் நீ அனுமானம் பண்ணவேண்டுமென்கிறார்—

**अवाच्यवादांश्च बहून् वदिष्यन्ति तवाहिताः ।**
**निन्दन्तस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥ ३५ ॥**

*அவாச்யவாதாம்ச்ச பஹூந் வதிஷ்யந்தி தவாஹிதா:*
*நிந்தந்தஸ் தவ ஸாமர்த்யம் ததோ துக்கதரம் நு கிம் || 35 ||*

**तव अहिताः**—உனது விரோதிகள்
**तव सामर्थ्यं**—உனது திறமையை
**निन्दन्तः**—பழிக்கின்றவர்களாய்
**बहून्**—பல
**अवाच्यवादान् च**—சூரர்களுக்குச் சொல்லத்தகாத சொற்களையும்
**वदिष्यन्ति**—சொல்லப்போகிறார்கள்.
**ततः दुःखतरं**—அதற்குமேல் துக்கமாவது
**किं नु**—என்ன உளது?

ஆயுதங்களால் நிராயுதபாணியான என்னைக் கொன்றால்கூட நன்மையென்றாய். ஏன் சொல்லுவார்கள்! நம் எதிரில் அர்ஜுனன் எம்மட்டுமென்று மிகமிகத் தகாத சொற்களை உன் செவிபட சொல்லி உன்னைத் துன்பப்படுத்தவன்றோ அவர்கள் நினைப்பது. அஹிதமானவர் ஹிதம் தேடுவரோ. (35)

மரணத்தை விரும்புகின்ற நீ போர் ஒழுங்காகச் செய்து பிறர் கொல்ல, மாண்டால்தான் நலம். அப்போது அவர்கள் என்னைக் கொல்ல வாகாதே என்னில், ஆகில் வெற்றி பெற்று புவியை அந்த ஸமயத்தில் உன் நிலைக்குத் தக்கவாறு வைராக்யம் அற்றோ உற்றோ அனுபவிப்பது தகும். மற்ற வகை சரியல்லவென்கிறார்—

**हतो वा प्राप्स्यसे(सि)स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम् ।**
**तस्मादुत्तिष्ठ कौन्तेय युद्धाय कृतनिश्चयः ॥ ३६ ॥**

*ஹதோ வா ப்ராப்ஸ்யஸே ஸ்வர்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம் |*
*தஸ்மாத் உத்திஷ்ட கௌந்தேய யுத்தாய க்ருதநிச்சய: || 36 ||*

**हतः वा**—ஒரு வேளை போர் செய்து நீ கொல்லப்பட்டால்
**स्वर्गं प्राप्स्यसे**—சிறந்த பரலோக ஸுகம் பெறுவாய்
**जित्वा वा**—வென்றுவது
**महीं भोक्ष्यसे**—புவியையனுபவிப்பாய்
**तस्मात्**—இரண்டிலும் உனக்கு நன்மையேயிருப்பதால்
**कौन्तेय**—குந்திபுத்ரனே
**युद्धाय**—போர் செய்வதற்கு
**कृतनिश्चयः**—முடிவு செய்து
**उत्तिष्ठ**—எழுந்திரு.

உத்தரார்த்தம் போர் செய்யாமல் கொல்லப்படுவது மிக்க கேடு என்பதற்காக, ஸ்வர்கம் என்ற சொல் மோக்ஷத்தைக் கூறுமாகையால் அர்ஜுனன் சுவர்கம் வேண்டாதவனானாலும் குறையில்லை. பலத்தில் நோக்கின்றி உபதேசப்படி போர் புரிந்து இடையில் மாண்டாலும் இட்ட

படை கற்படையாகையால் இது மோக்ஷத்திற்காவது திண்ணம். மோக்ஷமும் ஸ்வர்கமே. जित्वा वा भोक्ष्यसे. ஜநகாதிகளுக்குப்போலே ஆகும் இந்த போகம். (36)

இம்மை மறுமைகளில் நோக்கமில்லாதவனாய் ஸம்ஸாரத்தை வளர்க்கும் பாபங்களுக்கு ஆளாகாமலிருக்க வேண்டுகிறாயாகில் நான் சொல்லும் முறையில் போரை நடத்து என்ற கருத்தில் முறையை உபதேசிக்கிறார்—

सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।
ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि ॥ ३७ ॥

ஸுகதுக்கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ |
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபம் அவாப்ஸ்யஸி || 37 ||

सुखदुःखे—ஸுகத்தையும் துக்கத்தையும்
लाभालाभौ—அதற்கான லாப நஷ்டங்களையும்
जयाजयौ—அதற்கான வெற்றி தோல்விகளையும்
समे कृत्वा—சமமாக நினைத்து ஒன்றிலும் பற்றில்லாமல்
ततः—செய்ய வேண்டுமென்கிற முடிவினால்
युद्धाय—போரின் பொருட்டு
युज्यस्व—முனைவாயாக.
एवं—இவ்வாறு செய்யில்
पापं—ஸம்ஸார காரணமான வினையை
न अवाप्स्यसि—விட்டொழிப்பாய்.

कृतनिश्चयः என்று கீழே கூறியதை ततः என்றார். பூர்வார்த்தம் முக்கியம். போரென்பது க்ஷத்ரியனுக்கு தர்மமாகும். அவன் வெற்றியும் லாபமும் ஸுகமும் வேண்டுமென்றே அதனைச் செய்தாலும் பாபமில்லை. அவ்வாறிருக்க, ஸமமாக புத்தியுடன் செய்வதால் பாபமில்லையென்றால் அந்த புத்தி இராவிடில் போர் பாபத்தை விளைவிக்கும் என்பது தோன்றும். அது பொருந்தாது. ஆகையால் ஸமத்வபுத்திக்கு எது பலனோ அதனையே சொல்லவேண்டும். அதாவது ஸம்ஸாரத்தினின்று விடுபடுகை. அடுத்த ச்லோகத்தில் இது தெளிவாம். पापात् मोक्ष्यसे எனாமல் पापं न अवाप्स्यसि என்றது போரை விட்டால் இதற்கு மேலும பாபம் பெறுவாயென்று தெரிவிக்கவென்க. (37)

'போர் க்ஷத்ரியதர்மமாகையாலே செய்தாகவேண்டுமென்றும் செய்யும்போது பலனில் பற்றுடன் செய்தால் ஸம்ஸாரபந்தமாகையாலே ஸமத்வ புத்தியுடன் செய்யவேண்டுமென்றும் அறிந்தேன். ஆகிலும் மோக்ஷத்திற்குக் காரணம் ஆத்மஜ்ஞானம்தானே' என்று நினைக்கிறான் அர்ஜுனன். அதனால் नैवं पापमवाप्स्यसि என்ற தமது கருத்திலுள்ளதைத் தெளிவாக்கக் கர்மயோகோபதேசம் தொடங்குகிறார்—

एषा तेऽभिहिता सांख्ये बुद्धिर्योगे त्विमां शृणु ।
बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि ॥ ३८ ॥

ஏஷா தேऽபிஹிதா ஸாங்க்யே புத்திர்யோகே த்விமாம் ச்ருணு |
புத்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி || 38 ||

पार्थ—குந்தியின் புதல்வனே!
ते—உனக்கு
सांख्ये—ஆத்மவிஷயத்திலே
बुद्धिः—அறிவு எத்தகையதென்பது
अभिहिता—சொல்லப்பெற்றது.
योगे तु—வேருன கர்மயோக விஷயத்தில்

इमां—அறிவு எவ்வாறென்பதை
शृणु—கேள்.
यया बुद्ध्या—இந்த அறிவுடன்
युक्तः—கூடினவனாகி
कर्मबन्धं—அநாதி கர்மமூலமான ஸம்ஸாரபந்தத்தை
प्रहास्यसि—நீ விடவல்லனாவாய்.

ஸாங்க்யம் யோகம் என்கிற சொற்களுக்கு இங்கு ஸாங்க்ய சாஸ்த்ரம் யோக சாஸ்த்ரமென்கிற பொருளல்ல. கீதையில் எங்குமே இவற்றின் பொருள் வேறு. ஸங்க்யா என்றால் புத்தி. புத்தியினால் பகுத்தறிய வேண்டிய ஆத்ம தத்துவமே ஸாங்க்யமாகும். (ஸாங்க்ய சாஸ்த்ரமென்ற விடத்தில் ஸங்க்யா எண்ணிக்கை. அசேதனங்கள் 24. 25வது ஆத்மா என்று அவர்கள் எண்ணிச் சொன்னதால் அதற்கு ஸாங்க்ய சாஸ்த்ர மெனப் பெயர் என்பர். கணாத கௌதமாதிகள் கூட எண்ணியே தத்துவங்களைச் சொல்லியிருக்கின்றனர். ஆகையால் ஸாங்க்யமென்பதன் கருத்தென்னவெனில். தத்துவம், க்ரியை என்கிற இரண்டில் தத்துவமென்பது அறியக் கூடியதே யன்றி அநுஷ்டானத்திற்கு கோசரமாகாது. கர்ம என்பது ஜ்ஞானம் அநுஷ்டானம் இரண்டுக்கும் கோசரமாம். அறிவுக்கு மட்டும் கோசரமாகையால் ஆத்ம தத்துவம் ஸாங்க்யம். அல்லாத க்ரியை புதிதாக உண்டு பண்ணப்படுகிற படியால் அது யோகம். अलब्धस्य लाभो योगः என்பதும் இங்கு இசையும்.)

கர்மயோக விஷயத்தில் அறிவு இத்தகையதென்றறிந்து அதன்படி அநுஷ்டிப்பதில் ச்ரமம் இருக்கலாம். அதனால் இடையிடையே தவறுதல் ஏற்படினும் இது வீணாகாது, கேடும் வாராது. இப் பெருமை இதற்குச் சிறப்பென்கிறார்—

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥ ३९ ॥ 40

See NP 2010-54/55
Expansion of this idea in 6-37 to 6-47

நேஹாபிக்ரமநாசோऽஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே | 40
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ||39||

इह—இந்தக் கர்மயோக விஷயத்தில்
अभिक्रम—தொடக்கம் மட்டுமென்பதற்கும்
नाशः नास्ति—வீணாகை இல்லை.
प्रत्यवायः—பாதியில் விட்டதற்காகப் பாபமும்
न विद्यते—இல்லை.

अस्य धर्मस्य—இந்த தர்மத்தின்
स्वल्पम् अपि—அநுஷ்டானம் மிகச் சிறியதாயினும்
महतः भयात्—பெரிய ஸம்ஸார பயத்தினின்று
त्रायते—காக்கும்; காக்குமளவுக்குதான் அழியாமல் நீடிக்கும்.

धर्मस्य = कर्मयोगाख्यस्य स्वधर्मस्य | See 3-35 re: स्वधर्मः | Varnashrama Dharma of Karma Yoga - cf. Gitartha Sangraha Sl. 1

வைதிகமோ, லௌகிகமோ எந்தக் கார்யமும் முழுமையும் செய்யாமல் நடுவே விடப்பட்டால் பலன் அளிக்காது. ஒழுங்காக யாகம் அனுஷ்டிக்காதவன் ப்ரஹ்மரக்ஷஸ்ஸாவான் என்பர். (தசரதர் அச்வமேதயாகம் அனுஷ்டிக்க முயன்றபோது சரிவர அனுஷ்டிக்கவில்லையென்றால் கேடு உண்டாகுமே என்று அஞ்சினது காண்க.) நான் சொல்லும் அறிவோடு கர்மயோகத்தை யனுஷ்டிக்க முயன்றால் எவ்வளவு நாள் அதை யனுஷ்டிக்கவேண்டுமோ அவ்வளவு நாள் நீடிக்காவிட்டாலும் நடு நடுவே சிற்சில தவறுகள் நேரிடினும் நன்றாகச் செய்த அம்சம் இட்ட படை கற்படையாக நின்று மோக்ஷ பலனுக்கு மெதுவாக இவனைக் கொண்டு செல்லும்.

இந்த புத்திக்கும் காம்யமாக கர்மானுஷ்டானம் செய்பவரின் புத்திக்கும் நெடுவாசி யுண்டென்று விரித்துரைக்கிறார்—

व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनन्दन ।
बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥ ४० ॥ 41

வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தந | 41
பஹுசாகா ஹ்யநந்தாச்ச புத்தயோऽவ்யவஸாயிநாம் || 40 ||

कुरुनन्दन—கௌரவனே!
इह—கர்மானுஷ்டானத்திலே
व्यवसाय आत्मिका—ஆத்மதத்துவ ஜ்ஞான மூலமாய்
बुद्धिः—மோக்ஷத்திற்கேயான புத்தியானது
एका-ஒன்றேயாகும். (ஒரே பலனைக் குறித்திருப்பதால்.)
अव्यवसायिनाम्—ஆத்ம தத்துவ ஜ்ஞானமில்லதாராய் வேறு பலன்களில் இழிந்தாரின்
बुद्धयः—புத்திகள்
अनन्ताः—ஒவ்வொன்று ஒவ்வொரு பலனுக்காகவாகையால் எண்ணற்றனவாம்.
बहुशाखाश्च—ஒரு பலனுக்கான ஒரு கர்மாவில் உட்பிரிவுகளும் பல பலன்களைப்பற்றி யிருக்கும்.

மோக்ஷமென்பதொன்றையே பலனாகக் கொண்டு பகவானின் ப்ரீதியொன்றைக் குறித்தே ஆத்மஞானமுள்ளவனால் எல்லாம் செய்யப்படுகிறபடியால் கடைசிவரையில் இவனுக்கு ஒரே புத்தி. ஆத்மஜ்ஞானமின்றி பல பலன்களைக் குறித்துச் செய்யும்போது அததற்கு நோக்கு வெவ்வேறாகையால் புத்தி ஒன்றாகாது. நித்யமோ, நைமித்திகமோ, காம்யமோ எந்தக் கர்மாவும் வேறு பலனை விரும்பாமல் பகவானுக்கென்றே அர்ப்பணம் செய்து செய்யப்பட வேண்டுமென்பதே வேதத்தின் கருத்து—

இதனை யறியாமல் கர்மானுஷ்டானம் செய்பவருக்கு இந்த புத்தி பெறப்படமாட்டாதென்கிறார்—

यामिमां पुष्पितां वाचं प्रवदन्त्यविपश्चितः ।
वेदवादरताः पार्थ नान्यदस्तीति वादिनः ॥ ४१ ॥
कामात्मानः स्वर्गपराः जन्मकर्मफलप्रदाम् ।
क्रियाविशेषबहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥ ४२ ॥
भोगैश्वर्यप्रसक्तानां तयाऽपहृतचेतसाम् ।
व्यवसायात्मिका बुद्धिः समाधौ न विधीयते ॥ ४३ ॥ 44

யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபச்சித: |
வேதவாதரதா: பார்த்த நாந்யத் அஸ்தீதி வாதிந: || 41 ||
காமாத்மாந: ஸ்வர்க்கபரா: ஜந்மகர்மபலப்ரதாம் |
க்ரியா விசேஷ பஹுளாம் போகைச்வர்யகதிம் ப்ரதி || 42 ||
போகைச்வர்யப்ரஸக்தாநாம் தயாऽபஹ்ருதசேதஸாம் |
வ்யவஸாயாத்மிகா புத்தி:ஸமாதௌ ந விதீயதே || 43 ||

மூன்று ச்லோகங்களும் சேர்ந்து ஒரே வாக்யம். முதலிரண்டு ச்லோகங்கள் ஒரு பாகம். அது மேல் வாக்யத்துடன் சேரும்.

अविपश्चितः—விவேகமில்லாதவர்களாய்
वेदवादरताः—வேதங்களில் பல பலன்கள் விஷயமாகவுள்ள பேச்சுக்களில் பற்றுள்ளவராய்
अन्यत् न अस्ति—வேறு மோக்ஷ பலனில்லை
इति वादिनः—என்று வாதம் செய்கின்றவராய்
कामात्मानः—இஷ்டப்பட்டதிலெல்லாம் சென்ற மனமுடையராய்
स्वर्गपराः—ஸுவர்கத்தைப் பெரிதாகக் கொண்டவருமானவர்கள்
भोग ऐश्वर्यगतिं प्रति—இன்பம் பொருள் பெறுதலைக் குறித்தேயாகி
क्रियाविशेष बहुलाम्—ஆத்ம ஜ்ஞானமில்லையாகையாலே வெளிச்செயலேயே சிறப்பாகவுடையதும்
जन्मकर्म फलप्रदाम्—மறு பிறவி, கர்ம என்ற பலன்களையே விளைவிப்பதுமான
पुष्पितां—பூப்பூத்தாற் போலுள்ள
यां इमां वाचं—அனுபவத்திலுள்ள எந்தப் பேச்சை
प्रवदन्ति—பேசுகின்றனரோ
तया—அப் பேச்சினாலே
अपहृत चेतसां—மனம் கவரப்பட்ட
भोगैश्वर्य प्रसक्तानां—இன்பம் பொருள் என்ற இரண்டிலேயே இழிந்தவர்களுக்கு
व्यवसायात्मिका—ஆத்மஜ்ஞான மூலமாகக் கீழ்ச்சொன்ன
बुद्धिः—ஞானமானது
समाधौ—அதற்காகவே ஏற்பட்ட மனத்தில்
न विधीयते—உண்டுபண்ணப்படுகிறதில்லை.

பெரும்பாலும் ப்ரஜைகள் இன்பம் பொருள் இவற்றையே விரும்புகின்றவராவர். வேதம் பலவகையாகப் பிரித்து அவற்றிற்கு வழிகளை வகுக்கின்றன. அதனால் அப் பேச்சுக்களையே காட்டி அவற்றிற்கு மேலொன்றில்லை என்று வாதிக்கும் அவிவேகிகளே எங்கும் உளர். அப் பேச்சு பூப்பூத்தாற் போலிருக்கும். தொட்டால் கசங்கும் பூ. அது போல் அப் பேச்சும் கேட்க இனிதாயிருக்குமாயினும். சர்ச்சை செய்தால் நிற்காது. நிலையான பலனையும் தாராது. அர்த்தகாமங்களிலீடுபட்டவரே அப்பேச்சினால் இழுக்கப்படுவர், மனது ஏற்பட்டது ஆத்மஜ்ஞானத்தைக் கொள்ளவே. அதனால் அது ஸமாதி. அத்தகைய மனத்தில் அதன் மூலமான புத்தி இவர்களுக்குப் பிறவாது. ஆகையால் அப் பேச்சுக்கு ஆளாகாமல் நான் சொல்லுகிறபடி செய். (43)

ஆயிரம் தாய் தந்தைகளுக்கு ஸமமாக நினைக்கப்படும் வேதமும் இப்படி கேடான விஷயங்களை விதிப்பது தகுமோ என்னில்—

त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।  45 Compare 14-21/26
निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥ ४४ ॥

த்ரைகுண்யவிஷயா: வேதா: நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந |
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்த்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவாந் || 44

वेदाः—வேதங்கள்

त्रैगुण्यविषयाः—முக்குணங்களில் அந்தந்த குணம் மேலிட்ட எல்லா அதிகாரிகளுக்கு மானவை

भवार्जुन—ஸத்துவ குணம் மேலிட்ட அர்ஜுனா: நீ

निस्त्रैगुण्यः भव—எல்லா குணங்களையும் வளர்ப்பவனாகாமலிரு.

निर्द्वन्द्वः—ஸுகதுக்க காரணமான ரஜஸ்தம: கார்யங்களை விட்டவனாய்

नित्यसत्त्वस्थः—எப்போதும் ஸத்துவ குணத்தில் நிலையுற்று

निर्योगक्षेमः—ஸம்ஸார வ்ருத்திக்கானவற்றைச் சேர்ப்பதிலும் காப்பதிலும் நோக்கின்றி

आत्मवान् भव—ஆத்மாவொன்றையே நாடுகின்றவனாவாய்.

(வைத்ய சாஸ்த்ரம் அவரவர் உடலுக்கும் வியாதிக்கும் தகுந்தபடி மருந்துகளை விளக்குவது போல்) உலகில் ப்ரஜைகள் ஸத்துவம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்ற குணங்களில் ஒவ்வொன்றுமேலிட்டவராயிருப்பதால் எல்லோருக்கும் பொதுவான வேதம் மோக்ஷத்தை மட்டும் உபதேசிக்காது. அர்த்தகாமங்களில் இழிந்தவர்கள் கொலை முதலான வழிகளிலிறங்கிக் கெடலாகாதென்று அவர்களுக்கும் சில வழிகளைக் காட்டி வேதத்தில் நம்பிக்கையை உண்டு பண்ணும் அது. சிறிதும் பிள்ளைக்கு இஷ்டமாக நடக்காத போது தாயைப் பிள்ளையும் தாயாக நினைப்பானோ. நீ உனக்கு எது தகுமென்பதை கவனித்து ஸத்துவகுணம் செழிக்கவும் ரஜஸ்ஸும் தமஸ்ஸும் கெடவும் எது வேண்டுமோ அதனைக் கைப்பற்று. மற்ற யோகக்ஷேமங்களிலே மனம் செலுத்தாதே.

यावान् अर्थ उदपाने सर्वतस्संप्लुतोदके ।
तावान् सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥ ४५ ॥

*யாவாந் அர்த்த உதபாநே ஸர்வத: ஸம்ப்லுதோதகே |*
*தாவாந் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத: || 45 ||*

**सर्वतः**—நாற்புறமும்
**संप्लुत उदके**—நிறைந்த நீரையுடைய
**उदपाने**—குடித்தண்ணீர்க் குளத்தில்
**यावान् अर्थः**—(தாகமுள்ளவனுக்கு) எவ்வளவு வேண்டுமோ,
**तावान्**—அவ்வளவே
**ब्राह्मणस्य**—முழுவேதம் ஓதிய
**विजानतः**—மோக்ஷ-ஸம்ஸார விவேகமுள்ளவனுக்கு
**सर्वेषु वेदेषु**—எல்லா வேதங்களிலும் ஆகிறது.

குடித்தண்ணீர் வேண்டுமவனுக்குக் குளம் பெரிதாகத் தான் இருக்கவேண்டும். அப்போதே தண்ணீர் தெளிவாயிருக்கும். மோக்ஷம் விரும்புகின்றவன் முழு வேதம் ஓதவேண்டா என்று நினைக்கலாகாது. எல்லா வேதங்களுமே இவனுக்கு வேண்டும். அங்கங்குச் சொன்ன அற்ப பலன் தானே விடப்பட வேண்டும். விதித்த செயலெல்லாம் கூடுமே. விடவேண்டுவன அதிகமாகும்.

கொள்ள வேண்டுவது எது, விடவேண்டியதென்ன என்பதை விரித்துரைக்கிறார்—

कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।
मा कर्मफलहेतुर्भूः मा ते संगोऽस्त्वकर्मणि ॥ ४६ ॥

*கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசந |*
*மா கர்மபலஹேதுர்பூ: மா தே ஸங்கோऽஸ்த்வகர்மணி || 46 ||*

**कर्मणि एव**—விதிக்கப்பட்ட கர்மாவில் மட்டுமே
**ते अधिकारः**—உனக்கு உரிமையாம்.
**फलेषु**—அததற்குச் சொன்ன பலன்களில்
**कदाचन**—எப்போதும்
**मा अधिकारः**—பற்று வேண்டா.
**कर्मफलहेतुः**—செய்யும் செயல்களுக்கு உன்னைக் கர்தாவாகவும் விடாமல் வரும் பலனுக்கு உன்னைக் காரணமாகவும் நினைப்பவனாக
**मा भूः**—ஆகாதே
**अकर्मणि**—கர்மாவைச் செய்யாமலிருப்பதில்
**ते संगः**—உனக்குப் பற்று
**मा अस्तु**—வேண்டா.

எந்தக் கர்மாவுக்கும் பலன் உண்டு. வர்ணாச்ரமங்களுக்குத் தக்கனவாகில், காம்யகர்மாவைக்கூட செய்யலாம். அக்கர்மாவில் மட்டும் அதிகாரமேயன்றி, பலத்தில் நோக்குத் தகாது, கர்மாவில் அதிகாரமென்றதாலே கர்மாவைச் செய்பவனாக உன்னையே நீ நினைக்கலாது. உண்பது போன்ற லௌகிக கர்மாக்களுக்குப் பசியடங்குவது போன்ற பலன்கள்

இன்றியமையாதவை. அப் பலன்களை உனக்கு நீயே செய்து கொண்டதாகவும் நினைக்காதே. அதற்காக கர்மாவை செய்யாமல் விடுவதும் தகாது. (ஒவ்வொரு பாதத்திற்கும் பொருள் வெவ்வேறு என்பதைக் கவனித்துக் கொள்க.)

எப்படி செய்ய வேண்டுமென்பதை விளக்குகிறார்—

योगस्थः कुरु कर्माणि संगं त्यक्त्वा धनञ्जय ।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥ ४७ ॥ 48

யோகஸ்த்த: குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா தநஞ்ஜய |
ஸித்யஸித்யோ: ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே || 47 || 48

धनञ्जय—வென்று தனத்தைக் கொள்ளும் அர்ஜுனா
संगं त्यक्त्वा—பணம், பந்து என்ற பற்றைவிட்டு
कर्माणि—கார்யங்களை
योगस्थः—யோகத்தில் இருந்து கொண்டு செய்.
सिद्धि-असिद्ध्योः—வெற்றி முதலான பலன் கிடைப்பதிலும் கிடைக்காமையிலும்
समः भूत्वा—ஸமமான நிலையில் இருந்து (செய்)
समत्वम्—இந்த ஸம நிலையே
योगः उच्यते—இங்கு யோகமாகச் சொல்லப்படும்

பணத்தில் ஸங்கம் வைத்தாயாகில் வெற்றியில் நோக்கு உண்டாம், பந்துக்களிடம் ஸங்கம் வைத்தாயாகில் தோல்வியில் நோக்கு உண்டாம். ஒன்றை வேண்டும் போது மற்றொன்றில் வெறுப்பாம், ஆகையால் நோக்கு ஒன்றும் கூடா. கர்மயோகமென்று இங்கே பொதுவாகச் சொன்னது இந்த ஸமத்வமென்ற யோகத்துடன் சேர்ந்த கர்மாவையே. அவிவேகியின் கர்மாவில் இல்லாத இதன் சேர்த்தி விவேகி கர்மாவுக்கு உண்டு. அதனால் கர்மயோகம் அத்துடன் ஸமத்வமென்பது மனதின் ஒருவகை நிலையானபடியாலே யோகமே.

மற்றொரு விஷயம் விளக்கக் கருதி அருள்கிறார்—

दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद् धनञ्जय ।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥ ४८ ॥ 49

தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தநஞ்ஜய |
புத்தௌ சரணம் அந்விச்ச க்ருபணா: பலஹேதவ: || 48 || 49

धनञ्जय—அர்ஜுனா!
बुद्धियोगात्—கீழ்க்கூறிய புத்தியுடன் சேர்ந்த கர்மாவைவிட
कर्म—அதில்லாத கர்மாவானது
दूरेण अवरम्—மிகவும் கீழ்ப்பட்டது.
बुद्धौ—கீட் சொன்ன புத்தியோகத்திலே
शरणम्—உனக்குத் தங்கும் இடத்தை
अन्विच्छ—ஆராய்ந்து கொள் (இந்த புத்தியிலேயே நிலைத்திரு)
फलहेतवः—பலனுக்கு காரணமாகின்றவர்
कृपणाः—ஏழைகள், ஸம்ஸாரிகளாவர்.

சில கர்மாக்களுக்குச் சில பலன்கள் நிச்சயமாயிருக்கும். உண்பது நடப்பது போன்றவற்றில் (பசிதீர்வது, சேர்வது போன்ற பலன்) காண்க. போர் செய்வது போன்றவற்றில் வெற்றியோ தோல்வியோ ஏதேனுமொன்று நிச்சயமாக உண்டு. யாகம் ஹோமம் முதலானவற்றால் ஸ்வர்கம், புத்ரன், மழை, பசு முதலான பலன்கள் பெறுகின்றனரே, அங்கே சாஸ்திர விதியைக் கண்டு விரும்பும் பலன் ஏதேனுமொன்று பெறப்படும்—விரும்பவில்லை யாகில் பலனில்லை. இம் மூன்று வகையான பலன்களுக்குக் காரணமாயிருந்து கர்மாநுஷ்டானம் செய்கின்றவர்கள் க்ருபணர்கள். மோக்ஷத்திற்கான சரக்கையிழந்தவராவர். பசி தீர்வது போன்ற பலனை நமக்கல்ல என்று விட வேண்டும். வெற்றியோ தோல்வியோ எல்லாம் ஸமமென்று நடத்த வேண்டும். ஸ்வர்கம் முதலான பலன்களை விரும்புதலே கூடாது. நான்காம் பாதத்தில் பஹுவசனம் இம் மூன்று வகுப்பைக் காட்டும். இது மொத்தம் புத்தி யோகம். இதில்லாத கர்மாவானது மிகவும் கேடாம். அதனால் புத்தியை ஆராய்ந்து அதில் நில்.

अत्र बुद्धियोगादित्यस्य लक्षणया तद्युक्तकर्मण इत्यर्थः। यद्वा बुद्ध्या उक्तबुद्धिविशेषेण योगो यस्य कर्मणः, तस्मात् बुद्धियोगादित्यर्थः। दूरेणावरमित्यस्यात्यन्तावरमित्यर्थः। अथवा बुद्धियोगात् दूरेणकर्म—बुद्धियोगदूरस्थितं—तद्रहितं कर्म अवरं—निकृष्टमित्यर्थः। कृपणा इति चतुर्थपादे बहुवचनात् नियतैकफलं नियतान्यतरफलम् अनियतफलमिति त्रिविधफलसक्तनिन्दा। भोजनादेः क्षुन्निवृत्त्यादि नियतमेकं फलम्। युद्धादौ जयः पराजयो वेत्यन्यतरत् नियतं फलम्। यागादौ स्वर्गादिकं कामनायामेव भवेत्, नान्यदेत्यनियतमिति फलभेदः। सर्वत्याग एव बुद्धियोगः। अनियतं फलं मा भूदिति त्याज्यम्। नियतमपि न स्वार्थमिति स्वासंबन्धितया ज्ञातव्यम्।

புத்தியோகமில்லையாகில் ஸம்ஸாரியாவரென்றார். புத்தியோகமுள்ளவனுக்கு ஸர்வபந்தமும் போமென்கிறார்—

बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते।
तस्मात् योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम्॥ ४९॥



புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருததுஷ்க்ருதே |
தஸ்மாத் யோகாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு கௌசலம் || 49 ||



इह—இக்கர்மானுஷ்டானத்தில்
बुद्धियुक्तः—கீழ் சொன்ன புத்தியோகமுடையவன்
सुकृतदुष्कृते—புண்யம் பாபம்
उभे—இரண்டையும்
जहाति—கழிக்கிறான்.
तस्मात्—ஆகையால்
योगाय—புத்தியோகத்திற்கு
युज्यस्व—பொருந்தியிரு.
योगः—புத்தியோகமானது
कर्मसु—கர்மாக்கள் எல்லாவற்றிலும்
कौशलम्—ஸாமர்த்தியமாய் கவனமாய்ப் பெறுவதாம்.

பலனுக்காகவே எதையும் செய்யும் பழக்கமுள்ளவர்களுக்கு இந்த புத்தியோகம் ஒவ்வொரு கர்மாவிலும் விடாமல் வரவேண்டுமென்பது மிக்க ஸாமர்த்தியத்திலாவது, இது விடாமலிருப்பின், ஸம்ஸார பந்தம் விடப்படும், புண்யமும் பாபம் போல் வைராக்யமுள்ளவன் ஒழிக்க வேண்டியதாம்.

புண்ய பாபங்கள் போனால் பெறப்படுவதென்ன என்பதை அறிவிக்கிறார்—

कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः ।
जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्त्यनामयम् ॥ ५० ॥ 51

கர்மஜம் புத்தியுக்தா ஹி பலம் த்யக்த்வா மநீஷிண: |
ஜந்மபந்த விநிர்முக்தா: பதம் கச்சந்த்யநாமயம் || 50 || 51

बुद्धियुक्ताः—புத்தியோகம் உடையவர்கள்
कर्मजं फलं—செய்யும் கர்மாக்களின் பலனை
त्यक्त्वा—தகுமாறு விட்டு
मनीषिणः-பக்தியோகம் வரையிலான உபாயமனுஷ்டித்தவர்
जन्मबन्धविनिर्मुक्ताः—ஸம்ஸார பந்தத்தினின்று விடுபட்டு
अनामयं—ரோகாதிகள் அற்ற
पदम्—அடைய வேண்டுவதை
गच्छन्ति—அடைகின்றனர்
हि—வேத ப்ரஸித்தமாம் இது.

ஸம்ஸாரபந்தத்தினின்று விடுபடுதல் முன் ச்லோகத்தில் சொல்லப் பெற்றது. அது வருவது புத்தியோகத்தினின்று படிப்படியாக எல்லா உபாயமும் அனுஷ்டித்த பிறகாம். பந்தம் விலகினவுடனே குற்றமே யில்லாத பதம் பெறலாம். பதமாவது-பரமபதம் நித்யவிபூதி. அங்கு அனுபவிக்கப்படும் பரமாத்ம ஜீவாத்ம ஸ்வரூபங்களும் பதமாகும். நித்ய விபூதியடைந்தால் அது ஸித்தம். பதம் பெறுதலை அனுபவத்தில் காட்ட முடியாதாகையால் हि என்று வேத ப்ரஸித்தியைச் சொன்னதாம். ஸம்ஸாரபந்தம் போகவே உபாயம் செய்யவேண்டும். சொன்ன பத ப்ராப்தியானது தானே வரும். மடையெடுத்தால் வாய்க்கால் நீர், தானே பெருகுவதுபோல் என்பதும் 'ஹி' என்ற சொல்லால் குறித்ததாம்.

பலத்தில் பற்றை யறுக்கும் புத்திக்கு நிர்வேதமும் துணையாகச் சேரும் ஸமயம் அறிவிக்கிறார்—

यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।
तदा गन्तासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥ ५१ ॥ 52 See Nrl 26-11-69/70

யதா தே மோஹகலிலம் புத்திர் வ்யதிதரிஷ்யதி | 52
ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச || 51 ||

बुद्धिः—கீழ்க்கூறிய புத்தியானது
यदा—கர்மானுஷ்டானத்தில் க்ரம மாக எப்போது
मोहकलिलम्-பற்றுக்குக் காரணமான அஜ்ஞானமென்ற அழுக்கை
व्यतितरिष्यति—கடக்கிறதோ
तदा—அப்போது
श्रुतस्य च—இது வரையில் பற்றோடு கேட்ட பலனுக்கும்
श्रोतव्यस्य च—இனிக்கேட்க நேரிடும் பலனுக்கும்
निर्वेदम् ஏதோ கேட்க நேர்தலென வெறுப்பை (அல்லது)
श्रोतव्यस्य—அவசியம் கொள்ள வேண்டிய ஸத் விஷயத்திற்கு
निर्वेदम्—இவ்வளவு நாள் கேட்காம விழந்தோமே என்ற வருத்தத்தை
गन्तासि—அடையப்போகிறாய்.

புத்தி யேற்பட்டாலும் வாஸனையின் கனத்தினால் அஜ்ஞானம் தொடர்ந்தே வரும். அத்துடன் கர்மானுஷ்டானம் செய்துவர நாளடை வில் மோஹம் போம். நிர்வேதம் வாராமைக்கு மோஹமே காரணம். அது கழிந்தால் நிர்வேதமும் பெறலாம். श्रोतव्यस्य என்பது கெட்ட விஷய மாகில், கேட்க விரும்பாமற் போனாலும் சில ஸமயம் வேண்டாததும் காதில் விழுமாகில், அப்போது நிர்வேதமும் சேருமென்பதாம். ச்ரோ தவ்யமென்று நல் விஷயத்தைச் சொல்வதாகில், அது விஷயமாக நிர்வேதமாவது, இதனை முன்னமே கேட்கவில்லையே என்ற வருத்தமாம்.

38வது ச்லோகம் வரையில் ஆத்மஸ்வரூபத்தை உபதேசித்து விட்டு, புத்தியோகத்துடன் கர்மானுஷ்டானத்தை உபதேசிக்க இழிந்து, 'புத்தியோகம் இல்லாதாருக்கு ஸம்ஸாரமாம்; புத்தி யோகத்துடன் கர்மானுஷ்டானம் செய்தால் மநீஷியாகி பரமபதம் பெறுவான்' என்றார். இனி मनीषियாகி என்பதன் விவரணம். அதில் இப்போது புத்தியோகத்துடன் கர்மயோகம் செய்ய மேலே ஜ்ஞானயோகமும் அதன் மேல் த்யானயோகமும் பெறவாகுமென்கிறார்–

श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला । See Nk. P 26-11-7;
समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि ॥ 53 ॥

ச்ருதிவிப்ரதிபந்நா தே யதா ஸ்த்தாஸ்யதி நிச்சலா | 53
ஸமாதாவசலா புத்திஸ் ததா யோகம் அவாப்ஸ்யஸி || 52 ||

श्रुतिविप्रतिपन्ना—நாம் சொல்லக் கேட்டதனால் விசதமாக ஆத்மவிஷயத்தைக் கொண்டதாய்
अचला—அசலாடாத
ते बुद्धिः—உனது புத்தியானது
यदा निश्चला—எப்போது வேறு விஷயங்களைக் கொள்ளாமல்
समाधौ—வேறு ப்ரவ்ருத்தியில்லாத மனத்திலே
स्थास्यति—விடாத ஆத்ம சிந்தனை யாகுமோ, ஸ்திதப்ரஜ்ஞதை என்னவாகுமோ,
तदा योगम्—அப்போது யோகத்தை
अवाप्स्यसि—பெறப்போகிறாய்.

समाधीयते अस्मिन् आत्मज्ञानं इति समाधिः, मनः। (ता॰ चन्द्रिका)

இது வரையில் புத்தியென்றும் யோகமென்றும் புத்தியோக மென்றும் ஸமத்வ யோகத்தைச் சொல்லி வந்தார். அதனை இங்கும் சொல்வதாலும் स्थास्यति என்று எதிர்காலமாகவும், அதற்குப் பிறகு யோகம் பெறப்போகிறாயென்றும் சொல்லவொண்ணாது. எனவே கீழ்ச் சொன்ன புத்தியோகத்துடன் சேர்ந்த கர்மாநுஷ்டானத்தினின்று ஒரு புத்தி வருமென்றும் அதற்குப் பிறகு ஒரு யோகம் பெறலாகுமென்றே இங்கு ஸ்வரஸமான பொருள். அந்த புத்தியானது ஸ்த்திதப்ரஜ்ஞதை என்று மேலே அர்ஜுனனது கேள்வியினின்று தெளிவாம். அதன் பிறகு வரும் யோகமானது "பரம் த்ருஷ்ட்வா நிவர்ததே" என்று மேலே சொல்லும் ஆத்ம தர்சனமாகும். (52)

बुद्धिः स्थास्यति என்ற சொற்களால் स्थितप्रज्ञतை வருமென்றதாயிற்று. அதனை நன்கு உணர விரும்பி—अर्जुन उवाच—அர்ஜுனன் கேட்கிறான்—

**स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।**
**स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम् ॥ 53 ॥**

ஸ்த்திதப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்த்தஸ்ய கேசவ |
ஸ்த்திததீ: கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் || 53 ||

समाधिस्थस्य—மனம் ஸ்வாதீனமான
स्थितप्रज्ञस्य—நீர் சொன்ன புத்தி நிலைபெற்றவனுக்கு
का भाषा—பெயர் என்ன? அவனை எவ்வாறு சொல்வது?
केशव—ஸர்வேச்வரனே!
स्थितधीः—அந்த ஸ்த்திதப்ரஜ்ஞன்
किं प्रभाषेत—பேசுவதென்ன?
किमासीत—இருப்பென்ன?
किं व्रजेत—நடை என்ன?

அவனது குணங்களை யறியும்படி பெயரும் அவனது வாக்கு மனம் உடல் என்ற கருவிகளின் செயல்களும் தெரிவிக்க வேணும். (53)

श्रीभगवान् उवाच—பகவான் அறிவித்ததாவது—

ஆத்ம விஷயமாகவே மனோவாக்காயங்கள் அவனுக்கு இருக்கும். அந்நிலையை உணர்த்த ஸ்த்திதப்ரஜ்ஞன் என்பதே பெயராகுமென்பாராய் அந்நிலையில் நாலு படிகள் இருக்கின்றன எனவறிவிக்க அவற்றில் உயர்ந்த படியை முதன்முதல் மொழிகிறார். ஸ்த்திதப்ரஜ்ஞன் என்ற சொல்லின் பொருள் இங்கே நன்கு பொருந்துமென்று.

**प्रजहाति यदा कामान् सर्वान् पार्थ मनोगतान् ।**
**आत्मन्येवाऽऽत्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥ 54 ॥**

ப்ரஜஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த்த மநோகதாந் |
ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்த்திதப்ரஜ்ஞஸ்ததோச்யதே || 54 ||

पार्थ यदा—அர்ஜுனா! எப்போது
आत्मनि एव-ஆத்மவிஷயத்திலேயான
आत्मना—மனத்தினால்
तुष्टः—த்ருப்தி பெற்றவனாய்
मनोगतान्—முன்னே மனத்திலிருந்த
सर्वान् कामान्—எல்லா ஆசைகளையும்
प्रजहाति—மீண்டும் எழாதபடி விடுகிறானோ
तदा—அப்போது
स्थितप्रज्ञः उच्यते—ஸ்த்திதப்ரஜ்ஞன்-ஸ்த்திததீ என்று சொல்லப்படுவான்.

**அவன்** மனத்திலிருந்த ஆசையெல்லாம் மீண்டும் எழாதவாறு ஒழிய வேண்டும். ஆத்ம விஷயத்திலே பூரண த்ருப்தி வேண்டும். நடைவிடை பாவனை யெல்லாம் ஆத்மாவைப் பற்றியேயாம். இவன் சரியான ஸ்த்திதப்ரஜ்ஞன்—இந்த நிலைக்கு वशीकार ज्ञा என்று யோக சாஸ்திரத்தில் பெயர் என்பர் தாத்பர்ய சந்த்ரிகையில். மேலே மூன்று நிலைகளுக்கும் தனித் தனிப் பெயர் உண்டென்று குறிப்பர். இதனின்று நான்கு விதமான பெயரும் கூறினதாகும். (55)

அடுத்த கீழ் நிலையாவது

**दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।**
**वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते ॥ ५५ ॥**

துக்கேஷ்வநுத்விக்நமநா: ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: |
வீதராகபயக்ரோத: ஸ்த்திததீர் முநிருச்யதே || 55 ||

**दुःखेषु**—துக்க காரணங்கள் நேரில்
**अनुद्विग्नमनाः**—துக்க வுணர்ச்சியற்ற மனமுடையன்
**सुखेषु**—ஸுக காரணம் நேர்ந்தால்
**विगतस्पृहः**—ஸுகத்தின் சுவைப்பற்றவன்
**वीतरागभयक्रोधः**—ராகபயகோபங்களில்லாதவன்
**मुनिः**—ஆத்ம சிந்தையுடையனுகி
**स्थितधीः उच्यते**—ஸ்த்திதப்ரஜ்ஞன் என்னப் படுகிருன்.

ராகமாவது—பெற வேண்டும் வஸ்துக்களில் ஆசை; பயமாவது இஷ்டம் நஷ்டமாகுமென்ரே கேடு விளையுமென்ரே அறிவதாலான துக்கம். அதே அச்சம். க்ரோதமாவது, தனக்கு விரோதம் செய்பவனுக ஒருவனை நினைக்க அவன் மேல் வரும் கொதிப்பு. இவற்றை விட்டு ஆத்ம சிந்தனை செய்பவன் ஸ்த்திதப்ரஜ்ஞன். கீழ்க் கூறியவன் மீண்டும் ஸுக துக்க வுணர்ச்சியே வராதென்ற நிலையுடையவன். இவன் வரும்படி வாஸநாசேஷமுடையவன். இந்நிலைக்கு एकेन्द्रियसंज्ञा என்ற பெயராம்.

இதற்கும் கீழ்நிலை—व्यतिरेकसंज्ञा

**यः सर्वत्रानभिस्नेहः तत्तत् प्राप्य शुभाशुभम् ।**
**नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५६ ॥**

யஸ் ஸர்வத்ராநபிஸ்நேஹ: தத்தத் ப்ராப்ய சுபாசுபம் |
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்ட்டிதா || 56 ||

**यः**—எவன்
**सर्वत्र**—எல்லா விஷயத்திலும்
**अनभिस्नेहः**—விசேஷப் பற்றின்றி உபேக்ஷையாயிருந்து
**तत् तत्**—அந்தந்த
**शुभाशुभम्**—நன்மை தீமையை
**प्राप्य**—உணர்ந்து
**न अभिनन्दति न द्वेष्टि**—அடைவாக கொண்டாடுவதுமில்லை, த்வேஷப்படுமில்லையோ,
**तस्य**—அவனுக்கு
**प्रज्ञा प्रतिष्ठिता**—ஸ்த்தித ப்ரஜ்ஞதையுண்டு.

अनभि என்பதால் அதிகமில்லை, சிறிது உண்டு இவ் அதிகாரிக்கு என்றதாம்.

अभिस्नेह अभिनन्द என்றதால்—வராத விஷயத்திலே சிந்தையிராமலிருப்பதுபோல் வந்த விஷயத்தில் உணர்ச்சியும் அற்றிருக்க வேண்டும். அஃதில்லை ஆனால் உணர்ந்தாலும் அதனைப் பாராட்டாதவன் இதனையும் விட முயல்கின்றவன் ஸ்த்திதப்ரஜ்ஞனாவானென்றதாம்.

இதற்கும் கீழ்நிலையாவது—यतमानसंज्ञा—

यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः ।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५८ ॥

58 See NVP. 26-12-75 யதமான ஸம்ஜ்ஞை

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோங்காநீவ ஸர்வச: |
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்ட்டிதா ||58

अयं—இந்த ஆத்மஜ்ஞாநி
यदा—எப்போது
कूर्मः—ஆமையானது
अंगानि इव—தன் கால் முதலானவற்றைப் போல்
इन्द्रियाणि—இந்த்ரியங்களை
इन्द्रिय-अर्थेभ्यः—அதன் விஷயங்களினின்று
सर्वशः—பார்ப்பது பேசுவது போன்ற எல்லா செயல்களினின்று
संहरते—அடக்குகிறானோ
तस्य च—அவனுக்கும்
प्रज्ञा प्रतिष्ठिता—ஸ்த்திதப்ரஜ்ஞதையாம்.

இவ்வாறு நாலு ச்லோகங்களாலே ஸ்த்திப்ரஜ்ஞனுக்கு நாலு நிலைகள் சொல்லப் பெற்றன. ஒவ்வொரு நிலைக்கும் பெயரும் உரையில் கூறப்பெற்றது. மேன்மேல் கீழ் நிலையைக் குறித்திருப்பதால் கடைசியிற் கூறிய நிலையினின்று முதனிலைக்குச் செல்ல வேண்டும். ஆக—(1) இந்திரியங்களை விஷயங்களினின்று பிரித்து ஆத்ம விஷயத்திற்குச் செலுத்த வேண்டும். (2) அடக்கப்பட்ட இந்திரியங்களும் ராகத்வேஷ பலத்தாலே விஷயங்களிலிழிந்தாலும் அவற்றில் நல்லது கிடைத்தற்குக் கொண்டாட்டமும், கெட்டது நேர்ந்ததற்குப் பழிக்க இழிவதுமில்லாமல் மீண்டும் விஷய ஸம்பந்தம் வாராமைக்கு முயல வேண்டும். (3) திருத்தின பிறகும் பழைய வாஸனையாலே செல்லும் மனத்தை ஆனந்த ரூபமான ஆத்மாவின் விசேஷங்களைச் சிந்தித்துக் காட்டித் திருப்ப வேண்டும். (4) அனாதிவாஸனையைக் கிளப்பும் ஔத்ஸுக்யம் அதாவது சிறு நசையும் சிதைந்து பூரண வைராக்யம் பெற்று ஆத்ம சிந்தனை செய்தல் முழு ஸ்த்திதப்ரஜ்ஞதையாம். சுருங்க இவ்வாறும் கூறலாம்—(1) இஷ்டமாயிருந்த வஸ்துக்களை இஷ்டமாகக் காணாமை (2) கண்டாலும் சேராமை, (3) அனுபவிக்க நேர்ந்தாலும் அவற்றில் ஆஸ்த்தையற்றிருக்கை. (4) எள்ளளவும் இராகாதிகளுக்கு இடமளிக்காமை பூர்ண வைராக்யமென்க.

இனி, கீழ்க்கூறிய ஸ்த்திதப்ரஜ்ஞதையென்ற ஜ்ஞாநநிஷ்டை பெறுதல் அரிதென்பதும், பெற வழியும் பணிக்கப்படும்-

विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः ।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥ ५९ ॥

விஷயா விநிவர்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந: |
ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்ததே || 59 ||

**निराहारस्य**—உண்ணுமலிருக்கிற— விஷயங்களை இந்த்ரியங்களால் அனுபவிக்க இழியாமலிருக்கிற
**देहिनः**—ஜீவனுக்கு
**विषयाः**—அந்தந்த இந்திரிய விஷயங்கள்
**विनिवर्तन्ते**—விலகுகின்றன. அனுபவிக்கப்படாமலிருக்கின்றன.
**रसवर्जं**—அனுபவிப்பதில் ஆசை தவிர: ஆசைமட்டும் விலகுவதில்லை.
**रसः अपि**—அவ்வாசையும்
**अस्य**—இந்த ஜீவனுக்கு
**परं**—விஷயானந்தத்திலும் பெரிதான ஆனந்தத்தை— ஆத்மானந்தத்தை
**दृष्ट्वा**—கண்டபிறகு
**निवर्तते**—நீங்கும்.

இந்த்ரியங்களை யனுபவிக்க விடாமலிருப்பவனுக்கும் உள்ளே அனுபவத்தில் காமம் போகாது. அது போவது ஆத்மாவை யனுபவித்த பிறகேயாம்.

அதனுலென்னவெனில், வரும் கேட்டை விளக்குகிறுர்—

यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।
इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥ ६० ॥

बलवानिन्द्रियग्रामः विद्वांसमपि कर्षति ।

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபச்சித: |
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந: || 60 ||

**कौन्तेय**—குந்தியின் குமாரனே!
**विपश्चितः**—சாஸ்த்ர மூலமாக தேஹாத்ம விவேகம் உடையனுய்
**यततः अपि पुरुषस्य**-ஆத்மாவைக் காண நன்கு முயன்றிருக்குமவனுடையவும்
**मनः**—மனத்தை
**प्रमाथीनि**—ஆசையின் துணையால் கலக்கவல்ல
**इन्द्रियाणि**—இந்திரியங்கள்
**प्रसभं**—பலாத்காரமாக
**हरन्ति**—வெளியிலிழுக்கும்.

ராகம் உள்ளவன் என்ன முயன்றுலும், இவனைக் கலக்கி இவனது இந்த்ரியங்கள் இவனது மனத்தை வெளியில் கொணர்ந்து விடும்.

இதனால் ஆத்மாவைக் காண்பது மனோஜயத்தினால்; ஆத்மாவைக் காணாத போது ராகம் விலகாமையினால் மனோஜயம் பெறப்படமாட்டா தாகையால் அதைக் கண்ட பிறகே மனோஜயமென்று தேறுவதால் (அந்யோந்யாச்ரயமாய்) ஒன்றை ஒன்று சார்ந்திருப்பதால் பலன் கைக்கூடாதென்றதாயிற்று.

எனவே வேறு வழியாக மனோஜயம் பெற வேண்டுமென்கிறார்—

तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।
वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६१ ॥

தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: |
வசே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா || 61 ||

मत्परः—எனது திவ்யமங்கள விக்ரஹத்தில் நோக்குள்ளவனாகி
तानि—விஷயராகத்துடன் கூடியே யிருக்கிற
सर्वाणि—எல்லா இந்திரியங்களையுமே
संयम्य—ஒருவாறு அடக்கி
युक्तः—யோகம் செய்கின்றவனாய்
आसीत—வீற்றிருக்க வேண்டும்.
यस्य—இவ்வாறு என்னை த்யானம் செய்யும் எவனுக்கு
इन्द्रियाणि—இந்திரியங்கள்
वशे हि—ராகம் விலகியதால் வசப்படுகின்றனவோ,
तस्य—அவனுக்கு
प्रज्ञा—ஜீவஞானமானது
प्रतिष्ठिता—நிலையுறும்.

விஷய ராகத்தை விலக்க, விஷயங்களுக்கும் எவ்வஸ்துவுக்கும் மேம்பட்டு மஹானந்தமாய், போக்யமான குணங்களுக்கெல்லாம் கடலுமான எனது திவ்யமங்கள விக்ரஹத்திலே மனம் வைத்தால் விஷயராகம் விலகும். பிறகு ஞாநநிஷ்டை கூடும். ஆத்மாவைக் கண்ட பிறகு முழு ராகமும் மாயும்.

தன்னை த்யானம் செய்யாமலே இந்திரியங்களை அடக்க முயல்கின்றவனுக்கு உள்ள கேட்டை விளக்குகிறார்—

ध्यायतो विषयान् पुंसः संगस्तेषूपजायते ।
संगात् संजायते कामः कामात् क्रोधोऽभिजायते ॥ ६२ ॥
क्रोधाद् भवति संमोहः संमोहात् स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशाद् बुद्धिनाशो बुद्धिनाशात् प्रणश्यति ॥ ६३ ॥

த்யாயதோ விஷயாந் பும்ஸ: ஸங்கஸ் தேஷூபஜாயதே |
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோऽபிஜாயதே ||62||
க்ரோதாத் பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்ரம: |
ஸ்ம்ருதிப்ரம்சாத் புத்திநாச: புத்திநாசாத் ப்ரணச்யதி || 63 ||

विषयान् ध्यायत—(ராகம் போகாமை தால்) விஷயங்களிலே மனம் சென்ற
पुंसः—ஜீவனுக்கு
तेषु—அந்த விஷயங்களிலே
संगः—நசையானது
उपजायते—உண்டாம்.
संगात्—நசையினால்
कामः—அனுபவித்தேயாக வேண்டு மென்கிற பெருங்காதல்
संजायते—உண்டாம்.
कामात्—அக் காதலால்
क्रोधः—அதற்குத் தடையேற்படும் இடத்தில் கோபமானது
अभिजायते—பரவும்.
क्रोधात्—கோபத்தினின்று
संमोहः—இது செய்யத்தகும், தகா தென்ற விவேகமிராமை
भवति—ஏற்படும்
संमोहात्—அந்த அவிவேகத்தினால்
स्मृतिविभ्रमः—ஆத்மாவைக் காண இந்திரியத்தை வெல்ல நாம் முயன்று வருகிறோமென்ற நினைவுக்கே அழிவாம்.
स्मृतिभ्रंशात्—அந்நினைவு நீங்கியதால்
बुद्धिनाशः—உபாயத்தை யனுஷ்டிக்க வேண்டுமென்ற புத்திக்கு அழிவு.
बुद्धिनाशात्—அந்த வியவஸாயத்தின் அழிவால்
प्रणश्यति—ஸம்ஸாரியாயிடுகிறான்.

ஆகையால் ராகம் தணியவேண்டும். அதற்கு எனது திவ்யமங்கள விக்ரஹத்தை த்யானம் செய்ய வேண்டுமென்றதாயிற்று.

அதை த்யானம் செய்தால் இந்த்ரியங்களின் ஸஞ்சாரம் இருப்பினும் நன்மையே யென்கிறார்—

रागद्वेषवियुक्तैस्तु विषयान् इन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४ ॥

*ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாந் இந்த்ரியைச்சரந் |*
*ஆத்மவச்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி || 64 ||*

रागद्वेषवियुक्तैः तु—எனது த்யானத்தினால் ராகத்வேஷங்கள் விலகப் பெற்றாலோ வென்றால் அவை விலகிய
आत्मवश्यैः—தனக்கு அடங்கிய
इन्द्रियैः—இந்திரியங்களைக் கொண்டு
विषयान्—அந்தந்த விஷயத்திலே
चरन्—திரிகின்றவனாயினும்
विधेयात्मा—மனம் தனக்கு விதேயமாகப் பெற்றவன்
प्रसादम्—கலக்கமின்மையை
अधिगच्छति—அடைகிறான்.

இந்திரியங்கள் விஷயங்கள்மேல் விழுந்தாலும் விட்டுவிலகுமே யல்லது அவற்றில் ஊன்றா. அதற்குக் காரணம் ராகமும் த்வேஷமும் விலகுதலே. அது என்னை த்யானம் செய்தால். ஆக इन्द्रियाणि प्रमाथीनि என்பதற்கு மாறாக प्रसादமேயாம்.

மனம் கலங்காமல் தெளிந்தால் முழு பலன் பெறலாமென்கிறார்—

प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ।
प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठते ॥ ६५ ॥

*ப்ரஸாதே ஸர்வதுக்காநாம் ஹாநிரஸ்யோபஜாயதே |*
*ப்ரஸந்நசேதஸோ ஹ்யாசு புத்தி: பர்யவதிஷ்டதே || 65 ||*

प्रसादे—மனத்தெளிவு உண்டாகில்
अस्य—இந்த ஜீவனுக்கு
सर्वदुःखानां—ஸம்ஸார துக்கங்கள் எல்லாவற்றிற்கும்
हानिः उपजायते—இன்மையாம். எவ்வாறெனில்—
प्रसन्नचेतसः மனந்தெளிந்தவனுக்கு
आशु—விரைவில்
बुद्धिः—துக்க நாசத்திற்குக் காரணமான ஆத்ம ஜ்ஞானமானது
पर्यवतिष्ठते—முழுமையுமாக நிலைத்திருக்கும்.

ஆத்மஜ்ஞானம் எவ்வளவு வளரவேண்டுமோ அவ்வளவு வளர மனத்தெளிவே காரணம். அவ்வளர்ச்சியால் ஸம்ஸார துக்கம் தொலையும். पर्यवतिष्ठते என்பதன் பொருளை விளக்குகிறார். புத்தி பிறப்பதும் முழு வளர்ச்சி பெறுவதும் பேற்றுக்குக் காரணம். பேறு அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியுமாம்.

नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।
न चाभावयतः शान्तिः अशान्तस्य कुतः सुखम् ॥ ६६ ॥

*நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவநா |*
*ந சாபாவயத: சாந்தி: அசாந்தஸ்ய குதஸ் ஸுகம் || 66 ||*

अयुक्तस्य—61ல் கூறியபடி யுக்தனாகாதவனுக்கு
बुद्धिः—ஆத்மப்ரஜ்ஞையானது
न अस्ति—இருப்பதில்லை
अयुक्तस्य—யுக்தனாகாதவனுக்கு
भावना च न—ஆத்மசிந்தனையுமில்லை.
अभावयतः—ஆத்ம சிந்தனையிராதவனுக்கு
शान्तिः न च—விஷயங்களில் நசையின்மையும் இல்லை.
अशान्तस्य—நசையிறாதவனுக்கு
सुखं कुतः—மோக்ஷ ஸுகம் எது?

'யுக்த ஆஸீத மத்பர:' என்றபடி என் விஷயமான யோகம் செய்யாதவனுக்கு இந்த்ரிய ஜெயமில்லையாகையால் ஸ்திதப்ரஜ்ஞதையில்லை. न चायुक्तस्य भावना என்பது எதற்கெனில், ஸ்த்திதப்ரஜ்ஞனுவதற்குப்போல் சிரஸ்ஸான யோகத்தில் இழியும்போதும் தன் விஷயமாக யோகம் செய்யவேண்டுமென்பதற்காக. இதனை ஆறும் அத்யாயத்தில் குறிப்பார். (இந்த ச்லோகத்தினல் யோகாங்கமான ப்ரத்யாஹார-தாரணை-த்யானங்களும் பலனும் பகவான் திருமேனியை த்யானம் செய்யாதவனுக்கில்லையென்றதுமாம்.)

கீழே இந்த்ரியங்கள் ஸஞ்சாரம் செய்தாலும் विधेयात्मा ஆவாகில் தெளிவேயென்றார். மனம் தனக்கு விதேயமன்றி இந்திரியங்களுக்கு விதேயமானல் வரும் தீம்பைக் காட்டுகிறார்—

इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥ ६७ ॥

இந்த்ரியாணாம் ஹி சரதாம் யந்மநோऽநுவிதீயதே |
தத் அஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர் நாவம் இவாம்பஸி || 67 ||

यत् मनः—எந்த மனமானது
चरतां—விஷயங்களில் உலாவுகின்ற
इन्द्रियाणाम्—இந்திரியங்களுக்கு
अनु विधीयते—அனுஸரித்து நடத்தப் படுகிறதோ,
तत्—அம் மனமானது
अस्य—இவனுடைய
प्रज्ञाम्—புத்தியை,
वायुः—எதிர்காற்றானது
अम्भसि नावम् इव—நீரில் செல்லும் கப்பலைப்போல்
हरति—கைக்கொள்ளும், வேறிடம் கொண்டுபோம்.

ஆகையால் மனது விதேயமாயிருக்க வேண்டும். அது பகவான் விஷயத்தில் யோகம் செய்வதாலாம். (இந்த ச்லோகத்தில் யத் மந: என்ற சொற்களிரண்டில் ஒன்றை இரண்டாம் வேற்றுமையாக்கி अनु என்பதோடு சேர்க்கலாகாது. यत् எந்த இந்திரியம் மனத்தை யநுஸரித்து வைக்கப்படுகிறதோ என்றால் இந்திரியம் மனத்திற்கு வசமாகிறபடியால் அதனால் ஆத்ம விஷயமான ப்ரஜ்ஞை கெடுமென்ப தில்லையே. யத்அநு---இந்திரியத்திற்கு இணங்க என்னலுமாகாது. பொதுவாகவே இந்திரியங்களுக்கு இணங்க என்னலாயிருக்க ஒவ்வொரு இந்திரியமாகச் சொல்வது அவசியமில்லை. மநுஸ்மிருதியில்கூட இவ்வாறு கூற வியலாதாகையால் வேறு விதமாக உரைப்பதாம். அவ்வாறே இங்கு மென்பது அவசியமல்ல.) (67)

यदा संहरते என்கிற ச்லோகத்தில் ஸ்த்தித ப்ரஜ்ஞதையின் முதனிலை மொழியப் பெற்றது. அதைப் பெறல் அரிது; ராகம் இருப்பதா லென்றார் மேல். அது ஆத்மாவைக் கண்ட பிறகே போகுமாகில் ஸ்த்தித ப்ரஜ்ஞதை வாராதே என்ன, பகவத் யோகத்தாலே ராகம் விலகுமென்று கூற, அதற்காக, இவ்வளவு விரிவு ஏற்பட்டது. இதனை முடிக்கிறார் மேலே—

**तस्मात् यस्य महाबाहो निगृहीतानि सर्वशः ।**
**इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६८ ॥**

தஸ்மாத் யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதாநி ஸர்வச: |
இந்த்ரியாணி இந்த்ரியார்த்தேப்ய: தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்ட்டிதா ||

महाबाहो-பாஹுபலம் மிகப் பெற்றவனே!
तस्मात्—விதேயமாகாத மனம் கெடுக்குமாகையால்
यस्य—எவனுடைய
इन्द्रियाणि—இந்திரியங்கள்
इन्द्रियार्थेभ्यः—இந்திரிய விஷயங்களினின்று
सर्वशः—எல்லாவற்றினும்
निगृहीतानि—அடக்கப்பட்டனவோ
तस्य—அவனுக்கு
प्रज्ञा—ஆத்ம விஷயத்தில் அறிவு
प्रतिष्ठिता—நிலையுறும்.

மனத்தை விதேயமாக்கி இந்திரியங்களின் கொடுமைக்கு இடம் அளிக்காமலிருந்தால் ஸ்த்தித ப்ரஜ்ஞதையின் முதனிலையைப் பெறலாம். படிப்படியாக நான்கு விதமான ஸ்த்தித ப்ரஜ்ஞதையும் பெறுவதாம். இந்த ஸ்த்தித ப்ரஜ்ஞதையே ஜ்ஞான யோகம், அதாவது வைராக்யத்துடன் சேர்ந்த அப்யாஸம். வைராக்யத்திற்கு நாலு நிலைகள் यतमान-व्यतिरेक-एकेन्द्रिय-वशीकारसंज्ञैகள் என்றவை. அவற்றுடன் சேர்ந்தது ஆத்ம சிந்தனை என்ற அப்யாஸம். இதற்குப் பிறகு சிரஸான யோகம் ஒன்று உண்டு. அதில் ஆத்மாவைக் காண்பதாம். அந்த யோகத்தில் விஷயமான அம்சங்கள் நாலு உண்டு. அவற்றை ஆறும் அத்யாயத்தில் கூறுவர். (68)

ப்ரஜ்ஞையானது ஆத்மவிஷயத்தில் நிலையுறுமென்றார். அந்த ப்ரஜ்ஞையைப் புகழ்வது மேல் ச்லோகங்களில்—

**या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी।**
**यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥ ६९ ॥**

*யா நிசா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ |*
*யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிசா பச்யதோ முநே: || 69 ||*

या—கீழ்க்கூறிய எந்த ப்ரஜ்ஞையானது
सर्वभूतानां—எல்லா ப்ராணிகளுக்கும்
निशा-இரவோ; தோற்றவில்லையோ
तस्यां--அந்த ஆத்ம ஜ்ஞானத்திலே
संयमी—கீழ்ச் சொன்ன முறையிலே இந்திரிய நிக்ரஹம் செய்தவன்
जागर्ति—விழித்திருக்கிறான்.

यस्यां—எந்த ப்ரஜ்ஞையில் அதாவது விஷயானுபவத்தில்
भूतानि—எல்லா ப்ராணிகளும்
जाग्रति—விழித்திருக்கின்றனவோ,
सा—அந்த ப்ரஜ்ஞையானது
पश्यतः—உறக்கமின்றி விழிப்புடன் இருக்குகின்ற
मुनेः—ஆத்ம விஷயமான அப்யாஸம் செய்கின்றவனுக்கு
निशा—இரவாம்; தோற்றாது.

निशा என்ற சொல்லுக்கு இரவு என்றது பொருள். இரவு என்பது அறிவில்லாத காலத்தையும், பகல் என்பது அறிவு விளங்கும் காலத்தையும் கூறும். இங்குக் காலமென்ற பொருளை விட்டு வேறு பொருளே கூற வேண்டும். ப்ரஜைகளுக்கு உறக்கத்திற்கு இடமான ஆத்மாவை ப்ரஜைகளுக்கு இரவாகவும் ஞானிக்குப் பகலாகவும், ஞானிக்குத் தோன்றாத விஷயங்களை ப்ரஜைகளுக்குப் பகலாகவும் ஞானிக்கு இரவாகவும் கூறினதாக மாத்வ சாங்கரவுரைகள் கூறும். या என்கிற ஸ்த்ரீலிங்கம் கீழ்க்கூறிய ப்ரஜ்ஞையைக் குறிக்குமாகையால் அதையே இரவும் பகலுமாகக்கொண்டு உரைப்பதாம் இங்கு. கருத்து ஒன்றே. இங்கு—ப்ராணிகளுக்கு இரவான காலத்தில் யோகிகள் விழித்திருந்து யோகம் சிந்தனை

செய்வர். ப்ரஜைகள் விழித்திருக்கும் காலத்தில் தாங்கள் யோகாதிகளி விழியாமலிருப்பர் என்று ஒருவாறு பொருள் தோன்றலாம். இது யாரும் இசையாதது. இங்கே இவ்வாறு கூற ஸந்தர்ப்பமுமில்லை. (69)

இவன் ஆத்ம சிந்தையில் ஆழ்ந்தவன் என்பதை அவனது நிலையினின்று நன்கு உணரலாமென்கிறார்—

आपूर्यमाणमचलप्रतिष्ठं समुद्रमापः प्रविशन्ति यद्वत् ।
तद्वत् कामाः यं प्रविशन्ति सर्वे स शान्तिमाप्नोति न कामकामी ॥ ७० ॥

ஆபூர்யமாணம் அசலப்ரதிஷ்டம்
ஸமுத்ரம் ஆப: ப்ரவிசந்தி யத்வத் |
தத்வத் காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே
ஸ சாந்திம் ஆப்நோதி ந காமகாமீ || 70 ||

आपूर्यमाणम्—இயற்கையாகவே தானே நிறைந்திருக்கின்ற
अचलप्रतिष्ठम्—ஏற்றத் தாழ்வற்ற நிலையும் உடைய
समुद्रम्—கடலை
आपः—ஆற்றுநீர்கள்
यद्वत् प्रविशन्ति...எவ்வாறு புகுகின்றனவோ,
तद्वत्.. அவ்வாறே
सर्वे कामाः...எல்லா விஷயங்களும்
यं प्रविशन्ति...எவனிடம் புகுகின்றனவோ,
सः...அப்போது விகாரம் சிறிதுமில்லாத அவனே
शान्तिम्...ஸம்ஸார பந்தமில்லாமையை
आप्नोति...அடைகிறான்.
न कामकामी...விஷயச் சேர்க்கையில் விகாரமுள்ளவன் வீடு பெறான்.

ஆற்றுநீர்கள் விழாத காலத்திலும் கடல் நிறைந்தேயுளது. எந்நாளும் நீரில் ஏற்றம் குறைவு தெரிவதில்லை. வேறு நீர்கள் விழுந்தது காரணமாக அதில் ஒரு மாறுதல் காணவாகிறதில்லை. (நேர்மாறாக அவை கடல்நீர் கலந்து தன்னுரு மாறி மறைகின்றன என்னலாம்) அது போல் இந்திரிய விஷயம் எத்தகையதாயினும் எவனை மாற்றவாகாதோ அவனது ஆத்மசிந்தை தரமானது. பலன் உடனே பெறலாம். (70)

தாமாக வந்த விஷயங்களால் விகாரம் பெறாமலிருக்க வேண்டுமென்றார். விஷயங்களை விட்டிருப்பதே முக்கியமென்று மொழிகிறார்—

विहाय कामान् यः सर्वान् पुमांश्चरति निस्स्पृहः ।
निर्ममो निरहङ्कारः स शान्तिमधिगच्छति ॥ ७१ ॥

விஹாய காமாந் யஸ் ஸர்வாந் புமாம்ச்சரதி நிஸ்ஸ்ப்ருஹ:
நிர்மமோ நிரஹங்கார: ஸ சாந்திம் அதிகச்சதி || 71

यः पुमान्...எந்த மனிதன்
सर्वान् कामान्.. ஆசைப் படக்கூடிய எல்லா விஷயங்களையும்
विहाय...விட்டுவிட்டு
निःस्पृहः அவற்றில் நசையின்றி
निर्ममः . அவற்றில் மமகாரத்தையும் விட்டு
निरहंकारः...அதற்குக் காரணமான தேஹாத்மாபிமானம் நன்கு விலக
चरति...ஸஞ்சரிக்கிறானோ,
सः.. அவன்
शान्तिम् अधिगच्छति பலன்பெறுவான்.

இவ்வளவால் பகவானின் த்யானத்தினால் இந்த்ரிய நிக்ரஹம் பிறந்து ஸ்த்தித ப்ரஜ்ஞதை பெறுதற்கு முன்னாக ஸமத்வ புத்தியுடன் கர்மானுஷ்டானம் செய்ய வேண்டுமென்று சொல்லப் பெற்றது. இது அவசியமென்று முடிவாக உபதேசிக்கிறார்—

> एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
> स्थित्वाऽस्यामन्तकालेऽपि ब्रह्म निर्वाणमृच्छति ॥ ७२ ॥

> ஏஷா ப்ராஹ்மீ ஸ்த்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி |
> ஸ்த்தித்வாऽஸ்யாம் அந்தகாலேऽபி ப்ரஹ்ம நிர்வாணம் ரிச்சதி ||72||

एषा.. மூல காரணமாகச் சொன்ன இந்த
स्थितिः...புத்தி யோகத்துடன் கர்மானுஷ்டானத்தில் நிலைப்பு
ब्राह्मी.. ஆத்மாவைப் பெறுவிக்கும்.
एनां प्राप्य...இந்நிலை பெற்றால்
न विमुह्यति...ஸம்ஸாரமென்ற மோஹமில்லை.
अन्तकालेऽपि.. கடைவயதிலாவது
अस्यां स्थित्वा...இந்நிலையுறில்
निर्वाणं . ஸ்வகரூபமான
ब्रह्म...ஆத்மாவை
ऋच्छति அடைவான்.

ब्रह्मनिर्वाणமென்பதற்கு ப்ரஹ்மானந்தமெனப் பொருள் கூறுவதானாலும் एषा ब्राह्मी स्थितिः என்பது ஜீவாத்ம விஷயமே. एषा என்றாரே. கீழே பரப்ரஹ்மத்திற்கான பக்திமார்கம் கூறப்படவில்லையே.

பற்றற்ற கர்மானுஷ்டானங் கூடக் கடைசி வயதில் வந்தால் போதும் नेहाभिक्रमनाशोऽस्ति என்று கீழே கூறினாரே. ஆகையால் एषा स्थितिः என்று அந்நிலையையே முதல் சொன்னதாம.

ஸ்ரீபகவத்கீதையில் ஸாங்க்ய யோகமென்னும்.

இரண்டாம் அத்யாயம் முற்றும்.

ஸாங்க்யயோகமாவது—ஆத்மஜ்ஞானத்துடன் சேர்ந்த கர்மயோகம்.

—•—•—

மூன்றாம் அத்யாயம்.

இதற்கு மேல் நான்கு அத்யாயங்களால் இரண்டாம் அத்யாயத்திற் சொன்ன கர்மயோக ஜ்ஞானயோக லக்ஷ்ய யோகங்களை விரித்துரைக்கிறார். அதனால் அர்ஜுனன் தனக்குக் கர்மயோகமே தகுமென முடிவு செய்வதாம்.

ज्यायसी चेत् कर्मणस्ते मता बुद्धिर्जनार्दन ।
तत् किं कर्मणि घोरे मां नियोजयसि केशव ॥ १ ॥
व्यामिश्रेणैव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।
तदेकं वद, निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥ २ ॥

ஜ்யாயஸீ சேத் கர்மணஸ் தே மதா புத்திர் ஜநார்தந |
தத் கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ || 1 ||
வ்யாமிச்ரேணைவ வாக்யேந புத்திம் மோஹயஸீவ மே |
ததேகம் வத, நிச்சித்ய யேந ச்ரேயோऽஹம் ஆப்நுயாம் || 2 ||

जनार्दन—ஜன்மம் தீர்ப்பவனே !
बुद्धिः—ஜ்ஞானமானது
कर्मणः—கர்மாவைக்காட்டிலும்
ज्यायसी—உயர்ந்ததாக
ते मता चेत्—உமக்கு ஸம்மதமாகில்
केशव—ப்ரஹ்மருத்ரேச்வரரே !
किं मां—ஏன் என்னை
घोरे कर्मणि—கொடிய கர்மாவில்
नियोजयसि—ஏவுகின்றீர்.
वाक्येन—சொற்களால்
मे बुद्धिं—எனது புத்தியை
मोहयसीव—தெளிவற்ற தாக்குகிறீர் போலும்
तत् एकं वद—ஆகையால் ஒருவிதமான சொல்லைச் சொல்லும்.
येन अहं—எதனால் நான்
निश्चित्य—இதுதான் உபாயமெனத் தெளிந்து
व्यामिश्रेण एव-இருபக்ஷக்கலப்பேயான श्रेयः आप्नुयाम्-நற்பலன் பெறுவேனோ

'தூரேண ஹ்யவரம் கர்ம' என்று வெறுங் கர்மாவைக் இகழ்ந்து புத்தியோகத்துடன் கர்மாவை அனுஷ்டிக்க வேண்டுமென்றீர். காம்ய கர்மாக்களிலிழிந்தாரைப் பழித்து வ்யவஸாயாத்மகபுத்தியுடன் கர்மானுஷ்டானமே வேண்டுவதென்றீர். ஆனால் பிறகு 'श्रुतिविप्रतिपन्ना' என்கிற ச்லோகத்திலே ஸ்த்தித ப்ரஜ்ஞதை வேண்டுமென்றும், இந்த்ரிய நிக்ரஹமின்றி ஸ்த்தித ப்ரஜ்ஞதை வாராதென்றும், அதற்காக உம்மை த்யானம் செய்ய வேண்டுமென்றும் உபதேசித்தீர். கர்மானுஷ்டானத்தில் இழிந்தவன் வெளியில் இந்திரியங்களை ஏவித் தானே எல்லாம் செய்ய வேண்டும். அப்போது இந்த்ரிய நிக்ரஹமோ ஸ்த்தித ப்ரஜ்ஞதையோ ஏது? அதனால் தான் முன்னமே நான் स्थितप्रज्ञस्य का भाषा என்றெல்லாம் கேட்டேன். அப்போது முழு இந்திரிய நிக்ரஹம் வேண்டுமென்றே சொன்னீர். மேலும் எனக்கு स्थितप्रज्ञतை வேண்டாமாகில்

அதைச் சொல்லாமலே யிருக்கலாம். கலந்து சொன்னதால் என் புத்தி கலங்குகிறது. இது தெளிவு பெற நான் கேட்பதற்காக எனக்குச் செய்த கலக்கம் போதும். இனி ஒன்றையே எனக்கு அருள வேணுமென்றதாம்.

இப்போது கர்மானுஷ்டானமே என்றாராகில், அர்ஜுனன் போரில் இழிவானென்பது தெரியலாகும். கர்மயோகம் செய்தால் ஸ்திதப்ரஜ்ஞதை யுண்டாகுமென்று அர்ஜுனன் தெளியும்படி ஶ்ருதிவிப்ரதிபன்னா என்ற ஸந்தர்பத்தில் வாக்யம் அமையவில்லை. அதனால் இக் கேள்வி யென்க.

श्रीभगवान् उवाच—பகவான் அருளிச் செய்தார்—

लोकेऽस्मिन् द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयाऽनघ ।
ज्ञानयोगेन सांख्यानां कर्मयोगेन योगिनाम् ॥ ३ ॥

லோகேऽஸ்மிந் த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயாऽநக |
ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநாம் || 3 ||

अनघ—உண்மை தெளியத் தடையான பாபமில்லாதவனே!
अस्मिन् लोके—இவ்வுலகில்
पुरा मया—முன்னே என்னால்
द्विविधा निष्ठा—இரண்டு வித நிலையும்
प्रोक्ता—ப்ரவசனம் செய்யப் பெற்றது
सांख्यानां—ஆத்மஜ்ஞானம் பூர்ணமாகப்பெற்று ஜ்ஞான யோகத்திற்கு அதிகாரியுமானவர்களுக்கு
ज्ञानयोगेन—ஜ்ஞானயோகத்தைக் கொண்டும்;
योगिनाम्—முதலிலிழியுமவர்க்கு—கர்மயோகாதிகாரிகளுக்கு
कर्मयोगेन—கர்ம யோகத்தைக் கொண்டும்.

நீ ஸாங்க்யரிற் சேராதவனாகையால் உனக்குக் கர்மயோகத்திலேயே அதிகாரமென்று உட்கருத்து. இது மேலே வெளியாகும். ஸாங்க்ய மென்ற சொல்லின் பொருள் கீழே கூறப்பெற்றது. (3)(p.45)(8)

ஆகில் ஸாங்க்யனும் கர்மயோகமின்றியே பலன் பெறலாமே என்ன, அதற்கு மறுமொழி மேலே—

न कर्मणामनारम्भात् नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।
न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥ ४ ॥ See Nr. 1-27-2-55

ந கர்மணாம் அநாரம்பாத் நைஷ்கர்ம்யம் புருஷோऽச்நுதே |
ந ச ஸம்ந்யஸநாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி || 4 ||

पुरुषः—ஜீவன்
नैष्कर्म्यं—ஜ்ஞாநநிஷ்டையை
कर्मणाम्—கர்மாக்களை
अनारम्भात्—தொடங்காமலே
न अश्नुते—அடையான்.
सिद्धिम्—கர்மானுஷ்டானத்தின் பலனை ஜ்ஞானநிஷ்டையை
संन्यसनात् एव—தொடங்கின கர்மாவை விட்டொழிப்பதாலேயே
न च अधिगच्छति—அடைவானென்பது மில்லை.

யாரும் கர்மானுஷ்ட்டானமின்றி ஜ்ஞாநநிஷ்டையைப் பெறலாகாது. அப்படியிருக்க நீ, செய்யத் தொடங்கின கர்மாவை விட்டால் அது பெறப்படுமோ? தொடங்கினதை முடித்தேயாக வேண்டுமென்று மீமாம்ஸையில் முடிவு செய்திருக்கின்றனர். கர்மானுஷ்டானம், பகவத் ப்ரீதி, பாபநாசம், ரஜஸ்தமோகுணநாசம், வைராக்யம், இந்திரியஜயம், ஆத்ம விஷயத்திலே நோக்கு, ஜ்ஞான நிஷ்ட்டையென்ற ஏழுதலமான மாளிகையில் முதல் தலமேற வேண்டியவன் ஏழாம் தலத்திற்கு எழப் பார்ப்பது பரிஹாஸத்திற்கு இடமாகு (சந்த்ரிகை) மென்றபடி. नैष्कर्म्यं என்ற பதத்திற்கு இங்கே கர்மானுஷ்டானமில்லாமை என்பது மட்டும் பொருளல்ல. அர்ஜுனன் வேண்டும் ஜ்ஞாந நிஷ்டையே நிஷ்கர்மாவின் செயலான ஆத்ம சிந்தை நைஷ்கர்ம்யம் निष्कर्मकः (4).

ஏனெனில்—

**न हि कश्चित् क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।**
**कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥ ५ ॥**

*ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்ட்டத்யகர்மக்ருத் ।*
*கார்யதே ஹ்யவச: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர் குணை: ॥ 5 ॥*

**कश्चित्**—எவனும்
**जातु**—எந்நாளும்
**क्षणम् अपि**—ஒரு நொடியும்
**अकर्मकृत्**—ஒன்றும் செய்யாதவனாக
**न हि तिष्ठति**—இருப்பதில்லையே.
**सर्वः**—எல்லோரும்
**प्रकृतिजैः**—ப்ரக்ருதியினின்று பல வாறாகத் தோன்றிய
**गुणैः**—ஸத்வரஜஸ் தமோகுண வைஷம்யங்களாலே
**अवशः**—தமக்கு அதீனமாகாமலே
**कर्म**—ஏதேனும் செயலை
**कार्यते हि**—செய்விக்கப்படுகின்றனரே.

ஒவ்வொருவனிடமும் ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் ஒவ்வொரு விதமாக ஏற்றக் குறைவாக மாறிமாறி எப்போதும் ஏதேனும் ஒரு செயலிலே மூட்டினபடி யிருக்கும். எவனும் எந்த நொடியும் ஸ்ருஷ்டி மத்தியில் வெறுமனே யிரான். ஆகில் ஜ்ஞான யோகமென்பது எப்போதுமே கூடாதென்ன வேண்டா. கர்மயோகம் செய்து மனம் சுத்தமானால் அது கூடும். இல்லையேல் வெளி விஷயங்களில் ப்ரவ்ருத்தி இயற்கை யென்றபடி.

ஸமர்த்தனாயிருப்பவன் பிடிவாதமாக ஆத்ம சிந்தையில் இழிந்தால் அதுவும் ஒருசெயல் தானே. அதுவே ப்ரக்ருதி குணத்தினால் உண்டாகட்டுமே என்னில்—

**कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।**
**इन्द्रियार्थान् विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥ ६ ॥**

*கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய யஆஸ்தே மநஸா ஸ்மரந் ।*
*இந்த்ரியார்த்தாந் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே ॥ 6 ॥*

यः—எவனொருவன்
कर्मेन्द्रियाणि—செயலுக்கான இந்த்ரியங்களை-கைகால் முதலானவற்றை
संयम्य—அடக்கிக் கொண்டு
विमूढ-आत्मा—ஆத்ம விஷயத்திலே நோக்கற்ற மனம் உடையனாய்
मनसा—மனத்தினால்
इन्द्रियार्थान्—வெளி விஷயங்களையே
स्मरन् आस्ते—நினைத்துக் கொண்டு வீற்றிருக்கிறானோ,
सः—அவன்
मिथ्याचारः—தவறான செயலுடையவனாக
उच्यते—சொல்லப்படுவான்.

அவன் நினைப்பது, வேறொன்றும் செய்யாமல் ஆத்மாவை சிந்தித்து இருக்கவேண்டுமென்றே. அதற்காக வீற்றிருப்பானாகிலும் வீற்றிருப்பது மட்டுமே யாகும். ஆத்ம சிந்தை வாராது. இவன் வெளிச்செயலை யடக்கலாமல்லது வெளி விஷயமான சிந்தையை அடக்கலாகாது. பூர்வ வாஸனையும் பாபமுமிருப்பதால் மனமோ இந்திரியமோ இவன் வசமல்ல. ஒரு சிந்தைக்கு உட்கார்ந்து மற்ற சிந்தையில் இருப்பதால் இவன் மித்யாசாரன், ஆகையால் கர்மேந்திரியங்களுக்கு அனுகூலமான கார்யம் அளிக்க வேண்டும்.

यस्त्विन्द्रियाणि मनसा नियम्याऽऽरभतेऽर्जुन ।
कर्मेन्द्रियैः कर्मयोगम् असक्तः स विशिष्यते ॥ ७ ॥

யஸ்த்விந்த்ரியாணி மநஸா நியம்ய ஆரபதேऽர்ஜுந |
கர்மேந்த்ரியை: கர்மயோகம் அஸக்த: ஸ விசிஷ்யதே || 7 ||

अर्जुन—அர்ஜுனா
यः(तु)—யாவனொருவன்
मनसा—ஆத்மாவில் நோக்குள்ள மனத்தினால்
इन्द्रियाणि—இந்திரியங்களை
नियम्य—சாஸ்த்ரம் சொன்ன வெளி வேலைகளில் ஏவி
कर्मेन्द्रियैः—கர்மேந்திரியங்களாலே
कर्मयोगम्—கர்மயோகத்தை
असक्तः—பலத்தில் நோக்கின்றி
आरभते—தொடங்குகிறானோ,
सः तु—அவனே
विशिष्यते—தடையற்றிருப்பதால் மேம்பட்டவனாகிறான்.

கர்மேந்திரியங்கள் வெறுமனே இரா. அடக்கினால் தகாத விஷயங்களிலே நம்மை மீறிச் செல்லும். வேறு பற்றின்றி மனத்தினால் அவற்றை நமக்கு வேண்டும் சாஸ்த்ரீய கர்மாவில் இழியச் செய்ய வேண்டும். அப்போது நான் சொன்ன புத்தியோகத்தையும் கொண்டு பற்றற்றுச் செய்தால் அதே கர்மயோகமாகிறது. அச்செயலிலே மனம் வேறொன்றை நினையாது. ஆகையால் ஸத்யாசாரனாவான்.

नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।
शरीरयात्राऽपि च ते न प्रसिद्ध्येदकर्मणः ॥ ८ ॥

See Ny. P. 27-3-67/68

நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: |
சரீரயாத்ராऽபி ச தே ந ப்ரஸித்த்யேத் அகர்மண: || 8 ||

निर्यतं—ஐந்தாம் ச்லோகத்திற் சொன்னபடி விட முடியாத
कर्म—வெளிச்செயலை
त्वं कुरु—நீ செய்துவா.
अकर्मणः—ஜ்ஞான யோகத்தைவிட
कर्म—கர்மயோகமே
ज्यायः हि—சிறந்ததாகிறதே.
च—மேலும்
अकर्मणः ते—வெளிச்செயல் இல்லாத உனக்கு
शरीरयात्रा अपि—தேஹயாத்ரையும்
न प्रसिद्ध्येत्—நடக்காது.

கீழ்க்கூறியபடி கர்ம என்பது ப்ராணிக்கு இன்றியமையாம விருப்பதால் வெளிச்செயல் செய். ஆனால் ஆத்ம ஜ்ஞானத்திற்கு ஆம் படி செய். ஜ்ஞான யோகம் செய்யவல்லனுக்கும் அதைவிட இதே மேலாகும். அதில் தவறுதல் உண்டு. மற்றொரு விஷயம். ஆத்ம சிந்தை யென்பது உயிர் தரித்து தானே செய்ய வேண்டும். உயிர் தரிக்க உண்ண வேண்டும். உண்பது சாஸ்திரம் இசைந்த அன்னத்தை. பகவானுக்கு நிவேதனம் பஞ்சமஹா யஜ்ஞமெல்லாம் செய்தே அவ் அன்னத்தை உட்கொள்ள வேண்டும் அததற்காக கர்மாக்களைச் செய்து தானே ஆக வேண்டும். எங்ஙனே எல்லா கர்மாவையும் விடுவது?

இப்படியாகில் ஆஹாரத்திற்காகப் பணம் பெறப் பாடுபட வேண்டியிருப்பதால் ஸம்ஸாரபந்தமேயாகுமென்னில்—

यज्ञार्थात् कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः । See NP 21-3-68/69
तदर्थं कर्म कौन्तेय मुक्तसंगः समाचर ॥ ९ ॥

யஜ்ஞார்த்தாத் கர்மணோऽந்யத்ர லோகோऽயம் கர்மபந்தந: |
ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க: ஸமாசர || 9 ||

अयं लोकः—இங்குள்ள மனிதன்
यज्ञार्थात्—ஆராதனம் பஞ்சமஹா யஜ்ஞமென்ற கார்யத்திற்கான
कर्मणः—செயல் நீங்கலாக
अन्यत्र—வேறு செயல் காரணமாக
कर्मबन्धनः—கர்மாவினால் கட்டப்படுவான். ஸம்ஸாரபந்தத்திற்கு ஆளாவான்.
कौन्तेय—குந்தியின் புதல்வனே!
तदर्थं कर्म—யஜ்ஞத்திற்காகப் பணம் சேகரிப்பது முதலானவற்றை
मुक्तसंगः—தனக்காக இவை என்ற புத்தியைவிட்டு
समाचर—அனுஷ்டித்து வா.

தனக்குத் தோன்றியபடி ஏதேனும் செய்து உயிர் தரிப்பது பரமேச்வரனின் ஆஜ்ஞையை மீறினதாகுமென்கிறார்—

सह यज्ञैः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः । SE 3-10/12-See NP 27-3-69/71
अनेन प्रसविष्यध्वम् एष वोऽस्तु इष्टकामधुक् ॥ १० ॥

ஸஹ யஜ்ஞை: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: |
அநேந ப்ரஸவிஷ்யத்வம் ஏஷ வோऽஸ்து இஷ்டகாமதுக் || 10 ||

पुरा—முன்னே படைப்பின் ஆதியிலே
प्रजापतिः—பிரஜைகளைக் காக்க உரிமையுள்ள பகவான்
प्रजाः—பிரஜைகளை
यज्ञैः सह—அவர்கள் செய்ய வேண்டும் யஜ்ஞங்களுடன் கூட
सृष्ट्वा—படைத்து
उवाच—சொன்னுர் (என்னவெனில்)
अनेन—இதைக் கொண்டு
प्रसविष्यध्वम्—ஸம்பாதித்துக் கொள்ளுங்கள்
एष वः—இதானது உங்களுக்கு
इष्टकामधुक् अस्तु—வேண்டும் பலன்களைக் கறப்பதாகும்.

யஜ்ஞத்துடன் சேர்த்தே படைத்ததனின்று யஜ்ஞத்தை ஒரு நொடியும் விடலாகாதெனத் தேறும். இஷ்ட காமமென்பதாலே யாருக்கு எது இஷ்டமோ, மோக்ஷமோ, மற்ற மறுமைப் பலனோ, இம்மையோ எல்லாமென்றதாம். (सहयज्ञाः. என்பது சிலர் பாடம். முன் ச்லோகத்திலே யஜ்ஞமென்றது பகவானை. பகவானுக்காக எதையும் செய்யலாமென்று பொருள் உரைப்பர். அவர்களுக்கும் இங்கே யஜ்ஞசப்தம் கர்மாவையே கூறும். 'ஸஹயஜ்ஞா:' என்ற பாடத்தில் 'யஜ்ஞேந ஸஹிதா: ஸஹயஜ்ஞா:' என்று விக்ரஹம் செய்யலாம். 'ஸஹயஜ்ஞை:' என்ற பாடமாகில், மேலே 'அநேந' என்ற ஏகவசனம் சேருமா என்னில்—பஞ்ச மஹாயஜ்ஞங்களானபடியாலே பன்மை பொருந்தும். மற்றும் பல ஆராதனங்களையும் செய்வது அவசியமாகையாலும் பன்மையாம். அநேந என்பது பொதுவாக ஒருமை. பூர்வார்த்தத்தில் யஜ்ஞை: என்பது கண்ணன் தான் சொன்ன வார்த்தை. உத்தரார்த்தத்தில் அநேந என்று சொன்னவர் ப்ரஜாபதி. சொன்னதைச் சுட்டிச் சொல்வதாகில் ஒரே வசனமிருக்க வேண்டுமென்னலாம். ப்ரஜாபதி முன் சொன்ன ஒருமையைக் கொண்டு ஒரே யஜ்ஞமென்று நினைக்கவேண்டா என்பதற்காகக் கண்ணன் இப்போது பன்மையினுல் அதை விரித்துரைத்தாரென்க.) (10)

இது எவ்வாறு இஷ்டமான பலனை யளிக்கிறதெனில், இது தேவதையின் ஆராதனமாகையாலே தேவதையின் மூலமாகப் பலன் என்று விளக்குகிறுர்—

देवान् भावयतानेन ते देवा भावयन्तु वः ।
परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥ ११ ॥

தேவாந் பாவயதாநேந தே தேவா: பாவயந்து வ: |
பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரம் அவாப்ஸ்யத || 11 ||

अनेन—இந்த ஆராதனத்தினுலே
देवान्—தேவதைகளை
भावयत—உங்களிடத்தில் மனம் உள்ளவராக்குக
ते देवाः—அந்த தேவதைகளும்
वः—உங்களை
भावयन्तु—தங்களிடத்தில் பக்தி உள்ளவராக்குவர்.
परस्परम्—ஒருவருக்கொருவர்
भावयन्तः—ப்ரீதியை யுண்டுபண்ணுகின்றவர்களாகி
परं श्रेयः—மிக்க நன்மையை
अवाप्स्यथ—பெறுவீர்கள்.

பஞ்சமஹாயஜ்ஞங்கள் போன்ற நித்ய கர்மாநுஷ்டானம் மோக்ஷ பலனை விரும்புகின்றவர்களும் செய்தாக வேண்டும். அவசியமாக விதிக்கப்பட்ட விஷயங்களிலே வேறு தேவதைகளை பகவானுக்கு விசேஷணமாக்கி ஆராதிப்பதில் குற்றமில்லை. மற்ற பலன்களை விரும்புகின்றவர்கள் பகவானை விட்டு அவர்களைமட்டுங்கூட ஆராதிப்பர். (11)

தேவதைகளின் ஆராதனத்தினால் அவர்கள்மூலம் பலன்கள் உண்டு. செய்யாவிடில் மஹாபாபமும் என்கிறார்—

**इष्टान् भोगान् हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः ।**
**तैर्दत्तान् अप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव सः ॥ १२ ॥**

*இஷ்டாந் போகாந் ஹி வோ தேவா: தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா: |*
*தைர்தத்தாந் அப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேந ஏவ ஸ: || 12*

देवाः—தேவதைகள்
यज्ञभाविताः—யஜ்ஞங்களால் ஆராதிக்கப் பெற்று
इष्टान् भोगान्--இஷ்டமான பலன்களை
वो दास्यन्ते हि—உங்களுக்கு அளிப்பார்களே
तैः—அவர்களால்
दत्तान्—தங்கள் ஆராதனத்திற்காக அளிக்கப் பெற்ற வஸ்துக்களை
एभ्यः—அந்த தேவதைகளுக்கு
अप्रदाय—அர்ப்பணம் செய்யாமல்
यः भुङ्क्ते--எவன் தானே உட்கொள்ளுகிறானோ,
सः—அவன்
स्तेन एव—திருடனேயாவான்.

நீங்கள் ஆராதிக்க ஆராதிக்க தேவதைகள் மேன்மேல் ஆராதனத்திற்கு வேண்டுமவற்றை அளித்து வருவார்கள், ஆராதனத்திற்காக அளித்தவற்றை அதற்குப் பயன் படுத்தாமல் எவன் தான் உண்பதற்காக்குகிறானோ, அவன் கள்ளனாவான். 'இது தேவதையின் சொத்து; இதை அதற்குத் தெரியாமல் கொள்ள வேண்டும்' என்று இவன் நினைக்காமலிருந்தாலும் இது கள்ளமேயாம். கள்ளமாவது பிறர்க்காக ஏற்பட்ட அவர் சொத்தைத் தனக்காகக் கொள்வதாம். தேவர்களுடைய ஆராதனத்திற்கும் அவர்களின் அந்தர்யாமியான பகவானின் ஆராதனத்திற்குமான வஸ்துவை அதை விட்டுத் தனக்கே கொள்வது திருடு. அதற்குக் காரணமான அறிவு பகவானுக்குத் தான் அடிமை யென்பதாம். அதை விட்டுத் தன்னை ஸ்வதந்த்ரமாக நினைத்திருப்பதும் திருடாம். (ப்ருஹதாரண்யகத்தில் ஸப்தான்ன ப்ராஹ்மணத்தில் நமது வஸ்துக்களில் தேவதைகளுக்கு உள்ள பங்கு ஓதப்பட்டுளது.)

12. மேன்மேல் ஆராதனத்திற்கு வஸ்துக்களைப் பெறுவது போல் பாபங்கள் ஒழிவதும் பெரும்பலன். அன்றி, தனக்காக என்று சமையல் செய்து தேவதைகளுக்கு அர்ப்பணம் செய்தால் தேவதைகள் கொள்ள மாட்டார்கள். அவர்களுக்கென்றே அவற்றைச் செய்ய வேண்டும் என்றவாறு விரித்துரைக்கிறார்—

यज्ञशिष्टाशिनः सन्तो मुच्यन्ते सर्वकिल्बिषैः ।
ते त्वघं भुञ्जते पापा ये पचन्त्यात्मकारणात् ॥ १३ ॥

யஜ்ஞசிஷ்டாசிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை: |
தே த்வகம புஞ்ஜதே பாபா: யே பசந்தி ஆத்மகாரணாத் || 13 ||

**यज्ञशिष्टाशिनः सन्तः**—பஞ்சமஹா யஜ்ஞங்கள் செய்து மிகுந்தவற்றை உண்டு தேஹதாரணம் செய்கின்றவர்கள்
**सर्वकिल्बिषैः**—எல்லா பாபங்களாலும்
**मुच्यन्ते**—விடப்படுகின்றனர்.
ये तु—இதற்கு மாறாக எவர்கள்
आत्मकारणात्—தங்களுக்கென்றே
पचन्ति—சமையல் செய்கின்றனரோ
ते—அவர்கள்
पापाः—பாபஸ்வபாவர்களாய்
अघं—பாபத்திற்கானவற்றையே
भुञ्जते—உண்கிறார்கள்.

கீழ் இரண்டு ச்லோகங்களிலே அவர்களுக்குக் கொடுக்காமல் என்றும் தனக்காகச் செய்கிறானென்றும் சொன்னதினின்று இங்கு யஜ்ஞம் நித்யநைமித்திகமாம். காம்யமல்ல எனத் தெளிவாம்.

13. பிரஜைக்கு க்ஷேமம் யஜ்ஞம் மூலமே யென்பதை லோகம் வேதம் இரண்டையும் ப்ரமாணமாக்கி, சக்கரமொன்றைக் காட்டி விளக்கி இதைத் தவறாமல் கைக்கொள்ள வேண்டுமென்கிறார்—

अन्नाद् भवन्ति भूतानि पर्जन्यात् अन्नसंभवः ।
यज्ञाद् भवति पर्जन्यः यज्ञः कर्मसमुद्भवः ॥ १४ ॥
कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षरसमुद्भवम् ।
तस्मात् सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ॥ १५ ॥
एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः ।
अघायुरिन्द्रियारामो मोघं पार्थ स जीवति ॥ १६ ॥

அந்நாத் பவந்தி பூதாநி பர்ஜந்யாத் அந்நஸம்பவ: |
யஜ்ஞாத் பவதி பர்ஜந்ய: யஜ்ஞ:கர்மஸமுத்பவ: || 14 ||
கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷரஸமுத்பவம் |
தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டிதம் || 15 ||
ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நாநுவர்த்தயதீஹ ய: |
அகாயுரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி || 16 ||

**भूतानि**—ப்ராணிகள்
**अन्नात्**—அன்னத்தின் மூலம்
**भवन्ति**—உண்டாகின்றன.
**अन्नसंभवः**—அன்னம் உண்டாவது
पर्जन्यात्—மேகத்தின் மூலம்.
पर्जन्यः—மேகமானது
यज्ञात् भवति—யஜ்ஞத்தினின்றும்.
यज्ञः—அந்த யஜ்ஞமும்

कर्मसमुद्भवः—த்ரவ்யம் சேகரிப்பது போன்ற பல செயல்களின் மூலமாம்.
कर्म—அச் செயலை
ब्रह्म-उद्भवम्—உடல் மூலமாக
विद्धि—அறி
ब्रह्म—அவ் உடலை
अक्षरसमुद्भवम्—ஜீவனிடம் உண்டாவதாக அறி
तस्मात्—ஆகையால்
सर्वगतं—எல்லோருக்கும் உள்ள
ब्रह्म—உடலெல்லாம்
नित्यं—எப்போதும்
यज्ञे प्रतिष्ठितम्—யஜ்ஞ மூலமேயாகும்.
एवं—இப்படி பகவானால்
प्रवर्तितं—சுற்றப்பட்ட
चक्रम्—இந்தச் சக்கரத்தை
यः—யாவனொருவன்
न अनुवर्तयति—மேன்மேல் அவ்வாறே நடத்தி வருகிறவனல்லனோ, அவன்
अघ-आयुः—பாபத்திற்கே ஆயுள் உடையனாய்
इन्द्रिय-आरामः—இந்திரியங்களையே இன்பக் கருவியாகக் கொண்டு
पार्थ—அர்ஜுனா
मोघं जीवति—வீணே பிழைத்திருக்கிறான்.

பிராணிகள் பிறப்பதற்கு அன்னம் மூலம். அன்னத்திற்கு மேகம். மேகத்திற்கு யஜ்ஞம். யஜ்ஞத்திற்குப் பணம் சேகரித்தல். அது ப்ராணி செய்வதாலாம். அந்த ப்ராணி அன்னத்தினாலென்ற போது இவ்வாறே இந்தச் சக்கரம் சுழன்று வருதல் தெரியலாகும். பிராணியே பூதமென்னப்படுகிறது. பூதமென்ற போது உடலையும் உயிரையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். உயிரால் தான் உடலுக்குச் செயலாற்ற வல்லமை எனவறிவிக்க அதை ப்ரஹ்மம் அக்ஷரம் என இரண்டாகப் பிரித்துக் கூறினார். ப்ரஹ்மமாவது மூல ப்ரக்ருதி ; அதாவது அதன் மூலமான தேஹம் இந்த்ரியமெல்லாம். ஈச்வரன் அமைத்த சக்கரத்தில் சிலவற்றை அழித்தால் மற்றவை தாமே அழியும். ஆகையால் யஜ்ஞங்களை விடலாகாது. அதை நடத்தி வந்தால் மனம் சுத்தமாகி மோக்ஷம் வரையிலான பலனும். இல்லையேல் பிழைப்பது வீணே என்றபடி. யஜ்ஞம் முக்யமென்பதை அறிவிப்பதற்காகவே எந்த உடலும் யஜ்ஞத்தினாலேயே நிலை பெறுமென்று முடிவில் அதை மீண்டும் மொழிந்ததாம். - 16.

படைக்கும் போதே பகவான் இணைத்த இந்த யஜ்ஞத்தை ஜீவன் செய்யாமலிருப்பது எப்போதென்ன, அதற்கு மறுமாற்றம் அருளிச் செய்கிறார்—முக்தனாமளவும் எந்த நிலையிலும் இவனை இந்த யஜ்ஞம் விடா, கர்மயோகமோ, ஜ்ஞான யோகமோ, பக்தி யோகமோ எதைச் செய்வதானாலும் அவற்றை விட்டிருந்தாலும் இம் மஹாயஜ்ஞம் விடப்படா என்ற கருத்தாம்—

यस्त्वात्मरतिरेव स्यात् आत्मतृप्तश्च मानवः ।
आत्मन्येव च संतुष्टः तस्य कार्यं न विद्यते ॥ १७

नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह विद्यते ।
न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥ १८ ॥

யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத் ஆத்மத்ருப்தச்ச மாநவ: |
ஆத்மந்யேவ ச ஸந்துஷ்ட: தஸ்ய கார்யம் ந வித்யதே || 17 ||
நைவ தஸ்ய க்ருதேநார்த்த: நாக்ருதேநேஹ வித்யதே |
ந சாஸ்ய ஸர்வபூதேஷு கச்சித் அர்த்தவ்யபாச்ரய: || 18 ||

यः तु—ஸம்ஸாரியைப் போலல்லாத எந்த
मानवः—மனிதப் பிறவியை ஸபலமாக்கிய ஜீவன்
आत्मरतिः एव—ஆத்மாவினிடத்தில் பற்று குன்றாதவனும்
आत्मतृप्तः—ஆத்மானுபவம் நிறைந்தவனும் அதே உணவும்
आत्मनि एव संतुष्टः—போக்யமும் அதேயானபடியால் வேறு வேண்டாதவனும்
स्यात्—ஆவானோ, மோக்ஷம் பெற்று விட்டானோ,
तस्य—அவனுக்கு
कार्यं—நித்ய நைமித்திகங்களில் செய்ய வேண்டுவது ஒன்றும்
न विद्यते—இல்லை
तस्य—அந்த முக்தனுக்கு
इह—இவற்றில்
कृतेन—செய்யப்பட்ட ஒன்றின் மூலம்
न एव अर्थः—பலன் ஒன்றுமில்லை
अकृतेन—செய்யப்படாதது மூலமாக
अनर्थः—தோஷமென்பதும்
न विद्यते—இல்லை.
सर्वभूतेषु—உலகிலுண்டான வஸ்துக்களில்
कश्चित्—ஒரு விதமான
अर्थव्यपाश्रयः च—பலனுகவோ பலனுக்குக் காரணமாகவோ பற்றுவதென்பதும்
न—இல்லை.

முக்தன் ஆத்மாவினிடம் ருசி குன்றாதவன், வேறொன்றில் நசையற்றவன். அவனுக்கு அன்னபானமென்ற போஷகமும் ஆத்மாவே, சந்தனம் தாமபூலமென்றாற் போன்ற போக்யமும் ஆத்மாவே. பத்தனாயிருப்பவனுக்கு யஜ்ஞம் செய்தால் தான் ஆத்ம ஜ்ஞானம் பிறக்கும். முக்தனுக்கு அவ்வுபாயம் செய்து வரவேண்டுவது ஒன்றுமில்லை. பத்தன் எந்த நிலையிலும் நித்ய நைமித்திகங்களை விடலாகாது. விட்டால் ப்ரத்யவாயம்—புதிய பாபம் சேரும். செய்தால் உள்ள பாபமும் விலகும். அது போல் முக்தனுக்கு செய்து பெற வேண்டியதுமில்லை; விட்டால் பாபமுமில்லை; வேறேதேனும் பலன் தனக்கோ தன்னைச் சார்ந்தாருக்கோ வேண்டுகிறானென்பதுமில்லை. பத்தனாயிருப்பவன் வைச்வாநரேஷ்டி போன்ற நைமித்திகம் பிள்ளை போன்ற பிறருக்கு நன்மைக்காக உலகில் செய்வதுண்டே. த்வாதசி வ்ரதமுள்ள அம்பரீஷன் துர்வாஸருக்குச் செய்தது காண்க. அவ்வாறும் முக்தனுக்கு வேண்டுவதில்லை. முக்தனாகாதவனுக்கு எந்த நிலையிலும் இவை வேண்டும். செய்தால் பாபம் போம். ஆத்மாவில் ருசி அப்போது தான் உண்டாம். சார்ந்தாரின் நன்மையும் தனக்குமே சில பலன்களும் நித்ய நைமித்திகங்கள் மூலம் ஸம்ஸாரி ஜீவனுக்கு உண்டாமென்பது 18ம் ச்லோகத்தின் உட்கருத்து.

इदं श्लोकद्वयं मुक्तविषयम् । तेन नित्यनैमित्तिकानुष्ठानेन पापमपोह्य आत्मनि रति-रुत्पादनीयेति वा, तदकरणे अन्नपानादिनेव तृप्तिरक्षिता भवेदिति वा, पुत्रस्यायुःपशुतेज-इन्द्रियादिफलम्, अन्यस्य वा अन्यत् फलं स्वस्य वा अनुरागिकं तत्साधनं वा नित्याद्य-नुष्ठानसंपाद्यं बद्धस्येव मुक्तस्यास्तीति वा न । अतः मुक्तस्य नैतदनुष्ठानम् । मुक्तिपर्यन्तं तु यादृशस्तादृशो भवतु अधिकारी, स इदं न त्यक्तुमर्हतीति । मुक्तं प्रति अयमननुष्ठानोपदेशः, किं तु बद्धस्य तावत्पर्यन्तमत्यागोपदेशोऽयम् ॥ (18)

**तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर ।**
**असक्तो ह्याचरन् कर्म परमाप्नोति पूरुषः ॥ १९ ॥**

*தஸ்மாத் அஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர |*
*அஸக்தோ ஹ்யாசரந் கர்ம பரம் ஆப்நோதி பூருஷ: || 19 ||*

**तस्मात्**—முக்தன் தவிர மற்றவருக்கு கர்ம அவச்யமாகையால்
**असक्तः**—பற்றற்றவனுய்
**सततं**—எப்போதும் (ஜ்ஞானயோகாதிகாரம் வந்தபோதிலும்)
**कार्यं कर्म**—செய்யத்தகும் கர்மயோகத்தை
**समाचर**—செய்து வா.
**असक्तः**—பற்றற்றவனுய்
**पूरुषः**—புருஷன்
**कर्म आचरन् हि**—கர்மயோகமே செய்கின்றவனுயன்றே
**परम्**—ஜ்ஞானயோகத்திற்கு மேலான பலனையும்
**आप्नोति**—(கர்மயோகத்தில்) பெறுகிருன்.

இந்த ச்லோகம் நித்ய நைமித்திகங்களை விடாமற் செய் என்று முடிக்க வந்ததன்று. அது முன் ச்லோகத்தினின்றே தேறிற்று. ஆகையால் இந்த ச்லோகம், எப்படியும் கர்மானுஷ்டானம் விட முடியாதாகையால் பழகிய கர்மாவினின்றே பலன் பெறுதல் ஸுலபமாயிருக்க அதை விட்டு ஜ்ஞானயோகத்தில் இழிவது வேண்டா என்கிறது सहयज्ञः என்ற ச்லோகம் தொடங்கி 18வது ச்லோகம் வரையில் நித்ய கர்மானுஷ்ட்டானம் அவசியமென்ருர். 20வது ச்லோகம் முமுக்ஷுவான ஜனக மஹாராஜாவைப் போன்ருரை மட்டும் பற்றியது. ஆகையால் இந்த 19வது ச்லோகமும் நித்ய கர்ம விஷய மட்டுமாகாமல் கர்மயோக விஷயத்தையும் கூட்டிக் கூறுமென்ருல் மேல்பாகத்தோடு செவ்வனே சேரும் என்று இவ்வாறு உரைத்தது.

ஜ்ஞானயோகததை விட்டுக் கர்மயோகத்தில் இழிவது பூர்வர்களுடைய ஆசாரமென்றும் காட்டுகிருர்—

**कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ।**
**लोकसंग्रहमेवापि संपश्यन् कर्तुमर्हसि ॥ २० ॥**

*கர்மணைவ ஹி ஸம்ஸித்திம் ஆஸ்த்திதா ஜநகாதய: |*
*லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யந் கர்த்துமர்ஹஸி || 20 ||*

जनकादयः—ஜநகர் என்ற ராஜரிஷி முதலானோர்
कर्मणा एव—கர்மயோகத்தினாலேயே ஜ்ஞான யோகமின்றியே
संसिद्धिम्—ஆத்மதர்சனத்தை
आस्थिताः हि—பெற்றனர் என்பது ப்ரஸித்தம்.
लोकसंग्रहम्—லோகஸங்க்ரஹமென்ற லாபத்தை
संपश्यन् अपि—பார்க்கிறவனாகியும்
[कर्म] एव—கர்ம யோகத்தையே
कर्तुम् अर्हसि—செய்யத் தகுதியுற்றிருக்கிறாய்.

ராஜரிஷியான ஜநகருக்கு மேம்பட்ட ஞானியுண்டோ. அவர் முதலானவர்களும் கர்மயோகம் செய்தே பலன் பெற்றார்களென்றால், ஜ்ஞானயோகம் செய்யத் தகுதியுற்றவரும் கர்மயோகம் செய்வதே சிறந்ததெனத் தேறும். மேலும், பிறருக்கு வழிகாட்டியாயிருப்பவர் பிறர் எதை அனுஷ்டிக்கவல்லரோ அதையே தாமும் அனுஷ்டிக்க வேண்டும். அவ்வாறின்றி, தமக்குச் செய்யத் திறமையுள்ளதென்பதற்காக அவர்களாலாகாத உபாயத்தைத் தாம் செய்வது தகாது. லோகஸங்க்ரஹமாவது—இரு வழிகள் தமக்கு சாஸ்த்ரமிசைந்து செய்யக்கூடுமாயிருக்க உலகத்திலுள்ள சாதாரண ஜனங்கள் செய்யக்கூடிய வழியொன்றைக் கைப்பற்றி அவர்களுக்கு அனுகூலம் செய்தல். (20)

இதனை விரித்துரைக்கிறார்—

यद् यद् आचरति श्रेष्ठस्तत् तदेवेतरो जनः । See Nr. P. 27-4-60/62
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ २१ ॥

யத்யத் ஆசரதி ச்ரேஷ்ட்ட: தத் ததேவேதரோ ஜந: |
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத் அநுவர்த்ததே || 21 ||

श्रेष्ठः—ஜ்ஞாநாநுஷ்டான ப்ரஸித்தியுடையவன்
यद् यद्—எதெதை
आचरति—அனுஷ்டிக்கிறானோ
तद् तद् एव—அததையே
इतरः जनः—அப்ரஸித்த ஜனங்களும்
आचरति—அனுஷ்டிப்பர்.
सः—அந்த ச்ரேஷ்டன்
यत्प्रमाणं—எந்த அளவில், எவ்வாறாக
कुरुते—கர்மானுஷ்டானம் செய்கிறானோ,
लोकः—இதர ஜனமும்
तत्—அந்த அளவையே
अनुवर्तते—பின்பற்றும்.

நீ ஜ்ஞாநாநுஷ்டானங்களிலே ப்ரசித்தனானபடியாலே, நீ செய்வதைப் பார்த்துத் தாங்களும் செய்ய நினைத்திருக்கும் ஜனங்கள் பலர் இருப்பதால் நீ அவர்கள் செய்யவாகாத ஜ்ஞான யோகத்தை விட்டுக் கர்மயோகமே செய்ய வேண்டும். (यत्प्रमाणम् என்பதற்கு எதைத் தன் அனுஷ்டானத்திற்கு ப்ரமாணமாக்குகிறானோ, அதையே பிறரும் கொள்வர் என்ற பொருள் பொருந்தாது. பெரியோரின் ஆசாரத்தைப் பார்த்துப் பண்ணுகிறவனுக்கு அவர்களுடைய ஆசாரமே ப்ரமாணமாம். அவர்கள் எந்த ப்ரமாணத்தை யறிந்து பண்ணுகிறார்களோ அந்த ப்ரமாணத்தை இவன் அறிய விரும்பான். ஆகையால் பெரியோர் செய்தபடி செய்கிறானென்பதே இங்கு வேண்டும் பொருள்.)

ச்ரேஷ்டனாயிருப்பவன் லோக ஸங்க்ரஹம் நிலைக்கும்படி நடக்க வேண்டுமென்பதும் ஒரு விதியாகும். அதை மீறினால் குற்றமுண்டு. மீறிப் பலரை வழி தவறும்படி கெடுத்தவனுக்குத் தன் வழி நன்கு முடிந்தேறுமென்ன வொண்ணாது, இது நிற்க. லோக ஸங்க்ரஹம் செய்யவில்லையாகில் அதனால் இவனுக்கு ஒரு கேடுமில்லை என்று கொண்டாலும் என்னைப் போல் லோகஸங்க்ரஹம் செய்வதே குணசாலிக்குக் கூடுவதென்கிறார்—கர்மயோகத்திற்குத் தன் நித்ய கர்மானுஷ்டானத்தை த்ருஷ்டாந்தமாக்குகிறார்.

**न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन ।**
**नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥ २२ ॥**

*ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந |*
*நாநவாப்தம் அவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி || 22 ||*

**पार्थ**—குந்தியின் புதல்வனே!
**त्रिषु लोकेषु मे**—மூவுலகிலும் இஷ்டப்படி அவதரிக்கின்றவனாய் கர்மவச்யனாகாத எனக்கு
**किञ्चन**—ஒன்றும்
**न कर्तव्यम्**—செய்தாக வேண்டுவதில்லை
**अनवाप्तम्**—இது வரையில் பெறாத
**अवाप्तव्यम्**—பெற வேண்டும் பலனும்
**न**—இல்லை. (ஆயினும்)
**कर्मणि एव**—அவதார இடத்திற்குத் தக்கவாறு கர்மானுஷ்டானத்திலேயே
**वर्ते**—இருக்கிறேன்.

சாஸ்த்ரங்களெல்லாம் எனது ஆஜ்ஞை. அவற்றிற்கு நான் உட்பட வேண்டுவதில்லை. கர்மவச்யர்கள் விஷயத்தில் மட்டும் அவ் ஆஜ்ஞை. அவ்வாறின்றி, யதேச்சமாக எங்கும் எப்போதும் அவதரித்து வரும் எனக்கு ஒரு விதியுமில்லை. செய்து பெற வேண்டுவதுமில்லை. ஆனாலும் அவதாரமாகத் தோன்றின ஜாதி வர்ணங்களுக்கிடாக தர்மானுஷ்டானத்தை விடாமல் செய்து வருகிறேன். (இப்படியிருக்க கர்மவச்யனாய் எனது ஆஜ்ஞைக்கு உட்பட்டவன் கர்மாவை விடலாகுமோ?)

நான் ஏன் செய்கிறேனெனில்—

**यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः ।**
**मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ २३ ॥**

*Second half same in 4-11.*

*யதி ஹ்யஹம் ந வர்த்தேயம் ஜாது கர்மண்யதந்த்ரித: |*
*மம வர்த்மாநுவர்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வச: || 23 ||*

**हि**—ஏனெனில்
**अतन्द्रितः**—உதாஸீனனாகாமல் சோம்பலின்றி செய்யும் நான்
**जातु**—ஒரு சமயம்
**कर्मणि**—கர்மானுஷ்டானத்திலே
**यदि न वर्तेयम्**—நிலைக்காமல் விட்டேனாகில்
**पार्थ**—அர்ஜுனா!
**मनुष्याः**—அனுஷ்டான ச்ரத்தையுடன் சிரேஷ்டரைப் பார்த்து நடப்பவர்கள்
**सर्वशः**—முழுமையும்
**मम वर्त्म**—என் வழியை
**अनुवर्तन्ते**—பின்பற்றுவர். தாங்களும் செய்யாமல் விட்டிடுவர்.

उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम् ।
संकरस्य च कर्ता स्याम् उपहन्यामिमाः प्रजाः ॥ २४ ॥

உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேத் அஹம் |
ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாம் உபஹந்யாம் இமா: ப்ரஜா: || 24 ||

अहम्—சிரேஷ்டவஸுதேவகுலத்திற் பிறந்த நான்
कर्म—வர்ணாச்ரமதர்மத்தை
न कुर्यां चेत्—செய்யாமலிருந்தால்
इमे लोकाः—பெரியோரைப் பார்த்து நடக்கும் இவர்கள்
उत्सीदेयुः-கர்மாவை விட்டுப் பாபியாயொழிவர்.
संकरस्य च—க்ஷத்ரியனும் பிராம்மணனைப்போல் யுத்தம் செய்யாமலிருக்கலாமென்றவாறு புத்தியால் தர்மக் கலப்புக்கும்
कर्ता स्याम्-காரணமாவேன். அதனால்
इमाः प्रजाः—இந்த பிரஜைகளை
उपहन्याम्—கெடுத்தவனாவேன்.

போரிலிழிய நேர்ந்த போது விடாமற் செய்வதே க்ஷத்ரிய தர்மம். நான் அதை விட்டால், அந்தணரைப் போலே க்ஷத்ரியனுக்கும் போரை விடுவது தர்மமென்று பிறர் நினைப்பர். அதனால் ஒரு வர்ணத்தின் தர்மம் மறு வர்ணத்திற்குமாகி ஸங்கரமாம். (நீ முன்னே संकरो नरकायैव என்றெல்லாம் சொன்னாயே. லோகஸங்க்ரஹமில்லாவிடில் அவ்வாறாகு மென்பதை இப்போது நினைத்துப் பார்.) ஆக ஜனங்களுக்குக் கேடு கூடாதென்றே நான் செய்து வருகிறேன். நீயோ அதற்காகவும் உனக்காகவும் தர்மத்தைச் செய்ய வேண்டும். (24)

இப்படி, பொதுவாக வர்ணாச்ரம தர்ம விஷயமாகக் கூறினார். இவ்வாறே, முமுக்ஷுவாகி அததற்கு விரகொன்று செய்ய இழிந்த போது ஜ்ஞானயோகத்தை விட்டுக் கர்மயோகத்தை லோக ஸங்க்ரஹத்திற்காகச் செய்ய வேண்டுமென்கிறார்—

सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वन्ति भारत ।
कुर्याद् विद्वांस्तथाऽसक्तश्चिकीर्षुर्लोकसंग्रहम् ॥ २५ ॥

ஸக்தா: கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத |
குர்யாத் வித்வாந் ததா அஸக்த: சிகீர்ஷுர் லோகஸங்க்ரஹம் || 25 ||

भारत-பரதவம்சத்தில் பிறந்தவனே
अविद्वांसः—ஜ்ஞானயோகம் செய்வதற்கான அறிவில்லதாராய்
कर्मणि सक्ताः-கர்மயோகத்தில் இழிந்திருப்பவர்
यथा कुर्वन्ति—எப்படி அதைச் செய்வார்களோ
तथा—அப்படியே ச்ரத்தையுடன்
विद्वान्—ஜ்ஞானயோகத்திற்கான அறிவுள்ளவனாய்
असक्तः—கர்மயோகத்தில் பற்றில்லாதவனும்
लोकसंग्रहं—லோக ஸங்க்ரஹத்தை
चिकीर्षुः—செய்ய விரும்பி
कुर्यात्—செய்ய வேண்டும்.

லோகஸங்க்ரஹமென்பதை விவரிக்கிறார்—

न बुद्धिभेदं जनयेत् अज्ञानां कर्मसंगिनाम् ।
जोषयेत् सर्वकर्माणि विद्वान् युक्तः समाचरन् ॥ २६ ॥

ந புத்திபேதம் ஜநயேத் அஜ்ஞாநாம் கர்மஸங்கிநாம் |
ஜோஷயேத் ஸர்வகர்மாணி வித்வாந் யுக்தஸ் ஸமாசரந் || 26 ||

अज्ञानां—ஞானயோகம் செய்ய அறிவின்றி
कर्मसंगिनां-கர்மயோகத்திலிழிந்தார்க்கு
बुद्धिभेदम्—ஞானயோகமே சிறந்ததென புத்தி மாறுதலை
न जनयेत्—உண்டுபண்ணலாகாது.
विद्वान्—ஞானயோகம் செய்ய அறிவுடையனும்
युक्तः—நமக்கும் கர்மயோகமே சிறந்ததென்ற நோக்குடன்
समाचरन्—நன்றாக அதை அனுஷ்டிப்பவனாய்
सर्वकर्माणि—கர்மயோக வகைகளை
जोषयेत्-அவர்களுக்கு இஷ்டமாக்கிச் செய்விக்க வேண்டும்.

இந்த ச்லோகத்திற்கு மோக்ஷம் விரும்புகின்ற அறிஞனும் ஸம்ஸார நசையுடைய அறிவிலிகளின் புத்தியை மாற்றாமலிருப்பதற்காக, தனக்கு ஸம்ஸார நசையிராமலிருந்தாலும் அவர்களைப் போலே கர்மாக்களைச் செய்து வரவேண்டுமென்று பொருள் கொள்ளலாகாது. அப்படியாகில் வேதாந்தோபதேசமே செய்யக்கூடாதென்பதாகும். ஸந்நியாஸியும் க்ருஹஸ்தர்களின் புத்தியை மாற்றாமைக்காக க்ருஹஸ்த தர்மங்களை யனுஷ்டிக்க வேண்டுமென்றெல்லாமாகி லோக க்ஷோபமாம். ஆகையால் ஒரே விதமான பலனில் நோக்குள்ளவர்கள் அதற்காக சாஸ்த்ர விதிகளில் இழியும போது அவர்களில் சிலர் வேறு விதம் செய்யத் திறமையுடையராயினும், மற்ற தம் இனத்தார் செய்யக் கூடியதையே தாமும் செய்ய வேண்டுமே யல்லது, பிறர்க்கு முடியாததைச் செய்து அவர்களுக்கு புத்தியில் மாறாட்டத்தை விளைவிப்பது தகாதென்றதாம்.

அறிஞனும் அறிவிலியும் செய்வது ஒரே கர்மாவாகிலும் அறிவில் சிறிது மாறுதல் உண்டென்கிறார்—

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहंकारविमूढात्मा कर्ताऽहमिति मन्यते ॥ २७ ॥
तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।
गुणा गुणेषु वर्तन्ते इति मत्वा न सज्जते ॥ २८ ॥

See Nr P. 27-5-20/21
[illegible]

ப்ரக்ருதே: க்ரியமாணாநி குணை: கர்மாணி ஸர்வச: |
அஹங்காரவிமூடாத்மா கர்த்தாऽஹம் இதி மந்யதே || 27 ||
தத்வவித்து மஹாபாஹோ குணகர்மவிபாகயோ: |
குணா குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே || 28 ||

गुणा गुणेषु वर्तन्ते — [illegible] 5-8/5-11 [illegible]

अहंकारविमूढात्मा—தேஹாத்மாபிமானத்தினால் தன் ஸ்வரூபம் அறியப் படாமலிருப்பவன்
प्रकृतेः—மூல ப்ரக்ருதியின்
गुणैः—குணங்களான ஸத்துவ ரஜஸ்தமஸ்ஸுக்கள்
सर्वशः—எல்லாம் எவ்விதமாகவும்
क्रियमाणानि—செய்கின்ற
कर्माणि—செயல்களை
कर्ता अहम्—செய்கின்றவன் நான்
इति मन्यते—என்று நினைக்கிறான்.
महाबाहो—திரண்ட புஜமுடையனே!
गुण कर्म विभागयोः—ஸத்வாதி குணங்களுடையவும் அவற்றாலான க்ரியைகளுடையவும் உட்பிரிவுகளின்
तत्त्ववित्—உண்மையுணர்ந்தவனோ
गुणाः—ஸத்வாதி குணங்களே
गुणेषु—அக்குணங்களின் கார்யங்களிலே
वर्तन्ते—முனைந்திருக்கும்
इति मत्वा—எனத் தெளிந்து
न सज्जते—தான் கர்த்தா என்ற ஸம்பந்தத்தை விடுகிறான்.

ப்ருக்ருதியின் குணங்களின் ஏற்றத்தாழ்வுக்கிணங்க தேஹாதிகள் அமைகின்றன. அந்த தேஹாதிகளே குணங்களெனப்படும். அவையெல்லாம் தமக்குத் தக்கவாறு கார்யங்களைச் செய்கின்றன. ஜீவன் தன் ஸ்வரூபத்தை வேறாக அறியாமல் தேஹாத்மாபிமானத்தாலே தன்னையே கர்த்தாவாக நினைக்கிறான். இது ப்ராந்தி. ஆத்மா ஸ்வபாவமாக இவ்வாறு செய்வதாகில், கர்மாக்களில் பலவிதமான பிரிவுகள் ஏன்? குணங்களின் பிரிவுக்கேற்றவாறு அப் பிரிவுகளானபடியால் தான் ராஜஸ தாமஸ கார்யங்களான ஆபாஸங்களும் நடைபெறுகின்றன. எனவே கர்மாவின் பிரிவுக்கும் குணப் பிரிவுக்கும் ஸம்பந்தம் தெளிந்தவன், இக் கார்யங்கள் குணங்களாலாமவை என அறிந்து, தன்னைக் கர்த்தாவாகக் கொள்ளான். இதனால் 'அறிவிலி கர்த்தாவாக நினைப்பான், அறிஞன் அவ்வாறு நினைக்கமாட்டான்' என்பதே வாசி. இருவரும் கார்யம் செய்தேயாக வேண்டுமென்றதாயிற்று. (28)

இப்படி அறிந்தும் செய்வது லோகஸங்க்ரஹத்திற்காக என்கிறார்—

प्रकृतेर्गुणसंमूढाः सज्जन्ते गुणकर्मसु ।
तान् अकृत्स्नविदो मन्दान् कृत्स्नविन्न विचालयेत् ॥ २९ ॥

ப்ரக்ருதேர் குணஸம்மூடா: ஸஜ்ஜந்தே குணகர்மஸு |
தாந் அக்ருத்ஸ்நவிதோ மந்தாந் க்ருத்ஸ்நவித் ந விசாலயேத் || 29 ||

प्रकृतेः—மூல ப்ரக்ருதியின்
गुणसंमूढाः—குணங்களாலே தேஹாத்ம விவேக மற்றிருப்பவர்
गुणकर्मसु—ஞானமில்லாமையாலே குணங்களாலாம் கர்மயோக மார்க்கங்களிலேயே
सज्जन्ते—பற்றுடையராவர்,
तान्—அந்த
अकृत्स्नविदः—நன்கு ஆத்ம ஜ்ஞான மற்றவராய்
मन्दान्—பெரியோரைக் கண்டு நடக்கும் நிலையிலிருப்பாரை
कृत्स्नवित्-ஆத்ம தத்துவத் தெளிவு உடையவன்
न विचालयेत्—கர்மயோகத்தினின்று அசையச் செய்யலாகாது.

अकृत्स्नविदः. தேஹத்திலும் ஆத்மா வேறென்ற எண்ணமில்லையாகில் கர்மயோகத்திலிழியானே. இழிந்தவனை அறியாதவனென்னலாமோ என்னில்—அறிந்ததால் தான் அவர்களை अकृत्स्नविद् என்பது. வேறென்றறிந்தாலும் ஆத்ம தத்துவத்தை நன்கு உணரவில்லை. नायं देवो न मर्त्यो वा என்றறிந்தான. ना [illegible]. என அறியவில்லை. (29)

குணமே கர்த்தா என்று நினைக்க வேண்டுமென்றார். இப்போது ஈச்வரனே கர்த்தா என நினைத்துச் செய் என்கிறார்—

**मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा ।**
**निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ३० ॥**

*மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்யாத்மசேதஸா ।*
*நிராசீர் நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர: ॥ 30 ॥*

अध्यात्मचेतसा—ஆத்ம விஷயத்திலுண்டான தெளிவால்
**सर्वाणि कर्माणि**—எந்த குணத்தினால் எக் கருவியினாலான செயலையும்
**मयि संन्यस्य**—என்னிடத்தில் வைத்து விட்டு, என்னையே கர்த்தாவாகக் கொண்டு
निराशीः—பலனில் நசை நீங்கியவனாய்
निर्ममः भूत्वा—கர்மா தனதென்ற புத்தியுமற்றவனாய்
**विगतज्वरः**—அநாதியான வன்வினை விலங்கால் என்ன ஆமோ என்ற ஜ்வரத்தை விட்டு
**युध्यस्व**—போர் புரி.

நான் கர்த்தனல்லன்; ஸர்வேச்வரனே கர்த்தா, பலன் எனதன்று, அவனதே; ஆகவே இந்தக் கர்மாவும் எனக்கு ஸம்பந்தப்பட்டதன்றென்ற மூன்றுவித த்யாக புத்தியும் வேண்டும். 'முன்னே குணம் கர்த்தா என்று கூறி, இப்போது ஈச்வரன் கர்த்தா என்றால் எது உண்மை. இவன் கர்த்தா அல்லனாகில் युध्यस्व என்று இவனைப் பார்த்து ஈச்வரன் எதற்கு விதிக்க வேண்டும்' என்னில்—இங்கே युध्यस्वेत्यनुशास्ति என்ற ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார ச்லோகத்தை நினைக்க.

மனோவாக்காயங்களிடம் செயல்கள் இருக்கின்றன. அவற்றிற்கு அவை காரணமே. ஆனால் அசேதனங்களாகையாலே அவை ஸ்வதந்த்ரங்களல்ல. ஸ்வதந்த்ரனாவான் ஜீவன். ஸ்வதந்த்ரத்வமாவது--ஒன்றை செய்வதற்கு வேண்டும் அறிவும், விருப்பமும், அது விஷயத்தில் முயற்சியும். இவற்றை ज्ञानचिकीर्षाप्रयत्नங்கள் என்பர். இந்த கர்த்ருத்வம் ஜீவனிடமே உண்மையிலுள்ளது. இப்படியிருக்க, குணத்தைக் கர்த்தாவாகக் கூறியதன் கருத்தென்னவெனில், எனக்கு இந்த கர்த்ருத்வம் இந்த குணத்தின் சேர்க்கையாலானது, இயற்கையில இருப்பதன்று; குணத்தின் மாறுதலுக்கீடாகச் செயலும் மாறுகிறதே என்றறிகை. இது முன் ச்லோகத்தின் கருத்து.

ஈச்வரனை இசையாத ஸாங்க்யரும் இப்படி குணம் கர்த்தா, ஆத்மா கர்த்தன் அல்லனெனத் தெளிவர். உண்மையில் வேதாந்த ஞானமுள்ள

வர் தெளிவதொன்று இதன் மேலுண்டு. அசேதனமான குணமானது தானே ஜீவனுக்கு இதனைச் செய்துவைக்கமாட்டாதாகையாலே அசேதனமான குணத்தை ஏவுகின்றவன் ஸர்வேச்வரனே. அவன் ப்ரேரணையில்லையாகில், குணம் வியாபாரத்திற்குக் காரணமாகாது. ஜீவனுக்கு அறிவும் ஆசையும் முயற்சியும் ஈச்வரனுடைய ஸங்கல்ப சக்தியாலே வந்தபடியால் பராதீனமே. ஜீவனுக்கு கர்த்ருத்வம் வருவதற்கான ஞானசிகீர்ஷாப்ரயத்னங்கள் ஈச்வரனுக்கு உண்டு. அவை அங்கே ஸ்வாதீனங்கள். தேஹாதிகளைக் கருவியாக்கி ஈச்வரன் என்னைக் கொண்டு இச் செயல் செய்விக்கிறானென்று நினை என்றதாயிற்று. இத்துடன் தன் ப்ரீதிக்காகச் செய்விக்கிறான். கர்மாவைத் தனக்காக வைத்துச் செய்விக்கிறானென்றும் சேர்த்தால் முழு ஸாத்விக த்யாகமாகும். (30)

இவ்வாறு கர்மானுஷ்டானமே தமக்கு ஸம்மதமெனப் புகழ்ந்து கூறுகிறார்—

ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवाः ।
श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः ॥ ३१ ॥

யே மே மதமிதம் நித்யம் அநுதிஷ்டந்தி மாநவா: |
ச்ரத்தாவந்தோऽநஸூயந்தோ முச்யந்தே தேऽபி கர்மபி: || 31 ||

ये मानवाः—எந்த மனிதர்கள்
मे मतम्—எனக்கு ஸம்மதமான
इदम्—கீழ்க் கூறியவாறு கர்ம யோகத்தை
नित्यं—சிறப்பறிந்து, விடாமல் (ஜ்ஞானயோகத்திலிழியாமல்)
अनुतिष्ठन्ति—அனுஷ்டிக்கின்றனரோ,
ते—அவர்களும்,
श्रद्धावन्तः—இதில் ச்ரத்தை யுள்ளவர்களும்
अनसूयन्तः अपि—இதில் அஸூயையில்லாதவர்களும்
कर्मभिः—அநாதி வினைகளால்
मुच्यन्ते—விடப்படுகின்றனர்.

ஜ்ஞானயோகத்தின் பலனைக் கர்மயோகத்தினாலேயே பெறலாம். ஆகையால் இதே எப்போதுமாய் நித்யமாகலாம். அனுஷ்டிக்காமற்போனாலும் இதில் ச்ரத்தை யுள்ளவருக்கும் மோக்ஷம் உண்டு. அவ்வாறே அஸூயையற்றவருக்கும் மோக்ஷமென்றபடி. அனுஷ்டிக்காமல் ச்ரத்தையிருந்தால் போதுமோ, அநஸூயைமட்டும்தான் பலன் அளிக்குமோ என்னில், அவையிருந்தால் அனுஷ்டானமும் அவசியமாய்ப் பின்னே தொடருமாகையால் பலன் உண்டென்றதாம்.

இப்படி இந்த ச்லோகத்திற்கு நித்யமாய் அனுடிப்பவர்கள், ச்ரத்தை யுள்ளவர்கள் அஸூயையற்றவர்களென்ற மூன்று அதிகாரிகள் விஷயமாக உரை செய்யப் பெற்றது. இதற்குக் காரணம். तेऽपि என்கிற உம்மைதான். இவ்வாறின்றி, ச்ரத்தை யுள்ளவராய் அஸூயையுமிராமல் எவர்கள் நித்யமாய் அனுஷ்டிக்கிறார்களோ, அவர்களும் மோக்ஷம் பெறுவர் என்று உரைத்தால். "அவர்களும்" என்ற உம்மையால் கூட்டிக்

धर्मः श्रुतो वा दृष्टो वा स्मृतो वा कथितोऽपि वा।
अनुमोदितो वा राजेन्द्र पुनाति पुरुषं सदा॥



கொள்ளப்படுகிறவர் யாரென்று பார்க்க வேண்டும். ஞானயோகிகளைக் கொள்ளலாம். அதாவது இதில் அச்ரத்தையால் ஞானயோகத்தில் இழிந்தவரும், ஞானியாயிருக்கும்போது ஏன் கர்மயோகம் செய்வதென்று, (கர்மயோகத்திலே குணமிருக்க தோஷத்தை யேறிட்டு) அசூயையால் ஞானயோகத்தில் இழிந்தவரும், அவ்வாறின்றி ச்ரத்தை அநஸூயை இரண்டுடன் கர்மயோகமே செய்கின்றவரும் மோக்ஷம் பெறுவர் என்றால் கர்மயோகம் ஞானயோகத்தினும் தாழ்ந்ததாகவோ, ஸமமாகவோ தேறுமல்லது ஞானயோகத்தைவிடச் சிறந்ததென்று தேறாது. சிறப்பைச் சொல்லும் இந்த ஸத்தர்ப்பத்தில் இது சேராது. கர்மயோகம் நித்யமாய் அனுஷ்டிப்பவர்கள் ச்ரத்தையும் அநஸூயையும் உடையவரேயாவராகையால் श्रद्धावन्तोऽनसूयन्तः என்பது வீணும். ச்ரத்தையில்லாதாரும் அசூயையுள்ளவருங்கூட கர்மயோகத்தை விடாமல் செய்தால் பலன் உண்டென்பதானுல் अश्रद्धाना असूयन्तः என்றிருக்க வேண்டும். ஆகையால் கர்மயோகத்தில் அச்ர்த்தையும், அதை தோஷமாக நினைப்பதும் இருந்து ஜ்ஞானயோகத்திலிழிகின்றவனைவிட அதையும் கர்மயோத்தையும் செய்யாமல் கர்மயோகத்தில் ச்ரத்தையும் அநஸூயையும் இருந்தாலும் போதுமென்று கர்மயோகத்திற்கு ஏற்றம் தேறும்படி பொருள் உரைப்பதே தகுமென்க.

அசூயாதிகளை விடுவதில் முன் ச்லோகத்திற்கு நோக்கென்பதைத் தெளிவாக்க மேலே ஒரு ச்லோகம்—

**ये त्वेतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम् ।**
**सर्वज्ञानविमूढांस्तान् विद्धि नष्टान् अचेतसः ॥ ३२ ॥**

யே த்வேதத் அப்பஸூயந்தோ நாநுதிஷ்ட்டந்தி மே மதம் |
ஸர்வஜ்ஞானவிமூடாம்ஸ் தாந் வித்தி நஷ்டாந் அசேதஸ: || 32 ||

**ये तु**—அவ்வாறின்றி எவர்கள்
**अभ्यसूयन्तः**-அச்ரத்தையும் அசூயையுமுடையராய்
**एतत् मे मतम्**—எனக்கு இஷ்டமான கர்மயோகத்தை
**न अनुतिष्ठन्ति**--செய்யாமலிருக்கின்றனரோ, இதை விட்டு ஜ்ஞான யோகமே செய்கின்றனரோ
**तान्**—அவர்களை
**अचेतसः**—பகுத்தறிவுக்குள்ள மனமற்றவரும்
**सर्वज्ञानविमूढान्**—ஆத்ம ஜ்ஞானங்கள் எல்லாவற்றிலும் விஷயமானவற்றையறியாதவரும்
**नष्टान्**—பலனை இழந்தவருமாக
**विद्धि**—அறிவாயாக.

अभ्यसूयन्तः என்றவிடத்தில் अभि என்பது அச்ரத்தையையும் கூட்டுவதற்காக. கர்மயோகம் செய்யாமல் இதை தோஷமாக்கி அச்ரத்தை காட்டி ஜ்ஞானயோகம் செய்ய இழிவாருக்கு ஞானயோகத்திலே விஷயமாக நாலு வகைகள் (ஆறும் அத்யாயத்திலே சொல்லப்படுமவை)

Se. 33 - 4. न गाथा गाथिनं शास्ति बहु चेदपि गायति।
प्रकृतिं यान्ति भूतानि कुलिङ्गशकुनिर्यथा॥ (M. Bharatam)



போன்றவற்றில் தெளிவு வாராது. பலனை இழப்பவராவர். கர்மயோகம் செய்தால் अनेनस: என்ற நிலையின்றி நல்ல மனம் உடையராய் எல்லா வகைகளையும் அறிவார்; பலனும் பெறுவர். (32)

இவ்வளவால் கர்மயோகம் ஸுகமாகச் செய்யக் கூடியது, தவறுதலுக்கு விசேஷமாக இடமற்றது. ஜீவனுடைய கர்த்ருத்வம் குணங்கள் மூலமாகவும் ஈச்வராதீனமுமாகிறதென்ற தெளிவுடன் செய்வதால் ஆத்ம ஞானத்தை யுட்கொண்டதுமாகிறது. ஞானயோகமோ எளிதிற் செய்யவாகாது, தவறுதல் அடிக்கடி நேரும். கர்மாவை அடியோடு விட்டுச் செய்யவாகாதது என்ற வாசிகளைக் காட்டிக் கர்மயோகத்தைச் செய்ய வேண்டுமென்றார். ஞானயோகம் செய்வதிலுள்ள ச்ரமத்தை விரித்துரைப்பர் மேலே— (நித்ய அத்யாயம் ...)

सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि । See ... P. 27-6-149
प्रकृतिं यान्ति भूतानि निग्रहः किं करिष्यति ॥ ३३ ॥

ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஜ்ஞாநவாநபி |
ப்ரக்ருதிம் யாந்தி பூதாநி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி || 33 ||

ज्ञानवान् अपि—ஆத்ம விவேகமுள்ளவனும்
स्वस्याः प्रकृतेः—தனது பழைய வாஸனைக்கு
सदृशम्—ஈடாகவே—
चेष्टते—எதையும் செய்வான்.
भूतानि—பிராணிகளெல்லாம்
प्रकृतिं—தம் வாஸனையை
यान्ति—பின்பற்றும்.
निग्रहः—சாஸ்த்ரம் செய்யும் தடையானது
किं करिष्यति—என்ன செய்யும் (எவ்வளவு பலிக்கும்.)

வாஸனை செயலுக்கு எவ்வாறு காரணமாகுமென்பதை விளக்கி அவ் வழியினின்று விலக வேண்டுமென்கிறார்—

इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ । See ... P. 27-6-150
तयोर्न वशमागच्छेत् तौ ह्यस्य परिपन्थिनौ ॥ ३४ ॥

இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்த்திதௌ |
தயோர் ந வசம் ஆகச்சேத் தௌ ஹ்யஸ்ய பரிபந்த்திநௌ || 34 ||

इन्द्रियस्य इन्द्रियस्य—ஜ்ஞாநேந்த்ரியம் கர்மேந்த்ரியம் ஒவ்வொன்றினுடையவும்
अर्थे—பலனை கார்யத்தில்
रागद्वेषौ—விருப்பும் வெறுப்பும
व्यवस्थितौ—நிலைத்திருக்கும்.
तयोः—அந்த ராகத்வேஷங்களுக்கு
वशम्—வசப்பட்டிருக்கையை
न आगच्छेत्—பெறலாகாது.
तौ हि—அவை இரண்டுமே
अस्य—இந்த ஜீவனுக்கு
परिपन्थिनौ—விரோதிகளாகுமே.

அந்தந்த இந்த்ரியத்தின் விஷயத்திலே ராகம் உண்டாகும். எந்த அனுபவத்திற்கு ராகம் உண்டாயிற்றோ அதற்குத் தடையுண்டாகில், தடை செய்பவரிடம் த்வேஷம் உண்டாம். ஞானயோகத்தில் இழிந்தால் ராகத்வேஷ வசமாய்க் கெடுவோமென்று அதனின்று விலக வேண்டும்.

श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात् स्वनुष्ठितात् । See p. 27-6-151
स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥ ३५ ॥

ச்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வநுஷ்ட்டிதாத் |
ஸ்வதர்மே நிதநம் ச்ரேய: பரதர்மோ பயாவஹ: | 35

स्वनुष्ठितात्—தொடக்கத்தில் நன்றாகச் செய்யப்படுவது போன்ற
परधर्मात्—வாஸநாராகத்வேஷவசமாகாதவனுக்கான (ஞானயோக) தர்மத்தைவிட
विगुणः—அரைகுறையாகவான
स्वधर्मः—வாஸநாதிவசனுக்கான கர்மயோகமே
श्रेयान्—சிறந்ததாகும்.
स्वधर्मे—தனக்கான கர்மயோகத்திலே
निधनं—பூர்த்தியாகாமல் நடுவே அழிவும்
श्रेयः—ஞானயோகத்திலிழிவதை விடச் சிறந்ததாம்.
परधर्मः—பிறருடைய தர்மமான ஞானயோகம் (செய்யப்பட்டால்)
भयावहः—அச்சத்தை விளைவிக்கும்.

'ஜ்ஞானயோகம் செய்யத் தொடங்கினால் அதே ஜன்மத்தில் ஆத்மாவைக் காணலாம்; கர்மயோகத்தைச் செய்து வந்தால் ஞானயோகம் தொடங்குவதற்கு முன்பே மரணம் நேர்ந்துவிட்டால் பலன் பெறத் தாமதமாகுமே' என்ன வேண்டா. தகாத ஞானயோகத்தைத் தொடங்கினால் ஒன்றுமே செய்ததாகாது. கர்மயோகம் செய்த வரையில் வீணாகாமல், மரணம் நேரிட்டாலும் உடனே மறு பிறவியில் காக்கும். (இந்த ச்லோகத்திற்கு—தன் வர்ணாச்ரமதர்மத்தை விட்டுப் பிறவர்ணாச்ரமதர்மத்தைச் செய்வது அச்சத்திற்கு இடமாகுமென்ற பொருள் ஸந்தர்பத்திற்குச் சேராது. 18ம் அத்யாயத்திலும் (47) இந்த ச்லோகம் உண்டு. அங்கும் இங்குப் போலவே பொருளாம்.)

अर्जुन उवाच—அர்ஜுனன் கேட்டான்.

अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः । See p. 27-6-152
अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥ ३६ ॥

அத கேந ப்ரயுக்தோऽயம் பாபம் சரதி பூருஷ: |
அநிச்சந்நபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித: || 36 ||

वार्ष्णेय!—வ்ருஷ்ணிவம்சத்தில் தோன்றியவரே
अयं पूरुषः—ஞானயோகத்திலிழிந்தவன்
अथ—அதே நோக்கான பிறகு
अनिच्छन् अपि—விஷயானுபவத்தில் நசையற்றிருந்தும்
केन प्रयुक्तः—எதனால் ஏவப்பட்டு
बलात् नियोजितः इव—காற்று வெள்ளம் தள்ளவானவன் போலாகி
पापं चरति-விஷயானுபவமாம் பாபத்தைச் செய்கிறான்.

பழைய வாஸனையும் விஷயானுபவத்தில் இழிவிப்பது ஆசை மூலந் தானே. அதில் ஆசையேயில்லாமல் தீவ்ரமாக ஞானயோகத்தில் இழிந்தவன் எதனாலே வசப்பட்டுப் பாபத்தைச் செய்வான். அசையாமலிருக்க விரும்பினவனும் காற்றால் அல்லது வெள்ளத்தினால் அடிக்கப்பட்டு அசைவது போலாகில், அது பாபமாகுமோ? இச்சை வேண்டுமே. ஒருவனுக்கு விஷயானுபவத்தில் நசையில்லையே. (36)

இந்த்ரியம் தோறும் ராகத்வேஷங்கள் உள்ளன என்று கீழே கூறினதையே மேலே விரித்து பகவான் உரைக்கிறார். நசையில்லாதவனுக்கும் நசை வரக் காரணத்தைக் குறிக்கிறார்—

श्रीभगवान् उवाच—பகவானின் மறுமாற்றமாவது—

**काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।** See Nr. P. 27-6-153

**महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम् ॥ ३७ ॥** 4 क्रुद्धः पापं न कुर्यात् कः

காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவ: | क्रुद्धो हन्याद्गुरूनपि।

மஹாசநோ மஹாபாப்மா வித்யேநம் இஹ வைரிணம் || 37 ||

एष.—கீழ்க்கூறிய ராகமே

रजोगुणसमुद्भवः—ரஜோகுணத்தினால் நன்கு எழுந்து

कामः—காமமாகி

महाशनः—பெரும் விஷயானுபவத்திலே மூள்கிறது

एषः—இந்தக் காமமே

क्रोधः—கோபமாகி

महापाप्मा—கொடிய வினைகளை விளைவிக்கிறது.

एनं—இந்தக் காமத்தை

इह-இந்த ஞானயோக விஷயத்திலே

वैरिणं—சத்ருவாக

विद्धि—அறிவாயாக.

வாசனையாயிருந்து பிறந்த ராகம் மேலெழுவது ரஜோகுணத்தினால், அதே காமம். அதற்குத் தடையுண்டாகில் கோபம் எழும். காமம் அனுபவத்தில் இழிவிக்கும். கோபம் கொலை போன்ற பாபத்திலே மூட்டும். (ரஜோ குணம் அழிந்தாலொழிய இதை விலக்கலாகாது. அது அழியக் காமயோகம கதி என்றபடி) (37)

காமம் விரோதிக்கும் வகையை விளக்குகிறார்—

**धूमेनाऽऽव्रियते वह्निर्यथाऽऽदर्शो मलेन च ।** See Nr. P. 27-6-153/4

**यथोल्बेनाऽऽवृतो गर्भस्तथा तेनेदमावृतम् ॥ ३८ ॥**

தூமேநாவ்ரியதே வஹ்நிர் யதாऽऽதர்சோ மலேந ச |

யதோல்பேநாவ்ருதோ கர்ப்பஸ் ததா தேநேதம் ஆவ்ருதம் || 38 ||

धूमेन—புகையினால்

वह्निः—நெருப்பும்

मलेन—அழுக்கினால்

आदर्शः च—கண்ணாடியும்

यथा आव्रियते-எப்படி சூழப்படுமோ

उल्बेन—கர்ப்பப்பையினால்

गर्भः—கர்ப்பமானது

यथा आवृतः—எப்படி சூழப்படுமோ

तथा—அப்படி

तेन—அந்தக் காமத்தினால்

इदम् आवृतम्—இந்த ப்ராணி யாவும் சூழப்பட்டிருக்கும்.

மூன்று உதாரணத்தின் கருத்தென்னவெனில்—நெருப்புக்குப் புகை போல் ஐந்து காமம் இன்றி யமையாதது. கண்ணுடியில் அழுக்குப் போல் பன்முறை துடைத்தாலும் காமம் வந்த வண்ணமிருக்கும். கருவி னின்று பை போல் நாம் இஷ்டப்பட்ட போது எளிதில நீக்க வாகாதது காமம் என்றவாறும். (38)

அறிவையும் மறைக்குமாகையால் அறிவே பெறவாகாதென்கிருர்—

**आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।**
**कामरूपेण कौन्तेय दुष्पूरेणानलेन च ॥ ३९ ॥**

ஆவ்ருதம் ஜ்ஞாநம் ஏதேந ஜ்ஞாநிநோ நித்யவைரிணு ।
காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணாநலேந ச ‖ 39 ‖

**कौन्तेय**—குந்தி புத்ரனே !
**ज्ञानिनः**—சேதநனுடைய (இயற்கையில் ஜ்ஞானம் பெற வேண்டியவனுடைய)
**ज्ञानम्**—ஆத்ம விஷயத்திலே அறிவானது
**दुष्पूरेण**—தகாத விஷயங்களைக் கொள்வதும்
**अनलेन च**—எவ்வளவு பெற்றும் போதுமென்னாததுமான
**कामरूपेण एतेन**—காமமென்கிற இந்த
**नित्यवैरिणा**—அழியாத சத்ருவினுல்
**आवृतम्**—மறைக்கப்பட்டிருக்கும்.

காமம் இனி இல்லை யென்றவாறு பூர்த்தியாகாது. ஒன்றின் மேலொன்ருக, நெய்யை இடஇட நெருப்பு கிளர்வது போல் எழும். அதை நிறைக்க எதை யிட்டாலும் அதனுல் பறிக்கப்பட்ட பள்ளம் போலேயாகும் அது. தன்னை நிறைப்பதற்காக அது தகாத விஷயங்களையும் கொள்ளுமென்பதற்காக दुष्पूरेण என்றது. எவ்வளவு பெற்றுலும் போதாதென்ன अनलेन என்றது. அலம்—போதும். அவ்வாறல்லாதது அநலம். அனலமென்ருல் நெருப்புமாம். नाग्निस्तृप्यति काष्ठानाम् என்பரே. (39)

காமத்திற்கு இடங்களைக் காட்டுகிருர்—

**इन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते ।**
**एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ४० ॥**

இந்த்ரியாணி மநோபுத்திரஸ்யாதிஷ்டாநம் உச்யதே ।
ஏதைர் விமோஹயத்யேஷ ஜ்ஞாநம் ஆவ்ருத்ய தேஹிநம் ‖ 40 ‖

**अस्य**—இந்தக் காமத்திற்கு
**इन्द्रियाणि**—இந்த்ரியங்களும்
**मनः बुद्धिः**—மனமும் விபரீதாயவஸாயமும்
**अधिष्ठानम्**—இருப்பிடமாக
**उच्यते**—சொல்லப்படும்.
**एषः**—இந்தக் காமம்
**एतैः**—இந்த ஸ்த்தானங்களைக் கொண்டு
**ज्ञानं आवृत्य**—அறிவை மறைத்து
**देहिनम्**—ஆத்மாவை
**विमोहयति**—விஷயங்களில் மோகம் உள்ளதாக்குகிறது.

तस्मात् त्वमिन्द्रियाण्यादौ नियम्य भरतर्षभ ।
पाप्मानं प्रजहिह्येनं ज्ञानविज्ञाननाशनम् ॥ ४१ ॥

தஸ்மாத் த்வம் இந்த்ரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப |
பாப்மாநம் ப்ரஜஹிஹ்யேநம் ஜ்ஞாநவிஜ்ஞாநநாசநம் || 41 ||

भरतर्षभ—பரத வம்சத்தினிற் சிறந்தவனே
तस्मात्—காமம் கொடியதாயிருப்பதால்
त्वम् आदौ—நீ முதலிலே
इन्द्रियाणि—இந்த்ரியங்களை
नियम्य—அடக்கி, கர்மயோகத்தி லிழிய வைத்து
ज्ञानविज्ञाननाशनम्—ஆத்ம ஜ்ஞானம் அதன் வேறுபாட்டின் ஜ்ஞான மெல்லாம் அழிக்கும்
एनं पाप्मानम्—இக் கொடிய காமத்தை
प्रजहि—தொலைப்பாயாக.
(प्रजहिहि—விட்டுவிட்டு.)

जहि त्वम् என்றாற் போல் प्रजहि என்னலாம். प्रजहाति यदा कामान् என்றதற்கிணங்க प्रजहिहि என்னலாம்.

इन्द्रियाणि पराण्याहुरिन्द्रियेभ्यः परं मनः ।
मनसस्तु परा बुद्धिः यो बुद्धेः परतस्तु सः ॥ ४२ ॥

இந்த்ரியாணி பராண்யாஹு: இந்த்ரியேப்ய: பரம் மந: |
மநஸஸ்து பரா புத்தி: யோ புத்தே: பரதஸ்து ஸ: || 42 ||

इन्द्रियाणि—இந்த்ரியங்களை
पराणि—விஷயங்களைவிட மேம்பட்டவையாக
आहुः—சொல்லுகின்றனர்.
इन्द्रियेभ्यः—இந்த்ரியங்களைக் காட்டிலும்
मनः—மனமானது
परम्—உயர்ந்தது.
मनसः—மனத்தைவிட
बुद्धिः—அத்யவஸாயமானது
परा—உயர்ந்தது.
बुद्धेः—இந்த புத்தியைவிட
परतः तु—மேம்பட்டதே யாகும்
सः—அந்தக் காமம்.

ஜ்ஞானத்தை வாராதபடி தடுக்க இந்திரியங்களே வழி செய்யும். அதற்கு மேல் மனம், அதன் மேல் புத்தி, புத்திக்கும் மேலேயாகும் காமம். இது எல்லாவற்றையும் தன் வசமாக்கி ஜ்ஞானம் எழாதபடி செய்யும். இதை யழிக்க இதன் காரணமான ரஜோகுணத்தை அழிப்பதற்குக் கர்மயோகத்திலே இறங்க வேண்டுமென்றதாயிற்று. (42)

सः என்பதற்கு ஸந்தர்ப்பத்திற்கு இணங்க காமமே பொருளாம். तु என்ற சொல் புத்திக்கு மேலாகக் கடோபநிஷத்திற் கூறியதை விட தாம் கூறுவது வேறு; இங்கே இதை விடலாகாதென்பதற்காக.

மூன்றாம் அத்யாயம் முற்றும்.

## நான்காம் அத்தியாயம்

மூன்றும் அத்தியாயத்தில்—ஞானயோகத்தில் அதிகாரம் முதலில் பெறவாகாதென்றும், அதிகாரம் பெற்ற பிறகும் கர்மயோகமே சிறந்த தென்றும், உலகுக்கு வழிகாட்டியாயிருப்பவன் லோகஸங்க்ரஹத்திற் காகவும் கர்மயோகமே செய்ய வேண்டுமென்றும், செய்யும் போது பற்றின்றி ப்ரக்ருதி குணங்களிலும் பகவானிடமும் கர்த்ருத்வத்தை ஏறிட்டு தான் கர்த்தனல்லனென்று செய்ய வேண்டுமென்றும் சொன்னார். மேலே, இவ்விஷயம் இதற்கு முன் அவதாரத்திற் சொல்லப் பட்டதே யென்றும், கர்மயோகத்தின் உட்பிரிவுகளும், அதனுள் ஞானம் அடங்கியிருப்பதால் அதற்கு ஏற்றமும் சொல்லப்படும்—

श्रीभगवान् उवाच—பகவான் சொன்னார்—

**इमं विवस्वते योगं प्रोक्तवान् अहमव्ययम् ।**
**विवस्वान् मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ १ ॥**

இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவாந் அஹம் அவ்யயம் |
விவஸ்வாந் மநவே ப்ராஹ மநுரிக்ஷ்வாகவேऽப்ரவீத் || 1 ||

अहं—நான்
अव्ययम्—அழிவற்ற பலன்தரும்
इमं योगम—இந்தக் கர்மயோகத்தை
विवस्वते—சூர்யனின் பொருட்டு
प्रोक्तवान्—மந்வந்தரத் தொடக்கத்தில் உபதேசித்தேன்.
विवस्वान्—சூர்யன்
मनवे—தன் மகனான மநுவுக்கு
प्राह—உபதேசித்தான்
मनुः—மநுவும்
इक्ष्वाकवे—தன் மகன் இக்ஷ்வாகுவுக்கு
अब्रवीत्—உபதேசித்தான்.

**एवं परम्पराप्राप्तमिमं राजर्षयोऽविदुः ।**
**स कालेनेह महता योगो नष्टः परन्तप ॥ २ ॥**

ஏவம் பரம்பராப்ராப்தம் இமம் ராஜர்ஷயோऽவிது: |
ஸ காலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப || 2 ||

एवम्—இவ்வாறு
परम्पराप्राप्तम्—பரம்பரையாக வந்த
इमं—இந்தக் கர்மயோகத்தை
राजर्षयः—ராஜரிஷிகள்
अविदुः—அறிந்திருந்தனர்.
परन्तप—சத்ருவுக்குத்தாபம் செய்பவனே
स योगः—அப்படி வந்த யோகமே
महता कालेन—நெடுங்காலமாக
नष्टः—நஷ்டமாய்விட்டது.

**स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः ।**
**भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम् ॥ ३ ॥**

ஸ ஏவாயம் மயாதேऽத்ய யோக: ப்ரோக்த: புராதந: |
பக்தோऽஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேதத் உத்தமம் || 3 ||

सखा—தோழனும்
भक्तः च—பக்தனும்
मेऽसि इति—எனக்கு நீயாகிருயென்று
पुरातनः—பண்டைய
स एव अयं योगः—அதே யோகமிது
अद्य ते—இப்போது உனக்கு
मया प्रोक्तः—என்னுலேயே உபதேசிக்கப்பெற்றது.
एतत्—இடையில் நஷ்டமான இது
उत्तमम्—உபநிஷத்துக்களில் ஓதப்பெற்றதாய்
रहस्यं हि—எளிதில் பிறர் உபதேசிக்கவியலாத இரஹஸ்யமாயிற்றே.

अर्जुन उवाच—மந்வந்தரத்தின் தொடக்கத்தில் கண்ணன் பிறந்திருக்கவில்லையாகையால் இது எவ்வாறு கூடுமென்று அர்ஜுனன் கேட்கிருன்—

अव(प)रं भवतो जन्म परं जन्म विवस्वतः ।
कथमेतत् विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥ ४ ॥

அவ(ப)ரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத: |
கதமேதத் விஜாநீயாம் த்வம் ஆதௌ ப்ரோக்தவாந் இதி || 4 ||

भवतः जन्म—உமது பிறவி
अवरम्—பிற்காலத்தியது (நான் பிறந்த போது)
विवस्वतः—ஸூரியனுடைய
जन्म परम्—பிறவி வெகுநாள் முந்தியது இப்படியிருக்க
त्वम् आदौ—நீரே ஆதியிலே
प्रोक्तवान् इति—உபதேசித்தீர் என்ற
एतत्—இவ் விஷயத்தை
कथं विजानीयाम्—எப்படி உண்மையாக அறிவேன்.

இப்படியும் அர்ஜுனன் கேட்பானே. கண்ணன் ப்ரஹ்மாதிகளையும் படைத்து உபதேசிக்கும் பகவான் என்பது அர்ஜுனனுக்குத் தெரியாதா. ராஜஸூயாதி ஸந்தர்ப்பங்களிலே பீஷ்மாதிகள் பலவாறு அவன் அவதரிப்பதையும உபதேசிக்கக் கேட்டிருக்கிருனே என்னில்—அறிந்தவனே ஆயினும் ஒருவித தோஷத்திற்கும் இடமின்றி பூர்ணனந்தனை ஸர்வேச்வரனுக்குப் பிறவி உண்மையாமோ. உண்மையாகில் அங்குததோன்றும் துக்கானுபவமும் இசைவதாம். பாபம், மறதி எல்லாம் சேருமே என்றவாறு மூர்த்தி இசையாத சிலர் வாதிக்கின்றனர். அந்த அஜ்ஞானம் நீங்கும்படி அவதாரரஹஸ்யத்தை அறியவிருப்பி வினவினனென்க.

அதற்கிணங்க பகவான்மூலமே இரஹஸ்யத்தை வெளியிடுகிருன் பகவான்.

श्रीभगवान् उवाच—பகவான் சொன்னதாவது—

बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।
तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परन्तप ॥ ५ ॥

பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந |
தாந்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப || 5 ||

अप्रतापस्य अव्ययत्वमज्ञत्वं सर्वशक्तित्वम्। ... स्वेच्छामात्रनिदानता॥
धर्मग्लानौ समुत्पत्तिः साधुसंरक्षणार्थिता। इति जन्मरहस्यं यो वेत्ति नास्य पुनर्भवः॥



अर्जुन—அர்ஜுந
बहूनि जन्मानि—பல பிறவிகள்
मे व्यतीतानि—எனக்குப் போயின.
तव च—உனக்கும் போயின
अहं—நான்.
तानि सर्वाणि वेद—அப்பிறவிகளையெல்லாம் இப்போதும் அறிகிறேன்.
परन्तप—சத்ரு விரோதியே
त्वं न वेत्थ—நீ அறிகிறாயல்லை.

இதனால் பிறந்ததை மறந்துவிடும்படிக்கு உனக்குப் பாபம் இருப்பதுபோல் எனக்கில்லையென்றதாயிற்று. ஆயின் பாபபுண்யங்களில்லாமற் போனால் பிறவி ஏது என்ன, உண்மையை அறிவிக்கிறார்—

**अजोऽपि सन् अव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् ।**
**प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥ ६ ॥**

அஜோऽபி ஸந் அவ்யயாத்மா பூதாநாம் ஈச்வரோऽபி ஸந் ।
ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்ட்டாய ஸம்பவாமி ஆத்மமாயயா ॥ 6 ॥

अजः अपि—பிறவி யற்றவனேயாகிலும்
अव्ययात्मा—அழிவற்ற சக்தி ஜ்ஞாநாநந்தங்களையுடையனேயாகிலும்
भूतानाम्—எல்லா ப்ராணிகளுக்கும்
ईश्वरोऽपि सन्—ஈச்வரனாகவேயிருந்தும்
आत्ममायया—எனது இச்சையினாலே
स्वां प्रकृतिं—எனதான அப்ராக்ருத ரூபத்தை
अधिष्ठाय—ப்ரேரணம் செய்து
संभवामि—அவதரிக்கிறேன்.

எனக்கு ஜீவர்களுக்குப் போல் பிறவியில்லை. புண்யபாபங்களுக்கு இடமில்லையே, எனக்கு மேல் ஈச்வரனுமில்லையே, என்னுடைய சக்தி ஜ்ஞாநாநந்தாதிகள் எங்கும் என்றும் குன்றா, ஆயினும் நானே விரும்பி நானே தோன்றுகிறேன். தோற்றமாவது ப்ராக்ருதமான உடல் பெறுதலல்ல. அப்ராக்ருதமாய், இ ப்ராக்ருத பஞ்ச பூதங்களாலாகாததால் எனக்கென்றே உள்ளதான திவ்யமங்களவிக்ரஹத்துடன் சேர்க்கை. அதுவும் புதிதல்ல பரமபதத்தில் இயற்கையாயுள்ள திருமேனியினின்று கொணர்ந்த ஓர் அம்சமாகும்—இப்படி பிறப்பு உண்மையே. ஸ்வபாவம் குன்றாமலிருப்பதால், சக்தி குறைவாகவும், அறியாதவன் போலும் துக்கப்படுகின்றவன் போலும் பிறர் நினைப்பது தகாது. அது அவர்களுக்கு உள்ள ப்ராந்தியாம்.

(प्रकृति என்பதோடு स्वाम् என்றும் माया என்பதோடு आत्म என்றும் சேர்த்தது ஜீவனுக்குப் பிறவிக்கான ப்ரக்ருதியும் மாயையும், எனக்காக யான் கொண்ட ப்ரக்ருதியும் மாயையும் வேறு என்பதற்காக.) (6)

ஜீவன் பிறக்க காலவ்யவஸ்த்தையுண்டு, எனக்கு அஃதில்லையென்கிறார்—

प्रकृतिः = स्वभावं, स्वासाधारणधर्मः। नित्या हि सा स्वभावसंसिद्धिः ...
अजः, अव्ययात्मा, भूतानामीश्वरः ...

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदाऽऽत्मानं सृजाम्यहम् ॥ ७ ॥

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத |
அப்யுத்தாநம் அதர்மஸ்ய ததாऽऽத்மாநம் ஸ்ருஜாம்யஹம் || 7 ||

भारत—பரதவம்சத்தில் பிறந்தவனே
यदा यदा हि—எப்போதெல்லாம்
धर्मस्य—ஸநாதந தர்மத்திற்கு
ग्लानिः—வாட்டம்
भवति—நேருமோ,
अधर्मस्य—அதர்மத்திற்கு
अभ्युत्थानं भवति—எங்கும் எழுச்சியோ,
तदा अहम्—அப்போதெல்லாம் நான்
आत्मानं—என்னையே
सृजामि—இங்கு அப்ராக்ருத சரீரம் பெற ஸங்கல்பிக்கிறேன்.

தர்மச் சிதைவும் அதர்மத்தின் எழுச்சியும் நேரும்போதெல்லாம் நான் பிறப்பேன்.

பிறவியினால் வரும் பலன்களாவன—

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥ ८ ॥

பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் |
தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே || 8 ||

साधूनाम्—என்னிடம் பக்தர்களான நல்லோர்களை
परित्राणाय—கலந்து பரிமாறிக் காப்பதற்காகவும்
दुष्कृताम्—குற்றம் செய்பவரின்
विनाशाय च—அழிவுக்காகவும்
धर्मसंस्थापनार्थाय—சிறந்த தர்மத்தை நன்று நிலைநாட்டுவதற்காகவும்
युगे युगे—ஒவ்வொரு யுகத்திலும்
संभवामि—அவதரிக்கிறேன்.

ஸங்கல்பத்தினாலேயே ஸாதுக்களைக் காப்பதென்பது வேறு. என்னைக் கண்டு பேசி ஆராதித்துத் தழுவிப் பழகாதபோது தம்மையே தரித்துக்கொள்ளமாட்டாமல் துடிக்கும் பக்தர்களுக்கு ஸௌலப்ய ஸௌசீல்யங்களைக் காட்டியல்லது காத்தல் கூடாதாகையால் அவதரிக்கிறேன். துஷ்டர்களை ஸங்கல்பத்தினாலேயே அழிக்கலாமாகிலும் வந்த இடத்தில் அதையும் லீலையாகக் கொள்ளுகிறேன். அதைக் கண்டும் ஸாதுக்கள் ரக்ஷை பெறுவர். இதற்கெல்லாம் முக்கிய பலன் ஸநாதந தர்மத்தையும் ஸ்ரீவைஷ்ணவ தர்மத்தையும் உலகில் செழித்திருக்கச் செய்வதே. அதனாலே धर्मस्य ग्लानिः என்பதை மட்டும் முன்னே சொன்னது. (யுகே யுகே என்பதும் தசாவதாரம் அந்தந்த யுகத்தில் நடந்ததைக் கொண்டு; ஒரு யுகத்தில் ஒரே அவதாரமென்பதில்லை. அவதாரமில்லாத யுகம் கிடையாதென்னலாம்.)

இவ்வளவால் அவதாரங்களெல்லாம் உண்மை; அப்போதும் அவனது ஜ்ஞானசக்த்யாதிஸ்வபாவத்திற்குச் சிறிதும் குறைவில்லை; அப்ராக்ருதமான திருமேனியாகையால் ஜீவர்களின் ப்ராக்ருதவுருவைப் போலாகாது; இஷ்டமானபோது தோன்றுவதால் புண்யம் பாபம் போன்ற வேறு காரணம் வேண்டா. ஆசைப்பட்டு அவதரிப்பதால் துக்காதிகளுக்கு இடமில்லை. அறம் அழியும் காலமே அவதார காலம்; ஸாதுக்களைக் காப்பதே அவதாரத்தின் பலன் என்று ஆறு அம்சங்கள் ஸித்தித்தன. (ஸ்ரீமத்ரஹஸ்ய-த்ரய-ஸாரம், சரம ச்லோகாதிகாரம்.)

இவ்வாறு அர்ஜுனனது கேள்விக்கு உத்தரம் அருளிச்செய்துவிட்டு இவ் அவதாரரஹஸ்யத்தின் அறிவுக்குள்ள பலனையும் தாமே அருளிச் செய்கிறார்—

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः ।
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ ९ ॥

ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:
த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாம் ஏதி ஸோऽர்ஜுந || 9 ||

| | |
|---|---|
| यः-मे—எந்த உபாஸகன் எனது | सः—அவன் |
| जन्म कर्म च—பிறவியையும் செயலையும் | देहं त्यक्त्वा—இவ்வறிவு பிறந்த தேஹத்தை விட்ட பிறகு |
| एवं दिव्यम्—இவ்வாறு புண்யபாபாதீனமாகாமல் அப்ராக்ருதமாக | पुनर्जन्म न एति—மீண்டும் பிறவி கொள்வதில்லை |
| तत्त्वतः वेत्ति—உள்ளபடி அறிகின்றானோ, | माम् एति—என்னை அடைந்து விடுகிறான். |

अर्जुन—அர்ஜுனா

அவதார ரஹஸ்யஜ்ஞானம் உடையனுக்கு அதே பிறவியில் மோக்ஷமென்றதாயிற்று. ஆகில் பக்தியோ ப்ரபத்தியோ இல்லாமலே மோக்ஷம் பெறலாகுமோ என்னில், பெறலாகாது. பக்தியோகத்திலிழிந்தவன் ப்ராரப்தபலமாகப் பல ஜன்மங்கள் தீர்ந்த பிறகே மோக்ஷம் போவான். அவனே அவதார ரஹஸ்யசிந்தனை விடாமற் செய்து வருவானாகில் மேற்பிறவிகளுக்கான பாபங்களெல்லாம் கழிகின்றபடியால் இப்பிறவியிலேயே பக்தி பூர்ணமாகி மோக்ஷம் போவான். அவனுக்கு பகவான் விஷயமாகவே தடையின்றி அந்திம ப்ரத்யயம் வருமென்க.

இங்கு वेत्ति என்றது ஒருதரம் சாஸ்த்ரமூலமாய் வந்த அறிவுமட்டுமல்ல; புநர்ஜன்மம் பிறவாதபடி உபாயம் பெறும் நோக்குடன் விடாமற் செய்துவரும் சிந்தனையே. (9)

அவதாரரஹஸ்யம் இவ் வழியில் பலன் அளிக்குமென்பதையே முதலிப்பித்து விரித்துரைக்கிறார்—

वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः ।
बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः ॥ १० ॥

*வீதராகபயக்ரோதா மந்மயா மாமுபாச்ரிதா: |*
*பஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்பாவம் ஆகதா: || 10 ||*

बहवः—பலர்
ज्ञानतपसा-அவதார ரஹஸ்ய ஜ்ஞான மாம் தவத்தினுல்
पूताः-விரோதி பாபம் கழிந்தவராய்
माम् उपाश्रिताः—என்னை ஆச்ரயித்த வராய்
वीतरागभयक्रोधाः—நான் ஒருவனே அவர்களுக்கு ப்ரியனுை படியால் வேறு விஷயத்தில் பற்றும் அதன் வாயிலான அச்சம் உரோடமெல்லாம் இன்றி
मन्मयाः—எனது த்யானம் நிறையப் பெற்று
मद्भावम्—எனது தன்மையை (பரம ஸாம்யத்தை)
आगताः—பெற்றிருக்கிருர்கள்.

முன்னே அவதார ரஹஸ்ய சிந்தனை செய்கின்ருர்க்கு பக்தியிலோ ப்ர பத்தியிலோ நோக்கு ப்ரபலமாகும். பின்னே அவதாரரஹஸ்ய சிந்தனை செய்பவருக்கு தடை செய்யும் பாபங்கள் நீங்க, விரைவில் பலனும். இவ் இரண்டாம் அம்சத்தையும் அறிவிக்கவே ज्ञानतपसा पूता मद्भावमागताः என்று சேர்த்துச் சொன்னதுபோலும். (10)

ஸௌசீல்யஸௌலப்யாதிகளுடன் சாதுக்களைக் காப்பதற்காக நானே என் இஷ்டப்படி பல அவதாரங்கள் செய்கிறேன் என்று கூறி அவதார ரஹஸ்யம் அறிந்தவர்க்கு மோக்ஷம் விரைவில் வரும் வகையை யும் அறிவித்தார். இப்படி அவதரிக்கும் தான் பொதுவாகப் பிறரின் மனோரதங்களுக்கெல்லாம் இணங்கி நடந்து கொள்வதையும் அறிவிக் கிருர். இந்த ச்லோகத்தின் கருத்துப் பலவாம்—

ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् । See Nr. P. 27-7-53/54
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ ११ ॥

*யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம் |*
*மம வர்த்மாநுவர்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வச: || 11 ||*

ये यथा—எவர்கள் எவ்வாறு
मां प्रपद्यन्ते—விரும்பி என்னை அடை கின்றனரோ,
तान् अहम्—அவர்களை நான்
तथा एव—அவ்வாறே, விரும்பின படியே
भजामि—அடைகின்றேன். என்னைக் காணவைக்கிறேன்.
मनुष्याः—அதனுல் எந்த மனிதரும்
पार्थ—அர்ஜுனு
सर्वशः—தாங்கள் விரும்பியவாறெல் லாம்
मम वर्त्म—எனது ஸ்வபாவத்தை
अनुवर्तन्ते—அனுபவித்து நிலைகொள் கின்றனர்.

மோக்ஷ பலனைக் கீழே கூறியிருப்பதாலும் வேறு பலன் தேவதைகளிடம் பெறுவதை மேலே கூறுவதாலும் இடையிலுள்ள இந்த ச்லோகத்தில் பகவானிடமே வேறு பலன்களைப் பலர் பெறுவது பணிக்கப்படுகிறதென்று தோன்றும். இந்தக் கருத்தில் தான் சாங்கரபாஷ்யம் செல்லும். ஆயினும் அவ்வளவோடின்றிப் பொதுவாக உரைத்தல் தகும். மஹான்களுக்காக அவதரித்த என்னைப் பிறர் பலரும் தம்தம் இஷ்டமானபடி பயன்படுத்திக் கொள்ள விரும்பினால் அதற்கும் இணங்குகிறேன். இது எனது குணாதிசயம். பக்தர்கள் தூதுக்குத் தேரோட்டவும் ஆநிரை மேய்க்கவும் ஆடவும் பாடவும் விரும்பினால் அதையும் செய்கிறேன். துர்யோதனாதிகளும் போர் முதலானவற்றிற்கு ஏதேனும் விரும்பினால் அளிக்கிறேன். யோகிகளும் அறியலாகாத எனது மேனியும் மேன்மையும் மற்றும் சீரும் எல்லோரும் அனுபவிக்கலாகிறேன். விபவாவதாரம் செய்வதிலும் மனிதனாக வரவேணும் ஆமையாக வரவேண்டுமென்றவாறு எதெது விரும்புகின்றனரோ, அப்படி என் இஷ்டமேயன்றி அவர்கள் இஷ்டப்படியும் வருகிறேன். அதனாலேயே எல்லா இடங்களிலும் அர்ச்சாரூபம் கொண்டு மன்னியிருந்து மனிதர்களை உய்விக்கிறேன். அதனால் தான் எனது ஸ்வரூபஸ்வபாவங்களை எளிதில் அனுபவிக்கின்றனர். (சதபதப்ராஹ்மணத்தில் (10 5 2) तं यथायथोपासते तदेव भवति என்ற வாக்யம் உளது. மனிதர் உபாஸிக்கிறபடி பகவான் ஆகிறானென்று அதற்குப் பொருளாம். அதற்கு முன்னே ப்ரஜைகள் எப்படி ப்ரார்த்திக்கின்றனரோ அப்படி தேவமனுஷ்ய பக்ஷிம்ருகஸ்த்தாவராதி ரூபம் கொள்ளுகிறானென்ற விரிவு அங்கே உள்ளதையும் இந்த ச்லோகத்திற் கொள்க. அர்ச்சாமூர்த்தியில் நம் இஷ்டப்படி பல கோலங்களைக் கொண்டு நமக்குக் காட்சியளிப்பதும் இங்குச் சேரும். 3. 23ச்லோகத்திலும் இங்கும் உத்தரார்த்தம் ஒன்றே. அங்குத் தன் ஆசாரத்தைப் பின்பற்றி ப்ரஜைகள் நடப்பதைச் சொன்னார். அது இங்குச் சேராது. இனி, அவர்கள் இஷ்டப்படி எல்லாம் செய்வதால் என் கருத்திலுள்ள மோக்ஷவழிக்கு எல்லோரும் திரும்பிவிடுகின்றனர் என்ற பொருள் கூறினால் அது அனுபவத்தில் பெரும்பாலும் இல்லாததாகும். ஆகையால் அவரவர் இஷ்டப்படி நடத்திக்கொடுப்பதால் எனக்கு ஜ்ஞானசக்திசீலாதிகளை எளிதில் எல்லோரும் காண்கிறார்களென்ற பொருளே பாங்கானது.) (11)

இவ்வளவு ஸுலபனாய் நான் இருக்க, என்னைக் கண்டவர்கள் எளிதில் என்னை மனத்தில் நிறுத்தி எனக்கு மிகவும் இஷ்டமான மோக்ஷம் பெறக் கர்மயோகத்தில் இழியலாமே. அதுதான் இல்லை. அதனால்தான் स कालेनेह महता योगो नष्टः என்றேன். பிற பலனுக்காகப் பிறரை நாடுவதே நாட்டின் இயற்கையாய் விட்டதென்கிறார்—

**काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः ।** See Nr. P. 27-10-17/18
**क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥ १२ ॥**

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா: |
க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்திர் பவதி கர்மஜா || 12 ||

कर्मणां सिद्धिं-கர்மாக்களின் பலனையே
काङ्क्षन्तः—விரும்புகின்றாராய்
इह देवताः—ப்ரக்ருதி மண்டலத்திலுள்ள தேவதைகளை
यजन्ते—பூஜிக்கின்றனர்.
कर्मजा—கர்ம மூலமான
मानुषे लोके सिद्धिः—இவ்வுலகிற் பலனானது
क्षिप्रं हि भवति—விரைவில் உண்டாகின்றதே.

கர்மாக்களைப் பலனை விட்டு எனது ஆராதனமாகச் செய்யத் தொடங்கியனரே கர்மயோகம் செய்யவேண்டும். கர்மாக்களிலிழிவது பலன்களைப் பெறவே பெரும்பாலும் உளது. அதனால் அவர்கள் அப் பலன் அளிக்கும் வேறு தேவதைகளை ஆராதிக்க வேண்டியதாகிறது. அந்தந்த தேவதைக்கான கர்மாவைப் பலனுக்காக அனுஷ்டித்தால் அவர்களை ஆராதிக்கவேண்டுமே. (வேறு தேவதையைப் பூசித்தலைப் பழிப்பதிலே இதற்கு நோக்கில்லை. வேறு பலனையே விரும்பி கர்மாவைக் கெடுக்கிறார்களென்பதிலேயே.) கர்மயோகம் செய்வதற்கு மட்டும் உண்மையில் பலன் இல்லையா? உண்டு. மோக்ஷமென்ற பெரும்பேறே உள்ளது. ஆயினும் எத்தனையோ ஜன்மங்களுக்குப் பின் அன்றோ அது வருவதாம். உடனே வரும் பலனைவிட்டு அதற்கு யார் முயன்று நிற்பார். 'நாளைய மயிலைவிட இன்றைய காக்கையே பெரிது' என்பார் இவர். (मानुषे लोके என்பதற்கு பூவுலகை மட்டும் மொழிவதில் நோக்கில்லை. தேவதைகளுக்குக் கர்மாக்களைச் செய்கின்றவர் மனுஷ்யராகையாலே मानुषे என்றார். மோக்ஷம் நீங்கலாகமற்ற பலனெல்லாம் விரைவில் வருமென்பதே கருத்திலுள்ளது.)

இப்படியானாலும் பலத்தில் நோக்கின்றி மோக்ஷத்திற்கான கர்மயோகத்திலிழிய வழி யுண்டென்கிறார். இரண்டு ச்லோகங்களால் இப்படி பலத்தில் நோக்குள்ளவராகவே ஜீவர்களைப் படைத்தது ஏன் என்பதற்கும உத்தரம் அருள்கிறார்—

चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः ।
तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥ १३ ॥

சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்மவிபாகச: |
தஸ்ய கர்த்தாரம் அபி மாம் வித்தி அகர்த்தாரம் அவ்யயம் || 13 ||

चातुर्वर्ण्यं.. நான்கு வர்ணங்களும்
गुणकर्मविभागशः--அததற்கான ஸத்துவாதி குணங்கள் செயல்கள் இரண்டிலும் வேறுபாட்டுடன்
मया सृष्टम्.. என்னால் படைக்கப்பட்டன.
तस्य कर्तारम् अपि-இப்படி அவற்றைப் படைப்பவனானாலும்
अव्ययं मां...குறைவற்ற என்னை
अकर्तारम्...படைக்காதவனாகவே
विद्धि...அறிவாயாக.

ஒவ்வொரு வர்ணத்திற்கும் தேஹத்தில் ஸத்வரஜஸ்தமோகுணங்களின் நிலை ஒவ்வொருவிதமாக இருக்கும். அந்தந்த வர்ணத்திற்குச் செயலும் வெவ்வேறு. இப்படி நான் பிரித்துப் படைக்கிறேன். படைப்புக்கு நான் கர்த்தாவானாலும் அந்த குணகர்மப்பிரிவு என் இஷ்டப்படி நான் செய்ததன்று. ஆகையால் என்னைக் கர்த்தாவல்லனென்று நினை.

கர்த்தாவாயிருக்க, கர்த்தாவல்லனென நினைப்பது எவ்வாறு? எதற்கு? என அதன் கருத்தை விளக்குகிறார்—

**न मां कर्माणि लिम्पन्ति न मे कर्मफले स्पृहा ।** See Nr. P. 21-10-20/22
**इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥ १४ ॥**

*ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா ।*
*இதி மாம் யோऽபிஜாநாதி கர்மபிர் ந ஸ பத்யதே ॥ 14 ॥*

कर्माणि—நான் செய்யும் ஸ்ருஷ்டி முதலான செயல்கள் யாவை இவற்றில் ஏற்றத் தாழ்வுக்கான செயல்கள்
न मां लिम्पन्ति—எனக்கு ஸம்பந்தப்பட்டவையல்ல.
कर्मफले—வைஷம்யத்தைச் செய்வதால் நேறும் பலனில்
न मे स्पृहा—எனக்கு ஆசையில்லை.
इति यः—என்று யாவன் ஒருவன்
माम् अभिजानाति—என்னை அறிகின்றானோ,
सः—அவன்
कर्मभिः—பூர்வகர்மாக்களால்
न बध्यते—கட்டப்படுகிறானல்லன்.

படைப்பது நானானாலும் படைப்பில் உள்ள பல ஏற்றத் தாழ்வுக்கான செயல்களில் எனக்கு ஸம்பந்தமில்லை. அதற்கு அந்த ஜீவர்களின் கர்மாவே காரணம். ஆகையால் நான் கர்த்தன் அல்லன் என்கிறேன். மேலும் எனக்கு ஒரு பலனை விரும்பி அதற்காக அவர்களை விதம் விதமாகப் படைக்கிறேனென்பதில்லை. அதனாலும் நான் கர்த்தனல்லனென்கிறேன். அத்தகைய கர்மாக்களுக்கும் அவற்றாலான பலன்களுக்கும் ஸம்பந்தப்பட்டவர்கள் ஜீவர்களே. இவ்வுண்மையறிந்தால் கர்மயோகம் செய்யத் தடையான பாபம் போம். மேலே அவதார ரஹஸ்யம் அறிந்தவனுக்கு மறு பிறவியின்றி மோக்ஷமென்றார். அவனுடைய பிறவியும் செயலும் திவ்யமாயிருக்க அவற்றை வேறாக நினைப்பானுக்கு ஸம்ஸார பந்தம் போல் அவன் ஜீவர்களின் நன்மைக்காகச் செய்யும் ஸ்ருஷ்டிஸ்த்திதிஸம்ஹாரங்கள் என்ற பெரிய வியாபாரங்களையும் அவன் தன் பலனுக்காகத் தோன்றியவாறு செய்கின்றவன் என்று நினைப்பது அதற்கு மேல் ஸம்ஸார பந்தத்திற்குத் தானே காரணமாகும். எனவே தவறான நினைவைத் தவிர்ப்பவருக்குக் கர்மயோகாதிகளில் ப்ரவர்த்திக்க வழியுண்டாம். உண்மை உணரவேண்டும். (14)

இப்படி கர்மயோக விரோதி பாபம் கழிய வழியைக்கூறி முன்னோர்களின் அனுஷ்டானத்தையும் ஸூதலிப்பித்துக்கொண்டு கர்மயோகத்தில் ஏவுகிறார்—

एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः । See Nr. P. 27-10-22/24

कुरु कर्मैव तस्मात् त्वं पूर्वैः पूर्वतरं कृतम् ॥ १५ ॥

ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி: |
குரு கர்மைவ தஸ்மாத் த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம் || 15 ||

एवं ज्ञात्वा—கீழ்க்கூறியவாறு அறிந்தே (பாபம் தீரப்பெற்று)
मुमुक्षुभिः—மோக்ஷத்தில் நோக்கு உள்ள
पूर्वैः अपि—முன்னோர்களாலும்
कर्म कृतम्—கர்மயோகமே செய்யப் பெற்றது.
तस्मात्—ஆகையினால்
पूर्वैः कृतम्—முன்னோர்களால் அனுஷ்டிக்கப்பெற்றதும்
पूर्वतरम्—மிகப்பண்டைக் காலத்திலுமிருந்ததுமான
कर्म एव—கர்மயோகத்தையே
त्वं कुरु—நீ செய்.

கர்மயோகமே பூர்வதரமென்பதை அறிவிப்பதற்காகவே 'இமம் விவஸ்வதே யோகம்' என்று தொடங்கியது. முன் அத்யாயத்திலும், ''லோகேऽஸ்மிந் த்விவிதா நிஷ்ட்டா புரா ப்ரோக்தா'' என்றது. (15)

அகர்மாவுடன் சேர்ந்துள்ளது கர்மானுஷ்டானம்; ஆகையால் அதை எளிதில் அறியமாட்டிலரென்று பூர்வபீடிகை. பிறகு கர்மயோகத்தின் ஸ்வரூபம் உட்பிறிவெல்லாம் உபதேசிப்பர்—

किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः । See Nr. P. 27-11-50/51

तत् ते कर्म प्रवक्ष्यामि यत् ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १६ ॥

கிம் கர்ம கிமகர்மேதி கவயோऽப்யத்ர மோஹிதா: |
தத் தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத் ||16

कर्म किम्—முமுக்ஷு அனுஷ்டிக்கும் கர்ம என்ன
अकर्म किम्—ஞானம் எது
इति अत्र—என்ற விஷயத்திலே
कवयः अपि—வித்வான்களும்
मोहिताः—உள்ளபடி அறியார்.
यत् ज्ञात्वा—எதையறிந்து அனுஷ்டித்து
अशुभात्—ஸம்ஸாரபந்தத்தினின்று
मोक्ष्यसे—நீ விடப்படுவாயோ
तत् कर्म—அந்த—அகர்மாவுடன் சேர்ந்த கர்மாவை
ते प्रवक्ष्यामि—உனக்கு அறிவிப்பேன்.

अकर्म கர்மாவைக்காட்டிலும் வேறு. அதாவது ஞானம். அவித்யை என்ற சொல்லால் ஞானத்தைவிட வேறான கர்மாவைக கூறுவதுபோல் அகர்ம என்ற சொலலால் காமாவைவிட வேறுன ஞானத்தைக கூறுவதாம். अकर्म என்பதற்கு செய்யாமை என்ற பொருள் கூறிஞல் மேலே कर्मण्यकर्म என்றவிடததில செய்யும் கர்மாவில் செய்யாமையை அடக்குவது எவ்வாறென்று ஆராயவேண்டும். नैव किंचित् करोति सः என்றபடி பலனை விட்டால் செய்யாதது போலவேயாமென்னில், அது ஞானத்திஞல் தானே யாக வேண்டும். மேலே ஞானத்தைப் பற்றி விரித்துரைப்பர். ஆகையால் अकर्म என்பது ஞானமே. (16)

கர்மாவின் உட்பிரிவெல்லாம் அறிவசோடு அகர்மாவை எதிலும் விடாமற் கொள்ளவேண்டியிருப்பதால் கர்மாவைத் தெளிவது எளிதி லாகா தென்கிறுர்—

**कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यश्च विकर्मणः ।** See N.P. 27-11-51/52

**अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः ॥ १७ ॥**

*கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யஞ்ச விகர்மண:|*
*அகர்மணச்ச போத்தவ்யம் கஹநா கர்மணோ கதி: || 17 ||*

कर्मणः अपि...கர்மாவைப்பற்றியும்
बोद्धव्यं हि...அறியவேண்டுமே.
विकर्मणः च...நித்யம் நைமித்திகம் காம்யம் என்று அது விதம்விதமானது பற்றியும்
बोद्धव्यम्...அறிய வேண்டுமே.
अकर्मणः च..அதிலடங்கிய ஞானத்தைப்பற்றியும்
बोद्धव्यं हि...அறியவேண்டுமே. ஆகையால்
कर्मणः गतिः..கர்மாவினுள் வழி அறிவுக்குப்
गहना...புகவாகாதபடியிருக்கும்.

கர்மாவையறிவிக்க அதனுள் அடங்கிய, கர்ம, அகர்ம, விகர்ம என்ற மூன்று அம்சங்களைச் சொல்லுமிடத்தில், விகர்ம என்று நிஷித்தகர்மாவை, அதாவது–செய்யக்கூடாத கள்குடி முதலானவற்றைச் சொன்னால் சேராது. விகர்ம என்பது கர்மாவின் உட்பிரிவேயாம். ஆனபடியால்தான் மேலே கர்ம என அகர்ம இரண்டைமட்டும் சொல்லுகிறுர். அங்கே கர்ம என்ற சொல்லால் எல்லாவிதமான கர்மாவையும் கொள்ளவேண்டுமென்பதற்காக இங்கே விகர்ம என்ற விஷயமும் குறிக்கப்பெற்றது. எத்தனை உட்பிரிவு இருந்தாலும் व्यवसायात्मिका बुद्धिरेका என்று முன் கூறியபடி அகர்ம என்ற வியவஸாயத்தின் சேர்க்கையால் மோக்ஷமென்ற ஒரே பலனுக்காக எல்லாமாகிறபடியால் விதம்விதமானவற்றையும் ஒன்றாக நினைக்கவேண்டும். அதில் கர்மயோகம் செய்யும்போது அங்கமான கர்மா எது அங்கியான கர்மயோகம் எது என்ற பிரிவுமட்டும் அறியவேணும். ஜீவாத்ம ஸாக்ஷாத்காரத்திற்காகக் கர்மயோகம் செய்வதால் அதையும் ஒருவாறு காம்யமென்னலாம். அதற்கு நித்யநைமித்திகங்கள் அங்கமாகும். இது மேலே அறியப்படுமாகையாலும் விகர்மாவைச் சொன்னதாம். (17)

கர்மாவானது விகர்மாவாம்–பலவிதகர்மாவாமென்பதில் முரண்பாடு இல்லையாகையால் அது மேலே எளிதில் அறியப்படும். கர்மாவும் அகர்மாவும் சேர்வதையே முக்கியமாக விளக்குகிறுர்—

**कर्मण्यकर्म यः पश्येत् अकर्मणि च कर्म यः ।** See N.P. 27-11-52/56

**स बुद्धिमान् मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥ १८ ॥**

*கர்மண்யகர்ம ய: பச்யேத் அகர்மணி ச கர்ம ய: |*
*ஸ புத்திமாந் மநுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்நகர்மக்ருத் || 18 ||*

कर्मणि—அனுஷ்டிக்கும்போது கர்மாவில்
अकर्म—ஆத்மஞானத்தை
यः पश्येत्—எவன் காண்பானோ
अकर्मणि च—அந்த ஞானத்திலேயும்
कर्म—கர்மாவை
यः पश्येत्—எவன் காண்பானோ
सः—அவனே
मनुष्येषु—மனிதர்களுக்குள்
बुद्धिमान्—சாஸ்த்ரத்தின் பொருளை நன்றாகத் தெரிந்தவன்.
स युक्तः—அவன் மோக்ஷம் பெற இழிந்தவனாவான்.
सः कृत्स्नकर्मकृत्—அவன் சாஸ்த்ரத்தின் பொருளை உள்ளபடி செய்பவனாவான்.

ஜீவாத்ம ஸ்வரூபத்தை நன்றாகத் தெரிந்து, ப்ரக்ருதியின் குணமே கர்த்தா ஈச்வரனே கர்த்தா என்ற அறிவுடன் கர்மானுஷ்டானம் செய்தால் அதில் கர்மாவானது அறிவுடன் சேர்ந்து தானே யிருக்கும். அவ்வறிவும் கர்மாவுக்கும் தனக்கும் உள்ள ஸம்பந்தத்தைப் பற்றியதாகையால் கர்மாவை உட்கொண்டே யிருக்கும். கர்மாவை விட்டு ஞானம் மட்டும் உடையனும் ஞானத்தை விட்டு கர்மாவை யனுஷ்டிப்பவனும் பூர்ண சாஸ்த்ர ஞானமும் அனுஷ்டானமுமில்லாதவனாகையால் மோக்ஷத்திற்குப் பாத்திரமாகான் என்றபடி. (18)

கர்மாவுக்கு ஞானத்தினாலாம் உதவியைக் காட்டி ஞானாகாரமென்பதை விளக்குகிறார்—

यस्य सर्वे समारम्भाः कामसंकल्पवर्जिताः । See Nr. P 27-12-33/34
ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पण्डितं बुधाः ॥ १९ ॥

யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காமஸங்கல்பவர்ஜிதா: |
ஞாநாக்நிதக்த்தகர்மாணம் தம் ஆஹு: பண்டிதம் புதா: || 19 ||

यस्य—எந்த பண்டிதனுடைய
समारम्भाः सर्वे—செயல்களெல்லாம்
कामसंकल्पवर्जिताः—பலனில் நசையும் தேஹாத்மாபிமானமும் கலக்காமல் இருக்கின்றனவோ.
तं पण्डितम्—அந்த பண்டிதனை
बुधाः—அறிஞர்கள்
ज्ञान-अग्नि-दग्धकर्माणम्—ஞானமென்ற தீயினால் பாபம் எரித்தொழித்தவனாக
आहुः—சொல்லுகின்றனர்.

ஆத்மஞானமுள்ளவராய் பண்டிதராகலாம். கார்யம் செய்யாதபோது பலனில் நசையில்லை போலவுமிருக்கும். கார்யங்களைத் தொடங்கின பிறகு அவற்றால் வரும் பலன்களை விட மனம் வாராமல் ஆசைப்படுவர். அப்போதும் ஆசையில்லாமலிருக்கவேண்டும். தானே இடம் பெறும் ஆசையை விடவேண்டும். அவ்வித செயல்கள் இப்படி ஞானத்தினால் சிறப்புறும். அப்போதே ஞானம் தீயாகும். அந்த ஞானத் தீயினால் மனத்தின் ரஜஸ்ஸுக்கும் தமஸ்ஸுக்கும் மூலமான பாபங்கள் எரிக்கப்படும். அநாதி கர்மாக்களெல்லாம் எரிக்கப்படுவது இதனால் மட்டுமல்ல பக்தியென்ற பெருந்தீயினால். இப்படி கர்மாக்கள் ஜ்ஞாநாகாரமாகும்.

ஸங்கல்பமாவது. ஒன்றை மற்றொன்றாக புத்தி செய்யும் கல்பனை. அது தேஹாத்மாபிமானம். இங்கு அனுஷ்டான ஸங்கல்பத்தைச் சொல்ல வேண்டா. பலனில் காமமுள்ளவனே பலனுக்கு ஸங்கல்ப்பம் செய்வானாகையால் காமமில்லை யென்றதினாலேயே ஸங்கல்ப்பமில்லை யென்றதாம்; தனியே கூற வேண்டா. மஹாபண்டிதனுக்கும் ஸமயத்தில் தேஹாத்மாபிமானம் உண்டானால் நகை வரவாகுமென்று அவ் அபிமானத்தையும் விலக்க ஸங்கல்ப்ப என்று சொன்னதென்க. (19)

கர்மாக்களை மேன்மேல் செய்வதாகில் ஞானத்தின் தொடர்ச்சி இருக்குமோ என்னில் அதற்கு உத்தரம்—

त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः ।
कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किञ्चित् करोति सः ॥ २० ॥

த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராச்ரய: |
கர்மண்யபிப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித் கரோதி ஸ: || 20 ||

कर्म फल आसंगं—கர்மாவின் பலனில் பற்றை முழுமையும்
त्यक्त्वा—விட்டு
नित्य तृप्तः—நித்யமான ஆத்மாவிலே த்ருப்தியுற்று
निराश्रय.—உதவியான வஸ்துக்களிலும் தனக்கு ஆதாரமென்று அதிகப்பற்றற்ற
सः—அந்த அதிகாரி
कर्मणि अभिप्रवृत्तः अपि—மேன்மேல் கர்மாவிலிழிந்தாலும்
किञ्चित्—ஒன்றையும்
न एव करोति—செய்யாதவனே.

பற்றெல்லாம்விட்டுக் கர்மாக்களைச் செய்யும்போது மனம் ஆத்மாவிலே த்ருப்தி பெற்றிருப்பதால் ஞானம் குன்றாது வளருமென்றதாம்.

சொன்ன ஞானத்தை விரித்துரைக்கிறார் நாலு ச்லோகங்களால்—

निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः ।
शारीरं केवलं कर्म कुर्वन् नाप्नोति किल्बिषम् ॥ २१ ॥

நிராசிர் யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ: |
சாரீரம் கேவலம் கர்ம குர்வந் நாப்நோதி கில்பிஷம் || 21 ||

निराशीः—பலத்தில் நசையற்று
यतचित्तात्मा—சித்தம் மனம் புத்தி அஹங்காரமென்ற மனோவகைகளை அடக்கி
त्यक्तसर्वपरिग्रहः—தனக்குள்ள வஸ்துக்களில் தனது என்ற புத்தியை விட்டு
केवलं—ஞானயோகமின்றி
शारीरं कर्म—வழக்கமான வெளிச் செயலையே வாழ்நாள் முழுதும்
कुर्वन्—செய்கின்றவன்
किल्बिषं—பாபமூலமான ஸம்ஸாரத்தை
नाप्नोति—பெறான.

பூர்வார்த்தத்தில் சொன்ன விசேஷங்கள் இல்லாதவனுக்கும், கர்மாவை விட்டு ஞானயோகம் செய்கின்றவனுக்குமே பாபமான ஸம்ஸாரமென்றபடி. (21)

यदृच्छालाभसंतुष्टो द्वन्द्वातीतो विमत्सरः ।
समः सिद्धावसिद्धौ च कृत्वाऽपि न निबध्यते ॥ २२ ॥

See Nr. P. 27-12-37/39

யத்ருச்சாலாபஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர: |
ஸமஸ்ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாऽபி ந நிபத்யதே || 22 ||

यदृच्छालाभसंतुष्टः—ப்ரயத்னமின்றி கிடைத்ததில் த்ருப்தியுற்று
द्वन्द्व अतीतः—கர்மானுஷ்டானத்தில் இடையில் நேரும் ஸுக துக்கங்களைப்பொறுத்து
विमत्सरः—விரோதம் செய்பவரிடம் பகையற்று
सिद्धौ—பல ப்ராப்தியிலும்
असिद्धौ च—பலனின் இழவிலும்
समः—சமநிலையுடையனாய்
कृत्वा अपि—வெளிச் செயல்களை எவ்வளவு செய்தாலும்
न निबध्यते-ஸம்ஸாரபந்தம் பெறான்.

தன் ப்ரயத்னமின்றி சிறிது கிடைத்தால் அதில் த்ருப்தியுற்று அதிகம் பெற ப்ரயத்னத்தை விடவேண்டும். கர்மயோகத்தைச்செய்யும் போது இடையில் வரும் கஷ்டத்திற்காக விடலாகாது. விரோதம் செய்பவரிடம் விரோதம் கொள்ளாமல் பலன் இழந்தோமே என்ற புத்தியையும் விட்டு, செய்வதொன்றே நம் கடமையென்றிருந்தால் பந்தத்திற்கு இடமேயில்லை. (22)

புத்திபூர்வமாகப் பற்றை விட்டு அனுஷ்டானத்தை வழக்கமாகச் செய்பவனுக்கு தானே பற்றற்ற நிலைமை ப்ரயத்னமின்றியே உண்டாமென்பதைக் குறிக்கிறார்—

गतसंगस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः ।
यज्ञायाऽऽचरतः कर्म समग्रं प्रविलीयते ॥ २३ ॥

See Nr. P. 27-12-39/40

கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞானாவஸ்த்திதசேதஸ: |
யஜ்ஞாயாऽऽசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே || 23 ||

ज्ञानावस्थितचेतसः—ஆத்ம ஜ்ஞானத்திலே மனம் சென்றிருப்பவனாய்
गतसंगस्य—வேறொன்றில் பற்று சுயமே யில்லாமல்
मुक्तस्य—பரிவாரங்களால் விடப்பட்டுமாகி (பரிக்ரஹங்களால்)
यज्ञाय—பகவானின் ஆராதனத்திற்கே
आचरतः—எல்லாம் செய்கின்றவனுக்கு
समग्रं कर्म-ப்ரதிபந்தக பாபமெல்லாம்
प्रविलीयते—ஒழிந்து விடும்.

ஜீவாத்ம ஞானத்திலே மனம் சென்றிருப்பதால் கர்மாவானது ஜ்ஞானாத்மகமாகிறதென்றார். இனி எதையும் ப்ரஹ்மாத்மகமாகவே நினைக்க வேண்டுவதாலும் ஜ்ஞானாத்மகமென்கிறார் மேலே—

ब्रह्मार्पणं ब्रह्महविः ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥ २४ ॥

ப்ரஹ்மார்பணம் ப்ரஹ்மஹவி: ப்ரஹ்மாக்நௌ ப்ரஹ்மணா ஹுதம் |
ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதிநா || 24 ||

ब्रह्म अर्पणं—ப்ரஹ்மமாம் ஹோமக் கருவியை உடைய
ब्रह्म हविः-ப்ரஹ்மமாம் ஹோமத்ரவ்யமானது
ब्रह्म अग्नौ—ப்ரஹ்மமாகின்ற அக்னியிலே
ब्रह्मणा—ப்ரஹ்மமாகின்ற கர்த்தாவினால்
हुतम्—ஹோமம் செய்யப்பட்டது.
[इति]ब्रह्मकर्मसमाधिना—என்று ப்ரஹ்மமாம் கர்மவிஷயமான அநுஸந்தானமுடைய
तेन—அந்தக் கர்மயோகியால்
गन्तव्यम्—அடைய வேண்டிய ஆத்மஸ்வரூபமும்
ब्रह्म एव—ப்ரஹ்மமே.

ஸாத்விகத்யாகத்தில் स्वकीयेनाऽऽत्मना स्वकीयैश्च देहेन्द्रियान्तःकरणैः स्वकीयैश्चोपकरणैः என்று அநுஸந்திப்பதும் இதே. கர்மாவில் ஸம்பந்தப்பட்டதொன்றொன்றையும் ப்ரஹ்மாத்மகமாக நினைக்க வேண்டும். கர்மாவில் எதெது எந்தெந்த விதமாக உபகாரகமாகின்றதோ, அததற்கு அந்தந்த உபகாரம் செய்யும் சக்தி ப்ரஹ்மத்திற்கே அதீனமென்றதாயிற்று. அர்பணமாவன—ஹவிஸ்ஸை எந்த பாத்ரத்தில் வைத்துக் கையில் எடுத்து ஹோமம் செய்கின்றனரோ அந்த ஜுஹூ தர்வி முதலானவை. ஹவிஸ்ஸாவது ஹோமம் செய்யும் த்ரவ்யம். அக்நி ஹோமத்திற்கு ஆதாரம், மற்றும் அங்கு உபயோகப்படும் எல்லாவற்றையும் கொள்க. சுருக்கமாக ப்ரஹ்மகர்மஸமாதி என்னலாம். கர்மாவில் ஸம்பந்தப்பட்டதொன்றொன்றும் ப்ரஹ்மாத்மகமென்பதே கர்மம் ப்ரஹ்மாத்மகமென்பதன் பொருளாகும். இவற்றைப் போலே இதன் பலமாக நினைக்கப்பட்ட ஆத்மஸ்வரூபமும் ப்ரஹ்மாத்மகமாகும். இவற்றைவிட ப்ரஹ்மம் வேறேயாயினும் அவனுக்கு எவ்விதத்திலும் அவை அதீனமாகையால் ப்ரஹ்மாத்கமாகிறது. அதுபோல் ஜீவாத்மாவான ப்ராபயமும் ப்ரஹ்மத்திற்கு அதீனமாய் ப்ரஹ்மாத்மகமாகும். இப்படி கர்மயோகத்தில் ஜீவாத்ம ஜ்ஞானமும் ப்ரஹ்ம ஜ்ஞானமும் அடங்கியிருக்கும். இதுவே ப்ரஹ்ம ஜ்ஞானமாகில் நேராக இதே மோக்ஷத்திற்கு ஸாதனமாகலாமே யென்னில்—ப்ரதானமான தர்சனஸமானாகார பக்திரூபோபாஸனமன்றோ இது. அதே மோக்ஷஸாதனம். (24)

இப்படி ஜ்ஞானத்துடன் சேர்ந்த கர்மாவே கர்மயோகமென்று கர்ம ஸ்வரூபம் ஒருவாறு கூறப்பெற்றது. அக் கர்மாவிலுள்ள உட்பிரிவுகளை உதாஹரிக்கிறார் ஐந்து ச்லோகங்களால்—

दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।
ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥ २५ ॥

தைவமேவாபரே யஜ்ஞம் யோகிந: பர்யுபாஸதே |
ப்ரஹ்மாக்நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேநைவோபஜுஹ்வதி || 25 ||

| | |
|---|---|
| अपरे योगिनः—சில கர்மயோகிகள் | अपरे योगिनः—மற்றும் சிலர் |
| दैवं यज्ञम् एव—தேவார்ச்சனை யென்ற யஜ்ஞத்தையே | यज्ञेन—ஜுஹூ முதலான கருவியால் |
| | यज्ञं—ஹோம த்ரவ்யத்தை |
| पर्युपासते—செவ்வனே செய்து வருகின்றனர். | ब्रह्म अग्नौ—ப்ரஹ்மமாகிற அக்னியில் |
| | जुह्वति—ஹோமம் செய்கின்றனர். |

நேராக பகவானுக்கு ஆராதனமாயிருப்பதால் பஞ்சராத்ராதிகளிலே ப்ரஸித்தமான ஆராதனத்தையே முதல்கர்மயோகமாகக் கூறினார். வேதத்தில் ஓதிய யாகஹோமங்களை மேலே கூறினார்—

श्रोत्रादीनीन्द्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति ।
शब्दादीन् विषयान् अन्ये इन्द्रियाग्निषु जुह्वति ॥ २६ ॥

ச்ரோத்ராதீநிஇந்த்ரியாண்யந்யே ஸம்யமாக்நிஷு ஜுஹ்வதி |
சப்தாதீந் விஷயாந் அந்யே இந்த்ரியாக்நிஷு ஜுஹ்வதி || 26 ||

| | |
|---|---|
| अन्ये योगिनः—வேறு கர்ம யோகிகள் | अन्ये—வேறு சிலர் |
| संयम अग्निषु—அததன் அடக்குகை என்ற அக்னிகளில் | इन्द्रिय अग्निषु—இந்திரியங்களாகிற அக்னிகளிலே |
| श्रोत्रादीनि इन्द्रियाणि—காது முதலான இந்திரியங்களை | शब्दादीन्—சப்தம் முதலான |
| | विषयान्—விஷயங்களை |
| जुह्वति—ஹோமம் செய்கின்றனர். | जुह्वति—ஹோமம் செய்கின்றனர். |

இந்திரியங்களை விஷயங்களுடன் சேராதபடி காப்பது சிலரின் கர்மயோகம். இது பூர்வார்த்தத்தால் பணிக்கப் பெற்றது. விஷயங்களுக்கு இந்த்ரியத்தோடு ஸம்பந்தம் ஏற்பட்டாலும் இந்திரியம் பட்ட வஸ்துக்கள் நெருப்பில் பட்ட வஸ்துக்கள் போல் இந்திரியத்தை வசப்படுத்தவாகாமல் கெடுகின்றன. தோஷங்களுடனே காண்பதால் உபேக்ஷை பிறக்க, விஷயங்களே நெருப்பைக் கண்டால் போலே விலகுகின்றன என்றது மேலே.

இந்த்ரியங்களை அடக்குகையும் விஷயங்களுக்கு வலிவை ஒடுக்குகையும் கூறப்பெற்றன, இந்திரியங்கள் கிளராதபடியும் அதற்குக் காரணமான ப்ராணவாயுவியாபாரம் எழாதபடியும் மனத்தையடக்குகை மேலே—

सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे ।
आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते ॥ २७ ॥

ஸர்வாணீந்த்ரிய கர்மாணி ப்ராணகர்மாணி சாபரே |
ஆத்மஸம்யமயோகாக்நௌ ஜுஹ்வதி ஜ்ஞாநதீபிதே || 27 ||

अपरे योगिनः—சில கர்மயோகிகள்
सर्वाणि इन्द्रियकर्माणि—எல்லா இந்திரியங்களின் செயல்களையும்
प्राणकर्माणि च—ப்ராண வாயுவின் செயல்களையுமெல்லாம்
ज्ञानदीपिते—தத்த்வ ஜ்ஞானத்தினால் எழுவிக்கப் பெற்ற
आत्मसंयम—மனத்தை அடக்குவதென்ற
योग अग्नौ—யோகமாம் தீயில்
जुह्वति—ஹோமம் செய்கின்றனர்.

மனத்தை அடக்குவதால் மற்றவற்றின் செயல்களெல்லாம் நின்று விடுகின்றன என்றபடி.

द्रव्ययज्ञास्तपोयज्ञाः योगयज्ञास्तथाऽपरे ।
स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥ २८ ॥

த்ரவ்ய யஜ்ஞாஸ் தபோயஜ்ஞா: யோகயஜ்ஞாஸ்ததாऽபரே |
ஸ்வாத்யாய ஜ்ஞாநயஜ்ஞாச்ச யதய: ஸம்சிதவ்ரதா: || 28 ||

यतयः—முயற்சியே ஸ்வபாவமாக உடையரும்
संशितव्रताः—கூர்மையான ஸங்கல்பமுடையருமான
अपरे—சில யோகிகள்
द्रव्ययज्ञाः—த்ரவ்யத்தினாலாம் கார்யங்களாகிற கர்மயோகம் உடையவராவர்.
तथा—அவ்வாறே
योगयज्ञाः—தீர்த்தயாத்ரையைக் கர்மயோகமாக உடையவர் சிலர்.
स्वाध्याय ज्ञानयज्ञाः च—வேதாத்யயனத்தை அல்லது அதன் அர்த்த விசாரத்தை கர்மயோகமாக உடையவர் சிலர்.

दैवमेवापरे என்ற ச்லோகத்திற் சொன்னவைகளும் த்ரவ்ய யஜ்ஞமே. அங்கே தேவார்ச்சனை, யாகம் ஹோமம் மூன்றும் சொல்லப் பெற்றன. இங்கே த்ரவ்யம் ஸம்பாதிப்பது, தானம் செய்வதென்ற கர்மயோகத்திலே நோக்கு. கர்மயோக ப்ரகரணத்திலே யோகமென்பதற்கு த்யானமென்ற பொருள் பொருந்தாததாகையால் யோகமாவது பெருதைப் பெறுதல். அதாவது மேன் மேற் புதிய தீர்த்தங்களுக்கும் திவ்ய தேசங்களுக்கும் யாத்ரை செய்த வண்ணமிருக்கை. உத்தரார்த்தத்தில் வேதாத்யயனம் வேறு, அதன் அர்த்தங்களை யறிதல் வேறு என்று இரண்டாகப் பிரித்தல் தகும். அவரவர் எடுத்த கர்மயோகத்தை பலன் பெறும்வரை விடாமலிருக்க வேண்டுமென்பதற்காக 'யதய: ஸம்சிதவ்ரதா:' என்றதாம். (28)

ப்ராணாயாம விஷயமாக மூன்று கர்மயோகங்கள் மேலே—

अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथाऽपरे ।
प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः ॥ २९ ॥
अपरे नियताहाराः प्राणान् प्राणेषु जुह्वति । २९½

அபாநே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேऽபாநம் ததாऽபரே |
ப்ராணாபாநகதீ ருத்வா ப்ராணாயாமபராயணா: || 29 ||
அபரே நியதாஹாரா: ப்ராணாந் ப்ராணேஷு ஜுஹ்வதி |

प्राणायामपरायणाः—ப்ராணவாயு விஷயமான வியாபாரங்களை முக்ய உபாயமாகக் கொண்டவராய்
नियताहाराः—அதற்குத்தக்க ஆஹார நியமமுமுடையராயுள்ளவர்
अपरे—சிலர். அவர்களில் சிலர்.
अपाने—சரீரத்தினுள் இறங்கும் காற்றிலே
प्राणं जुह्वति—மேல்வரும் காற்றை ஹோமம் செய்கிறார்கள் (ப்ராணவாயுவை உள்ளுக்கு மூக்கினால் இழுக்கின்றனர் என்றபடி.)
तथा अपरे—மற்றும் சிலர்
प्राणे—மேல்வரும் காற்றில்
अपानं—கீழிறங்கும் காற்றை
जुह्वति—ஹோமம் செய்கிறார்கள். (மூக்கினால் காற்றை வெளியிடுகிறார்கள்.)
अपरे—மற்றும் சிலர்
प्राण अपानगती—விடுவது உள் இழுப்பது என்ற இருவ்யாபாரங்களையும்
रुद्ध्वा—நிறுத்திவிட்டு
प्राणान्—ப்ராணவாயுக்களை
प्राणेषु—ப்ராணவாயுக்களிலே
जुह्वति—ஹோமம் செய்கிறார்கள். உட்புகுந்துள்ள காற்றை வெளியில் விடாதபடி சேர்த்து முழுவுடலில் நிறைக்கிறார்கள்.

ப்ராணாயாமத்தில். உள் இழுப்பது, உடலில் நிறைப்பது, வெளிவிடுவதென்ற மூன்று செயல்கள் உண்டு. இவற்றிற்கு முறையே பூரகம் கும்பகம் ரேசகம் என்று பெயராம். இவற்றைச் செய்யும்போது இவற்றில் ஒன்றை ப்ரதாந கர்மயோகமாக்கித் தகுந்த காலங்களில் விடாமல் செய்கின்றனர். ஒவ்வொன்றை முக்யமாகக் கொள்வதால் இவர் மூவராவர்.

தைவார்ச்சனை முதலாகக் கீழே கூறின கர்மயோகங்கள் எல்லாவற்றிற்கும் நித்ய நைமித்திக கர்மாக்கள் அங்கமாகும். அவற்றை யாரும் விடலாகாது. அவையில்லாத போது சுத்தியில்லை யாகையால் இவையெல்லாம் வீணென்று விளக்குகிறார்—

सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषाः ॥ ३० ॥
यज्ञशिष्टामृतभुजो यान्ति ब्रह्म सनातनम् ।

ஸர்வேऽப்யேதே யஜ்ஞவிதோ யஜ்ஞக்ஷபிதகல்மஷா: || 30 ||
யஜ்ஞசிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதநம் |

यज्ञविदः—கர்மயோகம் பெற்ற
एते सर्वे—இவர்கள் எல்லோரும்
यज्ञक्षपितकल्मषाः—பஞ்சமஹா யஜ்ஞங்களால் பாபம் போக்கி
यज्ञशिष्ट अमृत भुजः—அவற்றில் மிகுந்ததால் அம்ருதமென்னப்படுமதை உண்பாராயிருந்தே
सनातनं ब्रह्म—சாச்வதமான ஆத்மாவை
यान्ति—அடைகின்றனர்.

ஆத்ம ஸாக்ஷாத்காரம் என்ற பலனை இவர்கள் பெறுவதென்பது நித்ய கர்மானுஷ்டானத்தை விடாமற் செய்து ஆத்மா உடல் இரண்டையும் சுத்தமாக்கிக் கொண்டு வந்தால் தான்.

**नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥ ३१ ॥**

நாயம் லோகோऽஸ்த்யயஜ்ஞஸ்ய குதோऽந்ய: குருஸத்தம || 31 ||

**अयज्ञस्य**-மஹாயஜ்ஞாதி நித்ய கர்மானுஷ்டானம் செய்து சுத்தி பெறாதவனுக்கு
**अयं लोकः**—இம்மைப்பலனும்
**न अस्ति**—(வைதிக கர்மாக்களால்) ஸாதிக்கவாகாது.
**कुरुसत्तम**-குருவம்சத்திய நல்லோரில் ச்ரேஷ்டனே!
**अन्यः**—பரலோக பலன் என்பது
**कुतः**—அயஜ்ஞனுக்கு ஏது.

நித்யகர்மானுஷ்டானமானது தர்மார்த்த காமமோக்ஷங்கள் என்ற பலன்களுக்காக விதிக்கப்பட்ட வைதிகமான காம்யகர்மாக்களைச் செய்ய அதிகாரம் அளிக்கும். இது இல்லையாகில் அவை பலிக்கா. சிலருக்கு இம்மைப் பலன் வருவதானால் பூர்வஜன்ம ஸுக்ருதத்தால் அல்லது நித்யகர்மானுஷ்டானமின்றி செய்த காம்ய வைதிக க்ரியையினலல்ல. இப்படியிருக்க மறுமைப் பலன் நித்ய கர்மா இராமலே உபாயம் செய்தால் வருமென்பது எங்ஙனே? ஆகையால் யாரும் நித்ய கர்மாவை யதாசக்தி விடாமற் செய்ய வேண்டும்.

**एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे ।**
**कर्मजान् विद्धि तान् सर्वान् एवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥ ३२ ॥**

ஏவம் பஹுவிதா: யஜ்ஞா: விததா: ப்ரஹ்மணோ முகே |
கர்மஜாந் வித்தி தாந் ஸர்வாந் ஏவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே ||32

**एवं**—கீழ்க்கூறியவைபோல்
**बहुविधाः**—இன்னும் பலவிதமான
**यज्ञाः**—கர்மயோகங்கள்
**ब्रह्मणो मुखे**-ஜீவாத்மாவுக்கு முகமாக (அதனைக்காண உபாயமாக)
**वितताः**—விரிவாக உபதேசிக்கப் பெற்றுள்ளன.
**तान् सर्वान्**—அவை யெல்லாவற்றையும்
**कर्मजान्**—நித்ய கர்மானுஷ்டானம் மூலமே வருவதாக
**विद्धि**—அறிவாயாக.
**एवं ज्ञात्वा**—இவ்வாறு அறிந்து (செய்து)
**विमोक्ष्यसे**—ஸம்ஸாரத்தினின்று விடுபடுவாய்.

இப்படி கர்மயோகத்தின் பிரிவுகளைக் கூறினர். இனி எல்லாவற்றிற்கும் ஆத்மஜ்ஞானத்தோடு சேர்த்தி வேண்டுமென்று ஞானத்தின் பெருமையைக் கூறுகிறார். மேல் ச்லோகங்களுக்கு, இனி ஞானயோகம் கர்மயோகத்தைவிடச் சிறந்ததென்கிறார் என்ற கருத்துத்தகாது. 3-8 कर्म ज्यायो ह्यकर्मणः என்று கீழிலும், तयोस्तु कर्मसंन्यासात् कर्मयोगो विशिष्यते 5-2 என்று மேலேயும் கூறுகின்றவர் அதற்கு முரணாக ஞானயோகத்திற்கு மேன்மையைக் கூறுவாரோ. மேலும் இந்த அத்யாயத்தின் முடிவிலேயே,

See Nr-9·28-1-84

तस्माद्ज्ञान என்கிற ச்லோகத்தில் ஞானத்தினால் ஸம்சயத்தைத் தீர்த்துக் கொண்டு योगमातिष्ठोत्तिष्ठ என்று கர்மயோகத்தைச் செய் என்று முடிப்ப தால் கர்மயோகத்திற்கு உள்ளான ஞானமே இது என்று தெளிவாம்—

श्रेयान् द्रव्यमयात् यज्ञात् ज्ञानयज्ञः परन्तप ।
सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥ ३३ ॥

ச்ரேயாந் த்ரவ்யமயாத் யஜ்ஞாத் ஞாநயஜ்ஞ: பரந்தப |
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞாநே பரிஸமாப்யதே || 33 ||

परन्तप—பகைவரைத் தபிக்கச் செய்கிறவனே!
द्रव्यमयात्-த்ரவ்யத்தினாலாம் வெளிச் செயலான
यज्ञात्—கர்மயோக பாகத்தைவிட
ज्ञानयज्ञः—அதிலுள்ள ஞானபாகம்
श्रेयान्—சிறந்தது.
पार्थ—குந்தியின் புதல்வனே
सर्वं कर्म—கர்மயோகமெல்லாம்
अखिलम्—தமக்கான ஸாதனங்களோடுகூட
ज्ञाने—ஆத்மஞானத்தில்
परिसमाप्यते—முடிவுறும்.

கர்மயோகத்திலுள்ள ஞாநாம்சம் முக்கியமாக ஆதரிக்கப்பட வேண்டும். அதனை விட்டு அறிவிலிகளைப்போல் கர்மயோகம்மட்டும் செய்வதில் ஒன்றும் பூர்த்தியாகாது. ஆத்மாவின் ஸாக்ஷாத்காரத்திற் காகத்தானே இப்பாடு. ஞானந்தானே நாளடைவில் ஸாக்ஷாத்காரமாக வளம் பெறுகிறது. அதனால் இந்த முளைதான் பெருமரமாகப்போகின்ற தென்று அதிலே நோக்கு வைக்கவேண்டும். (பூர்வார்த்தத்திற்கு ஞான மில்லாத கர்மயோகத்தைவிட ஞானத்துடன் கூடிய கர்மயோகமே சிறந்தது என்றும் உத்தரார்த்தத்திற்கும் ஞானம் இருந்தால்தான் எல்லா கர்மாவும் अखिलं—குறைவின்றி முடிக்கப்படுமென்றும் பொருள் கூறினும் கருத்து ஒன்றே.)

இப்போது தெரிந்தவரையில் போதுமென்று நினைக்காமல் ஒருவித ஐயத்திற்கும் இடம் கொடாதபடி மேன்மேல் தெளிவாகத் தெரிந்து கொள்ளவேண்டுமென்று அதற்கு உபாயம் உபதேசிக்கிறார்—

तद् विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥ ३४ ॥

See M.P 28-1-25/89

தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா |
உபதேக்ஷ்யந்தி தே ஞானம் ஞாநிநஸ்தத்வதர்சிந: || 34 ||

तत्—அந்த ஆத்மஞானத்தை பெரியோர்களிடமிருந்து
प्रणिपातेन—தண்டப்ரணாமாதிகள் செய்வதாலும்
परिप्रश्नेन—ஒன்றும் அறியாதவன் போல் அடங்கிக் கேட்பதாலும்
सेवया—அடிமை செய்வதாலும்
विद्धि—அறி.
ज्ञानिनः—சாஸ்த்ரஞானம் பெற்று
तत्त्वदर्शिनः—தத்துவத்தை நேரில் கண்டவர்கள்
ज्ञानम्—நீ வேண்டும் ஞானத்தை
ते उपदेक्ष्यन्ति—உனக்கு உபதேசிப்பார்கள்.

ஓர் ஆசார்யனிடம் கேட்ட பிறகு மறுபடி என்ன கேட்க வேண்டும், ஸர்வஜ்ஞனிடத்தில் நேராகக் கேட்ட பிறகு மற்றவரிடத்தில் கேட்ப தென் என்றவாறு நினைத்து கர்வப்படாமல் ஞானிகளிடம் ப்ரணாமம் சுச்ரூஷை யெல்லாம் செய்து அடக்கத்துடன் ஒன்றும் தெரியாதவன் போலேயிருந்து கேட்டுக் கேட்டுத் தெரிந்து கொள். பொருள் தெரியாத பல வாக்யங்களுக்கு ஐயமற நன்றாகப் பொருள் உரைக்கின்ற வர் பலர் இருக்கின்றனர். தமக்கு வந்த ஆத்ம ஸாக்ஷாத்காரத்தின் வரிசைக்ரமத்தை அவ்வாறே தெளிவிப்பவர் பலர் உண்டு. நான் எப்போதும் எல்லாம் கண்டவன். படிப்படியாகக் கண்டவர் கூறும் வழியை யறிந்து அவ்வண்ணம் காண நீ முயல்வதில் குணம் உண்டு. இப்போது சொன்ன விஷயமெல்லாம் எப்போதும் நெஞ்சில் நின்ற வண்ணமிருக்குமென்பதுமில்லை. அதனால் பெரியோரிடம் பணிந்து பெறு. ஜ்ஞாநிந:, தர்சிந: என்ற சொல்லின் பொருளை கவனிக்க. (34)

तद्विद्धि என்றவிடத்தில் तत् என்றது எது என்ன, यद्ज्ञात्वा என்று அதைத் தெரிவிக்கிறார். அவர்கள் தம் தம் ஆத்மானுபவத்தைப் பற்றிப் பேசினால் அதனின்று என் ஆத்மாவின் நிலையை நான் உணர்வதெங் ஙனே என்ன வேண்டா. எல்லா ஆத்மாக்களும் நானும் ஓரேவிதமாகை யால் அவர்களின் ஸாக்ஷாத்காரமானது நீ பெற வேண்டும் ஸாக்ஷாத் காரத்திற்கு வழி காட்டுமென்கிறார்—

**यत् ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पाण्डव ।**
**येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि ॥ ३५ ॥**

யத் ஜ்ஞாத்வா ந புநர் மோஹமேவம் யாஸ்யஸி பாண்டவ |
யேந பூதாந்யசேஷேண த்ரக்ஷ்யஸ்யாத்மந்யதோ மயி || 35 ||

**पाण्डव**—பாண்டுபுத்ரனே !
**यत् ज्ञात्वा**—எந்த ஞானத்தை உணர்ந்து
**पुनः**—மீண்டும்
**एवं मोहम्**—இவ்வாறு மோஹத்தை
**न यास्यसि**—அடைய மாட்டாயோ,
**येन**—எந்த ஞானத்தினாலே
**आत्मनि**—தன்னிடத்தில்
**भूतानि**—ப்ராணிகளை
**अशेषेण**—ஓர் ஆத்மாவை விடாமல்
**द्रक्ष्यसि**—பார்ப்பாயோ
**अथो मयि**—பிறகு என்னிடத்திலும் பார்ப்பாயோ,
(**तत् विद्धि**—என அந்வயம்.)

பலரிடம் இதற்கு முன் கேட்டிருந்தும், என்னிடம் கேட்டிருந்தும் உனக்கு தேஹாத்மாபிமானமென்கிற மோஹம் வந்த வண்ணமிருக் கின்றதே, இந்த மோகம் மீண்டும் வாராது அந்த ஞானம் ஏற்பட்டால். ஏனெனில், உன்னைக் காணும் போது எல்லா ஆத்மாக்களையும் காண் பாயே. உன் ஆத்மாவும் மற்ற ஆத்மாக்களும் தேஹத்தினும் வேறு பட்டு ஓரேவிதமாயிருப்பதால் உன்னைக் காண்பதே மற்ற ஆத்மாக்களை யும் காண்பது போலாம். ஆகையால் பீஷ்மாதிகள் அழிகின்றனரே என்று இப்போது நினைப்பது போல் நினைக்கமாட்டாய். அவ்வாறே

என்னிடத்திலும் எல்லா ஆத்மாக்களையும் காண்பாய். உன்னையும் மற்றவரையும் என்னோடு ஸமமாகவும் தெளிவாய். அதாவது புண்ய பாபங்களினின்று விடுபட்ட ஆத்மாவுக்கு என்னோடு பரமஸாம்யம் ஓதியிருப்பதால் உன்னை அவ்வாறு காணும் போது என்னையும் மற்ற ஆத்மாக்களையும் உன்னோடு ஸமமாய் அறிவாயென்றபடி.

இங்கே உன்னிடத்தில் எல்லா ப்ராணிகளையும், அவ்வாறே என்னை யும் காண்பாய் என்னல் வேண்டும். ஆதலால் अथो मयि என்னுமல் अथो च माम् என்பது தகும். அவ்வாறின்றி என்னிடத்தில் எல்லோரையும் காண் பாய் என்றால் பரமாத்ம தர்சனமே எல்லாரின் தர்சனமாகிறதென்ற தாகத் தெரிகிறதே. இது எவ்வாறு கூடுமென்னில்-தன் தியானத்தினல் தன்னை மட்டும் காண்பதற்கான கர்மயோக ப்ரகரணத்தில் பரமாத்ம தர்சனத்தைச் சொல்ல நியாயமில்லை. பின்னால் பக்தி யோகத்தில் வரப் போவதைச் சொன்னாரென்றால் குற்றமொன்றுமில்லையானாலும், வேதத் தில் ஆத்ம ஸாம்யத்தை பகவானிடம் சொல்லாமல் ப்ரஹ்மஸாம்யத்தை ஜீவனிடம் சொல்லியிருப்பதற்கிணங்கக் கூறவேண்டுமென்று माम् என்னமே मयि என்றதென்க. मयि आत्मनि—நானென்கிற ஆத்மாவில் என்று பொருள் கொண்டால் आत्मनि अथो என்ற சொல் இரண்டும் வீணும். தன்னைக் காண்பதே எல்லாரையும் காண்பது என்ற விஷய மும் விடப்பட்டதாம். अथो—பக்தியோகத்தில் எனது ஸாம்யம் காண்ப தென்பதும் தகாது. ஆறும் அத்யாயத்தில் ஞானயோகத்திலேயே ஸர்வஜீவஸாம்யம், பரமாத்ம ஸாம்யமெல்லாம் சொல்லப் போகிறாரே. ஆக தேஹத்தினும் வேறாக உன்னைக் காணும் போது எல்லா ஜீவர்களை யும் கண்டதாம், புண்ய பாபங்களற்றிருப்பதாக உன்னைக் காணும் போது என்னையுங்கூட கண்டதாம் என்றதாயிற்று. விரிவு ஆறில்.

இப்படி ஜீவாத்ம ஞானத்தை மட்டும் சொல்வதாகில் மேலே இது எல்லா வினைகளையும் போக்குமென்பது சேருமா. பக்தி யோகம் தானே அவற்றைப் போக்கு மென்னில், ஐச்வர்யத்திற்கான பக்தியோகம் அநாதி வினைகளையெல்லாம் போக்காது. மோக்ஷத்திற்கான பக்தியோக மென்றால் அது ஜீவாத்ம தர்சனத்தோடு சேர்ந்தே யிருக்கும். ஆகையால் ஜீவாத்ம தர்சனம் சேர்ந்த பக்தி யோகம் பாபங்களை யெல்லாம் போக்கு மென்றால் ஜீவாத்ம தர்சனத்திற்கும் அதில் ஸம்பந்தமுண்டாகையால் அதை யெடுத்துப் புகழ்வதில் தோஷமில்லை. அதனல் தான் மோக்ஷோபா யத்தைப் பிரிக்கும் போது கர்மயோகம் ஞானயோகம் பக்தி என்றவாறு உபாயவிபாகம் செய்வர். பஞ்சாக்னி வித்யையில் பரமாத்மா விசேஷண மாகிற படியால் ப்ரஹ்மாத்மக ஜீவதர்சனமே வினைகளையெல்லாம் போக்குமென்ற போது ஜீவாத்மா பரமாத்மா இரண்டின் ஞானம் சேர்ந்து போக்குவது ஸ்பஷ்டமாம். வெறும் ஞானயோகத்தால் ஸஞ்சித கர்மாக்களெல்லாம் கழியா. கர்மயோகத்தில் அடங்கிய ஜீவாத்ம ஞானம் தனது முதிர்ந்த நிலையில் மோக்ஷபர்யந்தமாகிறதென்று இங்கே புகழ்ந்ததாயிற்று.

(35)

இப் பலனையே விரிவாகக்கூறுகிறார்—

अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।
सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं संतरिष्यसि ॥ ३६ ॥

அபி சேத் அஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம: |
ஸர்வம் ஞாநப்லவேநைவ வ்ருஜிநம் ஸந்தரிஷ்யஸி 36 ||

सर्वेभ्यः पापेभ्यः—பாபிகள் எல்லோரினும்
पापकृत्तमः—அதிகமாகப் பாபம் செய்பவனாய்
असि चेत् अपि—இருக்கின்றாயாகிலும்
सर्वं वृजिनम्—அந்தப் பாபமெல்லாம்
ज्ञानप्लवेन एव—ஞானமென்னும் கப்பலைக்கொண்டு
संतरिष्यसि—கடப்பாய்.

பாபத்திரளைக் கடலாக வைத்துக் கப்பலேறிக் கடக்கலாமென்றார். ஆனால் மீண்டும் கடலில் புகும்படியாமோ என்று நினையாமைக்காக தீயில் சாம்பலான கட்டையாக பாபத்திரளை ரூபிக்கிறார் மேலே—

यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात् कुरुतेऽर्जुन । See M. P 281-70
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥ ३७ ॥

யதைதாம்ஸி ஸமித்தோக்நி: பஸ்மஸாத்குருதேऽர்ஜுந |
ஜ்ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதே ததா || 37 ||

समिद्धः—நன்கு மண்டிய
अग्निः—தீயானது
एधांसि—கட்டைகளை
यथा भस्मसात् कुरुते अर्जुन—எவ்வாறு சாம்பலாக்குமோ அர்ஜுனா!
तथा—அவ்வாறே
ज्ञान अग्निः—ஞானமென்கிற தீயானது
सर्वकर्माणि—எல்லா வினைகளையும்
भस्मसात्कुरुते—சாம்பலாக்கும்.

அக்னிக்குக் கட்டைகள் போதாமலிருப்பதுபோல் ஞானத்திற்கு இந்த வினைகளெல்லாம் சேர்ந்தாலும் போதா. அதனால் அரைகுறையின்றி சாம்பலேயாயிடும். (37)

नाभुक्तं क्षीयते कर्म कल्पकोटिशतैरपि என்ற ப்ரமாணத்தினால் அனுபவித்தல்லது கர்மாவைக் கழிக்க முடியாதெனத் தெரிகிறபடியால் எப்படி ஞானத்தினால் அவை அழியுமென்ன, உத்தரம் மேலே—

न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।
तत् स्वयं योगसंसिद्धः कालेनाऽऽत्मनि विन्दति ॥ ३८ ॥

ந ஹி ஜ்ஞாநேந ஸத்ருசம் பவித்ரம் இஹ வித்யதே |
தத் ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேநாத்மநி விந்ததி || 38 ||

इह—இவ்வுலகில்
ज्ञानेन सदृशं—ஞானத்திற்கு ஒப்பான
पवित्रं—சுத்தமாக்குகின்ற வஸ்து
न हि विद्यते—இல்லையே.
तत्—அத்தகைய ஞானத்தை
योगसंसिद्धः—கர்மயோகம் பூர்த்தி யானவன்
स्वयं—ப்ரயத்னமின்றி
कालेन—உரிய காலத்தில்
आत्मनि—தன்னிடமே
विन्दति—அடைகிறான்.

கர்மாக்களை அனுபவித்தே தீர்க்க வேண்டுமென்பது ப்ராயச்சித்தம் செய்யாத போதாம். இல்லையேல், ப்ராயச்சித்த சாஸ்த்ரங்களெல்லாம் வீணும். மற்ற ப்ராயச்சித்தங்கள் சிற்சில பாபங்களை மட்டும் போக்குவதால் பவித்ரம். ஞானமென்பது மாபெரும் ப்ராயச்சித்தமாகும். இதற்கு நிகரான பவித்ரம் கிடையாது. ஆகையால் வினைகள் ஒழியும். ஆனால் இப்போதுள்ள சாஸ்த்ர ஜ்ஞானம் அவ்வளவு பவித்ரமாகாது. யோகம் செய்து வந்தால் தானே அது வரும். வினைகளும் தாமே போம். आत्मनि विन्दति—தன் விஷயமான ஞானம் தன்னிடத்திலே பிறந்து வினைகளைப் போக்குவது தனக்கே தெரிவதாகும். (38)

யோகஸம்ஸித்த: என்றால் மநோயோகமென்று எண்ணவேண்டா. ஜிதேந்த்ரியனாக வேண்டுமே. ஆகையால் கர்மயோகம் வேண்டும். कालेन என்றதால் தாமதமாகுமென்று நினைக்கவேண்டா என்கிறார்—

श्रद्धावान् लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः ।
ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥ ३९ ॥

ச்ரத்தாவாந் லபதே ஜ்ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்ரிய: |
ஞாநம் லப்த்வா பராம் சாந்திம் அசிரேணாதிகச்சதி || 39 ||

ज्ञानं लब्ध्वा—உபதேச மூலமான ஞானம் பெற்று
श्रद्धावान्—அதனை வளர்க்க விரைவுமுடையவன்
तत्परः—அதிலேயே மனம் செலுத்தி கர்மயோக மூலமாக
संयतेन्द्रियः—இந்த்ரியங்களை நல்வழியில் நிறுத்தி
अचिरेण—சீக்கிரமாகவே
ज्ञानं लभते—முதிர்ந்த ஞானம் பெறுகிறான்
परां शान्तिं—பரமபலத்தையும்
अधिगच्छति—அடைகிறான்.

முதன்முதல் ஞானயோகத்திலிழிபவன் தடுமாற்றத்தால் சீக்கிரம் பலன் பெறான். கர்மயோகத்தில் நோக்கு உடையவன் ஜிதேந்த்ரியனாய் தாமதமின்றி வேண்டுமளவு ஜ்ஞானம் பெறுகிறான். ஞானம் வந்தால் உடனே சாந்தி, என்பது தெரிந்த விஷயமாகும். ஒன்றால் வந்த ஞானமாகில் உடனே சாந்தி. மற்றொன்றாலாகில் தாமதமென்கிற வாசியில்லை. கீழே कालेन என்றதும் अचिरेण என்கிற கருத்தினால். (39)

ஞானமும் ச்ரத்தையும் மிகவும் வேண்டுமென்றார். ஸம்சயமாகிற ஞானம் மிகவும் கெட்டதென்கிறார்—

अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।
नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥ ४० ॥

*அஜ்ஞச்சாச்ரத்ததாநச்ச ஸம்சயாத்மா விநச்யதி ।*
*நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்சயாத்மந: ॥ 40 ॥*

अज्ञः—ஞானமில்லாதவனும்
अश्रद्दधानः—ஞானமிருந்தும் செய்வதில் விரைவற்றவனும்
संशयात्मा च— எங்கும் ஸம்சயமே மனத்தில் உடையனும்
विनश्यति—அழிகிறான். (அழிவாவது)
संशयात्मनः—ஸந்தேஹ ப்ராணிக்கு
न अयं लोकः ப்ராக்ருத பலனுமில்லை.
न परः—மோக்ஷ பலனுமில்லை.
न सुखम्—ஸுகமென்பதேயில்லை.

ஞானமில்லாமையாலும் ஞானம் இருந்தும் உபாயத்தை யனுஷ்டிக்க துரிதப்படாமையாலும் மனிதனுக்கு நஷ்டமே. அது போல் ஸம்சயமே யுடையவனுக்குமாம். ஸம்சயப்படுகின்றவன் பெரிய கார்யங்களைச் செய்ய இழியமாட்டான். அப்போது ப்ராக்ருத வுலகப் பலன்களுமில்லை மோக்ஷமேது. இது நிற்க. எதிலும் ஸம்சயப்படுகின்றவனுக்கு வீண் சிந்தையும் வ்யாகுலமுமே எப்போதும். அதனால் பலன் பெற உபாயம் செய்யாமற் போனாலும் முன்வினைப் பயனாய் சிலவற்றைப் பெற்றிருந்தாலும் அதன் மூலமும் ஸுகமில்லை. ஆகையால் தெளிவான ஞானத்தை விருத்தி செய்ய வேண்டும். (40)

योगसंन्यस्तकर्माणं ज्ञानसंछिन्नसंशयम् ।
आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय ॥ ४१ ॥

*யோகஸந்நயஸ்த கர்மாணம் ஞாநஸம்ச்சிந்நஸம்சயம் ।*
*ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய ॥ 41 ॥*

धनञ्जय—அர்ஜுனா!
योगसंन्यस्तकर्माणम्—கர்மயோகத்தில் அடக்கிய கர்மஸந்யாஸமென்ற ஞானயோகமுடையனாய்
ज्ञानसंछिन्नसंशयम्—அந்த ஞானத்தினாலே ஸம்சயமெல்லாம் தீர்ந்தவனாய்
आत्मवन्तं—நிலைநின்ற மனம் உடையனை
कर्माणि—அநாதியான பாபங்கள்
न निबध्नन्ति—ஸம்ஸார பந்தத்திற்கு ஆளாக்கவல்லவையாகா.

இப்படி கர்மயோகத்தில் அடங்கிய ஞானத்தை வளர்க்க வேண்டுமென்று அதன் பெருமையைக் கூறி அததுடன் கர்மயோகமே செய் என்று கர்மயோகத்திற்கு ஏற்றத்தைக் கூறி முடிக்கிறார்—

तस्मादज्ञानसंभूतं हृत्स्थं ज्ञानासिनाऽऽत्मनः ।
छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥ ४२ ॥

*தஸ்மாத் அஜ்ஞாநஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம் ஞாநாஸிநாऽऽத்மந: ।*
*ச்சித்த்வைநம் ஸம்சயம் யோகம் ஆதிஷ்டோத்திஷ்ட பாரத ॥42॥*

भारत—பரதவம்சப்புதல்வனே!
तस्मात्—ஸம்சயமற்றுச் செய்ய வேண்டியிருப்பதால்
अज्ञानसंभूतं—அஜ்ஞான மூலமாக வருகின்றதாய்
हृत्स्थं—மனத்தில் குடிகொண்ட
आत्मनः—ஆத்ம விஷயத்தில் உள்ள
एनं—இவ்வாறு ஸுகவிரோதியான
संशयं—ஸம்சயத்தை
ज्ञान असिना—ஆத்மஞானமாம் கத்தியால்
छित्त्वा—வெட்டியெறிந்து
योगम्—கர்மயோகத்தை
आतिष्ठ—கைப்பற்று.
उत्तिष्ठ—அனுஷ்டிக்க எழுந்திரு.

ஞானத்தின் பெருமையைப் பரக்கப் பேசி அத்தகைய ஞானம் அடங்கிய கர்மயோகம் சிறந்ததென்று அதன் வகைகளையும் இங்கே எடுத்து உரைத்தார்.

(நான்காம் அத்யாயம் முற்றும்.)

ஐந்தாம் அத்தியாயம்

अर्जुन उवाच—அர்ஜுநன் சொன்னான்—

संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगञ्च शंससि ।
यत् श्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥ १ ॥

See V. P. 28-2-95/96

ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புநர் யோகஞ்ச சம்ஸஸி |
யத் ச்ரேய ஏதயோரேகம் தந்மே ப்ரூஹி ஸுநிச்சிதம் || 1 ||

कृष्ण—ஸ்ரீக்ருஷ்ண பகவானே!
कर्मणां संन्यासं—கர்மத்யாகபூர்வமான ஞானயோகத்தையும்
पुनः—மீண்டும்
कर्मणां योगं—கர்மயோகத்தையும்
शंससि—சொல்லுகிறீர்.
एतयोः—இந்த ஞானயோக கர்மயோகங்களிலே
यत् एकम्—எது ஒன்று [வுள்ளமோ
श्रेयः सुनिश्चितम्—சிறந்ததாகத்திரு
तत् मे—அதை எனக்கு
ब्रूहि—அருளவேணும்.

(இரண்டாம் அத்யாயத்தில்) கர்மயோகம் செய்து ஞானயோகம் செய்து ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற வேண்டுமென்று பணிக்கப் பெற்றது. இதனின்று கர்மயோகத்தை விட்டுச் சில காலம் ஞான யோகம் செய்வதெனத் தெரியலாயிற்று. அதனால் ज्यायसी चेत् कर्मणस्ते मता बुद्धिः என்று கேட்டேன். பிறகு, 'இரண்டு வழிகள் உண்டு. கர்ம யோகத்தை விட்டு ஞானயோகம் செய்வதென்பதின்றி கர்மயோகமே ஞானத்துடன் கூடி ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்காகச் செய்யப்படும். 'कर्म ज्यायो ह्यकर्मणः கர்மயோகமே சிறந்தது' என்று (3, 4 அத்யாயங்களில்) சொல்லப் பெற்றது. முதற்பக்ஷத்தில் சில காலம் கர்மந்யாஸமுண்டு. இரண்டாம் பக்ஷத்தில் எப்போதும் கர்மயோகமே. இவ்விரண்டு வழி களில் எது சீக்கிரமாகப் பலனை யளிக்குமென்பதை இப்போது

தெளிய விரும்புகிறேன். ஆத்ம ஸாக்ஷாத்காரமென்பதும் ஞான யோகமும் ஒரே விஷயத்தில் வரும் ஞானமாகையால் அது தானே சீக்கிரம் பலன் அளிக்குமென நினைக்கிறேன்—(श्रद्धावान् लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः । ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति (4. 39) என்ற ச்லோகத்திலும் இதற்கிணங்க 3ம் பாதத்தை 4ம் பாதத்தோடு சேர்ப்பது ஸ்வரஸமாம். ஞான யோகம் பெற்ற பிறகு சீக்கிரம் பலனென்பதாகிறது. முன் (38) ச்லோகத்தில் योगसंसिद्धः कालेनात्मनि विन्दति என்று கர்மயோகிற்குத் தாமதத்தைக் குறிப்பதாகத் தெரிகிறது என்றும் நினைக்கிருனென்னலாம்.) (1)

श्रीभगवान् उवाच—பகவான் சொன்னார்—

संन्यासः कर्मयोगश्च निश्श्रेयसकरावुभौ ।
तयोस्तु कर्मसंन्यासात् कर्मयोगो विशिष्यते ॥ २ ॥

ஸந்ந்யாஸ: கர்மயோகச்ச நிச்ச்ரேயஸகராவுபௌ |
தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத் கர்மயோகோ விசிஷ்யதே ‖ 2 ‖

संन्यासः—கர்மாவை விட்டு ஞான யோகம் செய்வதும்
कर्मयोग. च-கர்மயோகமே செய்வதும்
उभौ—இரண்டும்
निश्श्रेयसकरौ—பலன் அளிக்கும்.
तु—ஆனல்
तयोः—அவ்இரண்டில்
कर्मयोगः—கர்மயோகமானது
कर्मसंन्यासात्—ஞானயோகத்தைவிட
विशिष्यते—சிறந்தது.

சீக்கிரம் பலன் அளிப்பதும் கர்மயோகமே என்ற கருத்தினுல் இவ்வாறு அருளினர். (2)

இதனையே தெளிவாக்க மேலே சொல்வர்—

ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न काङ्क्षति ।
निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात् प्रमुच्यते ॥ ३ ॥

ஜ்ஞேய: ஸ நித்யஸந்ந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி |
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத் ப்ரமுச்யதே ‖ 3 ‖

यः—எந்தக் கர்மயோகி
न द्वेष्टि—த்வேஷிப்பதில்லையோ
न काङ्क्षति—விரும்புவதுமில்லையோ
सः-இஷ்டாநிஷ்டமில்லாத அவன்
नित्यसंन्यासी—எப்போதும் ஞான யோக நிஷ்டனுகவே
ज्ञेयः—அறியத்தக்கவன்.
(ஞானமொன்றில்தானே அவனுக்கு நோக்கு)
महाबाहो-திரண்ட புஜம் உடையனே
निर्द्वन्द्वः हि—இப்படி ஸுகதுக்கம் சீதோஷ்ணமில்லாதவன் (பொறுப்பவன்) அன்றே
सुखम्—அநாயாஸமாக
बन्धात्—ஸம்ஸார பந்தத்தினின்று
विमुच्यते—விடப்படுகிறுன்.

கர்மாவை அனுஷ்டிக்கிறவனுக்கு இஷ்டத்தை வேண்ட ப்ரஸக்தியுண்டு. அதற்கு விரோதம் செய்பவராகச் சிலரை நினைத்து த்வேஷிக்கவும் ப்ரஸக்தியுண்டு. அந்த நிலைமையில் த்வந்த்வமற்றிருந்தால்

உண்மைநிலை பெற்றவனாகிறான். பலன் உடனே. ஞானயோகியும் இவ்வாறு இருக்கிறானென்பதை விரைவில் உணர முடியாது. (3)

ஞானயோகமே ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு நெருங்கியதென நினைக்க வேண்டா. அப்படி நினைப்பவர் அறிவிலிகளென நிந்திக்கிறார்—

सांख्ययोगौ पृथक् बालाः प्रवदन्ति न पण्डिताः ।
एकमप्यास्थितः सम्यक् उभयोर्विन्दते फलम् ॥ ४ ॥ See Nr 28-2-97

ஸாங்க்யயோகௌ ப்ருதக் பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா: |
ஏகமப்யாஸ்தித: ஸம்யக் உபயோர் விந்ததே பலம் || 4 ||

बालाः—அறிவிலிகள்
सांख्ययोगौ—ஞானயோக கர்ம யோகங்களை
पृथक्—வெவ்வேறு பலனுக்காக என்று
प्रवदन्ति—சொல்லுகிறார்கள்.
(அதததன் பலன் வேறு என்று சொல்பவர்)
न पण्डिताः—பண்டிதர்கள் அல்லர்.
एकम् अपि—கர்மயோகம் ஒன்றையே
आस्थितः—கைப்பற்றியவன்
उभयोः फलम्—இரண்டைச் செய்து பெறும் பலனை
विन्दते—பெறுகிறான்.

கர்மயோகம் ஞானயோகத்திற்கு உபாயம். ஞானயோகமே ஆத்மாவைக் காண நேர் உபாயமென்று நினைப்பவர் பண்டிதரல்லர், அவ்விரண்டைச் செய்து பெறும் பலனைக் கர்மயோகத்தினாலேயே பெறலாம். கர்மயோகமின்றி ஞானயோகம் மட்டும் செய்யவியலாது.

பண்டிதன் எவனெனில் கூறிப் புகழ்கிறார்—

यत् सांख्यैः प्राप्यते स्थानं तत् योगैरपि गम्यते ।
एकं सांख्यञ्च योगञ्च यः पश्यति स पश्यति ॥ ५ ॥ See Nr 28-2-98

யத் ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்த்தாநம் தத் யோகைரபி கம்யதே |
ஏகம் ஸாங்க்யஞ்ச யோகஞ்ச ய: பச்யதி ஸ பச்யதி || 5 ||

सांख्यैः—ஞானயோகிகளால்
यत् स्थानं—எந்த ஆத்மஸாக்ஷாத்காரம்
प्राप्यते—பெறப்படுமோ,
तत्—அந்த ஸாக்ஷாத்காரம்
योगैः अपि—கர்மயோகிகளாலும்
गम्यते—பெறப்படும்.
ஆகையால்
सांख्यं च योगं च—ஞானயோகத்தையும்(ப்போல்) கர்மயோகத்தையும்
एकम्—ஒரே பலனை அளிப்பதாக
यः पश्यति—எவன் காண்கிறானோ,
स पश्यति—அவனே பண்டிதன்.

उभयोर्विन्दते फलम् என்றதை விவரிக்கிறார். அதாவது ஞானயோகமொன்றாலேயே பலன் பெறலாமென்பதில்லை யென்கிறார்—

संन्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः ।
योगयुक्तो मुनिर्ब्रह्म नचिरेणाधिगच्छति ॥ ६ ॥ See Nr 28-2-99

ஸந்ந்யாஸஸ்து மஹாபாஹோ துக்கம் ஆப்தும் அயோகத: |
யோகயுக்தோ முநிர் ப்ரஹ்ம நசிரேணாதிகச்சதி || 6 ||

महाबाहो—பாகுபலமுடையனே!
संन्यासः तु-ஞானயோகமோ என்றால்
अयोगतः—கர்மயோகமின்றி
आप्तुं दुःखम्—பெறப்படமாட்டாது.
योगयुक्तः—கர்மயோகத்திலேயே யிருப்பவன்
मुनिः—கூடவே ஆத்ம சிந்தனை யுடையனாய்
ब्रह्म—ஆத்மாவை
नचिरेण—தாமதமின்றி
अधिगच्छति—காண்கிறான்.

செய்யும் உபாயத்தை விட்டு வேறோர் உபாயம் கொண்டு பெறுவதை விட முதலில் எடுத்த உபாயத்தினின்றே பலன் பெறுதல் எளிதிலாம். முதலில் ஞானயோகத்தைக் கொள்ளல் கூடாது.

கர்மயோகத்தையே ஞானயோகமின்றி செய்து வந்தால் ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு விரோதியாயிருந்து இவனை பந்தப்படுத்துமே யென்பதில்லை யென்கிறார்—

**योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः ।**
**सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥ ७ ॥**

யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: |
ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே || 7 ||

योगयुक्तः—கர்மயோகத்தில் இழிந்து
विशुद्धात्मा—மனம் சுத்தமாய்
विजितात्मा—மனோஜயம் பெற்றவன்
जितेन्द्रियः—ஸத்விஷயத்தில் இந்த்ரியங்கள் வ்யாபரிப்பதால் வெளிப் புலன்களையும் வென்றவனாய்
सर्वभूतात्मभूतात्मा—ஆத்மஞானமும் அடங்கியிருப்பதால் எல்லா ப்ராணிகளின் ஆத்மாவான ஆத்மாவையுடையனாய் (எல்லாம் ஸமமாக நினைத்தவனாய்)
कुर्वन् अपि—ஞானயோகத்திலிறங்காமல் கர்மயோகத்தையே தொடர்ந்து செய்தாலும்
न लिप्यते—ஸாக்ஷாத்காரத்தின் விரோதி விலகவாகிறான்.

कुर्वन्नपि न लिप्यते என்பதற்கு பாபகர்மாவைச் செய்தாலும் குற்றமில்லையென்றோ, காம்ய கர்மாவைச் செய்தாலும் பலனில்லை யென்றோ, கர்மயோகம் செய்வது வீண் என்றோ பொருள் பொருந்தாமையால் ஞானயோகத்தை விட்டுக் கர்மயோகமே தொடர்ந்தாலும் பலனுண்டென்ற கருத்தென்க. அப்போது कुर्वन्नेव न लिप्यते என்றால் பொருந்தும்; ஞானயோகத்திலிழியாமலிருக்க வேண்டுமென்னதாகுமே யென்னில்— இதில் விரோதமிருப்பதாக நினைப்பவனுக்கு அது இல்லை யென்பதற்காக இவ்வாறு கூறலாமே. ச்லோகத்தில் கர்மயோகம் என்ற சொல் இல்லை. சேர்க்கும் சொல்லை अपि என்பதோடு சேர்த்து कर्मापि कुर्वन् கர்மயோகத்தையும் விடாது செய்து கொண்டு என்ற கருத்துமாம். அப்போது ஞாநாம்சம் வேண்டுமென்பதும் அறிவித்ததாம். सर्वभूतात्मभूतात्मा என்பதும் ஞாநாம்சத்தைக் குறிக்கும். (7)

இனி அந்த ஞாநாம்சம் (ப்ரஹ்மஜ்ஞாநப்ரகாரம்) விரித்துரைக்கப் படுகிறது. இது சேர்ந்தால்தானே கர்மயோகமே பலனை விரைவில் பெறுவிக்கும். ஆக இவ் அத்யாயத்தில் கூறும் சைஸ்ரயத்திற்கு (பலன் சீக்கிரமே என்பதற்கு) மேல் மொழிவதெல்லாம் வேண்டுவதாம். கீழே 3-28 गुणा गुणेषु वर्तन्ते என்று குணங்களே செய்வதாகச் சொன்னார். குணங்களென்று இந்திரியங்களையும்—(கருவிகளையும்) தேஹத்தையும் கருதியே. அவற்றில் கருவிகளைப் பற்றிச் சில ச்லோகங்கள்—

नैव किञ्चित् करोमीति युक्तो मन्येत तत्त्ववित् । See N.T. 28-3-57/58
पश्यन् शृण्वन् स्पृशन् जिघ्रन् अश्नन् गच्छन् स्वपन् श्वसन् ॥ ८ ॥
प्रलपन् विसृजन् गृह्णन् उन्मिषन् निमिषन्नपि ।
इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥ ९ ॥

நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மந்யேத தத்வவித் |
பச்யந் ச்ருண்வந் ஸ்ப்ருசந் ஜிக்ரந் அச்நந் கச்சந் ஸ்வபந் ச்வஸந் ||8
ப்ரலபந் விஸ்ருஜந் க்ருஹ்ணந் உந்மிஷந் நிமிஷந் அபி |
இந்த்ரியாணி இந்த்ரியார்த்தேஷு வர்தந்த இதி தாரயந் || 9 ||

युक्तः—கர்மயோகத்தில் இழிந்த
तत्त्ववित्—ஆத்மதத்துவம் அறிந்தவன்
पश्यन्—பார்த்துக்கொண்டும்
शृण्वन्—காதால் கேட்டுக்கொண்டும்
स्पृशन्—தொட்டுக்கொண்டும்
जिघ्रन्—முகந்துகொண்டும்
अश्नन्—உண்கிறவனையும்
गच्छन्—போகின்றவனையும்
स्वपन्—உறங்குபவனையும்
श्वसन्—மூச்சுவிடுகிறவனையும்
प्रलपन्—பேசிக்கொண்டும்
विसृजन्—விடுகின்றவனையும்
गृह्णन्—எடுத்துக்கொண்டும்
उन्मिषन्—கண் திறப்பவனையும்
निमिषन्—கண் மூடுகின்றவனையும்
अपि—இருந்தபோதிலும்
इन्द्रियाणि—கருவிகள்
इन्द्रियार्थेषु—அதகன் கார்யங்களிலே
वर्तन्ते इति—இருக்கின்றன என்று
धारयन्—முடிவு செய்கின்றவனாய்
किञ्चित्—ஒன்றும்
न एव करोमि—நான் செய்யவேயில்லை
इति मन्येत—என நினைக்கவேண்டும்

இந்த ச்லோகங்களில் இந்திரியங்களின் செயலும் ப்ராண வாயுவின் செயலும் சொல்லப்பட்டுள. विसृजन् என்று ஜலமல விஸர்கத்தைச் சொல்வது. அவ் வியாபாரங்களுக்குத் தான் கர்த்தாவாயிருப்பினும், இச் செயல்கள் எனக்கு இயற்கையான செயல்கள் அல்ல. கர்மாதீனமான கருவிகளுக்கேற்ப நேருமவை யென நினைப்பதே, அவைகளே கர்த்தாக்கள் என நினைப்பதாம். (9)

செய்யாமலிருப்பது தகாது ; இந் நினைவுடன் செய்தால் कुर्वन्नपि न लिप्यते என்று கீழ்க் கூறியதாமென்கிறார்—

ब्रह्मण्याधाय कर्माणि संगं त्यक्त्वा करोति यः ।
लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ॥ १० ॥

*ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய:*
*லிப்யதே ந ஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா 10*

यः—எந்த கர்மயோகி
कर्माणि—தான் செய்யுமவற்றை
ब्रह्मणि आधाय—ப்ரகிருதியின் கார்யமான கருவிகளில் ஏறிட்டு
संगं त्यक्त्वा—பலனில் பற்றின்றி
करोति—செய்கின்றானோ,
सः—அவன்
पद्मपत्रं—தாமரையிலை
अम्भसा इव—ஜலத்தினால்போல்
पापेन—ஸம்ஸாரபந்தகமான பாபத்தினாலே
न लिप्यते—பூசப்படுவதில்லை.

ப்ரக்ருதியின் குணங்களிற் போல் பகவானிடமும் ஏறிடுவது கீழே ब्रह्मार्पणं ब्रह्महविः என்று கூறப்பட்டதே இங்கே கூறப்படலாமே யென்னில், கீழும் மேலும் தேஹேந்த்ரியாதிகளின் ப்ரஸ்தாவமாகையால் இடையில் அது சேராது. पद्मपत्रमिव என்றதைக் கொண்டு, पुष्करपत्रम् पुष्कर पलाशवन्निर्लेपः எப்போதும் ஜீவனிடம் லேபமில்லை யென்ற ஸாங்க்யபக்ஷம் சொன்னதாகாது. விவேகத்துடன் செய்யும் போது தானே லேபமில்லை. இல்லையேல் லேபமுண்டே. (10)

பலர் இவ்வாறு அனுஷ்டிக்கின்றனர் என்கிறார்—

कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि ।
योगिनः कर्म कुर्वन्ति संगं त्यक्त्वाऽऽत्मशुद्धये ॥ ११ ॥ See N.N. 28-3-60

*காயேந மநஸா புத்த்யா கேவலைரிந்த்ரியைரபி |*
*யோகிந: கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாऽऽத்மசுத்தயே || 11 ||*

योगिनः—கர்மயோகிகள்
आत्मशुद्धये—ஆத்மா பாபம் விட்டு சுத்தமாவதற்காக
संगं त्यक्त्वा—பற்றற்று
केवलैः-மமகாரத்திற்கு விஷயமாகாத
कायेन मनसा—உடலாலும் மனத்தாலும்
बुद्ध्या—ஸங்கல்ப்பத்தினாலும்
इन्द्रियैः अपि-மற்ற இந்த்ரியத்தாலும்
कर्म—அததன் கார்யத்தை
कुर्वन्ति—செய்கின்றனர்.

உடல் முதலானவற்றில் மமகாரம் இருந்தால் அதது செய்யும் செயலைத் தான் செய்ததாக நினைப்பான். அதனால் மமகாரத்தையும் விட வேண்டும். (11)

கர்ம ஒன்றே யானாலும், பலனை வேண்டல், விடல் என்ற வாசியினால் அது தீமைக்கும் நன்மைக்கும் ஆகும் முறையே என்கிறார்—

युक्तः कर्मफलं त्यक्त्वा शान्तिमाप्नोति नैष्ठिकीम् । See N.N. 28-3-60/61
अयुक्तः कामकारेण फले सक्तो निबध्यते ॥ १२ ॥

யுக்த: கர்மபலம் த்யக்த்வா சாந்திம் ஆப்நோதி நைஷ்ட்டிகீம் |
அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே || 12 ||

युक्तः—ஆத்மாவில் நோக்கு உடையன்
कर्मफलं—செய்யும் கர்மாவின் பலனை
त्यक्त्वा—வேண்டா என்று விடுவதால்
नैष्ठिकीं—ஆத்மானுபவ நிலைக்கான
शान्तिं—சாந்தியை
आप्नोति—பெறுகிறுன்
अयुक्तः-அந்நோக்கின்றி விஷயங்களிலிழிந்தவன்
कामकारेण—அழகாய்த்தோன்றிய விஷயங்களின் ஏவலால்
फले सक्तः—பலனிற் பற்றுடன் கர்மாவைச் செய்பவனுய்
निबध्यते—கட்டுண்கிறுன்.

அந்தந்தக் கருவியே அததன் கார்யம் செய்கின்றதென நினைப்பதென்றுர். இப்போது எல்லாவற்றையும் உடல் செய்கின்றதென்றெண்ண வேண்டுமென்கிறுர் மேலே. (कार्यकारणकर्तृत्वे என்று இரண்டையும் கர்த்தாவாகச் சொல்வதாம்)— 13-20

सर्वकर्माणि मनसा संन्यस्याऽऽस्ते सुखं वशी ।
नवद्वारे पुरे देही नैव कुर्वन् न कारयन् ॥ १३ ॥ See Nr. p. 28-3-61/62

ஸர்வகர்மாணி மநஸா ஸந்ந்யஸ்யாऽऽஸ்தே ஸுகம் வசீ |
நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வந் ந காரயந் || 13 ||

देही—தேஹம் கொண்டவன்
वशी-ஸ்வாதீனனுய் ஒரு அபிமானத்திற்கும் இடமாகாதவனுய்
मनसा—தனக்கு கர்த்ருத்வம் இது இயற்கையன்றென்று தெளிந்த மனத்தினுல்
सर्वकर्माणि—தான் கருவிகளைக் கொண்டு செய்யும் செயல்களையெல்லாம்
नवद्वारे पुरे—ஒன்பது த்வாரங்களையுடைய பட்டணமான உடலில்
संन्यस्य—வைத்துவிட்டு—அதைக் கர்த்தாவாகத் தெளிந்து
न एव कुर्वन्-தான் செய்யாதவனுகவே
न कारयन्—தேஹத்தைச் செய்யச் செய்கின்றவனல்லாதவனுகவே கொண்டு
सुखम् आस्ते—அபிமான மூலமான வருத்தமின்றி ஆத்மானுபவமுள்ளவனுய் இருக்கிறுன்.

नवद्वारे. உடலில் ஒன்பது த்வாரங்கள். முகத்தில் இருகண்கள், இரு காதுகள், மூக்கு த்வாரங்கள் இரண்டு, வாயொன்று, கீழே மல மூத்ர த்வாரங்கள் இரண்டு. पुरमेकादशद्वारम् என்றது கடோபநிஷத்து. கொப்பூழும் தலையில் ப்ரஹ்மரந்த்ரமும் சேரப் பதினென்றும. கருவிகளைக் கொண்டு உடல் வேலை செய்கிறதென்பதற்கு உதாரணமாக நவத்வாரமென்றது. ப்ரயத்னம் இவனதாகையால் இவனை कुर्वन् என்னலாம். அதனுல் தேஹாதிகளில் க்ரியையை உண்டுபண்ணுதலால் कारयन् என்னலாம். ஆனுலும் நான் கர்த்தா காரயிதா என்று நினைக்க

மாட்டிலன் விவேகி அவனுக்கு நேர்ந்த தேஹாதிகளுக்கு இணங்கியே லௌகிகமும் வைதிகவர்ணாச்ரமதர்மங்களுமாகின்றன. இவ்வுடலைப் பட்டணமாகவும், இந்திரியங்களை பட்டணத்து ஜனங்களாகவும், பரமாத்மாவை மஹாராஜனாகவும், தன்னை அவனுக்கு நெருங்கி ராஜஸேவை செய்பவனாகவும் நினைப்பவனுக்கு மனம் நிம்மதியாயிருக்கும். தேஹாத்ம ப்ரமமுள்ளவனாய் தன்னை ஸ்வதந்த்ரனாக நினைப்பதால் தீமையே. (13)

சுத்தமான ஆத்மாவுக்கு ஸம்ஸாரிக்குள்ள இந்த கர்த்ருத்வாதி தசையில்லை யென்கிறார். ஆக தன் சுய நிலை இவை யில்லாததென நினைக்க வேண்டும்—

न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।
न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥ १४ ॥

ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।
ந கர்மபலஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்ததே ॥ 14 ॥

प्रभुः—ஜீவன் ப்ரபுவான நிலையில் (முக்தனானால்)
लोकस्य—பத்த ஜீவனுக்குள்ள
कर्तृत्वं—முயற்சியை
न सृजति—செய்யான்.
कर्माणि—இச் செயல்களை
न सृजति—செய்யான்
कर्मफलसंयोगं—கர்மாவின் பலனுடன் தனக்குச் சேர்க்கையையும்
न सृजति—செய்யான். ஆகையால்
स्वभावः तु-அனாதிப்ரக்ருதிவாசனையே
प्रवर्तते—இவ்விதம் நடக்கிறது.

மோக்ஷத்தில் சுத்தமாய் அஹங்காரமமகாரமற்று எம்பெருமானின் உவப்புக்காகவே அனுபவ கைங்கர்யங்களைச் செய்யும் நிலையுற்று கிங்கர ராஜனான ப்ரபுவுக்கு இப்போது ஸம்ஸாரத்தில் ப்ராணியாகப் பிறந்திருக்கும் போது நடத்தும் இத்தகைய செயல்களுக்கு இடமேது? ஆகையால் இதெல்லாம் அனாதி கர்மவாஸனையாலானதென்க. (இங்கே लोकस्य, प्रभुः என்ற சொற்களின் ஸ்வாரஸ்யத்திற்கிணங்க, ஸர்வேச்வரன் தான் ஸ்வதந்த்ரனாய், ஒவ்வொருவனுக்கும், 'இவன் கர்த்தாவாக வேண்டும்; இவன் செய்ய வேண்டும் கர்மாக்கள் இவை; இவற்றின் மூலம் பலனும் இவை' என்று ஏற்படுத்தியுள்ளான் என்பதில்லை. ப்ரக்ருதி வாஸனையால் தான் எல்லாம். ஆகையால் ஜீவன் கர்த்தனல்லன் என்று பொருள் கூறலாம். மேல் ச்லோக(15)த்திற்கும் ப்ரபு ஒருவனுக்குப் பாபத்தையும் ஒருவனுக்குப் புண்யத்தையும் தானாக இசைவதில்லை. ஜந்துக்கள் அஜ்ஞானத்தால் மோஹித்துச் செய்கின்றன என்று பகவானைக் கொண்டே பொருள் கூறலாம். அதனால் ஸித்தாந்த விரோதம் யாதுமில்லை ஆயினும் ஜீவனையே ப்ரபுவாகவும் விபுவாகவும் சொன்னால் அவனுக்குப் பின்னால் விசேஷ சக்தியும் ஓரிடத்திலும்

பற்றில்லாமையும் அறிவித்ததாம். முன்னும் பகவானைப் பற்றி ஒன்றும் சொல்லாமையால் இங்கு பகவானைச் சொல்ல வேண்டியதில்லை என்ற கருத்தாம்.)

(14)

यद्यपि अस्मिन् अनन्तरे च श्लोके प्रभुविभुशब्दाभ्यां भगवन्तमेव गृहीत्वा तद्भिन्नंजीवं लोकपदेन गृहीत्वाऽर्थः सुवचः। अन्यथा प्रभ्वादिशब्देन जीवग्रहणे लोकस्येत्यस्य बद्धस्य स्वस्येत्यर्थः स्यादिति क्लेशश्च। तदयमर्थः—सर्वेश्वरः स्वातन्त्र्येण, अयं जीवः कर्ता भवतु, अस्येमानि कर्माणि, एतत्फलञ्चैवमनुभवतु इति कर्तृत्वादिकं स्थापितवानिति न, येनेदं कर्तृत्वमनौपाधिकं स्यात्। किं तु प्रकृतिवासनारूपस्वभाववशादेवेदं सर्वम्। एवं सर्वेश्वरः स्वेच्छया, कस्यचित् पापं कस्यचित् पुण्यञ्च न संमन्यते। अनादिकर्मवशादेव सर्वमिति। अनेनापि प्रकृतौ कर्तृत्वारोपे वाक्यतात्पर्यं भवितुमर्हति। तथापि पूर्वं पश्चाच्च भगवत्प्रस्तावाभावात् जीवस्य प्रभुत्वादिकथने प्रकृतिमण्डले औपाधिकत्वेऽपि कर्तृत்வस्य, मोक्षे प्रकृत्यनधीनकर्तृत्वातिशयलाभाच्च जीवपरतयैव व्याख्यातम्॥

தனக்குத்தான் செய்துகொள்வதில்லையென்றார். பிறருக்கு இவன் செய்வதும் இயற்கையில் இல்லையென்கிறார்—

नाऽऽदत्ते कस्यचित् पापं न चैव सुकृतं विभुः।

अज्ञानेनाऽऽवृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः॥ १५॥

நாதத்தே கஸ்யசித் பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு:।

அஜ்ஞாநேநாऽऽவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ:॥ 15॥

| | |
|---|---|
| विभुः—தன் சுயநிலையிலிருக்கும் | सुकृतं—ஸுகத்தை |
| ஜீவன் | न च एव आदत्ते—போக்குவதுமில்லை |
| कस्यचित्—தன் ப்ரியனாக ஒருவனை | अज्ञानेन—முந்திய வினையால் |
| வைத்து அவனது | ज्ञानम्—அறிவானது |
| पापं नादत्ते—துக்கத்தைப் போக்குவ | आवृतम्—மறைக்கப்பட்டது. |
| தில்லை | तेन—அதனால் |
| कस्यचित्—விரோதியாகவைத்து | जन्तवः—ஜந்துக்கள் |
| ஒருவனுக்கு | मुह्यन्ति—மோஹிக்கின்றனர். |

ஜந்துக்கள் மோகத்தினால் பிள்ளை முதலானாராகச் சில ப்ராணிகளை அபிமானித்து துக்கத்தை நீக்குகின்றன, விரோதியாக நினைத்துச் சிலருக்கு ஸுகத்தை விலக்குகின்றன. இது ஜீவன் சுயமாய்ச் செய்வதன்று; பழைய ப்ரக்ருதிவாஸனையாலென்க—

जन्तवो लोके मोहात् कांश्चित् पुत्रादिरूपेण भावयित्वा दुःखमपाकुर्वन्ति, परान् शत्रुत्वेन विभाव्य सुखमपनयन्ति; न तु स्वस्वरूपेस्थित्वा तथा कुर्वन्ति। अत्र विभुशब्दो मा भूत् परमात्मपर इति प्रागेवोक्तम्॥

(15)

கர்மாக்கள் போனால் ஸர்வஜ்ஞனாகிறான். மோஹம் மாயுமென்கிறார்—

ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः।

तेषामादित्यवत् ज्ञानं प्रकाशयति तत् परम्॥ १६॥

*ஜ்ஞாநேந து தத் அஜ்ஞாநம் யேஷாம் நாசிதம் ஆத்மந: |*
*தேஷாம் ஆதித்யவத் ஜ்ஞாநம் ப்ரகாசயதி தத் பரம் || 16 ||*

येषां—எவர்களுக்கு
तत् अज्ञानं—அந்த கர்ம
आत्मनः तु ज्ञानेन—ஆத்ம விஷயமே யான அறிவினால்
नाशितम् —அழிக்கப்பட்டதோ,
तेषां—அவர்களுடைய
तत् परं—அந்த உயர்ந்த
ज्ञानं—அறிவானது
आदित्यवत्—ஸூர்யனொளிபோல்
प्रकाशयति—எல்லாவற்றையும் அறிவிக்கின்றது.
(மோகமில்லை)

ஜீவாத்ம ஞானமாத்ரத்தினால் தர்மபூதஜ்ஞானவிகாஸம் பூரணமாம்படி எல்லா வினைகளும் கழியாவாகிலும் இந்த ஞானம் அந்த நிலைக்குக் கொண்டுவிடுகிறபடியால் இந்த ப்ரகரணத்தில் முழுமோக்ஷத்தைக் கொண்டாலும் குற்றமில்லை. சீதோஷ்ணம் பொறுப்பவனுக்கு அம்ருதத்வமென்ற மோக்ஷத்தை ஆதியில் மொழிந்தாரே. அது போலாகும். இல்லையேல், தன் ஆத்ம பூர்ணஸாக்ஷாத்காரத்தை மட்டும் பலனாகக் கொள்க. ஆதித்ய பதத்திற்கு ஆதித்யனின் ஒளி பொருள். (16)

ஆத்ம ஞானத்திற்கும் படிப்படியாக ஏற்றத்தை யறிவிக்கிறார்—

**तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।**
**गच्छन्त्यपुनरावृत्तिं ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७ ॥** 24-4-51/52

*தத்புத்தயஸ் ததாத்மாந: தந்நிஷ்டா: தத்பராயணா: |*
*கச்சந்த்யபுநராவ்ருத்திம் ஜ்ஞாநநிர்தூதகல்மஷா: || 17 ||*

तद्बुद्धयः—ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறவேண்டுமென்ற திடாத்யவஸாயமுடையராய்
तदात्मानः—அதில் மனம் செலுத்தினராய்
तन्निष्ठाः—அந்த ஞானத்தையே விடாமல் சிந்தனை செய்கின்றவராய்
तत्परायणाः—அதையே முழு பலமாக நினைத்திருப்பவர்
ज्ञान निर्धूत कल्मषाः—அச்சிந்தனையினாலே பாபம் போக்கி
अपुनरावृत्तिम्—அழியாத நிலையுடைய ஆத்மாவை
गच्छन्ति—அனுபவிக்கின்றனர்.

अपुनरावृत्तिम्- எந்த நிலையைப் பெற்றால் ஆத்மாவுக்கு மீண்டும் மாறுதலில்லையோ, அந்த நிலையுடன்—அதாவது தன் சுயரூபத்துடன் ஆத்மாவை யனுபவிக்கிறானெனப் பொருளாம். மோக்ஷம் போனவன் திரும்புவதில்லை யென்றும் உரைக்கலாமானாலும் ஜீவாத்ம ஞானம் மட்டினால் முழுமோக்ஷம் வாராதாகையால் ஸ்ரீபாஷ்யகாரர் இவ்வாறு உரைத்தனர். आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन என்றவிடத்தில் புநராவ்ருத்தியாவது உள்ள நிலை யழிந்து மாறுதல், அதாவது அழிவு என்று பொருள் கூறுவர். அப்போது ஜீவனுக்கு தேவமனுஷ்யாதி நிலை அழிவுறும்.

இந்த ச்லோகத்தில் ஆத்மாநுபவமாகிற [illegible] ஞானத்தில் [illegible] க்ரமம் பேசப்படுகிறது. (1) ஆத்மாவைக் காணவேண்டும் என்ற திடமான எண்ணம் (2) அதைக் காண்பதற்கு உபாயமான [illegible]
P.T.O.

மீண்டும் வரும். அழியாத நிலை சுயரூபம். அத்துடன் அனுபவிக்கிறான். அந்த நிலையைப் பெறுதற்கு பக்தி யோகம் வேண்டும். வெறும் ஞானயோகத்திற்கு அந்த சுயரூபத்தின் அனுபவம் மட்டுமேயென்க. 17

ஆத்ம ஸாக்ஷாத்காரமாவது மற்ற ஆத்மாக்களுக்கும் தனக்கும் உள்ள ஸமமான நிலையுடன் ஆத்மாவைக் காணல் என்கிறார்—

**विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।** See N.r.P. 284 - 52/53
**शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥ १८ ॥**

*வித்யாவிநயஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி |*
*சுநி சைவ ச்வபாகே ச பண்டிதா: ஸமதர்சிந: || 18 ||*

पण्डिताः—ஆத்மாவின் உண்மை நிலையுணர்ந்தவர்
विद्याविनयसंपन्ने—அறிவும் அடக்கமுமுள்ள சிறந்தவனிடமும்
ब्राह्मणे—ஸாமாந்ய ப்ராஹ்மணனிடமும்
गवि—மாட்டினிடமும்
हस्तिनि—ஆனையினிடமும்
शुनि च—நாயினிடமும்
श्वपाके च एव—நாயைத்தின்பவனான நீசனிடமும் கூட
समदर्शिनः—ஆத்மா ஒன்றோடொன்று ஸமமாகவே வாசியன்றியேயிருப்பதாகக் காண்பர்.

தன் ஆத்மாவைக் காண்பவர், 'எல்லா ஆத்மாக்களும் இது போலவே இருக்கின்றன. உடல் முதலானவற்றில் போல் ஆத்ம ஸ்வரூபத்தில் வெவ்வேறு நிலையில்லை' என்று உணர்வர்.

இந்த ஸமத்வத்தையறிந்தவருக்கு இங்கேயும் பலன் உண்டென்கிறார்-

**इहैव तैर्जितः सर्गः येषां साम्ये स्थितं मनः ।** See N.r.P. 284 - 53/54
**निर्दोषं हि समं ब्रह्म तस्मात् ब्रह्मणि ते स्थिताः ॥ १९ ॥**

*இஹைவ தைர்ஜித: ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்த்திதம் மந: |*
*நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்த்திதா: ||*

येषां मनः—எந்த ஞானிகளின் மனமானது
साम्ये स्थितम्—எல்லா ஆத்மாக்களும் ஸமமென்ற உண்மையில் ஊன்றிற்றோ,
तैः इह एव—அவர்களால் இங்கேயே
सर्गः जितः—ஸம்ஸாரம் ஜெயிக்கப்பட்டது.
निर्दोषं—தோஷமெல்லாம் விலகி
समम्—ஒன்றோடொன்று ஸமமான ஜீவஸ்வரூபம்
ब्रह्म हि—ப்ரஹ்மமாகுமே.
तस्मात्—ஆகையால்
ब्रह्मणि—ப்ரஹ்மத்தினிடமே.
ते स्थिताः—அவர்கள் இருக்கின்றனர்

தோஷமற்ற நிலையில் ஆத்மா மற்ற ஆத்மாக்களோடு ஸமமாய் பரமாத்மாவோடும் ஸமமாகிறபடியால் பரமாத்மாவைப் பகரும் ப்ரஹ்ம பதத்தினால் ஆத்மாவையும் சொல்வதாம். ப்ரஹ்மத்தினிடம் இருப்பவ

னுக்கு ஸ்வாராஜ்யம் ப்ரஸித்தம். இந்த ஸாம்யத்தில் ஊன்றியவன் தேஹாதிகளிலுள்ள ஏற்றத்தாழ்வை ஆத்மாவில் ஏறிடமாட்டானாகை யாலே கர்வம் முதலான துர்குணங்களுக்கு இடமில்லையாகையால் ஸ்வாராஜ்யமே. (19)

இவ்வாறு ஸமமான தன்னைக் காண்பதற்கு இவன் செய்ய வேண்டு வன என்னவென்பதை விரிவாகக் கூறுகிறார்—

**न प्रहृष्येत् प्रियं प्राप्य नोद्विजेत् प्राप्य चाप्रियम् ।**
**स्थिरबुद्धिरसंमूढो ब्रह्मविद् ब्रह्मणि स्थितः ॥ २० ॥**

*ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத் ப்ராப்ய சாப்ரியம் |*
*ஸ்த்திரபுத்திரஸம்மூடோ ப்ரஹ்மவித் ப்ரஹ்மணி ஸ்த்தித: || 20 ||*

ब्रह्मवित्—ஜீவனுடைய ப்ரஹ்ம நிலையை உபதேசமூலம் அறிந்து
ब्रह्मणि स्थितः அந்நிலையுணர முயல்பவன்
असंमूढः...தேஹத்தோடு ஆத்மாவை ஒன்றாக ப்ரமிக்காமல்
स्थिरबुद्धिः—ஸ்த்திரமான அதில் திடமான முடிவுக்கு வந்தவன்
प्रियं प्राप्य—பூர்வ கர்மாவினால் ஏதோ தனக்கு ப்ரியமானது நேர்ந்தால்
न प्रहृष्येत्—பெருமகிழ்ச்சி பெறலாகாது.
अप्रियम्—அநிஷ்டத்தை
प्राप्य च—பெற்றாலும்
न उद्विजेत्—இது வந்ததே என்று நடுங்கலாகாது.

இப்படி ஆத்ம ஸுகானுபவம் பெற்றால் அது தொடர்ந்து வருமென்கிறார்—

**बाह्यस्पर्शेष्वसक्तात्मा विन्दत्यात्मनि यः सुखम् ।**
**स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षयमश्नुते ॥ २१ ॥**

*பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மநி யஸ் ஸுகம் |*
*ஸ ப்ரஹ்மயோக யுக்தாத்மா ஸுகம் அக்ஷயம் அச்நுதே || 21 ||*

यः—யாவனொருவன்
बाह्यस्पर्शेषु—ஆத்மா தவிர வேறு வஸ்துக்களின் உணர்ச்சிகளில்
असक्तात्मा—பற்றற்ற மனம் உடையவனாய்
आत्मनि सुखं—ஆத்மானுபவ ஸுகத்தை
विन्दति—பெறுகிறானோ.
सः—அவன்
ब्रह्मयोग युक्तात्मा—சுத்த ஜீவாத்ம சிந்தனையின் தொடர்ச்சியில் வைத்த மனமுடையனாகில்
सुखम्—அந்த ஸுகத்தை
अक्षयम्—அழியாமல் தொடர
अश्नुते—அனுபவிப்பான்.

வெளிவிஷயப்பற்று அற்றவன் ஆத்மானுபவ ஸுகத்தைப் பெறுவான். அப்போது ஆத்ம சிந்தனை தொடர்ந்தால் ஸுகானுபவமும் தொடரும். (21)

வெளிவிஷயவுணர்ச்சி வரும்போது பற்றற்றமை வர வழியென்ன வெனில், அதில் உள்ள தோஷங்களை நினைத்து வருவதே என்கிறார்—

ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते । See Nr. 1.28. 5-51/52
आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥ २२ ॥

*யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா: துக்கயோநய ஏவ தே |*
*ஆத்யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத: || 22 ||*

संस्पर्शजाः—வெளியுணர்ச்சியில் உண்டாம்
भोगाः ये—அனுபவங்கள் யாவை
ते—அவைகள்
आदि अन्तवन्तः—ஆரம்பம் முடிவு இரண்டுமுடையனவா யிருப்பதோடு
दुःखयोनय एव हि—துக்கத்திற்குக் காரணமாகின்றவையுமே யல்லவா;
कौन्तेय—குந்தி புத்ரனே!
तेषु—அந்த போகங்களில்
बुधः—விவேகி
न रमते—ப்ரீதி பெறான்.

வெளியுணர்ச்சியின்போது காமமும் கோபமும் தம் வளர்ச்சிக்குத் துரிதப்படும். அந்த வேகத்தை யடக்க வல்லனாக வேண்டுமென்கிறார்—

शक्नोतीहैव यः सोढुं प्राक् शरीरविमोक्षणात् । See Nr. 1.28. 5-52/53
कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥ २३ ॥

*சக்நோதீஹைவ யஸ் ஸோடும் ப்ராக் சரீரவிமோக்ஷணாத் |*
*காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர: || 23 ||*

शरीरविमोक्षणात् प्राक्—உடல் விடுவதற்கு முன் வரையில்
इह एव—உபாயத்தை அனுஷ்டிக்கும் போதே
कामक्रोध-उद्भवं—காமத்தினின்றும் கோபத்தினின்றும் உண்டான
वेगम्-அந்தந்தச் செயலில் விரைவை
यः सोढुम्-எவன் பொறுக்க (நிறுத்த)
शक्नोति—வல்லனாவான்,
सः युक्तः—அவன் ஆத்மானுபவத்திற்கு யோக்யதையுடையன், உபாயபூர்த்தி செய்பவன்.
सः सुखी-அவன் ஸுகம் பெறுவான்.

इहैव என்பதற்கு இந்த ஜன்மத்திலேயே என்ற பொருள் வேண்டா. प्राक् शरीरविमोक्षणात् என்றதினின்றே அது தெரிந்ததே. அது எதற்கெனில்—சரீரம் விடுமளவும் காமமும் கோபமும் விபரீதம் செய்யக் காத்திருக்குமென்று தெரிவிக்க. காமாதிகளின் வேகத்தை வெல்லவில்லையாகில் உபாயாநுஷ்டானம் தடைப்பட்டதாம். इह चेदवेदीत् अथ सत्यमस्ति, न चेदिहावेदीत् महती विनष्टिः என்ற உபநிஷத்திற்கும் இது போலவே பொருளாகும். இனி, சரீர என்ற சொல்லினால் சிதைந்துவிடும் உடலென்று தெளிவதால் சீக்கிரம் சிதையும் சரீரம் தொலைவதற்கு முன்னே இப்பிறவியிலேயே உபாயத்தை ஒழுங்காக விரைவில் செய்ய

Br. Up. 4.4.14; Kena 2.13

வேண்டும் வேறு பிறவி என்ன விதமாகுமோ? (தேவாதி லோகங்களிலும் ஆத்மாவைக் காண்பது அரிதென்று ஓதுமே) என்ற கருத்தும் இத்துடன் சேர்ந்தால் குற்றமில்லை யாகில் கொள்க. यथाऽऽदर्शे तथाऽऽत्मनि यथा स्वप्ने तथा पितृलोके। यथाऽप्सु परीव ददृशे तथा गन्धर्वलोके छायातपयोरिव ब्रह्मलोके என்ற கடோபநிஷத்து आत्मनि இம்மானிடவுடலில் ஆத்மாவைக் காண்பதே கண்ணாடியிற் காண்பது போல் சிறந்ததென்னும். (23)

போக்யம் போகஸ்த்தானம் போகோபகரணம் எல்லாம் ஆத்மாவே யானவனுக்கு ஆத்மானுபவ ஸுகத்தின் வளமென்கிறார்—

योऽन्तस्सुखोऽन्तरारामस्तथाऽन्तर्ज्योतिरेव यः ।
स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥ २४ ॥

யோऽந்தஸ்ஸுகோऽந்தராராமஸ் ததா அந்தர்ஜ்யோதிரேவ ய:
ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோऽதிகச்சதி ॥ 24 ॥

य: योगी—வெளி விஷயம் விட்ட எவன்
अन्तस्सुख:-ஆத்மாவை போக்யமாகக் கொண்டானோ
अन्त: आराम:—ஆத்மாவையே பூங்காவாகக் கொண்டானோ
तथा य:—அவ்வாறே எவன்
अन्तर्ज्योति:—தானே தன் அனுபவம் பெறுகிறானோ
स: योगी—அந்த யோகி
ब्रह्मभूत:-தேஹாத்மாபிமாநாதிகளுக்கிடமாகாமல் ஆத்மாவையே ஆத்மாவாக உணர்ந்தவன்
ब्रह्मनिर्वाणम्—ஆத்ம ஸுகத்தை
अधिगच्छति—பெறுகிறான்.

உலகில் போக்யம் சில. போகத்திற்கு இடம் சில. போகத்திற்குக் கருவிகள் சில. அவ்வாறின்றி எல்லாம் ஆத்மாவே இவனுக்கு. தன் ஆத்மாவையே போக்யமாகக் கொள்கிறான். பூங்காவில் பல வஸ்துக்களைப் பார்த்து விநோதிப்பது போல் ஆத்மாவிலுள்ள அபஹதபாப்மத்வாதி குணங்களை யாராய்ந்து ஆத்மாவில் ஈடுபடுகிறான். அந்த குணங்களை ஸ்த்தாபிக்க சாஸ்த்ர விசாரம் செய்வதும் ஆராமமாகலாம். ஆத்மாவைக் காண முதலில் சாஸ்த்ரங்களைக் கொண்டாலும் முடிவு செய்த பிறகு அவற்றை விட்டு, தன் ஞானமே ஆத்மாவைக் காண்பிக்கும் சோதியாகப் பெறுகிறான். இனி அசுத்த ரூபனாகாமல் சுத்த ப்ரஹ்மமாகின்றானாகில் ஆத்மானுபவ ஸுகமே யென்றபடி. (24)

ஸமதர்சிக்கு ஆத்மானுபவ ஸுகமென்று கூறி அதற்கு உபாயமாக ப்ரீதிபயமற்றிருக்கை, வெளி விஷயத்தில் பற்றற்றமை, அதிலுள்ள தோஷத்தைக் காண்பது, காமகோப வேகத்தை நிறுத்தல் ஆத்மாவை போகத்திற்கு ஸம்பந்தப்பட்ட எல்லாமாகக் கொள்வது என்ற ஐந்து அம்சங்களை ஐந்து ச்லோகங்களால் அருளினார். இதன் மேல் ஸமதர்சனத்திற்கு நெருங்கியது ஸர்வ பூதங்களிடமும் ஹிதத்தில் நோக்கென்பதை பலத்துடன் அறிவிக்கிறார்—

लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।
छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥ २५ ॥

லபந்தே ப்ரஹ்மநிர்வாணம் ருஷய: க்ஷீணகல்மஷா: |
சிந்நத்வைதா யதாத்மாந; ஸர்வபூதஹிதே ரதா: || 25 ||

छिन्नद्वैधाः — சீதம உஷ்ணம் என்ற பிரிவைத தொலைத்தவராய்
यतात्मानः — ஆத்மாவில் மனம் செலுத்தி
सर्वभूतहिते रताः — எல்லா ஆதமாவும் ஸமமாகையால் தன்னிடம் போல் பிறரிடமும் நன்மை செய்யவே நோககுடன்
ऋषयः — ஆத்மாவைக் கண்டு
क्षीणकल्मषाः — ஸுகாநுபவத்திற்குத் தடையான பாபங்கள் நீங்கவே
ब्रह्मनिर्वाणम् — ஆத்மாநுபவ ஸுகத்தை
लभन्ते — பெறுகின்றனர்

ஆத்ம ஸுகாநுபவம் பெற்ற நிலையைக் கூறினர். அது விரைவில் பெறப்படுமென்பதற்கான நிலையைக் குறிக்கிறார்-

कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् । See Nr P. 28-5-55/56
अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विजितात्मनाम् ॥ २६ ॥

காமக்ரோதவியுக்தாநாம் யதீநாம் யதசேதஸாம் |
அபிதோ ப்ரஹ்மநிர்வாணம் வர்த்ததே விஜிதாத்மநாம் || 26 ||

कामक्रोधवियुक्तानाम् — காமமும் கோபமும் விலக இருப்பவரும்
यतीनां — முயற்சியுள்ளவரும்
यतचेतसाम् — மனத்தை அடக்கினவரும்
विजितात्मनाम् — மனத்தை வென்றவருமானவர்களுக்கு
ब्रह्मनिर्वाणं — ப்ரஹ்மாநுபவ ஸுகமானது
अभितः — எதிரில் அல்லது அருகில்
वर्तते — இருக்கின்றது.

மனத்தை வென்று ஆத்மாவில் செலுத்தியவர்களுக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரம் விரைவில் உண்டாகும். अभितः என்ற சொல்லால் அருகிலிருப்பதைக் குறிப்பதால் முன் நிலைக்கும் இதற்கும் வேறுபாடு தெளிவாம். பெறுகிறார்களென்றார் முன்னே. அருகிலிருப்பதால் விரைவில் பெறுவார்களென்றார் இங்கு (26)

அருகில் இருப்பதாகச் சொன்னார் என்ன செய்தால் பெறப்படுமென்பதைக் கூறுகிறார் இது தான் கர்மயோகம் ஞானயோகம் செய்பவர் ஆத்மாவைக் காண முடிவாகச் செய்ய வேண்டுவது—

स्पर्शान् कृत्वा बहिर्बाह्यान् चक्षुश्चैवान्तरे भ्रुवोः ।
प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ ॥ २७ ॥

Sl. 26 - ... see Nr P. 28-5-55/56 for details. अभितो वर्तते = हस्तस्थम् ...

यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।
विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥ २८ ॥

ஸ்பர்சாந் க்ருத்வா பஹிர்பாஹ்யாந் சக்ஷுச்சைவாந்தரே ப்ருவோ:,
ப்ராணாபாநௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்யந்தரசாரிணௌ 27
யதேந்த்ரியமநோபுத்திர் முநிர் மோக்ஷபராயண:,
விகதேச்சாபயக்ரோதோ யஸ் ஸதா முக்த ஏவ ஸ:, 28

यः—எவன் (உட்கார்ந்து)
बाह्यान्-வெளி விஷயங்களை
बहिः कृत्वा-இந்த்ரிய விஷயமாக்காமல்
भ्रुवोः अन्तरे च—இரு புருவங்களின் இடையில் (அதாவது மூக்கின் நுனியிலேயே)
चक्षुः कृत्वा च—கண்களை வைத்தும்
नासाअभ्यन्तरचारिणौ—மூக்கினுள் ஸஞ்சரிக்கின்ற
प्राण अपानौ-வெளிவரும் காற்றையும் உட்புகும் காற்றையும்
समौ कृत्वा--ஏற்றதாழ்வின்றி செய்து
यत-इन्द्रियमनो बुद्धिः-இந்த்ரியம், மனம் புத்தி என்பவற்றை அடங்கியேயிருக்கப் பெற்று
विगत-इच्छा भय-क्रोधः—விருப்பம் அச்சம் கோபம் ஒன்றும் வராதவனாய்
मुनिः—ஆத்ம சிந்தனை செய்பவனாய்
मोक्षपरायणः—அதன் அனுபவத்தை பெரும் பொருளாகக் கொண்டவனுமானே
सः—அவன்
सदा—பின்னை போல் அந்த தசையிலும்
मुक्त एव— விடு பெற்றவனே.

உட்கார்ந்தவனுக்கு பூமி ஆஸனம் ஆடை காற்று முதலானவற்றின் ஸ்பர்சங்கள் இருக்கும அவற்றின் உணர்ச்சியினின்று விலக வேண்டும். இருகண்களையு நிமிர்த்தாமல் தாழ்த்தினல் இரண்டும் விழுமிடம் எதுவோ அதிலேயே நிறுதத வேண்டும். கண்கள் மேலே புருவங்களின் இடையில் விழாவாகையாலே புருவ இடையென்று மூக்கையே அதிலும் முனைபாகத்தையே கொள்ள வேண்டும். அதுவும் மூக்கின் முனை எவ்வாறு இருக்கிறதென்று காண்பதற்காகவன்று. வேறொன்றைக் காணுமைக்காக. வேறிடம் செலுத்தாமல் என்பதில் நோக்கு. வெளிவரும் காற்றை அதிகம் விடக்கூடாது. உள்ளே அதிகம் இழுக்கவும் கூடாது. ஆக அவை தாமே ஸமமாகும். மற்ற இந்த்ரியங்களையும் மனத்தையும புத்தியையும் அடக்க வேண்டும். स्पर्शान् என்ற விடத்திலேயே எல்லாம் கொள்ளலாம். மீண்டும் கூறினது ஒரு வ்யாபாரததிற்கும் ப்ரஸக்தியே யில்லை யென்ற நிலை வேண்டுமென்பதற்காக. அது எப்போதெனில, ஏதேனும் பழைய வாஸனையாலே இச்சை பயம் கோபம் இவற்றிற்கு இடமுண்டாகில், இப்படி உட்கார்நதிருக்கும் போது என்ன வருமோ என்ற அச்சமுண்டாகில் காமக்ரோதங்களும் வரும. அவையுமின்றி ஆத்மாவின் சிந்தனையில் ஆழ்ந்தால் ஸுகானுபவம் கைக்

கூடியதே. அந்த நிலையில் அவன் வீடு பெற்றவனுக்கு ஒப்பாவான். மேலும் ஸதா. எவ் எப்போது இந்த நிலை பெறுகிறானோ அவ் அப்போது முக்தனாகிறான், இப்படி அருகில் வரும் என்று சொன்னதைப் பெற வழியை கூறினார்.

இந்த அத்யாயத்தில் கர்மயோகம சீக்கிரம் பலன் அளிக்குமென்று தொடங்கி அது செய்ய வேண்டும் விதத்தை அதில் அடங்கிய ஞானத்தோடு கூறி, அச்சம் முதலானவையின்றி த்யானமும செய்ய வேண்டுமென்றார். அந்தந்த நிலைகளில் தடையின்றி நடந்தேறல் பகவானின் குணங்களை நினைத்துக் கொண்டே யிருப்பதால் என்று முக்கிய குணங்களைக் குறிக்கிறார்—

भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥ २९ ॥

போக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேச்வரம் |
ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் ஜ்ஞாத்வா மாம் சாந்திம் ருச்சதி || 29 ||

யஜ்ஞதபஸாம்—செய்யும் வைதிக கர்மாக்களுக்கு
भोक्तारम्—ஆராத்யனயிருந்து அனுபவிக்கின்றவனாகவும்
सर्वलोकमहेश्वरम्—ஆராதிக்கிறவர்கள் தேவதைகள் உள்பட எல்லோருக்கும் முதலீச்வரனாகவும்
सर्वभूतानां—எல்லா ஜீவர்கள் விஷயத்திலும்
सुहृदम्—நன்மையே நினைப்பவனாகவும்
मां ज्ञात्वा—என்னை நினைத்து
शान्तिम् ऋच्छति—கவலையற்றுச் செய்து முடிப்பான்.

எந்த தர்மத்திற்கும் நானே ஆராத்யனான படியாலே என்னால் பலன் வருவது திண்ணம். எனக்கு மேல் ஈச்வரனில்லையாகையால் வேறொருவன் ஆராத்யனாகான். யாரும் தடையும் செய்யார். ஈச்வரனை ஆராதிப்பதில் என்ன அபராதம் நேருமோ என்று அஞ்சவுமாகாது அஞ்சியே ஆராதிப்பதென்பதும் வேண்டா. நான் இனிய சிநேகிதன் எல்லோருக்கும். சினேகிதனுக்கு அன்புடன் உபசரிப்பது போல் மிக்க அன்புடன் எல்லாம் உத்ஸாஹத்துடன் செய்க. ப்ரீதி யென்ற பக்தி சேர்ந்த போது எல்லாம் ஒழுங்காக நிறைவேறும்.

ஐந்தாம அத்தியாயம் முற்றும்.

## இனி ஆறும் அத்தியாயம்

ஞானாகாரமான கர்மயோகம் சொல்லப் பெற்றது. இதனின்றே தலையான யோகம் ஸித்திக்கும் என்றறிவிப்பதற்காக கர்மயோகிக்கு அந்த யோகம் செய்யவாகும் தகுதியை ஒன்பது ச்லோகங்களாலே விளக்குகிறார். (பிறகு அந்த யோகத்தை விதிக்கப் போகிறார்)—

श्रीभगवानुवाच—பகவான் சொன்னார்—

अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः ।
स संन्यासी च योगी च न निरग्निर्न चाक्रियः ॥ १ ॥

அநாச்ரித: கர்மபலம் கார்யம் கர்ம கரோதி ய:
ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ ச ந நிரக்நி: ந சாக்ரிய: ‖ 1

कर्मफलं—கர்மாவின் பலனை
अनाश्रितः—அபேக்ஷிக்காமல்
कर्म—கர்மானுஷ்டானத்தை
कार्यम्—செய்ய வேண்டுமென்று மட்டும்
यः करोति—எவன் செய்கிறனோ,
सः—அந்த கர்மயோகியே
संन्यासी च—ஞான யோகியும்
योगी च—கர்மயோகியுமாகிறன்
निरग्निः—அக்னி மூலம் செய்ய வேண்டிய கர்மாவை விட்டவனும் அல்லன்
न अक्रियश्च—அக்னி வேண்டாதபடி செய்யவேண்டும் மற்ற கர்மாவை விட்டவனுமல்லன்.

கர்மயோகியே ஞானயோகியும் கர்மயோகியுமாகிறன். न निरग्निर्न चाक्रियः. கர்மயோகம் செய்யாதவனே ஞானயோகம் மட்டும் செய்கிறவனே அவ்வாருகான் என்னலாம். அக்னி என்ற சொல்லாலே அக்னியில் செய்யும் கர்மாக்களையும் क्रियः என்று மற்ற கர்மமாக்களையும் கொண்டால் கர்மாக்களையெல்லாம் விட்டவன் அவ்வாருகானென்னலாம. கர்மயோகத்தில் கர்மாம்சம் ஞானாம்சம் இரண்டுமிருப்பதால் அக்னிபதத்தாலே கர்மாம்சத்தையும் க்ரிய பதத்தாலே ஞானம்சத்தையும் கொண்டு ஒன்றைவிட்டவனும் அவ்வாருகான் என்றும் பொருளாம். ஆக இரண்டு அம்சங்களும் வேண்டுமென்றதாயிற்று.

यं संन्यासमिति प्राहुर्योगं तं विद्धि पाण्डव ।
न ह्यसंन्यस्तसंकल्पो योगी भवति कश्चन ॥ २ ॥

யம் ஸம்ந்யாஸ இதி ப்ராஹுர் யோகம் தம் வித்தி பாண்டவ,
ந ஹ்யஸந்ந்யஸ்தஸங்கல்போ யோகீ பவதி கச்சந ‖ 2 ‖

पाण्डव—அர்ஜுனு !
संन्यास इति—ஞானயோகமென்று
यं प्राहुः—எதனைச் சொல்லுவரோ
तं—அதுவாகவே
योगं—கர்மயோகத்தை
विद्धि—அறிவாயாக.
असंन्यस्तसंकल्पः-தேஹாதிகளை ஆத்மாவாக ப்ரமிப்பதை விடாத
कश्चन—எவனும்
योगी न हि भवति—கர்மயோகியாக மாட்டானே.

பல கர்மயோகிகளைக் கீழே கூறினேன். எல்லோருக்குமே தேஹாத்மப்ராந்தி நீங்கும்படி ஆத்மஞானம் வேண்டும். எனவே கர்மயோகத்தையே ஞான யோகமென்னலாம். (2)

ஆனல் கர்மயோகத்தை விடுவதெப்போதெனில், பலன் பெறும் வரை விடலாகாதென்கிருர்—

आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते । See Nr P. 28-6-67
योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते ॥ ३ ॥

ஆருருக்ஷோர்முநேர் யோகம் கர்ம காரணம் உச்யதே |
யோகாரூடஸ்ய தஸ்யைவ சம: காரணம் உச்யதே || 3 ||

योगम् आरुरुक्षोः—ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற விரும்பிய
मुनेः—ஆத்ம ஞானிக்கு
कर्म—கர்மயோகம்
कारणम् उच्यते—காரணமெனப்படும்.
योग आरूढस्य तस्य एव—ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்றவனுக்கே
शमः—கர்மயோகம் செய்யாமை
कारणम् उच्यते—காரணமெனப்படும்.

ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கான யோகமேற வேண்டியவன் கர்மயோகத்தை விடமுடியாது. அதற்கு அது காரணம். ஏறியவனுக்கு கர்மயோகத்தை விடுவதே அதற்குக் காரணமாகும். ஆகையால் அதற்குமுன் விடலாகாது. 'பலனைப் பெற்ற பிறகு கர்மயோகத்தைத் தானே விடமாட்டானோ மேலும் பிறகு கர்மயோகமில்லையென்றிவ்வளவே சொல்ல வேண்டும்; கர்மயோகத்தை விடுவதே காரணம் என்று அதனைக் காரணமாகக் கூறியதென் என்னில்—தலையான யோகம் செய்ய வேண்டும் ஸமயமெல்லாங்கூட கர்மயோகமே செய்வானாகில், யோகத்திற்கு இடமிராமற் போகுமே; ஆத்மதர்சனம் வாராதே என்று அந்த ஸமயம் கர்மானுஷ்டானத்தை விடுவதே அதற்கு அனுகூலமென்றதாம். நித்ய கர்மானுஷ்டான காலம் நீங்கலாக மிகுதியான காலத்தில் ஆத்மத்யானம் செய்வது. அந்த த்யானமே அனுஷ்டான காலத்தில் நீடிக்குமாகில் நித்ய கர்மாவையும் விட்டு யோகம் செய்யலாம்.

ஒருவனுக்கு ஆத்மாவைக் காணவாம் யோகம் நிலையுற்றதென அறிவதெங்ஙனே யென்னில்—

यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते । See Nr P. 28-6-67
सर्वसंकल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥ ४ ॥

யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ்வநுஷஜ்ஜதே |
ஸர்வஸங்கல்பஸந்ந்யாஸீ யோகாரூடஸ் ததோச்யதே || 4 ||

यदा हि—எப்பொழுது
इन्द्रियार्थेषु—இந்த்ரிய விஷயங்களில்
न अनुषज्जते—ஸம்பந்தப்படுவதில்லையோ.
कर्मसु—அதற்கான செயல்களிலும்
न अनुषज्जते—பற்றின்றியிருக்கிறானோ.
तदा—அப்போது
सर्वसंकल्पसंन्यासी—அஹங்கார மமகாரங்களை யெல்லாம் விட்ட அவன்
योग आरूढः—யோகமேறி விட்டவனாக
उच्यते—சொல்லப்படுகிறான்.

யோகமேறியவனுக்கு இந்த்ரிய விஷயங்களில் பற்று தானே போம். அதனால் அதன் மூலமான நிஷித்த கார்யங்களிலோ மற்ற லௌகிக

கார்யங்களிலோ மனம் செல்லாது. நித்ய கர்மானுஷ்டானமும் யோகமுமாகவே அவன் காலம் போகும். (4)

அதற்கு இவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்—

उद्धरेदात्मनाऽऽत्मानं नात्मानमवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥ ५ ॥

உத்தரேத் ஆத்மநாऽऽத்மாநம் நாத்மாநம் அவஸாதயேத் |
ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராத்மைவ ரிபுராத்மந: || 5 ||

आत्मना—(சுத்த)மனத்தினுல்
आत्मानम्—தன்னை
उद्धरेत्-ஸம்ஸாரத்தினின்று எடுக்க வேண்டும்.
आत्मना—(விஷயப் பற்றுள்ள) மனத்தினுலே
आत्मानं—தன்னை
न अवसादयेत्-கஷ்டப்படுத்தலாகாது
आत्मनः—தனக்கு
आत्मा एव हि—மனமே யன்றோ
बन्धुः—பந்துவாகும்.
आत्मा एव हि—மனமே யன்றோ
आत्मनः—தனக்கு
रिपुः—சத்ருவுமாகும்.

ஒன்றே பந்துவும் சத்ருவுமாமோ என்ன 'மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ:. பந்தாய விஷயாஸங்கி முக்த்யை நிர்-விஷயம் மந:' என்றபடி விரித்துரைக்கிறுர்—

बन्धुरात्माऽऽत्मनस्तस्य येनात्मैवाऽऽत्मना जितः ।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेताऽऽत्मैव शत्रुवत् ॥ ६ ॥

பந்துராத்மாऽऽத்மநஸ் தஸ்ய யேநாத்மைவாऽऽத்மநா ஜித: |
அநாத்மநஸ்து சத்ருத்வே வர்தேதாத்மைவ சத்ருவத் || 6 ||

येन—எந்த புருஷனுல்
आत्मना एव—தன்னுலேயே
आत्मा जितः—மனம் ஜெயிக்கப் பெற்றதோ,
तस्य आत्मनः—அவனுக்கு
आत्मा बन्धुः—மனம் பந்துவாகும்.
अनात्मनः तु—மனத்தை வெல்லாதவனுக்கோ
आत्मा एव—மனமே
शत्रुवत्—வெளி சத்ருவைப் போல்
शत्रुत्वे—விரோதம் செய்வதிலேயே
वर्तेत—இருக்கும்.

ஸம்பந்தமில்லாத வெளிசத்ரு எவ்வளவு பகை வைப்பானே, அவ்வளவு பகை அவன் மனமே அவனிடம் வைக்கும் அதை வெல்லாமல் விட்டால் வென்றுல் அதே மிகவும் அனுகூலமாகிறபடியால் அது இல்லாமல் இவனுக்கு ஒரு பலனுமில்லை யாகையால் வெளி சத்ருவைப் போல் அதை ஒழிக்கலாகாது. (6)

எவன் யோகாரூடன், எப்படி யோகாரூடனாவான் என்பது சொல்லப் பெற்றது. இனி, 'ஆத்மா விசதமாக சிந்திக்கப்படும்' என்றதற்குக் குறியான நிலையை யுணர்த்துகிறுர்—

जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः । See N. P. 28-7-58/59
शीतोष्णसुखदुःखेषु तथा मानावमानयोः ॥ ७ ॥

*ஜிதாத்மந: ப்ரசாந்தஸ்ய பராமாத்மா ஸமாஹித: |*
*சீதோஷ்ணஸுகதுக்கேஷு ததா மாநாவமாநயோ: || 7 ||*

शीत उष्ण सुख दुःखेषु...சீதம் உஷ்ணம் ஸுகம் துக்கம் நேர்ந்த போதும்
तथा मान अवमानयोः...அவ்வாறே பூசையும் பழித்தலும் நேர்ந்த போதும்
जितात्मनः... வாசியின்றி வென்ற மனமுடையனாய்
प्रशान्तस्य...வெளியிந்திரியங்களெல்லாம் அடங்கியிருப்பவனுக்கு
आत्मा...ஜீவ ஸ்வரூபமானது
परं समाहितः...மிகவும் அனுபவிக்க உரியதாகும்.

சீதோஷ்ணாதிகள் அறியப் பெறும். அதனால் மனம் வெளி யிந்த்ரியம் எல்லாம் மாறுபடாமலிருந்தால் ஆத்மானுபவம் செய்ய யோகத்தில் இறங்கலாம். (परमात्मा என்றவிடத்தில் பரம் ஆத்மா எனப் பிரிக்க.)

எப்படி அப்போது விகாரமற்றிருக்கிறான் எனில் காரணம் கூறுகிறார்—

ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः । See N. P. 28-7-59/61
युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः ॥ ८ ॥

*ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா கூடஸ்த்தோ விஜிதேந்த்ரிய: |*
*யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாச்மகாஞ்சந: || 8 ||*

ज्ञान...ஆத்மா தேஹத்திலும் வேறு என்ற தெளிவாலும்
विज्ञान...உபநிஷத்தில் ஓதிய அதன் உண்மை நிலையின் அறிவினாலும்
तृप्तात्मा...ஆத்ம விஷயத்தில் கலக்கமின்றி த்ருப்தி யடைந்தவனாய்
कूटस्थः...பல யோனிகளில் பிறக்கப் பொதுவாயிருக்கும் அந்த ஆத்மஸ்வரூபத்திலே நோக்குடன் நின்றவனாய்
विजित इन्द्रियः...அதனாலேயே இந்திரியங்களை வென்றவனாய்
सम लोष्टाश्म काञ्चनः-உடலிலும் உடலைச் சார்ந்தவற்றிலும் பற்றில்லை யாகையாலே பொன்னையும் கல்லு மண் கட்டிக்கு ஸமமாக உபேக்ஷிப்பவனுமான
योगी—கர்மயோகியானவன்
युक्त इति उच्यते—யோகம் செய்யத் தகுதி யுற்றவனாகிறான்.

அசேதநமான கல் கனகமெல்லாம் ஒன்றென்றார். சத்ரு, மித்ரன் என்றாற் போன்ற சேதனர்களிடமும் ஸமத்வ புத்தி வேண்டுமென்கிறார்.

सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबन्धुषु ।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥ ९ ॥

ஸுஹ்ருந்மித்ரார்யுதாஸீந மத்யஸ்த்தத்வேஷ்ய பந்துஷு ।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர் விசிஷ்யதே 9 ॥

सुहृत्—வயது வித்யாஸமிருந்து அன்பார்ந்த நன் மனம் உடையாரிடமும்
मित्र—ஸம வயதான தோழன்மாரிடமும்
अरि—சில காரணத்தைக் கொண்டு விரோதிப்பவரிடமும்
उदासीन —காரணமில்லையென்று சினேகம் பகையொன்றுமில்லாதாரிடமும்
मध्यस्थ—இயற்கையிலேயே நடுநிலையிலிருப்பவரிடமும்
द्वेष्य—பிறவியினின்றே அநிஷ்டத்தைத் தேடுகின்றவரிடமும்
बन्धुषु—பிறவியினின்றே நன்மை நாடுகின்றவரிடமும்
साधुषु अपि-நல்வழி நடப்பாரிடமும்
पापेषु च—பாபமே செய்கின்றவரிடமும்
समबुद्धिः—அனுகூல ப்ரதிகூல விபாகமற்ற மனமுடையன்
विशिष्यते—யோகத்திற்கு மிகவும் உரியனாவான்.

द्वेष्य என்றதால் யோகி அவனை த்வேஷிக்கிறனென்பதில்லை. உண்மையில் த்வேஷிக்கத் தகுந்தவனே, நிஷ்காரணமாக அவன் இவனுக்கு அநிஷ்டமே நினைப்பதால். ஆயினும் கர்மயோகி விவேகியான படியால் மித்ரனைப் போலவே நினைக்கிறன். सुहृत् मित्र என்ற இரண்டுக்கும் வாசியை உரையினின்று தெளிக; அவ்வாறே अरि द्वेष्य என்ற இரண்டுக்கும்; அங்ஙனமே उदासीन मध्यस्थ என்ற இரண்டுக்கும். (9)

இந் நிலை பெற்றவன் யோகம் செய்ய இயலுமென்றார். யோகம் செய்யும் முறையை யறிவிக்கிறார்—

योगी युञ्जीत सततमात्मानं रहसि स्थितः ।
एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥ १० ॥

யோகீ யுஞ்ஜீத ஸததம் ஆத்மாநம் ரஹஸி ஸ்த்தித: ।
ஏகாகீ யதசித்தாத்மா நிராசீ: அபரிக்ரஹ: ॥ 10 ॥

योगी—கர்மயோகியானவன்
रहसि स्थितः—ஜனஸஞ்சாராதிகளில்லாத இடத்தில் இருந்து கொண்டு
एकाकी—தன்னேடு ஒருவரைக் கூட்டிக் கொள்ளாமல்
यतचित्त आत्मा—வேறோர் உபாயத்தில் சிந்தையையும் மனம் போவதையும் விட்டு
निराशीः—ஒரு பலனையும் விரும்பாமல்
अपरिग्रहः—தனதென்ற அபிமானத்தை எங்கும் விட்டு
सततं—எந்நாளும் யோகத்திற்கு உரிய காலத்திலே
आत्मानं—ஆத்ம ஸ்வரூபத்தை
युञ्जीत—சுத்த மனத்திற்கு விஷயமாக்க வேண்டும்.

ஏகாந்தமான இடம் எவ்வாறிருக்க வேண்டும், உட்கார்ந்தா, நின்று த்யானம் செய்வது, எங்கே உட்கார வேண்டுமென்பவற்றை விரிவாகக் கூறுகிறார்—

शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।
नात्युच्छ्रितं नातिनीचं चेलाजिनकुशोत्तरम् ॥ ११ ॥
तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः ।
उपविश्याऽऽसने युञ्ज्यात् योगमात्मविशुद्धये ॥ १२ ॥

சுசௌ தேசே ப்ரதிஷ்ட்டாப்ய ஸ்த்திரம் ஆஸநம் ஆத்மந: |
நாத்யுச்த்ரிதம் நாதிநீசம் சேலாஜிநகுசோத்தரம் || 11 ||
தத்ரைகாக்ரம் மந:க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரிய: |
உபவிச்யாऽऽஸநே யுஞ்ஜ்யாத் யோகம் ஆத்மவிசுத்தயே || 12 ||

शुचौ देशे—அசுத்தமான ஜனங்களுடையவும் வஸ்துக்களுடையவும் ஸம்பந்தமற்றும் சுத்தமுமான இடத்தில்
आत्मनः—தனக்கு
स्थिरम्—அசையாததும்
न अति उच्छ्रितम्—அதிக உயரமின்றியுள்ளதும்
न अति नीचम्—மிகத் தாழ்ந்ததாகாதும்
चेल अजिन कुश उत्तरम्—தன் மேல் பட்டு மான்தோல் தர்ப்பம் ஒன்றுமேலொன்றாகக் கொண்டதுமான
आसनं—ஆஸனத்தை
प्रतिष्ठाप्य—அமர்த்தி
तत्र आसने—அந்த ஆஸனத்தில்
उपविश्य—உட்கார்ந்து
यतचित्त इन्द्रियक्रियः—மனம் வெளியிந்திரியம் இவற்றின் செயலொன்றுமின்றி
मनः एकाग्रं कृत्वा—மனத்தை யோகம் ஒன்றிலே நோக்குடையதாகச் செய்து
आत्मविशुद्धये—ஆத்மாவுக்கு ஸம்ஸார விமோசனத்திற்காக
योगं युञ्ज्यात्—யோகம் செய்ய வேண்டும்.

स्थिरम—மரம் முதலானவற்றால் செய்த ஆஸனமாகில் ஸ்த்திரமாய் அசையாமலிருக்கும். चेलाजिन कुशोत्तरम् அஜினம் இடையில். चेलाजिन कुशाः उत्तरं यस्मिन् आसने तत् । சங்கர பாஷ்யத்திற் போல் குசாஜிநசேலோத்தரமென்று பொருள் கொள்வதும் உண்டு. उपविश्यासने—முதுகுக்குச் சார்ந்து கொள்ள ஸௌகர்யமாகப் பலகையும் வேண்டுமென்று मा[illegible] आसने என்பர். (12)

யோகத்திற்காக உட்கார்ந்த பிறகு அங்கங்களை அமைத்துக் கொள்ள வேண்டும் வகையையும் ஆத்மாவில் மனம் திருப்பினவுடன் செய்ய வேண்டும் மற்றொன்றையும் (அதாவது) தன் (பரமாத்ம) விஷயமான த்யானத்தையும் உபதேசிக்கிறார்—

समं कायशिरोग्रीवं धारयन् अचलं स्थिरम् ।
संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥ १३ ॥
प्रशान्तात्मा विगतभीः ब्रह्मचारिव्रते स्थितः ।
मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥ १४ ॥

ஸமம் காயசிரோக்ரீவம் தாரயந் அசலம் ஸ்த்திரம் |
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசச்சாநவலோகயந் || 13 ||
ப்ரசாந்தாத்மா விகதபீ: ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்த்தித: |
மந: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: || 14 ||

कायशिरोग्रीवम्—உடல் தலை மிடறு இவற்றை
समम्—ஸமமாக (நிமிர்த்து)
अचलम्—அசையாதபடி
स्थिरम्—சார்மணையிருப்பதால் பின் பக்கமும் சாயாதபடி
धारयन्—தரித்துக் கொண்டு
दिशः च—திக்குகளையும் அங்குள்ள வஸ்துக்களையும்
अनवलोकयन्—பாராமைக்காக
स्वं नासिकाग्रं—தன் மூக்குமுனையை
संप्रेक्ष्य—கண் பார்வை படுவதாக்கி (அதனைக் காண்பதையும் விட்டு)
प्रशान्तात्मा—ஆத்மானுபவத்திலே த்ருப்தி பெறும் மனம் உடையனாய்
विगतभीः—ஏதேனும் கேடு நேறுமோ என்ற அச்சமுமின்றி
ब्रह्मचारिव्रते स्थितः-தன் ஸ்த்ரீதர்சநாதிகளையும் விட்டு
मनः संयम्य—மனத்தை ஆத்ம விஷயமாக்கி, அது நிலைப்பதற்காக
मच्चित्तः—என்னை போக்யமாக நினைத்து
मत्परः—என்னையே உயர்ந்த வஸ்துவாக நினைப்பவனாய்
युक्तः—அக்கரையுடன்
आसीत—இருக்க வேண்டும்.

இரண்டாவது ச்லோகத்தில் मच्चित्तो युक्त आसीत मत्परः என்றது புது விஷயம். ஆத்ம த்யானத்திற்கு இழிந்தவன் பகவானை த்யானம் செய்ய வேண்டும். मच्चित्तः मत्परः. உலகில் ஸ்த்ரீ முதலானவரிடம் சித்தம் போகும். போக்யமாக நினைக்கப்படும் அது உயர்ந்த வஸ்துவாகாகாது. அரசன் முதலானோர் பரமாவார். அவர் போக்யமாகமாட்டார். அவ்வாறின்றி, நானே போக்யமுமாகிறேன்; பரனுமாகிறேன் என்பதற்காக இச் சொற்கள் இரண்டுமாம். ஜீவாத்ம த்யானத்திற்காக உட்கார்ந்தவன் அதை விட்டுத் தன்னை த்யானம் செய்ய வேண்டுமென்றதாயிற்: संप्रेक्ष्य என்று கண்பதிவுக்காகச் சொன்னதத்தனை, மூக்கை ஊன்றிட பார்ப்பதன்று. स्वं என்றது பிறர் மூக்கையோ த்யானம செய்யும் பகவானின் மூக்கையோ காண்படுதன்னைமைக்காக (14)

ஜீவாத்மாவைச் சிந்தனை செய்யுமிடத்திலே அதைவிட்டு பகவானை த்யானம் செய்வது எதற்கெனில், அதன் பலனை அருளிச் செய்

கிறார்—ஆத்மா போக்யமானாலும் பரமாகாது. த்யான விரோதியைப் போக்காது. அதைப் போக்கி உதவுகின்றவன் பரனான நான் என்றறிவித்தபடி—

युञ्जन्नेवं सदाऽऽत्मानं योगी नियतमानसः ।
शान्तिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ॥ १५ ॥

யுஞ்ஜந் ஏவம் ஸதாऽऽத்மாநம் யோகீ நியதமாநஸ: |
சாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்த்தாம் அதிகச்சதி || 15 ||

योगी—ஆத்மத்யானத்திலிழிபவன்
सदा—ஜீவாத்ம த்யானத்தின் போதெல்லாம்
एवं—கீழ்க்கூறியவாறு
आत्मानं युञ्जन्—மனத்தை என் திவ்ய மங்கள விக்ரஹத்தில் நிறுத்தி
नियतमानसः—மனச்சுத்தி பெற்றவனாய்
निर्वाणपरमां—ஸுகத்தின் முழு எல்லையான
मत्संस्थाम्—என்னிடமுள்ளதான
शान्तिम्—சாந்தியை
अधिगच्छति—பெறுகிறான்.

மனத்தை பகவானின் திவ்யமங்கள விக்ரஹத்தில் நிறுத்தினால் அது சுபாச்ரயமாகையாலே மனத்திற்குள்ள சஞ்சலத்தைப் போக்கும், ஒன்றிப் பதியவைக்கும், சாந்தியை யளிக்கும், சாந்தியாவது ஊர்மிஷட்கமின்மை. ஆறு ஊர்மிகளாவன—अशनायापिपासे शोकमोहौ जरामृत्यू. இவையில்லாமை எனக்கு எப்போதும். இந்த என் நிலை இவனுக்குமாம். இவற்றின் வாதையின்றி ஆத்மத்யானம் நிறைவேறுமென்றபடி. ஆத்மாவைக் கண்டபிறகு செய்யும் பகவத்தியானமாவது பகவானின் திவ்யாத்மஸ்வரூபத்தின் த்யானம். ஆத்மத்யானத்திற்கு முன்னான இந்த பகவத்யானம் அவனது திருமேனியின் த்யானமே. (15)

இப்படி பகவத்தியானம் ஆத்மத்யானத்திற்கு முன் வேண்டுமென்றதாயிற்று. மற்றும் சில அம்சங்கள் வேண்டுமென்கிறார்—

नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।
न चातिस्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥ १६ ॥
युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥ १७ ॥

நாத்யச்நதஸ்து யோகோऽஸ்தி ந சைகாந்தம் அநச்நத: |
ந சாதிஸ்வப்நசீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுந || 16 ||
யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு |
யுக்தஸ்வப்நாவபோதஸ்ய யோகோ பவதி துக்கஹா || 17 ||

अर्जुन—அர்ஜுநா!
अत्यश्नतः—அதிகமாய் உண்கிற வனுக்கு
योगः नास्ति—யோகம் ஏற்படாது.
एकान्तम्—ஒரே முடிவாக
अनश्नतश्च न—உண்ணுதவனுக்கும் இல்லை
अतिस्वप्नशीलस्य च न—மிக்க உறக்கமே இயற்கையானவனுக்கு மில்லை
जाग्रतः एव च न—விழித்தேயிருப்ப வனுக்கும் இல்லை.
युक्त आहार विहारस्य—மிதமான ஆஹாரமும் நடையுமுடையனுய்
कर्मसु—வேலைகளிலே
युक्तचेष्टस्य—மிதமான தேஹாயாஸமுடையனுய்
युक्त स्वप्नावबोधस्य—உறக்கமும் விழிப்பும் திட்டமாக உடையனுமானவனுக்கு
दुःखहा—துக்கம் போக்கும்
योगो भवति—யோகம் இடம் பெறும்.

கீழே (8) युक्त इत्युच्यते योगी என்று யோகம் தொடங்கத் தகுதி யாருக்கு என்பதைக் கூற ஆரம்பித்தார். யோக சாதனைக்கு வேண்டும் ஸாதனங்களை, ஆஸனுதிகள் பகவத் பஜனம் ஆஹார ஆயாஸாதிகளின் மிதம் எல்லாம், கூறிய பிறகு அதை முடிக்கிருர்—

**यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।** See Nr. P. 28-1-54

**निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥ १८ ॥**

யதா விநியதம் சித்தம் ஆத்மந்யேவாவதிஷ்டடதே ।
நிஸ்ஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்ய: யுக்த இத்யுச்யதே ததா || 18 ||

यदा—எப்போது
चित्तं विनियतं—மனம் நன்கு அடக்கப் பெற்று
आत्मनि एव—ஜீவாத்ம விஷயத்திலேயே
अवतिष्ठते—நிலையுறுகிறதோ,
तदा—அப்போது
सर्वकामेभ्यः—காமங்கள் எல்லாவற்றினும்
निः स्पृहः—ஆசை விலகினவனை அவன்
युक्त इति—யோகம் தொடங்கத் தக்கவனுக
उच्यते—சொல்லப்படுகிருன்.

ஆத்மாநுபவ தசைக்கு ஓர் உவமை காட்டுகிருர்—

**यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।** See Nr. P. 28-1-55

**योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥ १९ ॥**

யதா தீபோ நிவாதஸ்த்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா |
யோகிநோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோகம் ஆத்மந: || 19 ||

निवातस्थः—காற்றில்லாத இடத்தில் நின்ற
दीपः यथा—விளக்கு எவ்வாறு
न इङ्गते—அசையாமலிருக்கிறதோ,
सा—அந்த வகையானது
यतचित्तस्य—மனத்தை அடக்கிய
योगिनः—யோகியினுடைய
योगं युञ्जतः—யோகத்துடன் கூடிய
आत्मनः—ஆத்மாவிற்கு
उपमा—ஒப்புமையாக
स्मृता—பெரியோர்களால் நினைக்கப்படும்.

யோகியானவன் மனத்தை ஆத்மாவில் நிறுத்தி த்யானம் செய்யும் போது ஆத்மாவானது தன் ஞானத்தினுல் தன்னையே அறிந்து கொண்டிருக்கும். தளராத தன் அறிவுடன் சேர்ந்த அந்த ஆத்மாவின் நிலைக்கு காற்றில்லாத இடத்தில் அசையாமல் ஒளியுடன் விளங்கும் தீபம் ஒப்புமையாகும். தீபமானது யோகம் செய்யும் போது அசையாத உடலுக்கு உவமையாக இங்குக் கூறப்படவில்லை. ஆத்ம த்யானமின்றி வேறு த்யானத்திலும் வேறு ஸமயத்திலும் அவ்வாறேயாமே. வெறும் ஆத்மா ஸ்வயம்ப்ரகாசமாயிருப்பதால் அதற்கு தீபம் த்ருஷ்டாந்த மாகில் எப்போதுமே யாகும். ஆத்மா அனேகமாய் எப்போதும் அசையாமல் தான் இருக்கும். ஆகையால் ஆத்மா வொன்றையே பற்றி நிலைத்த யோக ஞானத்துடன் கூடியுள்ள ஆத்மாவிற்கு ஒளியுடன் அசையாத தீபம் த்ருஷ்டாந்தமென்க. (19)

யோக தசையில் பேற்றின் பெருமையை விளக்கி உத்ஸாஹப் படுத்துகிருர்—

यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवाऽऽत्मनाऽऽत्मानं पश्यन् आत्मनि तुष्यति ॥ २० ॥
सुखमात्यन्तिकं यत्तत् बुद्धिग्राह्यमतीन्द्रियम् ।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥ २१ ॥
यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन् स्थितो न दुःखेन गुरुणाऽपि विचाल्यते ॥ २२ ॥
तं विद्याद् दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् । (चेतया)
स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥ २३ ॥

யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா |
யத்ர சைவாऽऽத்மநாऽऽத்மாநம் பச்யந் ஆத்மநி துஷ்யதி || 20 ||
ஸுகமாத்யந்திகம் யத்தத் புத்திக்ராஹ்யம் அதீந்த்ரியம் |
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்த்திதச் சலதி தத்வத: || 21 ||
யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத: |
யஸ்மிந் ஸ்த்திதோ ந துக்கேந குருணாऽபி விசால்யதே || 22 |
தம் வித்யாத் துக்கஸம்யோகவியோகம் யோகஸம்ஜ்ஞிதம் |
ஸ நிச்சயேந யோக்தவ்யோ யோகோऽநிர்விண்ணசேதஸா || 23 ||

योगसेवया—யோகத்திற்கான பயிற்சியால்
निरुद्धं—வேறிடம் புகாதபடி காக்கப் பட்ட
चित्तं यत्र—மனது எந்த யோகத்தில்
उपरमते-நிலைத்து ருசிகொள்கிறதோ,
यत्र—எந்த யோகத்தில்
आत्मना—மனத்தினுல்
आत्मानं—ஆத்மாவை
पश्यन्—காண்கின்றவனுய்
आत्मनि एव—காணும் ஆத்ம விஷயத் திலேயே
तुष्यति च—த்ருப்தியும் பெறுகிருனே,

यत्र—எந்த யோகத்தில்
यत् तत्—சாஸ்த்ர ப்ரஸித்தபடியான
अतीन्द्रियम्—புலன்கள்மூலம் பெற வாகாத
बुद्धिग्राह्यम्—மனம் ஒன்றாலேயே அறியத்தக்க
आत्यन्तिकम्—இடையிடை துக்கம் கலசாத
सुखं वेत्ति—ஸுகத்தை உணர்கின்றானோ.
यत्र—எந்த யோகத்தில்
स्थितः—நின்றவன் ஸுகம்மிக்கிருப்பதால்
तत्त्वतः—அந்நிலையினின்று
न चलति च—அசைகின்றானல்லனுமோ.

---

यं लब्ध्वा-எந்த யோகத்தைப் பெற்ற பிறகு
अपरं लाभं—யோகத்தைவிட்ட ஸமயத்தில் வரும் வேறு லாபத்தை
ततः अधिकं—அனுபவித்ததைவிட மேம்பட்டதாக
न मन्यते—நினைப்பதுமில்லையோ,
यस्मिन्—எந்த யோகத்தில்
स्थितः—இருந்தவன்
गुरुणा दुःखेन अपि—விட்ட ஸமயத்தில் கனமான துக்கத்தினாலும்
न विचाल्यते-விலக்கப்படமாட்டானோ

---

दुःखसंयोगवियोगं—துக்கக்கலப்புக்கு எதிரியான
तं—அப்படிப்பட்ட யோகத்தை
योगसंज्ञितं—யோகமென்ற பெயர் பெற்றதாக
विद्यात्—அறிய வேண்டும்.
सः योगः—அப்படி புருஷார்த்தமான யோகமானது
निश्चयेन—கூறியபடி நிச்சயமுற்றதால்
अनिर्विण्णचेतसा—வருத்தத்திற்கு மாறாக பகிழ்ச்சியுற்ற மனமுடையவனால்
योक्तव्यः—செய்யத் தொடங்கவாகும்.

முதல் மூன்று ச்லோகங்களில் ஆறு பாகங்களால் ஆறு அம்சங்கள் அடைவாகக் குறிக்கப்பெற்றன. அவையாவன-வேறு விஷயங்களினின்று மனத்தை விலக்கியிருத்தல், வேறொன்று வேண்டாமை, ஆத்மஸ்வரூப ஸுகானுபவம், அவ்வனுபவத்திற்கு சுயமாகவே தொடர்ச்சி, யோகத்தினின்று எழுந்த பிறகும் வேறொரு ஸுகத்தை மதியாமை, கனமான துக்கம் சூழ்ந்தாலும் கலக்கம் அற்றிருக்கை என்பனவாம். நான்காம் ச்லோகம் இப்படி புருஷார்த்தமாயிருப்பது கண்டு வருந்தாமல் விசேஷ உத்ஸாஹத்துடன் இழியவேண்டுமென்கிறது.

यत्रोपरमते चित्तं निरुद्धम् என்றபடி விஷயங்களினின்று விலக்கின பிறகு தான் யோகத்தில் சுவைப்பு. ஆகையால் முதலில் அச்சுவைப்பில்லையே என்று வெறுக்காமல் மெதுவாக விஷயங்களினின்று விலக்கலைப் பயில வேண்டுமென்கிறார்—

संकल्पप्रभवान् कामान् त्यक्त्वा सर्वान् अशेषतः ।
मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥ २४ ॥

शनैश्शनैरुपरमेत् बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किञ्चिदपि चिन्तयेत् ॥ २५ ॥

ஸங்கல்பப்ரபவாந் காமாந் த்யக்த்வா ஸர்வாந் அசேஷத: |
மநஸைவேந்த்ரியக்ராமம் விநியம்ய ஸமந்தத: || 24 ||
சநைச்சநைருபரமேத் புத்யா த்ருதிக்ருஹீதயா |
ஆத்மஸம்ஸ்ததம் மந: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் || 25 ||

संकल्पप्रभवान्—மமகார மூலமாக ஏற்பட்ட
कामान् सर्वान्—இஷ்ட விஷயங்களை யெல்லாம்
मनसा एव—நமதல்ல என்ற நினைவால்
अशेषतः—ஸ்வரூபத்துடனே
त्यक्त्वा—விட்டு (சீதோஷ்ணாதிகள் போன்றவற்றில் உணர்ச்சியை மட்டும் விட்டு)
इन्द्रियग्रामम्—எல்லா இந்திரியங்களையும்
समन्ततः—எல்லா விஷயத்தினின்றும்
विनियम्य—திருப்பி
धृतिगृहीतया—தைர்யத்தினால் தொடரப் பெற்ற
बुद्ध्या—விவேகத்தினால்
शनैः शनैः—சிறிது சிறிதாக
उपरमेत्—வேறு விஷயத்தினின்று விலக வேண்டும்
मनः—பிறகு மனத்தை
आत्मसंस्थं कृत्वा—ஆத்மாவில் நிறுத்தி
किञ्चित् अपि—வேறொன்றையும்
न चिन्तयेत्—(மனத்தினாலும்) நினைக்காமலிருக்க வேண்டும்.

தாமாக மேலே படுவதால் இஷ்டமானவை சீதோஷ்ணாதி காமங்கள். தேஹாத்ம ப்ரமம் மூலம் வந்த மமகாரத்தாலே இஷ்டமானவை மனைவி மக்கள் முதலான காமங்கள். முதல் வகுப்புத் தானே வருவதாகையால் அதன் வரவைத் தடுக்கவாகாது. அதனால் ஸுக துக்க வுணர்ச்சியை விடவேண்டும். இரண்டாம் வகுப்பை ஸ்வரூபத்தாலும் விடலாம். யோகம் செய்யும்போது பிறரைச் சேர்த்துக் கொள்ளாமலிருக்க வேண்டுமே. (25)

शनैश्शनैः என்பதை விரித்துரைக்கிறார்—

यतोयतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥ २६ ॥

See Nr 12810-52/53

யதோ யதோ நிச்சரதி மநச்சஞ்சலம் அஸ்த்திரம் |
ததஸ்ததோ நியம்யைதத் ஆத்மந்யேவ வசம் நயேத் || 26 ||

चञ्चलम्—சலிப்பதே ஸ்வபாவமாய்
अस्थिरम्— ஆத்மாவில் ஸ்த்திரப் படாத
मनः—மனமானது
यतः यतः—எந்தெந்த விஷயத்திலே
निश्चरति—வெளி செல்லுமோ,
ततस्ततः—அந்தந்த விஷயத்தினின்று
एतत्—இம் மனதை
नियम्य—திருப்பி
आत्मनि एव—ஆத்மாவினிடமே (ஸுகத்தைக் கருதி)
वशं नयेत्—வசமாக்கிக் கொள்ள வேண்டும்.

மேன்மேல் எல்லாம் அடைவாகக் கூட ஆத்மாநுபவ ஸுக மென்கிறார்—

**प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।**
**उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥ २७ ॥**

*ப்ரசாந்தமநஸம் ஹ்யேநம் யோகிநம் ஸுகமுத்தமம் ,*
*உபைதி சாந்தரஜஸம் ப்ரஹ்மபூதம் அகல்மஷம் ¦ 27 ॥*

இந்த ச்லோகத்தில் அந்வயம் இவ்வாறு—योगिनम् अकल्मषं शान्तरजसं प्रशान्तमनसं ब्रह्मभूतमेनं उत्तमं सुखमुपैति हि ।

**योगिनम्**—கீழ்க் கூறியபடி ஆத்மாவில் மனம் வைத்தவனாய்
**अकल्मषम्**...பாபங்களைப் போக்கியவனாய்
**शान्तरजसम्** . அதனால் ரஜோகுணம் அழிய
**प्रशान्तमनसम्**.. ஆத்மாவினிடத்தில் நின்ற மனமுடையனாய்
**ब्रह्मभूतम्**.. சுயரூபத்தை அறிந்ததால் தேஹாத்ம ப்ரமாதிகள் வெகு தூரம் விலகவான
**एनम्** . இந்த மஹானை
**उत्तमं सुखम्**...உயர்ந்த ஆத்மானுபவமானது
**उपैति हि**...தானே அணுகுமே.

ஆத்ம யோகம், பாபநாசம், ரஜோநாசம், மனத்தில் சஞ்சலம் அழிதல், தேஹாத்ம ப்ரமாதிகளின்றி ஸ்வரூபத்திலே நிஷ்டை, ஸுகானுபவமென்கிற அடைவாம்.

ஆத்மானுபவம் பெற்றவன் தினந்தோறும் தொடர்ச்சி கொண்டால் அனாயாஸமாய் அது நீடிக்குமென்கிறார்—

**युञ्जन् एवं सदाऽऽत्मानं योगी विगतकल्मषः ।**
**सुखेन ब्रह्मसंस्पर्शमत्यन्तं सुखमश्नुते ॥ २८ ॥**

*யுஞ்ஜந் ஏவம் ஸதாऽऽத்மாநம் யோகீ விகதகல்மஷ: ।*
*ஸுகேந ப்ரஹ்மஸம்ஸ்பர்சம் அத்யந்தம் ஸுகம் அச்நுதே ॥ 28 ॥*

**योगी**—யோகம் செய்பவன்
**एवं**—ஆத்மானுபவம் வரும்படி
**आत्मानं युञ्जन्**—ஆத்மத்யானம் செய்கிறவன்
**विगतकल्मषः**—அதனால் பாபம் கழியவே
**ब्रह्मसंस्पर्शम्**-சுத்தாத்மானுபவமாகிற
**अत्यन्तम्**—நீடிக்கின்ற
**सुखम्**—சுகத்தை
**सुखेन**...அனாயாஸமாக
**सदा अश्नुते**...எப்போதும் அடைகிறான்.

இதற்கு முன் போல் அதிக முயற்சி வேண்டுவதில்லை. வேண்டும் போதெல்லாம் அவ்வனுபவத்தில் அமிழ்ந்திருக்கலாம். (28)

ஆத்மானுபவம் வந்தது ஸமதர்சனமாகும். அதாவது—எல்லா ஆத்மாவும் ஒன்றொடொன்று ஒத்திருப்பதால் தன் ஆத்மாவைக்காணவே எல்லா ஆத்மாக்களையும் கண்டதுபோலாகை. அவ்வொற்றுமையை

நான் த விதமாகப் பிரிக்கும்போது நாலு நிலைகளாகும். அந் நான்கை நான்கு ச்லோகங்களால் அறிவிக்கிறார்—முதலாவது—

सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चाऽऽत्मनि ।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥ २९ ॥

ஸர்வபூதஸ்த்தம் ஆத்மாநம் ஸர்வபூதாநி சாऽऽத்மநி |
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சந: || 29 ||

योगयुक्तात्मा...யோகத்திஞல் ஆத்மானுபவம் பெற்றவன்
सर्वत्र-எல்லா ஆத்மாக்களினிடமும்
समदर्शनः. ஸமமான ஆகாரத்தைக் காண்கின்றவனாய்,
आत्मानं தன்னை
सर्वभूतस्थम्-எல்லா ஆத்மாக்களிலும் இருப்பதாக
सर्वभूतानि. எல்லா ஆத்மாக்களையும்
आत्मनि च-தன்னிடத்திலும் இருப்பதாக
ईक्षते...காண்கிறான்.

ஓர் ஆத்மா மற்றோர் ஆத்மாவுக்கு ஆதாரமன்று. இது அதிலும் அது இதிலும் இருப்பதாகச் சொல்லவும் முடியாது. அப்படியிருக்க ஒவ்வொன்றிலும் மற்றொன்றைக் காண்பதென்னெனில்—ஒன்றைக் காண்பதே எல்லாம் காண்பதாகிறதென்ற கருத்தாம். தன்னை த்யானம் செய்தவனுக்குத் தன்னுடைய அனுபவந்தான் உண்டு. ஆனாலும் எல்லாம் அனுபவித்தது போலாகிறது. எவ்வாறெனில். அதை விளக்க समदर्शनः என்ற சொல். ஆத்மாக்களுக்கு ஸாம்யமிருப்பதைக் கண்டிருப்பதால் இவ்வாறாம். இங்கே கருதிய ஸமமான ஆகாரமாவது—தேஹத்தைக் காட்டிலும் வேறாய் ஜ்ஞாநாகாரமாயிருக்கை. இது ஸம்ஸார தசையிலும் இருப்பதாகும். அஹம் என்று தானே ப்ரகாசிப்பதால் ஆத்மா ஒவ்வொன்றும் ஞானஸ்வரூபமாகும். (29)

இனி பரமாத்மாவோடு உள்ள சிறந்த ஸாம்யத்தை இருவிதமாக இரண்டு ச்லோகங்களாலே அறிவிக்கிறார்—

यो मां पश्यति सर्वत्र सर्वञ्च मयि पश्यति ।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥ ३० ॥

யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வஞ்ச மயி பச்யதி |
தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸ ச மே ந ப்ரணச்யதி || 30 ||

यः मां...எவனொருவன் என்னை
सर्वत्र पश्यति...எல்லா ஆத்மாக்களிலும் காண்கிறானோ.
सर्वं.. எல்லா ஆத்மாவையும்
मयि पश्यति च...என்னிடத்திலும் காண்கிறானோ,
तस्य अहम्...அந்த யோகிக்கு நான்
न प्रणश्यामि...காணவாகாமலிருப்பதில்லை.
स च मे...அவனும் எனக்கு
न प्रणश्यति...காணவாகாமலிரான்.

இது ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்குமுள்ள ஒற்றுமையைச் சொல்லுகிறது. முன் சொன்னதே அதாவது ஜ்ஞாநாகாரமென்பதே பரமாத்ம விஷயத்திலும் ஒற்றுமையாகலாம். அதற்காகத் தனி ச்லோகம் வேண்டுவதில்லை. ஜ்ஞாநாகாரனாயிருந்தாலும் தன்னை ஜீவன் பாபியாக நினைப்பதால் 'அவ்வாறின்றி அபஹதபாப்மா என்ற தன்மையே இவனுக்குமுள்ளது அது மோக்ஷத்திலும் தெரியவரும். இப்போதுள்ள பாபம் இயற்கையானதன்று' என்று தெரிந்துகொண்டு அபஹதபாப்மாவாகத் தன்னை உபாஸிக்க வேண்டும். அவ்வாறு உபாஸனத்தினால் அவ்வாறு அனுபவம் வந்த போது பரமாத்மாவோடு ஒப்புமையைக் கண்டதால் பரமாத்மாவையே கண்டது போலாம். இது வேதத்தில் ஓதப் பெற்ற ஸாம்யம். "புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யம் உபைதி" என்கிறதே முண்டகோபநிஷத்து. ஜீவாத்மா தன்னை இவ்வாறு கண்டால் அது என்னைக் கண்டது போலவே என்பதற்காக तस्याहं न प्रणश्यामि என்றார். நாலாம் பாதம் எதற்கென்னில், என்னை நான் அபஹதபாப்மாவாகக் கண்டு கொண்டிருக்கிறேனே, இதுவே எனக்கு அவனையும் கண்டது போலாகிறபடியால் அவனுக்கும் தன்னைக் காண்பது என்னைக் காண்பதாகுமே என்று அதனை ஊர்ஜிதப்படுத்துகிறார். அதனால் அந்த ஸாம்யம் உண்மையானது, ஸ்தோத்ரமன்று. அவ்வாறே நானும் காண்கிறேனாதலின் என்றதுமாயிற்று.

மற்றொரு விதத்திலும் தனது ஸாம்யத்தை ஜீவன் அனுபவிக்கிறானென்கிறார்—

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥ ३१ ॥

ஸர்வ பூதஸ்த்திதம் யோ மாம் பஜத்யேகத்வம் ஆஸ்த்தித: |
ஸர்வதா வர்தமாநோऽபி ஸ யோகீ மயி வர்ததே || 31 ||

यः.. எந்த யோகி
एकत्वम् आस्थितः--எனக்கும் தனக்கும் ஸாம்யத்திலே ஊன்றினவனாய்
सर्वभूतस्थितं ...எங்கும் ஸம்பந்தப்பட்டிருக்கும்
मां भजति... தன்னை அனுபவிப்பது மூலம் என்னை அனுபவிக்கிறானோ,
सः योगी...அந்த யோகியானவன்
सर्वथा யோகத்தை விட்டு வெளி வியாபாரமாய்
वर्तमानः अपि இருக்கும் போதும்
मयि वर्तते ..என் அனுபவமுள்ளவனாகிறான்.

ஸம என்கிற சொல்லுக்கு ஏகம் என்னும் பொருள் கிடையாது. ஏகம் என்ற சொல்லை ஸமம் என்ற பொருளிலும் வழங்குவர். ஆகையால் இங்கே ஏகத்வம் முன்னுக்கும் பின்னுக்கும் இணங்க ஸமத்வமே. கீழே ஒரு ஸமத்வம் கூறப்பெற்றது. அது பாபமில்லாமை, அநிஷ்ட

நிவ்ருத்தி. அதற்கு மேல் வரும் இஷ்ட ப்ராப்தி யென்பது இங்கே கூறப்படும் வேதமும் 'அபஹதபாப்மா விஜர:' என்று அநிஷ்ட நிவ்ருத்தியைத் தொடங்கி ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:' என்று இஷ்ட ப்ராப்தியிலே முடிக்கிறது. பாபமெல்லாம் கழிந்த பிறகே ஜீவனுக்கு இயற்கையான ஞானமானது முழு மலர்ச்சியைப் பெறுகிறது, அழுக்கு அகன்ற பிறகு மணியில் ஒளி வீசுமா போலே. அந்த ஞானத்தினாலே எல்லாவற்றையும அவற்றுடன் தனக்குள்ள ஸம்பந்தத்திற்குத் தக்க வாறு அனுபவிக்கிறான், இப்படி எங்கும் பரவிய ஞானமுடையனாகை யும் பகவானோடு ஜீவனுக்கு வரும் ஸாம்யம். இது இந்த ச்லோகத்தில் எங்கே கூறப் பெற்றதென்னில், இரண்டு ச்லோகங்களால் இரண்டு ஸாம்யங்களைச் சொல்வதால் எது முன் மொழியத் தக்கதென்று ஆராய்ந்தால் இது தானே தேறுவதாம.

அன்றி, सर्वभूतस्थितं என்ற அடைமொழி இதற்காகவே உள்ளதென்க. எல்லாவிடத்திலும் ஸம்பந்தப்பட்டிருகையென்ற ஒப்புமை இங்கே கருதப்பெறும். பரமாத்மா எங்கும் பரந்துள்ளனாலும் ஜீவன் அணுவா யிருப்பவன் தர்மபூதஞானத்தைக்கொண்டே எங்கும் ஸம்பந்தப்படு வான. एकां शाखां जीवो जहाति, अथ सा शुष्यति என்ற உபநிஷத்து "மரத்தி லிருக்கும் ஜீவன் தன் உணர்ச்சியை எந்தக் கிளையினின்று இழுத்து விடுகிறானோ, அப்போது அது உலர்ந்து விடும்" என்று உணர்ச்சியின் ஸம்பந்தமே ஜீவஸம்பந்தம் என்கிறது. இப்படி ஞானத்தைக்கொண்டு பரந்திருக்கை இவனுக்கும் பகவானுக்கும் உண்டாகையால் அதே இவ் அடைமொழியால் கூறப்பெற்றதாம். ஞானத்தைச் சொன்னால் ஆனந் தத்தையும் சொன்னதேயாம். அனுகூல ஜ்ஞானமே ஆனந்தமெனப் படும். ஆக முதல் ச்லோகத்தில் ஜீவன் ஜ்ஞான ஸ்வரூபனென்றதால் ஆனந்த ஸ்வரூபனென்றும், இங்கே எங்கும் பரவும் ஞானம் குண மென்றதால் ஆனந்தத்தை குணமாக உடையன் என்றும் சொல்லாம லே விளங்கும். இந்த யோகி தன்னை எங்கும் பரவும் ஞானம் தனக்கு தர்மமென யோகத்தில் அனுபவித்தால் அவ்வொத்துமையாலே பரமாத்மாவையும் அனுபவித்தது போலாகிறது. சாஸ்திரமூலம் ஸாம் யத்தை உணர்ந்திருப்பதால் அவனையும் கண்டது போலவே நினைக் கிறான். உண்மையில் பரமாத்மஸ்வரூபத்தையே காண்பதென்பது பக்தி யோகத்திற்குப் பிறகேயாகும். இது ஜீவாத்ம ப்ரகரணம். (31)

மூன்று ஸாம்யம் மொழியப்பெற்றன. இப்படி பாபமின்றி பூர்ண ஜ்ஞானனாய் ஜ்ஞானஸ்வரூபனாயிருக்கை ஒவ்வோர் ஆத்மாவுக்கும் இயற்கை; தேஹமூலமான ஸுகதுக்கங்கள் வந்தேறி என்று தெளிந்த வன் தனக்கு ஸமமாக ஜீவர்களை நினைக்குமாபோலே அவர்களுக்கு வரும் ஸுகதுக்கங்களுக்கு ஸமம் தனது ஸுகதுக்கங்கள் என்றிருக்க வேண்டும். அவர்களுடைய ஸுகதுக்கத்திற்காக மகிழ்ச்சி இகழ்ச்சி யிராமலிருப்பது போல் தன் ஸுகதுக்க விஷயத்திலுமிருக்க வேண்டு மென்று மற்றொரு ஸமத்வம சொல்லுகிறார்—

आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।
सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः ॥ ३२ ॥

ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பச்யதி யோऽர்ஜுந |
ஸுகம் வா யதிவா துக்கம் ஸ யோகீ பரமோ மத: || 32 ||

अर्जुन—அர்ஜுநு !
सर्वत्र—எல்லா ஆத்மாக்களிடமும்
आत्म औपम्येन—தன்னேடொத்துமை யிருப்பதால்
सर्वत्र—தன்னிடமும் பிறரிடமும்
सुखं वा—ஸுகத்தையோ
यदि वा दुःखम्—துக்கத்தையோ எதையும்
समं यः पश्यति—எவன் ஸமமாகக் காண்கிறுனே
स योगी—அந்த யோகியானவன்
परमः मतः—ஞானயோகிகளிற் சிறந்தவனுக நினைக்கப்படுகிறுன்.

தன்னையும் பிறரையும் ஸமமாகப் பார்ப்பதோடு தன் ஸுகதுக்கங்களையும் பிறர் ஸுக துக்கங்களையும் ஸமமாகக் காண்பவன் மேம்படுகிறுன். பிறருடையஸுகத்திற்கு அவர்களைப் புகழ்ந்தும் அவர்கள் துக்கத்திற்கு அவர்களோடு அழுதுகொண்டுமிருந்தால் இவனுக்கு யோகத்திற்கு அவகாசமேது என்னில், அஃதல்ல கருத்து. பிறர் ஸுகதுக்கத்தைப் போல் தன் ஸுகதுக்கத்தையும் தனதாக நினைக்காமல் அதில் கவனத்தை விட்டு ஆத்மாவில் ஊன்ற வேண்டுமென்ற கருத்தாம். இவ்வாறு நான்கு வகைகள் நவிலப் பெற்றன. (32)

अर्जुन उवाच—அர்ஜுனன் மேலே சொன்னுன்—

योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन ।
एतस्याहं न पश्यामि चञ्चलत्वात् स्थितिं स्थिराम् ॥ ३३ ॥

யோऽயம் யோகஸ் த்வயா ப்ரோக்த: ஸாம்யேந மதுஸூதந |
ஏதஸ்யாஹம் ந பச்யாமி சஞ்சலத்வாத் ஸ்த்திம் ஸ்த்திராம் || 33 ||

मधुसूदन—மதுவை ஸம்ஹாரம் செய்தவனே !
साम्येन—நாலுவகையான ஸாம்யத்தைக் கொண்டு
यः अयं योगः—எந்த ஆத்மயோகம்
त्वया प्रोक्तः—உம்மால் உபதேசிக்கப் பெற்றதோ,
एतस्य—இந்த யோகத்தின்
स्थितिम्—இருப்பை
स्थिराम्—நீடித்து நிலைப்பதாக
न पश्यामि—காண்கிறேனல்லேன்
चञ्चलत्वात्—மனம் சலிப்பதாகவே யுளதாதலின்.

அநாதி வாஸனையால் ஒவ்வோர் ஆத்மாவையும் பரமாத்மாவையும் ஒன்றைவிட ஒன்று எவ்விதத்திலும் வேருகவே கண்டு வந்திருக்குமிவனது மனம் அந்த வேறுபாட்டிலேயே போய்க் கொண்டிருப்பதால் ஸமமாகக் காண்பதே எளிதில் ஆகாது. நான்கு விதமான ஸாம்யம் எங்ஙனே நிலைத்து நினைக்கப் பெறும். (33)

மனத்தை அடக்கலாமே யென்னில்—

चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद् दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥ ३४ ॥

சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாத்தி பலவத் த்ருடம் |
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் || 34 ||

कृष्ण—கிருஷ்ணா!
चञ्चलं—எப்போதும் ஒரு விஷயத்தில் நிற்காத
मनः—மனதானது
बलवत्—(பாபத்தினால்) வலிவு உள்ளதாய்
दृढं प्रमाथि—புருஷனை திடமாக வதைக்கின்றது.
वायोः इव—எதிரில் வரும் காற்றுக்குப் போல்
तस्य—அம்மனத்துக்கு
निग्रहं—தடை செய்வதை
सुदुष्करम्—அடியோடு முடியாததாக
मन्ये—நினைக்கிறேன்.

श्रीभगवान् उवाच—பகவான் மேலே சொன்னதாவது—

असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।
अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥ ३५ ॥

அஸம்சயம் மஹாபாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம் |
அப்யாஸேந து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே || 35 ||

महाबाहो—புஜபலமுடையனே!
मनः—மனதானது
चलं—சலித்துக்கொண்டேயிருப்பது
दुर्निग्रहम्—அடக்க அரிதாம்
असंशयम्—இதில் ஸம்சயமேயில்லை.
कौन्तेय—குந்தீ புத்ரனே!
तु—ஆனால்
अभ्यासेन—ஆத்மாவின் சீரை நன்கு பராமரிப்பதாலும்
वैराग्येण च—மற்றதில் தோஷவிமர்சத்தால் பற்றற்றமையாலும்
गृह्यते—அடக்கப்படும்.

மனம் சலிக்குமிடமெல்லாம் தோஷங்களை ஆராய்ந்து வந்தால் வைராக்யம் உண்டாம். அதற்கு நேர்மாறாகி ஆத்மாவின் குணங்களை ஆய்ந்தவண்ணமிருந்தால் இதில் நோக்கும் மிகும்—

असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।
वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ॥ ३६ ॥

அஸம்யதாத்மநா யோகோ துஷ்ப்ராப இதி மே மதி: |
வச்யாத்மநா து யததா சக்யோऽவாப்தும் உபாயத: || 36 ||

असंयत आत्मना—அடக்கப்படாத மனம் உடையவனால்
योगः दुष्प्रापः—யோகம் பெறப்பட மாட்டாது
इति मे मतिः—என்று எனது முடிவு.
उपायतः—கீழ்க்கூறிய கர்மயோகத்தினால்
वश्य आत्मना—மனம் ஸத்வம் மிகுந்து தன் வசமானவனாய்
यतता—யோக முயற்சியுடையனால்
अवाप्तुं शक्यः—பெறமுடியும்.

நீ கூறியவாறு மனம் சஞ்சலமாயிருப்பதால்தான் கர்மயோகமே செய் என்கிறேன். அதுமூலம் மனத்துக்கு ஸத்வகுணத்தை வ்ருத்தி செய்யாதவனுக்கு ஸமதர்சனயோகம் வாராது. கீழ்க்கூறிய உபாயத்தால் மனம் சுத்தமானால் அப்யாஸ வைராக்யங்கள் இடம் பெறும். யோகம் எளிதில் ஸித்திக்கும். (36)

மனம் சலிப்பதேயானாலும் அதை வசமாக்கி யோகம் பெற வழி கூறினார். இப்படி யோகத்திலிழிந்தாலும் இடையிலே புத்தி சலித்து விட்டால் இவன் கதி என்ன என்று அர்ஜுனன் கேட்கிறான். ஆனால் இரண்டாம் அத்யாயத்தில் உபதேசத் தொடக்கத்திலேயே, नेहाभिक्रमनाशोऽस्ति என்று நடுவில் விட்டாலும் செய்த கர்மயோகம் வீண்போகாதென்றாரே. கர்மயோகத்திற்கு அந்த மான்மியம் அது ஆத்மஞானத்தைத் தனக்குள் அடக்கிக்கொள்ளக்கூடியதாயிருப்பதாலும் மேலே ஆத்மாவைக் காணும் யோகத்தை அளிப்பதாயிருப்பதாலுமென்றே சொல்லவேண்டும். எனவே யோகமும் வீண்போகாதென்று அங்கேயே தீர்ந்தது. ஆயினும் அதனை விரிவாக அறியவேண்டுமென்று அர்ஜுனன் மீண்டும் கேட்கிறான். கீழ்க்கூறியதினின்று அவனது ஐயங்கள் தீரவில்லையாதலின்,

अर्जुन उवाच—அர்ஜுனன் கேட்பதாவது—

**अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।**
**अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥ ३७ ॥**

அயதி: ச்ரத்தயோபேதோ யோகாச் சலிதமாநஸ: |
அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி || 37 ||

कृष्ण—கிருஷ்ணா !
श्रद्धया—செய்யத் துரிதபட்டு
उपेतः—யோகம் தொடங்கி
अयतिः—நீர் சொன்ன அப்யாஸாதிகளாம் முயற்சியில்லாதவனாய்
अप्राप्य—பெறாமல், அதற்குமுன்னே
योगात्—யோகத்தினின்று
चलितमानसः—மனம் சலித்தவன்—யோகத்திலிழியாதவன்
योगसंसिद्धिं—யோகத்தின் பூர்த்தியை
कां गतिं—என்ன கதியை
गच्छति—அடைகிறான்.

योगाच्चलितमानसः என்பது அன்றைய யோகத்தைப் பூர்த்தி செய்து வழக்கம் போல் எழுந்தவன் என்ற பொருளதன்று. இனி யோகம் செய்ய நோக்கில்லாதவன் என்ற பொருளதாம். அவ்வாறு நோக்கில்லாமை யோக பலன் கைக்கூடிய படியால் என்று நினைக்க வேண்டா என்பதற்காக अप्राप्य योगसंसिद्धिम् என்றான். இதை மேலேயும் சேர்க்கலாம். அப்போது, 'யோகத்தை விட்டபடியால் யோக பலன் தான் பெறமாட்டிலனே. வேறு நற்கதியுண்டா' என்று கேட்டதாம். नेहाभिक्रमनाशोऽस्ति என்று கீழே கூறியிருப்பதால் யோக பலன் பெறமாட்டான் என்று அர்ஜுனன் நினைப்பதற்கில்லை. कां गतिम् என்ற சொல்லிலே

யோகபலன் வேறு பலன் எல்லாம் சேர்க்கப்படுமாகையால் மூன்றும் பாதத்தை இரண்டாம் பாதத்தோடே சேர்த்து யோகம் பூர்த்தியாவதற்கு முனமே சலித்தவன் என்ற பொருள் கொண்டது.

துக்கப்படுவதே கதி என்னலாமோ என்றஞ்சிக் கேட்கிறான்—

कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥ ३८ ॥

கச்சிந்நோபயவிப்ரஷ்டச் சிந்நாப்ரமிவ நச்யதி ।
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி ॥ 38 ॥

महाबाहो—பாஹுபலமுடையவரே!
अप्रतिष्ठः—வேறு புண்யபலன் அனுபவிக்க விரகில்லாதவனாய்
ब्रह्मणः पथि—ப்ரஹ்மப்ராப்திக்கான யோகத்தில்
विमूढः—அறிவற்றவனாய்

उभयविभ्रष्टः—இரு ஸாதனங்களினின்றும் நழுவினவன்
छिन्न अभ्रम् इव-சிதறின மேகம்போல்
कच्चित् न नश्यति—அழியாமலிருப்பானா?

செய்த யோகம் வீணாகாமல் ஒரு நாள் பலிப்பதானாலும் இப்போது அது பலிக்கும்படி தொடாச்சியை விட்டவனானான். இதனைச் செய்யாமல் வேறு புண்யம் செய்திருந்தால் நற்பலன் ப்ரக்ருதிமண்டலத்திற் பெறுவானென்னலாம். யோகம் செய்ய இழிந்து காலமெல்லாம் அதிலே கழிந்தது. சிலருக்கு முந்திய ப்ராரப்த வினைப்பயனாக நற்பலன் நேரலாம். ஆனாலும் அப்ரதிஷ்டனின் கதியென்ன. பெருமேகத்தினின்று சிதறிய சிறுமேகத் துண்டு வேறு மேகம் சேருமளவு உருநிற்காமல் சிதறி யொழிவது போல், இவனுக்கு ஸம்ஸார வாதையே தான நேருமெனத் தோன்றுகிறது. அவ்வாறின்றி நன்மையுண்டா.

एतन्मे संशयं कृष्ण च्छेत्तुमर्हस्यशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य च्छेत्ता न ह्युपपद्यते ॥ ३९ ॥

ஏதம் மே ஸம்சயம் க்ருஷ்ண ச்சேத்துமர்ஹஸ்யசேஷத: ।
த்வதந்யஸ் ஸம்சயஸ்யாஸ்ய ச்சேத்தா ந ஹ்யுபபத்யதே ॥ 39 ॥

कृष्ण—கிருஷ்ணனே!
एतं—இந்த
मे संशयं—எனது ஸம்சயத்தை
अशेषतः—சிறிதும் விடாமல்
छेत्तुम् अर्हसि—தொலைக்கத் தகுதியுறுகிறீர்.

त्वत् अन्यः—உம்மைவிட வேறுபட்டவன்
अस्य संशयस्य—இந்த ஐயத்திற்கு
छेत्ता—அழிவு செய்கிறவனாக
न उपपद्यते हि—ஆகத்தகானன்றோ.

எல்லாம எல்லா ஸமயங்களிலும் ப்ரத்யக்ஷமாய் இயற்கையாய் அறிந்திருப்பவர் நீர். மற்றவர் சிலவற்றைச் சில ஸமயம் பல பிரயாசையால் அரைகுறையாக அறிபவர். மேலும் எல்லோருக்கும் எதற்கும்

பலன் அளிப்பவரும் நீரே. ஆதலால் யோகப்ரஷ்டன் விஷயத்தில் நீர் செய்வதை உமது மூலம் அறிந்தால் ஐயம் திண்ணம் தீரும். யோகம் செய்துகொண்டிருக்கும் போதே கூட எவன் கெட்டானே, அவனுக்கு என்றே அந்த யோகம் நினைவுற்றாலும், எவ்வாறு அது மேல் வளம் பெறுமெனவும் ஐயப்படுகிறேன்.

ஸ்ரீபகவான் உவாச—இரண்டும் கெட்டான் யோகப்ரஷ்டன் என்று அஞ்சும் அர்ஜுனனுக்கு, 'அவன் இரண்டும் பெறுகிறான்' என்று அதிக பலனை அருளிச் செய்கிறார்—

पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते । See 14-P-28-12-83163

न हि कल्याणकृत् कश्चित् दुर्गतिं तात गच्छति ॥ ४० ॥

பார்த்த நைவேஹ நாமுத்ர விநாசஸ் தஸ்ய வித்யதே |
ந ஹி கல்யாணக்ருத் கச்சித் துர்கதிம் தாத கச்சதி || 40 ||

पार्थ—அர்ஜுனா!
तस्य—அந்த யோகப்ரஷ்டனுக்கு
इह—ப்ராக்ருதவுலகில்
विनाशः—எவ்வித நஷ்டமும்
न विद्यते—இல்லை.
अमुत्र—ப்ரஹ்மப்ராப்தியிலும்
न—அழிவில்லை.
तात—அப்பா!
कल्याणकृत्—எவ்விதத்திலும் மங்கள கரமான யோக தர்மம் செய்கிற
कश्चित्—எவனும்
दुर्गतिम्—நரகமோ மற்ற அநிஷ்டமோ
न गच्छति—பெறுகிறானல்லன்.

கெடுவதில்லை என்றார்; யோக தர்ம ஸம்பந்தம் காரணமான நன்மைகளை விரித்துரைக்கிறார்—

प्राप्य पुण्यकृतां लोकान् उषित्वा शाश्वतीः समाः । See 14-P-25-12-8324

शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥ ४१ ॥

ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாந் உஷித்வா சாச்வதீ: ஸமா: |
சுசீநாம் ச்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோऽபிஜாயதே || 41 ||

योगभ्रष्टः—யோகத்தினின்று நழுவினவன்
पुण्यकृतां—புண்யங்களைப்பண்ணினவர் பெறும்
लोकान्—லோகங்களை
प्राप्य—அநாயாஸமாகப் பெற்று
शाश्वतीः समाः—நீடித்த வருஷங்கள்
उषित्वा—அந்த போகங்களில் வெறுப்பு உண்டாகும் வரையில் தங்கி புசித்து, பிறகு
शुचीनां श्रीमतां—தனக்கு யோகம் தொடங்க அநுகூலமான சுத்தியும் செல்வமும் உடையாரின்
गेहे अभिजायते—இல்லத்தில் சிறந்த பிறவி பெறுகிறான்.

எத்தகைய இம்மை மறுமைப் பலன்களை அனுபவிக்க விரும்பி யோகத்தினின்று விழுந்தானோ, அந்தப் பலன்கள் பெரும் புண்யங்கள்

செய்தவர்களே பெறக் கூடியவையானாலும் இவன் அநாயாஸமாகப் பெற்று அங்கு அவற்றில் வைராக்யம் வரும் அளவு தங்கி அனுபவித்து வெறுப்பு வந்தவுடனே விட்டு முன் தான் செய்த யோகத்தை மீண்டும் தொடங்கப் பாங்கான இடத்திலே அதாவது அதற்கு வேண்டும் ஆசாராதி சுத்தி ஜ்ஞானம் தனம் முதலான செல்வமும் சேர்ந்தவர்களின் இல்லத்தில் எங்காவது தக்கவாறு பிறவி பெறுகிறான். எனவே இரண்டு பலன்களும் வருமாகையால் ப்ரஷ்டனுக்கு நஷ்டமில்லை.

யோகம் தொடங்கி விட்டவனுக்குச் சொன்னார். யோகம் பெற்றுக் கெட்டவனுக்குச் சொல்லுகிறார்—

**अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।**

*அதவா யோகிநாமேவ குலே பவதி தீமதாம் |*

अथवा—(யோகம் நன்கு செய்து கெட்டானாகில்) மற்று
योगिनाम् एव—யோகத்தையும் அனுஷ்டிப்பவருடையவே
धीमतां—யோகோபதேசம் செய்ய ஞானம் உற்று
कुले—குலத்தில்
भवति—உண்டாகிறான்.

**एतद्धि दुर्लभतरं लोके जन्म यद् ईदृशम् ॥ ४२ ॥**

*ஏதத் ஹி துர்லபதரம் லோகே ஜந்ம யத் ஈத்ருசம் || 42 ||*

लोके—ஆபாஸவுலகில்
एतत्—இது
ईदृशम्—இவ்விருவகை போன்ற
दुर्लभतरं हि-பெற மிகவும் அரிதன்றோ.
जन्म यत्—பிறவி யாது

அங்குப் பிறந்தாலும் மறந்ததைக் கற்பதாகில் தாமதமே யென்ன, மறதியில்லை யென்கிறார்—

**तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदे(दे)हिकम् ।**

**यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन ॥ ४३ ॥**

*தத்ர தம் புத்திஸம்யோகம் லபதே பௌர்வதை(தே)ஹிகம் |*
*யததே ச ததோ பூய: ஸம்ஸித்தௌ குருநந்தந || 43 ||*

तत्र—அந்தப் பிறவியில்
ततः—அவ்வாறு பெற்றதால்
पौर्वदे(दे)हिकम्—முன் யோகம் செய்த தேஹத்திலுண்டாயிருந்த
भूयः—அதற்கு மேலாக
संसिद्धौ-இடையூறின்றி முழு ஸித்தி விஷயத்திலே
तं बुद्धिसंयोगं—அந்த யோக விஷயமான அறிவின் சேர்த்தியை
यतते च—முயற்சியும் செய்கிறான்
कुरुनन्दन—கௌரவப் புதல்வனே !
लभते—தற்காமலே பெறுகிறான்.

போகங்களை யனுபவிப்பதற்கு முன்னே யோகம் எத் தேஹத்தில் செய்து அறிந்திருந்தானோ அத்தேஹத்தில் உண்டாயிருந்த அவ்வறிவை, (உறங்கி யெழுந்தவன் முனனாள் அறிந்ததை மறவாது நினைப்பது

போல்) யாரிடமும் கற்காமல் பிறவியிலேயே பெற்றுவிடுகிறான். (இதுவும் பகவான் செய்யும் ஓர் அனுக்ரஹம்.) அதனால் அதைப் பெற முயற்சியின்றி அதற்கு மேல்பாகத்திலிழிந்து முன் கெட்டது போல் கெடக்கூடாதென்று கவனத்துடன் பூர்த்தி பண்ணப் பெரு முயற்சி கொள்கிறான். (43)

அவன் முயற்சி செய்கிறானென்பது மட்டுமல்ல. பழைய நினைவே அவனை இழுக்கிறதெனவும் ப்ரஸித்தமாகத் தன் அருளைக் குறிக்கிறார்—

**पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।**

பூர்வாப்யாஸேந தேநைவ ஹ்ரியதே ஹ்யவசோऽபி ஸ: |

सः—பழைய நினைவுற்றவன் विरुந்தும்
अवशोऽपि—தன் முயற்சிக்கான விருப்பமில்லாதபோதும் அல்லது தன் குடும்பத்தி லுள்ளார்க்கு வசப்படாம
तेन एव—பூர்வஜன்மத்திலேயான पूर्वाभ्यासेन—அப்யாஸத்தினாலேயே
ह्रियते हि—யோக விஷயத்திலேயே கொண்டுபோகப்படுகிறானே.

பிறந்தது முதல் விஷயப்பற்று இல்லாமலும் ஸம்ஸார மார்க்கத்தில் தூண்டும் குடும்பத்தினரின் ஏவுதலுக்கு வசப்படாமலும், அவர்களை மீற வேண்டுமென்று நோக்கின்றியும் தனக்கே தான் ஸ்வாதீனமின்றி பழைய யோகப் பயிற்சிக்கே வசமாகி அது இழுக்கிறபடி செல்வானே இந்த யோக ப்ரஷ்டன். (இதனை ஜடபரதாதிகளிடம் புராணாதிகளி னின்று கண்டிருக்கிறோமே.)

யோகத்தினின்று ப்ரஷ்டனென்பது மட்டுமல்ல. யோகத்திற்கு முன் ஆத்மாவை அறிந்து அதைக் கற்க விரும்பி இடையில் கெட்ட வனுக்கும் இட்ட படை கற்படையே யென்கிறார்—

**जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥ ४४ ॥**

ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய சப்தப்ரஹ்மாதிவர்ததே || 44 ||

योगस्य—யோக விஷயம்
जिज्ञासुः अपि—அறிய விருப்பமுடையனாய் ப்ரஷ்டனும்
शब्दब्रह्म—(யோகத்தைக்கற்றுச் செய்து) ப்ரக்ருதியின் அனுபவத்தை
अतिवर्तते—கடக்கிறான்.

योगं जिज्ञासुः என்றுமே योगस्य என்று ஆறும் வேற்றுமையாகக் கூறியது யோகத்திற்கு ஸம்பந்தப்பட்ட வேறு விஷயம் அறிய விரும்பினவனும் என்று குறிக்கவாம். இங்கே ப்ரஹ்மபதத்தினாலே பரப்ரஹ்மத்தையோ ஜீவனையோ கொள்வதற்கில்லை. கடக்கிறான் என்றது சேராதே. சப்த மயமான ப்ரஹ்மம் வேதமென்னலாம். அதனையும் இவன் அப்யாஸம் செய்ய வேண்டியவனாயிருப்பதால் கடக்கலாகாது. பூர்ணமாகப் பெறு

கிறுன் என்றல்லவோ சொல்லவேண்டும். கடக்கக் கூடிய ப்ரஹ்மம் மூல ப்ரக்ருதியே. அதனையும் ப்ரஹ்ம சப்தம் கூறுமென்பது கீதையிலும் உபநிஷத்திலும் கண்டதேயாம். அது சப்த ப்ரஹ்மமேயோ என்னில்—, ஆம். தேவமனுஷ்யாதி சப்தங்களாலே சொல்லப்பட வேண்டிய ப்ரஹ்மத்தை தேஹாதிகளாகமாறும் ப்ருக்ருதியைக் கடந்து, தேவமனுஷ்யாதி சரீரங்களிலும் வேறாய் விஷயானுபவத்தினின்று விலக வேண்டும் ஆத்ம ஸ்வரூபத்தை யறிந்து யோகம் அனுஷ்டித்துப் பெறுகிறுன் என்றதாயிற்று. ஜிஜ்ஞாஸு என்ற சொல்லால் ஏழாம் அத்யாயத்திற் சொல்லப்போகின்ற ஜிஜ்ஞாஸுவைக்கூறி அவனுக்கு ப்ரக்ருதியனுபவம் விட்டுக் கைவல்யம் பலன் என்னலாமே யென்னில், அப்போது 'யோகஸ்ய' என்ற சொல் சேராது. கீழ்க்கூறிய அதிகாரியைவிட கீழ்ப்பட்ட அதிகாரியைக் கொண்டால்தான் அபி என்ற சொல்லும் சேரும்.

யோகப்ரஷ்டன் நன்கு முயற்சி பெறுகின்றுன் என்றுர் கீழ். அவனுக்கு மேலே வரும் நன்மையைச் சொல்லுகிறுர்—

प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः ।
अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥ ४५ ॥

ப்ரயத்நாத் யதமாநஸ்து யோகீ ஸம்சுத்தகில்பிஷ: |
அநேக ஜந்மஸம்ஸித்தஸ் ததோ யாதி பராங்கதிம் || 45 ||

ततः-யோகத்தைப்பற்றிய மாஹாத்ம்யம் இவ்வாறு இருப்பதால்
संशुद्धकिल्बिषः—பாபங்கள் விலகியதாலே
अनेकजन्मसंसिद्धः—பல ஜன்மங்களில் யோகத்திற்குத் தகுந்தவனுகி
प्रयत्नात् यतमानः तु—ப்ரஷ்டனுகைக்கு மாறுக முழு முயற்சியாலே யோகத்திலாழ்ந்தவன்
योगी—யோகியானவன்
परां गतिम्—பரகதியை-ஆத்மானுபவத்தை
याति—பெறுகிறுன்.

யோகப்ரஷ்டன் பல ஜன்மங்களில் யோக யோக்யனுய் எல்லாம் பூர்த்தி செய்வான். இடையிற் பல பிறவிகள் கழிந்தாலும் பழைய யோக்யதை போவதில்லை. (45)

ஆத்மயோகிக்கு மற்றவரைக் காட்டிலும் மேன்மை என்கிறுர்—

तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः ।
कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥ ४६ ॥

தபஸ்விப்யோऽதிகோ யோகீ ஜ்ஞாநிப்யோऽபி மதோऽதிக: |
கர்மிப்யச்சாதிகோ யோகீ தஸ்மாத் யோகீ பவார்ஜுந || 46 ||

योगी—எப்படியோ ஆத்மயோகம் செய்கின்றவன்
तपस्विभ्यः-தவம் புரிகின்றவர்களைவிட
अधिकः मतः—மேலாக நினைக்கப் படுகிறான்
ज्ञानिभ्यः—மற்ற ஞானிகளைவிட
अधिकः मतः—
कर्मिभ्यः—காம்யகர்மாக்களைச் செய்கின்றவர்களினும்
अधिकः मतः—
तस्मात्—இம்மேன்மை காரணமாக
अर्जुन—அர்ஜுநா
योगी भव—ஆத்மயோகியாவாயாக.

தவமோ, மற்றும் அந்தந்த தேவதைவிஷயமான உபாஸநாதி ஜ்ஞானமோ, அச்வமேதாதிகர்மாவோ எல்லாம் ப்ரபஞ்சபலனையே தருமாகையால், அவற்றைவிட ஆத்மயோகம் ஆத்மானுபவம் தருவதால் சிறந்ததாகும். (46)

மற்றவரைவிட ஆத்மயோகிகள் சிறந்தவர்களென்றார். இவர்களைவிட பகவத்பக்தியோகிகள் மேம்பட்டவரென்கிறார்—

योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना ।
श्रद्धावान् भजते यो मां स मे युक्ततमो मतः ॥ ४७ ॥

யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா |
ச்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: || 47 ||

मद्गतेन अन्तरात्मना-என்னிடம் சென்ற மனத்துடன்
श्रद्धावान्—என்னைப் பெறத் துரிதப் பட்டு
यः मां भजते—எவன் என் விஷயமாக யோகம் செய்கிறானோ,
सः—அவன்
योगिनाम्—ஆத்மயோகிகளைவிட
सर्वेषाम् अपि--தபஸ்வி முதலானோரையும்விட
युक्ततमः—உயர்ந்த உபாயத்தையுடையவனாக
मे मतः—என்னால் நினைக்கப்படுகிறான்.

கீழ்க்கூறிய ஆத்மயோகத்திற்கு மேலாக ஒன்றுமில்லையென்று அர்ஜுனன் நினைப்பான். அங்கே ज्ञानिभ्यः என்று பொதுவாகப் பணித்ததால் பகவானைப் பற்றியேயாம் உபாஸநாதி ஜ்ஞானத்தைக்காட்டிலுங் கூட ஆத்மயோகம் சிறந்ததென நினைப்பான். அவ்வாறு நினைக்காதபடி பகவத்யோகத்தின் பெருமையை உபதேசிக்கிறார். இங்கே योगिनां என்பதற்கு யோகிகளுக்குள்ளே என்ற பொருள் ஸ்வரஸமானாலும் அதைக் கூறவாகவில்லை. கீழே பகவத்யோகத்தையும் கூறியிருந்தால் அது பொருந்தும். ஆகையால் கீழ் ச்லோகத்திலே தவம் புரிவார்முதலானோரைவிட என்றாற் போலே ஆத்மயோகம் செய்கிறவர்களைவிட என்ற பொருளே கொள்வதாம். ஆத்மயோகம் மட்டுமே சொல்லப்பட்டதால் योगिनाम् என்றவுடன் அந்த யோகமேதான் தோன்றும். மேலே யோகம் சொல்லப்போவது அர்ஜுனனுக்குத் தெரியாதாகையால் அதை அவன் கொள்ளமாட்டிலன். योगिनाम् என்ற

பன்மையும் तपस्विभ्य: இத்யாதிகளைப் போலே ஆத்மயோகமும் பலர் செய்வதால் பொருந்தும். सर्वेषाम् என்கிற சொல்லும் வீணேயாகும். பன்மையே போதுமே. ஆகையால் அதைப் பிரித்து தப்ஸ்வி முதலானோரையும் விட என்ற பொருள் கொள்க. அவர்களைவிட மேலான ஆத்மயோகியை விட மேம்பட்டவனென்றால் அவர்களைவிட மேம்பட்டவனென்பது சொல்லாமலே விளங்குமேயென்னில்—விளங்கும். ஆயினும் அவர்களைப் போலே ஆத்மயோகியும் மிகவும் கீழ்ப்பட்டவனென அறிவிப்பதிலே நோக்கு. தபஸ்வி முதலானோர் யோகிகளல்லாமலிருக்க, அவர்களைவிட யுக்ததம: என்னவாமோ என்னில், யுக்த என்பதற்கு யோகி என்ற பொருள் கொள்ளாமல் உபாயத்துடன் கூடியவன், அல்லது யோக்யமானவன் எனப் பொருள் கொள்க. இப்படி अपि सर्वेषाम् என்றதினின்று ருத்ராதி தேவதா பஜனங்களைச் செய்யும் ஞானிகளைவிடவும் பகவத் பக்தனுக்குப் பெருமை நேராகப் பணித்ததாம். இவ்வாறு உரைக்காமல் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட எல்லா யோகிகளுக்குள்ளே பகவத் யோகியே சிறந்தவனென்ற பொருள் கொண்டாலும் நமது ஸித்தாந்தத்திற்கு மிக்க பொருத்தமே. ஆயினும் இவ்வாறு உரைத்தது கீழ்க் கூறிய காரணத்தினுலென்க.

இவ்வாறு ப்ரதம ஷட்கமென்ற முதல் ஆறு அத்தியாயங்களினுல் முமுக்ஷுவாய் முதலிற் பெறவேண்டும் ஜீவாத்ம ஸாக்ஷாத்காரத்திற்காக யோகம் செய்கின்றவன் அதற்குமுன் கர்மயோக ஜ்ஞானயோகங்களை அல்லது கர்மயோகமொன்றையே ஆத்மஞானம் பெற்று அனுஷ்டிக்க வேண்டுமென்றதாயிற்று. ஆறும் அத்தியாயம் முற்றும்.

## ஏழாம் அத்தியாயம்

ஆறு அத்தியாயங்களாலே ஜீவாத்மாவைக் காண்பதற்கான கர்மயோக ஞானயோகங்கள் கூறப்பெற்றன. பரமாத்மாவைப் பெறுதலே முக்ய மோக்ஷமானபடியாலே அதற்கு உபாயம் பக்தியோகமே யாகும். அதனை யனுஷ்டிப்பதற்கு முன் ஜீவாத்மாவைக் காணவேண்டுமென்று அதற்காக இவற்றைக் கூறினர். ஆறும் அத்தியாயத்தின் முடிவில் தன் விஷயமாக யோகம் செய்பவனே சிறந்த யோகி, இல்லையேல் மோக்ஷம் பெறவாகாதே என்றும் குறித்தார். ஆகையால் இனி மத்யமஷட்கமென்ற நடு ஆறு அத்தியாயங்களாலே பக்தியோகத்தை உபதேசிக்கிறார். பக்தியோகத்திற்கு விஷயம் பரமாத்மா. அவனது உண்மை நிலையறியாமல் உபாஸிக்கலாகாது. எனவே அவ்வுண்மையும், அது ப்ரக்ருதியினுல் ஜீவர்களுக்கு மறைக்கப்பட்டிருக்கிறதென்றும், அதை விலக்க ப்ரபத்தியே உபாயமென்றும், அதன் மூலம உபாஸனம் செய்ய வேண்டுமென்றும், உபாஸகர்களின் உட்பிரிவுகளைக் கூறி முமுக்ஷுவான ஞானியே சிறந்தவனென்றும இந்த ஏழாம் அத்தியாயத்திலே அருள்கிறார். பரமாத்ம தத்துவத்தை விரிவாகக் கூறுவதாம் முதலில்—

मय्यासक्तमनाः पार्थ योगं युञ्जन् मदाश्रयः ।
असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तच्छृणु ॥ १ ॥

மய்யாஸக்தமநா: பார்த்த யோகம் யுஞ்ஜந் மதாச்ரய: |
அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி தச்ச்ருணு || 1 ||

पार्थ—குந்தியின் குமாரனே !
मयि—என்னிடத்தில்
आसक्तमनाः—எனது ஸ்வரூபரூப குணாதிகளை அனுபவிக்காமலிருக்கமாட்டாதபடி ஆழ்ந்த மனமுடையனாய்
मदाश्रयः—மனம்மட்டுமன்றி தானும் என் அனுபவமின்றி ஸத்தை பெறாதவனாய்
योगं युञ्जन्—என் விஷயமான யோகானுஷ்டானத்திற்காக
मां - என்னை
असंशयम्—ஐயப்பாடின்றி
समग्रम्—விபூதிவரையிலாக
यथा ज्ञास्यसि—எப்படி அறிய ஆவாயோ
तत् शृणु—அந்தப் படியைக் கேள்.

உண்மையறியாதபோது மனத்திற்கு என்னிடம் பற்று வாராது. என் அனுபவமின்றி இருப்புக்கொள்ளாத நிலையுண்டாகாது. அவ்வாறாகி யோகத்திலிழிவதற்கு அறியவேண்டுமளவுக்குக் குறைவற எல்லாம் கவனத்துடன் கேட்டுத் தெளிவாயாக. (1)

ज्ञानं तेऽहं सविज्ञानमिदं वक्ष्याम्यशेषतः ।
यद् ज्ञात्वा नेह भूयोऽन्यद् ज्ञातव्यमवशिष्यते ॥ २ ॥

ஞானம் தேऽஹம் ஸவிஜ்ஞானம் இதம் வக்ஷ்யாம்யசேஷத: |
யத் ஜ்ஞாத்வா நேஹ பூயோऽந்யத் ஜ்ஞாதவ்யம் அவசிஷ்யதே || 2 ||

इदं ज्ञानम्—(இந்த என் விஷயமான) அறிவை
सविज्ञानम्—மற்றவற்றைவிட எனது வேறுபாட்டின் அறிவுடன்
अशेषतः—மிச்சமின்றி
अहं ते वक्ष्यामि—நான் உனக்கு உபதேசிக்கப் போகிறேன்,
यत् ज्ञात्वा—எவ்வறிவைப் பெற்ற பிறகு
इह भूयः—என் விஷயத்தில் மீண்டும்
ज्ञातव्यम्— அறியவேண்டியது
अन्यत्—வேறொன்றும்
न अवशिष्यते - விடப்பட்டதாகாதோ.

यत् என்பது சேரவேண்டும் சொல் इदम् என்பதாகும்.

ஸமக்ரமாக நீ அறிவது நான் அசேஷமாக—ஒன்றும் விடாமல் சொன்னால்தானே. அவ்வாறே சொல்லுகிறேன். அப்படி எல்லாம் சொல்ல முடியுமோ என்னில், மறுமொழி உத்தரார்த்தத்தில். எவ்வளவுக்கு மேலே பகதியோகம அனுஷ்டிக்க அவசியம் அறியவேண்டியதில்லையோ. அவ்வளவு சொல்லுகிறேன். மற்ற வஸ்துக்களைவிட எனக்குள்ள விசேஷமும மற்ற வஸ்துக்களுக்கும் எனக்கும் உள்ள ஸம்பந்தமும்

எனக்கு மேலோ ஸமானமோ ஒன்றுமில்லாமையும அறிந்து யோகம் செய்க. பிறகு கண்டனுபவிக்கும் வஸ்துக்கள் அளவற்றன இருப்பி னும் இது போதும். (2)

கவனித்து இப்போது கேட்க வேண்டுமென்பதற்குக் காரணம் கூறுகிறார்—

मनुष्याणां सहस्रेषु कश्चिद् यतति सिद्धये ।
यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥ ३ ॥

மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கச்சித் யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தாநாம் கச்சிந் மாம் வேத்தி தத்வத: ॥ 3 ॥

मनुष्याणां—சாஸ்த்ர விதிகளை அனுஷ்டிக்க அரிதான பிறவி பெற்றவர்களின்
सहस्रेषु कश्चित्—பலவாயிரங்களில் ஒருவனே
सिद्धये—சாஸ்த்ர மூலமாகப் பலன் பெற
यतति—முயற்சி செய்கிறான்.
यततां सिद्धानाम् अपि—முயன்று ஸித்தி பெற்றவர்களுடைய, அல்லது ஸித்தி பெற முயல்கின்றவர்களுடைய
कश्चित् பலவாயிரங்களில் ஒருவனே
मां वेत्ति—என்னை அறிகிறான் (என்னையறிந்து என் மூலம் ஸித்திக்கு முயல்கிறான்.
அவ்வாறு அறிந்து முயல்கின்றவர்களின் பலவாயிரங்களில் ஒருவனே
तत्त्वतः—உள்ளபடி (ப்ராப்யனும் உபாயமும் ஒருவனே என்று)
वेत्ति—அறிகிறான்.
(அதற்குப் பிறகும் முயல்வதுண்டா என்பது வேறு விஷயம்.)

பலன் விரும்பாதவர் உலகில்லை. ஆனால் சாஸ்த்ரத்தை நம்பி அதன் மூலம் பலன் பெற முயல்வது அரிது. அதிலும் வேறு தேவர் முதலானோரை விட்டு என்னையறிந்து என்னிடம் முயற்சி செய்வது மிகவும் அரிது. அதிலும் என்னையே பெற முயல்வது மிகமிக அரிது. कश्चित् என்பதை க: சித் என இரு பதங்களாகப் பிரித்து எந்த சேதனன் முயல்கிறான்; அறிகிறான்; யாருமில்லையென்று உரைத்தும் அருமையை விளக்கலாம். (அர்ஜுனன அறிவோடு நிற்கப்போகிறான். மோக்ஷத்திற்கான முயற்சியில்லையென்று நினைத்து அவ்வறிவே அரிதென்று சொல்லி நின்றார் வேத்தி என்றதால்.) (3)

தனது ஸர்வேச்வரத்வமென்ற உண்மைநிலைமையை உணர்த்துகிறாராய் முதலில் அசேதனவஸ்துவை உட்பிரிவுடன் காட்டுகிறார்—

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।
अहंकार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ ४ ॥

பூமிராபோ நலோ வாயு: கம் மநோ புத்திரேவ ச ।
அஹங்கார இதீயம் மே பிந்நா ப்ரக்ருதி: அஷ்டதா ॥ 4 ॥

भूमिः आपः—நிலம் நீர்
अनलः वायुः— தீ காற்று
खं मनः—வானம் மனம்
बुद्धिः—மஹத்தத்துவம்
अहङ्कारः च एव—அஹங்கார தத்துவமும் தானுமாகவே
अष्टधा भिन्ना—எட்டாகப் பிரிந்த
इयं प्रकृतिः—ப்ரபஞ்ச காரணமான ப்ரக்ருதி தத்துவமானது
मे—என்னுடையதாகும். (எனக்கு சேஷமாம்.)

ப்ரபஞ்சமாக மாறும் மூல ப்ரக்ருதியை இருபத்துநான்கு தத்துவங்களாகப் பிரிக்கும் உபநிஷத்தில் எட்டு ப்ரக்ருதிகள், பதினாறு விகாரங்களென்று உட்பிரிவு ஓதப்படும். பதினாறு தத்துவங்களை இங்குச் சொல்லவில்லை யாகையால் அவ்வாறு கூற வந்ததல்ல. ப்ரக்ருதியிலேயே அவ்யக்தம் அக்ஷரம் தமஸ்ஸு என்ற பிரிவுகளும் இருக்கின்றன. ஆகையால் ஸமஷ்டி வ்யஷ்டி என்ற இரு வகுப்பிலே அந்தந்த ஜீவனுக்கு உடலமைப்பு என்கிற வ்யஷ்டிக்கு முக்கியமாக வேண்டுவன எவையோ அவ் எட்டை மட்டும் இங்கே கூறுகிறார். உடல் பாஞ்சபௌதிக மாகையாலே பஞ்சபூதங்கள் வேண்டும். ஜ்ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள் என்றவை மனத்திற்கு அதீனமாகையால் அதில் அவற்றை அடக்கி ஒன்றாக எண்ணினார். 'இதனை நான் செய்ய வேண்டும்' என்ற அத்யவஸாயமே எல்லாச் செயலுக்கும் காரணமாகையால் அதற்கான புத்தி யென்ற மஹத்தத்துவம் இங்கே சேர்க்கப் பெற்றது. உலகில் ப்ரவ்ருத்தி யெல்லாம் தேஹாத்ம ப்ரம மூலமாகவே நடப்பதால் அதற்குக் காரணமான அஹங்காரத்தையும் அருளினார். நிலத்திற்கு முன்னை நீர். நீருக்கு முன்னை நெருப்பு என்ற அடைவிற் சொல்லுகின்றவர் அஹங்காரத்தைச் சொல்லிவிட்டு அதற்கு முன்னை புத்தி தத்துவமென்ற மஹத்தை மொழிய வேண்டும். அதனை மாற்றியதினின்று, மனத்தின் ப்ரவ்ருத்திக்கு புத்தியின் கார்யமான அத்யவஸாயம் காரணம். அதற்குக் காரணமாகும் அஹங்காரத்தின் கார்யமான தேஹாத்ம ப்ரமம் என்றறிவிக்கிறாரென்க. ஏழைச் சொல்லி எட்டாக எண்ணலாமோ என்னில். ப்ரக்ருதி என்ற போதே அதனையும் சேர்ப்பது தெளிவாமென்று चகாரத்தினால் அதைச் சேர்த்துக் கொண்டது. एव என்பதால் உபநிஷத்தில் ஓதியபடி எட்டு வேறு இருப்பினும் சுருக்கமாகச் சொல்லுமிடத்தில் இதே அறிய வேண்டியதாகுமென்று குறித்ததாம். இங்கே मे என்கிற சொல்லில் நோக்கு. அசேதனங்களைப் பற்ற சேஷித்வம் தனக்குளதென்று உண்மைநிலை உணர்த்தப் பெற்றது.

ப்ரக்ருதியாவது காரணம். அசேதனமென்ற ப்ரபஞ்ச காரணம் கூறப்பெற்றது. மேலே மற்றொரு ப்ரக்ருதி—

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥ ५ ॥

அபரேயம் இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் |
ஜீவபூதாம மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் || 5 ||

इयम् अपरा-இது கீழ்ப்பட்ட ப்ரக்ருதி.
इतः तु अन्याम्—இதனைவிட வேறாய் விலக்ஷணமுமாய்
जीवभूताम्—ஜீவனாகியதை
पराम्—மேம்பட்டதான
मे प्रकृतिम्—எனது ப்ரக்ருதியாக
विद्धि—அறிவாயாக.
महाबाहो—பருத்த புஜமுடையவனே (எவ்வாறு உயர்ந்ததென்னில்)
यया—ஜீவனென்ற அந்த ப்ரக்ருதியால்
इदं जगत्—இந்த ப்ரபஞ்சம்
धार्यते—தரிக்கப்படுகின்றது.

எட்டு விதமாய் நிற்கும் ப்ரக்ருதி ஸம்ஸாரத்தை நடத்துவது வ்யஷ்டி ஸ்ருஷ்டியான ப்ரபஞ்சத்தினால், அப்போது இதில் அடங்கிய எல்லா வுடல்களுக்கும் தனித்தனி ஜீவாத்மா இல்லையேல் தரிக்கப்படாமல் பிணம் போல் வீழும். எனவே அதனை தரிக்கப் பாங்கான சைதன்யம் என்ற குணம் பெற்றதால் அசேதனத்தை விட விலக்ஷணமாகிறான் சேதனன். அத்துடன் தக்கவாறு அததற்கு சேஷியுமாகிறான். ஜீவனது அனுபவத்திற்காகவே யன்றோ ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி. மஹாபாஹோ. உன் கையால் காண்டீவம் போல் இந்த ஜீவர்களால் உடல்கள் தரிக்கப்படுகின்றன. (5)

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥ ६ ॥

ஏதத்யோநீநி பூதாநி ஸர்வாணீத்யுபதாரய |
அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ் ததா || 6 ||

सर्वाणि भूतानि—எல்லா தேஹிகளும்
एतद्योनीनि—கீழ்க்கூறிய சேதநா சேதந ஸம்ஷ்டிகளைக் காரணமாக உடையன
इति उपधारय - என அறிவாயாக.
तथा—அவ்வாறே
अहं—நான்
कृत्स्नस्य வ்யஷ்டியும் ஸமஷ்டியுமான
जगतः—எல்லாவுலக்கும்
प्रभवः—உபாதாந காரணமும்
प्रलयः—அழிவுக்கு ஸ்தானமுமாகிறேன்.

मत्तः परतरं नान्यत् किञ्चिदस्ति धनञ्जय ।

மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய |

परतरं—மிக மேம்பட்டது
मत्तः अन्यत्—என்னைக்காட்டிலும் வேறாக
किञ्चित्—ஒன்றும்
न अस्ति—இல்லை.
धनञ्जय—அர்ஜுனா!

मत्तः என்பது परतरं என்பதோடு சேருவதில்லை. அப்போது எனக்கு மேம்பட்டது ஒன்றில்லை யென்று மட்டும் சொன்னதாம். ஸமமில்லை

யென்பது தேருது. இனி எனக்கு மேல் பரமானதொன்றை விட மேலானதில்லை யென்று உணர்ந்தால் பரமானது ஒன்று இருப்ப தாகும். எனவே, கருத்திற்கிணங்க, मत्तः अन्यत् என்று சேர்க்க. ஆக நானே பரதரன், பரதரமான வஸ்து என்னை விட வேறில்லை யென்று உரைப்பதாம்.

நீரே உலகுக்கு உபாதாநகாரணமும் லயஸ்த்தானமுமாகில், குடமாக மண் மாறுவது போல் நீரே உலகாக மாறுவதென்றதாம். அப்போது ப்ரஹ்மம் நிர்விகாரமென்னவாகாதே. அதற்காக நிர்விகாரம் வேறொன்று உண்டெனில், உமக்கு மேம்பட்டதொன்றில்லை யென்ன வொண்ணுதே என்ன, உத்தரம் அருளிச் செய்கிருர்—

मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥ ७ ॥

மயி ஸர்வம் இதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணு இவ || 7 ||

इदं सर्वम्—கீழ்க்கூறிய ஸமஷ்டி வ்யஷ்டியெல்லாம்
सूत्रे इव—ஒரே நூலிற்போல்
मयि—என்னிடத்தில்
मणिगणाः—மணியினங்கள்
प्रोतम्—கோக்கப்பட்டுள்ளன.

நான் எல்லாவற்றிலும் புகுந்து அந்தர்யாமியாய் ஆத்மாவாகிறேன். எல்லாம் எனக்கு உடல். பாலஜீவன் யுவஜீவனுகிருன் என்றுல் பால்யம் யௌவனம் என்ற விகாரங்கள் உடலுக்கே யாறுலும் அவற்றின் ஆத்மாவாகை பற்றி ஜீவனும் காரணமும் கார்யமுமாகிருப் போலே, சேதநா—சேதநங்களிலே விகாரங்கள் நின்று நான் நிர்விகாரனுறுலும் காரண தசையிலும் கார்ய தசையிலும் நான் ஆத்மாவாகிறபடியால் ஸூக்ஷ்ம சேதநாசேதந விசிஷ்டமான நானே உபாதாநகாரணம், நானே ஸ்த்தூலசேதநாசேதநவிசிஷ்டனுய் கார்யம். உபாதாநமான என்னிடத்தில் கார்யத்திற்கு லயமும் கூடும். ஆக நானே எல்லாவற்றினும் மேம்பட்டவன். (7)

ச்ருதிகள் பேதச்ருதி, அபேதச்ருதி, கடகச்ருதி என மூன்று விதமாகும். 'பூமிராப:' என்று தொடங்கி பேதச்ருதியின் பொருளைக் கூறிஞர். 'ப்ரபவ: ப்ரளய:' என்றவிடத்திலே அபேதச்ருதியின் பொருள் அடங்கியுள்ளது. 'மயி ஸர்வம்' என்று கடகச்ருதியின் பொருள் உரைக்கப்பட்டது. கடகச்ருதியென்றுல் பேதாபேதங்களை யிணைக்கும் தர்மத்தைச் சொல்லும் ச்ருதி. அந்த தர்மம் சரீராத்மபாவம். பகவான் ஆத்மா. எல்லாம் சரீரம் என்றபோது சரீரத்தைச் சொல்லும் சொற்களெல்லாம் ஆத்மாவையும் சொல்லும் என்று லோகந்யாயத்திலுலே தேறும். ஒவ்வொரு வஸ்துவும் பரமாத்மாவை உட்கொண்டேயிருப்பதால் எந்தப் பெயரைச் சொன்னுலும் அச்சொல் அதன் பொருளுடன் சேர்த்து பரமாத்மாவையே சொல்லும் என்றதாயிற்று. அதனுல் ஸர்வம் ப்ரஹ்மம்; ஸர்வத்திற்கும் ப்ரஹ்மம் உபாதாநம் என்கிருேம்.

இனி, இப்படி சேதநாசேதநத்ரவ்யங்களெல்லாம் அவனுக்கு சரீரமாகையாலே நிலம்–நீர்–தீ–கால்–வானம், தேவன், மனுஷ்யன் எல்லாம் ப்ரஹ்மம் என்று சொல்வது பொருந்திற்று. த்ரவ்யமே சரீரமாகையால் அத்ரவ்யமான குணங்கள் பகவானுக்கு சரீரமாகா. அதனால் ரூபரஸாதிகள் ப்ரஹ்மம் என்று சொல்லவொண்ணுதென்று தோன்றும். அவ்வாறின்றி, 'குணங்களும் அவனே' என்று கூறுவதிலும் விரோதமில்லை. அதற்குக் காரணம் சேதநாசேதநங்கள் போல் அவற்றின் குணங்களெல்லாம் அவனுக்கே அதீனமாகையால் என்ற இரஹஸ்யத்தை மேலே வெளியிடுகிறார். மேலும், உலகில் குடம், மணி முதலான வஸ்துக்களை உண்டுபண்ணுகிறவர்கள் அவற்றிற்கு குணங்களைத் தாங்கள் செய்வதில்லை. அவ்வாறின்றி ஸர்வேச்வரன் குணங்களுக்கும் காரணமென இங்கே அறிவிப்பதுமாம். मत्त एवेति तान् विद्धि எனப் போகிறுரே. இதை ஜலத்திற்கு முன் ரஸமென்பது எங்குமே இராமலிருக்க ஜலத்தில் அது தோன்றியதினின்று தெளிக. சிறந்த குணங்களாக எடுத்துக் கூறுவது எதற்கு என்னில்—மேலானவர் தான் தவிர வேறு யாருமில்லை என்று கூறியதால், மேன்மையென்பது மேலானவற்றைப் படைப்பதனின்றே யறியவேண்டியிருப்பதாலென்க. சிறந்த குணங்களுக்கே காரணமானபோது மற்றவற்றிற்குக் காரணமென்பதில் ஐயமில்லையென்று தேறும்.

रसोऽहमप्सु कौन्तेय प्रभाऽस्मि शशिसूर्ययोः ।
प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥ ८ ॥

*ரஸோऽஹமப்ஸு கௌந்தேய ப்ரபாऽஸ்மி சசிஸூர்யயோ: |*
*ப்ரணவ: ஸர்வவேதேஷு சப்த: கே பௌருஷம் ந்ருஷு || 8 ||*

कौन्तेय—குந்தியின் குமரனே!
अहं—நான்
अप्सु रसः अस्मि—நீரில் இருக்கும் ரஸமென்ற புதிய குணமாவேன்.
शशिसूर्ययोः—சிறந்த சந்த்ரஸூர்யர்களின்
प्रभा अस्मि—ஒளியாவேன்.
सर्ववेदेषु—எல்லா வேதங்களுக்கும் பெருமையளிக்கும்
प्रणवः अस्मि—ஓங்காரமாவேன்.
खे शब्दः—வானத்தில் புதிதாக உண்டான ஒலியாவேன்.
नृषु—ஆண்களிடத்திலிருக்கும்
पौरुषम् अस्मि—ஆண்மையுமாகிறேன்.

पुण्यो गन्धः पृथिव्याञ्च तेजश्चास्मि विभावसौ ।
जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥ ९ ॥

*புண்யோ கந்த: ப்ருதிவ்யாஞ்ச தேஜச்சாஸ்மி விபாவஸௌ |*
*ஜீவநம் ஸர்வபூதேஷு தபச்சாஸ்மி தபஸ்விஷு || 9 ||*

पृथिव्यां—மண்ணிலிருக்கும்
पुण्यः गन्धः च—புனிதமான மணமு மாவேன்
विभावसौ—நெருப்பிலிருக்கும்
तेजः च अस्मि—கொளுத்தும் குணமு மாவேன்
सर्वभूतेषु—எல்லா ப்ராணிகளிடமும் உள்ள
जीवनम्-உயிருள்ள தன்மையாவேன்.
तपस्विषु—தவம் புரிகிறவர்களிடம் உண்டாம்
तपः च अस्मि—தவமுமாகிறேன்.

बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥ १० ॥

*பீஜம் மாம் ஸர்வபூதாநாம் வித்தி பார்த்த ஸநாதநம் |*
*புத்திர் புத்திமதாம் அஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாம் அஹம் || 10 ||*

पार्थ माम्—அர்ஜுனா! என்னை
सर्वभूतानां—எல்லா ப்ராணிகளிடமுள்ள
सनातनं बीजं-அனாதியாயிருந்து வரும் பீஜம் அதாவது ப்ராணியாக மாறும் மூலவஸ்து சக்தியாக
विद्धि—அறிவாயாக.
अहं—நான்
बुद्धिमतां—புத்திமான்களின்
बुद्धिः अस्मि—புத்தியாவேன்
तेजस्विनाम्—அடலுள்ளவரின்
तेजः अस्मि—அடலுமாகிறேன்.

बलं बलवताञ्चाहं कामरागविवर्जितम् ।
धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥ ११ ॥

*பலம் பலவதாஞ்சாஹம் காமராகவிவர்ஜிதம் |*
*தர்மாவிருத்தோ பூதேஷு காமோऽஸ்மி பரதர்ஷப || 11 ||*

अहं—நான்
बलवताम्—பலமுள்ளவரின்
कामरागविवर्जितं बलम्—தகாத ஸ்த்ரீ காதலும் வஸ்துக்களில் ஆசையும் கலக்காத பலமாகிறேன்.
भरत ऋषभ—பரதவம்சச்ரேஷ்டனே
भूतेषु—ப்ராணிகளிடம்
धर्म अविरुद्धः—தர்மத்திற்கு விரோதமாகாத
कामः अस्मि—காதலுமாகிறேன்.

காமராகவிவர்ஜிதம்—காமங்களாவன ஸம்ஸாரிகள் விரும்பும் பலன்கள். அவற்றில் பற்றில்லாத எனவும் பொருளாம். சில காமங்கள் தகுமென்பது 'தர்மாவிருத்த: என்றதால் அறிவிக்கப்பெற்றது. (11)

சில சிறந்த தர்மங்களைக் காட்டியதால், இவையெல்லாம் என்றால், மற்றவை வேறொருவராலென்று நினைக்க நேருமென்று எல்லாம் தன்னாலென்று சேர்த்துச் சுருக்கமாகச் சொல்லுகிறார்—

ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये ।
मत्त एवेति तान् विद्धि न त्वहं तेषु ते मयि ॥ १२ ॥

யே சைவ ஸாத்விகா பாவா ராஜஸாஸ்தாமஸாச்ச யே |
மத்த ஏவேதி தாந் வித்தி ந த்வஹம் தேஷு தே மயி || 12 ||

ये च—கீழ்க்கூறியவை போன்ற யாவை
सात्त्विकाः एव—ஸாத்விகமாகவேயுள்ள
भावाः—வஸ்துக்களோ
राजसाः—ராஜஸங்களும்
तामसाः च—தாமஸங்களும்
ये—எவைகளோ
मत्तः एव इति—என்னிடத்தினின்றே இவைகள் என்று
तान् विद्धि—அவற்றையெல்லாம் அறி.
अहं—பரிபூர்ணனான நான்
न तु तेषु—அவற்றை ஆச்ரயித்து இல்லை.
ते—அவைகளே
मयि—என்னை யாச்ரயித்து இருக்கின்றன.

கீழ்க்கூறியவை சிறந்தவையானபடியாலே ஸாத்விகங்கள். அதனால் முன்னே மற்ற ஸாத்விகங்களைச் சொல்லி மற்றவையும் தன்னால் என்கிறார் இங்கே भावाः என்ற சொல்லால் பொதுவாக வஸ்துக்களையும் கொள்ளலாம. கீழே தர்மங்களைக் கூறியதற்கிணங்க தர்மங்களையும் கொள்ளலாம். மானஸமான பாவங்களில் ப்ரஹர்ஷம், ப்ரீதி ஆனந்தம் முதலானவை ஸாத்விகங்களாகவும், அத்ருப்தி, பரிதாபம் கோபம் போன்றவை ராஜஸங்களென்றும், அவிவேகம், அறியாமை, கவனக் குறைவு போன்றவை தாமஸங்களென்றும் பிரிததுரைக்கின்றனரே, மேல் ச்லோகத்திற்போல் எல்லாவற்றையும் கொள்வதுமாம். நிற்க. नत्वहं तेषु ते मयि என்றதற்கு என்னில்—உலகில் சிலர் சில வஸ்துக்களைப் படைப்பதும் பெறுவதும் அவற்றைக் கொண்டு தாம் நன்மை பெறுதற்காக. பயிரிடுவது முதலானவை உண்டு உயிர் தரிப்பதற்காக. அதுபோல் இவையில்லையாகில் நான் ஸத்தை பெறமாட்டிலன் என்று அதற்காகப் படைக்கிறேன் என்று நினைக்கவேண்டா. பரிபூர்ணனான எனக்கு இவற்றாலாவதொன்றுமில்லை. ஜீவர்களின் நன்மைக்காகவே யெல்லாமாகின்றன. நான் ஸங்கல்பிக்காதபோது இவை ஜீவர்களுக்கு உண்டாகா என்றதாம். இங்கே स भगवः कस्मिन् प्रतिष्ठितः । स्वे महिम्नि प्रतिष्ठितः । यद्वा न महिम्नि । गो अश्वमिह महिमेत्याचक्षते என்கிற பூமவித்யாச்ருதியை அனுஸந்திக்க. உலகில் விபூதியாலே மதிப்புப் பெறுகிறவர்கள் ஜீவர்கள். பூமரூபமான பரமாத்மாவுக்கு விபூதியாலாவதொன்றில்லை. (12)

சேதநாசேதநங்களை உடலாகக் கொண்ட தனது உண்மைநிலை உணர்த்தப்பெற்றது. இதை யாரும் அறியவில்லையே யென்ன, அதற்குக் காரணம் கூறுகிறார்—

त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत् ।
मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥ १३ ॥

த்ரிபிர்குணமயைர்பாவைரேபி: ஸர்வமிதம் ஜகத் |
மோஹிதம் நாபிஜாநாதி மாமேப்ய: பரம் அவ்யயம் || 13 ||

इदं जगत् सर्वम्—இவ்வுலகெல்லாம்
एभिः गुणमयैः—கீழ்க்கூறிய ஸாத்விக ராஜஸதாமஸங்களான
त्रिभिः—உடல் கருவி ஊண் என்று மூன்றான
भावैः—வஸ்துக்களாலே
मोहितं—மோஹிக்கப்பட்டு
एभ्यः—இவ்வஸ்துக்களுக்கு
परम्—வசப்படாமல் சிறப்புடனிருக்கின்ற
अव्ययं माम्—என்றும் குன்றாத என்னை
न अभिजानाति—நன்றாக அறிவதில்லை.

இவை ஸாத்விக ராஜஸ தாமஸங்களாகையால் இவற்றின் அநுபவம் துக்கமும் அஜ்ஞானமும் கலந்தேயிருக்கும். இவற்றிற்கு மேலான எனது அநுபவத்தில் அக் கலப்பிற்கு இடமில்லை. இங்குப் பெறும் ஆனந்தம் என்னையனுபவிக்கும் ஆனந்தத்தில் கடலில் குளப்படி நீர்போல் அடங்கிக் கிடக்கும். வஸ்துக்கள் அழிவுறுவனவாகையால் இவ்வானந்தம் அழிவுறும். என்னைப் பெற்றால் ஆனந்தம் நிலைக்குமென்றபடி. (13)

இப்படியுள்ள நிலையை உணர்ந்தவர் ஏன் ஸம்ஸாரத்திலிழிகின்றனரென்னில்—

**दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।**
**मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥ १४ ॥**

See Ny. P. 29-5-73/75

*தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா |*
*மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம் ஏதாம் தரந்தி தே || 14 ||*

एषा—இந்த அபரப்ரக்ருதியான
गुणमयी—ஸத்வரஜஸ்தமோமயமான
मम माया—எனதான மாயை
दैवी—உலகின் படைப்பு முதலான வியாபாரம் உடைய எனக்கு அதீனமாகி
दुरत्यया—ஸம்ஸாரிகளால் மீளவாகாமலிருக்கிறது.
ये—ஸம்ஸாரிகளில் எவர்
माम् एव—என்னையே
प्रपद्यन्ते—சரணம் அடைகின்றனரோ
ते—அவர்கள்
एतां मायाम्—இந்த மாயையை
तरन्ति—கடக்கின்றனர்.

கீழே எட்டுவிதமாக அசேதன வஸ்துவின் உட்பிரிவையும் அவற்றோடு ஜீவராசிகளின் சேர்க்கையையும், அவற்றினுள் தான் புகுந்திருப்பதையும், பலகால் ஸ்ருஷ்டி ப்ரளயங்களையும் கூறி இவ்வுண்மையை அறியாமையால் ஸம்ஸார பந்தமென்று முக்குணமுள்ள வஸ்துவை மாயை யென்பதால் மாயா என்ற சொல்லுக்குப் பொய் என்ற பொருள் பொருந்தாது. பலவிடங்களில் மாயா என்ற சொல் ப்ரயோகிக்கப்படுகிறது. எங்கும் ஆச்சர்யமான கார்யம் செய்யும் வஸ்து என்ற பொருளே பொருந்தும். 'பாலனை ப்ரஹ்லாதனைக் காப்பதற்காக பகவான் சம்பராஸுரனுல் ப்ரயோகம் செய்யப் பெற்ற ஆயிரக் கணக்கான மாயைகளைத் தன் திருவாழியினுல் அழித்தருளினான்' என்றவிடத்தில் மாயை என்பதற்குப் பொய் என்ற பொருள் பொருந்துமா? கயிற்றைப் பாம்பாக நினைத்தால அப் பொய்ப் பாம்பானது, இது

பாம்பன்று, கயிறே என்ன தத்வஞானத்தினுல் நீங்குமல்லது தடியா லடிக்கப்படுவதன்றே. திருவாழியாயுதத்தினுல் அழிக்கப்படும் மாயை கள் பொய் வஸ்துக்களாமோ. ஜனகருடைய குலத்தில் தேவ மாயையே உருவெடுத்து ஸீதையாயிற்றென்ருல் பொய் ஸீதையென்றதாகுமோ? இப்படி ப்ரக்ருதியில் உட்பட்ட சில விசித்ர வஸ்துக்களே மாயையாலுல் ப்ரக்ருதி அற்புதமாக எல்லாம் படைப்பதால் அதை மாயை யென்று சொல்லத் தட்டென்ன? இந்த்ரஜாலாதிகளைச் செய்பவனை மாயாவி என்கிறோம். அதுவும் அவன் வைத்திருக்கும் மந்த்ரம் ஔஷதி முதலான வை உண்மையாயிருந்து அற்புத கார்யம் செய்வதால்தான். இப்படி மெய்வஸ்துக்களே மாயையானபோது அவற்ருலுண்டான பொய் வஸ் துக்களை மாயை யென்பதும் அவ்வாச்சார்ய வஸ்துவால் செய்யப்பட்ட மையினுலாம்; பொய் என்ற காரணத்தினுலல்ல. மேகங்களின் எழுச்சி. கடல் அடங்கி யிருக்கை, காற்றின் கிளர்ச்சி, நிச்சலும் சூர்யன் உதயமா யின்றமை, சந்திரனின் பிறைகளில் ஏற்றக்குறைவு, என்ருற் போன்ற வைவிஷ்ணுவின் மாயைகள் என்ருல் யாரும் செய்யவாகாமல் அவர் செய்யும் ஆச்சர்யகரமான வகைகள் என்ற பெருளே யல்லது எல்லாம் பொய் என்ற பொருளல்லவே? பொய்வஸ்துவில் விஷ்ணுவின் பொய் என்ற பொய்க்கு ஒரு விசேஷமோ. ஆகையால் மாயா என்ற சொல்லைக் கொண்டே மயங்குவதோ மயக்குவதோ மாயையேயாம் 'என்பர், சாங்கராத்வைதிகள் நீங்கலாக, மற்ற அத்வைதிகளும் மற்ற மதத் தினரும். ப்ரபத்தியும் பக்தியும் செய்தே இம் மாயையைக் கடக்க வேண்டுமென்றதாலும் இது பொய்யல்லவென்பது தெளிவாம்.

ப்ரபத்தியை எல்லோரும் ஏன் செய்வதில்லை யென்ன, அருளிச் செய்கிருர்—

न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः ।
मायया‌ऽपहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥ १५ ॥

ந மாம் துஷ்க்ருதிநோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா: |
மாயயாऽபஹ்ருத ஜ்ஞாநா: ஆஸுரம் பாவம் ஆச்ரிதா: || 15 ||

मूढाः—விபரீத ஞானிகளும்
नराधमाः—அறிவுடன் கெட்டவரும்
मायया—குயுக்திகளால்
अपहृतज्ञानाः—பெற்ற அறிவையிழந்தவரும்
आसुरं भावम्—அறிவிருந்தும் முரட்டுத்தனமாக ஆக்ரஹத்தை
आश्रिताः—கைப்பற்றியவருமான
चतुर्विधाः—நான்கு வகையினரான
दुष्कृतिनः—பாபிகள்
मां—என்னை
न प्रपद्यन्ते—சரணம் அடையார்.

அடுத்த ச்லோகத்தில் முதற்பதமான चतुर्विधाः என்பது இங்கும் சேரும். இந்நான்கு பிரிவுகளுக்கும் அததற்குத் தக்க பாபமே காரணம். முதல்வர் மூடர். பகவானுக்கு சேஷமான தன் ஸ்வரூபத்தை ஸ்வதந்த்ர

हरेः पारम्यं निगमापगा... नराधमः।
सौलभ्यवेदी ... कश्चित् ... ॥



மாக நினைத்திருப்பவர். நராதமராவார்—நரனைப் பிறந்ததற்கேற்ப பகவான் பரன் ஒருவன் இருப்பதாக அறிந்தும் பரத்வத்துடன் ஸௌலப்யாதிகுணங்களும் அவனுக்கு இருப்பதை யறியாமலோ எக்காரணத்தினுலோ அவனைப் பெற முயலாமலிருப்பவர். மூன்றும் வகுப்பினர் எல்லாம் அறிந்திருந்தும் பிறகு துர்வாதம் செய்பவரோடு பழகி அவர்களுடைய குதர்க்கங்களுக்கு மயங்கி ஞானத்தை இழந்தவர். அசுரப்ராயர் நான்காம் வகுப்பினர். இவர்களுக்கு இனி ஒருவர் உபதேசிக்க வேண்டாதபடி எல்லாம் தெரியும். ஆனாலும் பாபவசமாகப் பெருமானிடம் த்வேஷம் ப்ரபலமாயிருக்கும். ஹிரண்ய ராவணுதிகளைக் காண்க. இந் நால்வரில் மேன்மேல் சொல்லப்பட்டவருக்குப் பாபம் ப்ரபலமாகும். (15)

இனித் தன்னை யாச்ரயிக்கும் நால்வரைக் குறிக்கிருர்—

**चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।**
**आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥ १६ ॥**

சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந |
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப || 16 ||

भरतर्षभ—பரதவம்ச ச்ரேஷ்டனே !
अर्जुन—அர்ஜுனு !
सुकृतिनः—புண்யம் செய்தவராய்
जनाः—நற்பிறவி பிறந்தவர்
आर्तः—ஐச்வர்யம் தொலைந்து தவிப்பவன்
अर्थार्थी—ஏழையாகப் பிறந்து பேரைச்வர்யம் பெற விரும்புகின்றவன்
जिज्ञासुः—வெளிச் செயலின்றி அநுபவம் மட்டுமே பலனை கைவல்யத்தை விரும்புகின்றவன்
ज्ञानी—ப்ராப்யமும் ப்ராபகமுமாக பகவானையறிதலென்ற ஞானச் சிறப்புடையவன் என்ற
चतुर्विधाः—நான்கு வகுப்பினரும்
मां भजन्ते—என்னிடம் பக்தி செய்வர்.

விசேஷமான ஸுக்ருதமில்லாத போது என்னிடம் பக்தி வைக்கும் பிறவி பெறமாட்டிலர். பெற்றவரில் சிலர் ஐச்வர்யம் இழந்ததற்கு வருந்தி அதனையே வேண்டுவர். சிலர் ஏழ்மையிலே பிறந்து புதிதாக அதனை வேண்டுவர். இவ்விரு வகுப்பினரையும் ஐச்வர்யகாமரென்று ஒன்றுகச் சேர்க்கலாம். ஜிஜ்ஞாஸுவாவானுன் கைவல்யம் விரும்புகின்றவன். கைவல்யமாவது ஜீவாத்மானுபவம். அந்த அனுபவ காலத்தில் அவன் உடலைக் கொண்டு செய்யும் செயலொன்றுமில்லை. மோக்ஷத்திலும் ஸம்ஸாரத்திலும் உடலின் செயலுமுண்டு. அதனுல் அறிவு மட்டும் விரும்புவதால் ஜிஜ்ஞாஸு எனப்படுவான். இப்படி உபாயமான பகவானையே உபேயமாகவும் அறிந்து முயல்பவன் ஜ்ஞானியாவான். இவன் முழு முமுக்ஷு. (16)

ஞானி தான் சிறந்தவன் என்கிருர்—

तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः ॥ १७ ॥

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர் விசிஷ்யதே |
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய: || 17

तेषाम्—அந்நால்வரில்
ज्ञानी—ஞானியென்பவன்
नित्ययुक्तः—உபாயதசையிலும் பல தசையிலும் என்னுடனே சேர்ந்து
एक भक्तिः—ஒன்றிலேயே (என்னிடமே) விருப்பம் உடையனாய் இருப்பதால்
विशिष्यते—மேம்படுகிறான். மேலும்
ज्ञानिनः—ஜ்ஞானிக்கு
अहं—நான்
अत्यर्थं प्रियः—வாயால் சொல்லவாகாத படி மிகமிக இஷ்டமாகிறேன்.
स च मम—அவனும் எனக்கு
अत्यर्थं प्रियः हि—அவ்வாறே இஷ்டமாகிறானே
(ஆகையாலும் மேம்பட்டவன்.)

ஐச்வர்யமோ கைவல்யமோ விரும்புகின்றவர்கள் உபாயதசையில் என்னோடு சேர்ந்திருந்தாலும் பலன் பெற்று அனுபவிக்கும் என் சேர்த்தியை யிழப்பர். ஞானி அவ்வாறுகான், அவன் என்னையே ப்ராப்யமாகக் கொண்டதால், ஒரேயிடம் விருப்பம் மற்றவர்களுக்குத் தங்கள் பலனிலும் அதற்காக என்னிடமும் அன்பான படியால் ஏகபக்தித்வமில்லை. இதனுடன் ஞானி என்னிடம் வைத்திருக்கும் ப்ரீதி அளவிடக் கூடியதே யன்று அதற்கு இணங்க யானும் அவனிடம் அவ்வாறு ப்ரீதி கொண்டிருக்கிறேன் ஆகையால் ஞானி மேம்பட்டவனுவான. (என்னிடம் பக்தி பண்ணுகிறவர் வேறு பலனுக்காகச் செய்வது தகாது என்ற கருத்தாம்.) अत्यर्थम् என்பதற்கு விஷயத்திற்கு மேலாக என்ற பொருள் சேராது. சொல்ல முடியாதபடி என்ற பொருளாம். நாம் பகவானிடத்தில் வைக்கும் ப்ரீதி விஷயத்திற்கு மேலாகாது. அவன் ஜீவனிடம் வைக்கும் ப்ரீதி விஷயத்திற்கு மேலாகுமென்னலாம். அங்கே अत्यर्थमென்பது நன்கு பொருந்தும். நாம் ப்ரீதி வைக்கும் அளவுக்கே பகவான் நம்மிடம் ப்ரீதி வைக்கிறுனைகையால் நமது ப்ரீதியை முதலிற் கூறினர். இல்லையேல், எல்லோருக்குமே மோக்ஷம் அளிப்பதாகுமே स च என்ற சகாரத்தினுல் அவன் ப்ரீதி வைத்த பிறகு ப்ரீதி வைக்கிறேனே என்று தன் வருத்தத்தை பகவான் குறிக்கிறுர் என்னலாம். அன்றி, நான் ஸஹஜஸுஹ்ருத்தாய் ஸஹஜஸார்வ பௌமனுயிருப்பதாலே அவன் ப்ரீதி வைக்காத போதும் எப்போதுமே அவனிடம் ஒருவிதம் அன்பு வைத்துள்ள எனக்கு அவன் சொல்லவாகாத அளவுக்குப் ப்ரியனுகிறுன் என்கிற விசேஷமும் அதனுல் குறிப்பிட்டதாகும்.

ஞானி நீங்கலாக மற்றவரையும் ஒருவாறு புகழ்ந்துகொண்டே ஞானியிடம் தனக்கு வரம்பு கடந்த அபிமானமுமெகின்றார்—

उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् ।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥ १८ ॥

உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்,
ஆஸ்த்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம் || 18 ||

एते सर्वे एव—இவர்கள் எல்லோருமே
उदाराः—வள்ளல்கள்
ज्ञानी तु—இவர்களில் ஞானியோவென்றால்
आत्मा एव—எனக்கு அந்தர்யாமியே.
मे मतम्—இது எனது கொள்கை.
(சாஸ்த்ர உண்மை வேறு நிற்க)
हि—ஏனெனில்,
सः—அவன்
युक्तात्मा—என்னைச் சேர்வதிலே நோக்குண்ட மனத்துடன்
माम् एव—உபாயமான என்னையே
अनुत्तमाम्—இதற்கு மேலொன்றில்லாத
गतिम्—ப்ராப்யமாகவும்
आस्थितः—உறுதியாகக் கொண்டானே.

அந்தந்தப் பலனுக்கு பக்தி பண்ணுகின்றவர்விஷயத்தில் பரமாத்மா வள்ளலாயிருக்க, அர்த்தியான அவர்களை வல்லர்களென்பதென் என்னில்—அவர்கள் மூலம் இவனுக்கு சொத்து கிடைப்பதாலென்க. என்ன சொத்து அதென்னில்—'ஸகலபலப்ரதோ ஹி விஷ்ணு:' என்ற புகழே சொத்தாகும். பலன் பெறுகிறவர்கள் இல்லாதபோது அது எவ்வாறு கிடைக்கும்? இதனை மேலே விரித்துரைப்பார். எல்லோரும் எங்கெங்கோ சென்று ஏதேதோ கேட்கிறார்களேயல்லது என்னிடம் வருவதில்லையே என்கிறாரே. பிறரைத் தன்னிடம் யாசகர்களாகச் சொன்னால் அவர்களுக்குக் குறையாகுமென்று அவர்களைப் புகழ்வதுமாம். (मे मतम् என்பதை இங்கும் சேர்க்கலாம்.) பகவான் எல்லோருக்கும் அந்தர்யாமி என்பதே உண்மை. பக்தரை அந்தர்யாமியென்பது ஆத்மலக்ஷணம் சிறிதிருப்பதால். தன்னிடம் பக்தர்களானவரை விட்டுத் தன்னை தரிக்கமாட்டாத நிலை இவனுக்கும் அது முதல் இருப்பதால் அவர்களை முழு ஆத்மாவாக ஏறிட்டுப் புகழ்வதாம். ஐச்வர்ய கைவல்யங்களைப் பெறுகிறவர்களால் இவனுக்குப் பெருமையுண்டு; இவனது ஸ்வரூபம் நிலைப்பதே ஞானிகளாலென்றும் ஞானிகளுக்கு ஏற்றம் சொன்னபடி. अनुत्तमां गतिम्. வேறொன்றையே ப்ராப்யமாக நினைத்திருப்பானைவிட என்னை ப்ராப்யமாக நினைப்பவன் மேம்படுவான். என்னையே ப்ராப்யமாக நினைப்பான் அவனுக்கு மேலாவான். எனக்குமேல் ப்ராப்யமொன்றில்லை யென்று என்னிடமே முடிவு கொள்ளுகிறவன் மிகச் சிறந்தவன். இவனுக்குமேலாக யாருமில்லை. இங்கே ஸ[illegible]ரஹ்மம் இருப்பதாக நினைப்பதும் தவறென்று தேறும். (18)

இவ்வறிவு எளிதில் வராதாகையாலே இதுள்ளவனைப் பெ மிகவும் அரிதென்கிறார்—

बहूनां जन्मनामन्ते ज्ञानवान् मां प्रपद्यते ।
वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥ १९ ॥

பஹூநாம் ஜந்மநாம் அந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே ।
வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ॥ 19 ॥

बहूनां जन्मनां अन्ते—வெகு புண்ய ஜன்மங்களின் முடிவிலே
ज्ञानवान्—எனது உண்மையறிந்த வனாகி
वासुदेवः सर्वम्—வாஸுதேவனே எல்லாம். உபாயமும் உபேயமும்
इति—என்று எண்ணி
मां प्रपद्यते—என்னிடம் பக்தி செ கி
स महात्मा—இப்படிப் பெருமன முடை
सुदुर्लभः—மிகவும் பெறலரியன்.

உண்மை யறிவது பல ஜன்மங்களிற் செய்த புண்யங்க பலனாகும். உண்மையாவது தனது ஆத்ம ஸ்வரூபம் பகவானு சேஷபூதம். அவனுக்கேயாக வேண்டுமென்ற தெளிவு. இவ்வ உள்ளவன் தனக்கென்று ஒன்றையும் விரும்பான். (

பகவானுக்கே சேஷபூதமென்ற தெளிவில்லாதபோது வேறு ப களில் விருப்பமுண்டாகிறது. அதனால் வேறு தேவதைகளையும் அ நேருகிறது. அவ்வாறானவர்களே பெரும்பாலுமாகையால் ஞானிவ பெறல் அரிதேயென்று விரித்துரைக்கிறார்—

कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।
तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥ २० ॥

காமைஸ்தைஸ்தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தேऽந்யதேவதா
தம் தம் நியமமாஸ்த்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥ 20 ॥

(ஜனங்கள் எல்லோரும்)
स्वया—தமதான
प्रकृत्या—அந்தந்த வஸ்து விஷயமான பழைய வாஸனையுடன் (யால்)
नियताः—எப்போதுமே சேர்ந்தவர்களாய் (அடக்கப்பட்டவராய்)
तैः तैः कामैः—அந்தந்த இஷ்டங்களால்
हृतज्ञानाः—இருந்த அறிவும் பறிக்கப் பட்டு
अन्यदेवताः—வேறு தேவதைகளை
तं तं नियमम्—அந்தந்த யாகாதிகளை
आस्थाय—ஆஸ்த்தை வைத்து எல்லாம் செ
प्रपद्यन्ते—காமங்களுக்காக பஜன செய்கின்ற

இதற்குமுன் எவ்வாறான பலனை அனுபவித்திருக்கின்றனரோ, வாறான பலனில் ஆசை அநாதி வாஸனையால் வருகிறது. அதை விட

புதிதாக என் விஷயத்தில் இழிவது எளிதிலாகாது. அப் பலனில் உள்ள பற்றின் கனத்தாலே உள்ள அறிவும் அழிவதால், நமக்கு ஸம்பந்தமில்லாத தேவதைகளிடம் நாம் ஏன் போகவேண்டுமென்றும் நினைக்காமல், தேவதாந்தரபஜன வாஸனையுமிருப்பதால் அங்கே சென்று அந்தந்த விதிகளை எவ்வளவு பிரயாசை யிருந்தாலும் விடாமல் செய்கின்றனர்—

**योयो यां यां तनुं भक्तः श्रद्धयाऽर्चितुमिच्छति ।**
**तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥ २१ ॥**

*யோ யோ யாம் யாம் தநும் பக்த: ச்ரத்தயாऽர்ச்சிதும் இச்சதி |*
*தஸ்ய தஸ்ய அசலாம் ச்ரத்தாம் தாம் ஏவ விததாம்யஹம் || 21 ||*

यः यः—எவனெவன்
यां यां—எந்தெந்த
तनुं—எனது உடலான தேவதையை
भक्तः—பக்தியுடன்
श्रद्धया—செய்வதிலும் ஊக்கத்துடன்
अर्चितुम् इच्छति—ஆராதிக்க விரும்புகிறானோ,
तस्य तस्य—அவனவனுக்கு
अहं—நான்
ताम् एव—அந்தந்த எனது உடல்விஷயமான
श्रद्धाम्—அதே ச்ரத்தையை
अचलां—கெடாதபடியாக
विदधामि—செய்கிறேன்.

வேதங்களில் ஓதப்பெற்ற தேவதைகள் அனைவரும் எனது உடலாயிருக்க, அதை யறியாமல் அந்தந்த தேவதையை அவனவன் பக்தியும் ச்ரத்தையுமாக ஆராதிக்க விரும்பினால் அந்த விருப்பத்தை இடையூறின்றி வளர்க்கிறேன். என்னைத் தெரிந்து கொள்ளவில்லையென்பதற்காக உபேக்ஷிப்பதில்லை.

**स तया श्रद्धया युक्तः तस्याराधनमीहते ।**
**लभते च ततः कामान् मयैव विहितान् हि तान् ॥ २२ ॥**

*ஸ தயா ச்ரத்தயா யுக்த: தஸ்யாராதநமீஹதே |*
*லபதே ச தத: காமாந மயைவ விஹிதாந் ஹி தாந் || 22 ||*

सः—அப்படி ஆராதிக்க விரும்பியவன்
तया श्रद्धया—அந்த ச்ரத்தையுடன்
युक्तः—சேர்ந்தவனாய்
तस्य—அந்த தேவதைக்கு
आराधनम्—ஆராதனத்தை
ईहते—நடத்துகிறான்.
ततः—அந்த ஆராதனம் காரணமாக
मया एव—என்னாலேயே
विहितान्—செய்யப்பெற்ற
तान् कामान्—அந்தந்த இஷ்டங்களை
लभते हि—அடைகிறானல்லவா.

என்னை ஆராதிப்பதாக அவனவன் நினைக்காவிடினும் அதற்காக நான் உபேக்ஷிக்காமல் பலனை யளிப்பதால் அவனவன் பலனைப் பெறுகிறானன்றோ. அதனால் அந்த ஆராதனத்திலேயே அவனவன் இழிகிறான். நான் அளிக்காமலிருந்தால் அந்த ஆராதனமும் நின்றுவிடும். நான் அவ்வாறு நிறுத்துவதில்லை. உடலுக்குச் செய்வதெல்லாம் உள்ளிருக்

கும் ஆத்மாவுக்கு ஆகிறபடியால் அவர்கள் எனக்கு உடலாகையால் அவர்களுக்குச் செய்யும் பூஜை எனது பூஜையாக என்னால் கொள்ளப் படுமே. (तस्याराधनமென்ற விடத்தில் तस्य आराधनமென்று பிரித்தால் ஆராதனமென்ற சொல் ப்ரஸித்தமாகும். तस्य என்பதை, மேலே देवान् देवयजः என்பதால் இந்த்ராதி புருஷர்விஷயமாக்கலாம். तस्याः என்று பிரித்தால் राधनமென்று பதமாம் பொருள் ஆராதனமே ) (22)

ஆயின், அவர்களை 'ஹ்ருதஜ்ஞாநா:' என்று நிந்திப்பதென் என்னில், அவர்கள் வேண்டும் பலன்கள் அற்பங்களாகையால் என்கிறார்—

अन्तवत्तु फलं तेषां तद् भवत्यल्पमेधसाम् ।

அந்தவத்து பலம் தேஷாம் தத் பவத்யல்பமேதஸாம் |

अल्पमेधसाम् அற்ப புத்தியை உடைய
तेषां—தேவதாந்தராராதனம் செய்கின்றவர்களுக்கு
तत्—அந்த ஆராதனத்தின் பலன்
अन्तवत् तु—அழிவுள்ளதாகவே
भवति—ஆகின்றது.

இந்த்ராதி தேவதைகளும் அற்பர்கள். அவர்கள் மூலம் பெறும் பலன்களும் அற்பம். அவற்றை விரும்புவதால் இவர்களுடைய புத்தியும் அற்பம். அத்துடன் அப்பலன்கள் அழிவுறுவனவுமாம்.

ஏன்? அவர்களையே பெரிய பலனுக்காக ஆராதித்தால் அந்த ஆராதனம் உமதாகிறபடியால் அழிவற்ற பலன் பெறலாமே யென்னில், அது கூடாதென்கிறார்—

देवान् देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥ २३ ॥

தேவாந் தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி || 23 ||

देवयजः—இதர தேவதைகளை ஆராதிப்பவர்
देवान्—அந்த தேவதைகளை
यान्ति—அடைவர்.
(அதற்கு மேலான பலன் பெற மாட்டிலர்.)

मद्भक्ता अपि—என்னையே ஆராதிப்பவர்
माम्—என்னை
यान्ति—அடைவர்.
(என்னைப் பெறுதற்கு மேலான பலனில்லையாகையால் இப்பலன் அழிவற்றது.)

அவரவர் அளிக்கக் கூடும் பலனைத்தானே அவரவரிடம் கேட்கலாம். அழிவற்ற பலனை யளிக்க அவர்களால் ஆகாத போது அதற்காக அவர்களை ஆராதிப்பது கூடுமோ? அப்போது என்னைத் தான் ஆராதிக்க வேண்டும். அந்தந்த தேவதாஸாயுஜ்யமளவான பலனை அவர்களிடம் பெறுவரென்ற நியாயத்தினாலே என்னை யாராதிப்பவரும் எனது ஸாயுஜ்யம பெறுவரென்பது தேறுமாகையால் என்னையே அதற்காக ஆராதிக்க வேண்டும். (23)

நீர் நேரில் அவதரித்து ஸௌந்தர்யம் ஸௌசீல்யம் முதலான குணங்களோடு எதிரில் திகழும்போது வேறு தேவதையிடம் சென்று சிறிய பலன்களை ஏன் பெறுகிறார்களென்னில்—

**अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः ।**

**परं भावमजानन्तो ममाव्ययमनुत्तमम् ॥ २४ ॥**

*அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் மந்யந்தே மாம் அபுத்தய: |*
*பரம் பாவம் அஜாநந்தோ மமாவ்யயம் அநுத்தமம் || 24 ||*

अबुद्धयः—அறிவற்றவர்கள்
मम—எனது
अव्ययम्—அவதாரத்திலும் குன்றாத
अनुत्तमम्—உயர்வற உயர்ந்த
परं भावम्—பரத்வஸௌலப்யங்களின் சேர்த்தியென்ற சிறந்த தன்மையை
अजानन्तः—அறியாதாராய்
माम्—என்னை
अव्यक्तम्—இதற்கு முன் ஒரு சிறப்புமின்றி
व्यक्तिम् आपन्नम्—ஏதோ ஓர் அரசகுமாரன் போன்ற அளவில் தோற்றமுடையனாகவே
मन्यन्ते—நினைக்கின்றனர்.

மற்ற ஜீவர்கள், பிறப்பதற்கு முன் அறிவு ஐச்வர்யமெல்லாமின்றி ஏதோ தக்கவாறு எல்லாம் பெற்றிருப்பது போல், யானும் முன் பெறாமல் தற்சமயம் சிறிது பெற்றிருக்கிறேனென்றே நினைக்கின்றனர் அறிவற்றமையால். அவதாரத்திற்கு முன்னேயே எனக்கு எல்லாப் பெருமைகளும், அவை இப்போது குன்றாமலிருப்பது விசேஷம் என்று நினைப்பதில்லை. (24)

அவ்வாறு அறியாமைக்குக் காரணமென்னவெனில்—

**नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।**

**मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥ २५ ॥**

*நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவ்ருத: |*
*மூடோऽயம் நாபிஜாநாதி லோகோ மாம் அஜம் அவ்யயம் || 25 ||*

अहं—நான்
योग माया समावृतः—அந்தந்த ஜாதிக்கேற்ற வடிவுடன் சேர்க்கை என்ற மாயையினால் மறைக்கப்பட்டு
सर्वस्य—எல்லோருக்கும்
न प्रकाशः—தெய்வமென்று காணவாகாமலிருக்கிறேன்.
मूढः—அதனால் அந்தந்த ஜாதியாகவே என்னை நினைக்கும்
अयम् लोकः—இந்த ஜனம்
माम्—என்னை
अजम् अव्ययम्—ஜீவனுக்குப் போன்ற பிறவியும் அழிவுமில்லாதவனாக
न अभिजानाति—அறியவில்லை.

யோக என்ற சொல்லுக்கு இங்கு தேவ-மனுஷ்ய-திர்யக்-ஸ்தாவர ஜாதிகளுக்கு ஒத்த வடிவு முதலானவற்றுடன் தனக்குச் சேர்க்கை,

என்பது பொருளாம். அதே உள்ளபடி இவனை அறிய வொட்டாதபடி செய்வதால் மாயை. மறைக்காமலே தோன்றலாகாதோ என்னில், அவதரிப்பது என்றாலே தேஹமொன்று பெறுதல் தானே, தெய்வமாகவே தோன்றினால் வேண்டினவர்களின் விருப்பமும் நிறைவேறாது, என்னை மகனாகவும் மணாளனாகவும் தகப்பனாகவும் தோழனாகவும் அவரவர் பெற்று அனுபவிக்க ஆசை வைத்திருக்கும் போது, கலந்து பரிமாறப் பாங்காக ஒரு யோனியிற் பிறவி கொள்ளாமல் தெய்வமாகவே தோன்றினால் அவர்கள் நெருங்கவாகுமோ? அதற்காக, "என்னென்ன யோனியுமாய்ப் பிறந்தாய்" என்று கொண்டாடும்படி பிறக்கிறேன். அதனால் எல்லோருக்கும் அறியவாகாமற் போனாலும், பக்தர்கள் தங்கள் மனோரதம் பூர்த்தி பெறுகின்றனர். மூடஜனம் அறியாவிட்டாலும் பிறர் அறிவர். (25)

இந்த யுகத்தில் மட்டுமில்லை. எப்போதும் இந்நிலையே யென்கிறார்—

वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन ।
भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन ॥ २६ ॥

வேதாஹம் ஸமதீதாநி வர்த்தமாநாநி சார்ஜுந ।
பவிஷ்யாணி ச பூதாநி மாந்து வேத ந கச்சந ॥ 26 ॥

अर्जुन—அர்ஜுனா!
समतीतानि—கடந்தவையும்
वर्तमानानि च—நிகழ்கின்றவையும்
भविष्याणि च—எதிர்காலத்தியவையுமான
भूतानि—பிராணிகளை
अहं वेद—நான் அறிவேன்.
मां तु—என்னையோ வென்றால்
कश्चन—ஒரு பிராணிகூட
न वेद—அறியவில்லை.

எதிர்—நிகழ்—கழிகாலங்களிலுள்ள பிராணிகளை யெல்லாம் நான் ப்ரத்யக்ஷமாய்க் காண்கிறேன், ஒரு ஜீவன் கூட அவதரிக்கும் என்னை உள்ளபடி அறிபவனில்லை யென்பதே நான் காண்பதாகும். (எல்லோரும் தன்னை நெருங்கிக் கண்டு நன்கு விளங்க வேண்டுமென்ற பேராவல் கொண்டு அவதரிக்கும் பெருமானுக்கு யாரோ சிலர் மட்டும் நெருங்குவது எண்ணிக்கைக்கே வரவில்லை. அதனால் மஹாத்மா கிடைப்பது மிகவும் அரிதென்பதை இவ்வாறு விளக்கினார். நான் எல்லாம் அறிவேன் என்று எதற்காக இங்கே கூறவேண்டுமென்னில், யாரும் காணவில்லை யென்பதைத் தான் கண்டதாகத் தெரிவிக்க.) (26)

என்னை யறிந்தவராகில், என்னோடு கலவியில் களிப்பும், பிரிவில் த்வேஷமும் உண்டாம். அவ்வாறின்றி வேறு விஷயங்களிலேயே ப்ரீதி த்வேஷங்கள் ஆகின்றன என்கிறார்—

इच्छाद्वेषसमुत्थेन द्वन्द्वमोहेन भारत ।
सर्वभूतानि संमोहं सर्गे यान्ति परन्तप ॥ २७ ॥

இச்சாத்வேஷஸமுத்தேந த்வந்த்வமோஹேந பாரத |
ஸர்வபூதாநி ஸம்மோஹம் ஸர்கே யாந்தி பரந்தப || 27 ||

भारत—பரதவம்சத்தியவனே !
परन्तप—பகைவரை வருத்துகிறவனே
सर्वभूतानि—எல்லா ப்ராணிகளும்
सर्गे—ஸ்ருஷ்டிகாலம் முழுமையும்
इच्छाद्वेषसमुत्थेन—இதற்குமுன் அனுபவத்தில் ஏற்பட்ட விருப்பு வெறுப்பு மூலமாக மீண்டும் உண்டாய்
द्वन्द्वमोहेन—மோஹத்திற்குக் காரணமான சீதோஷ்ணாதிகளான அனுகூலம் ப்ரதிகூலமென்ற வஸ்துவினால்
संमोहं यान्ति—இச்சையும் த்வேஷமும் பெறுகின்றன.

அந்தந்த பிராணிக்கு எதெது இஷ்டமாயும் இஷ்டமில்லாமலும் முன் இருந்ததோ, அதற்கிடாக மேன்மேல் அததில் விருப்பும் வெறுப்பும் உண்டாகிறன. அதது விஷயமாகவே ஸுகதுக்கானுபவங்களும் ப்ரீதி த்வேஷங்களும் ஸ்ருஷ்டி காலம் முழுமையும் நடமாடுகின்றன. த்வந்த்வம் சீதோஷ்ணாதிகள். அவற்றை த்வந்த்வமாக—அனுகூலமும் ப்ரதிகூலமுமாக மோஹிப்பது பழைய இச்சா த்வேஷங்களால். என்னைப் பெறுமையில் வெறுப்பும் என்னைப் பெறுவதில் விருப்பும் தொடர்ந்து யாருக்கு உண்டு. இது மோஹமாகாத த்வந்த்வம். அதனால் மஹாத்மாவைப் பெறலென்பது அரிதே. (27)

எல்லா பிராணிகளும் மஹாத்மாக்களாகலாமே என்ற குறையினால் இவ்வாறு கூறினேன். சிலர் தேறி வருகின்றனர். ஸுக்ருதம் விசேஷமாகச் செய்யப்பட்டுப் பாபம் விலகினால் அவ்வாறாகுமென்கிறார்—

**येषां त्वन्तगतं पापं जनानां पुण्यकर्मणाम् ।**
**ते द्वन्द्वमोहनिर्मुक्ता भजन्ते मां दृढव्रताः ॥ २८ ॥**

யேஷாந்த்வந்தகதம் பாபம் ஜநாநாம் புண்யகர்மணாம் |
தே த்வந்த்வமோஹநிர்முக்தா: பஜந்தே மாம் த்ருடவ்ரதா: || 28 ||

पुण्यकर्मणाम्—பகவானிடத்திலே நோக்கு உண்டாகும்படி புண்யங்களைச் செய்து
जनानां येषाम्—பிறந்திருக்கும் எவர்களுக்கு
पापम्—என்னை யறியாமைக்கான பாபமானது
अन्तगतम्—அழிவுற்றதோ,
ते—அவர்கள்
द्वन्द्वमोहनिर्मुक्ताः—அற்பமான ஸுகதுக்கங்களில் உள்ள மோஹத்தினின்று விடுபட்டு
दृढव्रताः—நானே உபாயம் என்கிற ஸங்கல்பம் உடையராய்
मां भजन्ते—என் விஷயமான பஜனம் செய்கின்றனர்.

மேல் ச்லோகம் கைவல்ய விஷயமாகவும் அதற்குமேலது ஐச்வர்ய விஷயமாகவும் அமைந்திருப்பதால் இந்த ச்லோகம் ஞானிவிஷயமாகலாம். 'மஹாத்மா ஸுதுர்லப:' என்பதை முடித்ததாலும் மஹாத்மா

வாகச் சிலர் ஆவதற்குக் காரணம் இங்கே கூறுகிறாரென்னலாம். द्वन्द्वना: என்பதும் பொருந்தும். ஆயினும் முன் ச்லோகத்தில் नाहं प्रकाशः सर्वस्य என்றதால் யாருக்கு ப்ரகாசமாகிறாரென்றபோது நான்குவித பக்தர்களுக்கும் என்பதே பொருந்தும். 'भजन्ते माम्' என்ற சொல்லும் चतुर्विधा भजन्ते माम् என்றதை நினைப்பூட்டும். ஆகையால் எல்லோரையுமே கொண்டது. ஆக द्वन्द्वमोहनिर्मुक्ता: என்பது தேவதாந்தரங்களை ஆச்ரயிப்பதற்கான த்வந்த்வ மோஹங்களால் பலவிதமான பாடுகள் இல்லையென்ற பொருளதாம்.

கீழ்க்கூறிய நான்கு பக்தர்கள் மூன்று பக்தர்களேயாவர். ஐச்வர்யார்த்தி, கைவல்யார்த்தி, மோக்ஷார்த்தி என்று. அவரவர்கள் அறிந்து அனுஷ்டிக்க வேண்டியவற்றை ஸூக்ஷ்மமாகக் குறிக்கிறார். ஐச்வர்ய கைவல்ய விஷயமாக இங்குச் சிறிது விரிவு. மோக்ஷ விஷயம் உபநிஷத்துக்களில் பலவாறாக ப்ரஸித்தமாகையால் அதைப் பொதுவாகவே பணிப்பர்—முதலில் கைவல்ய விஷயம்—

**जरामरणमोक्षाय मामाश्रित्य यतन्ति ये ।**
**ते ब्रह्म तद् विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम् ॥ २९ ॥**

*ஜராமரணமோக்ஷாய மாம் ஆச்ரித்ய யதந்தி யே |*
*தே ப்ரஹ்ம தத் விது: க்ருத்ஸ்நம் அத்யாத்மம் கர்ம சாகிலம் || 29 ||*

माम् आश्रित्य—என்னை உபாஸித்து
जरामरणमोक्षाय—மூப்பும் இறப்பும் விட்டிருக்க
ये यतन्ति—எவர்கள் முயற்சி செய்கின்றனரோ
तत् ब्रह्म—அந்த ப்ரஹ்மத்தையும் (ஜீவனையும்)
कृत्स्नम् अध्यात्मम्—ஸம்ஸாரியான ஆத்மாவைச் சார்ந்தது அனைத்தையும்
अखिलं कर्म च—அதற்கான செயல் எல்லாவற்றையும்
ते विदुः—அவர்கள் அறிகிறார்கள்.

கைவல்யம் பெற என்னை உபாஸிக்கின்றவர், அந்த ப்ரஹ்மம் அத்யாத்மம், கர்ம என்ற மூன்றையும் நன்கு அறிவர். இதன் விரிவு எட்டாம் அத்யாயத்திலாம். मोक्षाय என்றால் பகவானைப் பெறுதல் என்ற மோக்ஷத்தைக் கொள்வார்கள்; அபஹதபாப்மாவாகிறபடியால். கைவல்யத்தில் அபஹத பாப்மா என்ற நிலையில்லை. ஐச்வர்யார்த்திகளைப் போலே மூப்பும் இறப்புமின்றி ஓரிடத்தில் ஒரேவிதமாகவே கைவல்யானுபவம் பெறும் வரையில் இருக்கிறாரென்றபடி. இந்தக் கைவல்யத்திற்காக ஞானயோகம் செய்கின்றவரும் உண்டு. அவர்களைவிட வாசியை யறிவிக்க मामाश्रित्य என்றது. இவர்கள் முன்னே முதல் ஷட்கத்திலே ஞானயோகி யறியும் ப்ரஹ்மமான ஜீவாத்மாவை யறிய வேண்டும் என்பதற்காக तत् ब्रह्म என்றது. முதல் ஷட்கத்தில் ब्रह्मபதத்தாலே பலகால் ஜீவனைக் கூறியிருக்கிறார். இத்துடன் பஞ்சாக்னிவித்யையின் விஷயங்களையும் இவர் அறிய வேண்டும். அதற்காக कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम् என்றது. (29)

இனி ஐச்வர்யார்த்திக்கு வேண்டுமதைக் குறிப்பாராய், பொதுவாக எல்லோருக்கும் வேண்டுமதையும் சேர்க்கிறார்—

**साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।**
**प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥ ३० ॥**

ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியஜ்ஞம் ச யே விது: |
ப்ரயாணகாலேऽபி ச மாம் தே விதுர் யுக்தசேதஸ: || 30 ||

ये माम्–எவர்கள் என்னை
साधिभूताधिदैवम्–அதிபூதம் அதிதைவமென்றவற்றோடுகூட
विदुः–உபாஸிக்கின்றனரோ,
साधियज्ञञ्च विदुः–(மற்றவரைப் போலே) தாங்களும் அதியஜ்ஞத்துடன் கூடியவனாகவும் அறிகிறார்களோ,
ते च–அவர்களும் முன் சொல்லப்பட்டவரும்
युक्तचेतसः–யோகத்தில் தீர்ந்த மனமுடையராய்
प्रयाणकाले अपि–மரணமடையும் தருவாயிலும்
मां विदुः–என்னைத் தக்கவாறு உபாஸிப்பார்கள்.

ஸர்வேச்வரனை அதிபூதம் அதிதைவம் என்னும் இரண்டு விஷயங்களோடு சேர்த்து உபாஸிப்பார் ஐச்வர்யார்த்திகள். அதியஜ்ஞத்துடன் சேர்த்து அறிவது மூன்று அதிகாரிகளும். மூவரும் மரண காலத்திலும் முன் த்யானம் செய்தபடி மனம் செலுத்தி அவனைத் தக்கவாறு காண வேண்டும் என்றபடி. இந்த அதிபூதம் அதிதைவம், அதியஜ்ஞம் என்பவற்றின் பொருளும் மரணகால த்யான விஷயமான விசேஷமும் கூட எட்டாம் அத்தியாயத்திலே விரித்து உரைக்கப்படும். இவற்றையெல்லாம் அர்ஜுனன் அறிய விரும்பினால் கூறலாமென்பதற்காக இங்கே குறித்தத்தனை. (30)

ஏழாம் அத்தியாயம் முற்றும்.

## எட்டாவது அத்தியாயம்

अर्जुन उवाच—அர்ஜுனன் கேட்பதாவது—

**किं तद् ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम ।**
**अधिभूतञ्च किं प्रोक्तम् अधिदैवं किमुच्यते ॥ १ ॥**
**अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन् मधुसूदन ।**
**प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः ॥ २ ॥**

கிம் தத் ப்ரஹ்ம கிம் அத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம |
அதிபூதஞ்ச கிம் ப்ரோக்தம் அதிதைவம் கிமுச்யதே || 1 ||
அதியஜ்ஞ: கதம் கோऽத்ர தேஹேऽஸ்மிந் மதுஸூதந |
ப்ரயாணகாலே ச கதம் ஜ்ஞேயோऽஸி நியதாத்மபி: || 2 ||

पुरुषोत्तम–பரமபுருஷனே!
तत् ब्रह्म–அந்த ப்ரஹ்மமென்றது
किम्–என்ன?
अध्यात्मं किम्–அத்யாத்மமாவது என்ன?
कर्म किम्–கர்ம என்றது என்ன?
अधिभूतं च प्रोक्तम् किम्–அதிபூதமென்று சொல்லப்பட்டதும் என்ன?
अधिदैवम्–அதிதைவமென்று
किम् उच्यते–எது கூறப்படுகிறது?
मधुसूदन–மதுவை ஸம்ஹரித்தவனே!
अत्र–சாஸ்த்ர ஸித்தமான
अस्मिन्–அனுபவத்தினலும் உமது வாக்காலும் கண்ட
देहे–இந்த்ராதிகளான தேஹத்தில்
कः कथम्–யார் எப்படி
अधियज्ञः–அதியஜ்ஞமாவர்?
प्रयाणकाले च-மரண காலத்திலுங்கூட
नियतात्मभिः–அடக்கப்பட்ட மன முடையரால்
कथं–எப்படி
ज्ञेयः असि–அறியக்கூடியவனுவாய்.

கண்ணன் கூறிய ஒவ்வொரு சொல்லுக்கும் பொருள் என்ன என்று அர்ஜுனன் அறிய விரும்புகிறான். ப்ரஹ்மம் என்ற சொல் பரமாத்மாவினிடம் ப்ரஸித்தம்; அத்யாத்மம் என்பது சுத்தாத்ம விஷயமான அம்சமுமாம்; கர்ம என்பது புண்யமும் பாபமுமாம்; அதிபூதம் ப்ராணிமூலமானது; அதிதைவம் தேவதைகள் மூலம் ஆகிறது; இச்சொற்களுக்கு இவ்வாறு பொருளா, வேறா? அதியஜ்ஞ மென்ற சொல் யஜ்ஞத்தில் ஆராதிக்கப்படுகிறவரைக் கூறும். அவர்கள் தேவதைகளுமாவர். ஆனல் அவர்களை உமக்கு உடலாக நீரே கீழே கூறினீர். இப்படி வேதோக்தமானபடியும் நீர் கூறியபடியும் அவர் கள் தேஹமாய் விலக்கப்பட்டால்தானே இவன் உமது பக்தனை ஏகாந்தியாவான். அப்போது அதியஜ்ஞன் என்று யாரைக் கொள்வது. உம்மையே கொள்வதாகில் அதியஜ்ஞனுடன் கூடிய நான் என்றது சேருமா? நிற்க. மரணகாலத்தில் மனம் இவனுக்கு வசமோ? த்யானம் உம்மைச் செய்யவாகுமோ? செய்தாலும் எல்லோருக்கும் மோக்ஷமே பலனுகுமே. ஐச்வர்யாதிபலன்களைப் பெறவாகுமோ என்றெல்லாம் அர்ஜுனன் ஆராய்ந்து கேட்கிறான்.

ब्रह्मादिशब्दानामर्थान्तरेषु प्रसिद्धत्वात् प्रकृतनिर्णयाय प्रश्नः । (2)

श्रीभगवान् उवाच – பகவான் சொல்வதாவது—

**अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।**
**भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ॥ ३ ॥**

Sec. Nr P 29-6-62/63

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோऽத்யாத்மம் உச்யதே |
பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஜ்ஞித: || 3 ||

परमम्-ப்ரக்ருதியினின்று விடுபட்ட நிலையுடைய
अक्षरम्-நிர்விகாரவஸ்து-ஆத்ம ஸ்வரூபமானது
ब्रह्म-கீழ்க்கூறிய ப்ரஹ்மமாம்.
स्वभावः-அதற்கு அநாதியாய்த் தொடர்ந்த ஸூக்ஷ்ம சரீர வாஸநாதிகள்
अध्यात्मम्-அத்யாத்மமாக
उच्यते-சொல்லப்படும்.
भूतभाव उद्भवकरः-பிராணித் தன்மையைப் பெறுவிக்கின்றதான
विसर्गः-பூதஸூக்ஷ்மம் கலந்த வஸ்துவின் வீழ்ச்சியானது
कर्मसंज्ञितः-கர்ம என்ற பெயர் பெற்றதாம் இங்கு.

பிரக்ருதிக்கு ஸ்வரூபத்தில் மாறுதல் உண்டு. அதில்லையாகையால் ஜீவாத்மா அக்ஷரமாகும். அது ஸம்ஸாரத்தில் ஸ்வரூப விகாரமற்றதாலும் தர்மவிகாரம் அதாவது தன் ஞானத்தில் ஸங்கோசம் முதலியன பெற்று வருகிறது. அவ்வாறின்றி சுத்தமான போது பரமமாம். அத்தகைய ஆத்மாவை யறிய வேண்டுமென்பதற்காக ப்ரஹ்ம என்றது. அப்போது பரப்ரஹ்மத்திற்கு ஈடாகுமே அது. அப்படியிருக்க வேண்டும் ஆத்மா அநாதி காலமாய் துர்வாஸநாதிகளுடன் சேர்ந்தே யிருக்கும். எளிதில் விடுவதன்று. அது அத்யாத்மம் என்பதன் பொருள். அதன் மூலம் மேலுலகம் செல்வது கீழ் இறங்குவது ஸ்த்ரீயின் சரீரத்தில் சேர்வது போன்றது விஸர்கமெனப்படும். அது பிராணியாகப் பிறப்புக்குக் காரணமாகும். பஞ்சாக்னி வித்யை என்ற கட்டத்தில் உபநிஷத்துக்களில் ஜீவாத்மா இவ்வுலகில் புண்யங்களைச் செய்து ஸூக்ஷ்ம சரீரத்துடன் மேலுலகம் சென்று பலனை யனுபவித்து மீண்டும் மழை வாயிலாக மண்ணில் விழுந்து பயிர் முதலானவற்றுடன் கலந்து ஊணிற் சேர்ந்து புருஷனால் உட்கொள்ளப்பட்டு ஸ்த்ரீ சரீரத்தில் கர்ப்பத்தில் புருஷன் மூலம் புகுகிறான் என்று கூறமுன் வந்து ஜீவாத்மா சேருமிடங்களான மேலுலகம், மேகம், மண், புருஷன், பெண்டிர் என்ற ஐந்தை ஐந்து அக்னிகளாகக் கற்பனை செய்திருப்பது காண்க. நெருப்பில் வீழ்வதற்கு ஈடாக இவற்றில் வருந்த வேண்டுமென்று அதன் கருத்து. இப்படி மேன்மேல், கீழும் மேலும் ஓடப்படும் துயரம் நீங்க, இவ்வாறு பெறும் பல தேஹங்களைவிடத் தன்னை வேறாக வெகு சுத்தமான பரப்ரஹ்மத்திற்கு ஸமமான வஸ்துவாக உணர்ந்து உண்மைநிலையை உபாஸிக்க வேண்டும். அதற்காக இவற்றையெல்லாம் முதலில் தெளிய வேண்டுமென்றபடி. (3)

இனி, மேல் கேள்விகளுக்கு மறுமொழி— See Nr P 29-6-65/67

**अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम् ।**
**अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४ ॥**

அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷச்சாதிதைவதம் |
அதியஜ்ஞோऽஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம் வர || 4 ||

देहभृतां वर—தேஹம் தரிப்பவரில் ச்ரேஷ்டனே!
क्षरः भावः—மாறுதல் வரும் பாஞ்ச பௌதிக வஸ்து போன்றதெல்லாம்
अधिभूतम्—அதிபூதமெனப்படும்
पुरुषः—அதை யனுபவிக்க உருக் கொண்ட ஜீவன்
अधिदैवतम्—அதிதைவமெனப்படுவான்,
இப்படி சேதநாசேதநங்கள் இருக்க
अहम् एव—நானே
अत्र देहे—கீழ்க்கூறிய இந்த்ராதி தேஹத்திலே
अधियज्ञः—அதியஜ்ஞமெனப்படுகிறேன்.

பஞ்சபூதங்களால் ஏற்படும் வஸ்துக்களே ஐச்வர்யமெனப்படும் விஷயங்கள். இவை அதிபூதமெனப்படும். அதிதைவமாவது இவ்வைச்வர்யானுபவத்திற்குத் தகுமாறு உருக்கொண்டிருக்கும் ஜீவனே. புருஷசப்தம் உருவுடன் சேர்ந்த ஜீவனைக் கூறும். அவனுக்கு அதிதைவமென்ற பெயர் ஏன் என்னில், என்னை ஐச்வர்யத்திற்காக உபாஸிப்பவன் வேறு தேவதைகளை ஆராதித்துப் பெறுமளவுக்கு மேலான ஐச்வர்யமும் பெறுகிறவனென்று உணர்த்துவதற்காக அப்பெயர் வைத்ததென்க. ஒரே பலன் கூட வேறு தேவதைகள் அளிப்பதைவிட நான் அளிப்பது சிறந்ததாகுமாகையால் இப் புருஷன் அதிதைவன். இனி அதியஜ்ஞனைச் சொல்லவேண்டும். நீ நினைக்கிறபடி இந்த்ராதிகள் எனக்கு தேஹமாகிறபடியால், ஏகாந்திகளான எனது பக்தர்கள், யஜ்ஞங்களால் அவர்களை ஆராதிப்பதில்லையாகையால் தேவர்கள் அதி யஜ்ஞராக மாட்டிலர். நானே அதியஜ்ஞன். (ஆனால் அதியஜ்ஞனுடன் சேர்ந்த என்னை யறியவேண்டுமென்று சொன்னேனே, அதன் கருத்தென்னவெனில், அந்தந்த தேவதையின் அந்தர்யாமியானவனாகவும் யஜ்ஞங்களைச் செய்யும்போது அறிய வேண்டும். அத்துடன் என்னை உபாஸிக்கும் வகையிலும் அறியவேண்டுமென்று இரு நிலைகளை யறிவிக்க என்று தெளிக.)

கைவல்யார்த்தி, ஐச்வர்யார்த்தி, மோக்ஷார்த்தி என்ற மூவரும் அதியஜ்ஞனை யறிந்தாக வேண்டும். இது போல் மேல் சொல்லப் போவதும்—

अन्तकाले च मामेव स्मरन् मुक्त्वा कलेवरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥ ५ ॥

அந்தகாலே ச மாமேவ ஸ்மரந் முக்த்வா கலேபரம் |
ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்சய: || 5 ||

अन्तकाले च–மரணகாலத்திலும்
माम् एव–என்னையே
स्मरन्–தியானம் செய்து, நினைத்துக் கொண்டு
कलेबरं मुक्त्वा–உடலை விட்டு
यः प्रयाति–எவன் புறப்படுகிறானோ,
सः–அந்த உபாஸகன்
मद्भावम्–எனது தர்மத்தை
याति–அடைகிறான்.
अत्र–இவ்விஷயத்தில்
संशयः–ஐயமானது
न अस्ति–இல்லை

உடல் விடுவதற்கு முன்னே கடைசியிலும் என்னையே நினைக்க வேண்டும். நினைத்தவன் என்னிடம் எதை விரும்பி உபாஸித்தானோ அதைப் பெறுவதில் ஐயமில்லை. மூன்று அதிகாரிகளும் மோக்ஷம் சென்று பகவானைப் பெறுவதாகில் मां याति என்னலாம். அதில்லை. மத்பாவத்தைப் பெறுகிறான், எனது भावமாவது. நான் அனுபவிக்கும் ஐச்வர்யத்திலே சிறுபாகம் ஐச்வர்யார்த்திக்கும், ஜீவானுபவத்தில் சிறு பாகம் கைவல்யார்த்திக்கும் அளிப்பதால் அதேயாம். மோக்ஷம் செல்பவனுக்கு मद्भावமாவது எனது தன்மை எனது ஸாயுஜ்யம் போக (भोग) ஸாம்யம். இந்த போகதாரதம்யத்தைப் பகுத்தறிய வேண்டுமென்று பொதுவாக मद्भावமென்றதாம். மரணகாலத்தில் என்னையே நினைப்பவன் தனக்கு வேண்டும் பலனை மறக்காமல் 'அதையளிப்பவன் நான்' என்றே நினைப்பானாகையால் அவனுக்கு அப் பலன் திண்ணமென்றபடி. (5)

மேல்வரும் பிறவிக்கு ஸூசகமான நினைவே எவருக்கும் கடைசியில் வரும்படி எனது ஸங்கல்ப்பமாகையால் வேறு நினைவில் விழாதபடிக்கு என்னை நினைக்கவேண்டுமென்ற கருத்தினாலே மேலேயருளிச் செய்கிறார்—

यं यं वाऽपि स्मरन् भावं त्यजत्यन्ते कलेबरम् ।
तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः ॥ ६ ॥

Sec Nr 129-7-26 | 28

யம்யம் வாऽபி ஸ்மரந் பாவம் த்யஜத்யந்தே களேபரம் |
தம்தம் ஏவைதி கௌந்தேய ஸதா தத்பாவபாவித: || 6 ||

कौन्तेय–குந்திபுத்ரனே!
अन्ते–மரண காலத்தில்
यं यं वा अपि–எதுவாயினுமாகின்ற
भावं–வஸ்துவை
स्मरन्–நினைக்கின்றவனாகி
कलेबरम्–உடலை
त्यजति–விடுகிறானோ,
सदा–அவன் வாழ்நாளில் எப்போதும்
तद्भाव भावितः–அந்த வஸ்துவின் பாவனையினால் வாஸிக்கப் பட்டவனாய் அவன் (அதனால் அதையே நினைத்து)
तं तं एव–அந்தந்த வஸ்துவையே
एति–அடைபவனாகிறான்.

எவனும் மரணகாலத்தில் எதை நினைத்துக் கொண்டே மரணம் அடைகிறானோ, அதனையே யடைகிறான். அப்போது அதை நினைப்பதற்குக் காரணம் அவன் தன் வாழ்நாளில் அடிக்கடி அதையே

சிந்தித்து அந்த வாஸனை யேறியவனுனமையே. அதையடைவதாவது-அதைப் போன்ற தன்மையைப் பெறுகை. (ஜடபரதர் எப்போதும் தன் மானையே சிந்தித்ததால் முடிவில் மானை நினைத்ததற்கேற்ப ஒரு மானுகவே பிறந்தார். ஐச்வர்யம் நிறைந்த பகவானையே நினைத்தால் அவனைப்போல் ஐச்வர்யம் பெறுவான். ஆத்மானுபவ ஸம்ருத்தியுள்ள பகவானையே நினைத்தால் அவனைப் போல் ஆத்மானுபவம் பெறுகிறுன். மோக்ஷானந்தம் நிறைந்தவனையே நினைத்தால் அவனது ஸாயுஜ்யம் பெறுகிறுன்.)

**तस्मात् सर्वेषु कालेषु मामनुस्मर युध्य च ।**
**मय्यर्पितमनोबुद्धिः मामेवैष्यस्यसंशयः ॥ ७ ॥**

*தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாம் அநுஸ்மர யுத்ய ச |*
*மய்யர்பிதமநோபுத்திர் மாமேவைஷ்யஸ்யஸம்சய: || 7 ||*

तस्मात्—முன் சிந்தித்திருந்த விஷயத்திலேயே முடிவில் நினைவு வருகிறபடியால்
सर्वेषु कालेषु—எல்லா ஸமயங்களிலும்
माम् अनुस्मर-என்னை விடாமல் நினை.
युध्य च—போரும் செய். ஒரு செயலையும் விடாதே.
मयि—என்னிடத்தில்
अर्पितमनोबुद्धिः—வைக்கப்பட்ட மனமும் புத்தியும் உடையனுய், என்னையே நினைப்பதும் என்னிடம் பலன் பெறும் நோக்கமும் உடையனுய்
माम् एव—அத்தகைய என்னையே
एष्यसि—பெறுவாய்.
असंशयः—இதில் ஸம்சயமில்லை.

என்னையே எப்போதும் வாழ்நாளில் நினைத்து வர வேணும். அவ்வாறு நினைவு வருதற்குக் காரணம் வேறு பலனில் நோக்கின்றி நித்யகர்மானுஷ்டானத்தைச் செய்வதே. அதனுல் பாபம் போக, ஸத்துவகுணம் மனத்தில் மேலிட்டால் அது என்னையே நினைக்கும். வேண்டும் பலன் அளிப்பவன் நானே என்ற புத்தியும் நிலைக்கும். இப்படி நான்குவித பக்தரில் ஒருவனுகலாம். ஞானியே யாவது தரம். (7)

आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी என்று சொல்லப்பட்டவரில் ஆர்த்தனை அர்த்தார்த்தியோடு சேர்த்தால், கைவல்யார்த்தி, ஐச்வர்யார்த்தி, மோக்ஷார்த்தி என்ற அடைவு ஏற்படும். அதற்கிணங்க கைவல்யார்த்தி ப்ரஸ்தாவம் முன்னே இது வரையில். अर्थार्थी என்பதை आर्तः என்றதோடு சேர்த்தால் ஐச்வர்யார்த்தி முன்னே, கைவல்யார்த்தி பின்னே என்பதாம். உலகில் பலன் பெறுகிற முறையும் இப்படியே. ஆகையால் முதலில் ஐச்வர்யார்த்திவிஷயமாய் அவன் நினைக்கும் வகையையும் கூறுகிறுர் மூன்று ச்லோகங்களால், மேலே கைவல்யார்த்தியை; அதன் மேலே மோக்ஷார்த்தியை.

अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना । 
परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिन्तयन् ॥ ८ ॥

அப்யாஸயோகயுக்தேந சேதஸா நாந்யகாமிநா |
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தாநுசிந்தயந் || 8 ||

पार्थ–அர்ஜுநா! (தினந்தோறும்)
अभ्यासयोग-युक्तेन–என்னைச் சிந்திப்பது, என் விஷயமே யோகம் செய்வது என்பவற்றுடன் கூடின
नान्यगामिना–வேண்டும் பலன் தவிர வேறொன்றில் செல்லாத
चेतसा–மனத்தினால்
दिव्यं–ஐச்வர்யமளிக்கும் ஸ்த்தானத்தில் இருக்கும்
परमं पुरुषम्–பரம புருஷனான என்னை
अनुचिन्तयन्–முடிவிலும் நினைப்பவனாய்
याति–என்னை அடைகிறான்.

தனக்கு வேண்டும் ஐச்வர்யம் அளிக்கும் தன்மையில் என்னைத் தக்க குணங்களோடு முடிவு வரையில் உபாஸித்தால் அத்தகைய என்னைப் பெறுகிறான். என்னிடம் அவ் ஐச்வர்யத்தை பெறுகிறானென்றபடி.

எவ்வாறு என்ன குணங்களோடு உபாஸிப்பதென்பதை மேலே விரிவாகக் கூறுகிறார்—

कविं पुराणमनुशासितारमणोरणीयांसमनुस्मरेद् यः । 
सर्वस्य धातारमचिन्त्यरूपमादित्यवर्णं तमसः परस्तात् ॥ ९ ॥

प्रयाणकाले मनसाऽचलेन भक्त्या युक्तो योगबलेन चैव । 
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक् स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥ १० ॥

கவிம் புராணம் அநுசாஸிதாரம்
அணோரணீயாம்ஸம் அநுஸ்மரேத் ய: |
ஸர்வஸ்ய தாதாரம் அசிந்த்யரூபம்
ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் || 9 ||

ப்ரயாணகாலே மநஸாऽசலேந
பக்த்யா யுக்தோ யோகபலேந சைவ |
ப்ருவோர் மத்யே ப்ராணம் ஆவேச்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷம் உபைதி திவ்யம் || 10 ||

यः—எந்த உபாஸகன்
प्रयाणकाले—மரணகாலத்தில்
भ्रुवोः मध्ये—புருவங்களின் இடையில்
प्राणम्—ப்ராணவாயுவை
सम्यक् आवेश्य—நிலை நிற்கச் செய்து
कविम्—எல்லாம் அறிந்தவனும்
पुराणम्—அநாதியாயிருப்பவனும்
अनुशासितारम्—தொடர்ச்சியாக செங்கோல் செலுத்துகின்றவனும்
अणोः—ஸூக்ஷ்மமான ஜீவனைவிட
अणीयांसम्—ஸூக்ஷ்மமாயிருப்பவனும்

सर्वस्य धातारम्—எல்லாம் படைப்பவனும்
अचिन्त्यरूपम्—சிந்தித்து அறியக் கூடிய சேதநாசேதநங்கள் போலாகாத ஸ்வரூபம் உடையனும்
तमसः परस्तात्—ப்ரக்ருதிக்கு அப்பாலுமிருப்பதால் அப்ராக்ருதமாய்
आदित्यवर्णम्—ஒளி நிறைந்ததுமான வடிவுடையனுமானவனை
भक्त्या—பக்தியுடனும்
योगबलेन च—செய்த யோகத்தின் வலிவுடனும்
युक्तः—சேர்ந்தானாகி
अचलेन मनसा—அசையாத மனத்தினால்
अनुस्मरेत्—விடாமல் த்யானிப்பானே
सः दिव्यम्—அவன் ஐச்வர்யமளிக்கும் வகையிலிருப்பவனுமான
तं परं पुरुषम्—முன் சொன்ன பரம புருஷனை
उपैति—அடைகிறான்.

कविं पुराणम् இத்யாதி விசேஷணங்கள் மோக்ஷார்த்தியும் உபாஸிக்கக் கூடுமவையே யானாலும், தனக்குப் பலன் அளிக்க அவன் பாங்கானவன் என்ற விச்வாஸத்திற்காக ஐச்வர்யார்த்தியும் உபாஸிப்பதாம். அற்புத ஞானம், அதிக கால நீடிப்பு, ஆளும் சக்தி, பிறரால் அறியப்பட மாட்டாமை, பல வஸ்துக்களைப் படைத்தல், பிறருக்காகாத சிறப்பு, ஆச்சர்யமான வடிவு என்றாற் போன்ற பலன்களையும் அளிப்பானென்பதையும் இவ் அடைமொழிகள் அடைவாகக் காட்டும். 'திவ்யம்' என்றதால் தான் பெறவேண்டும் ஐச்வர்யத்திற்கு ஸம்பந்தப்பட்டவன் அதனை யளிப்பவன் என்றதாம், கைவல்யார்த்தியானவன் ஆத்ம ஸ்வரூபத்தை யனுபவிப்பவனாகையால் அவன் அவ்வாத்மாவுக்கு அந்தர்யாமியாக மட்டும் அனுபவிப்பானல்லது ஸர்வஜ்ஞத்வம் ஸர்வேச்வரத்வம் அப்ராக்ருத திவ்யரூபம் என்றவாறான குணங்களை அதற்கு உபயோகமாக அவசியம் த்யானிப்பானென்பதில்லை என்ற வாசி இதனால் அறிவித்ததாம். ஐச்வர்யம் வேண்டுகிறவன் முடிவில் பிராணனைப் புருவங்களின் இடையில் நிறுத்தி த்யானம் செய்வதென்ற விசேஷமும் இங்கே கூறப்பெற்றது. (9—10)

இனி, கைவல்யார்த்தியின் நினைவைப் பற்றி மூன்று ச்லோகங்களால் பேசுகிறார்—

यदक्षरं वेदविदो वदन्ति विशन्ति यद् यतयो वीतरागाः ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत् ते पदं संग्रहेण प्रवक्ष्ये ॥ ११ ॥

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி விசந்தி யத் யதயோ வீதராகா: |
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத் தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே || 11 ||

यत्—எந்த பரமாத்மாவை
अक्षरम्—அகில ஹேயப்ரத்யநீக மாகையால் அக்ஷரமாக
वेदविदः—அக்ஷர வித்யை முதலான வேதம் அறிந்தவர்
वदन्ति—சொல்லுகின்றனரோ,
वीतरागाः—வைராக்யமுடையவர்
यतयः—தக்க முயற்சியுடையராய்
यत् विशन्ति—எதனைப் பெறுகின்றனரோ.
यत् इच्छन्तः—எதைப் பெற விரும்பியவர்
ब्रह्मचर्यम्—ப்ரஹ்ம விஷயமான அதற்கான செயலை (உபாயத்தை)
चरन्ति—அனுஷ்டிக்கின்றனரோ,
तत् पदं—அந்த உபாஸ்ய வஸ்துவை
संग्रहेण—சுருக்கமான சொல்லால்
ते प्रवक्ष्ये—உனக்கு ப்ரவசனம் செய்வேன்.

மேலே ப்ரணவத்தைக் குறிப்பர். இது அதற்குப் பீடிகை. அக்ஷரமென்ற ஜீவாத்மாவைப் பெற விரும்புகின்றவனுக்கு வேண்டும் பரமாத்மோபாஸனத்தை அக்ஷரபதத்தைக் கொண்டே கூறுவது அவனுக்கு ப்ரியமாகும். முண்டகோபநிஷத்தும், கார்கியைக் குறித்து யாஜ்ஞவல்க்யர் பேசும் அக்ஷர வித்யையும் அந்த அக்ஷரமென்ற பரமாத்மாவை அகிலஹேயப்ரத்யநீகமாகக் காட்டும். அக்ஷர என்ற சொல்லின் பொருள் பூரணமாக அதற்கே பொருந்தும். ஐச்வர்ய கைவல்யார்த்திகள் வேறு விரும்பினாலும் அந்த பரப்ரஹ்மமே தான் விரக்தர்களுக்கு ப்ராப்யமாகும். அதனைப் பெற விரும்பியே தான், ஸந்யாஸம், க்ருஹஸ்ததர்மம் முதலாக வர்ணாச்ரமதர்மங்களை ஸாத்விக த்யாகத்துடன் மஹான்கள் செய்கின்றனர். அதற்கான பக்தி ப்ரபத்தி போன்ற உபாயங்களில் இழிகின்றனர். அந்த ப்ரஹ்மத்தை அந்திம தசையிலும் நினைக்கச் சுருக்கமான சொல் ஒன்று உண்டு. அதனைக் கொண்டு அதைச் சொல்லுகிறேன் கேள். (கீழே अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते என்று ஜீவாத்ம த்யானம் சொல்லப்பட்டது. பரமாத்மஸ்மரணமும் மரணகாலத்தில் வேண்டுமாகையால் அவனது த்யானமும் இங்கே சேர்க்கப்படுகிறது. அதற்காக ப்ரணவத்தைக் குறிக்கக் கருதி இவ்வாறு கூறினார். ப்ரணவத்தைக் கொண்டு ப்ரவசனம் செய்யாமல் வேறு மந்த்ரத்தினால் ப்ரவசனம் செய்தால் அது பரப்ரஹ்ம சேஷம் ஜீவன் என்ற பொருளைக் குறிக்காமல் தம் கருத்திற்கு இணங்காமலும் போகலாம். இது இணங்குமென்ற திருவுள்ளமுமாம். விரிவு மேலே.) (11)

केवलजीवात्मन वेदविद्वेद्यत्वादिबहुतरप्रशंसानन्वयात् अनन्तरश्लोके मामनुस्मरन् इति वक्ष्यमाणत्वात् 'अक्षरं ब्रह्म परमम्' इत्यादिना जीवध्यानस्य प्रागेवोक्तत्वाच्च अक्षरशब्द इह स्वरसोपस्थितपरमात्मवाच्येव । तस्याखिलहेयप्रत्यनीकत्वरूपामलत्वात्मकमक्षरत्वं मुण्डकोपनिषदि गार्ग्यक्षरविद्यायाञ्च सिद्धम् । ऐश्वर्यकैवल्यार्थिव्यतिरिक्तवीतरागप्राप्यत्वमपि तस्य । तत्प्राप्त्युपायभूतं छान्दोग्यदहरविद्यागतं तात्पर्यचन्द्रिकादर्शितम्, अन्यच्च भक्तिप्रपत्त्यादिकं ब्रह्मचर्यशब्दार्थः । संग्रहेण प्रवचनं नाम अनन्तवस्तुप्रदर्शकाल्पपरिमाणदर्पणतुल्य-अशेषार्थगर्भैकाक्षररूपप्रणवमूलक-

व्युत्पादनम्। कैवल्यार्थिना जीवात्मनः परमात्मनश्चोपास्यत्वे यथा उपासनं कार्यम्, तत्र प्रणव एवानुकूलः स्यादित्यभिसंधिरिव। शिष्टमुपरितनश्लोके। (11)

सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च।
मूर्ध्न्याधायाऽऽत्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥ १२ ॥
ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन् मामनुस्मरन्।
यः प्रयाति त्यजन् देहं स याति परमां गतिम् ॥ १३ ॥



*ஸர்வத்வாராணி ஸம்யம்ய மநோ ஹ்ருதி நிருத்ய ச |*
*மூர்த்த்நி ஆதாயாऽऽத்மந: ப்ராணம் ஆஸ்த்திதோ யோகதாரணாம் ||*
*ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந் |*
*ய: ப்ரயாதி த்யஜந் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் || 13 ||*

सर्वद्वाराणि—அறிவு வெளியில் வர வழியான இந்திரியங்கள் எல்லாவற்றையும்
संयम्य—விஷயங்களினின்று அடக்கியும்
मनः—மனத்தை
हृदि—ஹ்ருதயத்தில் என்னிடம்
निरुध्य च—திருப்பியும்
योगधारणाम्-தாரணையென்ற யோகத்தில்
आस्थितः—பற்றுடன்
ओं इति—ஓமென்கிற
एक-अक्षरं—ஒரே அக்ஷரமான
ब्रह्म—சப்தப்ரஹ்மத்தை
व्याहरन्—சொல்லிக் கொண்டே
माम्—அதன் பொருளான என்னை
अनुस्मरन्—தொடர்ச்சியாக நினைக்கின்றவனாகி
आत्मनः प्राणं-தனது ப்ராணவாயுவை
मूर्ध्नि आधाय—தலையில் வைத்து
देहं त्यजन्—தேஹத்தை விடுகின்றவனாய்
यः प्रयाति—எவன் புறப்படுகிறானோ,
परमां गतिम्—பரமகதி யென்னும் ஜீவாத்மாவை
स याति—அவன் பெறுகிறான்.

ஹ்ருதயத்திலுள்ள வஸ்து பரமாத்மாவும் ஜீவனும். அவ்விரண்டை விட்டு ஐச்வர்யார்த்தி வேறையும் நினைப்பான். அது வேண்டா என்றதாம் 12வது ச்லோகத்தில் முதலிற் சொன்ன விஷயங்கள் எந்த யோகிக்கும் பொதுவானவையே. ப்ராணனைத் தலையில் வைப்பதும் இவனுக்குச் சிறப்பாகும். ஐச்வர்யார்த்திக்குப் புருவங்களின் இடையில் வைத்தல் கூறப்பெற்றது. மோக்ஷ வழியான அர்ச்சிராதிமார்கம் போகின்றவர்களுக்கே தலைவாயிலாக ஜீவன் ப்ராணனோடு புறப்படும், 'தன்னுடைய ப்ராணனை அங்கே வைத்து' என்பதால் தான் ப்ராணனோடு அது வழியாகப் புறப்பட வேண்டுமென்கிற நோக்கைக் குறித்ததாம். ஹ்ருதயத்தினின்று புறப்பட்டு அவ்வழி வரவேண்டுமென்பதற்காக ஹ்ருதயத்தில் மனத்தை நிறுத்தி ப்ராணனைத் தலையில்

வைத்து என்றது. இது யோகத்திற்குப் பின்னான படியாலே अनुस्मरन् என்பதற்குப் பிறகு मूर्ध्न्याधायाऽऽत्मनः प्राणम् என்பதை இணைக்க. आत्मनः என்ற சொல் ஆத்மாவுடன் ப்ராணன் வருவதும் ஆத்மாவையும் இவன் நினைத்து வருவதையும் குறிப்பதற்காகவாம். ஓமென்கிற ஓரே அக்ஷரமென்றதால் பல அக்ஷரங்களாகப் பிரிக்காமல் அதற்கு மொத்தமாக. பரமாத்மா என்ற பொருளையே கொண்டாலும் போதுமென்றதாம். இந்த ப்ரணவம் ஸங்க்ரஹமானது என்பதும் एकाक्षरम् என்பதனின்று விளங்கும். அனுஜ்ஞை அதாவது அங்கீகாரம் என்ற பொருளும் ஓமென்பதற்கு உண்டு. அதை விடுத் தன்னை நினைக்க வேண்டுமென மாமென்றது. अनुस्मरन् என்றதால் முன்னும் இவ்வாறு நினைத்திருக்க வேண்டுமென்றறிவித்ததாம். இனி, பஞ்சாக்னிவித்யையில் ஜீவாத்மாவை பரமாத்ம சேஷமாக நினைக்க வேண்டியிருப்பதால் अनुस्मरन् என்பதற்கு என்னை ஜீவ விசேஷணமாகச் சேர்த்து நினைத்து என்றும் பொருளாகலாம். அப்போது ஓமென்பதில் அக்ஷரங்களைப் பிரித்துப் பரமாத்மாவுக்கே சேஷபூதனான நான் என்ற பொருளும் கூடும். ஏகாக்ஷரம் என்றது பிரிக்க வேண்டாமென்ற கருத்தினாலல்ல. ஸங்க்ரஹமாயிருக்குமென்பதற்காக. ஒப்பற்ற அக்ஷரம் என்னனுமாம். இவன் அடையும் பரமகதி கைவல்யம். ஜீவாத்மாவை परमगति யாக மேலே இங்கேயே கூறுவதால் மோக்ஷத்தை இங்குப் பரமகதி யென்னலாகாது. பகவானின் அனுபவாதிகளில்லாத இது பரமமாகுமோ என்னில், ஆத்மாவுக்குப் புநராவ்ருத்தியில்லை. ஐச்வர்யார்த்தியின் பலனைவிட இதற்கு வாசி இது என்று காட்ட परमाम् என்றது. (புநராவ்ருத்தியில்லாத ஆத்மாவை என்றருளினார் பாஷ்யத்தில். புநராவ்ருத்தியில்லாத கைவல்யத்தை என்றோ, தான் புநராவ்ருத்தியில்லாமல் பெறுகிறான் என்றோ அருளவில்லை. மேலே 16வது ச்லோகத்தில் पुनरावृत्ति என்றச் சொல்லுக்கு அழிந்து மீண்டும் உண்டாவது, அழிவது என்று பொருள் கூறுவர். இதனின்று கைவல்ய ஸ்த்தானத்திற்கு அழிவானாலும் ஆத்மா நீடிக்குமென்று குறித்ததென்னலாம்.

मनो हृदि निरुध्य इत्यनेन हृदयगतजीवात्मपरमात्मोभयातिरिक्ताविषयकत्व संपादनात् ऐश्वर्यार्थिवैलक्षण्यसिद्धिः। आत्मन इति पदम् आत्मप्राणोभयानयनं मूर्ध्नि इति ज्ञापनाय, प्राप्यजीवात्मचिन्ताप्यस्तीति ज्ञापनाय च। एकाक्षरमित्युक्त्या अकार उकारादि विभागाकारणेऽपि भगवद्वाचकत्वमक्षतमिति ज्ञाप्यते। ब्रह्मपदं प्रशंसार्थम्। अनुज्ञादिरूपार्थवारणाय मामिति। अनुस्मरन् इति अनु इत्यनेन प्रागपि एतद्ध्यानावश्यकत्वद्योतनम्। यद्वा जिज्ञासुना पञ्चाग्निविद्यायाम् आत्मविशेष्यकपरमात्मविशेषणकोपासनस्यैव करणात् अनु इत्येतत् विशेषणतया परमात्मनिवेशं दर्शयेत्। एवञ्च प्रणवे अवयवविभागेन परमात्मशेषभूतोऽहमित्यर्थानुसंधानस्यापि ग्राह्यतया एकाक्षरपदं स्तावकम्, न तु विभागनिषेधकम्। भगवद्विशेष्यकबोधपरमन्त्रान्तराद्यपेक्षया केवलजीववाचकपदापेक्षया च प्रणवस्यापेक्षितोपासनान्वय्याकारसमर्पकतया श्रैष्ठ्यमत्र विवक्षितम्। एवं जीवात्मवाचित्वादपि इदं ब्रह्म। एतत्प्राप्या परमगतिश्च जीवात्मैव। अव्यक्तोऽक्षर इत्युक्तः तमाहुः परमां गतिम् इति वक्ष्यमाणत्वात्। तस्य पारम्यञ्च न भगवत्साम्यादि, किं तु पुनरावृत्तिराहित्य-

मात्वम् ॥ फलप्राप्तुः पुनरावृत्तिर्नास्तीति वक्तव्ये प्राप्यस्य तस्य पुनरावृत्त्यभावकथनं भाष्ये कथमिति चेत्–16 श्लोके लोकानां पुनरावृत्तिं वक्ष्यति। सा नास्तीति फलस्योत्कर्ष उक्तो भवति। वस्तुनः स्थिरत्वादस्थिरवस्तुप्राप्तिरूपदोषो नास्ति। ननु तस्य स्थिरत्वेपि तत्प्राप्तेस्तदनुभवरूपाया अस्थिरत्वे को लाभ इति चेत्–स्थिरवस्तु प्राप्तवान् तदत्यागमार्गमवश्यं चिन्तयेदेवेति भावः। (13)

கைவல்யார்த்தி, ஐச்வர்யார்த்தி என்றவர்கள் உபாஸிக்க வேண்டும் முறையைக் கூறிய பிறகு மோக்ஷார்த்தி விஷயமாகக் கூறுகிறார்—

अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥ १४ ॥

அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச: |
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகிந: || 14 ||

यः माम्—எவன் என்னை
नित्यशः—தொடங்கியது முதல்
अनन्यचेताः-வேறு பலனில் மனமின்றி
सततं—எந்நாளும்
स्मरति—நினைத்து வருகிறானோ,
पार्थ—அர்ஜுநா
नित्ययुक्तस्य—என் சேர்த்தியையே எப்போதும் விரும்பிய
तस्य योगिनः—அந்த யோகிக்கு
अहं—நானே ப்ராப்யனுகி
सुलभः—எளிதில் பெறப்படுவேன்.

ஐச்வர்யமோ கைவல்யமோ விரும்பாமல் என்னை உபாஸிப்பான் நித்யயுக்தன். அதாவது பலன் வந்த பிறகு அதனை யனுபவிக்கும் போது என்னை விடுகின்ற மற்றவரைப் போலாகாமல் என் சேர்த்தியைப் பலனுகக் கொண்டவன். அவனுக்கு நானே ப்ராப்யனுவதோடு நான் எளிதிலும் ப்ராப்யவனுவேன். முழு ப்ரீதியும் என்னிடம் வைத்திருப்பதால் அவன் விரைவில் உபாய பூர்த்தி செய்து என்னைப் பெறும்படி அவனை நானும் ப்ரியப்பட்டு வரிக்கிறேன். (14)

மற்ற பலன்களைப் போலே பகவானைப் பெறுதலென்ற பேறும் பின் அழியக் கூடியது என்னுமைக்காகப் பலன்களின் வாசியை யறிவிக்கிறார்—

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ १५ ॥

மாமுபேத்ய புநர்ஜந்ம துக்காலயம் அசாச்வதம் |
நாப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்திம் பரமாம் கதா: || 15 ||

माम् उपेत्य—என்னைப்பெற்று
महात्मानः—என்னையே எல்லாமாகக் கொண்டு, பிரிந்தால் தாங்காத மனமுடையார்
परमां संसिद्धिं-பரம பலமான என்னை
गताः—அடைந்தவர்களாகையால்
अशाश्वतम्—அஸ்த்திரமாயும்
दुःखालयं—துக்கங்களுக்கு இடமுமான
जन्म पुनः—தேஹஸம்பந்தத்தை மீண்டும்
न आप्नुवन्ति—பெறமாட்டார்.

மத்பாவமென்னப்பட்ட எனது ஓர் அம்சத்தை யடைவதின்றி என்னையே யடைவார்களே மஹாத்மாக்கள். இதற்கு மேலொன்று உண்டென்னவாகாத உயர்ந்த பலனைப் பெற்றுவிட்டாராகையாலே புண்ய பாபங்களுக்கு இடமில்லை. அதனால் இந்த கோரமாய் மரணத்தில் முடிகின்ற பிறவியுமில்லை இந்த ச்லோகம் ஐச்வர்ய கைவல்யங்களை அபேக்ஷிக்காமல் பகவானையே விரும்பும் மஹாத்மாவையே மொழிவதாகத் தோன்றினாலும், கைவல்யார்த்திக்கும் உண்மையில் துக்காலயமான புனர்ஜந்மம் இல்லையாகையால் அவனையும் சேர்த்துக் கொள்வதாம். அவனுக்கும் புனர்ஜன்மம் வாராமைக்குக் காரணம் கைவல்ய ப்ராப்தியன்று, பின்னே பரம ஸம்ஸித்தியான பகவானைப் பெறுவதே என்பது நான்காம் பாதத்தினால் தெளிவாம். பஞ்சாக்னிவித்யா நிஷ்டனுக்கும் கைவல்யத்தின் முடிவில் 'வாஸுதேவஸ் ஸர்வம்' என்ற மஹாத்மத்வம் உண்டாகும். 'மாமுபேத்ய' என்பதன் விரிவேயாகும் 'மஹாத்மாந: ஸம்ஸித்திம் பரமாம்கதா:' என்றது. 'யம் ப்ராப்ய ந நிவர்தந்தே' என்னப் போகிறாராகையாலே கைவல்யார்த்தியையும் சேர்க்க வேண்டும்—கைவல்யம் மட்டும் இசைந்தால் போதாதென்பதற்காக 'மஹாத்மாந' இத்யாதி சொற்களென்க.

स्वरसतः श्लोकस्यास्य ज्ञानिमात्रपरत्वे प्रतीतेऽपि कैवल्यार्थ्यप्यत्र गृह्यते, तस्यापि दुःखालय-जन्माभावात्। वक्ष्यते च, 'यं प्राप्य न निवर्तन्ते' इति तस्यापुनरावृत्तिः। परन्तु तथात्वं तस्य महात्मत्वपरमसिद्धिरूपभगवल्लाभानन्तरमेवेति ज्ञापनार्थमेव, मामुपेत्येतत्, 'महात्मानः संसिद्धिं परमां गताः' इति विवृतम्॥

ஐச்வர்யமென்பது பலவித லோகமான விஷய ப்ராப்தியே யாகையாலே அதைப் பெறுகின்றவர்களுக்குப் புனர்ஜன்மமுண்டு, மற்றவருக்கு இல்லை என்று இரண்டுக்கும் உள்ள வாசியை விளக்குகிறார்—

**आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन।** See W. P. 29-8-65/66
**मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते॥ १६॥**

ஆப்ரஹ்மபுவநாத் லோகா: புநராவர்திநோऽர்ஜுந |
மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே || 16 ||

अर्जुन—அர்ஜுநா
आब्रह्म भुवनात्—நான்முகனின் லோகம் உள்பட
लोकाः—லோகங்களெல்லாம்
पुनरावर्तिनः—அழிகின்றவை மீண்டும் உண்டாம்.
कौन्तेय—குந்திபுத்ரனே
माम् उपेत्य तु—என்னை அடைந்தாலோ (எனது லோகம் பெற்றாலோ)
पुनर्जन्म—மீண்டும் பிறவி
न विद्यते—இல்லை.

ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள ஜனங்களே பகவானை யடைந்தால் புனர்ஜன்மம் பெறுகிறதில்லை யாகையாலும் ப்ரஹ்மலோகம் வரையிலான லோகங்களென்ற போது லோக: என்னும் சொல் உலகத்தையே சொல்லத் தகுமாகையாலும் லோகபதத்திற்கு ஜனம் என்ற பொருள் கொள்ளவில்லை. லோகங்களுக்கு புநராவர்த்தியாவது காரணதசைக்கு மாறுவதும் மீண்டும் கார்யதசையைப் பெறுதலுமே. मामुपेत्य என்றவிடத்தில் பூர்வார்த்தத்திற்கு இணங்க, கடைசி ச்லோகத்தில் योगी परं स्थानमुपैति चाऽऽद्यम्' என்னப்படும் உலகமும் கருதப் பெறும்.

அறிவுக்கு ஏதேனும் காலவியவஸ்தையுண்டோ, ஸர்வேச்வரனுக்குத் தோன்றியபடியோ என்ன, வியவஸ்தை யுண்டென்கிறார்—

सहस्रयुगपर्यन्तमहर्यद् ब्रह्मणो विदुः ।
रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जनाः ॥ १७ ॥

ஸஹஸ்ரயுகபர்யந்தம் அஹர் யத் ப்ரஹ்மணோ விது: |
ராத்ரிம் யுகஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ரவிதோ ஜநா: || 17 ||

ते—அப்படிப்பட்ட, ப்ரஹ்மமானம் தேவமானம், மனுஷ்யமானம் எல்லாம் ஓதும் சாஸ்த்ரம் அறிந்தவரான
अहोरात्रविदः जनाः— எல்லா இராப் பகலளவையும் அறிந்த மஹான்கள்
ब्रह्मणः यत् अहः—பிரமனுக்கு எது பகலோ அதை
सहस्रयुगपर्यन्तम्—ஆயிரம் சதுர்யுகங் களிலே முடிவுறுகின்ற தாகவும்
ब्रह्मणः रात्रिम्—பிரமனின் இரவையும்
युगसहस्रान्तां—ஆயிரம் சதுர்யுகத் திலே முடிவுறுவதாகவும்
विदुः—அறிகின்றனர்.

ப்ரஹ்மமானம் அறியாதார்க்குப் பகலளவும் தெரியாது, இரவளவும் தெரியாது. அப்படியிருக்க. 'பகலை யறிகிறவர்கள் இரவும் அறிவர்' என்ற பொருள் பொருந்தாது. ஆகையால் பதவுரைப்படி கொள்க. (விரிவு சந்திரிகையில்). இப்படி பிரமனுக்கு ஒரு நாளைச் சொன்னால் பொதுவாக நூறு ஆண்டே ஜீவன் காலமாகையால் இரவும் பகலும் சேர்ந்து இரண்டாயிரம் சதுர்யுகம் ஒருநாளான போது இவ்வாறு முப்பத்தாறாயிரம் சதுர்யுகமான நாட்கள் அவனது ஆயுள்காலமென்பது கூறாமலே விளங்கும்.

இதில் இரவில் ப்ரளயமும் பகலில் ஸ்ருஷ்டியும் பல லோகங்களில் உண்டென்கிறார்—

अव्यक्ताद्व्यक्तयः सर्वाः प्रभवन्त्यहरागमे ।
रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके ॥ १८ ॥

அவ்யக்தாத் வ்யக்தய: ஸர்வா: ப்ரவந்த்யஹராகமே |
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்தஸம்ஜ்ஞகே || 18 ||

अहरागमे—பிரமனின் பகல் வரும் போது
अव्यक्तात्—பிரமனுக்கு அதீனமாய் உடலான ஸூக்ஷ்ம வஸ்துவினின்று
सर्वाः व्यक्तयः—எல்லா வஸ்துக்களும்
प्रभवन्ति—உண்டாகின்றன.
रात्रि आगमे—அவனது இரவு வரும் போது
अव्यक्तसंज्ञके—அவ்யக்தமென்று சொன்ன
तत्र एव—அந்த ஸூக்ஷ்ம நிலையிலேயே
सर्वाः व्यक्तयः—எல்லாம்
प्रलीयन्ते—அழிகின்றன.

அவ்யக்தாத் என்ற சொல் மூல ப்ரக்ருதியின் பரிணாமமான காரணத்தைக் கூறும். ஏழுலகங்களில் கீழ் மூன்று பிரமனின இரவு தோறும் அழிந்து பகல்தோறும் உண்டாம். மேல் மூன்று, பிரமன் உள்ளவரையில் அழிவதில்லை. நடு உலகில் ப்ரஜைகள் மேலிடம் போகின்றபடியால் உலகு மட்டும் அழியும். அதனால் கீழ் மூன்றுக்கு க்ருதகம் என்றும், மேல் மூன்றுக்கு அக்ருதகமென்றும், நடுவுலகுக்கு க்ருதகாக்ருதகம் என்றும் பெயராம். இப்படியிருக்க மூலப்ரக்ருதியினின்று வரும் மஹதாதிகளுக்கு இரவு தோறும அழிவேது?

இவ்வாறு ஒவ்வொரு பகலிலும் இரவிலுமென்கிறார் மேலே. அல்லது மோக்ஷம் பெறாத வரையில் முன் ஜீவன்களே மீண்டும் மீண்டும் பிறப்பர், அழிவரென்கிறார்—

**भूतग्रामः स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।**
**रात्र्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे ॥ १९ ॥**

*பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரளீயதே |*
*ராத்ர்யாகமேऽவச: பார்த்த ப்ரபவத்யஹராகமே || 19 ||*

पार्थ—குந்திபுத்ரா!
स अयम् भूतग्रामः एव—முன் பிறந்த இந்த ஜீவவர்கமே
भूत्वा भूत्वा—பல பிறவி பெற்று உண்டாகியுண்டாகி
रात्रि आगमे—இரவு வரும்போது
प्रलीयते—அழியும்.
अहरागमे—பகல் வரும்போது
प्रभवति—உண்டாம்.

18வது ச்லோகமே பகல்தோறும் பிறப்பையும், இரவுதோறும் அழிவையும் சொல்லக்கூடுமென்றால் 19வது ச்லோகமானது முன் பிறந்த ஜீவராசிக்கே பிறவிகள் நீடிக்கின்றன என்று ஐச்வர்யார்த்தி உள்பட எல்லோருக்கும் புனர்ஜந்மாவை ஸ்தாபிப்பதாம். भूत्वा भूत्वा என்பது ஸ்ருஷ்டியின் இடையில் நேரும் பல பிறப்பைச் சொல்லுகிறது. பிரமனின் பகல் இரவுகளில் எல்லாம் ஸ்ருஷ்டி ப்ரளயங்களைப் பகர்ந்துவிட்டபடியால் கடைசியில் प्रभवत्यहरागमे என்றது வேறு பிரமனின பகலைக் குறிக்கும். ஆகையால் முன்னை பிரமனுக்கு நூற்றாண்டில் முடிவும்

குறிக்கப்பெற்றதாம். அப்போது மஹாப்ரளயமானபடியாலே மூல ப்ரக்ருதி நீங்கலாக வ்யஷ்டி ஸமஷ்டி யெல்லாம் ஒழியும். மீண்டும் ஸமஷ்டியான பஞ்சபூதங்கள் உண்டானபிறகு வேறு பிரமனும் அவன்பகலுமாம். அது प्रभवत्यहरागमे என்னப்பட்டது. ஆக இதில் ப்ராக்ருதப்ரளயமும் பெரிய ஸ்ருஷ்டியும் கூட அடக்கிக் குறிக்கப் பெற்றதாம்.

भूत्वाभूत्वेति वीप्सयैवाऽऽवृत्तिसिद्ध्या ब्रह्मसंबन्धियावद्दिवारात्रसृष्टिप्रलयानामुक्तत्वात् 'प्रभवत्याहरागमे' इति वचनम् एकब्रह्मावसानरूपमहाप्रलयपश्चाद्भाविब्रह्मान्तराहःकालपरम्। तदा समष्टिसृष्टिपूर्वकमेव सर्वलोकसृष्ट्या ततः प्राक् ब्रह्मावसानं महाप्रलय इत्यादिकं ज्ञापितप्रायमिति ध्येयम्। एतदभिप्रायेण भाष्ये अन्ते एतदुक्तिः॥ (19)

எல்லா உலகும் அழியும்போதும் அழியாததான ஆத்மாவைப் பெறுதலே கைவல்யம். அதைப் பெற்றவனுக்கு புனர்ஜன்மம் இல்லை யென்கிறார்—

परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात् सनातनः। 
यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥ २० ॥
अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम्।
यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ २१ ॥

பரஸ் தஸ்மாத்து பாவோऽந்யோऽவ்யக்தோऽவ்யக்தாத் ஸநாதந: |
ய: ஸ ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு ந விநச்யதி || 20 ||
அவ்யக்தோऽக்ஷர இத்யுக்த: தமாஹு: பரமாம் கதிம் |
யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்தாம பரமம் மம || 21 ||

तस्मात् अव्यक्तात्—முன்சொன்ன ப்ருகிருதியினிலும்
अन्यः—வேறான
सनातनः—ஸ்வரூப விகாரமில்லாத
परः—உயர்ந்ததான
अव्यक्तः—அவ்யக்தமென்னப்படும் ஜீவன்,
यः—எவன்
सर्वेषु भूतेषु—தேஹங்கள் எல்லாம்
नश्यत्सु—அழியும்போது
न विनश्यति—அழியாமலிருக்கிறானோ
सः—அப்படிப்பட்டவன்,
अव्यक्तः अक्षरः इति—அக்ஷராவ்யக்தம் என்று
उक्तः—சொல்லப்படுவான்.
तम्—அவனை
परमां गतिम्—பரமகதியாகவும்
आहुः—சொல்லுகிறார்கள்
यम्—அந்த அக்ஷரத்தை
प्राप्य—அடைந்து
न निवर्तन्ते—புநராவ்ருத்தி பெறார்.
तत् धाम—அந்த ஸ்வயம் ப்ரகாசமான நியம்யவஸ்து
परमम्—உயர்ந்ததாய்
मम—எனக்கு சேஷமாகும்.

ஐச்வர்ய பலன்கள் எந்த அவ்யக்தத்தின் பரிணாமங்களாய் அழிகின்றனவோ, அந்த அவ்யக்தம் ஸ்வரூப விகாரமுள்ளது, அது போலன்றி அக்ஷரமான அவ்யக்தமாகும் ஜீவாத்மா. இது தேஹங்களினுள்ளே இருந்தாலும் தேஹங்கள் அழியும்போது அழிவதில்லை. இது பரமகதி. அழியாத வஸ்துவான படியால் இதைப் பெற்றவனுக்குப் புநராவ்ருத்தியில்லை. இவ்வானந்தம் பெற்றவனுக்குப் பிறகு எப்போதும் இதற்கு அழிவில்லை. ஐச்வர்யம் அழிவது போல் இது அழியாது. மேலான பலனுக்காக முயல்வானாகிலும் இதனை இழந்து வருந்துவானென்பதில்லை. ஐச்வர்ய ஸ்த்தானம் எனக்குச் சிறிய நியமன ஸ்த்தானமாம். இது பெரிதாகும், அதிகானந்தமாயிருப்பதால். இதுவும் எனக்கு சேஷபூதமே யென்றபடி.

अपुनरावृत्त्या कैवल्यं नित्यमिति प्रतीयत इति चेत्—न ; यं प्राप्य न निवर्तन्ते इत्युक्ता अक्षरप्राप्तिर्नाम अक्षरानुभवः। कैवल्यानुभवस्थानस्य, "योगिनाममृतं स्थानं स्वात्मसंतोषकारिणाम्" इत्युक्त्या ब्रह्माण्डान्तर्गततया पूर्वश्लोकोक्तरीत्या नाशेऽपि, केवलस्य प्राप्तं जीवात्मानुभवं विच्छिन्नं पुनः प्राप्तुमुपायः पुनरनुष्ठेय इत्यस्याभावात् सत्यां सामग्र्यां पश्चादपि स्वत एव तदनुभवानुवृत्तिरित्याशयात्। पञ्चाग्निविद्यानिष्ठश्च जिज्ञासुः जीवात्मानुभवविच्छेदं विनैवान्ते परब्रह्माप्नोतीति च तद्विषये अपुनरावृत्तिकथनमत्र सम्यक् घटत एवेति। ननु श्लोकद्वयमिदं वैकुण्ठस्थानपरं युक्तम्। पूर्वमर्वाचीनलोकानां नाशे उक्ते, मामुपेत्येति प्रागुक्तभगवत्प्राप्तिस्थानस्य नित्यत्वोक्तेरावश्यकत्वात्। तस्याव्यक्तस्य मूलप्रकृतिभूत—एतदव्यक्तविलक्षणत्वात्। अक्षरशब्दस्य च 'तदक्षरे परमे' इति तत्र प्रसिद्धेः, उत्तरार्धस्य च, प्रकृतिकार्याणां महाभूतानां नाशेऽपि वैकुण्ठो न नश्यति द्रव्यान्तरत्वादित्यर्थः। परमगतित्वं तस्य स्पष्टम्। तं प्राप्तानां पुनरावृत्तिश्च नास्ति। यमित्यस्य जीवात्मपरत्वे, तत्तज्जीवात्मनः कैवल्ये तेनतेनैवानुभाव्यत्वात् 'न निवर्तन्ते' इति बहुवचनं न घटते। वैकुण्ठलोकग्रहणे तत्प्रापिनामनेकत्वात् उपपन्नम्। धामशब्दस्वारस्यञ्च। ईदृशमत्स्थाने मां प्राप्ताः न निवर्तन्त इति प्रकृते स्थानमवश्यं वक्तव्यमिति चेत्—सत्यम्; साधीय एव प्रमेयम्। तथाप्येवमर्थपरत्वे श्लोकद्वयमिदं 'पुरुषः स पार्थ' इत्युत्तरश्लोकानन्तरं भवितुमर्हति। पूर्वं सत्त्वात् एतदधिकारिभिन्नाधिकारिपरत्वमुत्तरश्लोकस्य "भक्त्या लभ्यस्तु" इति प्रतीयमानं न भञ्जनीयमित्याशयेन अस्य जीवात्मपरतयैव व्याख्यानम्। अव्यक्ताक्षरशब्दप्रसिद्धिर्जीवात्मविषय एव हि गीतायाम्। धामशब्दश्च प्राक् जीवे प्रयुक्त इति।

இந்த இரண்டு ச்லோகங்களும் வைகுண்டலோக விஷயமாகக் கூடும். ஐச்வர்யார்த்தி லோகத்தின் அழிவு கூறப்பட்டவுடன் முமுக்ஷு லோகத்தின் வாசியை விளக்க வேண்டுமே. சொற்கள் எல்லாம் இப்போதே பொருந்தும். ஆயினும் மேல்ச்லோகம் முமுக்ஷுவைத் தொடங்குவது போலிருப்பதால் இதை கைவல்ய விஷயமாக அருளினதென்க. (21)

**पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।**

**यस्यान्तःस्थानि भूतानि येन सर्वमिदं ततम् ॥ २२ ॥**

*புருஷஸ் ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ்த்வநந்யயா |*

*யஸ்யாந்தஸ்ஸ்த்தாநி பூதாநி யேந ஸர்வமிதம் ததம் || 22 ||*

भूतानि-ப்ராணிகள்
यस्य अन्तःस्थानि-எவனுள் இருக்கின்றனவோ
सर्वम् इदम्-இவ்வசேதநமெல்லாமும்
येन ततम्-எவனால் பரவப்பெற்றதோ
सः परः पुरुषः तु-அந்த பரமபுருஷனோ வென்றால்
अनन्यया-வேறொன்றைப் பற்றியதாகாத
भक्त्या-பக்தியினாலே
लभ्यः-பெறத்தக்கவன்.

ஐச்வர்ய கைவல்யங்களையே வேறு வழியிலும் பெறலாம். சேதநா சேதந ஸர்வவ்யாபியாய் கீழ்க் கூறப்பெற்ற பரமபுருஷனைப் பெறுவது அவனையே பெற விரும்பிச் செய்த பக்தியினாலேயாம்.

இனி மேலுலகப் பலன்களில் புநராவ்ருத்திக்கு இடமாகாத மார்க்கமும் அதற்கு இடமான மார்க்கமும் குறிக்கப்படுகின்றன. இதனால் கீழ்ச் சொன்ன பக்தர்கள் நால்வரில் சிலருக்கு மட்டும் அநாவ்ருத்தி மார்க்கமென்றறிய வேண்டும். எவருக்கு என்பதை ப்ரமாண யுக்திகளைக் கொண்டு நாமே தெளிய வேண்டும். ஞானிக்கு அநாவ்ருத்தி மார்கம், ஐச்வர்யார்த்திக்கு ஆவ்ருத்திமார்கம் என்பதில் ஐயமில்லை. கைவல்யார்த்திவிஷயம் தான் தெளிய வேண்டும். இவன் ஜிஜ்ஞாஸு என்று சொல்லப்பட்டவன். இவனுக்குப் பஞ்சாக்னி வித்யையிற் சொன்னவற்றின் அறிவு வேண்டுமென்றதால் பஞ்சாக்நி வித்யை யென்னும் பக்தியே உபாயமாகிறது. அவ்வுபாயம் அனுஷ்டிப்பவனுக்குக் கைவல்யமாம் பலன் கீழே கீதையில் கூறப்பெற்றது. உபநிஷத்தில் பஞ்சாக்னிவித்யைக்கு ப்ரஹ்மப்ராப்தியைப் பலனாகக் காட்டி அர்ச்சிராதிமார்கம் உண்டு என்று ஓதியிருப்பதால், 13வது ச்லோகத்தில் ஓமென்ற மந்த்ரமும் கூறப் பெற்றதால் அவன் ப்ரஹ்மத்தையும் சேர்த்தே உபாஸித்து அபுநராவ்ருத்திக்கான அர்ச்சிராதி மார்க்கம் செல்லுகிறானென்று கொள்க.

यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः ।
प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥ २३ ॥

யத்ர காலே த்வநாவ்ருத்திம் ஆவ்ருத்திஞ்சைவ யோகிந: |
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப || 23 ||

योगिनः—உபாயம் அனுஷ்டித்தவர்
यत्र काले—எந்தக் காலத்தில்
प्रयाताः—சென்றவர்களாய்
अनावृत्तिं—திரும்பாமையையும்
यत्र काले तु—எக்காலத்தில் சென்று
आवृत्तिम्—புனர் ஜன்மத்தையும்
यान्ति—பெறுகின்றனரோ,
भरतर्षभ—பரதவம்ச ச்ரேஷ்டனே
तं कालं—அந்தக் காலத்தை
वक्ष्यामि—இனிச் சொல்வேன்.

எந்த வழியிற் சென்றவர் திரும்புகின்றனரோ, எந்த வழியிற் சென்றவர் திரும்புவதில்லையோ, அவ்வழிகளைச் சொல்வேன் என்றே சொல்ல வேண்டும். அப்படி வழி யென்னுமே காலமென்றது. அந்த

வழியிரண்டிலும் காலாபிமானி தேவதைகள் பலர் இருப்பதாலென்க. பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், வருஷம் என்ற காலதேவதைகள் ஆர்ச்சிராதி மார்கத்தில், இரவு, க்ருஷ்ணபக்ஷம் தக்ஷிணாயனமென்ற காலதேவதைகள் தூமாதி மார்கத்தில். அதனால் காலமென்ற சொல்லாலே வழியைக் குறித்தார். (23)

अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् ।
तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥ २४ ॥

*அக்நிர் ஜ்யோதிரஹச் சுக்ல: ஷண்மாஸா உத்தராயணம் |*
*தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா: || 24 ||*

अग्निः ज्योतिः—அக்னி என்ற சோதி
अहः—பகல்
शुक्लः—சுக்லபக்ஷம்
उत्तरायणम्—உத்தராயணமென்கிற
षट् मासाः—ஆறு மாதங்கள் என்ற தேவதைகள் உள.
तत्र—அவர்கள் சேர்ந்த வழியில்
प्रयाताः—சென்றவர்களான
ब्रह्मविदः—ஞானிகளான
जनाः—நற்பிறவியுடையோர்
ब्रह्म—பரப்ரஹ்மத்தை
गच्छन्ति—பெறுகின்றனர்.

धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम् ।
तत्र चान्द्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते ॥ २५ ॥

*தூமோ ராத்ரிஸ் ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம் |*
*தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர் யோகீ ப்ராப்ய நிவர்ததே || 25 ||*

धूमः रात्रिः-புகையும் இரவும்
तथा कृष्णः-அவ்வாறே கிருஷ்ண பக்ஷமும்
दक्षिणायनम् षट् मासाः-தக்ஷிணாயன மாதங்களும் எங்கோ,
तत्र-அந்த மார்க்கத்தினால்
योगी—யாகதாநாதிகளான (புண்ய) உபாயத்தைச் செல்பவன்
चान्द्रमसं ज्योतिः-சந்திரனொளியை (ஸ்வர்கலோக தேஹத்தை)
प्राप्य-பெற்று அனுபவித்த பிறகு
निवर्तते-திரும்புகிறான்.

ஸ்வர்கலோகம் சந்த்ரனுக்குட்பட்டும் சந்த்ரனைப் போன்ற அழகிய உடல் பெறவுமாகிற படியால் சந்த்ர சோதியை அடைகிறானென்றது. நான்குவித பக்தர்களில் ஐச்வர்யார்த்திகளான பக்தியோக நிஷ்டர் ஸ்வர்கலோகமே செல்லுகிறார்களென்னவாகாதபடியாலும் अथ ये ग्रामे इष्टापूर्ते दत्तमित्युपासते என்று யாகாதி புண்ய கர்மாக்களுக்கு தூமாதி மார்கம் சொல்லப்பட்டிருப்பதாலும் योगी என்ற சொல்லுக்குப் பொதுவாக உபாயம் உள்ளவனென்றே பொருளாம்.

शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।
एकया यात्यनावृत्तिमन्ययाऽऽवर्तते पुनः ॥ २६ ॥

சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: சாச்வதே மதே |
ஏகயா யாத்யநாவ்ருத்திம் அந்யயாऽऽவர்ததே புந: || 26 ||

शुक्ल कृष्णे–சுக்லம் க்ருஷ்ணம் என்கிற
एते गती हि–இவ்விரு மார்கங்களல்லவோ
जगतः–அந்தந்த அதிகாரிக்கு
शाश्वते–நிலையாகவுள்ளனவாக
मते–வேதஸ்ம்ருதி ஸம்மதமாம்.
एकया–ஒன்றான சுக்லமார்கத்திலால் (சென்றவன்)
अनावृत्तिम्–திரும்பாமையை
याति–அடைகிறான்.
अन्यया–கறுப்பு மார்கத்திலே போகிறவன்
पुनः आवर्तते–மீண்டும் திரும்புகிறான்.

சுக்ல பக்ஷம் கலந்ததாய், சுத்தமாயுமிருப்பதால் அக்நியாதி மார்க்கம் சுக்லம். க்ருஷ்ணபக்ஷம் கலந்து அசுத்தமாயுமிருப்பதால் தூமாதி மார்க்கம் க்ருஷ்ணம். அந்தந்த உபாயம் அனுஷ்டித்தவருக்கு அதது நிலையான வழியாகவே ப்ரமாணங்கள் பகரும். விரிவு உபநிஷத்திலும் ஸ்ரீபாஷ்யத்திலும். (26)

नैते सृती पार्थ जानन् योगी मुह्यति कश्चन ।
तस्मात् सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन ॥ २७ ॥

நைதே ஸ்ருதீ பார்த்த ஜாநந் யோகீ முஹ்யதி கச்சந |
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ பவார்ஜுந || 27 ||

पार्थ–குந்தீ புத்ரனே !
अर्जुन–அர்ஜுநா !
एते सृती–இவ்விரு மார்க்கங்களை
जानन्–அறிகின்ற
योगी कश्चन–எந்த பக்தியோகநிஷ்டனும்
न मुह्यति–மோஹமடைவதில்லை.
तस्मात्–ஆகையால்
सर्वेषु कालेषु–எல்லா ஸமயங்களிலும்
योगयुक्तः–தூமாதி மார்கத்திலும் வேறான அர்ச்சிராதி மார்க்க சிந்தனையுடன்
भव–இருப்பாயாக.

புண்யங்களைச் செய்து ஸ்வர்கம் போகின்றவர்கள் தூமாதி மார்கத்தினாலே போகின்றாராலும் அந்த மார்க்கம் எத்தகையதென்று அவர்கள் சிந்திக்க வேண்டிய அவசியமில்லை. அதனாலேயே கர்ம காண்டத்தில் அது கூறப்படவில்லை. உபநிஷத்தில் முமுக்ஷுவுக்கு, वेत्थ यथा देवयानस्य पितृयाणस्य च व्यावर्तने என்று இரண்டுக்கும் உள்ள வாசியறிந்து அர்ச்சிராதி மார்க சிந்தனை தினந்தோறும் செய்வது சொல்லப்பட்டிருப்பதால் அந்த பக்தன் விஷயமாம் இந்த ச்லோகம். கடைசி காலத்தில் இந்த மார்கத்தை யோகி சிந்திக்கக் கண்டு பகவான் அம் மார்கத்தை அவன் காணும்படி செய்கிறார். தினந்தோறும் அதன் சிந்தனையிருந்தால் அபபோது எல்லாம் விடாமல் த்யானிக்கக் கூடும். (27)

இவ்விரண்டு அத்யாயங்களிற் சொல்லப்பட்ட சேதநா சேதநேச்வர-
தத்வத்ரய-உபாய-பலன்களை அறிவதற்குப் பலனை அருளிச் செய்கிறார்—

**वेदेषु यज्ञेषु तपस्सु चैव दाने च यत् पुण्यफलं प्रदिष्टम् ।**
**अत्येति तत् सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाऽऽद्यम् ॥ २८ ॥**

வேதேஷு யஜ்ஞேஷு தபஸ்ஸு சைவ
தாநே ச யத் புண்யபலம் ப்ரதிஷ்டம் |
அத்யேதி தத் ஸர்வம் இதம் விதித்வா
யோகீ பரம் ஸ்த்தாநம் உபைதி சாத்யம் || 28 ||

वेदेषु-வேதாப்யாஸாதிகளிலும்
यज्ञेषु-யாகாநுஷ்டானங்களிலும்
तपस्सु च-தவங்களிலும்
दाने-தான தர்மத்திலும்
यत् पुण्यफलम्-புண்ய பலமாக எது
प्रदिष्टम्-ப்ரமாணங்களில் குறிக்கப் பட்டதோ
तत् सर्वम्-அதையெல்லாம்,
इदं-இப்படி பகவானின் மேன்மையை
विदित्वा-அறிந்து
अत्येति-கடக்கிறான். வேண்டா என்று வெறுக்கிறான்.
योगी-யோகியாகி
आद्यं-ஆதியிலிருந்து இருக்கிற-அநாதியான
परं स्थानं च-மோக்ஷஸ்த்தானத்தையும்
उपैति-பெறுகிறான்.

பகவத் பக்தர்கள் நால்வர் என்றதை நன்கு அறிந்தவன் மற்ற கர்மானுஷ்டானங்களால் வரும் பலனை இவ்வறிவுக்கு ஈடாகாதென்று த்ருணமாக நினைத்து விரக்தனாகி மற்ற பக்தியையும் விட்டு ஞானியாகி மோக்ஷம் பெறும்படியாவான்.

எட்டாம் அத்தியாயம் முற்றும்.

## ஒன்பதாம் அத்தியாயம்.

உபாஸனம் செய்கிறவர் பலவிதமாயிருப்பர், வெவ்வேறு பலனை விரும்புவதாலென்பது விளக்கப் பெற்றது. இனி, உபாஸனத்தின் ஸ்வரூபம் விளக்கப் பெறும். அதற்காக உபாஸிக்கப்படும் வஸ்துவின் மேன்மையும் உபாஸிக்கும் மஹாத்மாக்களின் சிறப்பும் சொல்லப்படும்.

श्रीभगवान् उवाच-பகவான் சொன்னார்—

**इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।**
**ज्ञानं विज्ञानसहितं यद् ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १ ॥**

இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே |
ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத் ||1||

यत् ज्ञात्वा–எதனையறிந்து
अशुभात् मोक्ष्यसे–ஸம்ஸார துக்கத்தினின்று விடுபடுவாயோ
इदं तु–இந்த விலக்ஷணமான
गुह्यतमं–மிகவும் இரஹஸ்யமான
विज्ञानसहितम्–உபாஸனத்தின் வகைகளின் அறிவுடன் சேர்ந்த
ज्ञानम्–உபாஸனமென்ற ஜ்ஞானத்தை
अनसूयवे–பொறுமையற்ற உனக்கு
वक्ष्यामि–சொல்லப்போகிறேன்.

உபாஸகர்கள் செய்யும் உபாஸனம் எத்தகையது, அதனுள் ஸங்கீர்த்தனம் நமஸ்காரம் மற்றும் பல செயல்கள் எவ்வாறு அடங்கியிருக்கும் என்பது மிக்க இரஹஸ்யமாகும். நீ எனது மேன்மைகளைக் கேட்டுப் பொறுமை கொள்ளாமல் மெச்சுகிறபடியால் உனக்கு ப்ரீதி ரூபமான உபாஸனம் உண்டாகுமென்று அதனை விளக்குகிறேன். (1)

இவ்வுபாயம் சிறந்ததென அறிவிக்கிறார்—

राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् । See Nv P 29 ll-20 72
प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २ ॥

*ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதம் உத்தமம் |*
*ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்தும் அவ்யயம் || 2 ||*

इदं–இந்த உபாஸன ஜ்ஞானமானது
राजविद्या–அரசர்களிடம் இருக்கும் வித்யை; சிறந்த அறிவுமாம்.
राजगुह्यम्–சிறந்த இரஹஸ்யம்
उत्तमं पवित्रम्–பாபங்களைப் போக்குவதில் உத்தமமானது
प्रत्यक्षावगमम्–காணவாம் விஷயத்தைப் பற்றியது.
धर्म्यम्–சாஸ்த்ரஸம்மதமான தர்மத்தினின்றும் விலகாதது.
कर्तुं सुसुखम्–ஆனந்தமாய்ச் செய்யக்கூடியது.
अव्ययम्–என்றும் அழியாதது.

மற்ற அறிவுகளோ செயல்களோ இவ்வளவு உயர்ந்தனவாகா. இவ்வளவு இரஹஸ்யமாகக் காக்கப்படுவதுமில்லை. இதனைப் போல் பாபங்களைப் போக்கா. இது அரசரைப் போல் எளிதில் விஷயத்தையறிவிக்காமல், எல்லோருக்கும் நன்மையைத் தேடும் மனம் உடையரிடம் உள்ள மஹாரஹஸ்யம். நினைத்தவிடத்தில் ப்ரத்யக்ஷமாகக் கூடிய வஸ்துவைப் பற்றியதுமாம். இது மற்ற தேவதையின் உபாஸனம் போலே முறை தவறுமாகாது. உபாயமாய் சாஸ்த்ர ஸம்மதமாயிருந்து கொண்டே அன்பே வடிவானபடியால் விடாமல் அநாயாஸமாய்ச் செய்யப்படுவதுமாகும். யாகாதிகளான உபாயங்கள் போலே அழிவதுமன்று. வீடு பெற்ற பிறகும் பக்தி தொடர்ந்தேயிருக்குமே. राजविद्या என்பதற்கு சிறந்த வித்யை யென்றும் பொருளாம். அரசர்கள் போன்றவராய் ஆழமான பெருமனம் உடையாரிடம் தங்கும் வித்யை எனவும் பொருளாம். (2)

இவ்வளவு சிறந்ததை ஏன் எல்லோரும் எளிதில் பெறவில்லை யென்னில், உத்தரம் அருளிகிறார்—

**अश्रद्दधानाः पुरुषाः धर्मस्यास्य परन्तप ।**
**अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३ ॥**

See ... 11-93, 75

அச்ரத்ததாநா: புருஷா: தர்மஸ்யாஸ்ய பரந்தப |
அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸார வர்த்மநி || 3 ||

परन्तप—பகைவரைப் பரிதவிக்கச் செய்கிறவனே
पुरुषाः—யோக்யதையுள்ள புருஷர்களே
अस्य धर्मस्य—சிறப்பான இந்த தர்மத்திலே
अश्रद्दधानाः—ச்ரத்தை-அதாவது அனுஷ்டிப்பதில் ஆர்வம் இல்லாதவர்களாய்
माम् अप्राप्य—என்னைப் பெறாமலே
मृत्युसंसार वर्त्मनि—தம்மை யழிக்கும் ஸம்ஸார வழியிலே
निवर्तन्ते—நிலைத்திருக்கின்றனர்.

அற்பமான பலனில் ஆசையுடையருக்கு இதனை யனுஷ்டிக்க வேண்டுமென்ற பரபரப்பு ஏற்படுவதில்லை. அதனால் என்னை நெருங்குவதேயில்லை. அறிவு ஆனந்தமெல்லாமற்ற ஸம்ஸார வழியிலேயே நடமாடுகின்றனர். निवर्तन्ते என்பதற்கு ஸம்ஸார வழியில் திரும்புகிறார்களென்ற பொருள் பொருந்தா. ஸம்ஸாரத்தை விட்டு வேறிடத்தில் இருந்தால் தானே அங்குநின்று ஸம்ஸார வழி புகுகின்றனரென்னலாம். ஆகையால், நிதராம் வர்த்தந்தே—மேன்மேல் ஸம்ஸாரத்திலே நிலைக்கிறார்களெனப் பொருளென்க. (3)

தமது மேன்மையை மொழிகிறார்—

**मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।**
**मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ४ ॥**
**न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।**
**भूतभृन्न च भूतस्थो ममाऽऽत्मा भूतभावनः ॥ ५ ॥**

See Nr P 9-11-93/96

மயா ததமிதம் ஸர்வம் ஜகத் அவ்யக்தமூர்த்திநா |
மத்ஸ்த்தாநி ஸர்வபூதாநி ந சாஹம் தேஷ்வவஸ்த்தித: || 4 ||
ந ச மத்ஸ்த்தாநி பூதாநி பச்ய மே யோகமைச்வரம் |
பூதப்ருத் ந ச பூதஸ்த்த: மமாத்மா பூதபாவந: || 5 ||

अव्यक्तमूर्तिना—காணவாகாத ஆத்ம ஸ்வரூபமுடைய
मया—என்னால்
इदं सर्वम्—சேதனம் அசேதனமெல்லாம்
ततम्—பரவப் பெற்றுளது.
सर्वभूतानि—எல்லா வஸ்துக்களும்
मत्स्थानि—எனக்கு அதீனமாயிருக்கின்றன.
अहं तेषु—நான் அவற்றில்

| | |
|---|---|
| अवस्थितः न—இருப்பவனல்லேன். என் இருப்பு அவற்றிற்கு அதீனமன்று. | मे योगम्—எனது ஸாமர்த்தியத்தை पश्य—பார். |
| भूतानि च—வஸ்துக்களும் | भूतभृत्—வஸ்துக்களை பரிக்கிறேன் |
| न मत्स्थानि—என்னிடம் இருப்பன வல்ல. | भूतस्थः च न—வஸ்துக்களிடம் தங்கு பவனுமல்லேன். |
| ऐश्वरम्—ஈச்வரத் தன்மைக்கேயான | मम आत्मा—எனது ஸங்கல்ப்பம் भूतभावनः-வஸ்துககளை தரிப்பதாகும். |

யாரும் காணவாகாதபடி நான் மறைந்தே எங்கும் பரந்துளேன். அதனால் என்னிடம் எல்லாம் இருந்தும் இதனையறியார், நான் இல்லை யாகில் அவை யிருக்க மாட்டா. அதுபோல் என் இருப்பு அவற்றில் ஒன்றுக்கும் ஆதீனமன்று. ஆனாலும் அவையும் என்னிடம் இல்லை யென்னலாம். என்னால் சுமக்கப்படுபவையல்லவே. நீரைக் குடம் சுமக்கிறதென்றால் நீரைத் தாங்குமாறு அதற்கு உருவமைப்பு வேண்டும். அதற்கும் ஓர் ஆதாரமும் வேண்டும். அவ்வாறெனக்கு வேண்டுவதில்லை. எல்லாவற்றையும் தரிக்கும் படியான ஈச்வர ஸ்வபா வம் எனக்கு உள்ளதைப் பார். எனக்கு ஓர் ஆதாரம் வேண்டாதபடி யிருந்தே ஸங்கல்பத்தினாலே எல்லாவற்றையும் இருக்கச் செய்கிறேன். [இங்கே எல்லாம் என்னிடம் இருககின்றன என்றும் என்னிடமில்லை யென்றும் ஒன்றுக்கொன்று முரணாக மொழிவது தகாதென்று, இல்லை யென்பதே உண்மை. உலகம் பொய்யாகையால் என்பர். இது தவறு, தானும் இருந்து, உலகும் இருந்து அது தன்னிடமில்லை யென்ன வேண்டும். அது எவ்வாறு கூடுமென்னில், மேலே மமாத்மா பூதபாவந: என்று அதனை விவரிப்பதால் குறையொன்றுமில்லை. உலகில ஒரு வஸ்துவை ஒரு வஸ்து தரிக்குமென்றால் தரிப்பதற்குத் தக்க குருத்வம் வேண்டும். அதில்லாமலே தரிக்கிறேன் என்றபடி. ஸங்கற்ப சக்தியுள்ள போது குருத்வம் வேண்டுவதில்லை யென்றபடி. ஐச்வரம் என்ற சொல்லுக்கு நியமன சக்தியே பொருளாம். நான் என்னுமே மமாதமா என்றதால் ஆத்மபதம் இங்கு ஞானத்தைச் சொல்லும். மேலும் எனக்கு வ்யக்த மூர்த்தி, அவ்யக்த மூர்த்தி என இரண்டு உண்டு. வ்யக்த மூர்த்தி யாவது திருமேனி. அதனால் தரிப்பதாகில் குருத்வம் காரணமாகலாம். அவ்யக்த மூர்த்தியான ஆத்மாவன்றோ தரிப்பது. அதனால் ஸங்கற்பமே காரணமென்க. (5)

தன்னால் எல்லாம் தரிக்கப்படுவதற்கு ஓர் உதாரணம் கூறுகிறார்—

यथाऽऽकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् । See Nr 21-11-1577
तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥ ६ ॥

யதாऽऽகாசஸ்த்திதோ நித்யம் வாயு: ஸர்வத்ரகோ மஹாந் |
ததா ஸர்வாணி பூதாநி மத்ஸ்த்தாநீத்யுபதாரய || 6 ||

आकाशस्थितः—வானத்தில் பிடிப்பி ல்லாததொன்றில் இருக்கும்
महान् वायुः—பெருங்காற்று
नित्यं—எப்போதும்
सर्वत्रगः—எங்கும் போகின்றதாய்
यथा—எப்படி எனக்கே அதீனமோ,
तथा—அது போல்
सर्वाणि भूतानि-எல்லா வஸ்துக்களுமே
मत्स्थानि इति-எனக்கு அதீனமென்று
उपधारय—தெளிவாயாக.

பெருங்காற்று எங்கும் எப்போதும் வானத்தில் வீசுகிறதே. அதனை யார் தாங்குகின்றனர். வானத்தில் அதற்குப் பிடிப்புமில்லை. விழாமல் வீசுவதற்குக் காரணம் நான் தாங்குவதே. வாயுவளவும் பெலனற்ற வானம் அதைத் தாங்குமோ. அசேதனமாகையாலே ஸங்கல்ப சக்தியால் தாங்குமென்னவுமொண்ணுது. அக் காற்றுப் போல் எல்லாமே என்னல் தாங்கப்படுமென்க. तस्मिन्नपो मातरिश्वा दधाति என்றபடி காற்று மேகம் முதலானவற்றைக் கொண்டுபோவதும் தாங்குவதும் நான் அதற்கு ஆதாரமாயிருப்பதால். அப்படி மஹத்வம் வாய்ந்த வாயுவுக்கு வானம் ஆதாரமாகுமோ. (ஆகையால் வாயுவுக்கு ஆகாசம் போல் நான் அனைவற்றிற்கும் ஆதாரம் என்று பொருள் உரைத்தல் தகாதென்க.) 'ஸர்வத்ரக:' என்பதால் வாயுவின் வியாபாரமும் தனக்கு அதீனமென்று குறித்ததாம். 'ஆகாசஸ்த்தித:' என்பதனுல் பை முதலானவற்றில் அடக்கப்படாத காற்றென்றபடி. ஒன்றுள் அடக்கப்பட்டதற்கு அதுவே ஆதாரமாகுமே. (6)

எல்லாவற்றின் ஸ்திதியும் ப்ரவ்ருத்தியும் பகவானுக்கு அதீனமென்று அவனது மாஹாத்ம்யம் கூறப் பெற்றது. பிறப்பும் அழிவும் கூட அதீனமென்கிருர்—

**सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् ।** See Nr P. 28-11-98/13
**कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥ ७ ॥**

ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் |
கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம் || 7 ||

कौन्तेय—குந்தீபுத்ரனே!
सर्वभूतानि—உண்டான வஸ்துக்களெல்லாம்
कल्पक्षये—ஸ்ருஷ்டி முடிவில்
मामिकां—எனதான
प्रकृतिं यान्ति-மூலப்ரக்ருதியை அடைகின்றன. அதில் லயிக்கின்றன.
तानि—அவற்றையே
पुनः—மீண்டும்
कल्पादौ—ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில்
अहं विसृजामि—நான் விடுகிறேன். விசேஷமாக வெளிவரச் செய்கிறேன்.

இங்கே ப்ரளயத்திற்குப் பிறகு ஸ்ருஷ்டியைச் சொல்லியிருப்பதாலே ஸ்ருஷ்டியும் ப்ரளயமும் பல என்பது தேறும். இவை மாறி மாறி எண்ணற்று வரும். எப்போதும் எல்லா விதமான ப்ராணி ஸ்ருஷ்டியும் உண்டென்பதை யறிவிப்பது மேல் ச்லோகம்—

प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः । See NP 5-12-67 ...
भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥ ८ ॥

*ப்ரக்ருதிம் ஸ்வாம் அவஷ்டப்ய விஸ்ருஜாமி புந: புந: |*
*பூதக்ராமம் இமம் க்ருத்ஸ்நம் அவசம் ப்ரக்ருதேர் வசாத் || 8 ||*

स्वां प्रकृतिं—எனதான மூலப்ரக்ருதியை
अवष्टभ्य—துணையாக்கி ஸமஷ்டி ஸ்ருஷ்டி மூலம் அனுகூலமாக்கி
प्रकृतेःवशात्—மூலப்ரக்ருதிக்கு உட்பட்டதால்
अवशं—ஸ்வதந்த்ரமாகாத
कृत्स्नं—ஸமஸ்தமான தேவதிர்யக்-மனுஷ்யஸ்த்தாவரங்களான
इमं भूत ग्रामम्—இவைபோன்ற பிராணி ஸமூஹத்தை
पुनः पुनः—மீண்டும் மீண்டும்
विसृजामि—விசேஷமாக அதற்கேற்றவாறு படைக்கிறேன்.

ஸ்ருஷ்டிஸ்த்திப்ரவ்ருத்திகள் தனக்கு அதீனமென்றார். ஆனால் படைக்கப்படும் பிராணிகளின் ஸுகதுக்கங்களிலுள்ள வாசிக்கும் நீரே காரணமாகில் உமக்கு தயையில்லாதவன் பக்ஷபாதி என்ற குற்றங்கள் உண்டாமே என்ன, அவ்வாறில்லையென்று மான்மியத்தை நிலைநாட்டுகிறார்—

न च मां तानि कर्माणि निबध्नन्ति धनञ्जय । See NP 27-12-67/70
उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥ ९ ॥

*ந ச மாம் தாநி கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய |*
*உதாஸீநவத் ஆஸீநம் அஸக்தம் தேஷு கர்மஸு || 9 ||*

धनञ्जय—அர்ஜுனா!
तेषु कर्मसु—ஏற்றத்தாழ்வான ஸ்ருஷ்டியிலே
असक्तं—பற்றற்று
उदासीनवत्—ஒன்றுமே செய்யாதவன் போலே
आसीनम्—உட்கார்ந்திருக்கிற (ஏற்றத்தாழ்வைச் செய்யாமலிருக்கிற)
माम्—என்னை
तानि कर्माणि—ஏற்றத்தாழ்வைக் காட்டும் செயல்கள்
न निबध्नन्ति—தயையின்மை பக்ஷபாதமென்ற குற்றமுள்ளவனாக்கா

உலகில் பிராணிகளுக்கு இருக்கும் ஏற்றத் தாழ்வுகளுக்கு அவர்களிடம் உள்ள புண்யபாபச் செயல்களே காரணம். அவர்களுக்குப் பின்னே நன்மை வேண்டுமென்று நான் படைப்பவனானாலும் படைப்பில் வரும் வாசிக்குக் காரணமல்லேன். தகாதவனுக்கு நன்மையளித்தும் அருள வேண்டுமிடத்தில் உபேக்ஷித்துமிருப்பேனாகில் என்னிடம் குறை கூறலாம்.

கர்மாவினுல் எல்லாம் ஆவதாகில் நீர் செய்வதென்ன என்னில்—

**मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।**
**हेतुनाऽनेन कौन्तेय जगद्धि परिवर्तते ॥ १० ॥**

*மயாऽத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம் |*
*ஹேதுநாऽநேந கௌந்தேய ஜகத் ஹி பரிவர்ததே || 10 ||*

अध्यक्षेण—மேலே கவனித்து ஸங்கல்பிக்கும்
मया—என்னுல்
प्रकृतिः—மூலப்ரக்ருதியானது
सचराचरं—ஜங்கமஸ்த்தாவரங்கள் கொண்ட உலகை
सूयते—உண்டுபண்ணுகிறது.
कौन्तेय—குந்திபுத்ரனே!
अनेन हेतुना हि—எனது ஸங்கல்பமென்ற காரணத்தினுலன்றே
जगत्—உலகானது
परिवर्तते—எல்லா மாறுதலேயும் பெறுகிது.

புண்யபாபச் செயல்களும் மூல ப்ரக்ருதியுமென்றவை காரணமாளுலும் அசேதனங்களாகையாலே எல்லாம் அறிந்து நடத்த வல்ல சேதனன், அவற்றை உபகரணமாக்கிச் செய்கின்றவன் வேண்டும். அவ்வாறு அத்யக்ஷன் நானே. அந்தந்த வினையாம் விதைக்குத் தகுந்த முளையையே நான் ஸங்கல்பிக்கிறவன். ஸங்கல்ப்பிக்கும் நானில்லாமல் ஒன்றும் நடக்காது.

ஆக, தனக்கு ஈச்வரத்வம், படைப்பு முதலானவற்றிற்குக் காரணமாகை, ஏற்றத்தாழ்வுக்குக் காரணமாகாமை, ஸத்யஸங்கல்பத்வம் முதலான மான்மியம் இருப்பதைக் கூறினர். இத்துடன், 'மோக்ஷ பலன் அளிப்பவனுமாகிறேன். ஆனல் அதைப் பெற பிரஜைகள் முயல்வதில்லை' என்றும்,, மாருக நடக்கின்றனர் என்றும், மாற்றாரின் மனோரதம் பலிப்பதில்லை யென்றும் மேலே கூறுகிருர்—

**अवजानन्ति मां मूढाः मानुषीं तनुमाश्रितम् ।**
**परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥ ११ ॥**

*அவஜாநந்தி மாம் மூடா: மாநுஷீம் தநும் ஆஸ்த்திதம் |*
*பரம் பாவம் அஜாநந்தோ மம பூதமஹேச்வரம் || 11 ||*

मानुषीं तनुम्—மனிதர்க்குரிய உடலே
आस्थितं—பெற்றவனுய்
भूतमहेश्वरम्—ஸர்வப்ராணி ஸர்வேச்வரனை
माम्—என்னே
मम परं भावं—தயாதி குணங்களால் அவதரித்த எனது பரத்வத்தை மேன்மையை
अजानन्तः मूढाः—அறியாமல் மூடர்கள்
अवजानन्ति—அவமதிக்கிருர்கள்.

மறைவாக இருந்தால் என்னைத் தெளிய மாட்டிலரென்று எதிரில் வருகிறேன். வரும்போது பரத்வத்துடன் இருந்தால் அணுகமாட்

டிலர். அணுகினாலும் கலந்திருக்க இசையார். அர்ச்சாமூர்த்தியைப் போல் வணங்கி மட்டும் போவர் என்றெண்ணி அவர்கள் பழகப் பாங்காக அவர்கள் பழகும் மனித உருவம் போன்ற உருவம் பெறுகிறேன். இதனால் स उ श्रेयान् भवति जायमानः என்றவாறு எனக்குப் புகழ் அதிகமாகிறது. இப்படி பரத்வமும் ஸௌலப்யமும் சேர்ந்திருக்கை என்ற சிறப்பே எனக்குப் பரபாவம். இதனை இவர்கள் அறிவதில்லை. மஹேச்வரனென்பதை மறந்து மனிதனென்றே எண்ணி மதிக்காமலிருக்கின்றனர். என்ன செய்யலாம். (11)

என்னை அவமதிப்பதால் அவர்களுக்கே பெருநஷ்டம். எனக்கு ஒரு கேடுமில்லை யென்கிறார்—

मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतसः । See NVP 3-12-73, 74
राक्षसीं आसुरींश्चैव प्रकृतिं मोहिनीं श्रिताः ॥ १२ ॥

மோகாசா மோககர்மாணோ மோகஜ்ஞாநா: விசேதஸ: |
ராக்ஷஸீம் ஆஸுரீஞ்சைவ ப்ரக்ருதிம் மோஹிநீம் ச்ரிதா: || 12 ||

என்னை அவமதிக்கின்றவர்கள்
मोहिनीं—என் உண்மையை மறைக்கிற
आसुरीम्—அசுரர்களுக்கானதும்
राक्षसीञ्च—அரக்கருக்கானதுமான
प्रकृतिम् एव—ஸ்வபாவத்தையே
श्रिताः—அடைந்தாராய்
मोघाशाः—வீணான ஆசையையுடையர்
मोघकर्माणः-வீண் செயலையுடையராய்
मोघज्ञानाः—நான் இறைவனல்லனென்றாற்போன்ற விபரீத ஜ்ஞானமுடையருமாவர்.

ச்லோகத்தில் பின் பகுதியை முன்னும், முன் பகுதியைப் பின்னுமாக இணக்கி உரைக்க. (12)

என்னை மதிக்காமலிருப்பவர் அது காரணமாகவே அசுரப் பிறவியும் அரக்கப் பிறவியும் பெற்று என்னைக் கேவலமாக நினைப்பர், என்னை நலிய நோக்கும், தக்க முயற்சியும் கொள்வர். எல்லாம் வீணே. அவர்களால் ஸர்வேச்வரனான எனக்கு என்ன செய்யவாகும்?

स महात्मा सुदुर्लभः என்று கீழே கூறினேன். பாபிகள் பலருளரென்று இப்போது கூறினேன். இதனால் அவதாரமே வீண் என நினைக்க வேண்டா. ஆயிரத்திற்கு ஒருவர் கூட இல்லையானாலும் மஹாத்மாக்கள் பலர் உளரென்கிறார்—

महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः । See NVP 2-12-74/76
भजन्त्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम् ॥ १३ ॥

மஹாத்மாநஸ்து மாம பார்த்த தைவீம் ப்ரக்ருதிம ஆச்ரிதா: |
பஜந்த்யநந்யமநஸோ ஜ்ஞாத்வா பூதாதிமவ்யயம் || 13 ||

पार्थ—அர்ஜுனா !
दैवीं प्रकृतिं—தைவ ஸம்பத்தை-ஸாத்விகஸ்வபாவத்தை
आश्रिताः—அடைந்தராய்
महात्मानः तु—மஹாத்மாக்களானவரோவென்றால்
भूतादिम्—ஸர்வகாரணமாய் பரனாய்
अव्ययम्—ஹேயமொன்றுமின்றி
मां—ஸர்வஸுலபனாய் அவதரித்துமுள்ள என்னை
ज्ञात्वा—இவ்வாறு அறிந்து
अनन्यमनसः—என்னைவிட்டு தரிக்கமாட்டாமல் வேறொன்றில் செல்லாத மனமுடையராய்
भजन्ते—உபாஸிக்கின்றனர்.

ஆஸுரராக்ஷஸ ப்ரக்ருதிகளே அதிகமாயிருக்கிறார்களானாலும் ஸாத்விக ப்ரக்ருதிகளும் உலகில் இருக்கின்றனர். அவர்களில் மஹாத்மாக்களாகச் சிலர் உண்டு. அவர்கள் என்னை நன்கு தெளிந்து என்னை விடாமல் நினைத்து மனம் தரித்து வருகின்றனர். (13)

பஜனத்தைக் கூறினார், அதன் முதிர்ச்சிக்கான மனோவாக்காய செயல்களை அறிவிக்கிறார்—

**सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः ।** See Nr P. 25-12-76/78

**नमस्यन्तश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥ १४ ॥**

*ஸததம் கீர்தயந்தோ மாம் யதந்தச்ச த்ருடவ்ரதா: |*
*நமஸ்யந்தச்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே || 14 ||*

नित्ययुक्ताः—எப்போதும் என்னைப் பெற்றிருக்க விரும்பினாராய்
भक्त्या—மிக்க அன்பினால் (கண்ணீர் பெருக, மயிர்சிலிர்க்க)
सततं मां—எப்போதும் என் விஷயமாய்
कीर्तयन्तः—நாராயணாதி நாம கீர்த்தனம் செய்கின்றாராய்
दृढव्रताः—என் பூசனை முதலானவற்றில் திடமான ஸங்கற்பமுடையராய்
यतन्तः—ஆராதனாதிகளான செயல்களில் முயன்றாராய்
नमस्यन्तः च—பக்தியின் முதிர்ச்சியால் இடம் எவ்வாறுளதென்பதையும் கவனிக்காமல் எங்கும் எல்லா விதமான நமஸ்காரமும் செய்கின்றாராய்
नित्यम् उपासते—எப்போதும் உபாஸித்து வருவர்.

ஸததம் என்ற சொல் எல்லா க்ரியைகளிலும் சேரும். (14)

உபாஸனத்திற்கு வேண்டுமான உபாஸிக்கப்படும் வஸ்துவின் அறிவையும் ஒரு யஜ்ஞமாக்கி அதன் சேர்த்தியும் உண்டென்பதை வெளியிடுகிறார், உபாஸனம் செய்யும் சிலர் போல் உபாஸனத்திற்கு முன்னாக இந்த ஞான யஜ்ஞம் செய்கின்றவர் சிலர் என்று கூறி—

**ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते ।** See Nr P. 27-12-78/81

**एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥ १५ ॥**

ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மாம் உபாஸதே |
ஏகத்வேந ப்ருதக்த்வேந பஹுதா விச்வதோமுகம் || 15 ||

अन्येऽपि—மற்றும் சிலர்
ज्ञानयज्ञेन च—ஞானமென்ற யஜ்ஞத்தினால்
मां यजन्तः—என்னை ஆராதிக்கின்றூராய்
बहुधा पृथक्त्वेन—பலவான பிரிவுற்று
विश्वतोमुखम्—எங்கும் முக்யமாய் நின்ற என்னை
एकत्वेन—எல்லாம் உடலாகக் கொண்ட ஒருவனுக
उपासते—உபாஸிக்கின்றனர்.

உபாஸனத்திற்குச் சொன்னதை ஜ்ஞானத்திற் சேர்க்க. ஆக—ஸமஷ்டியும் வ்யஷ்டியுமாயும் அவற்றினுட்பிரிவுகளாகியும் உலகில் எல்லாவற்றிலும் முக்யமாய் ஆத்மாவாயிருப்பவன் ஒருவன் என்ற அறிவே ஜ்ஞாநயஜ்ஞம். அதனை முன்னே பெற்று அவ்வாறே உபாஸிக்கின்றனர். கீழ்க் கூறிய கீர்த்தநாதி செயல்கள் போல் ஜ்ஞானமும் உபாஸனத்திற்கு வேண்டுவதொன்றுகையால் அந்த யஜ்ஞம் செய்கின்றனர் என்றபடி. (விச்வதோமுகம் மாம் என்று விசேஷண விசேஷ்யமாகச் சேருகிற படியால் ஒரே உபாஸனத்தில் பஹுத்வமும் ஏகத்வமும் விஷயமாகின்றதாகையால், 'ஏகத்வேந உபாஸிப்பவர் சிலர், ப்ருதக்காக உபாஸிப்பவர் மற்றும் சிலர், பஹுவாக உபாஸிப்பவர் வேறு சிலர்' என்று பிரிப்பது பொருந்தாது. விச்வதோமுகம் என்ற போதே ஒருவன் எனத் தெரிந்து விட்டதால் 'ஏகத்வேந' என்பது எதற்கென்னில், தானே வெகுவாகாமல் வெகுவானவற்றிற்கு விசேஷ்யமாயிருப்பதாலே இது நிரவயவமாயிருப்பதொன்றென்றறிவிப்பதிலே நோக்கென்னலாம். விச்வதோமுகமென்பதே போதுமாயிருக்க, पृथक्त्वेन बहुधा என்பதென் என்னில், விச்வமென்று இந்தக் கார்ய ப்ரபஞ்சத்தை மட்டும் கொள்ளாமல் காரணாவஸ்த்தை கார்யாவஸ்த்தை எல்லாம் கொள்வதென்பதற்காக. विश्वतश्चक्षुरुत विश्वतोमुखो विश्वतोबाहुरुत विश्वतस्पात् என்றாற் போலே கண் கால் முதலானவற்றைச் சொல்லாமையால் இங்கே முகம் என்பதற்கு முகமென்ற பொருள் வேண்டா. விச்வத்திற்கும் நியந்தாவாய் விச்வத்தை சரீரமாகவுடையவன் என்றதேயாம்.

பல உதாரணங்களைக் காட்டி விச்வ சரீரன் என்றதைத் தெளிவாக்குகிறார்—बहुधा என்று கீழ்க் கூறியதற்கு அதியஜ்ஞம் அத்யாத்மம் அதிபூதம் அதிதைவமென்றவாறும் மேலே விரித்துரையாம்—

अहं क्रतुरहं यज्ञः स्वधाऽहमहमौषधम् ।
मन्त्रोऽहमहमेवाज्यमहमग्निरहं हुतम् ॥ १६ ॥

அஹம் க்ரதுரஹம் யஜ்ஞ: ஸ்வதாऽஹம் அஹமௌஷதம் |
மந்த்ரோஹம் அஹமேவாஜ்யம் அஹமக்நிரஹம் ஹுதம் || 16 ||

| | |
|---|---|
| अहं क्रतुः-நான் ஜ்யோதிஷ்டோமாதி யாகம் | अहं मन्त्रः—யாகத்திற்கான மந்த்ரம் நான் |
| अहं यज्ञः-நான் மஹாயஜ்ஞும் | अहम् एव आज्यम्—நெய் முதலான த்ரவத்ரவ்யமும் நானே |
| अहं स्वधा—நான் பித்ருக்களுக்கான வஸ்து | अहम् अग्निः—வைதிகாக்னி நான் |
| अहम् औषधम्-நான் ஹவிஸ்ஸு. | अहं हुतम्—ஹோமமும் நான். |

யாகம் செய்வதற்கு முன், பிறவியிலிருந்து பெறுவதைச் சொல்லுகிறார்—

**पिताऽहमस्य जगतो माता धाता पितामहः ।**
**वेद्यं पवित्रमोंकारः ऋक्साम यजुरेव च ॥ १७ ॥**

See Wr 29-12-82/83

*பிதாऽஹம் அஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ: |*
*வேத்யம் பவித்ரம் ஓங்கார: ருக்ஸாம யஜுரேவ ச || 17 ||*

| | |
|---|---|
| अस्य जगतः-இவ்வுலகிலுள்ள ஒவ்வொன்றுக்குமான | अहम्-நான். |
| पिता-அந்தந்தத் தந்தையும் | वेद्यं-வேதமூலம் அறியதக்க |
| माता-அந்தந்தத் தாயும் | पवित्रं-புனிதமாக்கும் வஸ்துவும் ओंकारः |
| धाता-பிறவிக்குக் காரணமான வேறு சேதனனும் | अहम्-நான். |
| पितामहः-பாட்டனும் | ऋक्साम-ருக்வேதம் ஸாமவேதம் |
| | यजुः एव च-யஜுர்வேதமும் |
| | अहं-நானே. |

உலகில் அந்தந்த ஜந்துவுக்குப் பிறப்புக்குக் காரணமான தந்தையும் அன்னையும், அவர்கள் மூலம் பிறப்புக்கு மற்றும் உதவியானவரும், பாட்டனும் நான். அதாவது அவர்களுக்கெல்லாம் நான் அந்தர்யாமியாயிருந்து அந்தத் தன்மைகளைப் பெறுவித்தவன். பிறந்தவன் அறிய வேண்டும் புனிதமாக்கும் பொருளும், சொல்லில் முக்கியமான ஓங்காரமும், அதன் பொருளை விளக்கும் மூன்று வேதங்களும் நானே. (17)

நாஸ்திகர் உள்பட ஒவ்வொருவனுக்கும் பொதுவாக இருக்குமவற்றிற்குத் தான் அந்தர்யாமி என்கிறார்—

**गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।**
**प्रभवप्रलयस्थानं निधानं बीजमव्ययम् ॥ १८ ॥**

See Wr 25-12-83/84

*கதிர் பர்த்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் |*
*ப்ரபவப்ரளயஸ்த்தாநம் நிதாநம் பீஜம் அவ்யயம் || 18 ||*

गतिः-அடையவேண்டும் இடமும்
भर्ता-பரிக்கின்றவனும்
साक्षी-கண்டிருப்பவனும்
निवासः-வீடு முதலானவையும்
शरणम्-கதியற்றபோது உதவுமதுவும்
सुहृत्-நல்லது விரும்பும் மனமுடையனும்,
प्रभवप्रलयस्थानम्-பிறப்பிடமும் இறப்பிடமும்
निधानम्-உண்டாவதும் அழிவதும்
अव्ययं बीजम्-வீணாகாத வித்தும்
अहम्-நான்.

ஒருவனுக்குக் கதி முதலானவையாக வஸ்துக்கள் அமைவது நான் அங்கங்கு அந்தர்யாமியாயிருப்பதாலென்க.

அதிதைவமாக இருக்குமவற்றை உதாஹரிக்கிறார்—

तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।
अमृतञ्चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ १९ ॥

See Ni 2912-33,17

தபாம்யஹம் அஹம் வர்ஷம் நிக்ருண்ஹாம்யுத்ஸ்ருஜாமி ச |
அம்ருதஞ்சைவ ம்ருத்யுச்ச ஸதஸச்சாஹம் அர்ஜுந || 19 ||

अर्जुन अहं-அர்ஜுனா! நான்
तपामि-ஸூர்யன் முதலான சோதியாய் காய்கிறேன்.
अहं वर्षं-நானே மழையை
निगृह्णामि-கோடையில் அடக்குகிறேன்.
उत्सृजामि-மாரிகாலத்தில் விடுகிறேன்.
अमृतं च-ஜீவனத்திற்குக் காரணமும்
मृत्युः च-அழிவுக்குக் காரணமும் (சுருக்கமாகச் சொல்லில்)
सत्-தற்சமயம் இருக்கின்றதும்
असत्-எதிர்கழிகாலத்தியதும் எல்லாம்
अहम् एव-நானே.

இவ்வாறு நான்கு ச்லோகங்களால் விரித்தபடி வெகு விதமாயிருப்பவன் நானொருவன் என்ற இது போன்ற அறிவே ஜ்ஞான யஜ்ஞமாகும். அதனைக் கொண்டு என்னை உபாஸிப்பர் என்று கீழுடன் கூட்டுக. (19)

இப்படி உபாஸிப்பவருக்கு உள்ள விசேஷமொன்றைக் குறிக்கக் கருதி, முதலில் உபாஸிக்காதவருக்குள்ள குறையைக் காட்டுகிறார் இரண்டு ச்லோகங்களால்—

त्रैविद्या मां सोमपाः पूतपापा यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते ।
ते पुण्यमासाद्य सुरेन्द्रलोकमश्नन्ति दिव्यान् दिवि देवभोगान् ॥ २० ॥

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா:
யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே |
தே புண்யம் ஆஸாத்ய ஸுரேந்த்ரலோகம்
அச்நந்தி திவ்யாந் திவி தேவபோகாந் || 20 ||

त्रैविद्याः—மூன்று வேதம் அறிந்தவர் (ஹௌத்ரம், ஆத்வர்யவம் ஔத்காத்ரமெல்லாம் கண்டவர்)
सोमपाः—யாகம் செய்து ஸோம ரஸம் அருந்தி
पूतपापाः—சுவர்க்கம் பெறத்தடையான பாபம் விலக,
यज्ञैः इष्ट्वा—பல காம்ய யாகங்களால் ஆராதித்து
स्वर्गतिम्—சுவர்கம் பெறுவதை
प्रार्थयन्ते—வேண்டுகின்றனர்,

(அதன்படி)
ते पुण्यम्-அவர்கள் துக்கக் கலப்பற்ற
सुरेन्द्रलोकं—தேவேந்த்ர லோகத்தை
आसाद्य—அடைந்து
दिव्यान्—அவ்வுலகத்திலே பெறக் கூடிய
देवभोगान्—தேவர்கள் அனுபவிக்கும் வஸ்துக்களை
दिवि—அவ்வுலகில் இருந்து கொண்டு
अश्नन्ति—செவ்வனே அனுபவிக்கின்றனர்.

மூன்று வேதங்களும் ப்ரமாணமாகும். அவை, பௌத்த ஜைன வசனங்கள் போல் தவறானவையல்ல. நாஸ்திகர்கள் நம்மை ஏமாற்றிப் பல செயல்களை விதிக்கின்றனர். அவையெல்லாம் வீணே. பலனே யில்லை. வேதம் ஓதியது எல்லாம் உண்மை. தேவேந்த்ரலோகம் செல்லச் சில யாகங்களை ஓதுகின்றன. ஸோமயாகாதிகளான நித்ய கர்மானுஷ்டானம் செய்கின்றவராய் சுத்தமானவர்கள் மூன்று வேதங்களிற் சொன்ன ஹோதா, அத்வர்யு, உத்காதா போன்ற ருத்விக்குகள் செய்யுமவற்றை யறிந்து அவர்களைத் துணையாகக் கொண்டு புண்ய கர்மாக்களைச் செய்து தேவதைகளை ஆராதித்து அவர்கள்மூலம் (அதாவது அவர்கள் வாயிலாக என்மூலம்) சுவர்கம் பெற வேண்டி நிற்கின்றனர். அவ்வாறே அங்குச் சென்று எங்கும் பெறவரிய பெரும் போகங்களை அனுபவிக்கின்றனர். எல்லாம் உண்மை. ஆனல்—

**ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।**
**एवं त्रयीधर्ममनुप्रपन्नाः गतागतं कामकामाः लभन्ते ॥ २१ ॥**

தே தம் புக்த்வா ஸ்வர்கலோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி |
ஏவம் த்ரயீதர்மம் அநுப்ரபந்நா:
கதாகதம் காமகாமா: லபந்தே || 21 ||

ते—அங்குச் சென்ற அவர்கள்
तं विशालं—அந்த விஸ்தாரமான
स्वर्गलोकं—சுவர்க்கவுலகை
भुक्त्वा—அனுபவித்து
पुण्ये क्षीणे—அவ்வனுபவத்திற்கான புண்யம் போனவுடனே
मर्त्यलोकं—மனிதவுலகை
विशन्ति—புகுகின்றனர்.

एवं त्रयीधर्मम्—இவ்வாறு வேதாந்த ஜ்ஞானமின்றி வேத தர்மங்களை
अनुप्रपन्नाः—அனுஷ்டித்து வருமவர்கள்
कामकामाः—சுவர்காதி பலன்களை விரும்பின படியால்
गतागतं—போவது வருவதை
लभन्ते—பெறுகின்றனர்.

சுவர்கலோகம் ஸ்த்திரமன்றேயாகிலும் விசாலமானது. அனுபவிக்க வேண்டுமவை பல உள. ஆனால் அங்கே போகின்றவர்கள் புண்யத்தின் இருப்பளவே அனுபவிக்கக் கூடுமாகையால் அது தீர்ந்தவுடன் மரிக்குமவரின் உலகான பூமியிற் புகுகின்றனர். மீண்டும் அவ்வாறே பலனை விரும்பி வேதங்களில் ஓதிய காம்ய கர்மங்களைச் செய்து அங்கே போனாலும் திரும்புகின்றவர்களே. பலனுக்கு யோகம் உண்டு ; க்ஷேமமில்லை. சுவர்க்க பலன் அங்கே நிலைத்திருப்பவருக்கே சாச்வதமன்று. இங்கு நின்று சென்றவர்களுக்கு அங்கே நிலைக்க வழி ஏது? (இங்கே गतागतम् என்ற சொல் மேலே योगक्षेमम् என்பதற்கு எதிரானதென்று அறிக. இதனைக் கருதியே பாஷ்யகாரர் மேல் ச்லோகத்தில் யோகக்ஷேம பதத்திற்கு வேறு விதமாகப் பொருள் கொள்ளாமல் இதற்கு இணங்கப் பொருள் பணித்தனர்.

विशालेऽपि स्वर्गलोके यावत्संपातमेवोषित्वा पतित्वा पुनरपि कामकामा एव कर्माणि तथैव कुर्वाणाः पुनर्गता अप्यावर्तन्त एव । एवमेषां त्रैविद्यानां त्रय्यन्ताननुगामिनां गतिः । अत्र गतागत-पदेन पुनरावृत्तिमुक्त्वा उपरि, 'योगक्षेमं वहाम्यहम्' इत्युक्तत्वादपि तस्यार्थान्तरमविवक्षित्वा परमपदलाभापुनरावृत्तिपरतया भाष्ये व्याख्यानम्। तथाच कामकामानां कथञ्चित् योगसत्त्वेऽपि न क्षेमावकाश इति विवक्षितोऽर्थः । (21)

அற்ப பலன்களை ஆசைப்படுகின்றவர்களின் குறையைக் கூறி அதற்கு நேர்மாறாக மஹாத்மாக்களின் பேற்றின் பெருமையைப் பணிக்கிறார்—

अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते । ~N-139 -08 71
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ २२ ॥

அநந்யாச் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் || 22 ||

ये जनाः—ஜன்மஸாபல்யம் பெறும் யாவர்
अनन्याः—வேறு பலனை விரும்பாதாராய்
मां चिन्तयन्तः-எப்போதும் என்னையே பரிசீலனம் செய்துகொண்டு
पर्युपासते—பக்தியோக விதிகளில் வகுத்தபடி பூர்ணமாக உபாஸிக்கின்றனரோ,

नित्य-अभियुक्तानां—என்னைப் பூரணமாக எப்போதும் பெற்றிருக்க விரும்புகின்ற
तेषाम्—அவர்களுக்கு
योगक्षेमम्—என்னைப் பெறுதல் என்ற பேற்றையும் மீண்டும் திரும்பாதவாறு அதன் நிலைத்திருப்பையும்
अहं वहामि—நான் நடத்துகிறேன்,

கீழே காமகாமர்களுக்கு அப் பலன்களை அளிப்பவனும் இவனே யானாலும் தான் அளிப்பதாக இங்குக் கூறவில்லை. கர்மாவே அளிப்பதாகச் சிலர் நினைக்கின்றனர். வேறு தேவதைகளே அளிப் பதாக வேறு சிலர். அதனாலும், அதில் விருப்பம் இவனுக்கு இல்லை யாகையாலும் தான் அளிப்பதாகக் கூறவில்லை. மஹாத்மாக்களோ ஒரு நொடியும் இவனை விட்டு தரிக்கமாட்டமால் உபாஸிக்கும் முறைப் படி இவனையே எப்போதும் சிந்தனை செய்து கொண்டு வேறு இம்மை மறுமைப் பலன்களில் நோக்கின்றி, குடும்ப யோக க்ஷேமத் தைக் கூட சில ஸமயம் மறந்து பக்தியோகம் பூரணமாகும்படி உபா ஸிக்கின்றனர். அதற்கு இணங்கக் கூறுகிறான்—அவர்களுக்கு நான் அளிக்கும் பலன் மோக்ஷமே. நித்யமாய்ச் சேர்ந்திருக்கையை யல்லவோ அவர் விரும்பிகின்றனர். ஆகையால் புநராவ்ருத்தி இல்லாதபடி அங்கே நிறுத்திக் கொள்கிறேன். இது என் உலகு பெற்றவர்களின் நிலையென்ற படி. (शरीरारोग्यमर्थांश्च भोगांश्चैवानुषङ्गिकान् । ददाति ध्यायिनां पुंसामपवर्गप्रदो हरिः என்ற படி பரமைகாந்திகளுக்கு எல்லா நன்மைகளையும் எம்பெருமான் தானே செய்வது உண்டு. அதை இந்த ச்லோகத்தின் முக்கியப் பொருளாக பாஷ்யகாரர் கொள்ளவில்லை. அது முக்கியமில்லையே. நித்யயோகம் விரும்பினவர்களுக்கு அதை விட்டு இவ்வுலக யோக க்ஷேமத்தைச் சொல் வது பொருந்தாது. அவர்களுக்கு அது விஷயத்தை யறிய நோக்கில்லை யே கீழ் ஸந்தர்ப்பத்திற்கும் அது சேராது, இவ்வுலகப் பலனும் சாச்வத மன்றாகையால் அதைக் கொண்டு காமகாமிகளுக்கும் இவர்களுக்கும் வாசி சொன்னதாகாது. பரமபதம் பெறுவித்து நிலைக்கச் செய்கிறே னென்று சொன்னதனின்றே. அதற்குத் தடையிராதபடி இவ்வுலகில் என்னென்ன வேண்டுமோ அதையும் நானே நடத்தி வைக்கிறேன் அவர்களை நான் மோக்ஷத்திற்கு வரித்திருப்பதாலென்று குறித்ததாகும். அதனால் அதைப் பிரித்துச் சொல்ல வேண்டா எனவும் தெளிக) (22)

மஹாத்மாக்கள் மோக்ஷம் பெற்று நிலைப்பதற்காக எல்லாப் பாடும் படும் நீர், தேவதாந்தரங்களை ஆராதிப்பவர்களிடமும் கருணை கூர்ந்து மோக்ஷமளிக்கலாகாதோ. அவர்கள் அறியாமலிருந்தாலும் உண்மை யில் அந்தக் கர்மாக்கள் உமது ஆராதனம் தானே என்ன, உத்தரம் அருளிச் செய்கிறார்—

**ये त्वन्यदेवताभक्ताः यजन्ते श्रद्धयाऽन्विताः ।**
**तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥ २३ ॥**

*யே த்வந்யதேவதாபக்தா: யஜந்தே ச்ரத்தயாऽந்விதா: |*
*தேऽபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம் || 23 ||*

ये तु—கீழ்க் கூறியவர் போலல்லாத எவர்கள் अन्यदेवताभक्ताः—வேறு தேவதைகளிடத்தில் பக்தியுடன் श्रद्धया अन्विताः—சாஸ்த்ர நம்பிக்கையால் விரைவுடன்

यजन्ते—அவர்களை ஆராதிக்கின்றனரோ,
ते अपि—அவர்களும்
कौन्तेय—அர்ஜுனா
माम् एव—என்னையே
यजन्ति—ஆராதிக்கின்றனரென்பது உண்மை (ஆனால்)
अविधिपूर्वकम्—வேத விதியை முன்னிடாமல், அவ்வறிவில்லாமல்.

'வேறு தேவதைகளை ஆராதித்தால் அந்த கர்மாக்கள் அவர்கள் மூலம் பலனை அளிக்கின்றன என்பது, உண்மையில் அவை எனது ஆராதனமாகிறபடியால்' என்கிறது வேதம். இதையறியாமல் அவர்களை ஆராதிக்கின்றனர். நான் அவர்களுக்கு ஆத்மாவாகையால் எனது ஆராதானமாகவே அவையாமாறுலும் அவர்கள் அவ்வாறு அறியவில்லையே. (அவர்கள் இந்த்ராதிகளையும் ஆராதிக்கிற போது मामेव என்ற ஏவகாரம் கூடுமோ என்னில், मां यजन्त्येव என்னை ஆராதிக்காமலில்லை யென்னலாம். அல்லது நானே ஆராதனத்திற்கு முடிவெல்லையாகிறேன் என்றதாம். வேறு தேவதைகள்மூலம் வரும் பலனும் என்னால் வருகிறதென்பதை யறிந்தால் தானே அருள் புரியும் என்னையே, அவர்களை விட்டு, ஆராதித்து நல்ல பலன் பெறலாமென்று தோன்றும்.) (23)

அவர்களுடைய ஆராதனம் உமது ஆராதனமாவதெங்ஙனே. விதிப்படி யில்லையாகில் அவர்கள் வேண்டின பலன் தான் எவ்வாறு வரும் என்னில், கூறுகிறார்—

अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च । See Nr p. 3c-1-72/74

न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥ २४ ॥

அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச |
ந து மாம் அபிஜாநந்தி தத்வேநாதச் ச்யவந்தி தே || 24 ||

अहं एव हि—நான் தானே
सर्वयज्ञानां—எந்த கர்மாக்களுக்கும்
भोक्ता च—ஆராத்யனும்-ப்ரீதியடைகின்றவனும்
प्रभुः च—பலனை அளிப்பவனும் ஆகிறேன்.
मां तत्त्वेन—என்னை இவ்வாறு உள்ளபடி
न तु अभिजानन्ति—அறிகிறார்களல்லர்.
अतः ते—ஆகையால் அவர்கள்
च्यवन्ति—அற்ப பலனைப் பெற்று விழுகிறார்கள்.

7-21 'யோ யோ யாம் யாம்' என்று கீழ்க் கூறியதை நினைக்க. என்னை யறிந்திருந்தால் எனக்காக அந்த யஜ்ஞங்களை எப்படி செய்ய வேண்டுமோ அப்படி செய்வார்கள். அறியாமையால் வேறு பலனே அவர்களுக்கு வேண்டியதாகிறது. அதனால் அப்பலனின்று நழுவும் ஸமயத்தில் நழுவாமலிருக்கமாட்டிலர். வேறு பலனுக்கல்லாமல் எனது ஆராதனமாகவே யஜ்ஞங்கள் ஏற்பட்டிருப்பன என்றறிந்து அதன்படி செய்தால் அந்த யஜ்ஞங்களை நானே உண்பேன். நானே தக்க பயன் அளிப்பேன்.

अन्यदेवतोद्देशेन करणेऽप्यहं भोक्ता फलप्रदश्चेत्यर्थः । भोक्तृत्वं देवतान्तरकृतहविस्स्वीकारजनिततृप्तिमत्त्वम् । यद्वा काम्यविधिहविषामपि फलाभिसंधिं विनाऽनुष्ठाने अहमेव भोक्ता, मदर्थमेव यजनात् । अयमेव यथावस्थितविधिः । तथाऽनुष्ठाने तदुचितं भक्तिनिष्पत्त्यादि च फलं ददामीत्यर्थः । 4.

அறியாமையாலென்கிறீரே. நீர் ஆராதிக்கப்படுகிறவர் என்று அறிந்தே வேறு தேவதையைக் குறித்துச் செய்து பலன் வேண்டினால் நீரே கிருபை கூர்ந்து மோக்ஷம் அளிப்பீரோ என்ன அருளிச் செய்கிறார்–

**यान्ति देवव्रता देवान् पितॄन् यान्ति पितृव्रताः ।** See Nr P 30-1-74/75

**भूतानि यान्ति भूतेज्याः यान्ति मद्याजिनोऽपि माम् ॥ २५ ॥**

*யாந்தி தேவவ்ரதா தேவாந் பித்ரூந் யாந்தி பித்ருவ்ரதா: |*

*பூதாநி யாந்தி பூதேஜ்யா: யாந்தி மத்யாஜிநோऽபி மாம் || 25 ||*

देवव्रताः—தேவதைகளைக் குறித்து ஸங்கல்ப்பம் செய்து ஆராதிப்பவர்
देवान् यान्ति—தேவதைகளை அடைவர்.
पितृव्रताः—பித்ருக்களைக் குறித்து ஸங்கல்ப்பித்துச் செய்பவர்
पितॄन् यान्ति—பித்ருக்களைப் பெறுவர்.
भूतेज्याः—யக்ஷராக்ஷஸபிசாசாதிகளைக் குறித்துச் செய்பவர்
भूतानि यान्ति—அவர்களைப் பெறுவர்.
मद्याजिनः अपि—என்னைக் குறித்துச் செய்பவரும்
मां यान्ति—என்னைப் பெறுவர்.

யாரைக் குறித்து ஆராதனம் செய்கின்றனரோ, அவர்களைப் பெற்று அவர்கள் அளிக்கும் பலனையே பெறுவாராகையால், என்னைப் பெற்றுப் பலன் கொள்வதும் என்னைக் குறித்து ஆராதனம் செய்த போதேயாம். (मद्याजिनोऽपि என்கிற அபிசப்தம் முன் சொன்னவர்களோடு இவர்களுக்கு ஒத்துமையைக் காட்டும், ஆராதிக்கப்பட்டவரிடம் பலன் பெறல் என்பது எல்லோருக்கும் ஒக்கும். பெறும் பேற்றிலுள்ளவாசியை நன்கு உணர்ந்தால் தேவபித்ருபூதங்களுக்காகச் செய்யும் செயல்களையே எனக்கே ஆராதனமாகச் செய்வர்.)

அவரவர்களுக்கான செயல்களை எனக்காகச் செய்வது நிற்க. நேராக எனது ஆராதனமே நேர்த்தியாகும் எனது மூர்த்தியாராதனத்தில் மற்றொரு சிறப்பும் உண்டு. அப்போது உபாயமும் இலகுவாகுமே. ஏனெனில்—

**पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।** See Nr P 30-1-75/77

**तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः ॥ २६ ॥**

*பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி |*

*ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந: || 26 ||*

(எல்லோரும் பெறவான)
पत्रं—துளஸீதளம் போன்றதை
पुष्पं—பூவகையை
फलम्—ஏதேனும் கனியை
तोयम्—(ஒன்றுமில்லையாகில்) தீர்த்தத்தை மட்டும்

cf (1) अण्वप्युपहृतं भक्तैः प्रेम्णा भूर्येव मे भवेत् । भूर्यप्यभक्तोपहृतं न मे तोषाय कल्पते ॥
(2) अन्यपूर्णादपां कुम्भादन्यत्पादावनेजनात् । अन्यत्कुशलसंप्रश्नान्न चेच्छति जनार्दनः ॥
(3) याः क्रियास्संप्रयुक्तास्स्युरेकान्तगतबुद्धिभिः । तास्सर्वाः शिरसा देवः प्रतिगृह्णाति वै ॥

य: मे—எவன் எனக்கு
भक्त्या प्रयच्छति—அன்புடன் ஸமர்ப்பிக்கிறானோ,
प्रयत आत्मनः—தூய மனமுடைய அவனது
भक्त्युपहृतं—பக்தியுடன் ஸமர்ப்பிக்கப் பெற்ற
तत्—அந்த இலை பூ முதலானவற்றை
अहं अश्नामि—நான் நேர்த்தியான நைவேத்யம் போல் கொண்டு உண்கிறேன்.

துளஸீதளம் முதலானவற்றைப் பெற அதிக ப்ரயாசையோ பணமோ வேண்டா. தனது தோட்டத்தில் அல்லது பொதுவான இடத்தில் அவற்றைப் பெறலாம். தீர்த்தம் மிகவும் ஸுலபமானது. அது எல்லாவற்றிற்குமாகும். வேறொன்றும் ஸமர்ப்பிக்கமாட்டிலனே என்று வருந்தி அர்ப்பணம் செய்தால், இவன் மனம் சுத்தம், இவன் வெறுமனே இருக்க மனம் தாங்காமல் இது சொற்பமான வஸ்துவாயிற்றே என்று நொந்து அன்பின் பிரேரணையால் அர்ப்பணம் செய்கிறான் என்று கண்டு பலவித பக்ஷ்ய போஜ்யங்களை உண்பதுபோல் களிப்புடன் கொள்கிறேன். அவை அற்பமானவையென்பதற்காகப் பலனில் குறைவு சிறிதுமில்லை. இந்த ச்லோகம் அர்ச்சாமூர்த்திபூஜையிலே ஸ்வரஸம்.

இவ்வளவு வாசியை யறிந்த நீ லௌகிகமோ வைதிகமோ எதைச் செய்வதானாலும், எனக்கென்றே அர்ப்பணம் செய்து அனுஷ்டிப்பாயாக என்று ஸாரமாக உபதேசிக்கிறார்—

> यत् करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
> यत् तपस्यसि कौन्तेय तत् कुरुष्व मदर्पणम् ॥ २७ ॥

> யத் கரோஷி யதச்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் |
> யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மதர்ப்பணம் || 27 ||

यत् करोषि—தேஹயாத்ரைக்காக என்ன கார்யம் செய்கிறாயோ,
यत् अश्नासि—உண்கை யாதோ,
यत् जुहोषि—ஹோமம் எதோ,
यत् ददासि—கொடை எதுவோ,
यत् तपस्यसि-தவம் எதோ நீ செய்வது,
कौन्तेय—அர்ஜுனா
मदर्पणम्—எனக்கென்றே அர்ப்பணம் செய்து
तत्—அதையெல்லாம்
कुरुष्व—செய்வாயாக.

எனக்கே அர்ப்பணமாவது—செய்கின்றவனும் பலன் அனுபவிப்பவனும் ஆராதிப்பவனுமான நீ என்ன, ஆராதிக்கப்படும் வேறு தேவதையென்ன, ஆராதனமாயிருக்கும் க்ரியையென்ன, எல்லாவற்றையும் எனக்கு ஸமர்ப்பிப்பது, அதாவது செய்கிற நானும் மற்ற தேவதையும் க்ரியையும் அவனுக்கே சேஷபூதம், தனக்காகவே என்னைக் கொண்டு இவ்வாறு செய்து கொள்கிறான். இச் செயல் அவனதே என்று தெளிவதாம்.

இந்த த்யாக புத்திக்குப் பலனை அருளிச் செய்கிறார்—

शुभाशुभफलैरेवं मोक्ष्यसे कर्मबन्धनैः ।
संन्यासयोगयुक्तात्मा विमुक्तो मामुपैष्यसि ॥ २८ ॥

சுபாசுபபலைரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தனை: |
ஸந்ந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோ மாம் உபைஷ்யஸி || 28 ||

एवं—முன் ச்லோகத்திற் சொல்லிய வாறு
संन्यासयोग युक्तात्मा—த்யாகமென்கிற உபாயத்துடன் கூடிய மனம் உடையனாய்
शुभ अशुभ फलैः—நன்மை தீமை என்ற பலன் தரும்
कर्मबन्धनैः—ஸம்ஸாரபந்தம் செய்யும் புண்ய பாப வினைகளால்
मोक्ष्यसे—விடப்படுவாய்.
विमुक्तः—அவற்றால் விடப்பட்டு
मां उपैष्यसि—என்னை அடைவாய்.

பத்ரம் புஷ்பம் என்ற ச்லோகத்தினால் தனது ஸௌலப்யத்தை வெளியிட்டார். அதற்கு வேண்டும் த்யாகம் எல்லாச் செயலிலுமென்றார் மேலே. அதனால் வரும் பெரும் பலனை மேலே பணித்தார். இனி, எனக்கு ஆச்ரயிப்பவனின் ஜாதி குணம் தொழில் இவற்றிலுள்ள ஏற்றத்தாழ்வில் நோக்கில்லை, கீழ்க் கூறிய பக்தி இருந்தால் கலந்து பரிமாறுகிறேனென்று ஸௌசீல்யத்தை வெளியிடுகிறார்—

समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।
ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥ २९ ॥

ஸமோऽஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய: |
யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம் || 29 ||

सर्वभूतेषु—எல்லா ப்ராணிகளிடத்திலும்
अहं समः—நான் ஸமமாயிருக்கிறேன்.
मे द्वेष्यः—எனக்கு த்வேஷிக்கத் தக்கவன்
न अस्ति—(யாரும்) இல்லை.
न मे प्रियः—ஒருவன் எனக்கு ப்ரியன் என்பது மில்லை.
तु—ஆயினும்
ये माम्—எவர்கள் என்னை
भक्त्या भजन्ति—அன்புடன் அண்டுகின்றனரோ,
मयि ते—என்னிடத்தில் அவர்கள்.
तेषु च—அவர்களிடத்தில்
अहमपि—இப்படிப்பட்ட நானும்.

ஜாதி குணம் தொழில் இவற்றில் ஏற்றத்தாழ்வை நோக்குவதில்லையாலும், அந்தந்த ஜாதிக்குத் தகுந்த ஆசாரம் சாஸ்திரத்தில் ஓதியது வேண்டுமேயென்ன, அதற்கு மறுமாற்றம்—

अपि चेत् सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥ ३० ॥

*அபி சேத் ஸு துராசாரோ பஜதே மாம் அநந்யபாக் |*
*ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: || 30 ||*

सुदुराचार: अपि—மிக்க ஆசாரக்கேடு உடையனுயினும்
अनन्यभाक्—வேறு பலனைப் பெறுத வனுகி
मां भजते चेत्—என்னை பஜனம் செய்கிறுனுகில்.
स:—அவன்
साधु: एव—சிறந்த வைஷ்ணவனே.
मन्तव्य:—வெகுமதிக்கத் தக்கவனு மாகிறுன்.
स:—அவன்
सम्यक्व्यवसितो हि—நானே எல்லாம் என்கிற நல்ல வ்யவஸாயம் உடையனுகிறுனே.

ஆசாரமாவது விதித்ததைச் செய்வதும் விடவேண்டியதைச் செய்யாமையும். ஒன்றில்லையாகில் துராசாரன். இரண்டுமில்லையாகில் ஸுதுராசாரன். இந் நிலை தகாது. ஆயினும் வேறு பலனில் நோக்கின்றி என்னை பஜனம் செய்வானுகில் அவன் சிறந்த வைஷ்ணவனே. துராசாரன் என்கிற தோஷத்தை தூரத் தள்ளி வெகுமதிக்கவேண்டும். (உலகில் ஆசாரம் உள்ளவர் ஆயிரக்கணக்காயிருப்பர். 'வாஸுதேவ: ஸர்வம்' என்ற வியவஸாயம் உள்ளவனைப் பெறல் அரிதாம்.)

ஆனுல் ஆசாரக் குறைவினுல் பஜனம் குன்றுமே அவன் எங்ஙனே பலன் பெறுவானென்னில்—

क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छान्तिं निगच्छति ।
कौन्तेय प्रतिजानीहि न मे भक्त: प्रणश्यति ॥ ३१ ॥

See Mr. 8.30.2 - 105|107

*க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சச்வத் சாந்திம் நிகச்சதி |*
*கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே பக்த: ப்ரணச்யதி || 31 ||*

क्षिप्रं—விரைவிலே பஜன ப்ரபாவத்தினுலே பாபம் விலக
धर्मात्मा भवति—ஆசாரத்துடன் சேர்ந்த பஜனத்திலே மனம் உடையனுகிறுன்.
शश्वत्—நிலையான
शान्तिम्—துராசார நிவ்ருத்தியை
निगच्छति—நன்கு பெறுகிறுன்.
कौन्तेय—குந்தி புத்ரனே !
प्रतिजानीहि—எனது உறுதி இதென்பதற்கு நீயே ப்ரதிஜ்ஞை செய்யலாம். (ஐயத்திற்கு இடமில்லை)
என்ன உறுதி யென்னில்—
मे भक्त:—எனது பக்தன் எவ்வாறுயினும்
न प्रणश्यति—அழிவதில்லை யென்பதே.

பஜனம் கெடும் என்பதில்லை. உள்ள பஜனம் மேன்மேல் பஜனத்தை வளர்க்கும். துராசாரம் நீங்கி நிலைத்து ஸதாசாரம் பெறுவான். क्षिप्रम् என்பதால் சிறிது தாமதம் உண்டென்றதாம். ஆகவே, நநச்யதி என்னுமே 'ந ப்ரணச்யதி' என்றது. நான் ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன் என்னுமல் நீ ப்ரதிஜ்ஞை பண்ணலாம் என்றது, அருகில் அந்தரங்கமாயிருப்பவர் ஸந்தேஹப்படாதபடி தன் மனவுறுதியுள்ளதென்பதற்காக.

பாராவது ஸந்தேஹப்பட்டால் என்னைப் கேட்காமலே நீ உறுதியாகச் சொல்லலாமென்றபடி (மற்றொரு கருத்தும் கூறி ரஸிப்பர்—அதாவது, நீ ப்ரதிஜ்ஞை செய் என்கிறார். தான் ப்ரதிஜ்ஞை செய்ய இஷ்டப்படாமல், ஏன் இஷ்டப்படவில்லை யென்னில், பகவான் பக்தர்கள் ப்ரதிஜ்ஞை நிறைவேற்றுவதற்காகத் தன் ப்ரதிஜ்ஞையைக் கூட விடுவதுண்டு. பீஷ்மரின் ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுவதற்காகத் தன் ப்ரதிஜ்ஞையை விட்டு, பாரதப் போரில் சக்ரம் சுழற்றினாரே; தேரினின்று குதித்தாரே. 'स्वनिगममपहाय मत्प्रतिज्ञां ऋतमधिकर्तुमवप्लुतो रथस्थः' என்றார் பீஷ்மர் ஸ்ரீபாகவதத்தில். ஆகையால் பக்தனை நீ ப்ரதிஜ்ஞை செய்தாயாகில் உன் ப்ரதிஜ்ஞையைக் காப்பதற்காக பக்தனை அழியாமற் பார்ப்பேன் என்றதாம். 'ப்ரதிஜாநீஹி' என்பதற்கு நினைத்துக் கொள் என்ற பொருளைக் கொள்ளாமல் ப்ரதிஜ்ஞை செய் என்ற பொருளைக் கொள்வது அர்த்த புஷ்டிக்காக என்க. (31)

ஜாதி முதலானவற்றில் குறைவு, ஆசாரத்தில் குறைவு என்று சொன்னார். எல்லாம் சேர்ந்தாலும் தன்னை பஜனம் செய்தால் பெரும் பேறு பெறுவரென்கிறார்—

मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥ ३२ ॥

மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்ய யேऽபி ஸ்யு: பாபயோநய: |
ஸ்த்ரியோ வைச்யாஸ்ததா சூத்ரா: தேऽபி யாந்தி பராம் கதிம் || 32 ||

स्त्रियः–ஸ்த்ரீகளும்
वैश्याः–வைச்யரும்
तथा शूद्राः–சூத்ரர்களுமாக
ये अपि–எவர்களும்
पापयोनयः स्युः–பாபப்பிறவியுடையரோ
ते अपि–அவர்களும்
पार्थ–குந்தீபுத்ரா!
मां व्यपाश्रित्य–என்னைச் சரணடைந்து
परां गतिम्–உயர்ந்த கதியை
यान्ति हि–பெறுகிறார்களே.

முதற்பாதத்தை நாலாம் பாதத்தோடு சேர்த்துப் பொருள் கொள்க. இல்லையேல் தவறாகும்.

பொதுவாக ஸ்த்ரீகளை பாபயோநி என்றது வேதம் ஓத அதிகாரமில்லையாகையால் அது மூலமான ஜ்ஞானக் குறைவினால். சூத்ரர்களையும் இக்கருத்தினாலேயே இவ்வாறு கூறியது. வேதம் ஓதாவிடினும் அவர்கள் பகவானை ஆச்ரயிப்பது வேறு பல க்ரந்தங்கள் மூலமாக அவனைத் தெளியலாமாகையால். வைச்ய ஜாதிக்கு வேதாத்யயனம் உண்டே; அவனை ஏன் பாபயோநி என்றாரென்னில். அவர் அனுபவித்த வரையில் கோகுலத்தில் கறவைகள் பின் சென்று கானமசேர்ந்து உண்பாரானரே. வேதமென்பதே தெரியாதவராகவே காண்கின்றனர் வைச்யர் என்ற நோக்கினால். வேதங்களிலும் அந்தணருக்கும் அரசருக்குமே வித்யை

எங்கும் கூறப்படுகிறதும் அதனால்தான்.. மேலும் ஸத்ரமென்கிற யாகத்தில் வைச்யனுக்கு அதிகாரமில்லை, க்ஷத்ரியனும் வாஜபேயயாகம் செய்தானாகில் ருத்விக்காகலாம் ஸத்ராதிகாரியாகலாம். பகவானை ஆச்ரயிக்கும்படி தெளிவுறும் பிறவி எதுவானாலும் ச்ரேஷ்டமே. அப்படியிருக்க, பாபயோநி என்றது ப்ராஹ்மண க்ஷத்ரியர்களுக்கு உள்ள மேன்மையளவு மேன்மையில்லையாகையாலென்க. புருஷர்கள் செய்யும் தர்மம் அவர்கள் பத்னிகளையும் காக்குமென்பது இருவரும் சேர்ந்துச் செய்யும் யாகத்தில் மட்டுமே. ஸ்வர்கலோகம் இருவரும் சேர்ந்து போகலாம். பக்தியோகம் பர்த்தா செய்வதால் பத்னி மோக்ஷம் பெறுள். ஆகையால் ஸ்த்ரீகள் தனியே அதற்கு உபாயம் தேட வேண்டுமென்பதற்காகவும் 'ஸ்த்ரிய.' என்று அந்தண ஸ்த்ரீகளையும் குறித்தாரெனவும் தெளிக. வைச்ய சூத்ர ஸ்த்ரீகளை வைச்ய சூத்ர பதங்களே சொல்லும். (32)

यागादिषु दम्पत्योः सहाधिकारात् यजमानवत् पत्न्यपि स्वर्गादिकं लभते। अत एवानुगमनमपि प्रागनुशिष्टम्। भक्तियोगस्तु पुरुषेण क्रियमाणो न पत्न्या मोक्षहेतुर्भवति। अतो विप्रपत्न्यादिभिरपि मोक्षार्थं पृथगुपायोऽनुष्ठेय इति ज्ञापयितुं स्त्रिय इति ग्रहणम्। वैश्यशूद्रस्त्रीणां वैश्यादिपदेनैव सुग्रहत्वात्।

**किं पुनः ब्राह्मणा पुण्या भक्ता राजर्षयस्तथा ।**
**अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥ ३३ ॥**

கிம் புநர் ப்ராஹ்மணா: புண்யா: பக்தா ராஜர்ஷயஸ்த்ததா |
அநித்யம் அஸுகம் லோகம் இமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் || 33 ||

पुण्यः–புண்யப் பிறவியுடையவராய்
भक्ताः–பக்தர்களுமான
ब्राह्मणाः–அந்தணர்களும்
तथा राजर्षयः–ராஜர்ஷிகளும்
किं पुनः–ஏன் பெறமாட்டிலர்?
ஐயமேது?
ஆகையால் ராஜரிஷியான நீ
अनित्यम्–அழிவுள்ளதும்
असुखम्–துக்கமாயுமுள்ள
इमं लोकम्–இவ்வுலகை
प्राप्य–அடைந்திருப்பவன்.
मां भजस्व–என்னை பஜனம் செய்.

प्राप्य என்கிற சொல்லின் மேல் स्थितः என்ற சொல் ஒன்றைச் சேர்த்துக் கொண்டு பொருள் உரைக்க வேண்டும். இல்லையேல் இணையாது. (33)

என்னை ஆச்ரயித்தவர்களே மோக்ஷம் பெறும் போது பக்தர்களுக்கு மோக்ஷத்தில் ஐயமேதென்றார். அந்த பக்தியாவதென்ன என்பதை முடிவில் விரித்துரைத்து அர்ஜுனனை அதில் ஏவுகிறார்—

**मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।**
**मामेवैष्यसि युक्त्वैवमात्मानं मत्परायणः ॥ ३४ ॥**

மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு |
மாமேவைஷ்யஸி யுக்த்வைவம் ஆத்மாநம் மத்பராயண: || 34 ||

मद्भक्तः—என்னிடம் அன்பு உடையனாய்

मन्मनाः भव—என்னிடம் இடைவிடாது செலுத்திய மனம் உடையனாயிரு.

மனம் செலுத்துவது எந்த அளவில் என்னில்

मद्याजी—எனக்கு எல்லா உபகாரங்களையும் ஸமர்ப்பித்து ஆனந்தமாய் ஆராதிப்பவனாகி

मां नमस्कुरु—அந்த அனுபவத்தின் மேலீடாக என்னைப் பலவிதமாக நமஸ்காரம் பண்ணபடியிருப்பாய்.

एवम्—இப்படி ஆராதனம் நமஸ்காரம் லௌகிகவைதிக கார்யங்கள் ஸங்கீர்த்தனம் எல்லாம் அனுபவத்தினால் வளரும்படி

आत्मानं युक्त्वा—மனத்தைச் செலுத்தி

मत्परायणः—என்னை முழுப்ராப்யமாக உடையனாய்

माम् एव—என்னையே

एष्यसि—அடையப் போகிறாய்.

கீழ்க் கூறியவாறு ஸர்வேச்வரனாய் குற்றமற்று குணம் நிறைந்து எல்லா வுலகுக்கும் காரணமாய் அற்புத திவ்யமங்களவிக்ரஹமும் உடையனான என்னிடத்தில் அன்புடன் இடைவிடாமல் த்யானம் செய்து வா. அவ்வனுபவம் மேலிட்டு எனக்கு எல்லா உபசாரங்களைச் செய்து மிக்க சிநேகத்துடன் ஆராதனம் விரிவாகச் செய்யுமளவுக்கும், என்ன நான் செய்தேன் ஒன்றுமில்லையே என்று வருந்தி விழுந்தெழுந்த வண்ணம் நமஸ்காரங்கள் மேன்மேல் வளருமளவுக்கும் அவ்வனுபவம் ஓங்கவேண்டும். எந்த லௌகிக வைதிக கார்யங்களும் இவ்வனுபவத்துடன் சேர்ந்தே யிருக்கவேண்டும். என்னைத் தவிர்த்து வேறு பலனை வேண்டாமல் இந்த த்யானத்தை நடத்தி வரவேண்டும். அப்போது நீ என்னைப் பெறுவது திண்ணமென்றபடி. (34)

ஒன்பதாம் அத்தியாயம் முற்றும்.

Nr P. 31-3

## பத்தாம் அத்தியாயம்—

ஒன்பதாம் அத்தியாயத்தில் பக்தியோகம் விரித்துரைக்கப் பெற்றது. அதனுள் த்யானம், கீர்த்தனம், அர்ச்சனம், நமஸ்காரம் எல்லாம் அடங்கி யிருப்பதை விளக்கினரே. இனி அந்த பக்தி உண்டாவதும் வளர்வதும், பகவானின் அளவற்ற கல்யாண குணங்களையும் உலகெல்லாம் எவ்விதத்திலும் அவனுக்கே அதீனமென்பதையும் விரிவாக அறிவதாலாமென்று அவ்விஷயம் இங்கே கூறப்படும்.

श्रीभगवान् उवाच—பகவான் சொன்னார்—

भूय एव महाबाहो शृणु मे परमं वचः ।
यत् तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया ॥ १ ॥

See Nr P 30-4-66/67

பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு மே பரமம் வச: |
யத் தே(அ)ஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா || 1 ||

महाबाहो—திரண்ட புஜமுடையவனே!
प्रीयमाणाय ते—எனது மான்மியத்தைக் கேட்டுக் களித்திருக்கும் உனக்கு
हितकाम्यया—பக்தி உண்டாவதையும் வளர்வதையும் விரும்பி
यत् अहं—எதை நான்
वक्ष्यामि—சொல்லப்போகிறேனோ, அந்த
भूयः एव—விரிவான–கல்யாண குணங்கள் விபூதி என்ற விஷயமேயான
परमं—சிறந்ததான
मे वचः—எனது வார்த்தையை
शृणु—கேட்பாயாக.

என்னுடைய பெருமையை நானே சொல்லும்போது அஸூயையயின்றி நம்பி யுணர்ந்து ப்ரீதியுற்றிருக்கிறாய் நீ. அதனால் உனக்கு உபதேசம் செய்த பக்தி விஷயமாக அதன் உற்பத்தி வளம் இரண்டுக்கும் காரணமான சில அம்சங்களை விரிவாகச் சொல்லப் போகிறேன். அதை என்னிடமே கேட்பாயாக. (1)

உனக்கு என்னிடம் உள்ள ப்ரீதியை நான் அறிந்தாற் போல் மற்ற பேர் அறியார். அதனால் பிறர்க்கு என்னைப் போல் அன்பு உன்னிடம் இராது. அதனால் என்னிடமே கேட்பது தகும். இது நிற்க. என் குணமும் விபூதியும் பூர்ணமாக அறிந்தவர்தாம் யார் உண்டு. அதனாலும் என்னிடமே கேள் என்கிறார்—

न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां महर्षीणाञ्च सर्वशः ॥ २ ॥

See Nr 1/30-4-67/68

ந மே விது: ஸுரகணா: ப்ரபவம் ந மஹர்ஷய: |
அஹமாதிர் ஹி தேவாநாம் மஹர்ஷீணாஞ்ச ஸர்வச: || 2 ||

सुरगणाः—தேவத்திரள்களும்
महर्षयः—மஹர்ஷிகளும்
मे प्रभवं—எனது ப்ரபாவத்தை
न विदुः—அறியார்.
देवानां—தேவர்களுக்கும்
महर्षीणां च—மஹர்ஷிகளுக்கும்
सर्वशः—முழு விஷயத்திலும்
अहं हि—நான் தானே
आदिः—காரணமாகிறேன்.

தேவதைகளும மஹர்ஷிகளும் என் மேன்மையை நன்கறியாரென்பது நிச்சயம். நான் தானே அவர்களின் உற்பத்தி, அறிவு, சக்தி எல்லாவற்றிற்கும காரணமானவன். तेषाम् என்றுமே மீண்டும் देवानां महर्षीणाञ्च என்றது, அவர்கள் தேவ மஹர்ஷிகளாகைக்கு என்ன வேண்டுமோ அவ்வளவும நான்தானே அளித்திருக்கிறேன். ஆகையால் அவர்கள் என் விஷயம முழுமையும் அறியார் என்று உணர்த்தவாம்.

அவர்களே இவ்வாறானபோது மனிதன் அறிவது ஏது என்ன வேண்டா. எனது முழு மஹிமையை எல்லாம் அறிந்த நானும் சொல்லவில்லேன். முக்கியமாய் அறிய வேண்டுவது என்னவெனில்—

**यो मामजमनादिञ्च वेत्ति लोकमहेश्वरम् ।**
**असंमूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥ ३ ॥**

*யோ மாமஜம் அநாதிஞ்ச வேத்தி லோகமஹேச்வரம் |*
*அஸம்மூட: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே || 3 ||*

मर्त्येषु—மனிதர்களுக்குள்ளும்
यः माम्—எவன் என்னை
असंमूढः—மற்றவரோடு ஒத்தவன் என்ற மோஹமின்றி
अनादिम् अजम्—அநாதியாகவே பிறப்பில்லாதவனாகவும்
लोकमहेश्वरं च—எல்லாவுலகுக்குமாவதால் ஸர்வேச்வரேச்வரனாகவும்
वेत्ति—அறிகின்றானோ,
सः—அவன்
सर्वपापैः—பாபங்களெல்லாவற்றினாலும்
प्रमुच्यते—விடப்படுகிறான்.

मर्त्येषु என்பது பூர்வார்த்தத்தில்தான் சேர்வதாகிறது. அதுபோல் असंमूढः என்பதும் அங்கே சேரத்தகும். अजमनादिम् என்பதனின்று அகில ஹேயப்ரத்யநீகத்வமும் ஸர்வலோகமஹேச்வரம் என்றதனின்று ஸகல கல்யாணகுணாகரத்வமும் குறிக்கப்பட உபயலிங்கத்வம் சொன்னதாகும். अजम् என்பதற்கு புண்யபாப மூலமான தேஹஸம்பந்தமில்லாமை பொருளாம். இது முக்த ஜீவனுக்கும் உண்டு. ஆனாலும் அவன் அநாதியாக அஜனாகமாட்டான். எண்ணற்ற ஜன்மங்களை முன்னே பெற்றிருந்து பிறகுதானே முக்தனானான். நித்ய ஸூரிகள் அநாதியாகவே அஜரென்னலாம். ஆனாலும் லோக மஹேச்வரத்வம் அவர்களுக்கில்லை. மேலும் அஜமநாதிம் என்பதற்குக் கருத்தான பொருள் ஹேய ஸம்பந்தத்திற்குத் தகாதிருக்கை. அது நித்யர்களுக்கில்லை. அவர்கள் ஸ்வபாவமாய் ஈச்வரபரதந்த்ரர்களாகையாலே ஹேயஸம்பந்தத்திற்கு உரியவரே. இப்படி பூர்வார்த்தத்தினால் ஸர்வ விலக்ஷணமானவன் என்று சொன்னதாம், உபயலிங்கத்தில் ஒவ்வொன்றும் பரமாத்மாவுக்கே உள்ளது. ஆகையால் ஒன்றே ஸர்வ விலக்ஷணனென்பதை யறிவிக்குமானாலும் இரண்டும் உண்டென்பதற்காக, பக்திக்காக இரண்டையும் சொன்னதாம். இனி, கல்யாண குணாகரமென்னாமே लोकेश्वरम् என்றும் கூறாமே लोकमहेश्वरम् என்று கூறியதால் பெரிய பிராட்டியாருக்கும் अजमनादिम्, महेश्वरम् என்ற அம்சங்கள் இருந்தாலும் பகவான் அவளுக்கும் பதியாய் ஈச்வரனானமையால் அவன் மஹேச்வரனாகிறானென்று வாசி தோற்றலாம். இதற்காக महा என்ற சொல் என்னலாமாகில் கொள்க. ஈச்வரகோடியாய லோகத்தைப் பற்றிய எல்லா அனுக்ரஹமும் செய்வதென்பது இருவருக்குமேயாகும். (3)

பக்தியின் உற்பத்தி, வ்ருத்தி என்ற இரண்டுக்கு வேண்டும் அம்சங்களை இங்கே கூறுகிறார். கடந்த ச்லோகத்தின் பொருளை அறிந்தபோது பக்திக்கு உற்பத்தியாகும். இனி விருத்திக்காக அறிய வேண்டுமவற்றைக் கூறுகிறார்—

बुद्धिर्ज्ञानमसंमोहः क्षमा सत्यं दमः शमः ।
सुखं दुःखं भवोऽभावो भयञ्चाभयमेव च ॥ ४ ॥
अहिंसा समता तुष्टिस्तपो दानं यशोऽयशः ।
भवन्ति भावा भूतानां मत्त एव पृथग्विधाः ॥ ५ ॥

See NV 304- 10/73
c.f. V.P. 3-7-20

புத்திர் ஜ்ஞாநம் அஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தமச் சம: |
ஸுகம் துக்கம் பவோऽபாவோ பயஞ்சாபயமேவ ச || 4 ||
அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ் தபோ தாநம் யசோऽயச: |
பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக்விதா: || 5 ||

बुद्धिः–மனத்திற்குள்ள நிரூபிக்கும் திறமை,
ज्ञानम्–சேதநாசேதநவிஷயமான தெளிவு
असंमोहः–ஒன்றை வேறொன்றாக நினையாமை
क्षमा–பொறுமை
सत्यं–ப்ராணிக்கு ஹிதமாகத் தான் கண்டிருப்பதைச் சொல்வது
दमः–வெளியிந்திரியங்களை அடக்குகை
शमः–மனத்தையடக்குவது
सुखम्–ஸுகம் (அனுகூலபுத்தி)
दुःखम्–துக்கம் (ப்ரதிகூல புத்தி)
भवः–மனத்தின் ஸ்வாஸ்த்தியம்
अभावः–மனத்தின் சோர்வு
भयम्–அச்சம்
अभयम्–அச்சமின்மை
अहिंसा–துக்கம் விளைவிக்காமை
समता–தன்னிடம்போல் பிறர் எல்லோரிடமும் நடந்துகொள்வது
तुष्टिः–பிறர் பெருமையைக் கண்டு களிப்பு
तपः–சாஸ்த்ர விரோதமான போகத்தில் இழியாமை
दानम्–கொடை
यशः–புகழ்
अयशः–பழி—என்னவான
पृथग्विधाः–பலவகைகளான
भावाः–மனநிலைகள்
मत्तः एव–என்மூலமே
भूतानां–பிராணிகளுக்கு
भवन्ति–உண்டாகின்றன.

भावाः–மனநிலைகளென்றதால், தவம் தானம் யச: அயச: பவ: அபாவ: என்றவைகளையும் மனநிலைகளாகக் கொள்க—

महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा ।
मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजाः ॥ ६ ॥

மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மநவஸ்ததா |
மத்பாவா மாநஸா ஜாதா யேஷாம் லோக இமா: ப்ரஜா: || 6 ||

मानसाः—(பிரமனின்) மனத்தினின்று தோன்றிய
पूर्वे—முன்னமே இருந்த
सप्त महर्षयः—ப்ருகு முதலான ஸப்தர்ஷிகளும்
तथा चत्वारः मनवः—நான்கு மனுக்களும்
मद्भावाः—என் ஸங்கல்பத்திற்கு இணங்கி நடப்பவர்.
येषाम्—இவர்களுடையவரேயாவர்
लोके—உலகிலுள்ள
इमाः प्रजाः—இந்த ப்ரஜைகள்.

உலகில் உள்ள இப் பிரஜைகளைப் படைக்கவும் காக்கவும் பிரமனால் மனத்தினால் ஸ்ருஷ்டி செய்யப் பெற்ற ஸப்தர்ஷிகளோ மநுக்களோ எல்லோரும் என் கருத்துப்படி நடப்பவரே, என் ஸங்கல்பத்தை மீற யாராலுமாகாது. எனவே பிரஜைகளின் உற்பத்தி ஸ்த்திதியெல்லாம் என்னாலென்று தெளியலாம். இங்கே पूर्वे என்ற சொல் எதற்கென்னில், 'இந்த ப்ரஜைகளுக்கான ஸப்தர்ஷிகள் பிரசித்தமான ரிஷிகளல்லாமல் வேறு சிலர் க்ருஷ்ணமூர்த்தியினின்று வருபவராகலாம், ஏனெனில், முந்தைய ரிஷிகளுக்கு வெகுகாலம் பின்னால் தானே கிருஷ்ணன் பிறந்தது' என்று நினையாமைக்காக, பழைய ரிஷிகளே எனக்கு அதீனர் என்றது. எல்லா மனுக்களும் அதீனரானாலும் அவர்களில் ஒருவாறு சிறந்த ஸாவர்ணிக மனுக்களையும் தனக்கு அதீனமாகக் கூற நான்கு மனுக்களென்றது. மற்ற விரிவு வேறிடத்தில்.

**एतां विभूतिं योगञ्च मम यो वेत्ति तत्त्वतः ।**
**सोऽविकम्प्येन योगेन युज्यते नात्र संशयः ॥ ७ ॥**

See Nr P. 30-4-74/75

ஏதாம் விபூதிம் யோகஞ்ச மம யோ வேத்தி தத்வத: |
ஸோऽவிகம்ப்யேந யோகேந யுஜ்யதே நாத்ர ஸம்சய: || 7 ||

Compare with 10-20 for meaning of Vibhuti + yoga.

यः मम—எவன் எனது
एतां विभूतिं—கீழ்ச்லோகத்தில் ரிஷி மந்வாதிகள் எல்லோரும் எவ்விதத்திலும் எனக்கு அதீனரென்ற வைபவத்தையும்
योगं च—அதற்குமுன் சொன்ன குணச்சேர்த்தியையும்
तत्त्वतः वेत्ति-உள்ளபடி அறிகின்றானோ,
अविकम्प्येन—அசைக்கப்படவாகாத
योगेन—பக்தியோகத்தினால்
स युज्यते—அவன் பெறப்படுகிறான்.
अत्र—இது விஷயத்தில்
न संशयः—ஐயமில்லை.

அம்சங்கள் அதிகமாகத் தெரியத் தெரிய பக்தி பரவலுறுமாகையால் முழுவுலகும் அதீனமென்பதை யறிவிக்கிறார்—

**अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्तते ।**
**इति मत्वा भजन्ते मां बुधा भावसमन्विताः ॥ ८ ॥**

See Nr. P. 30-5-73/74

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்ததே |
இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமந்விதா: || 8 ||

अहं—நான்
सर्वस्य—எல்லாவற்றிற்கும்
प्रभवः—உற்பத்தி காரணம்
सर्वं मत्तः—எல்லாம் என்னால்
प्रवर्तते—செயலாற்றும்.
इति मत्वा—என்று ஆராய்ந்து
भावसमन्विताः—மிக்க பற்று உடையராய்
बुधाः—அறிஞர்கள்
मां भजन्ते—என்னை பஜனம் செய்கின்றனர்.

இப்போது காணும் ப்ரஜைகளுக்குமட்டுமல்லாமல் எல்லாவற்றின் உற்பத்தியும் ஸ்த்திதிப்ரவ்ருத்திகளுமெல்லாம் எனக்கே அதீனமென்று ஆராய்பவருக்கு என்னிடம் அன்பு மிகும். அதனால் பக்தியோகத்தின் நீடிப்பும் ஆகிறது.

"மிக்க அன்புடன் கூடி" என்பதை விரித்துரைக்கிறார்—

मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् । See Mr. 5-5-74176
कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च ॥ ९ ॥

மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம் |
கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச || 9 ||

मच्चित्ताः—என்னிடமே பதிந்த மனம் உடையராய்
मद्गतप्राणाः—என்னால் உயிர் தரிப்பவராய்
परस्परम्—ஒருவருக்கு ஒருவர்
मां बोधयन्तः—தம் தம் அனுபவத்திற்கு வந்த என்னை—எனது குணங்களை அறிவிக்கின்றாராய்
कथयन्तः—என் விஷயமாகப் பிறரும் அறிந்த கதைகளையும் அழகாகக் கூறுகின்றாராய்
तुष्यन्ति च—கூறுவதால் களிக்கின்றனர்.
रमन्ति च—நடுநடுவே காதால் கேட்பதாலும் களிக்கின்றனர்.

யாரும் அருகில் இராமற் போனாலும் அவர்கள் மனம் என்னிடமே நிற்கும். வேறு விஷயங்களிற் செல்லாது. அதற்குக் காரணம், என் நினைவின்றி உயிர் தரிக்கமாட்டாமை. யாரேனும் அனுபவிப்பவர் சேர்ந்தால் மிக்க மகிழ்ச்சியுடன் தாமீடுபட்ட குணங்களின பெருமையைப் பகர்வார். பிறருக்குத் தெரிந்திருந்தாலும் சொல்வதே அவர்களுக்குப் புருஷார்த்தம். அதனால் பெரும் ஸந்தோஷம். கேட்பவர் ஏதேனும் தம்மைப் போல் சொன்னால் அதையும் கேட்டும் களிப்பர். तुष्यन्ति रमन्ति என்ற இரண்டின் கருத்தை கவனிக்க. (9)

இப்படி பக்தி உண்டாவதும் வளர்வதும் குறிக்கப் பெற்றது. பகவானைப் பெறுமளவுக்கு அதன் முதிர்ச்சி—அதாவது கண்ணுற் கணடாற் போலே அவனது தோற்றமான நீடித்த நினைவும் இதனால் என்கிறார்—

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥ १० ॥ See Mr. 30 5-76177

தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் |
ததாமி புத்தியோகம் தம் யேந மாம் உபயாந்தி தே || 10 ||

सततयुक्तानां-என்றும் சேர்ந்திருக்க விரும்பி
भजतां-அன்புடன் தியானம் செய்கின்ற
तेषाम्-கீழ்க் கூறிய ஞானம் உடையவர்களுக்கு,
ते-அவர்கள்
येन—எந்த உபாயத்தினால்
माम् उपयान्ति-என்னை அடைவரோ
तं बुद्धियोगम्-அந்த முதிர்ந்த பக்தி யோகத்தை
प्रीतिपूर्वकं ददामि-அன்புடன் அளிக்கிறேன்.

भजताम् என்ற சொல்லே அன்புடன் தியானத்தைக் கூறும். स्नेहपूर्वमनुध्यानं भक्तिः என்பரே, ஆகையால் प्रीतिपूर्वकम् என்பது அங்கே சேர்வது வீண். ददामि என்பதுடன் சேர்க்க. (10)

இப்படி உண்டாக்கும் புத்தியோகத்திற்கு ஏதேனும் தடை உண்டாகில் அதனையும் விலக்குகிறேன் என்கிறார்—

तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥

See Mr. P. 305-77/78

தேஷாமேவாநுகம்பார்த்தம் அஹம் அஜ்ஞாநஜம் தம: |
நாசயாம்யாத்மபாவஸ்த்த: ஜ்ஞாநதீபேந பாஸ்வதா || 11 ||

तेषाम् एव-புத்தியோகம் பெறுவிக்க வேண்டும் அதிகாரிகளுக்கே
अनुकम्पार्थम्—அவ்வனுக்ரஹம் செய்வதற்காக
आत्मभावस्थः—அவர்களுடைய மனோவ்யாபாரத்தில் நின்றவனாய் எனது குணங்களை அறிவித்து
भास्वता—ப்ரகாசமாய் எனது போக்யதையை யறிவிக்கின்ற
ज्ञानदीपेन-ஜ்ஞானமென்ற விளக்கினால்
अज्ञानजं तमः—புத்தி யோகத்திற்கு விரோதியான பழைய கர்மாவினாலான இருளை அதாவது வேறு விஷயங்களில் நோக்கை
अहं नाशयामि—நானே நீக்குகிறேன்.

என்னையே பெற விரும்பி அன்புடன் பஜனம் செய்கின்றவர்களுக்கு நான் அளிக்க நினைத்த புத்தியோகத்திற்குத் தடையான சில பாபம் இருக்கும். அதனால் ஏதேனும் விஷயத்தில் பற்று விளையும். அதற்கு அவர்கள் மனத்தில் நின்று எனது கல்யாணகுணங்களில் அறிவை விளக்குவேன். எனது போக்யதை நன்கு உணரப்பெற்று அவர்கள் விஷயப்பற்றற்று அந்த புத்தியோகத்தைப் பெறுவர். (11)

இவ்வளவு கருணை கூர்ந்த பகவானின் குணவிபூதிகளை இன்னும் விரிவாக அறிய ஆவல் கொண்டான் அர்ஜுனன். அதனை அறிவிக்க வேண்டி நினைத்துத் தனக்கு உண்டாயிருக்கும் ச்ரத்தையை விண்ணப்பம் செய்கிறான்—

अर्जुन उवाच-அர்ஜுனன் சொன்னான்—

परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् । See NK P. 30 5-11/80

पुरुषं शाश्वतं दिव्यम् आदिदेवमजं विभुम् ॥ १२ ॥

आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।

असितो देवलो व्यासः स्वयञ्चैव ब्रवीषि मे ॥ १३ ॥

பரம் ப்ரஹ்ம பரந்தாம பவித்ரம் பரமம் பவாந் |
புருஷம் சாச்வதம் திவ்யம் ஆதிதேவம் அஜம் விபும் || 12 ||
ஆஹுஸ் த்வாம் ருஷயஸ் ஸர்வே தேவர்ஷிர் நாரதஸ் ததா |
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயஞ்சைவ ப்ரவீஷி மே || 13 ||

भवान्—நீர்
परं ब्रह्म—பரப்ரஹ்மம்,
परं धाम—பரஞ்சோதி,
परमं पवित्रम्—புனிதமாக்கும் வஸ்துக்களிற் சிறந்தவர் (இவ்வாறு வேதம் ஓதும்)
सर्वे ऋषयः—ரிஷிகள் எல்லோரும்
त्वाम्—உம்மை
शाश्वतं—என்றும் இருப்பவனும்
दिव्यम्—பரமபத வாஸியும்
पुरुषम्—புருஷ ஸூக்தாதிகளிற் ப்ரஸித்தனும்
आदि देवम्—ஆதியாகி ஸ்ருஷ்டி முதலான விஹாரங்கள் செய்கின்றவனும்
अजं—பிறப்பற்றவனும்
विभुम्—எங்கும் பரந்திருப்பவனுமாக
आहुः—சொல்லுகின்றனர்.
तथा—அவ்வாறே
नारदः देवर्षिः—நாரதரென்ற தேவரிஷியும்
असितः—(தேவலர் புதல்வரான) அஸிதரும்
देवलः—(ப்ரத்யூஷரென்ற வஸுவின் புத்ரரான) தேவலரும்
व्यासः—வ்யாஸ மஹர்ஷியும்
आहुः—சொல்லுகின்றனர்.
स्वयं च एव—நீரே கூட
मे ब्रवीषि—எனக்கு இவ்வாறு உபதேசம் செய்கின்றீர்.

இங்குக் கூறிய பெருமைகளுக்கான மேற்கோள்களை பாஷ்யாதிகளில் காண்க. (12 13)

सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव । See NK P 30-5-80/81

न हि ते भगवन् व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥ १४ ॥

ஸர்வமேதத் ருதம் மந்யே யந்மாம் வதஸி கேசவ |
ந ஹி தே பகவந் வ்யக்திம் விதுர் தேவா ந தாநவா: || 14 ||

केशव-ப்ரஹ்மருத்ரேச்வரனே!
यत् मां-என்ன எனக்கு
वदसि-உபதேசிக்கின்றீரோ,
एतत् सर्वम्-இதை யெல்லாம்
ऋतं मन्ये-உண்மை யென்று ஆராய்கிறேன்.
भगवन्-குற்றமற்ற குணநிதியே!

ते व्यक्तिम्—நீர் எங்கெங்கு என்னென்ன அம்சமாய்த் தோன்றுகிறீரென்பதை
देवाः न विदुः-தேவர்கள் அறியார்.
दानवाः न विदुः-அசுரர்கள் அறியார்
हि—நிச்சயம்; ப்ரஸித்தம்.

வேதங்களும் மஹர்ஷிகளும் அறிவித்திருக்க நீரும் எனக்கு நேராக அருளினதைக் கேட்க, எல்லாம் உண்மையென்ற உறுதி யுண்டாயிற்று. பிரமனையும் ருத்ரனையும் படைத்த பரஞ்சோதியைப் பரக்கப் பணிக்க தேவர்களும் வல்லரல்லர். இதுவிஷயத்தில் அவர்களை அசுரர்களுக்கு ஈடாகவே நினைக்கலாம். எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருப்பினும் சிற்சில இடங்களிலே உமது தோற்றம் மிக்கதாகும். அது எங்கு எத்தகையதென்று யாருக்குத் தெரியும்? (மேலே வரும் ப்ரஸ்தாவத்திற்கிணங்க व्यक्तिम् என்பதற்கு இதே பொருளாம்.) இனியும் உம்மை யறியவிரும்பும் அடியேனுக்கு வேறு யார் உதவப்போகின்றனர்.

स्वयमेवाऽऽत्मनाऽऽत्मानं वेत्थ त्वं पुरुषोत्तम । See Nr P.30-5-81/82
भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥ १५ ॥
ஸ்வயமேவாத்மநாத்மாநம் வேத்த த்வம் புருஷோத்தம |
பூதபாவந பூதேச தேவதேவ ஜகத்பதே || 15 ||

पुरुषोत्तम—எல்லா உயிர்களுக்கும் மேலானவரே
भूतभावन—எல்லா ப்ராணிகளையும் படைக்கிறவரே
भूतेश—எல்லாம் ஆள்கின்றவரே
देवदेव—தேவர்களுக்கும் தேவரானவரே

जगत्पते—எல்லா உலகுக்கும் ஸ்வாமியே
स्वयम् एव—உமது அறிவைக் கொண்டே
आत्मना—ஒருவன் துணையின்றியே
आत्मानं—தம்மை
त्वं वेत्थ—நீர் அறிகின்றீர்.

பிராணிகளையெல்லாம் படைத்து நியமிக்கும் உம்மை, தேவர்களை பிராணிகள் மேம்பட்டவரென்று ஆராதிப்பதுபோல், தேவர்கள் ஆராதிக்கின்றனர். இப்படி எல்லா உலகுக்கும் ஸ்வாமியான உம்மை இங்குள்ளாருக்கு மேலான முக்தர்களும் அறியகில்லார். இங்ஙனமிருப்பதால் நீர் உம்மை நிஜமாக அறிகின்றவண்ணம் யார் அறிவர். நீர் படைத்த வஸ்துக்களிலே எதில் எவ்விதமான உமது அம்சம் தோற்ற நீர் ஆத்மாவாயிருக்கிறீர் என்பது உமக்கு மட்டுமே தெரிவதாமென்றபடி.

cf. त्वमेव त्वां वेत्थ योऽसि सोऽसि ।

ஆகையால் நீரே எனக்கு அருளவேணுமென்கிறான்—

**वक्तुमर्हस्यशेषेण दिव्या ह्यात्मविभूतयः ।** Sec Nr 3-5-72
**याभिर्विभूतिभिर्लोकान् इमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥ १६ ॥**

வக்துமர்ஹஸ்யசேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய: |
யாபிர் விபூதிபிர் லோகாந் இமாம்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி || 16 ||

याभिः विभूतिभिः—எந்த நியமன மனங்கள் விசேஷங்களைக் கொண்டு
इमान् लोकान्—இவ்வுலகங்களை
व्याप्य—சூழ்ந்து
त्वं तिष्ठसि—நீர் நிற்கின்றீரோ,
आत्मविभूतयः—அந்த உமது நிய
दिव्याः हि—மிக்க மேன்மையுடையன வல்லவோ.
अशेषेण—முழுமையும்
वक्तुम् अर्हसि—உபதேசிக்க யோக்ய தை யுடையீர் நீர்.

எம்பெருமான் எங்கும் பரவியுள்ளவன். ஆகாயம்போல வெறுமனே பரவுகிறானல்லன், நியமன சக்தியுடன் பரவுகிறான். ஆகையால் எதற்கும் அந்தர்யாமி. அந்தந்த நியமனசக்தி அந்தந்த வஸ்துவின் வியாபாரத்திற்குக் காரணமாகும். அதுவின்றி, சில இடங்களில் விசேஷ நியமன சக்தி வைக்கிறான். அதனால் அதற்கு உட்பட்டு மற்றவை நடக்கின்றன. அதனால், மற்றவற்றை வசமாக்கி மேலெழும் நியமன சக்திகள் சிறந்தவை உம்முடையன யாவை, அவற்றை யருள நீரே தகுதியுறுகிறீர். அந்த நியமன சக்தியை எங்கெங்கு வைத்திருக்கிறீரோ, அந்தந்த வஸ்துவைக் கூறவேணும். अशेषेण. முழுமையும் கூறவேணும். எல்லாம் கூறவும் உமக்கு யோக்யதையுளது. அதாவது சிலவற்றைக் கூறி அனுக்ரஹம் செய்தால் அவ் அனுக்ரஹத்தினால் நான் எல்லாம் அறிவேனாகையால் நீர் நேரில் சொன்னதாகவே கொள்ளலாமே' என்று வேண்டுகிறான்.

அவற்றையறிவது எதற்கெனில், சொல்லுகிறான்—

**कथं विद्यामहं योगींस्त्वां सदा परिचिन्तयन् ।** Se 17-18 see Nr 3-5-72 ×3
**केषुकेषु च भावेषु चिन्त्योऽसि भगवन् मया ॥ १७ ॥**

கதம் வித்யாமஹம் யோகி த்வாம் ஸதா பரிசிந்தயந் |
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோऽஸி பகவந் மயா || 17 ||

भगवन्—பகவானே
केषुकेषु भावेषु च—கீழ்க்கூறிய புத்தி ஞானாதிகள் தவிர மற்ற எந்தெந்த வஸ்துக்களிலும்
मया—என்னால
चिन्त्यः असि—நீர் நினைக்கவாகிறீர?
अहं योगी—நான் பக்தியோகம் செய்யப் போகின்றவன்
त्वां सदा—உம்மை எப்போதும்
परिचिन्तयन्—நினைத்தவண்ணமிருக்க
कथं विद्याम्—உம்மை எவ்வாறு அறிவேன்?

கீழ் புத்திஞானுதிகள் உமக்கு அதீனமென்றீர். அதுபோல் மற்றும் உமது விசேஷ நியமனம் உள்ளதை எதெதில் நான் நினைக்கலாகும். அப்போதுதானே அதைக் காணும்போது உம்மையே விடாமல் மதிப்புடன் நினைப்பதால் விசேஷ பக்தியுடன் யோகம் எனக்குச் செய்யவாகும். நீர் உபதேசியாவிடில் நான் எவ்வாறு அறிவேன். (17)

பக்தியோகம் செய்வதற்காக நினைத்து வருவது பிறகு வரும் பலன். இப்போது கேட்காமல் மனம் திருப்தியடையவில்லை. ஆவல் அதிகமாயுளது. அதனுல், 'சுருக்கமாகச் சொன்னது போதும்; பிறகுச் சொல்லுகிறேன்' என்னுமல் இப்போதே அருளவேணும். நியமனம்மட்டுமன்றி மற்ற குணயோகத்தையும் கூறவேணுமென்று வேண்டுகிருன்—

**विस्तरेणाऽऽत्मनो योगं विभूतिञ्च जनार्दन ।**
**भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम् ॥ १८ ॥**

விஸ்தரேணுத்மநோ யோகம் விபூதிஞ்ச ஜநார்தந |
பூய: கதய த்ருப்திர்ஹி ச்ருண்வதோ நாஸ்தி மேऽம்ருதம் || 18 ||

जनार्दन–ஜநார்தனனே !
आत्मनः–தம்முடைய
योगं–ஸ்ருஷ்டி முதலான சக்தி யோகத்தையும்
विभूतिं च–நியமனத்தையும்
भूयः–மீண்டும்
विस्तरेण कथय–விரிவாக அருள வேணும்.
अमृतं–அமுதை
शृण्वतः मे–காதால் பருகும் எனக்கு
तृप्तिः–தெவட்டல்–போதுமென்றது
नास्ति हि–இல்லையே.

जनार्दन—மீறி நடக்கும் ஜனங்களைப் பீடிப்பானுய் நரகாதிகளைக் கொடுப்பதாலும் ஜநார்தனன். அனுகூலமான ஜனங்களாலே அன்புடன் வேண்டப்படுகிறபடியாலும் ஜநார்தனன். ஜநம்—மறுபிறவி; அதனைத் தொலைப்பதாலும் ஜநார்தனன். (18)

श्रीभगवान् उवाच—பகவான் சொன்னதாவது—

**हन्त ते कथयिष्यामि विभूतीरात्मनः शुभाः ।** See Nr. P. 30-7-55/54
**प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यन्तो विस्तरस्य मे ॥ १९ ॥**

ஹந்த தே கதயிஷ்யாமி விபூதீராத்மந: சுபா: |
ப்ராதாந்யத: குருச்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே || 19 ||

कुरुश्रेष्ठ–கௌரவச்ரேஷ்டனே !
हन्त–ஆச்சர்யம்
ते–இவ்வளவு விருப்பம் உள்ள உனக்கு
आत्मनः शुभाः–எனது திவ்யமான
विभूतीः–நியாம்ய வஸ்துக்களை
प्राधान्यतः–ப்ரதானமானவற்றையெடுத்து
कथयिष्यामि–சொல்லப் போகிறேன்.
मे विस्तरस्य—எனது விபூதியின் விரிவுக்கு
अन्तः नास्ति–முடிவு இல்லை.

எல்லாம் சொல்ல நான் தகுதியுற்றவனென்றாலும் குறிப்பிட்ட காலத்திற்குள்ளே விரிவுக்கு முடிவுகாணமாட்டாமையாலே திவ்யவிபூதிகளிலும் முக்கியமாகச் சிலவற்றை மட்டும் கூறுவேன். இவ்வளவு ஆவலுள்ளவனாய் குரு குலச்ரேஷ்டனான உனக்கு வியப்புற்ற நான் சொல்லவேண்டுமே.

குணவிபூதிகள் இரண்டையும் விரிவாகக் கேட்க விரும்பின அர்ஜுனனுக்கு விபூதியையே விரிவாகக் கூறப்போகின்றாராய் இரண்டையும் முதலில் சுருக்கிச் சொல்லுகிறார்—

अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।     See Hr. 1·30-7-56/57
अहमादिश्च मध्यश्च भूतानामन्त एव च ॥ २० ॥

*அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசயஸ்த்தித:।*
*அஹம் ஆதிச்ச மத்யஞ்ச பூதாநாம் அந்த ஏவ ச ॥ 20 ॥*

गुडाकेश—உறக்கமில்லாத அர்ஜுனா
अहं—நான்
सर्वभूत आशयस्थितः—எல்லா ப்ராணிகளுக்கும் ஹ்ருதயத்திலிருப்பவனாய்
आत्मा—அவர்களுக்கு ஆத்மாவாகிறேன்.
भूतानां अहं—ப்ராணிகளுக்கு நான்
आदिः च—உபாதானகாரணமும்
मध्यं च—ஸ்த்திதிகாரணமும்
अन्तः च एव—லயகாரணமுமே யாகிறேன்.

உலகம் எனக்கு விபூதியாகையாவது—அதனுடைய உற்பத்தியும் இருப்பும், அழிவும் எனக்கு அதீனமாகை என்று 7-வது ச்லோகத்தில் பாஷ்யத்திலே அருளினார். இங்கே அவனுக்கு சரீரமாகை விபூதியென்றும் ஸ்ருஷ்டி முதலானவற்றிற்குக் காரணமாகை யோகமென்றும் கூறப்படும். அங்கே யோகமாவது அமலனாய் தோஷமொன்றுமின்றி கல்யாண குணம் உடைமை என்னப்பட்டது. இவ் இரண்டு இடமும் ஒன்றோடு ஒன்று முரண்படும் போலுமென்னில்—இங்ஙனம் கருத்துக்கொள்க— ஒவ்வொரு வஸ்துவின் உற்பத்தி விஷயமாகவும் இருப்பு விஷயமாகவும் ப்ரவ்ருத்தி விஷயமாகவுமுள்ள நியமனம் விபூதியென்று கீழே கூறியது அவ்வாறே. தோஷமின்றி கல்யாணகுணம் உடையனாகை யோகமென்பதும் அவ்வாறே. இங்கே 'ஆதிச்ச மத்யஞ்ச அந்த ஏவ ச' என்று கூறிய ஸ்ரஷ்ட்ருத்வம், பாலயித்ருத்வம் ஸம்ஹர்த்ருத்வம் என்பன என்ன என்னில்—எம்பெருமான் உற்பத்திஸ்த்திதிலயங்களின் நியமனம் செய்யும்போது என்னவிதமான ஸாமக்ரியோடு சேர்ந்திருக்கிறானோ, எதெது இல்லையாகில் அந்தந்த நியமனம் இடம் பெறாதோ, அதைக் கொண்டு ஆதி மத்யாந்தமாகையாம். இது நியமனத்தினும் வேறு. யோகத்திற் சேர்ந்தது. அததன் உள்ளே புகுந்திருந்து அததற்கு நியமனம் செய்யும் போதும் அதனால் தோஷம் தன்னிடம் தட்டாதபடி தன்னை வைத்துக் கொள்ளுகிறான். ஆக சக்திகாருண்யவாத்ஸல்ய ஸ்வாமித்வாதிகளான ஸ்ருஷ்ட்ருத்வாதிகளும் நிர்தோஷ கல்யாண குணாகரத்வமென்ற யோகமாகும்.

सप्तमश्लोके स्वाधीनोत्पत्तिस्थितिप्रवृत्तिकत्वं विभूतिः योगश्चाखिलहेयप्रत्यनीककल्याणैकतानतेत्युक्तम्; अत्र स्रष्टृत्वपालयितृत्वादिकं योग इति कथमुच्यत इति चेत्–उत्पत्तिस्थितिविषयकनियमनं विभूतिरेव। अत्रोच्यमानं स्रष्टृत्वादिकं तु यादृशसामग्रीसंपन्नस्सन् तत्तदुत्पत्त्यादि नियमनं करोति, तादृशसामग्रीमत्त्वमेव। तच्च तदधीनदोषानापादकशक्तिस्वामित्ववात्सल्यकारुण्यादिमत्त्वम्; स च योग एवेति ॥ २० ॥

இனி விபூதியின் விரிவு. அங்கங்கு வேண்டும் விசேஷங்களை வட–மொழியிற் காண்க—

आदित्यानामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान्। See Nr. P. 30-7-58/59
मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥ २१ ॥

ஆதித்யாநாம்அஹம் விஷ்ணு: ஜ்யோதிஷாம் ரவிரம்சுமாந் |
மரீசிர்மருதாமஸ்மி நக்ஷத்ராணாமஹம் சசீ || 21 ||

आदित्यानां–அதிதியின் மக்கள் பன்னிருவரில்
अहं विष्णुः–நான் விஷ்ணுவாகிறேன்.
ज्योतिषां—சோதிகளுக்குள்ளே
अंशुमान्—ஒளிமிக்க
रविः अहम्—சூர்யன் நான்.
मरुताम्—மருத்துக்களில்
मरीचिः अस्मि—மரீசியாகிறேன்.
नक्षत्राणां–நட்சத்ரங்களுக்கு பதியான
चन्द्रः अहम्—சந்த்ரன் நான்.

ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள் போலே விஷ்ணுமூர்த்தியும் அவதாரமே யன்றி அங்குத் தனி ஜீவன் கிடையாது. எனவே விஷ்ணுவை விபூதியென்றது, அங்கு ஒரு ஆத்மா தனக்கு நியாம்யமென்பதாலல்ல. 'மற்ற ஆதித்ய மூர்த்திகளாலாம் ஸூர்ய ப்ரமணாதி வ்யாபாரங்கள் ஜீவர்களையிடையிட்டு எம்பெருமானின் நியமனத்தினாலாம்; விஷ்ணுமூர்த்தியாலாமவை நேராகவே' என்கிற சிறப்பினாலென்க. ரவி:, மரீசி: என்ற வஸ்துக்களில் பகவானுடைய அனுப்ரவேசம் அதிகம். நட்சத்ரங்களை விட சந்திரனிடமும் அது மிக்கதேயாகும். ஆனால் ரவியும் சோதிகளிலொன்றாகும். மரீசியும் மருத்துக்களில் ஒன்றாம். அவ்வாறு நட்சத்ரங்களிலொருவனாகான் சந்த்ரனென்ற வாசியுண்டு. அனுப்ரவேசம், அபிமானம், நியமனசக்தி அதிகமென்பதே பொதுவாக அறிய வேண்டுவது–

वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः। See Nr P. 30-7-59
इन्द्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥ २२ ॥

வேதாநாம் ஸாமவேதோ஽ஸ்மி தேவாநாம் அஸ்மி வாஸவ: |
இந்த்ரியாணாம் மநச்சாஸ்மி பூதாநாம் அஸ்மி சேதநா || 22 ||

वेदानां—வேதங்களுக்குள்
सामवेदः अस्मि–ஸாமவேதமாகிறேன்.
देवानां—தேவர்களுக்குள்
वासवः अस्मि–இந்த்ரனாகிறேன்.
इन्द्रियाणाम्—இந்திரியங்களுக்குள்
मनः च अस्मि—மனம் ஆகிறேன்.
भूतानां—பிராணிகளுக்கு இருக்கும்
चेतना अस्मि—அறிவு என்ற குணமுமாகிறேன்.

சேதநா என்பது அறிவு. அது ஒரு பூதமன்று. பூதங்களுக்கு மற்றவற்றைவிட வேறுபாட்டை யடைவிக்கும் குணமாகும். (22)

**रुद्राणां शंकरश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।**
**वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥ २३ ॥**

*ருத்ராணாம் சங்கரச்சாஸ்மி வித்தேசோ யக்ஷரக்ஷஸாம் |*
*வஸூநாம் பாவகச்சாஸ்மி மேரு: சிகரிணாம் அஹம் || 23 ||*

रुद्राणां—ருத்ரர்கள் பதினொருவரில்
शंकरः च अस्मि—சங்கரமூர்த்தியுமாகிறேன்.
यक्षरक्षसाम्—யக்ஷர்களுக்கும் அரக்கர்களுக்கும் பதியான
वित्तेशः—குபேரனாகிறேன்.
वसूनाम्—எட்டு வஸுக்களுக்குள்
पावकः च अस्मि—பாவகனென்பவனாகிறேன்.
शिखरिणाम्—வாஸத்திற்கு உரிய கொடுமுடியுள்ள மலைகளில்
मेरुः अहम्—நான் மேருமலை.

**पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।**
**सेनानीनामहं स्कन्दः सरसामस्मि सागरः ॥ २४ ॥**

*புரோதஸாஞ்ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம் |*
*ஸேநாநீநாம் அஹம் ஸ்கந்த: ஸரஸாமஸ்மி ஸாகர: || 24 ||*

पार्थ—அர்ஜுனா
पुरोधसां—புரோஹிதர்களுக்குள்
मुख्यं बृहस्पतिम्—முக்கியரான தேவகுருவை
मां विद्धि—நானாக அறி.
सेनानीनां—சேனைத் தலைவர்களில்
स्कन्दः अहं—முருகன் நான்.
सरसां—நீர்த் தேக்கங்களில்
सागरः अस्मि—கடலாகிறேன்.

**महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।**
**यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥ २५ ॥**

*மஹர்ஷீணாம் ப்ருகுரஹம் கிராமஸ்ம்யேகமக்ஷரம் |*
*யஜ்ஞாநாம் ஜபயஜ்ஞோऽஸ்மி ஸ்தாவராணாம் ஹிமாலய: || 25 ||*

महर्षीणां—ஸப்தர்ஷிகளுக்குள்
भृगुः अहम्—ப்ருகு மஹர்ஷி நான்.
गिराम्—சொற்களுக்குள்
एकम् अक्षरम्—ஒற்றை யெழுத்தா(ன
अस्मि—ப்ரணவமா)கிறேன்.
यज्ञानाम्—ஆராதனங்களுக்குள்
जपयज्ञः अस्मि—ஜபமெனும் ஆராதனமாகிறேன்.
स्थावराणाम्—அசையாப் பொருள்களுள்
हिमालयः अस्मि—இமயமலை யாகிறேன்.

**अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणाञ्च नारदः ।**
**गन्धर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः ॥ २६ ॥**

அச்வத்த: ஸர்வவ்ருக்ஷாணும் தேவர்ஷீணுஞ்ச நாரத: |
கந்தர்வாணும் சித்ரரத: ஸித்தாநாம் கபிலோ முநி: || 26 ||

सर्ववृक्षाणाम्—ஆலம் முதலான மரங்களுக்குள்
अश्वत्थ:—அரசமரமாகிறேன்.
देवर्षीणां च—தேவர்களாய் ரிஷிகளாயிருப்பாரில்
नारद: च—நாரதருமாகிறேன்.
गन्धर्वाणां—கந்தர்வர்களுக்குள்
चित्ररथ:—சித்ரரதனென்பவனாகிறேன்.
सिद्धानां—தத்துவங்களை யறியுமளவுக்கு யோகமஹிமை பெற்றவருள்
कपिल: मुनि:—கபிலமுனியாகிறேன்.

யோகத்தில் ஸித்தி பெற்றவர்கள் அணிமா, மகிமா என்றாற் போலே சில ஸித்தி பெறலாம். உலக வஸ்துக்களில் முன் பின் உள்ள சிலவற்றை யுமறியலாம். கபிலர் மூலகாரணமான ப்ரக்ருதி மஹதஹங்காராதி தத்துவங்களையும் ஜீவ தத்துவங்களையும் ஒருவாறு யோகத்திற் கண்டது சிறப்பாகும். அது எனது அபிமானத்தினலாயிற்று. (26)

उच्चैःश्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम् । See Nr P. 30-9-72
ऐरावतं गजेन्द्राणां नराणाञ्च नराधिपम् ॥ २७ ॥

உச்சைச்ச்ரவஸம் அச்வாநாம் வித்தி மாம் அம்ருதோத்பவம் |
ஐராவதம் கஜேந்த்ராணும் நராணும் ச நராதிபம் || 27 ||

अश्वानां—குதிரைகளுக்குள்
अमृतोद्भवम्—அமுதக்கடலிற் பிறந்த
उच्चैःश्रवसम्—உச்சைச் ச்ரவஸ் என்ற குதிரையை
मां विद्धि—நானென்று அறி.
गजेन्द्राणां—ச்ரேஷ்ட யானைகளில்
अमृतोद्भवम् ऐरावतम्—அமுதிலுண்டான ஐராவதத்தையும்
नराणां—மனிதர்களுக்குள்
नराधिपञ्च—அரசனையும்
मां विद्धि—நானுக அறி.

आयुधानामहं वज्रं धेनूनामस्मि कामधुक् । See Nr P 30-9-73
प्रजनश्चास्मि कन्दर्पः सर्पाणामस्मि वासुकिः ॥ २८ ॥

ஆயுதாநாம் அஹம் வஜ்ரம் தேநூநாம் அஸ்மி காமதுக் |
ப்ரஜநச்சாஸ்மி கந்தர்ப: ஸர்பாணும் அஸ்மி வாஸுகி: || 28 ||

आयुधानां—ஆயுதங்களுள்
वज्रम् अहम्—வஜ்ராயுதம் நான்.
धेनूनाम्—கறவைகளுக்குள்
कामधुक् अस्मि—காமதேனுவாகிறேன்.
प्रजन:—ப்ரஜையையுண்டுபண்ணுகிற
कन्दर्प: च अस्मि—காமமுமாகிறேன்.
सर्पाणाम्—ஒற்றைத்தலைப்பாம்புகளில்
वासुकि: अस्मि—வாஸுகியாகிறேன்.

अनन्तश्चास्मि नागानां वरुणो यादसामहम् । See Nr P 30-1-73/74
पितॄणामर्यमा चास्मि यमः संयमतामहम् ॥ २९ ॥

அநந்தச்சாஸ்மி நாகாநாம் வருணோ யாதஸாம் அஹம் |
பித்ரூணாம் அர்யமா சாஸ்மி யம: ஸம்யமதாம் அஹம் || 29 ||

नागानां च—மேலும் பல தலைப்பாம்புகளுள்
अनन्तः अस्मि—ஆதிசேஷனாகிறேன்.
यादसाम्—நீரில் வஸிக்கும் ஜீவர்களில்
वरुणः अहम्—வருணன் நான்.
पितॄणां च—மேலும் பித்ருக்களுள்
अर्यमा अस्मि—அர்யமனென்பவனாகிறேன்.
संयमतां—யமதண்டனை செய்கின்றவர்களுள்
यमः अहम्—யமன் நான்.

प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् । 30-31 See Nr P30-9-74/76
मृगाणां च मृगेन्द्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥ ३० ॥

ப்ரஹ்லாதச்சாஸ்மி தைத்யாநாம் கால: கலயதாம் அஹம் |
ம்ருகாணாஞ்ச ம்ருகேந்த்ரோऽஹம் வைநதேயச்ச பக்ஷிணாம் || 30 ||

दैत्यानां च—மேலும் அசுரர்களுக்குள்
प्रह्लादः अस्मि—ப்ரஹ்லாதனாகிறேன்.
कलयताम्—ஆயுள் கணக்கிடுவோரில்
कालः अहम्—காலன் நான்.
मृगाणां—மிருகங்களுள்
मृगेन्द्रः च अहम्—சிங்கமும் நான்.
पक्षिणां—பறவைகளுள்
वैनतेयः च—கெருடனுமாகிறேன்.

पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥ ३१ ॥

பவந: பவதாம் அஸ்மி ராம: சஸ்த்ரப்ருதாம் அஹம் |
ஜஷாணாம் மகரச்சாஸ்மி ஸ்ரோதஸாம் அஸ்மி ஜாந்ஹவீ || 31 ||

पवतां—வீசுகின்றவற்றினுள்
पवनः अस्मि—காற்றாகிறேன்.
शस्त्रभृताम्—வில்லாளிகளுள்
रामः अहम्—ஸ்ரீராமன் நான்.
झषाणां—மீன்களினுள்
मकरः च अस्मि—மகரமீனுமாகிறேன்.
स्रोतसां—பெருக்குகளுள்
जाह्नवी अस्मि—கங்கையாகிறேன்.

(அம்பெறிவதில் சிறப்பு இராமவுருவுக்கே யாகும்.)

सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन । 32-33
अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥ ३२ ॥ See Nr P30-9-76/78

ஸர்காணாம் ஆதிரந்தச்ச மத்யஞ்சைவாஹமர்ஜுந |
அத்யாத்மவித்யா வித்யாநாம் வாத: ப்ரவததாம் அஹம் || 32 ||

सर्गाणां–படைக்கப்படுமவற்றிற்கு
आदिः–படைக்கின்ற ஜீவனும்
अन्तः–அழிக்கின்ற ஜீவனும்
मध्यं च–காக்கும் ஜீவனும்
अहम् अर्जुन–அர்ஜுனா! நானே.
विद्यानां–கல்விகளுக்குள்
अध्यात्मविद्या–ஆத்மபரமாத்ம விஷயமான வித்யை (நான்).
प्रवदतां–சர்ச்சை செய்கின்றவர்களிடமுள்ள
वादः अहम्–உண்மை யறிவதற்கான சர்ச்சை நானே.

"அஹமாதிச்ச மத்யஞ்ச பூதாநாம் அந்த ஏவ ச" என்றவிடத்திலே தாமே காரணமாவதைச் சொன்னார். இங்கு உலகிலுள்ள காரண வஸ்துக்கள் தம் விபூதி யென்கிறார். (32)

अक्षराणामकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च ।
अहमेवाक्षयः कालो धाताऽहं विश्वतोमुखः ॥ ३३ ॥

அக்ஷராணாம் அகாரோऽஸ்மி த்வந்த்வஸ் ஸாமாஸிகஸ்ய ச |
அஹமேவாக்ஷய: கால: தாதாऽஹம் விச்வதோமுக: || 33 ||

अक्षराणाम्–எழுத்துக்களினுள்
अकारः अस्मि–அகரமாகிறேன்.
सामासिकस्य च–பல ஸமாஸங்களிலும்
द्वन्द्वः–த்வந்த்வஸமாஸமாகிறேன்.
अक्षयः–(நாழிகை, நாளென்றவாறு பல பிரிவுகளுக்கான) அழியாத
कालः अहम् एव–காலத்ரவ்யமும் நானே.
विश्वतोमुखः–திசைமுகனான
धाता–படைக்கின்றவனும் (பிரமனும்)
अहम्–நான்.

ஸமாஸங்களில், முன் சொல்லின் பொருள் ப்ரதானமாகவும், பின் சொல்லின் பொருள் ப்ரதானமாகவும் ஸமாஸங்கள் உண்டு. த்வந்த்வ ஸமாஸத்தில் இருசொற்பொருள்களும் ஸமப்ரதானமாக மேற் சொல்லோடு சேரும். அதனால் அதற்குச் சிறப்பாம். (33)

मृत्युः सर्वहरश्चाहमुद्भवश्च भविष्यताम् ।
कीर्तिः श्रीर्वाक् च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा ॥ ३४ ॥

ம்ருத்யுஸ் ஸர்வஹரச்சாஹம் உத்பவச்ச பவிஷ்யதாம் |
கீர்த்திச்ச்ரீர் வாக் ச நாரீணாம் ஸ்ம்ருதிர்மேதா த்ருதி: க்ஷமா || 34 ||

सर्वहरः–எல்லா ப்ராணன்களையும் அபஹரிக்கும்
मृत्युः च–யமலோகத்திலுள்ள ம்ருத்யு என்பவனும்
अहम्–நான்.
भविष्यताम्–உண்டாகப் போகின்றவற்றின்
उद्भवः च–உற்பத்தியும்
अहम्–நான்.
नारीणां–ஸ்த்ரீகளுக்குள்
श्रीः–ஸ்ரீதேவியும்
कीर्तिः–கீர்த்தியென்பவளும்
वाक्–வாக்கு என்பவளும்
स्मृतिः–நினைவும்
मेधा–நுண்ணறிவும்
धृतिः–தைர்யமும்
क्षमा च–பொறுமையும், பூமியும்
अहम्–நான்.

கீர்த்தி முதலானவர்கள் ஸ்ரீதேவியைப் போல் பகவானின் சக்தியான ஸ்த்ரீகள்; புகழ் முதலானவற்றின் அபிமானிகளாகையாலே அவ்வாறு பேர் பெறுகின்றனர். (34)

बृहत् साम तथा साम्नां गायत्री छन्दसामहम् ।
मासानां मार्गशीर्षोऽहमृतूनां कुसुमाकरः ॥ ३५ ॥

*ப்ருஹத்ஸாம ததா ஸாம்நாம் காயத்ரீ சந்தஸாம்அஹம் ,*
*மாஸாநாம் மார்கசிர்ஷோऽஹம் ருதூநாம் குஸுமாகர: || 35 ||*

तथा-அதுபோல்
साम्नाम्-ஸாமவேதத்தில் ஓதிய ஸாமகானங்களுக்குள்
बृहत् साम-ப்ருஹத் என்கிற ஸாமம் நான்.
छन्दसां-வ்ருத்தங்களுக்குள்
गायत्री अहम्-முதல் வ்ருத்தமாய் 24 அக்ஷரம் கொண்ட காயத்ரீ நான்.
मासानाम्-மாதங்களுக்குள்
मार्गशीर्षः अहम्-மார்கழி நான்.
ऋतूनाम्-ஆறு ருதுக்களில்
कुसुमाकरः-புஷ்பங்களுக்கு நிதியான வஸந்தருது நான்.

**द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम् ।**
**जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्त्वं सत्त्ववतामहम् ॥ ३६ ॥**

*த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் |*
*ஜயோऽஸ்மி வ்யவஸாயோऽஸ்மி ஸத்துவம் ஸத்துவவதாம் அஹம் ||36||*

छलयतां-(பணம்பறிக்க) வஞ்சனை வழியிலிழிந்தார்களின்
द्यूतम् अस्मि-சூதாட்டமென்ற செயலாகிறேன்.
तेजस्विनाम्-சிறந்த தேசு உடையாரின்
तेजः अहम्-தேசு நான்.
जयः अस्मि-வெற்றியாகிறேன்.
व्यवसायः अस्मि-உறுதியான எண்ணமாகிறேன்.
सत्त्ववताम्-ஸாத்விகர்களின்
सत्त्वम् अहम्-பெருமனது நான்.

**वृष्णीनां वासुदेवोऽस्मि पाण्डवानां धनञ्जयः ।**
**मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कविः ॥ ३७ ॥**

*வ்ருஷ்ணீநாம் வாஸுதேவோऽஸ்மி பாண்டவாநாம் தநஞ்ஜய: |*
*முநீநாமப்யஹம் வ்யாஸ: கவீநாம் உசநா கவி: || 37 ||*

वृष्णीनां-வ்ருஷ்ணி வம்சத்தார்களுள்
वासुदेवः अस्मि-வஸுதேவ புத்ரனை நானாகிறேன்.
पाण्डवानां-பாண்டு புத்ரர்களுள்
धनञ्जयः-அர்ஜுனனை நீயாகிறேன்.
मुनीनां-சாஸ்த்ர விசாரம் செய்வோரில்
व्यासः अहं-வியாஸ முனிவர் நான்.
कवीनाम्-புத்திக்கு எட்டாததை எட்டுமவர்களில்
उशना कविः-சுக்ராசார்யரென்ற கவியாகிறேன்.

யதுவம்சத்திற் சேர்ந்தது வ்ருஷ்ணி வம்சம். பலர் பிறந்திருக்கின்றனர். அங்கு வசுதேவருக்கு மகனைப் பிறப்பது பெருமையாகும். அவர்களிலும் எனக்கே வாஸுதேவனென்ற பெயராகையாலே அவரது ஸம்பந்தம் எனக்கு அதிகம். எனக்காகத் தவம் புரிந்தாரே. (37)

**दण्डो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम् ।**
**मौनश्चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम् ॥ ३८ ॥**

c.p. V.P. 6-5-87 अज्ञानमज्ञानमतो ऽन्यदुक्तम्।



தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீஷதாம் |
மௌநஞ்சைவாஸ்மி குஹ்யாநாம் ஜ்ஞாநம் ஜ்ஞாநவதாம் அஹம் ||

दमयताम्—அறமுறை தவறினரை சிக்ஷிப்பவர் செய்யும்
दण्डः अस्मि—சிக்ஷையாகிறேன்
जिगीषताम्—வெற்றியை விரும்பு கின்றவர்களின்
नीतिः अस्मि—வெற்றிக்கான நல்வழி யாகிறேன்.
गुह्यानाम्—பிறர் அறியாதவாறு மறைக்கவான உபாயங்களில்
मौनं च अस्मि-பேசாமலிருக்கையென்ற வியாபாரமாகிறேன்.
ज्ञानवताम्—அறிவைச் சிறப்பாகப் பெற்றவரின்
ज्ञानम्—அறிவாகிறேன்.

இங்கே 'பூதாநாமஸ்மி சேதநா' என்றவிடத்தில் அசேதநத்தினும் வேறுபாட்டிற்கான அறிவு என்ற குணம் பொதுவாகக் கூறப்பெற்றது. இப்போது சிறந்த ஞானம் சொல்லப்பட்டது. (38)

**यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।**
**न तदस्ति विना यत् स्यान्मया भूतं चराचरम् ॥ ३९ ॥**

யச்சாபி ஸர்வபூதாநாம் பீஜம் ததஹம் அர்ஜுந |
ந தத் அஸ்தி விநா யத் ஸ்யாத் மயா பூதம் சராசரம் || 39 ||

अर्जुन—அர்ஜுந !
सर्वभूतानाम्—உண்டாம் வஸ்துக் களில் எல்லாவற்றிற்கும்
यत् बीजम्—எதெது விதையாமோ
तत् चापि—அதுவும்
अहम् अस्मि—நான் ஆகிறேன்.
चराचरम्—ஜங்கமமோ ஸ்த்தாவரமோ
यम् भूतम्—எந்த வஸ்து
मया विना स्यात्—நான் இன்றி தனியாகுமோ,
तत् न अस्ति—அது இல்லை.

எல்லாவற்றிற்கும் வித்தாய் (உபாதாநகாரணமாய்) இருப்பது எதெதோ அததில் உட்புகுந்தவனுவேன். அதனால் கார்யமான வஸ்துக் களில் ஒன்றுவது என்னைவிட்டு இருப்பதில்லை. எங்கும் நான் பரவி யிருக்கிறேன் என்றபடி. காரண வஸ்துவில் இராமல் கார்ய வஸ்துவில் மட்டும் நான் இருப்பதாகில் நானின்றியே அது உண்டாயிற்றென்ன லாம். நானே வித்திலும் இருப்பதால் அதது பிறக்கும் போதே என்னுடன் சேர்ந்தே உண்டாகுமென்றபடி. இதனால் சரீராத்மபாவம் சொன்னதாகும். ஒரு நொடியும் விடாமல் தரிக்கப்படுவதும் நியமிக்கப் படுவதும் சொத்தாயிருப்பதும் சரீரமாகுமே. 'மயா விநா' என்பதற்கு நான் தவிர என்ற பொருளல்ல. अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः என்று எங்கும் தான் இருப்பதாகவும் தன்னைவிட பூதங்கள் வேருக உள என்றும் முன் அறிவித்ததாராதலின்.

**कारणे स्थितिं विना कार्यस्थितिमात्रोक्तौ कार्यं परमात्मरहितं पूर्वं जायते पश्चात् तत्संबन्ध इति स्यात् । उपादानकारणेऽपि परमात्मनस्सद्भावात्तु कार्यं जायमानं परमात्मविशिष्टमेव जायत**

इत्यर्थः । एवं सार्वकालिकाधारत्वादिविशिष्टत्वात् सर्वात्मत्वं सिद्धम् । एतद्दैशद्यायैव वीजं तदहमित्युक्त्वा मया विना न किञ्चिदस्तीत्युक्तिः । तेन क्षणमपि मया विना नास्तीत्यर्थलाभः ॥

**नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परंतप ।**
**एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥ ४० ॥**

நாந்தோऽஸ்தி மம திவ்யாநாம் விபூதீநாம் பரந்தப |
ஏஷ தூத்தேசத: ப்ரோக்தோ விபூதேர் விஸ்தரோ மயா || 40 ||

परंतप—பகைவரை வதைப்பவனே !
दिव्यानां—சுபமான
मम विभूतीनाम्—எனது நியாம்ய வஸ்துக்களுக்கு
अन्तः नास्ति—முடிவில்லை.
एषः—கீழ்க்கூறிய
विभूतेः विस्तरः—நியாம்ய விஷயமான விரிவானது
उद्देशतः तु—ப்ரதானமாக எடுத்துக் காட்டும் வகையிலேதான்
प्रोक्तः—அறிவிக்கப் பெற்றது.

எதற்கும் எந்த விதத்திலும் சிறப்பும் என்னுடையதென்று சொல்லாத இடங்களிலும், கொள்ள வேண்டுமென்கிறார்—

**यद्यत् विभूतिमत् सत्त्वं श्रीमत् ऊर्जितमेव वा ।**
**तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसंभवम् ॥ ४१ ॥**

யத் யத் விபூதிமத் ஸத்துவம் ச்ரீமத் ஊர்ஜிதமேவ வா |
தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்சஸம்பவம் || 41 ||

यत् यत् सत्त्वम् எந்தெந்த ஜீவன்
विभूतिमत्—தான் ஆளும் வஸ்துவைச் சிறப்பாகக் கொண்டதோ
श्रीमत्—அடிகுள்ளதோ அல்லது செல்வமுள்ளதோ.
ऊर्जितम्—நன்முயற்சியுள்ளதோ
वा एव—இன்னும் வேறு சிறப்புள்ள தேயோ,
तत् तत्—அந்தந்த ஜீவன் யாவும்
मम—எனது
तेजः अंशसंभवम्—மற்றவற்றை அடக்கி எழுகை என்ற எனது குணத்தின் சிறு துளியினின்று அவ்வாறு உண்டாவதாக
त्वम् अवगच्छ—நீ அறிவாயாக.

ஆளப்படும் வஸ்துவோ, சொத்தோ, அழகோ அற்புத முயற்சியோ ஏதேனும் சரி, மற்றவற்றைவிட மேலானதென நினைக்கக் கூடுமாகில், அது எனது தேசின் சிறு பாகத்தாலென்றறிவாயாக. தேசாவது மற்றவற்றைக் கீழ்ப்படுத்தி மேலெழும் வல்லமை. அதனின்று அவை யென்பதற்குப் பொருத்தமுண்டு.

विभूतिर्वा कान्तिर्वा संपत्तिर्वा सदुद्योगो वा क्वचिदितरापेक्षयाऽतिशयिततया लक्ष्यते चेत्—पराभिभावकः स विशेषः मदीयपराभिभवनसामर्थ्यरूपतेजस्संबन्धिस्वल्पांशाधीन एवेति निर्धार्यम् । (41)

अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन । See Nr P. 30-11-70/71
विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ॥ ४२ ॥

*அதவா பஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந |*
*விஷ்டப்யாஹம் இதம் க்ருத்ஸ்நம் ஏகாம்சேந ஸ்த்திதோ ஜகத் ||42||*

अथवा—அல்லது
अर्जुन—அர்ஜுனா
एतेन—கீழ்க்கூறியபடியான
बहुना—விரிவான
ज्ञातेन—அறிவினால்
तव किम्—உனக்கென்னவது ?
इदं जगत्—இவ்வுலகினை
कृत्स्नम्—சிறிதும விடாமல்
एकांशेन—ஆள்கையின் ஓர் அம்சத்தாலே
विष्टभ्य—தரித்து வ்யாபித்து
अहं स्थित:—நான் இருக்கின்றேன்.

ஆக எங்குமே என்னைக் காண்பது தகும். நீ கேட்டதற்காகச் சில இடங்கள் குறித்தேனத்தனை.

பத்தாவது அத்தியாயம் முற்றும்.

ஸ்ரீமத் பகவத்கீதை பத்தாம் அத்தியாயத்தின் பொருள் * * * Nr P. 30-11-71/13

## பதினோராவது அத்தியாயம்

ஒன்பதாம் அத்தியாயத்தில் உபதேசிக்கப் பெற்ற பக்தியின் உற்பத்தி வளம் இவற்றிற்காக குண விபூதிகளை (10. ல்) பகவான் சொல்ல அதை விரிவாகக் கேட்டுக் களித்து மேலே அர்ஜுனன் சொல்லுகிறான்—

अर्जुन: उवाच—அர்ஜுனன் சொன்னதாவது—

मदनुग्रहाय परमं गुह्यमध्यात्मसंज्ञितम् । See Nr. P. 30-12-73/74
यत् त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम ॥ १ ॥

*மதநுக்ரஹாய பரமம் குஹ்யம் அத்யாத்மஸம்ஜ்ஞிதம் |*
*யத் த்வயோக்தம் வசஸ்தேந மோஹோऽயம் விகதோ மம || 1 ||*

मदनुग्रहाय—என்னை அருள்வதற்காக
परमं गुह्यम्—மிக இரஹஸ்யமான
अध्यात्मसंज्ञितम्—ஆத்ம விஷயமாகப் பேர் பெற்ற
यत् वच:—முதல் ஆறு அத்யாயத்தைக் சேர்ந்த எந்த உபதேசம்
त्वया उक्तम्—உம்மால் அருளப் பெற்றதோ
तेन—அதனால்
मम अयम्—என்னிடம் குடிகொண்டிருந்த
मोह: विगत:—மோகம் அகன்றது.

முதலில் தேஹம் வேறு ஆத்மா வேறு என்றது போன்ற விவேகம் ஏற்பட்டு விட்டது. இது நிற்க.

भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया । See Nr P. 30-12-74/75
त्वत्त: कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २ ॥

*பவாப்யயௌ ஹி பூதாநாம் ச்ருதௌ விஸ்தரசோ மயா |*
*த்வத்த: கமலபத்ராக்ஷ மாஹாத்ம்யம் அபி சாவ்யயம் || 2 ||*

कमलपत्राक्ष—செந்தாமரையிதழ் போன்ற கண்கள் உடைய திருமாலே
त्वत्तः—உம்மிடமிருந்து
भूतानां—பிராணிகளுடைய
भव-अप्ययौ—பிறப்பும் இறப்பும்
विस्तरशः—மேன்மேல் விரிவாக
मया श्रुतौ-என்னால் கேட்கப்பெற்றன.
अव्ययम्—அழிவற்ற
माहात्म्यम् अपि च—உமது மாஹாத்ம்யம்—எவ்விதத்திலும் எல்லாவற்றையும் நியமித்திருக்கையும்
श्रुतं हि—கேட்கப் பெற்றதே.

முதல் ஆறு அத்யாயங்கள்மூலம் ஜீவாத்மாவின் விஷயமான பகுத்தறிவுக்கு மேலாக ஏழாம் அத்தியாயம் தொடங்கி எல்லாம் படைப்பதும் அழிப்பதும் நியமிப்பதுமான உமது குண விபூதிகளும் விரிவாக அறியப் பெற்றனவே.

**एवमेतद् यथाऽऽत्थ त्वमात्मानं परमेश्वर । ~~Sec Nr P. 30-12-75/76~~**
**द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥ ३ ॥**

*ஏவமேதத் யதாऽऽத்த த்வம் ஆத்மாநம் பரமேச்வர |*
*த்ரஷ்டும் இச்சாமி தே ரூபம் ஐச்வரம் புருஷோத்தம || 3 ||*

परमेश्वर—ஸர்வேச்வரேச்வரனே
आत्मानम्—உம்மைப்பற்றி
यथा त्वम् आत्थ—என்ன நீர் சொல்லுகிறீரோ
एतत् एवम्—இது இவ்வாறே.
पुरुषोत्तम—பரமேச்வரனாய் ஸர்வ புருஷச்ரேஷ்டனே!
ते ऐश्वरं रूपम्—உலகம் ஆளும் உமது உருவை
द्रष्टुमिच्छामि—காண விரும்புகிறேன்.

எல்லாம் விரிவாகக் கேட்டு உமது விபூதிகளை யறிய விரும்பினேன். மற்ற விஷயம் போல் அவையும் விரிவாக உரைக்கப் பெற்றன. எல்லாவற்றிற்கும் அந்தராத்மாவான உம்மைப் பற்றி நீர் உரைக்கின்றதெல்லாம் உண்மை. ஆக நீயே பரமேச்வரன் புருஷோத்தமன். அவதாரம் செய்து மனிதன் போல் தோன்றித் தம்மை மறைத்து வரும் உமது உண்மையான உலகத்தையாளும் உருவைக் காண விரும்புகிறேன். புருஷோத்தமனை உமது வாத்ஸல்யாதி குணங்கள் இதற்கு என்னைத் தூண்டுகின்றன. ஸங்கல்ப்பமாத்திரத்தினால் எல்லாம் நடத்தும் எனக்கு ஈச்வரரூபம் ஒன்று இருப்பதாக எவ்வாறு கூறுகிறு யென்னுமைக்காகவும் पुरुषोत्तम என்றது. புருஷஸூக்தத்தில் ஆயிரக் கணக்கான தலையும் கண்ணும் கழலுமான பேருருவம் ஓதப்பட்டுள்ளதே. முடிவில் पुरुषं महान्तम् என்கிறதே என்ற கருத்தாம்.

परमेश्वरोऽहं संकल्पमात्रेण सर्वं साधयामि । तत् ईश्वरत्वाय रूपापेक्षां कथं मन्यसे इति शंकानुद्भवायापि पुरुषोत्तमेति संबुद्धिः । पुरुषसूक्ते सहस्रशीर्षाक्षिपादादिमत्त्वेन अतएव 'पुरुषं महान्तम्' इति च प्रसिद्धः किल भवानित्यभिप्रायः ॥ (3)

**मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।** See Nr P. 30-12-77

**योगेश्वर ततो मे त्वं दर्शयाऽऽत्मानमव्ययम् ॥ ४ ॥**

*மந்யஸே யதி தத் சக்யம் மயா த்ரஷ்டும் இதி ப்ரபோ |*

*யோகேச்வர ததோ மே த்வம் தர்சயாத்மாநம் அவ்யயம் || 4 ||*

प्रभो—ஸர்வப்ரபுவே (அளிக்க வல்லனே)
तत्—உமது ஈச்வரரூபம்
मया—ப்ராக்ருதம் போன்ற உருவை மட்டும் காண்கிற என்னால்
द्रष्टुं शक्यम् इति—காணக்கூடுமென்று
मन्यसे यदि—நினைப்பீராகில்
ततः—அப்போது
योगेश्वर—கல்யாண குணங்களுக்குக் கொள்கலமானவரே
त्वम् आत्मानम्—நீர் உம்மை
अव्ययम्—குறைவற
मे दर्शय—எனக்குக் காட்டியருள வேணும்.

நீர் நியமிக்கும் விபூதிகளையும், விபூதிகளைப் போல் தோன்றும் உமது விபவரூபங்களையுமே காண வல்லன் யான். நீர் உபதேசித்த ஆத்மபரமாத்மஸ்வரூபங்களை யோகமார்க்கமின்றிக் காணவல்லனல்லேன். உலகையாளும் உமது ஐச்வர ரூபங்கூட ஆத்ம பரமாத்மாக்களைப் போலே காணவாகாதவையா, அல்லது இந்திரியங்களுக்கு இலக்கான நிறம் முதலான குணங்கள் கொண்ட மூர்த்தியானபடியாலே அவ்வளவு பிரயாசையின்றி காணவாகுமா என்று ஐயப்படுகிறேன். காணவாகுமென்று கொண்டு அதற்கு உரிய அருள் புரியலாமாகில் காணுமாறருளாய். அப்போது தானே ஸர்வேச்வரனைக் கண்டேன் என்று களிக்கலாம். (4)

அவாவும் அடக்கமும் நிரம்பி அழகாக விண்ணப்பம் செய்யும் அர்ஜுனனிடம் அன்பு மிக அருளிச் செய்கிறார்—

**पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।** See Nr P. 30-12-78

**नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥ ५ ॥**

*பச்ய மே பார்த்த ரூபாணி சதசோऽத ஸஹஸ்ரச: |*

*நாநாவிதாநி திவ்யாநி நாநாவர்ணாக்ருதீநி ச || 5 ||*

पार्थ—அர்ஜுனா
नानाविधानि—வேஷம் அணி ஆயுதம் முதலியன வெவ்வேறாய் பல விதமாயும்
नाना वर्ण आकृतीनि—நிறம் உருவமெல்லாம் பலவாயுமான
दिव्यानि—அப்ராக்ருதங்களான
मे रूपाणि—எனது உருவங்களை
शतशः—நூற்றுக்கணக்காகவும்
अथ सहस्रशः—மேலே ஆயிரக் கணக்காகவும்
पश्य—பார்.

உன்னிடம் உள்ள அன்பினால், உனக்கு ஐச்வர ரூபமென்று ஒருருவம் மட்டும் காண்பிப்பதோடு நிற்காமல் எல்லா வுருக்களையும் காண்பிக்க

விரும்புகிறேன், நிறம், உருவம், வேஷம், பூஷணம், ஆயுதம் என்றெல் லாம் வெவ்வேறான உருவங்கள் எண்ணற்றவை நீ காணவாகின்றன. (ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரங்களுக்கான ஸங்கர்ஷண ப்ரத்யும்ன அநிருத்த ரூபங்கள், கேசவாதிகளான வ்யூஹாந்தரங்கள், பத்மநாபாதி விபவரூபங்கள் என்ற பிரிவுகளோடு कृष्णरूपाण्यनन्तानि என்றாற் போலே விபவங்களில் உட்பிரிவுகளும் உண்டு. அமுதம் கடையும் போது ஆமையாவது மட்டுமின்றி அனேக உருக்களைக் கொண்டதையும் ப்ரமா ணம் கூறும். ஆகையால் शतशोऽथ सहस्रशः என்று கூறி எல்லாம் காண் என்றருள்கிறார்.)

(5)

எவற்றிற்கு இவன் ஈச்வரனோ, அவற்றை யெல்லாம் கண்டால் தானே, அவற்றின் ஈச்வரனென்று ஸம்பந்தம் அறியக் கூடும். அதற்காக அவற்றையும் காண் என்கிறார்—

पश्यादित्यान् वसून् रुद्रान् अश्विनौ मरुतस्तथा ।
बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥ ६ ॥

பச்யாதித்யாந் வஸூந் ருத்ராந் அச்விநௌ மருதஸ்ததா |
பஹூந்யத்ருஷ்டபூர்வாணி பச்யாச்சர்யாணி பாரத || 6 ||

भारत—பரதவம்சப் புதல்வனே!
आदित्यान्—ஆதித்யகணத்தையும்
वसून्—வசுகணத்தையும்
रुद्रान्—ருத்ரகணத்தையும்
अश्विनौ—அச்வினி தேவதைகளையும்
तथा मरुतः—அவ்வாறே மருத்கணத்தையும்
पश्य—பார்.
अदृष्टपूर्वाणि—இதற்கு முன் காணாத
आश्चर्याणि—வியக்கத் தக்க
बहूनि—மற்றும் பலவற்றையும்
पश्य—பார்.

ஆதித்யாதிகளில் சிலரை நீ கண்டிருக்கலாம். ஆனாலும் எல்லோரை யும் எனக்கு அதீனமான நிலைமையில் காண்பது இப்போதேயாகும். அத்துடன் வெகு வியப்பான வஸ்துக்கள் இதற்கு முன் என்றும் காணாதவையும் காணலாகும்.

(6)

எனது ரூபத்தையும் பிற வஸ்துக்களையும் கண்டமட்டின்றி, அவை எனக்கு அதீனமென்றும் நீ காணவேண்டும். அதற்காக அவை யெல் லாம் என்னுருவால் தாங்கப்பட்டிருக்கும் நிலையைக் காண்பிக்கிறேன் என்கிறார்—

इहैकस्थं जगत् कृत्स्नं पश्याद्य सचराचरम् ।
मम देहे गुडाकेश यच्चान्यत् द्रष्टुमिच्छसि ॥ ७ ॥

இஹைகஸ்த்தம் ஜகத் க்ருத்ஸ்நம் பச்யாத்ய ஸசராசரம் |
மம தேஹே குடாகேச யச்சாந்யத் த்ரஷ்டுமிச்சஸி || 7 ||

गुडाकेश—உறக்கத்தை அடக்கின வனே!
सचराचरं—ஜங்கமஸ்த்தாவரங்கள் கொண்ட
कृत्स्नं जगत्—முழு வுலகையும்
मम इह देहे—எனது இவ்வோருருவில்
एकस्थम्—சொற்ப பாகத்தில் இருப்பதாக
अद्य पश्य—இப்போது காண்.
अन्यत् यत् च—வேறு எதையும்
द्रष्टुम् इच्छसि—காண விரும்புகிருயோ
(तच्च) पश्य—அதையும் பார்.

எனது மேனியில் ஓரிடத்தில் எல்லாம் அடங்கியதாகக் காண்பத னின்று எல்லாம் எனக்கு அதீனமென்பது விளங்கும். यच्चान्यत्—அதாவது இவற்றைக் காப்பது மட்டுமன்றி படைப்பதும் அழிப்பதும் நானே என்பதையும் நீ காண விரும்பும் அளவுக்குக் காணலாம். காணப்படும் உலகில் யார் என்னுடன் பழகுகின்றனர், யார் விலகுகின்றனர், யார் நெருங்கி விளங்குகிருர்கள் என்ருற் போன்ற விஷயங்களையும் காண லாம். நிகழ்காலத்திய வஸ்துக்களை மட்டுமன்றி கடந்தவற்றையும் வரப்போகின்றவற்றையும் கூடக் காணலாம். (இங்கே துர்யோதனன் முதலாஞர் மாள்வதையும் காணலாம் என்பதும் கருத்திலிருக்கும். ஆனல் அவர்களை அவ்வாறு காண விரும்பவில்லையாகையால் द्रष्टुमिच्छसि என்பது சேராதே யென்னில், அந்நிலையை அவன் காட்டும் போது இவ னுக்குக் காண விருப்பம், தானே உண்டாகும். த்வேஷவாஸனை திடம். மேலும் போரினின்று முன்னே விலகவிருந்த அர்ஜுனன், இப்போது கண்ணனின் உபதேசம் பூர்த்தியாகின்றபடியால் போருக்கு மனம் வைத்து விட்டவனே. எனவே பகைவர் மாள்வதும் அவனுக்கு ஒருவாறு விருப்பத்திலிருப்பதே, ஸர்வேச்வரனின் முகத்திற் கடைவாயில் அகப் பட்டுப் பொடியாகின்றபடி அவன் எதிர்பார்க்காமலிருந்தாலும் மாள் வது விரும்பியதேயாகும்.) (7)

पश्य पश्य என்று மேன் மேல் மொழிகின்றீரே. நான் முழிக்கிறேனே. ஒன்றுமே தெரியவில்லையே என்கிருன் (எதையும் காணக் கண்ணுக்கு வல்லமையில்லை. வல்லமை யிருந்தாலும் தடையுள்ள போது காணுது. காணுமைக்குக் காரணம் பல ஸாங்க்யாதிசாஸ்த்ரங்களில் கூறப் பட்டுள்ளன. सौक्ष्म्यात् तुल्याभिघारात् என்ற அதிகரண ஸாராவளி ச்லோக மும் காண்க. திவ்ய சக்ஷுஸ் என்பது வேருன்றுமாகலாம். உள்ள கண்ணே கூட தடைகளை விலக்கிய பிறகு திவ்ய சக்ஷுஸ்ஸாகலாம்.)

**न तु मां शक्यसे द्रष्टुमनेनैव स्वचक्षुषा ।**
**दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥ ८ ॥**

Sec No P 30-12-80

ந து மாம் சக்ஷ்யஸே த்ரஷ்டும் அநேநைவ ஸ்வசக்ஷுஷா —
திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம் || 8 ||

तु—ஆனால், (நீ)
अनेन एव-இதேயான
स्वचक्षुषा—தனது கண்ணால்
मां द्रष्टुम्-என்னுருவைக் காண
न शक्यसे-வல்லனாகாய்.
दिव्यं चक्षुः-திவ்யமான கண்ணை
ते ददामि-உனக்கு அளிக்கிறேன்.
ऐश्वरम्-ஆள்கின்ற தன்மையான
मे योगम्-எனது வைபவத்தை
पश्य—பார்.

(சக்ஷுஷா என்பது சுத்தமான சொல். शक्ष्यसे என்பது ரிஷி வழக்கு. கர்மணி ப்ரயோகம் சேராது. शक्ष्यसि इति प्रयोक्तव्यम् । शक्ष्यसे इति आर्षम् । कर्मणि प्रयोगोऽत्र दुर्घटः अनेनैव-இப்போதுள்ள சாதாரணமான கண்காணாது. கண் வேறு அளித்தாரா. இக்கண்ணுக்கே அத்திறமை யளித்தாரா என்னில், ஏதேனுமாகுக.) पश्य योगम् ப்ராக்ருதனை உனக்கும் அக்கண் அளிக்கும் திறமையைப் பார். காண்பிக்கும் மற்றவற்றையும் பார். இனி தான் காண்பிக்கப் போகிறேன். (8)

सञ्जय उवाच—(த்ருதராஷ்ட்ரனுக்கு) ஸஞ்ஜயரே சொன்ன பேச்சு இதன் மேலே—

एवमुक्त्वा ततो राजन् महायोगेश्वरो हरिः ।
दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥ ९ ॥

ஏவம் உக்த்வா ததோ ராஜந் மஹாயோகேச்வரோ ஹரி: |
தர்சயாமாஸ பார்த்தாய பரமம் ரூபம் ஐச்வரம் || 9 ||

राजन्-அரசரே!
महायोगेश्वरः-மிக்க ஆச்சர்யமான சேர்க்கைகளுக்கு ஈச்வரனை
हरिः-பகவான்
एवम् उक्त्वा-இவ்வாறு கூறி
ततः-கண் அளித்த பிறகு
पार्थाय-அர்ஜுனனுக்கு
परमं-மிகச் சிறந்த
ऐश्वरम्-ஈச்வர நிலைமைக்குச் சார்ந்த
रूपम्-திருவுருவை
दर्शयामास-காண்பித்தான்.

அவ்வுருவுக்கு அடை மொழிகள் 2ச்லோகங்களில்—

अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।
अनेकदिव्याभरणं दिव्यानेकोद्यतायुधम् ॥ १० ॥
दिव्यमाल्याम्बरधरं दिव्यगन्धानुलेपनम् ।
सर्वाश्चर्यमयं देवमनन्तं विश्वतोमुखम् ॥ ११ ॥

அநேகவக்த்ர நயநம் அநேகாத்புததர்சநம் |
அநேகதிவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம் || 10 ||
திவ்யமால்யாம்பரதரம திவ்யகந்தாநுலேபநம் |
ஸர்வாச்சர்யமயம் தேவம் அநந்தம் விச்வதோ முகம் || 11 ||

देवं-அழகு நிறைந்து ப்ரகாசிக்கின்றதும்.

अनन्तं-(முக்காலத்திய வஸ்துக்களுக்கும் ஆதாரமாகையால்) தேச கால அளவற்றதும்

विश्वतो मुखम्-எல்லா திக்கிலும் முகங்களை யுடையதும்

अनेकवक्त्रनयनम्—முகங்களையும் கண்களையும் பலபலவாக உடையதும்

अनेक अद्भुत दर्शनम्—ஆச்சர்யமாய்க் காண வேண்டும் மற்றும் பல அங்கங்கள் உடையதும்

अनेक दिव्य आभरणम्-அப்ராக்ருதமான ஆயுதங்கள் பல உடையதும்

दिव्य-अनेक-அப்ராக்ருதமாய்ப் பலவான

उद्यत आयुधम्-தொழிலில் முயற்சி பெறுவிக்கப் பெற்ற படைகளைக் கொண்டதும்

दिव्य माल्य अम्बर धरम्—அப்ராக்ருதமான மாலைகளும் ஆடைகளும் அணிந்ததும்

दिव्य गन्ध अनुलेपनम्-அப்ராக்ருதமான மணம் மிக்க பூச்சையுடையதும்

सर्व-आश्चर्यमयम्-ஆச்சர்யமேயான எல்லா வஸ்துக்கள் நிறைந்ததுமான.

(உருவைக் காண்பித்தார்.)

ஒவ்வொரு முகத்திலும் கண்கள் பல என்பதற்காக वक्त्र என்ற சொல்லையும் சேர்த்தது. दर्शन என்ற சொல் முகம் கண் நீங்கலாக மற்ற அவயவங்களால் ப்ரியதர்சனன் என அறிவிக்கும். दिव्य என்றது எல்லாம் அப்ராக்ருதமாய், இவ்வுலகில் உண்டானவை யல்லவாகையாலே. திருமேனி திவ்யமென்பது 4ம் அத்தியாயத்திலேயே தெரிந்திருப்பதால் இங்குக் கூறப்படவில்லை. देवम् என்ற சொல்லும் திருமேனிக்கு விசேஷணமாகையால் லாவண்யத்தின் மிகுதியைக் கூறும். முதல் பூர்வார்த்தம் सहस्रशीर्षा पुरुषः सहस्राक्षः सहस्रपात् என்ற புருஷ ஸூக்தத்தை நினைத்துத் தொடங்கியதாகலாம். எனவே दर्शन என்றது பாதம் முதலானவற்றைக் கருதியாம். அங்கே शीर्ष என்று தலையைச் சொன்னாலும் அவை தனக்கு நேர்முகமாயிருப்பது பற்றி वक्त्र என்றான் இங்கு. (11

देवम् என்றதின் விரிவு மேலே—

**दिवि सूर्यसहस्रस्य भवेद् युगपदुत्थिता ।** See Nr. I. 31-1-85/86

**यदि भाः सदृशी सा स्यात् भासस्तस्य महात्मनः ॥ १२ ॥**

*திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபத் உத்திதா |*

*யதி பா: ஸத்ருசீ ஸா ஸ்யாத் பாஸஸ்தஸ்ய மஹாத்மந: || 12 ||*

दिवि—வானத்தில்

सूर्यसहस्रस्य—கதிரவன் ஆயிரத்தின்

भाः—ஒளியானது

युगपत्—ஒரே ஸமயத்தில்

उत्थिता—உண்டானதாக

भवेत् यदि—ஆகுமாகில்,

सा—அத்தகைய ஒளியானது

महात्मनः—பேருருவம் பெற்ற

तस्य—அந்த விச்வரூபியின்

भासः—ஒளிக்கு

सदृशी स्यात्-ஒருக்கால் ஸமமாகலாம்.

सहस्रस्य என்பது எண்ணற்ற என்ற பொருளில் வந்தது. அவ்வாறு வானத்தில் ஸூர்யக்கூட்டம் சேராது. ஒளியின் மிகுதிக்காக ஏதோ உவமான கற்பனை. உண்மையில் எதுவும் இதற்கு ஈடேயாகாது என்ற கருத்தினுல் स्यात् என்றதாம். (ஒரு முடியே கதிராயிரம் இரவி கலந்தெறித்தாலொத்ததாமா என வேண்டியிருக்க முழுமைக்கும் அது உவமையாமோ. இங்கே சூர்யவொளிக்கு ஸமம் மேனியொளியென்றுமே இதற்கு அது ஸமமென்றதாலே குணக்குறைவான சூரியவொளி உபமானமாகத் தகாதெனக் குறித்ததாம்.) (12)

இத்தகைய திருமேனியைக் கண்ணன் காண்பித்தான் என்றார். அதனுல் அர்ஜுனன் கண்டான் என்றதாயிற்று. அம்மேனியில் உலகினைக் கண்டான் என்கிறார் மேலே—

**तत्रैकस्थं जगत् कृत्स्नं प्रविभक्तमनेकधा ।**
**अपश्यत् देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥ १३ ॥**

*தத்ரைகஸ்த்தம் ஜகத் க்ருத்ஸ்நம் ப்ரவிபக்தம் அநேகதா |*
*அபச்யத் தேவதேவஸ்ய சரீரே பாண்டவஸ்ததா || 13 ||*

तदा पाण्डवः—அப்போது அர்ஜுனன்
देवदेवस्य—தேவர்களின் தேவனுடைய
तत्र—கீழ்க்கூறிய விசேஷங்கள் உள்ள
शरीरे—விராட்ரூபத்தில்
एकस्थम्—ஒரு பாகத்திலிருப்பதாக
अनेकधा—ப்ரஹ்மாதிகளான பற்பல யோனிகளாகவும் கீழ்மேல் பற்பல உலகங்களாகவும்
प्रविभक्तं—செவ்வனே பிரிக்கப்பட்ட
कृत्स्नं—அனைத்துமான
जगत्—உலகை
अपश्यत्—பார்த்தான்.

**ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनञ्जयः ।**
**प्रणम्य शिरसा देवं कृताञ्जलिरभाषत ॥ १४ ॥**

*தத: ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தநஞ்ஜய: |*
*ப்ரணம்ய சிரஸா தேவம் க்ருதாஞ்ஜலிரபாஷத || 14 ||*

सः धनञ्जयः—அந்த அர்ஜுனன்
ततः—எல்லாம் கண்ட பிறகு
विस्मय आविष्टः—மிக்க வியப்புண்டு
हृष्टरोमा—மயிர் சிலிர்க்கப்பெற்று
देवं—ஸர்வேச்வரனை
शिरसा प्रणम्य—தலையால் வணங்கி
कृत-अञ्जलिः—கைகூப்பினவனாய்
अभाषत—விண்ணப்பம் செய்தான்.

अर्जुन उवाच—அர்ஜுனன் சொன்னதாவது—

**पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसंघान् ।**
**ब्रह्माणमीशं कमलासनस्थमृषींश्च सर्वान् उरगांश्च दीप्तान् ॥ १५ ॥**

*பச்யாமி தேவாம்ஸ்தவ தேவ தேஹே*
*ஸர்வாம்ஸ்ததா பூதவிசேஷ ஸங்க்காந் |*

ப்ரஹ்மாணம் ஈசம் கமலாஸநஸ்த்தம்
ரிஷீம்ச்ச ஸர்வாந் உரகாம்ச்ச திப்தாந் || 15 ||

देव—தேவனே
तव देहे—உமது திருமேனியில்
सर्वान् देवान्—எல்லா தேவர்களையும்
तथा—அவ்வாறே
सर्वान्—எல்லா
भूतविशेष संघान्—பல உட்பிரிவுள்ள ப்ராணித் திரள்களையும்
ब्रह्माणम्—பிரமனையும்
कमलासनस्थं—கமலத்தை ஆஸனமாக உடைய பிரமனுக்கு அடங்கி நிற்கும்
ईशम्—சிவனையும்
सर्वान् ऋषीन्—எல்லா ரிஷிகளையும்
दीप्तान्—மணியொளி வீசப் பெற்ற
उरगान् च—நாகங்களையும்
पश्यामि—பார்க்கிறேன்.

ஒரு தேவதை, ஒரு பிராணி, ஓர் ரிஷி, ஒரு நாகம் விடாமல் மேல் நடு கீழ் உலகங்களிலுள்ள எல்லாவற்றையும் எல்லாம் படைக்கும் பிரமனையும், அவனுக்கு அடங்கி நிற்கும் ஸர்வ ஸம்ஹாரியான பரம சிவனையும் உமது விராட்ரூபத்தில் பார்க்கிறேன். (15)

இந்தத் திருமேனி எங்குத் தொடங்கி எங்கே முடிகின்றது, எது நடுபாகமென்பதை அறியகில்லேன் என்கிறான்.

अनेकबाहूदरवक्त्रनेत्रं पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् । 3o Nr. P. 31-1-88/89
नान्तं न मध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूप ॥ १६ ॥

அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம்
பச்யாமி த்வாம் ஸர்வதோऽநந்தரூபம் |
நாந்தம் ந மத்யம் ந புநஸ்தவாதிம்
பச்யாமி விச்வேச்வர விச்வரூப || 16 ||

अनेक—ஒரு சரீரத்தில் எண்ணற்ற
बाहु उदर वक्त्र नेत्रम्—புஜம் வயிறு முகம் கண் இவற்றையுடைய
अनन्तरूपम्—எல்லையற்ற ரூபமும் உடைய
त्वां सर्वत:—உம்மை எங்கும்
पश्यामि—பார்க்கிறேன்.
विश्व ईश्वर—எல்லாவற்றையும் ஆள்கின்றவரே
विश्वरूप—உலகையெல்லாம் மேனியில் உடையரே
तव आदिम्—உமது உருவின் ஆரம்பத்தை
न पश्यामि—காணகில்லேன்.
न मध्यं—நடு இடத்தைக் காணகில்லேன்.
न अन्तम्—முடிவையும் காணகில்லேன்.

கீழும் மேலும் கண் வைத்துக் காணக் காண மேன்மேலே திருமேனி போய்க் கொண்டிருப்பதால் அடி முடிவு அறியவியலாமையால் இடையிது என்றும் அறியமாட்டிலேன். (ரூபம் அனந்தம் எல்லையற்றதென்றதால் ஆதிமத்யாந்தங்களைக் காணவில்லை யென்பதற்கு அவையில்லை யென்பதே பொருளாம். (இந்த விச்வரூபம் எண்ணற்ற அவதாரரூபங்களை யுட்கொண்டதாலும் அநந்த ரூபமாகலாம்.) (16)

See NrP 31-1-89 (90)

किरीटिनं गदिनं चक्रिणञ्च तेजोराशिं सर्वतो दीप्तिमन्तम् ।
पश्यामि त्वा दुर्निरीक्ष्यं समन्तात् दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥ १७ ॥

கிரீடிநம் கதிநம் சக்ரிணஞ்ச
தேஜோராசிம் ஸர்வதோ தீப்திமந்தம் |
பச்யாமி த்வா துர்நிரீக்ஷம் ஸமந்தாத்
தீப்தாநலார்கத்யுதிம் அப்ரமேயம் || 17 ||

तेजोराशि—சோதிக் குவியலாய்
सर्वतः—எல்லாப் புறமும்
दीप्तिमन्तं—ஒளி வீசிகின்றவராய்
दीप्त—ஒளி நிறைந்த
अनल अर्क—நெருப்பினுடையவும் சூரியனுடையவும்
द्युतिम्—கிரணம் போன்ற கிரணமுடையராய்
समन्तात्—எல்லாப் பக்கங்களிலும்
दुर्निरीक्षम्—காணவாகாமலும்
अप्रमेयम्—அளவிடவாகாமலுமுள்ள
त्वा—உம்மை
किरीटिनं—கிரீடமணிந்தவரும்
गदिनम्—கதையை தரிப்பவரும்
चक्रिणं च-திருவாழி ஏந்தியவருமாக
पश्यामि—பார்க்கிறேன்.

ஒரே சோதியாயிருப்பதால் ஆபரணங்களையும் ஆயுதங்களையும் பிரித்துக் காண்பது கூடவில்லை. ஆயினும் கண்டேன். உமக்கே தகுமான கிரீடாதிகளைத் திருவாழியுடன் கண்டதால் நீர் இன்னுரென நன்கு விளங்கிற்று என்றபடி. (ஒளி நிறைந்திருப்பதால் காணக்கூடவில்லை யென்பதற்காக தீப்தாநலார்க்க என்றதாம்.) (17)

See NrP 31-1-90(91)

त्वमक्षरं परमं वेदितव्यं त्वमस्य विश्वस्य परं निधानम् ।
त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता सनातनस्त्वं पुरुषो मतो मे ॥ १८ ॥

த்வம் அக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வம் அஸ்ய விச்வஸ்ய பரம் நிதாநம் |
த்வம் அவ்யய: சாச்வததர்மகோப்தா
ஸநாதநஸ்த்வம் புருஷோ மதோ மே || 18 ||

இவ்வாறு நேரிற் கண்டதிலிருந்து
वेदितव्यं-ப்ரமாணங்களைக் கொண்டு அறிய வேண்டிய
परमम् अक्षरम्-உயர்ந்த அக்ஷரமென்ற வஸ்துவாக
त्वं मे मतः-நீர் என்னால் அறியப் பட்டீர்.
अस्य विश्वस्य-இம் முழுவுலகுக்கு
परं निधानम्-பரமாதாரமாக
त्वं मतो मे-நீர் அறியப்பட்டீர்.
अव्ययः-ஸ்வரூபகுணவிபவங்களில் அழிவற்றவராய்
शाश्वतधर्म-ஸநாதந தர்மங்களை
गोप्ता-காக்கின்றவராக
त्वं मतो मे-நீர் அறியப்பட்டீர்.
सनातनः पुरुषः-எப்போதுமுள்ள பரம புருஷனுகவும்
त्वं मतो मे-நீர் அறியப்பட்டீர்.

கிரீடாதிகளைக் கொண்டு உம்மை கண்ணனென ஸர்வேச்வரனென அறிவது போல் முண்டகம், கார்கி ப்ராஹ்மணம் என்ருற்போன்ற

வேதங்களின் விழுப்பொருள் நீர் என்றறிவதும் நேரிற் கண்டதனின்று இலகுவாயிற்று. அவ்வாறே நேரில் காண்கிறேன். (18)

தான் நினைப்பது உண்மையென்பதை மீண்டும் தான் கண்டிருக்கும் படிகளைப் பேசி ஊர்ஜிதப்படுத்துகிறான். ஸம்ஹாரசக்தியை ப்ரதானமாகப் பேசுகிறான்—

**अनादिमध्यान्तमनन्तवीर्यमनन्तबाहुं शशिसूर्यनेत्रम् ।**
**पश्यामि त्वा दीप्तहुताशवक्त्रं स्वतेजसा विश्वमिदं तपन्तम् ॥ १९ ॥**



*அநாதிமத்யாந்தம் அநந்தவீர்யம்*
*அநந்தபாஹும் சசிஸூர்யநேத்ரம் |*
*பச்யாமி த்வா தீப்தஹுதாசவக்த்ரம்*
*ஸ்வதேஜஸா விச்வமிதம் தபந்தம் || 19 ||*

त्वा-உம்மை
अनादिमध्यान्तम्—ஆரம்பம் இடை முடிவு ஒன்றுமில்லாதவராகவும்
अनन्तवीर्यम्—எல்லையற்ற வீர்யாதி குணம் உடையராகவும்
अनन्तबाहुम्-எண்ணற்ற புஜம் முதலான அவயவங்கள் உடையராகவும்
शशिसूर्यनेत्रम्-நல்லவர் கெட்டவர் என்ற பிரிவைக்காண சந்திரனைப் போன்றும் சூர்யனைப் போன்றும் இருக்கும் கண்கள் உடையராகவும்
दीप्तहुताशवक्त्रम्-ஒளி வீசும் நெருப்பு நிறைந்த முகம் உடையராகவும்
स्वतेजसा-தமது தேசினால்
इदं विश्वम्—இவ்வுலகை
तपन्तम्-எரித்து அடக்குகின்றவராகவும்
पश्यामि—காண்கிறேன்.

உலகெல்லாம் காட்டும் ஒரே திருமேனியில் எண்ணற்ற முகம் புஜம் வயிறு பாதம் எல்லாம் எவ்வாறாகும், பாதத்தினின்று தலைவரையில் எல்லாம் எண்ணற்றனவாகில், உருக்களே பல என்றுதானே தேறுமென்னில், இங்கே பாஷ்யகாரர் அருளியதாவது-இடைபாகம் (இடுப்பு) ஒன்றேயாகும். அதினின்று மேலே வயிறுமுதல் தலைவரையில் தனித் தனியே பிரியும். அதுபோல் கால்களும் தொடையினின்று அடிவரையில் பல பிரியும். ஆயினும் இடைப்பாகம் ஒன்றாயிருப்பதால் ஒரே மூர்த்தி எனப்படுகிறதென்றவாறு. (19)

பயங்கரமான உருவைக் கண்டு நானும் தேவர் முதலானோரும் பயப்படுகிறோமென்கிறான்—

**द्यावापृथिव्योरिदमन्तरं हि व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः ।**
**दृष्ट्वाऽद्भुतं रूपमुग्रं तवेदं लोकत्रयं प्रव्यथितं महात्मन् ॥ २० ॥**

*த்யாவாப்ர்திவ்யோரிதமந்தரம் ஹி*
*வ்யாப்தம் த்வயைகேந திசச்ச ஸர்வா: |*

த்ருஷ்ட்வாऽத்புதம் ரூபமுக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மந் || 20 ||

द्यावापृथिव्योः—மேல் கீழுலங்கங்களெல்லாவற்றின்
इदम् अन्तरं—இந்த இடைவெளியெல்லாமும்
सर्वाः दिशः च—எல்லா திக்குகளும்
त्वया एकेन—உம்மால் ஒருவரால்
व्याप्तं हि—சூழப்பட்டனவல்லவோ.
इदम्—இப்படிப்பட்ட
अद्भुतम्—ஆச்சர்யமாயும்
उग्रम्—பயங்கரமாயுமிருக்கிற
तव रूपम्—உமது உருவை
दृष्ट्वा—பார்த்து
महात्मन्—ஆழமான மனம் உடையரே
लोकत्रयम्—மூன்று வித ஜனங்களும்
प्रव्यथितम्—நடுங்கா நின்றன.

அற்புதமாயும் பயங்கரமாயுமிருப்பதற்குக் காரணம் பிரம்மாண்டத்தினுட்புறமெல்லாம் உமது உருவம் சூழ்ந்திருப்பதால். அத்துடன் உமது மனதும் அறியப்படவில்லை. இந்த ரூபத்தை நாம் காணும்படி செய்தது எதற்காக என்று காண்போர் யாரும் அறிய முடியவில்லை. கேட்டவன் நான், காண்போர் இங்கு மூன்றுவித ப்ரஜைகள். ஸர்வேச்வரரான நீர் தேரோட்ட வீற்றிருப்பதினின்றே அஞ்சின தேவாசுரர்கள் இவ்வுருவைக் கண்டவுடனே அச்சம் மிக்கராய் இதனை உக்ரமாகவே காண்கின்றனரென்றபடி. (எம்பெருமானின் மேனி எங்கும் பரவியிருக்குமாகில். ப்ராணி ஸஞ்சாரம் எவ்வாறுருகுமென்னில். அவனது ரூபம் ஒன்றைத் தடுக்காது, ஒன்றாலும் தடைப்படாது.)

இங்கு लोकत्रयम् என்றது மூவுலகிலுள்ளோர் எல்லோரும் என்ற பொருளதன்று. அர்ஜுனனைப் போல் ஸஞ்ஜயர் ஒருவரே வ்யாஸரின் அனுக்ரஹத்தால் விச்வரூபத்தைப் பார்த்தார். போரிலுள்ள மனிதர் யாரும் பார்த்ததாகத் தெரியவில்லை. ஆகையால் ச்லோகங்களில் குறிப்பிட்ட சில தேவாஸுராதிகளையே கொள்ள வேண்டியிருப்பதால் மூன்றுலோகம் என்பதற்கு ப்ரதிகூலர் அனுகூலர் மத்யஸ்த்தரென்ற முவ்வகையோர் என்ற பொருளாம். மேல் ச்லோகத்திலும் இவ்விதமான மூவர் என விளங்கும். நிற்க. திவ்யசக்ஷுஸ்ஸு அர்ஜுனனுக்கு மட்டும் அளிக்கப்பட்டிருக்க தேவாஸுரர்கள் கண்டது எங்ஙனே என்னில், முவ்வகையான ப்ரஜைகள் பகவானிடத்தில் எவ்வாறு நடந்து கொள்ளுகிறார்களென்பதையும் விச்வரூபதர்சனத்தில் அர்ஜுனனுக்குத் தெளிவிப்பதற்காக அவர்களுக்கும் திவ்யசக்ஷுஸ்ஸை யளித்து அர்ஜுனன் அந்நிலையிலே அவர்களைக் காண இவன் செய்தானென்க. ஆகையால் இது வெறும் தோற்றமல்ல. ஒருவன் பக்தனானால் அவனுக்கு அனுகூலப்ரதிகூலராயிருப்பார்க்கும் அவன் அனுபவிக்கவான ஸுகதுக்கங்கள் உண்டென்பதையும் மோக்ஷம் புகும் பக்தர் விஷயத்திலே கண்டுள்ளோம். தேவாசுரர்கள் எல்லோருக்கும் அளித்தாரென்பதுமில்லை. மொத்தத்தில் கண்டவர் அதற்கான நல்வினையுள்ள ஒரு சிலரேயாவர்.)

अनुकूलानां कुतो व्यथेत्याशंक्य केषाञ्चित् तां दर्शयति। அனுகூலர்களுக்கும் வருத்த மென்பதைச் சிலரிடம் காட்டுகிறார்—

**अमी हि त्वा सुरसंघा विशन्ति केचिद्भीताः प्राञ्जलयो गृणन्ति ।**
**स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसंघाः स्तुवन्ति त्वां स्तुतिभिः पुष्कलाभिः ॥ २१ ॥**

*அமீ ஹி த்வா ஸுரஸங்க்கா விசந்தி*
*கேசித் பீதா: ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி |*
*ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷிஸித்தஸங்க்கா:*
*ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபி: || 21 ||*

हि—எங்ஙனெனில்—
अमी—அந்த—அனுகூலராய் துணிந்தவரான
सुरसंघाः—திரள் திரளான தேவர்கள்
त्वा विशन्ति—உம்மிடம் ஆவலுடன் புகுகின்றனர்.
केचित्—தைர்யமற்ற சிலர்
भीताः—என்னவோ என்று அஞ்சினராய்
प्राञ्जलयः—கை கூப்பிக் கொண்டு
गृणन्ति—துதிக்கின்றனர்.
महर्षिसिद्धसंघाः—திரள் திரளான மஹர்ஷிகளும் ஸித்தர்களும்
स्वस्ति इति उक्त्वा—மங்களமாகுக என்று கூறி
त्वां—உம்மை
पुष्कलाभिः—நிறைந்த
स्तुतिभिः—புகழ் மாலைகளால்
स्तुवन्ति—துதி செய்கின்றனர்.

<u>அனுகூலர் மூவ்வகையானவர்</u>. ஆச்சர்யமான திருமேனியைக் கண்டு வியந்து நம் நாதனின் உருவமென்று அபிமானித்து அண்டுகின்றனர் சிலர்-ஸ்தோத்ரம் செய்யவில்லை. சில அனுகூலர் அண்டுவதற்குத் துணிவின்றி அச்சமுற்று, துதித்தால் நன்மை பெறலாமென்று நினைத்துத் துதிக்கின்றனர். சிறந்த விவேகமும் ஞானமும் உள்ள ஸித்தர்களும் மஹர்ஷிகளும் திரள் திரளாகக் கூடி, தங்களுக்கு ஒன்று வேண்டுமென்கிற நோக்கமின்றி பல்லாண்டு பல்லாண்டென உமக்கு மங்களாசாஸனமே தொடங்கி மேலே அறிவின் சிறப்பை விளக்கும் அழகிய துதிகளாலே உம்மை உவப்பிக்கின்றனர்.

'ஸ்வஸ்தீத்யுக்த்வா' என்பதைக் கீழேயும் சேர்க்கலாம். அப்போது தங்களுக்கு மங்களம் உண்டாக வேண்டுமென்று கோரி என்றதாம். மஹர்ஷிகள் பரமைகாந்திகளான படியாலே தங்களுக்கு ஒன்று கேளார். ஜய விஜயீபவ, ஜிதம்தே என்று மங்களாசாஸனமே செய்வர். அவர்களின் துதிப்பாடல்கள் அனுபவத்தின் மேல்வெள்ளமேயாம். தங்களுக்கு ஒன்றும் வேண்டாமையே முக்கியமான நிறைவாம். வேறு பலன் வேண்டுமவர் சிறிது புகழ்ந்து பலன் பெற்றவுடனே அதனை யனுபவிக்க இழிகின்றபடியால் அவர்கள் செய்யும் துதி புஷ்கலமாகாது. துதி செய்வதே புருஷார்த்தமென நினைப்பார் எப்போதும் அதில் இழிவர். தன் பலனுக்குத் தக்க குணம் எதென்ற பாகுபாடின்றி வாசியன்றி எல்லா குணங்களையும் எடுத்துப் புகழ்ந்தபடியே யிருப்பர். அதனாலும் அவர்களின் துதி புஷ்கலமாம்—நிறைவு பெறும் எம்பெரு

மானுக்கு உள்ள பரமபுருஷார்த்தமாய் பரம ப்ராப்யமான தன்மையும் அவ்வனுபவம் பெற இடமான பரமபத விபூதி விஸ்தாரமும் அவர்களாலேயே வர்ணிக்கப்படுமாகையாலே அவர்கள் செய்யும் துதி அவ் விதத்திலும் புஷ்கலமே யாகும். (21)

அனுகூலரில் மூவகுப்பு மொழியப் பெற்றது. உதாஸீன நிலைமையில் இனம் இனமான சிலருடைய தோற்றம் இருந்தபடியைக் கூறுகிறார்—

**रुद्रादित्या वसवो ये च साध्या विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।**
**गन्धर्वयक्षासुरसिद्धसंघा वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे ॥ २२ ॥**

*ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா:*
*விச்வேऽச்விநௌ மருதச்சோஷ்மபாச்ச |*
*கந்தர்வ யக்ஷாஸுர ஸித்தஸங்கா:*
*வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாச்சைவ ஸர்வே || 22 ||*

रुद्रादित्याः—ருத்ர கணத்தினரும் ஆதித்ய கணத்தினரும்
वसवः—வஸு கணத்தாரும்
ये साध्याः(ते) च—ஸாத்தியரென்பவர் யாவர் அவரும்
विश्वे—விச்வதேவகணமும்
अश्विनौ—அச்விநி தேவதை யிருவரும்
मरुतः—மருத்கணத்தாரும்
ऊष्मपाः च—உஷ்ணமாக உண்கிற பித்ருக்களும்
गन्धर्व—கந்தர்வர்கள்
यक्ष-असुर—யக்ஷர்கள் அசுரர்கள்
सिद्ध—சித்தர்கள் என்ற இவர்களின்
संघाः च—திரள்களும்
सर्वे—எல்லோரும்
विस्मिताः एव—வியப்பு உள்ளவராகவே
वीक्षन्ते—உம்மைப் பார்த்திருக்கின்றனர்.

ப்ரதிகூலரையும் சேர்த்துக் கூறுகின்றானாய் அனுகூலனான தனக்கும் அது உளதென்கிறான்—

**रूपं महत् ते बहुवक्त्रनेत्रं महाबाहो बहुबाहूरुपादम् ।**
**बहूदरं बहुदंष्ट्राकरालं दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाऽहम् ॥ २३ ॥**

*ரூபம் மஹத் தே பஹுவக்த்ரநேத்ரம்*
*மஹாபாஹோ பஹுபாஹூருபாதம் |*
*பஹூதரம் பஹுதம்ஷ்ட்ராகராளம்*
*த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதாஸ் ததாऽஹம் || 23 ||*

महाबाहो—பெரிய புஜமுடையரே !
बहुवक्त्रनेत्रम्—வெகு முகமும் கண்ணுமுடையதாய்
बहु बाहु ऊरु पादम्—வெகு புஜம் தொடை அடி உள்ளதும்
बहु उदरम्—வெகு வயிறு உள்ளதும்
बहुदंष्ट्राकरालम्—பல கோரைப் பற்களால் பயங்கரமாயும்
महत्—பெரிதுமான
ते रूपम्—உமது உருவை
दृष्ट्वा—கண்டு
लोकाः—உலகில் யாவரும்
प्रव्यथिताः—மிக்க அச்சமுற்றனர்.
तथा—அவ்வாறே
अहम्—காண விரும்பிய யானும் அச்சமுறுகிறேன்.

लोकाः என்று பொதுவாகச் சொன்னதால் ப்ரதிகூலருக்குப் போல் மற்றவருக்கும் அச்சம் விளைவிப்பதாகிறது உமது பயங்கரமான உரு என்றதாம். (23)

நான் அச்சமுற்றேன் என்றதை நன்கு விளக்குகிறான்—

**नभस्स्पृशं दीप्तमनेकवर्णं व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।**
**दृष्ट्वा हि त्वा प्रव्यथितान्तरात्मा धृतिं न विन्दामि शमञ्च विष्णो ॥ २४ ॥**

*நபஸ்ஸ்ப்ருசம் தீப்தம் அநேகவர்ணம்*
*வ்யாத்தாநநம் தீப்தவிசாலநேத்ரம் |*
*த்ருஷ்ட்வா ஹி த்வா ப்ரவ்யதிதாந்தராத்மா*
*த்ருதிம் ந விந்தாமி சமஞ்ச விஷ்ணோ || 24 ||*

विष्णो! எங்கும் பரந்த விஷ்ணுவே!
नभः स्पृशम्–பரமபதத்தையும் தொட்டிருக்கிற
दीप्तम्–ஒளிமயமான
अनेकवर्णम्—பல நிறங்கள் கொண்ட
व्यात्त आननम्—திறந்த வாய் உடைய
दीप्त विशाल नेत्रम्—ஒளி வீசும் அகன்ற கண்களையும் உடைய
त्वा—உம்மை
दृष्ट्वा हि–கண்டமட்டிலேயன்றோ
प्रव्यथित अन्तरात्मा–மிக்க அச்சம் உற்ற மனமுடையனாய்
धृतिं—துணிவையும்
शमं च–வெளியிந்த்ரியங்கள் நிம்மதியாயிருப்பதையும்
न लभे—அடையாமலிருக்கிறேன்.

**दंष्ट्राकरालानि च ते मुखानि दृष्ट्वैव कालानलसंनिभानि ।**
**दिशो न जाने न लभे च शर्म प्रसीद देवेश जगन्निवास ॥ २५ ॥**

*தம்ஷ்ட்ராகராளாநி ச தே முகாநி த்ருஷ்ட்வைவ காலாநலஸந்நிபாநி.*
*திசோ ந ஜாநே ந லபே ச சர்ம ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ || 25 ||*

दंष्ट्राकरालानि–கோரைப் பற்களால் பயங்கரங்களாய்
काल अनलसंनिभानि–ப்ரளய நெருப்புக்கு ஒத்தனவுமான
ते मुखानि—உமது முகங்களை
दृष्ट्वा एव—கண்டவுடனேயே
दिशः–எது என்ன திக்கு என்பதை
न जाने—அறிகிறேனல்லேன்.
शर्म च—சுகத்தையும்
न लभे—பெறுகிறேனல்லேன்.
देव-ईश—தேவதேவனே
जगत्-निवास—உலகத்திற்கு வாஸபூமியே
प्रसीद—சீற்றமற்றிருக்க வேணும்.

தன் திருமேனியில் உலகெல்லாம் காட்டும் பிரான் பயங்கரமான ப்ரளய நெருப்புப் போன்ற பல வாய்களையும் காண்பித்த போது அஞ்சினன் அர்ஜுனன். அவ்வாறு அவன் காண்பித்தது, மேலே துர்யோதநாதிகளான பகைவர்களையும் படைகளையும் தான் அழித்து வருவதை இவன் காணும்படியாக்க முன் வந்தே. ஆகையால் அவ்வாறு காட்டக் கண்டு வியந்து விண்ணப்பம் செய்கிறான்.

अमी सर्वे(हित्वा)धृतराष्ट्रस्य पुत्राः सर्वैः सहैवावनिपालसंघैः ।
भीष्मो द्रोणः सूतपुत्रस्तथाऽसौ सहास्मदीयैरपि योधमुख्यैः ॥ २६ ॥
वक्त्राणि ते त्वरमाणा विशन्ति दंष्ट्राकरालानि भयानकानि ।
केचित् विलग्ना दशनान्तरेषु संदृश्यन्ते चूर्णितैरुत्तमांगैः ॥ २७ ॥

அமீ ஸர்வே (ஹித்வா) த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வை: ஸஹைவாவநிபாலஸங்கை: |
பீஷ்மோ த்ரோண: ஸூதபுத்ரஸ் ததாஸௌ
ஸஹாஸ்மதீயைரபி யோதமுக்யை: || 26 ||
வக்த்ராணி தே த்வரமாணா விசந்தி
தம்ஷ்ட்ராகராளாநி பயாநகாநி |
கேசித் விலக்நா தசநாந்தரேஷு
ஸந்த்ருச்யந்தே சூர்ணிதைருத்தமாங்கை: || 27 ||

अमी—இந்த
धृतराष्ट्रस्य पुत्राः—திருதராஷ்ட்ரரின் மக்கள்
सर्वे—எல்லோரும்
भीष्मः—பீஷ்மாசார்யரும்
द्रोणः—த்ரோணாசிரியரும்
तथा असौ सूतपुत्रः—அந்தக் கர்ணனும்
सर्वैः अवनि पालसंघैः सह एव—தங்கள் பக்கலிலான எல்லா அரசத் திரள்களோடுமே
अस्मदीयैः—நம் பக்கலிருக்கும்
योधमुख्यैः सह अपि—வீர ச்ரேஷ்டர்களுடனும்
त्वरमाणाः—துரிதப்படுகின்றவராய்
दंष्ट्राकरालानि—கோரைப் பற்களால் விகாரமாய்
भयानकानि—பயங்கரமுமான
ते वक्त्राणि—உமது முகங்களில்
विशन्ति—புகுகின்றனர்.
केचित्—புகுந்தவரிற் சிலர்
चूर्णितैः—(பற்களால்) பொடியாக்கப் பட்ட
उत्तमांगैः—தங்கள் தலைகளுடன்
दशनान्तरेषु—பற்களின் இடைகளிலே
विलग्नाः—சிக்குண்டு
संदृश्यन्ते—காணப்படுகின்றனர்.

துர்யோதநாதிகள் நூற்றுவரும் பீஷ்ம த்ரோண கர்ணர்களும் அவர்களுக்குத் துணையாக வந்த அரசர்களின் கூட்டம் யாவும், நம் பக்கத்திலிருக்கும் போரேறுகளும் பயங்கரங்களான உமது முகங்களிற் புகுகின்றதையும் சிலர் அவற்றின் பற்களில் பட்டுப் பொடியாகிய தலையுடனிருப்பதையும் காண்கிறேன். (ஸத்யஸங்கல்பனுன உனது நோக்கம் பூர்த்தியாக யார் வேண்டும்.)

இங்கே 'ஸர்வே' என்ற பாடத்தில் பொருள் எளிதில் அறியலாயிற்று. 'அமீ ஸர்வே' என்னுமே 'அமீ ஹி த்வா' என்று ஓதுவதாம். இதே தான் சாங்கரபாடம். அப்போது 'அமீ த்வா'—இவர்கள் உம்மை என்றால் தகுந்த க்ரியாபதம் சேர்த்துக் கொள்ள வேண்டும். முன் ச்லோகத்தினின்று धृतिं न विन्दन्ति என்று சொல்லை மாற்றிச் சேர்ப்பது

மாம். அன்றி विशन्ति என்று மேல் வரும் க்ரியையை இங்கும் கூட்டிக் கொள்வதாம். ஹித்வா என்பது ஒரே பதமாய் 'விட்டு' என்ற பொருளதானலும் பூமியை விட்டு என்னுற்போலே சேர்க்க வேண்டும். பாஷ்யத்தில் ஒன்றும் கூறாமல் ஸர்வே என்ற சொல் ஒன்று சேர்த்து ஒரே வாக்யமாக்கியிருப்பதால் अमी हित्वा என்றவிடத்தில் अमी सर्वे என்ற பாடமே திருவுள்ளத்திலுள்ளது போலும். இதற்குமேல் யாதவப்ரகாசர் இங்கே நான்கு ச்லோகங்கள் வேறு சேர்த்து உரையிட்டிருக்கிறாரென்றும், வேறிடத்திலும் அவர் சில ச்லோகங்கள் சேர்த்திருக்கிறார் என்றும், நம் மதத்தை சார்ந்த நாராயணார்யரும் அவற்றில் சிலவற்றை வரைந்திருக்கிறார் என்றும் பழைய உரைகளில் இல்லாமலும் ஓதாமலுமிருக்குமவற்றை கீதையாகக் கொள்ளலாமா என்பதை தெய்வமே அறியுமென்றும், கீதையில் ச்லோக எண்ணிக்கை வ்யாஸர் குறிக்கவில்லை யென்றும் இங்கே ஸ்ரீதேசிகன் அருளினார்.)

**यथा नदीनां बहवोऽम्बुवेगाः समुद्रमेवाभिमुखा द्रवन्ति ।** 8 28-29 See N. P.
**तथा तवामी नरलोकवीराः विशन्ति वक्त्राण्यभिविज्वलन्ति ॥ २८ ॥** 31-4-49/51

*யதா நதீநாம் பஹவோऽம்புவேகா: ஸமுத்ரமேவாபிமுகா த்ரவந்தி*
*ததா தவாமீ நரலோகவீரா விசந்தி வக்த்ராண்யபிவிஜ்வலந்தி ||28||*

नदीनां—நதிகளுடைய
बहवः अम्बुवेगाः-பல நீர்வெள்ளங்கள்
समुद्रम् एव—கடலைக் குறித்தே
अभिमुखाः—நேர்முகமாக
यथा द्रवन्ति—எவ்வாறு பெருகுகின்றனவோ
तथा अमी—அவ்வாறே இந்த
नरलोकवीराः—ராஜலோக வீரர்கள்
अभिविज्वलन्ति—அனல் வீசுகின்ற
तव वक्त्राणि—உமது முகங்களிலே
विशन्ति—புகுகின்றனர்.

மற்றோர் உதாரணம் கூறுகிறான்—

**यथा प्रदीप्तज्वलनं पतङ्गा विशन्ति नाशाय समृद्धवेगाः ।**
**तथैव नाशाय विशन्ति लोकास्तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥ २९ ॥**

*யதா ப்ரதீப்தஜ்வலநம் பதங்கா:*
*விசந்தி நாசாய ஸம்ருத்தவேகா: |*
*ததைவ நாசாய விசந்தி லோகா:*
*தவாபி வக்த்ராணி ஸம்ருத்தவேகா: || 29 ||*

पतङ्गाः—விட்டில்கள்
समृद्धवेगाः—மிக்க விரைவுடன்
नाशाय—தம் அழிவுக்காகவே
प्रदीप्तज्वलनं-மண்டி எரியும் நெருப்பில்
यथा विशन्ति—எவ்வாறு புகுமோ,
तथा एव—அவ்வாறே
लोकाः अपि—ராஜ லோகங்களும்
समृद्धवेगाः-மிக்க விரைவுடன்
तव वक्त्राणि—உமது வாய்களில்
नाशाय विशन्ति—அழிதற்காகப் புகுகின்றனர்.

एषां पक्षिणां पतङ्गेति नाम अन्वर्थम्, यतः पतित्वा गच्छन्ति—नश्यन्ति । अन्येषां तु पक्षयोः पतनेन गन्तृत्वात् पतङ्गत्वम् । கடல் புகும் வெள்ளங்களில் நிறமாற்றமும் வேறு பாடும் இல்லையாகிலும் அவற்றிற்கு அழிவில்லை. விட்டில்கள் தீயில் அழிகின்றன என்ற வாசியாம். மேலும், வெள்ளம் வருவதைத் தடுக்க வாகா. விட்டில்கள் தாமே விழ விரைகின்றன என்ற வாசியுமுண்டு. இங்கு விழும் அரசக் கூட்டத்தில் இந்நிலைகளை யுணர்க. அவர்கள் செய்த வினைகள் அவர்களை அங்கே கொண்டுவருகின்றன. (29)

लेलिह्यसे ग्रसमानः समन्तात् लोकान् समग्रान् वदनैर्ज्वलद्भिः ।
तेजोभिरापूर्य जगत् समस्तं भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥ ३० ॥

லேலிஹ்யஸே க்ரஸமாந: ஸமந்தாத்
லோகாந் ஸமக்ராந் வதநைர் ஜ்வலத்பி: |
தேஜோபிராபூர்ய ஜகத் ஸமஸ்தம்
பாஸஸ்தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ || 30 ||

विष्णो—மஹா விஷ்ணுவே!
समन्तात्—எல்லாப் புறமும்
लोकान्—ராஜ லோகங்களை
समग्रान्—எல்லாம்
ज्वलद्भिः—அனல் வீசுகின்ற
वदनैः—முகங்களாலே
ग्रसमानः—விழுங்குகின்றவராய்
लेलिह्यसे—மிகவாக இரத்தம் பெருகும் உதடுகளை நக்குகின்றீர்.
उग्राः—பயங்கரமான, வெவ்விய
तव भासः உமது ஒளிகள்
तेजोभिः—வெளிச்சத்தினால்
समस्तं जगत्—முழு வுலகையும்
आपूर्य—நிறைத்து
प्रतपन्ति—எரிக்கின்றன.

உமது வாயில் விழும் அவர்களை, ஏன் விழுகின்றனரென்ற கவலை யின்றி உத்ஸாஹமாக விழுங்கி வெளியில் பெருகும் இரத்தத்தையும் உள்ளே கொள்ளுகின்றவராகி, அவ் அழிவில் உமக்குள்ள ஆர்வத்தைக் காட்டுகிறீர். மேன்மேல் உக்ரமான கிரணங்கள் எங்கும் பரவு கின்றனவாகி ஸம்ஹாரத்தில் நோக்கின் நீட்சியை யறிவிக்கின்றன. (30)

போர் புரியச் சேர்ந்தவர்கள் பெரும்பாலும் அவனால் அழிகின்ற மையை நேரிற் கண்ட அர்ஜுனன் இதன் கருத்தை அறியமாட்டாத வனாய் வேண்டிக் கேட்கிறான்—

आख्याहि मे को भवान् उग्ररूपो नमोऽस्तु ते देववर प्रसीद ।
विज्ञातुमिच्छामि भवन्तमाद्यं न हि प्रजानामि तव प्रवृत्तिम् ॥ ३१ ॥

ஆக்யாஹி மே கோ பவாந் உக்ரரூபோ
நமோऽஸ்து தே தேவவர ப்ரஸீத |
விஜ்ஞாதும் இச்சாமி பவந்தம் ஆத்யம்
ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் || 31 ||

देववर—தேவ ச்ரேஷ்டனை நாராயணனே
उग्ररूपः—இந்த பயங்கரமான உருவம் உடைய
भवान्—தேவர்
कः—யாராகிறீர்? என்ன செய்யக் கருத்து உடையராகிறீர்?
मे आख्याहि—எனக்குச் சொல்ல வேணும்.
ते नमः अस्तु—உமக்கு எனது ப்ரணமம்.
प्रसीद—அருள்புரியவேணும்.
आद्यं—உலக முதல்வரான
भवन्तम्—உம்மை
विज्ञातुम् इच्छामि—அறிய ஆவல் உடையனகிறேன்.
तव प्रवृत्तिम्—உமது முயற்சியை
न हि प्रजानामि—நான் அறிகிறேனல்லேனே.

கண்ணன் தனது வேண்டுகோளின்மேல் உலகம் ஆளும் தன் விச்வரூபத்தைக் காண்பிக்கிறான் என்பது அர்ஜுனன் மறந்துவிடவில்லை. देववर आद्यम् என்கிற சொற்களாலே அத்தெளிவு தனக்கு உள்ளதை நன்றாக அறிவிக்கிறானே. இங்ஙனமிருக்க நீர் யாரென்று கேட்பதேன் என்னில், இதனை அவனே மேலே, न हि प्रजानामि तव प्रवृत्तिम् என்று விரித்துரைக்கிறானகையால் எளிதில் தெளியலாம். நீர் யார் என்றால் நீர் என்ன நோக்குடன் இவ்வாறு செய்கிறீரோ, அதை அறியகில்லேன் என்றதாம். நீர் என்னைப் போரில் இழிவிப்பதற்காக ஹிதோபதேசம் செய்ய முன் வந்தவர். அந்நோக்கை இப்போது கை விட்டீரா, அல்லது அத்துடனே இருக்கிறீரா என்று அறியமாட்டிற்றிலேனே. என்னைக் கொண்டு செய்ய வேண்டியதெல்லாம் இப்போதே பூர்த்தியாய் விட்டதே. இப்படி நீரே முயன்றது ஏன் என்பதை அறிய முடியவில்லை. நான் விதேயனல்லன் என நினைக்க வேண்டா. ப்ரஸீத. அருள வேணுமென்றபடி.

आद्यो देववरोऽयमिति स्वनिर्णयं संबोधनादिना सम्यगाविष्करोति । श्रीकृष्ण एव सर्वेश्वरः । स्वप्रार्थनया स्वं विश्वरूपमेवं दर्शयतीति सम्यक् जानान एवायं यत् को भवानिति पृच्छति तस्य कोऽर्थ इति नास्माभिः परिश्रम्य ज्ञातव्यम्, यत स एव विवृणोति, 'न हि प्रजानामि तव प्रवृत्तिम्' इति । अस्य चायमाशयः—निखिलमपि शत्रुसैन्यं मन्मुखेन नाशयितुमुद्यस्य तत्र मां निर्भय-संशयं प्रेरयितुमेवैतावदुपदेशं विदधता भवता, तदर्थप्रवृत्तिमत्येव मयि विश्वरूपदिदृक्षया किञ्चित् प्रार्थितवति सति, तत् प्रदर्शयतैव यदिदं सर्वशत्रुहननं स्वयमेव, मन्निरपेक्षमेव च क्रियते, तत्र कारणं न जाने । अहमविधेय इति न मन्तव्यम्; प्रसीद । अतो यादृगभिप्रायस्सन् एवं भवान् करोति, तमभिप्रायमाख्याहि भगवन् इति (31)

இதுவும் உன்னைத் தூண்டுவதற்கே யல்லது, இனிப் போர் இல்லையென்று உன்னை விலக்கவன்று என்ற கருத்துப்பட மறுமாற்றம் அளிக்கிறார்—துர்யோதநாதிகளின் அழிவைக் கண்ணுற் காண்பதால் இது நடந்து விட்டதென அர்ஜுனன் நினைத்தான். அர்ஜுன, திவ்யசக்ஷுஸ்ஸல்லவோ கொடுத்திருக்கிறேன். இனி இதெல்லாம்

இனி வரப்போகிறதே யல்லது வந்ததல்ல. வரப்போவதை இந்தக் கண் காட்டுகிறது. உன் மூலம் தான் எல்லாம் நடக்கப் போகிறதென்று அறிவிப்பதிலே நோக்கு.

அர்ஜுனனது அம்புகளால் தள்ளப்பட்டு அவர்கள் இவனது முகங்களில் விழுந்தழிவதாகக் காண்பித்திருந்தால் அர்ஜுனனுக்குச் ஒருக்கால் சிறிது தெளிவிருக்கும். அவ்வாறு காண்பிக்கவில்லை. ஏன்? என்னையின்றியும் இது நடந்தே தீருமென்று அவன் தெரிந்து கொள்ள வேண்டுமென்றே. அதை வெளியிட்டுக் கொண்டு உரைக்கிறார்—

श्रीभगवानुवाच—பகவான் சொன்னார்—

**कालोऽस्मि लोकक्षयकृत् प्रवृद्धो लोकान् समाहर्तुमिह प्रवृत्तः ।**
**ऋतेऽपि त्वां न भविष्यन्ति सर्वे येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥ ३२ ॥**

காலோऽஸ்மி லோகக்ஷயக்ருத் ப்ரவ்ருத்த:
லோகாந் ஸமாஹர்த்தும் இஹ ப்ரவ்ருத்த: |
ரிதேऽபி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே
யேऽவஸ்த்திதா: ப்ரத்யநீகேஷு யோதா: || 32 ||

कालः—அவரவர் ஆயுள் முடிவை எண்ணுகிற நான்
लोकक्षयकृत्—இக்கூட்டத்தை அழிக்கின்றவனாய்
प्रवृद्धः—அதற்கேற்ப வளர்ந்தவனாய்
इह—இப்போரிலே
लोकान्—ப்ரஜைகளை
समाहर्तुं—நேரில் நின்று அழிப்பதற்காக
प्रवृत्तः अस्मि—முன்னமே முனைந்து வருகிறேன்.
प्रत्यनीकेषु—சத்ருசைன்னியங்களில்
ये योधाः—எந்த வீரர்கள்
अवस्थिताः – நிலைத்திருக்கின்றனரோ அவர்கள்
सर्वे—எல்லோரும்
त्वाम् ऋते—உன்னையின்றியும் நீ வெறுமனேயிருந்தாலும்
न भविष्यन्ति—அழியப்போகின்றவரே.

முதல் பாதத்தில் பொதுவாக ஆயுள்முடிவை எண்ணி உலகம் எல்லாம் அழிக்கிற நான் என்று கூறி, இப்போது இங்கு அழிப்பதை இரண்டாம் பாதத்தில் கூறுகிறாரென்னலுமாம். மொத்தமே இவர்களைப் பற்றியே என்னலுமாம். (32)

இப்படியிருக்க உன்னை ஏவுவது ஏனெனில், கேள்—

**तस्मात् त्वमुत्तिष्ठ यशो लभस्व जित्वा शत्रून् भुङ्क्ष्व राज्यं समृद्धम् ।**
**मयैवैते निहताः पूर्वमेव निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३ ॥**

தஸ்மாத் த்வம் உத்திஷ்ட்ட யசோ லபஸ்வ
ஜித்வா சத்ரூந் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் |
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசிந் || 33 ||

तस्मात्—நானே அழிக்க முயன்று விட்டதால் அழிவது திண்ணமாகையால்
त्वम् उत्तिष्ठ—நீ எழுந்திரு.
शत्रून् जित्वा—சத்ருக்களை வென்று
यशः लभस्व—புகழ் பெறு.
समृद्धम्—பூர்ணமான
राज्यं भुङ्क्ष्व—ராஜ்யத்தை யனுபவி
पूर्वम् एव—அவரவர் குற்றம் செய்த போதே
एते—இவர்கள்
मया एव—என்னாலேயே
निहताः—அழிவுக்கு இடமாக்கப் பட்டார்கள்
सव्यसाचिन्—இடக்கையினுலும் அம்பு எறிகின்றவனே
(நீ அச்செயலைக் கொண்டு)
निमित्तमात्रं भव—ஏதோ வியாஜமாக மட்டும் இரு.

இரு கைகளாலும் அம்பெறிந்து நீ செய்வதெல்லாம் காண் போருக்கு வெறும் வ்யாஜமே. முன்னமே ஸங்கல்ப்பம் செய்த பிறகு அவர்கள் அழிவது திண்ணம். உங்களது பூர்வ கர்மாக்களுக்கு இணங்கப் புகழும் பேரரசும் உங்களுக்கு வர வேண்டியதாயிருப்பதால் நீ வ்யாஜமாவதையும் ஸங்கல்ப்பித்திருக்கிறேன்.

द्रोणञ्च भीष्मञ्च जयद्रथञ्च कर्णं तथाऽन्यानपि योधमुख्यान् । See Hr P31-5-62/64
मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठाः युध्यस्व जेतासि रणे सपत्नान् ॥ ३४ ॥

த்ரோணஞ்ச பீஷ்மஞ்ச ஜயத்ரதஞ்ச
கர்ணம் ததா ऽந்யாநபி யோதமுக்யாந் |
மயா ஹதாம்ஸ்த்வம் ஜஹி மா வ்யதிஷ்டா:
யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்நாந் || 34 ||

मया हतान्—என்னால் கொல்லப் பெற்ற
द्रोणं च—த்ரோணுசார்யரையும்
भीष्मं च—பீஷ்மாசார்யரையும்
जयद्रथं च—ஜயத்ரதனையும்
तथा कर्णं—கர்ணனையும்
अन्यान् योधमुख्यान् अपि—மற்ற முக்ய வீரர்களையும்
त्वं जहि—நீ கொல்வாயாக.
मा व्यथिष्ठाः—கவலைப்படாதே.
युध्यस्व—போர் நடத்து.
सपत्नान्—பகைவர்களை
रणे जेतासि—போரில் வெல்லப் போகிறுய்.

இங்கே சிலரைச் சிறப்பாகக் குறித்ததற்குக் காரணம் சாங்கர-பாஷ்யத்தில் கூறப்பெற்றது. த்ரோணர்-தநுர்வேதாசார்யர், திவ்யாஸ்த்ரங்கள் மலியப் பெற்றவர். தனக்கும் ஆசார்யர், தன் பக்திக்கு இலக்கானவர். பீஷ்மர் பரசுராமனிடம் போர் புரியும் போதும் சளைக்காதவர். ஜயத்ரதன் தலையை எவன் பூமியில் போடுகிறுனே, அவன் தலை விழுமென்று அவன் தந்தையின் சாபம். கர்ணன் இந்த்ரன் அளித்த அற்புதமான சக்தி என்ற ஆயுதம் உடையவன். ஒவ்வொன்றையும் நினைத்து அர்ஜுனன் தனக்கு வெற்றிவிஷயத்திலே கலங்கியிருந்தான்.

அவனுக்கு அபயமளிக்கிறார் பகவான் என்றவாறு. இங்கே பாஷ்யத்திலே குரு பந்து என்ற முறையினால் ஸ்நேஹமும் தயையும், அதர்மமோ என்கிற அச்சமும் இருந்தது முதல் அத்யாயத்தில் தெளிவாயிருப்பதால், இவர்களை வெல்லவாகாதென்கிற எண்ணம் அவனுக்குக் கண்ணன் தேரில் வீற்றிருப்பதினின்றே போய்விட்டபடியால் முதல் அத்யாயத்திற் கூறிய காரணமே கொள்ளப் பெற்றது. நான் கொல்லக் கருதிய பிறகு மற்ற சேவகர்களுக்கும் த்ரோணாதிகளுக்கும் வாசியொன்றுமில்லை யென்ற கருத்து முதற் பக்ஷத்திலாம். போரில் நின்ற பிறகு பெரியோர், சிறியோர், பந்து, அபந்து என்கிற பாகுபாடில்லை யென்று இரண்டாம் பக்ஷத்தில் கருத்தாம். வெற்றியில் ஸந்தேஹமில்லையாகில் வெற்றி பெறுவாயென்று எதற்குச் சொல்வதென்னில், வெற்றியைச் சொல்வதில் நோக்கில்லை. நீர் வெல்வது பகைவரை, அதிலும் போரில், ஆகையால் வெல்வது தவறாகாது கவலைப்படாதே என்றதாம். அல்லது வெல்லப்படாமைக்கு வேண்டும் பல காரணங்கள் கொண்ட இந்த மஹாவீரர்களையும் உமது துணையில் வெல்லப் போகிறேனென்று குதூஹலமாய்ப் போரில் புகுந்தேன். வேறு விதம் மனம் கலங்கிற்று. உடனே தெளிவித்தீர். மீண்டும் குதூஹலமாக நான் புறப்படத் தீர்மானித்திருக்கும் போது ஒரே நொடியில் எல்லோரையும் நீரே கொன்று விட்டீரே, எனக்குச் செய்த உபதேசமும் வீணாயிற்றே என்று நினைக்கிறான் அர்ஜுனன். நீ கவலைப்படாதே, நீ நினைத்தபடி நீயே கொன்று வெற்றி பெறு. என்னால் நலியப்பட்டாலும் அவர்களைப் போர் புரியுமளவுக்கு வைத்திருக்கிறேன் உனக்குப் புகழ் அளிப்பதற்காக. இனிப் போரில் இழிந்த பிறகு மீண்டும் உபதேசம் செய்ய வேண்டுமாறு பழைய கலக்கம் பெறாதே என்றும் பொருளாகலாமென பாஷ்ய டீகைகளின் கருத்தாம்.

द्रोणाचार्यस्य दिव्यास्त्रसंपन्नत्वेऽपि, भीष्माचार्यस्य परशुरामान्यून पराक्रमत्वेऽपि, जयद्रथस्य तत्पित्रा तच्छिरो भूमौ पातयतः शिरः पतेदिति कृतबलस्य वधस्याशक्यत्वेऽपि, कर्णस्येन्द्रदत्तशक्तिसंपन्नत्वेऽपि योधान्तराविशेषं तानपि हन्याम् जयेयमिति सोत्साहं रणभूमिं प्रविष्टस्य मे अप्रतीक्षितापतितमनःक्षोभपरिहाराय हितमुपदिशता भवता हन्त स्वयमेव चेत् सर्वहननं कृतम्। अहो बत भग्नो मे मनोरथः सर्व इति मा व्यथिष्ठाः; मया हता अपि युद्धं कर्तुमर्हा एव स्थापितास्सन्ति। युध्यस्व। तान् जेतासि। अतो यशो लभस्वेति वाक्यार्थः। एवं वदन्नेव मा व्यथिष्ठाः' इति सामान्यनिर्देशेन एवं हितोपदेशानन्तरमपि पुद्धाय प्रस्थाय बाणप्रयोगावसरे पुनरस्थानस्नेहकारुण्यादि मा प्रदर्शयेति वदन् पूर्वकृते अनौचित्यमाविष्करोतीति भाष्यटीकयोराशयः॥ (३४)

सञ्जय उवाच—ஸஞ்ஜயர் சொன்னார்—

एतच्छ्रुत्वा वचनं केशवस्य कृताञ्जलिर्वेपमानः किरीटी।
नमस्कृत्वा भूय एवाऽऽह कृष्णं सगद्गदं भीतभीतः प्रणम्य॥ ३५॥

cf. भारः परं पट्टकिरीटजुष्टमप्युत्तमाङ्गं न नमेत् मुकुन्दम् ॥ (Bhagavatam)



ஏதத் ச்ருத்வா வசநம் கேசவஸ்ய
க்ருதாஞ்ஜலிர்வேபமாந: கிரீடீ |
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய || 35 ||

किरीटी-அர்ஜுனனனவன்
केशवस्य—ப்ரஹ்மருத்ரேச்வரனான பெருமானின்
एतत् वचनम्-இவ்வார்த்தையை
श्रुत्वा नमस्कृत्वा-கேட்டு வணங்கி
भीत भीतः-மிகவும் அஞ்சினவனாய்
भूयः एव-மீண்டுமே
प्रणम्य-தெண்டனிட்டு
कृताञ्जलिः—கைகூப்பிக் கொண்டு
वेपमानः-நடுங்குகின்றவனாய்
कृष्णं-கிருஷ்ணனைக் குறித்து
सगद्गदम्-தழுதழுத்த குரலுடன்
आह-சொன்னான்.

தனது கேள்விக்கு எம்பெருமான் அருளிய மறுமாற்றத்தைக் கேட்டு கருணையைக் கண்டு நமஸ்கரித்து (இதுவரையில் தான் செய்த குற்றங்களை நினைத்து) மிகவும் அஞ்சி மீண்டும் தெண்டனிட்டுத் தொண்டையில் தடுமாற்றத்துடன் அர்ஜுனன் மேலே விண்ணப்பம் செய்தான்.

अर्जुन उवाच—அர்ஜுனன் சொன்னான்— See Nr P31-5-65/66

**स्थाने हृषीकेश तव प्रकीर्त्या जगत् प्रहृष्यत्यनुरज्यते च ।**
**रक्षांसि भीतानि दिशो द्रवन्ति सर्वे नमस्यन्ति च सिद्धसंघाः ॥ ३६ ॥**

ஸ்த்தாநே ஹ்ருஷீகேச தவ ப்ரகீர்த்யா
ஜகத் ப்ரஹ்ருஷ்யத்யநுரஜ்யதே ச |
ரக்ஷாம்ஸி பீதாநி திசோ த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்க்கா: || 36 ||

हृषीकेश-இந்திரியங்களை ஏவுமவரே
तव प्रकीर्त्या-உம்மைப் புகழ்வதால்
जगत्-உலகானது
प्रहृष्यति-களிப்புறுகிறது.
अनुरज्यते च-அன்பும் வைக்கிறது.
रक्षांसि-அரக்கர்கள்
भीतानि-அஞ்சினார்களாய்
दिशः द्रवन्ति-பல திக்கில் ஓடுகின்றனர்.
सर्वे सिद्धसंघाः-சித்தர் திரளெல்லாமும்
नमस्यन्ति-வணங்குகின்றன.
स्थाने-எல்லாம் தகும்.

இந்த ச்லோகம் ஸ்ரீவிஷ்ணுபஞ்ஜரம் முதலான யந்த்ரங்களில் உபயோகித்த மந்த்ரமாகுமென்றார் ஸ்ரீதேசிகன். (36)

Sl. 37

**कस्माच्च ते न नमेरन् महात्मन् गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे ।** See Nr P31-5-66/67

கஸ்மாத் ச தே ந நமேரந் மஹாத்மந்
கரீயஸே ப்ரஹ்மணோऽப்யாதிகர்த்ரே |

च—மேலும்
महात्मन्—மஹானுபாவரே
गरीयसे—மிகவும் பெரியவராய்
ब्रह्मणः अपि—பிரமனையும்
आदिकर्त्रे—முதலாகிப் படைக்கின்ற
ते—உமக்கு
कस्मात्—எதனால்தான்
न नमेरन्—வணங்காமலிருப்பார்கள்.

**अनन्त देवेश जगन्निवास त्वमक्षरं सदसत् तत्परं यत् ॥ ३७ ॥**
**त्वमादिदेवः पुरुषः पुराणः त्वमस्य विश्वस्य परं निधानम् ।**

*அநந்த தேவேச ஜகந்நிவாஸ த்வமக்ஷரம் ஸதஸத் தத்பரம் யத் ||37*
*த்வமாதிதேவ: புருஷ: புராண: த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதாநம் |*

अनन्त—அளவற்றவரே
देवेश—தேவதேவரே
जगन्निवास—உலகத்தை இருப்பிடமாக உடையவரே
त्वम्—நீரே
अक्षरम्—அழியாத ஆத்மஸ்வரூபமும்
सत्—காரியமான ப்ருக்ருதியும்
असत्—காரணமான ப்ரக்ருதி தத்துவமும்
तत्परम्—அவற்றிற்கு மேலானது
यत्—எதுவோ அம் முக்தஸ்வரூபமுமாகிறீர்.
त्वम् आदिदेवः—உபாதானமும் படைப்பு முதலான லீலா வ்யாபாரமுமுடையவர் நீர்.
पुरुषः—புருஷஸூக்தாதிகளில் ஓதிய மஹாபுருஷர்.
पुराणः—அநாதியாயிருந்தே புதியவர்.
अस्य विश्वस्य—இவ்வுலகுக்கு
परं निधानम्—பரம ஆதாரமாயிருப்ப
त्वम्—வரும் நீர்.

ஜகந்நிவாஸ என்ற சொல், உலகம் அவனுக்கு இருப்பிடமென்கிறது, நிதாநம் நிதி புதையல் என்றால் அவனைச் சிறந்த நிதியென்னலாம். வைத்தமாநிதி, ஆபத்தனம் என்பரே. ஆனாலும் விச்வஸ்ய என்று அசேதனத்தையும் கொண்டால் அது சேராது. ஜீவர்களை மட்டும் கொண்டால் அவர்களுக்கு நிதி என்னலாம். அப்போது நிதியென்பதற்கு ஜீவனுதாரமென்ற கருத்தையே கொள்ள வேண்டும். இவர் பொன் வெள்ளி யென்ற தனமாகமாட்டாரே. அதைவிட நிதாநம் ஆதாரம் என்ற பொருளிலேயே அக்கருத்தைக் கூறலாம். மற்றும் உலகிலுள்ள பத்த ஜீவ தத்துவம், உலகமாயுள்ள ப்ரக்ருதி, முக்த ஸ்வரூபம் எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாயிருப்பதால் எல்லாம் அவன் என்றான். अक्षर பதம் பத்தஜீவனைப் போல் முக்தஜீவனையும் குறிக்குமே; क्षराक्षर பதங்கள் பத்த முக்தர்களை அடைவாகக் கூறுமே என்னலாம். ஆனாலும் தத்பரம் என்று மேலுள்ள ஆத்மாவைச் சொல்வதால் உலகிலுட்பட்ட ஜீவனையே முதலில் அக்ஷரபதத்தால் கொள்வது தகும். ப்ருதி க்ஷரம் அக்ஷரம் ஜீவன் என்ற வாசியும் क्षरं त्वविद्या अमृतं तु विद्या विद्याविद्ये ईशते यस्तु सोऽन्यः ; अमृताक्षरं हरः இத்யாதி வசனங்கள் போக்தாவான பத்தனை அக்ஷரபதத்தாலே கூறுமே. இப்படி அந்தர்யாமியான

படியாலே ஆதி—அதாவது உபாதானம். புருஷனென படியாலே தேவன்—நிமித்த காரணம். ஆதி யென்றாற் போலே லயஸ்த்தானமென்பதும் நிதான பதத்தின் பொருளாம். அல்லது ஜீவனுதாரமென்பதே பொருளாம்.

वेत्तासि वेद्यञ्च परञ्च धाम त्वया ततं विश्वमनन्तरूप ॥ ३८ ॥

வேத்தாஸி வேத்யஞ்ச பரஞ்ச தாம
த்வயா ததம் விச்வம் அநந்தரூப ।

अनन्तरूप—எண்ணற்ற உருவம் உடையரே
वेत्तासि—எல்லாம் அறிகிறீர்.
वेद्यं च—அறியப்பட வேண்டியவ ராகிறீர்.
परं धाम च—பரமபதம் என்ற வைகுண்டமும் உமது ரூபம்.
त्वया—உம்மால்
विश्वम्—உலகெல்லாம்
ततम्—வியாபிக்கப் பெற்றது.

वायुर्यमोऽग्निर्वरुणः शशाङ्कः प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।

வாயுர் யமோக்நிர் வருணச் சசாங்க:
ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதாமஹச்ச ।

प्रपितामहः—எல்லோருக்கும் பாட்டனுரான
त्वम्—நீர்
वायुः यमः—வாயுவும் யமனும்
अग्निः—அக்னி தேவதையும்
वरुणः—வருணனும்
शशाङ्कः—சந்திரனும்
प्रजापतिः च—ப்ரஜைகளைப் படைப்பதற்கு முன் நின்ற பிரமனுமாகிறீர்.

தக்ஷர் முதலான ப்ரஜாபதிகள்மூலமாக ப்ரஜைகள் படைக்கப் பட்டிருப்பதால் அவர்கள் பிதாக்கள். எனவே பிரமன் பிதாமஹன், அவனுக்கும் பிதாவாகையாலே ப்ரபிதாமஹன் பகவான். உலகில் வாயு முதலானவர்கள் போல் ப்ரபிதமாஹன் என்ற பெயரால் ப்ரஸித்த மானவன் ஒருவனில்லை யாகையால் ப்ரபிதாமஹனுக்கு அந்தர்யாமி என்று பொருள் கொள்ளவாகாது. பகவானே கீழ்க் கூறியவாறு ப்ரபிதாமஹனென்க. பூமியிலும் அந்தரிக்ஷத்திலும் வானத்திலும் திக்கு களிலும் உள்ள தேவதைகளெல்லோரும் அவர்களைப் படைத்த பிரம னும் பகவானே என்றபடி. வாயு முதலானோர் திக்பாலகர்களுமாவர்.

இவ்வளவு மேன்மையைக் கண்டவுடன் மகிழ்ந்து மலர்ந்த கண் உடையனுயிருந்தே ஒருபுறம் அச்சமும் நடமாடவே அவசனுக ப்ரணமங் களைச் செய்கிறனுய் வாயினுலும் அதைக் கூறுகிறன்—

नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥ ३९ ॥
नमः पुरस्तादथ पृष्ठतस्ते नमोऽस्तु ते सर्वत एव सर्व ।

நமோ நமஸ்தேஸ்து ஸஹஸ்ரக்ருத்வ:
புநஸ்ச பூயோऽபி நமோ நமஸ்தே ॥ 39 ॥

நம: புரஸ்தாத்அத ப்ருஷ்டதஸ்தே
நமோऽஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ |

सर्व—எங்குமுள்ளவரே
नमः—நமஸ்காரம்.
सहस्रकृत्वः—ஆயிரம் தரம்
ते नमः अस्तु—உமக்கு நமஸ்காரம்
पुनः च—மீண்டும்
नमः—நமஸ்காரம்.
भूयः अपि ते—மீண்டும் உமக்கு
नमः नमः—மேன்மேல் நமஸ்காரம்.
पुरस्तात् नमः—எதிரில் நமஸ்காரம்.
अथ पृष्ठतः च—பிறகு பின்பக்கத்திலும்
ते नमः—உமக்கு நமஸ்காரம்.
सर्वतः एव—எல்லாப் பக்கங்களிலும்
ते नमः अस्तु—உமக்கு நமஸ்காரமாகக் கடவது.

மேன்மையை மேன்மேல் நோக்கும் போது நமஸ்காரம் செய்த வண்ணமே யிருக்க மனம் முயல்கின்றது. விச்வரூபரான உம்மை ப்ரதக்ஷிணம் செய்து கொண்டு நாற்புறமும் நமஸ்காரம் செய்யவாகா மற் போனாலும் இருந்த இடத்தினின்றே எல்லா திக்குகளிலும் சென்று எண்ணற்ற ப்ரணாமங்கள் பண்ணுவதாக நினைத்துக் கொள்ளுகிறேன்.

எங்குமே ப்ரணாமம் செய்கிறேன். ஏனெனில்—

अनन्तवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४० ॥

அநந்த வீர்யாமிதவிக்ரமஸ்த்வம்
ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ: || 40 ||

अनन्तवीर्य—அளவற்ற வீர்ய குணமுடையவரே
अमित विक्रमः त्वम्—எங்கும் தடையின்றிப் புகவான சக்தியுடைய நீர்
सर्वं समाप्नोषि—எங்கும் நன்கு நியமன சக்தியுடன் பரவியிருக்கிறீர்.
ततः—அதனால்
सर्वः—ஸர்வமாகச் சொல்லப் படுகிறீர்; ஸர்வமும் உம்மைவிட்டுத் தனியேயில்லை யாதலின்.

பலகால் பல சேதநாசேதநங்களாகச் சொன்னவன் முடிவில் எல்லாமென்று கூறி அதற்குக் காரணம் அந்தர்யாமியாயிருக்கை யென்று நேரில் கண்டு நுவன்றான்.

ஸ்ரீக்ருஷ்ணனை ஸர்வேச்வரேச்வரனாக முழு மஹிமையுடன் நேரிற் கண்டதால் இதற்கு முன் இவ்வூற்றமின்றி மதிப்பற்று நடந்து கொண்டதற்கு நொந்து நடுங்கி வேண்டுகிறான்—

सखेति मत्वा प्रसभं यदुक्तं हे कृष्ण हे यादव हे सखेति ।
अजानता महिमानं तवेमं मया प्रमादात् प्रणयेन वाऽपि ॥ ४१ ॥
यच्चावहासार्थमसत्कृतोऽसि विहारशय्यासनभोजनेषु ।
एकोऽथवाऽप्यच्युत तत्समक्षं तत् क्षामये त्वामहमप्रमेयम् ॥ ४२ ॥

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி ।
அஜாநதா மஹிமாநம் தவேதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேந வாऽபி ॥ 41 ॥
யச்சாபஹாஸார்த்தம் அஸத்க்ருதோऽஸி
விஹாரசய்யாஸந போஜநேஷு ।
ஏகோऽதவாऽப்யச்யுத தத்ஸமக்ஷம்
தத் க்ஷாமயே த்வாமஹம் அப்ரமேயம் ॥ 42 ॥

इदम्—இப்போது யான் அனுபவித்துச் சொல்லும்
तव महिमानम्—உமது மேன்மையை
अजानता मया—அறியாமலிருந்த என்னால்
प्रमादात्—மோஹத்தினலோ
प्रणयेन वाऽपि—அதிக பரிசயத்தினலுமோ
सखा इति—ஸம வயதிலிருக்கும் தோழன் என்று
मत्वा—நினைத்து
हे कृष्ण—அடே கிருஷ்ண!
हे यादव—அடே யாதவா!
हे सखे—அடே தோழனே!
इति प्रसभम्—என்றவாறு அடக்கமின்றி
यत् उक्तम्—என்ன சொல்லப்பட்டதோ,
अपहासार्थम्—பரிஹாஸம் செய்ய வேண்டுமென்று
असत्कृतः असि यत् च—(என்னால்) அவமதிக்கப்பட்டாயென்பது என்னவோ,
विहार शय्या आसन-भोजनेषु—விளையாட்டு படுக்கை, வீற்றிருப்பு, உண்பது என்ற சேர்ந்து செய்த செயல்களில்
एकः—தனியாகவோ
अथवा समक्षम्—அல்லது பலர் காணவோ
तत् असत्कृतः—அவ்வாறு அஸத்காரமே செய்யப் பெற்றீரே,
तत्—அவற்றையெல்லாம்
अच्युत—ஆச்ரிதரை விடாத பிரானே
अप्रमेयम्—அளவுக்கு அகப்படாத மான்மியம் உடைய
त्वाम्—உம்மை
अहं क्षामये—யான் பொறுக்க வேண்டுகிறேன்.

அடே கிருஷ்ண, கிட்டா, கிட்டு, கிச்சு, குட்டா, யாதவா, அரசிழந்த வம்சத்திற் பிறந்தவனே என்றும், தோழா என்றுமெல்லாம் அழைத்தேன். தெய்வமென்ற நினைவின்றி தோழனென்றே நினைவினால். தெரிந்திருந்த சில மஹிமைகளைக் கூட அந்த ஸமயத்தில் மறந்ததாலுமாம் அது, நெருங்கி நீண்டகாலம் பழகியதால் அலக்ஷ்யமாய் நினைக்கும்படியான அன்பினலுமாயிற்று அது. தவிர, பரிஹாஸம் பண்ணவேண்டுமென்ற கொடிய கருத்துடனே பலவிதமாக அவமதித்துக் சொன்னதுமுண்டு. நீர் கூடவே சேர்ந்து விளையாடவோ வீற்றிருக்கவோ படுத்திருக்கவோ போஜனம் உண்ணவோ இசைந்திருந்த போதுகளிலும் நாம் இருவர் மட்டும் இருந்த காலததிலும் பலர் கண்டிருந்த காலத்திலும் அவ்வித அவமதிப்புகளைச் செய்ததும்

உண்டு. அளவற்ற ப்ரபாவமுடையராயிருந்தும் அடிமைகளை விடாமற் காக்கும் கருணைக் கடலான உம்மை அவற்றையெல்லாம் பொறுக்கும்படி இப்போது தெளிவுற்ற யான் வேண்டுகிறேன்.

(ச்லோகங்களில், யத் என்ற சொற்கள் இரண்டும் தத் என்ற சொற்கள் இரண்டும் உள. பாஷ்யத்தில் யத் என்ற சொற்கள் மூன்றும் தத் என்பது ஒன்றுமாக வாக்யங்கள் உள. மூலத்தில் யத் என்ற சொல் இரண்டே என்பது உரையில் தெளிவாம். சங்கரபாஷ்யத்தில் யத் என்ற சொல் இரண்டே கொண்டு இரண்டே வாக்யமாக்கி அவற்றிற்கு ஒரே தத் என்ற சொல் போதுமாகையால் மற்றொரு தத் என்ற சொல் க்ரியாவிசேஷணமாகக் கொள்ளப்பட்டது. நமது பாஷ்யத்திலும் யத் மூன்று கூறியும், தத் ஒன்றே அவற்றைக் குறிப்பதாகக் கொள்ளப்பட்டது. ஆக அதிகமான தத் என்ற சொல்லுக்குப் பொருளென்ன. யத் என்ற இரண்டிற்கு இணங்க இரண்டே வாக்யமாக்காமல் ஏன் மூன்றாக்க வேண்டுமென்று கேள்வி எழும். மூன்றாக்கியதற்குக் காரணம் உரையில் கூறப் பெற்றது, விஹாரசய்யாஸந போஜன ஸமயங்கள் நீங்கலாக மற்ற ஸமயங்களிற் செய்த அவமதிப்பையும் குறிக்க வேண்டுமே யென்றவாறு. तत् என்ற சொல் இரண்டிருப்பதால்தான் பாஷ்யத்திலே இரண்டு வாக்யமாக்காமல் மூன்று வாக்யமாக்கியது. அதனால் எல்லா அஸத்காரமே பொருளாம். तत् असत्कृतोऽसि என்றவாறு விசேஷணமே. தத்-அந்த-நினைவிலிருக்கின்ற அஸத்காரம்.

भाष्ये 'यच्चापहासार्थमसत्कृतोऽसि' इति वाक्यं पृथक्कृत्य विहारेत्यादि पृथग्वाक्यं कृतम्। तत्र एक इति प्रथमान्तपदान्तरसत्त्वात् तदित्यस्य विशेष्यतया असत्कार वाचकप्रथमान्तत्वायोगात्। असत्कृतोसीति क्रियाविशेषणत्वमेव। तत् स्मर्यमाणम् असत्करणं न केवलं परिहासार्थम्, किंतु विहारादिसमयेष्वपि एकान्ते च समक्षञ्चेति तात्पर्यार्थः। भाष्ये यदसत्कृतोऽसीत्यत्र यदित्यस्य तदित्यत्रैव पर्यवसानम्। उपरितनतच्छब्देनास्यापि ग्रहणज्ञापनार्थं यदित्युक्तम्।

அச்யுதா என்று அழைத்தான் கீழே. ஆச்ரிதரைவிடாமை அதன் பொருள். அதற்குக் காரணமான ஸம்பந்தத்தை மேலே குறிக்கிறான்—

पिताऽसि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥ ४३ ॥

பிதாऽஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யச்ச குருர்கரீயாந் |
ந த்வத்ஸமோஸ்த்யப்யதிக: குதோऽந்யோ
லோகத்ரயேऽப்யப்ரதிமப்ரபாவ || 43 ||

अप्रतिमप्रभाव—ஈடற்ற ப்ரபாவமுடையவரே!
चराचरस्य—ஜங்கமஸ்த்தாவரமான
अस्य लोकस्य—இவ்வுலகுக்கு
त्वं पिता असि—நீர் தந்தையாகிறீர்
गुरुः—ஆசார்யராகிறீர்
गरीयान् पूज्यः च—மிகவும் ஆராதிக்கப்பட வேண்டியவராகிறீர்
लोकत्रये अपि—மூவுலகிலும்
त्वत् अन्यः—உம்மைவிட வேறானவன்
न समः अस्ति—உமக்கு ஈடில்லை.
अभ्यधिकः—மேம்பட்டவன்
कुतः—எவ்வாறு இருப்பான்?

வேறு யாரும் உமக்கு ஈடில்லையென்றதால் 'உமக்கு நீரே ஈடு' என்ற அநந்வயாலங்காரம் தோற்றும்.

**तस्मात् प्रणम्य प्रणिधाय कायं प्रसादये त्वामहमीशमीड्यम् ।**
**पितेव पुत्रस्य सखेव सख्युः प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥ ४४ ॥**

தஸ்மாத் ப்ரணம்ய ப்ராணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாம் அஹம் ஈசம் ஈட்யம் |
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும் || 44 ||

तस्मात्—நீர் உறவும் குணங்களும் உடையராயிருப்பதால்
ईशम्—ஸர்வேச்வரராய்
ईड्यम्—துதிக்கத்தக்கவருமான
त्वाम् अहम्—உம்மை நான்
प्रणम्य—வணங்கி
कायं प्रणिधाय—உடலை முழுதும் கிழே அமர்த்தி
प्रसादये—வேண்டுகிறேன்.
देव—ஆராத்ய மூர்த்தியே!
पुत्रस्य—மகன் விஷயத்தில்
पिता इव—ப்ரார்த்திக்கப் பெற்ற பிதா போலவும்
सख्युः—தோழன் விஷயத்தில்
सखा इव—ப்ரார்த்திக்கபட்ட சிறந்த தோழன் போலவும்
प्रियः—எனக்கு ப்ரியரான நீர்
प्रियाय—உமக்கு ப்ரியமான என் விஷயமாக
सोढुम् अर्हसि—பொறுக்கத் தகுதி யுடையராகிறீர்.

நான் முதலில் உமது திருவுருவைக் காணவேண்டியது தவறென நினைக்கவில்லை யென்கிறான்—

**अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा भयेन च प्रव्यथितं मनो मे ।**
**तदेव मे दर्शय देव रूपं प्रसीद देवेश जगन्निवास ॥ ४५ ॥**

अदृष्ट पूर्वम्-இதற்குமுன் காணாத
रूपम्-(உமது) உருவை
दृष्ट्वा-கண்டவுடனே
हृषितः अस्मि-ஆனந்தமுற்றவனா கிறேன்
मे मनः च-எனது மனமும்
भयेन-அச்சத்தினால்
प्रव्यथितं-மிக்க நடுக்கமுற்றது.
देव-எனக்கு தேவனே!
देव-ईश-தேவர்க்கும் தேவனே
जगत् निवास-உலகுக்கு இருப்பிட மானவரே
तत् एव-இதற்கு முன்னை
रूपम्-உமது திருவுருவையே
दर्शय-காணவருள வேணும்.
प्रसीद-வேறாக நினைக்காமலருள வேணும்.

**किरीटिनं गदिनं चक्रहस्तमिच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।**
**तेनैव रूपेण चतुर्भुजेन सहस्रबाहो भव विश्वमूर्ते ॥ ४६ ॥**

கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்தம்
இச்சாமி த்வாம் த்ரஷ்டும் அஹம் ததைவ |
தேநைவ ரூபேண சதுர்புஜேந
ஸஹஸ்ரபாஹோ பவ விச்வமூர்த்தே || 46 ||

तथा एव—முன்போலவே
किरीटिनम्—கிரீடம் அணிந்தவரும்
गदिनम्—கதையையேந்தியவரும்
चक्रहस्तम्—திருவாழிக்கையருமான
त्वाम् द्रष्टुम्—உம்மைக் காண
इच्छामि—விரும்புகிறேன்.
सहस्रबाहो—எண்ணற்ற புஜங்களையுடையவரே
विश्वमूर्ते—உலகெல்லாம் மூர்த்தியில் உடையவரே
चतुर्भुजेन—நான்கு புஜங்கள் உடைய
तेन एव—இதற்கு முன்னுனதேயான
रूपेण—திருவுருவுடன்
भव—விளங்குவீராக.

தேர்த்தட்டில் வீற்றிருந்தபோதுகூட கிரீடம் கதை திருவாழி எல்லாம் தரித்து நான்கு புஜங்களுடன் இருந்தான். அதனுல், தான் வேண்டினதற்காகக் காட்டிய, எண்ணற்ற புஜங்களைக் கொண்டதும் உலகையெல்லாம் தனதொரு புறத்திலே அமைத்துமான விச்வரூபத்தை விட்டு அந்த ரூபத்தையே காணவருள வேணுமென்கிறுன்.

श्रीभगवान् उवाच—பகவான் பகர்ந்ததாவது—

मया प्रसन्नेन तवार्जुनेदं रूपं परं दर्शितमात्मयोगात् ।
तेजोमयं विश्वमनन्तमाद्यं यन्मे त्वदन्येन नदृष्टपूर्वम् ॥ ४७ ॥

மயா ப்ரஸந்நேந தவார்ஜுநேதம்
ரூபம் பரம் தர்சிதம் ஆத்மயோகாத் |
தேஜோமயம் விச்வம் அநந்தம் ஆத்யம்
யந்மே த்வதந்யேந நத்ருஷ்டபூர்வம் || 47 ||

यत् मे रूपम्—எந்த எனது உருவம்
तेजोमयम्—தேசின் திரளோ
विश्वम्—எங்கும் பரவியதோ
अनन्तम्—அடி முடியிடையற்றதோ
आद्यम्—எதற்கும் காரணமோ
अर्जुन—அர்ஜுனு
त्वदन्येन—உன்னைத் தவிர்த்து மற்ருெருவரால்
न दृष्टपूर्वम्—இதற்கு முன் பார்க்கப் படாததோ
इदं रूपम्—இவ்வுருவானது
प्रसन्नेन—உன்னிடம் தெளிவுற்ற
मया—என்னுல்
आत्मयोगात्—எனது ஸங்கற்ப சக்தியால்
दर्शितम्—காண்பிக்கப் பெற்றது.

பிறர் காணுமைக்குக் காரணம் மற்ற யோக்யதைகள் இல்லாமையாலல்ல, பக்தியில்லாமையாலெனெ வருளுகிறுர்—

न वेदयज्ञाध्ययनैर्न दानैर्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः ।
एवंरूपश्शक्य अहं नृलोके द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥ ४८ ॥

ந வேதயஜ்ஞாத்யயனைர் ந தானை:
ந ச க்ரியாபிர் ந தபோபிருக்ரை: |
ஏவம்ரூபச் சக்ய அஹம் ந்ருலோகே
த்ரஷ்டும் த்வதந்யேந குருப்ரவீர || 48 ||

कुरुप्रवीर—கௌரவ ச்ரேஷ்டனே !
नृलोके—மனிதவுலகில்
एवंरूप: अहम्—இவ்வாறான உருவமுடையவன்
त्वदन्येन—பக்தியுள்ள உன்னை விட வேறான (பக்தியற்ற)வனால்
वेदयज्ञाध्ययनैः—வேதார்த்த ஜ்ஞானம் யாகம் அத்யயனம் என்ற வற்றால்
न द्रष्टुं शक्य:-காணக் கூடியவனல்லன்
दानैः न च—தானதர்மங்களாலுமல்லன்.
क्रियाभिः न च—ஹோமம் முதலான க்ரியைகளாலுமல்லன்
उग्रैः तपोभिः च-கடுமையான தவங்களாலுமல்லன்.

உபநிஷத்தில் என்னைக் காண வேதாத்யயனம் முதலான பல உபாயங்கள் ஓதப் பெற்றன. நிஷ்காமமாக அவற்றைச் செய்தால் நான் காணப்படுவது உண்டு. ஆனாலும் உன்னைப் போல் பக்தியில்லையாகில் அவை யென்ன இருப்பினும் எவனும் காண வல்லனாகான்.

मा ते व्यथा मा च विमूढभावो दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम् । See Nr P. 31-8-59/60
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं तदेव मे रूपमिदं प्रपश्य ॥ ४९ ॥

மா தே வ்யதா மா ச விமூடபாவோ
த்ருஷ்ட்வா ரூபம் கோரம் ஈத்ருங் மமேதம் |
வ்யபேதபீ: ப்ரீதமநா: புநஸ்த்வம்
தேதவ மே ரூபமிதம் ப்ரபச்ய || 49 ||

घोरं—பயங்கரமாய்
ईदृक्—இவ்வளவு பெரிதான
इदं मम रूपम्-இந்த என் உருவை
दृष्ट्वा—காண்பதால்
ते व्यथा मा—உனக்கு வருத்தம் வேண்டா.
विमूढभावः च मा—மோஹமும் வேண்டா.
व्यपेतभीः—அச்சம் விலகியவனாய்
प्रीतमनाः—அன்பார்ந்த மனமுடையனாய்
तत् एव—ஏற்கனவே பார்க்க பட்டு
इदं—இந்த
मे रूपम्—எனது உருவத்தையே
पुनः त्वम्-மீண்டும் நீ
प्रपश्य—நன்றாகக் கண்டிரு.

सञ्जय उवाच—ஸஞ்ஜயர் சொன்னதாவது—

इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा स्वकं रूपं दर्शयामास भूयः । See Nr. P 31-8-60/61
आश्वासयामास च भीतमेनं भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥ ५० ॥

இத்யர்ஜுநம் வாஸுதேவஸ் ததோக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்சயாமாஸ பூய: |

ஆச்வாஸயாமாஸ ச பீதமேநம்
பூத்வா புந: ஸௌம்யவபுர் மஹாத்மா || 50 ||

वासुदेवः-கண்ணபிரான்
अर्जुनम्-அர்ஜுனனுக்கு
इति उक्त्वा-இவ்வாறு கூறி
स्वकं रूपम्—தனது உருவை
तथा—கூறியவாறே
भूयः—மீண்டும்
दर्शयामास-காட்டினன்.
महात्मा—மஹானுபாவனான கண்ணன்
भीतम् एनम्—பயந்திருந்த அர்ஜுனனை
सौम्यवपुः भूत्वा-சாந்தமான திருமேனியுடையனுகி
पुनः—மீண்டும்
आश्वासयामास च—ஆறுதலும் கூறினன்.

अर्जुन उवाच—அர்ஜுனன் சொன்னன்—

दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन ।
इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥ ५१ ॥

த்ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜநார்தந |
இதாநீமஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம் கத: || 51 ||

जनार्दन—ஜனங்களால் வேண்டப்படுகிறவரே!
तव-உமக்கேயான
सौम्यम्—கல்யாணகுணங்கள் நிறைந்து குளிர்ந்த
मानुषं—மனித வுருவுக்கு ஈடான
रूपम्—உருவை
दृष्ट्वा—பார்த்தமட்டிலே
इदानीम्—இப்போதே
सचेताः संवृत्तः—புத்தியுடையனுகி
प्रकृतिं गतः च—சுயநிலையைப் பெற்றவனுமாகிறேன்.

श्रीभगवान् उवाच—பகவான் பகர்ந்ததாவது—

सुदुर्दर्शमिदं रूपं दृष्टवान् असि यन्मम ।
देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकाङ्क्षिणः ॥ ५२ ॥

ஸுதுர்தர்சமிதம் ரூபம் த்ருஷ்டவாநஸி யந்மம |
தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சநகாங்க்ஷிண: || 52 ||

सुदुर्दर्शं-மிகவும் காணவரிதான
मम यत्-எனது யாதொரு
इदं रूपम्-இந்த ரூபத்தை
दृष्टवान् असि-கண்டிருக்கிறயோ,
अस्य रूपस्य-இவ்வுருவை
देवाः अपि-தேவதைகளும்
नित्यम्-எப்போதும்
दर्शनकाङ्क्षिणः-காண விருப்பம் உடையராவர், காணுதவர்களே.

नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।
शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥ ५३ ॥

भक्त्या त्वनन्यया शक्य अहमेवंविधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुञ्च तत्त्वेन प्रवेष्टुञ्च परंतप ॥ ५४ ॥

Sl 53-54
NKP 31-5- 63/64

நாஹம் வேதைர் ந தபஸா ந தாநேந ந சேஜ்யயா |
சக்ய ஏவம்விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவாநஸி மாம் யதா || 53 ||
பக்த்யா த்வநந்யயா சக்ய அஹமேவம்விதோऽர்ஜுந |
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப || 54 ||

मां यथा—என்னை எவ்வாறு
दृष्टवान् असि—கண்டவனாகிருயோ,
एवंविधः अहं-இவ்வாருக நான்
वेदैः—வேதம் ஓதுதல் ஓதுவித்தல் பொருள் கூறல் ஐபித்தல் என்பவற்ருல்
न द्रष्टुं शक्यः—காணப்படக் கூடியவனல்லன்.
तपसा न-தவத்தினுலுமல்லன்,
दानेन न-தானத்தினுலுமல்லன்.
इज्यया च न-யாகாதிகளாலுமல்லன்.

परन्तप—பகைவரை வதைக்கின்றவனே !
अर्जुन-அர்ஜுனு !
अहं एवंविधः— நான் இவ்வாறே
अनन्यया—வேறு பற்றின்றியிருக்கும்
भक्त्या तु—பக்தி யென்பதொன்ருல்
तत्त्वेन—உள்ளபடி
ज्ञातुं शक्यः—அறியக் கூடியவன்
द्रष्टुं च – காணவும்
प्रवेष्टुं च—புகவும்
शक्यः—கூடியவன்.

வேதம்ஓதல் முதலான தர்மங்கள் உபாயமே. ஆயினும் வேறு பற்றில்லாத பக்தி என் விஷயமில்லையாகில் எல்லாம் வீணே. அது உள்ளபோதுதான் என்னை நன்ருக வேதத்தினின்றும் அறிவதோ, உள்ளபடி காண்பதோ, உள்ளபடி புகுவதோ கூடும், அதில்லையேல் யாரும் காணமாட்டார்கள்—

அர்ஜுனு, உலகில் பலர் உபதேசம் பெற்று வருகிருர்கள். வேதம்ஓதல் ஐபித்தல் ப்ரவசனம் செய்தல் என்பவற்றில் ஒவ்வொன்றும் சிறந்ததே. அதுபோல் அனுஷ்டிப்பதும் சிறந்தது. எல்லாம் இருந்தும் காணமாட்டார். ஏனென்னில், பக்தி வேண்டும். அது வேறு பற்றின்றி என் விஷயமாகவே யிருக்கவேண்டும். இந்த நிமிஷத்தில் உனக்கு உண்டான அளவுக்கு வைராக்யமும் பக்தியும் எல்லோருக்கும் வாராது. உனக்குண்டான வைராக்யம் நானே நேரில் உபதேசம் செய்ததாலும் என் விபூதிகளையறிய விரும்பியபோது அவற்றையும் நான் தெளிவித்ததாலுமாம். அதன் மேல் பக்தியானது முதிர்ந்து நீ என்னைக் காணுமாறருளாய் என்று வேண்டுமளவுக்கு ஆயிற்று. இவ்வாறு எல்லோருக்கும் நேருமோ? பக்தியின் குறைவால் முதலில் வரும் தத்துவஞானமே பூர்ணமாகிறதில்லை. எங்ஙனே காண்பதும் புகுதலும் ? ஒரே பக்தி மூன்றுக்கும் காரணமாகில் முதலிலேயே புகலாமே யென்னவேண்டா. பக்தியில் மேன்மேல் வளம் உண்டு. சாஸ்த்ரம் மூலம் நன்கறியக் காரணமாம் பக்தி சாமான்யமாய் அன்பு மட்டும். காண்பதற்கு பரபக்தி என்று சொல்லுமளவுக்

கான தொடர்ச்சியான பக்தி வேண்டும். அதன் மேல் பிரிந்தால் தரிக்க மாட்டாமல் கடுமையாக ஆணையிட்டு அழைக்குமளவான பரமபக்தி வேண்டும். அப்போது புகலாகும். இவற்றில் காண்பதற்கு முன்னே வரும் பக்தி கட்டளைப்பட்ட (வேதத்தில் விதிக்கப்பட்ட முறைப்படியான)பக்தியாயிருந்தால்தான் புகுதல் வரையிலான பலன். நீ இப்போது கண்டுவிட்டாயே. இதன் மூலம் உனக்குப் பரமபக்தி வருமாயினும் அப் பரபக்தியில்லையாகையால் புகலாகாது. பரபக்தியில்லாமலே காணலாகை மேலிட்டார் உலகில் கிடைப்பது அரிது. உனக்கு அது வாய்த்தது சிறப்பாம் என்றபடி.)

शास्त्रतो ज्ञाने कारणं भक्तिः सामान्यभूता। दर्शने कारणभूता ततो विलक्षणा। प्रायः शास्त्रविहितभक्तियोगरूपा। प्रवेशे कारणभूता तु परमभक्तिरत्युत्कटेच्छागर्भा। साम्प्रतं ते जातं दर्शनं परभक्त्यभावेऽपि विलक्षणप्रीत्यायत्तम्। एतदधीनपरमभक्तिमात्रात् प्रवेशो दुर्लभः। विहितस्य परभक्तिरूपस्योपायस्याभावात्। एतद् ज्ञापयितुमेवाष्टादशे, 'भक्त्या मामभिजानातीति श्लोके तत इति पदम्। तस्य ततो विशतीति प्रवेशक्रियाहेतुतया भाष्ये व्याख्यानश्चैतमर्थं सूक्ष्मं दर्शयितुम्॥

एवं भक्तियोगस्यावश्यकत्वं तदुपायश्च समनन्तरमेव कथयन् निगमयति. இப்படி கட்டளைப்பட்ட பக்தி வேண்டுமென்பதையும் அதன் உபாயத்தையுமே மேலே சொல்லி முடிக்கிறார்—

**मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः संगवर्जितः।**
**निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव!॥ ५५॥**

*மத்கர்மக்ருந் மத்பரமோ மத்பக்த: ஸங்கவர்ஜித: |*
*நிர்வைர: ஸர்வபூதேஷு யஸ் ஸ மாமேதி பாண்டவ || 55 ||*

मत्कर्मकृत्—கீழ்க் கூறிய வேதாத்யயநாதிகளைச் செய்கின்றவனாய்
मद्भक्तः—என்னிடமே அன்பு உடையனாய் பக்தி செய்கின்றவனாய்
संगवर्जितः—வேறொன்றில் ராகமற்றவனாய்
सर्वभूतेषु—எல்லா ப்ராணிகளிடமும்
निर्वैरः—பகையற்றவனாய் ராகம் போல் த்வேஷமுமில்லாதவனாகிறான்
यः—எவன்,
पाण्डव—பாண்டு புத்ரனே!
सः—அவனே
माम् एति—என்னைப் பெறுகிறான்.

பரஜ்ஞான பரமபக்திகள் முக்கியமல்ல. பரபக்தி முக்கியம். அது நீண்டகாலம் அனுஷ்டிக்கப்படும். அது இடையூறின்றி வளர்வதற்கு சாஸ்த்ரத்தில் விதித்த செயல்களெல்லாம் வேண்டும். அவற்றைச் செய்யும் போதும் வேறு பொழுதிலும் வேறொன்றில் பற்றோ பகையோ ஒன்றும் தகாது. பகவானுக்கென்று அர்ப்பணம் செய்து எல்லாம் நடத்துகின்றவன் என்னையடைகிறான்—

என்று பக்தியோகத்தை ஒருவாறு முடித்தருளினார்.

பதினோராவது அத்தியாயம் முற்றும்.

* * * * *

பன்னிரண்டாம் அத்தியாயம்

ஆறு அத்தியாயங்களில் ஜீவாத்மாவைக் காண்பதற்கான உபாஸனமாம் அக்ஷரோபாஸனம் உபதேசிக்கப் பெற்றது. பிறகு பதினோராவது அத்தியாயம் வரையில் ஜடஜீவேச்வர தத்துவங்களை யுணர்த்தி பக்தர்களை நான்கு வகையாகப் பிரித்து அர்ஜுனனுக்கு பக்தி வளர்வதற்காக பகவான் சிறப்பாக விளங்குமிடமான விபூதிகளும் உபதேசிக்கப் பெற்று விச்வரூப தர்சனமும் செய்விக்கப் பெற்றது. முடிவில் அவனுக்கு ஆராதனமாக எல்லாம் செய்து பக்தியை வைராக்யத்துடன் அனுஷ்டிப்பவர் அவனைப் பெறுவரென்றும் அருளினார். இங்கே அவ் உபாயங்கள் இரண்டையும் கவனித்து அவ் விஷயமாக வினா ஒன்றை எழுப்புகிறான். இதற்கு மறுமாற்றம் அளித்த பிறகு பகவான் தாம் இங்குச் சொல்ல நினைத்ததையும் அருள்வர்.

अर्जुन उवाच—அர்ஜுனன் கேட்பதாவது—

**एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।**
**ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥ १ ॥**

ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே |
யே சாப்யக்ஷரமவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா: || 1 ||

एवं—கீழ்க்கூறியவாறு
ये भक्ताः—எந்த பக்தர்கள்
सततयुक्ताः—உம்மை எப்போதும் சேர்ந்திருக்க விரும்பி
त्वां पर्युपासते—உம்மை உபாஸிக்கின்றனரோ,
ये च—எவர்களும்
अव्यक्तम्—வெளிப் பொறிகளுக்கு விஷயமாகாத
अक्षरम्—ஜீவாத்ம ஸ்வரூபத்தை
पर्युपासते—உபாஸிக்கின்றனரோ,
तेषां के—அவர்களில் யார்
योगवित्तमाः—சிறந்த யோகம் உடையராவர்.

உம்மை என்றும் பெற்றிருக்க விரும்பி உமது பஜனம் செய்பவர் சிறந்த யோகிகளா, ஜீவாத்மோபாஸனம் செய்கின்றவர் சிறந்த யோகிகளா என்று அர்ஜுனனின் வினா. ஆறும் அத்தியாயம் முடிவில் ஜீவாத்ம யோகியை விட பரமாத்ம யோகியை மேம்பட்டவனாகக் கண்ணன் அருளிச் செய்திருந்தும் இவ்வாறு வினவலாமோ என்னில். உபாஸிக்கப்படும் விஷயம் பெரிது பலன் பெரிது என்ற காரணத்தினால் பகவத்யோகி சிறந்தவனென்பதை அர்ஜுனன் அறிந்திருக்கிறான். ஆனால் ஜீவாத்மோபாஸனம் தன் பலனை சீக்கிரம் அளிக்குமா, பரமாத்மபக்தி அளிக்குமா என்று கேட்பதில் நோக்கு இங்கே. அவ்வாறே தெளிவாகக் கேட்கலாமே யென்னில், ஆனாலும் ஆசார்யனிடம் பரிப்ரச்னம் செய்ய வேண்டுமென்றிருப்பதால், அறியவேண்டும் விஷயத்தை பிரித்துக் கூறாமல் பொதுவாகக் கேட்கிறான். எல்லாமே மீண்டும் சொன்னாலும் கேட்பதே தகுமென்று அவனது நோக்கு. அதாவது பகவத் பக்தன் சிறந்த யோகி என்பது உபாஸிக்கப்படும் வஸ்துவிலும் பலத்திலும் உள்ள சிறப்பால் மட்டுமா, அல்லது

அந்த பக்தியே விரைவில் தன் பலனை அளிக்குமென்பதாலுமா, பரமாத்ம ஸ்வரூபம் ஸூக்ஷ்மமானபடியால் பலன் பெறுதல் தாமதித்தே என்னவாகுமென்று அவன் எண்ணமாம். அதிலும் சிறப்பே என்கிறார்.

प्राक् प्रथमषट्कान्त एव भगवद्योगिनामतिशयितत्वस्य भगवता स्वयमेवोक्तत्वात् कथमेवं प्रश्न इति चेत्—न ; प्रश्नस्यान्यांशविषयकत्वात् । अनयोर्जीवपरयोगयोर्मध्ये कतरः स्वफलं क्षिप्रं प्रयच्छतीति प्रश्ने तात्पर्यम् । तथैव कस्मात् स्पष्टं न पृष्टमिति चेत्—परिप्रश्न एव खलु शिष्येण कर्तव्यः। न त्वाहत्यापेक्षितविषयमात्रे । यदि भगवान् सर्वमेव पुनर्वक्ष्यति, अंशमपेक्षितमेवाकलय्य वा वक्ष्यति, सर्वथा श्रोतव्यमिति विनीतस्याशयः । उपास्यस्य प्राप्यस्य चोत्कर्षात् भवन् अतिशयः स्यान्नाम। फलप्राप्तिशैघ्र्यं तु जीवोपासन एव, तदपेक्षया परमात्मस्वरूपस्य सुसूक्ष्मत्वादित्यभिसंधिरस्य । तत्रापि स्वयोग एवातिशयमाह भगवान् ॥ (१)

श्रीभगवान् उवाच—பகவான் அருளிச் செய்ததாவது—

मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।
श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः ॥ २ ॥

மய்யாவேச்ய மநோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே |
ச்ரத்தயா பரயோபேதா: தே மே யுக்ததமா மதா: || 2 ||

परया श्रद्धया उपेताः—மிக்க ச்ரத்தையுடன் கூடினராய்
नित्ययुक्ताः—எப்போதும் சேர்ந்திருக்க விரும்பி
ये मनः—எவர்கள் மனத்தை
मयि आवेश्य—நானே ப்ராப்யனென்று என்னிடமே வைத்து
माम् उपासते—என்னை உபாஸிக்கின்றனரோ,
ते मे—அவர்கள் எனக்கு
युक्ततमाः—சிறந்த யோகிகளாக
मताः—நினைக்கவாகின்றனர்.

(नित्ययुक्ताः என்றதால் யாருடன் சேர என்பது தெரியாமையால் मय्यावेश्य என்பது வேண்டும். இதுவே போதும். அது எதற்கென்னில், தன்னை ப்ராப்யமாக நினைப்பதோடு வேறொன்றிலும் விருப்பமுண்டு என்னவாகாதவாறு இருப்பவரென அறிவிக்க.) என்னையே ப்ராப்யமாக ச்ரத்தையுடன் உபாஸிப்பார்க்கே எவ்விதத்திலும் ஜீவயோகியைவிட சிறப்பாகுமென்றார் இதனால். ஏனெனில்—

ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगमचिन्त्यञ्च कूटस्थमचलं ध्रुवम् ॥ ३ ॥
संनियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।
ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥ ४ ॥

யே த்வக்ஷரம் அநிர்தேச்யம் அவ்யக்தம் பர்யுபாஸதே |
ஸர்வத்ரகம் அசிந்த்யஞ்ச கூடஸ்த்தம் அசலம் த்ருவம் || 3 ||
ஸந்நியம்யேந்த்ரியக்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய: |
தே ப்ராப்நுவந்தி மாமேவ ஸர்வபூதஹிதே ரதா: || 4 ||

ये तु—பக்தரைவிட வேறான எவர்கள்
अव्यक्तम्—இந்த்ரியங்களுக்கு இலக்காகாததும்
अनिर्देश्यम्—அறியாமையால் தனியே கூறப்படமாட்டாததும் (தேவாதி சப்தங்களால் தேஹத்தோடு சேர்ந்தே சொல்லப்படுவதும்)
सर्वत्रगम्—எங்கும் இருந்து(ம்)
अचिन्त्यम्—இன்னதென ஆராயவாகாததும்
कूटस्थम्-பல பிறப்பின் பரம்பரைக்கு பொதுவானதும்
अचलम्– ஸ்வரூபம் மாறாததும்
ध्रुवम्—அழிவற்றதுமான
अक्षरम्—ஆத்மஸ்வரூபத்தை-
इन्द्रियग्रामम्—இந்திரியத்திரளை
संनियम्य—அடக்கி
सर्वत्रसमबुद्धयः—எல்லா ஆத்மாக்களையும் ஸமமாகக் கொண்டு
सर्वभूतहिते रताः—எல்லா ப்ராணிகளுக்கும் நன்மை செய்வதில் நோக்குள்ளவராய்-தீமையை எவருக்கும் செய்யாமல்
उपासते—உபாஸிக்கின்றனரோ
ते अपि—அவர்களும்
मां—என்னை
प्राप्नुवन्ति एव—அடைகின்றவரேயாவர்.

க்ஷரமாய் நிர்தேச்யமாய் வ்யக்தமாய் அங்கங்கு மட்டும் உள்ளதாய் ஆராயக் கூடியதாய் பல மாறுதல்களும் அழிவும் பெறுவதுமான தேஹாதி வஸ்துவைக் கண்டிருக்குமவர்களில் எவ்விதத்திலும் அவ்வுருவியந்த ஜீவஸ்வரூபத்தைக் காணப் பாடுபட்டு எவர்கள் பொறிகளை வென்று ஒருவருக்கும் தீங்கு விளைக்காமல் எல்லா ஜீவனும் ஸமமாகுமென்று தெளிந்து உபாஸிக்கிறார்களோ, அவர்களும் என்னை அடைகின்றவர்களே, எல்லா ஆத்மாவும் ஸமமான போது நானும் அதற்கு ஸமமாகையால் அவர்கள் தம் ஆத்மாவை அடைவதென்து என்னை அடைவதே. ஏவகாரம் பலன் பெறுவது நிச்சயம் என்னவாம். எனக்கு ஸமமான ஆத்மாவை யென்று வியத்தமாகக் கூறாமல் என்னை என்பதென் என்னில்-மேல் மொழியப் போகின்ற அம்சத்திற்கு இது குறிப்பாகும். உபாஸிக்கும் ஆத்ம ஸ்வரூபத்தை அடைந்தாராகில் என்னை அடைந்தவரே யென்று கூறினால் ஜீவாத்மோபாஸனத்திற்கு உள்ளவளவில் பிரயாசை மேலே பரமாத்மோபாஸனத்தில் இல்லை என்றதாமே.

जीवात्मानं प्राप्नुवन्तीति वा, मत्सदृशं तं प्राप्नुवन्तीति वा वक्तव्ये, मां प्राप्नुवन्तीत्युक्तिः कुत इति चेत्—विवक्षितांशस्फोरणाय। तल्लाभो मल्लाभ एवेति ततः सिद्ध्या तल्लाभानन्तरं मल्लाभे विलम्बो नाधिक इति हि इतो व्यज्यते। मामेव என்னையே என்றந்வயம் கூறில், தன்னை மட்டும் அடைகின்றனர் ஜீவாத்மாவை அடையவில்லை யென்று தோன்றும். அதை மாற்ற 'மாம் ப்ராப்நுவந்த்யேவ' என்றது. அப்போதும் இக்கருத்தே கூறவாகுமாகில் கொள்க. (3. 4.)

து என்று தொடங்கியதைத் தெளிவிக்கிறார்—

क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ ५ ॥

க்லேசோऽதிகதரஸ்தேஷாம் அவ்யக்தாஸக்த சேதஸாம் |
அவ்யக்தா ஹி கதிர் துக்கம் தேஹவத்பிரவாப்யதே || 5 ||

अव्यक्त-आसक्त चेतसाम्-காணப்படாத ஜீவ ஸ்வரூபத்திலே பற்றிய மனம் உடைய
तेषाम्—அவர்களுக்கு
क्लेशः—பிரயாசையானது
अधिकतरः—மிகமிகவாம்.
अव्यक्ता—காணவாகாத ஜீவ விஷயத்திலான
गतिः—சிந்தையானது
देहवद्भिः—தேஹாத்மாபிமானிகளாலே
दुःखं हि अवाप्यते-பிராயாசைப்பட்டே யன்றோ அடையப் பெறும்.

அநாதி காலமாக தேஹமே ஆத்மா என்ற துர்வாஸனை ஏறியிருப்ப தோடு இப்போதும் தேஹத்துடனே இருந்து அதே ப்ராந்தியில் உலக யாத்ரையில் இழிந்திருப்பவரே யாவரும். ஆகையால் தேஹத்தை விட வேறான ஆத்ம ஸ்வரூபத்தை யோகத்தில் சிந்தித்துப் பெறுவதில் மிக்க பிரயாசையே. ஈச்வரன் வேறு என்ற எண்ணமே எல்லோருக்கும் இருப்பதாலும், எனது ஆத்ம ஸ்வரூபம் அவ்யக்தமானாலும், அது போல் ஜ்ஞானனந்தமான எனது திவ்யமங்களவிக்ரஹம் பெரும்பாலும் காணப்படுவதாலும், அதன் மூலம் எனது கல்யாண குணங்களும் அனுபவிக்கப்படுவதாலும் என்னை இதர விலக்ஷணமாக அறிவதில் இடையூறு விசேஷமாக இல்லை. ஆகையினால் பிரயாசை குறைவென்பதும் ஒரு வாசியாகும்.

जीववत् परमात्मस्वरूपस्याव्यक्तत्वं न भवति। तत्र देहात्माभिमानदुर्वासनावत् इह देहैक्य-जीवैक्यादिदुर्वासनाया अभावात्। विलक्षणत्ववासनाया एव लोकव्यापित्वात्। मदीयदिव्य-मङ्गलविग्रहस्य ममेव ज्ञानानन्दरूपत्वस्याविशिष्टतया देहध्यानमूलं मद्ग्रहणस्य सुकरत्वाच्च। विशिष्य विभवरूपे दृश्यमाने तन्मूलमेव मदीय ज्ञानशक्तिकारुण्यवात्सल्यादिसर्वगुणानुभवस्यापि स्वरसभावितया भक्त्यतिशयेन च मत्स्वरूपोपासनस्य सुकरत्वमिति भगवतो भावः। (5)

अधिकक्लेशतदभावफलं दर्शयति—பிரயாசையின் ஏற்றத் தாழ்வின் பலனைக் காட்டுகிறார்—

ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः।
अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥ ६ ॥
तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात्।
भवामि नचिरात् पार्थ मय्यावेशितचेतसाम् ॥ ७ ॥

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பரா: |
அநந்யேநைவ யோகேந மாம் த்யாயந்த உபாஸதே || 6 ||
தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யுஸம்ஸாரஸாகராத் |
பவாமி நசிராத் பார்த்த மய்யாவேசிதசேதஸாம் || 7 ||

ये तु—எவர்கள் ஜீவயோகிகளைப் போலல்லாமல்
सर्वाणि कर्माणि—வைதிக லௌகிக கார்யங்களையெல்லாம்
मयि संन्यस्य—எனக்கே அர்ப்பணம் செய்து
मत्पराः—என்னையே ப்ராப்யமாகக் கொண்டு
अनन्येन एव—வேறு பலனுக்காகாத
योगेन—பக்தி யோகத்தினால்
मां ध्यायन्तः उपासते—என் விஷயமான மானஸ த்யானம் பூசை புகழ்தல் ப்ரணமமெல்லாம் செய்கின்றனரோ
पार्थ—அர்ஜுனா
मयि—என்னிடத்தில்
आवेशित चेतसाम्—அபிநிவேசம் கொண்ட மனம் உடைய
तेषां—அவர்கள் விஷயத்தில்
न चिरात्—தாமதமின்றி விரைவிலேயே
मृत्युसंसार सागरात्—அபாயகரமான ஸம்ஸாரக் கடலினின்று
समुद्धर्ता—கரையேற்றுகின்றவனாகி
भवामि—ஸத்தை பெறுகிறேன்.

ஜீவாத்மாவைக் காண வேண்டுமென்ற கவலையும் இவர்களுக்கு நீங்கிவிட்ட படியால் என்னையே குறித்து எதையும் செய்வர். கைவல்யத்திலே நோக்கு உள்ள சில ஜீவயோகிகளுக்கு–गुणा गुणेषु वर्तन्ते என்று ப்ரக்ருதியை கர்த்தாவாக நினைப்பவருக்கு—எனக்கே எல்லாம் அர்ப்பணம் செய்வதென்பது இல்லாமற் போம். பக்தர்களுக்கு அவ்வாறில்லை. இவர்களுக்கு என்னைப் பெறுதற்கான எனது அனுபவம் விரைவிலாம். (6–7)

இப்படி பொதுவாகக் கூறி அர்ஜுனனை இதில் ஏவுகிறார்—இது எதற்காக என்னில்—ஜீவயோகபரமாத்ம யோகங்கள் சொல்லப் பெற்றனவே. அவற்றை அனுஷ்டிப்பதற்கு சக்தி அசக்திகளை ஆய்ந்து படிப்படியாகச் செய்யும் முறையை உபதேசிக்க கருதி, அந்த வரிசையை நன்கு அறிய அவனுக்கு ஆவல் உண்டாவதற்காக முடிவான பக்தி யோகத்தையே அர்ஜுனா நீ அனுஷ்ட்டி என்கிறார். 'அதைக் கேட்டவுடனே முடியவில்லையே என்று திகைப்பான். உடனே படிகளைக் காட்ட வேண்டும்' என்ற கருத்தினால்.

जीवयोगपरमात्मयोगविषये सोपानक्रमः इत उपदेष्टव्यः इत्यालोच्य तदर्थं तस्योत्तमपर्वारोहाशक्तिज्ञानं परीक्षितुं भगवद्भक्तिरेव त्वया कर्तव्येत्युपदिशति ।

**मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय ।**
**निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ ८ ॥**

*மய்யேவ மந ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேசய |*
*நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்த்வம் ந ஸம்சய: || 8 ||*

मयि एव—என்னிடத்திலேயே
मन आधत्स्व—மனத்தை வை. என்னையே த்யானம் செய்.
मयि बुद्धिं—என்னிடமே புத்தியை
निवेशय—அமர்த்து. என்னையே ப்ராப்யனாகக் கொள்.
अत ऊर्ध्वं-த்யானம் பூர்ணமான பிறகு
मयि एव—என்னிடத்திலேயே
निवसिष्यसि—புநராவ்ருத்தியின்றி வஸிப்பாய்.
न संशयः—ஐயமில்லை.

तस्मात् योगी भवार्जुन என்று கீழே ஜீவாத்மயோகம் செய் என்றார். मन्मना भव என்று பக்தியோகத்தைச் செய்ய நியமித்தார். போர் பொருது. இரண்டுக்கும் உள்ள வாசியை யறிவிக்க நான் வேண்டிய போது பக்தி யோகமே செய் என்கிறார். இப்போதே இதனை நான் செய்யவாகுமோ என்று ஆராய்கிறான் அர்ஜுனன். அவனுக்கு மனம் அலைவதைக் கண்டு முமுக்ஷுவானவன் செய்ய வேண்டுமவற்றிலுள்ள படிகளை யெல்லாம் காட்டி, எது முன் எது பின் என்று விளக்க வேண்டுமென்று கருதி இதுவரையிற் சொல்லாத இவ் விஷயத்தைத் தொடங்குகிறார்—

तस्मात् योगी भवार्जुनेति प्राक् प्रैरयत् जीवात्मयोगे ; अथ मन्मना भवेति भक्तियोगे। साम्प्रतं तत्तद्योग्युत्कर्षनिकर्षविवेकमिच्छति मयि, भक्तियोगस्य सर्वप्रकारेणोत्कृष्टत्वमुपपाद्य मय्येव मन आधत्स्वेति भगवानाह। किमिदानीमेव मयाऽयमनुष्ठातुं शक्यः? दौष्कर्यं तु चिन्तये इति चिन्तयमानमर्जुनमवेक्ष्य अस्मै सर्वः पर्वक्रमो बोधनीय इति कृपया सर्वं विशदमाह—

अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।
अभ्यासयोगेन ततो मामिच्छाऽऽप्तुं धनञ्जय ॥ ९ ॥

அத சித்தம் ஸமாதாதும் ந சக்நோஷி மயி ஸ்த்திரம் |
அப்யாஸயோகேந ததோ மாம் இச்சாऽऽப்தும் தநஞ்ஜய || 9 ||

अथ—இனி, பக்தியோகம் செய்வதற்கு மாறாக
मयि—என்னிடத்தில்
स्थिरम्—நிலையாக
चित्तं—மனத்தை
समाधातुं—யோகத்தில் ஆழ்த்த
न शक्नोषि—மாட்டாயாகில்
ततः—அப்போது
धनञ्जय—அர்ஜுனா
अभ्यासयोगेन—குணக்கடலான என் விஷயமான ஆராய்ச்சியாம் உபாயத்தினாலே
माम् आप्तुम्—என்னைப் பெற
इच्छ—விரும்பு.

த்யானம் செய்கின்றவர்கள் யாராயினும், தியானம் எது விஷயமாகச் செய்வார்களோ, அதில் அடங்கிய அம்சங்களைப் பற்றி விசாரித்துக் கொண்டே எப்போதுமிருக்க வேண்டும். இதே அப்யாஸமென்றும், மனனமென்றும், ஆலம்பந ஸம்சீலனமென்றும் சொல்லப்படும். (9)

अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव ।
मदर्थमपि कर्माणि कुर्वन् सिद्धिमवाप्स्यसि ॥ १० ॥

அப்யாஸேऽப்யஸமர்த்தோऽஸி மத்கர்மபரமோ பவ |
மதர்த்தமபி கர்மாணி குர்வந் ஸித்திம் அவாப்ஸ்யஸி || 10 ||

अथ-இனி
अभ्यासे अपि-என் குண சிந்தனை யிலும்
असमर्थः असि-சக்தியற்றவனுகில்
मत्कर्मपरमः भव-எனது அர்ச்சனை முதலானவற்றையே விசேஷமாகச் செய்பவனுக.
मदर्थम्-எனக்காக
कर्माणि-கோயில்கட்டல் தோட்டம் அமைத்தல் பூசித்தல் முதலானவற்றை
कुर्वन् अपि—செய்கின்றவனுகியும்
सिद्धिम्-படிப்படியாகப் பலனை
अवाप्स्यसि-பெறுவாய்.

இங்கே மத்கர்ம என்றது யாகாதிகளல்ல. அவற்றை மேலே கூறப் போகிருர். இது அந்தரங்க கைங்கர்யம். ஆலயம் தோட்டம் முதலான வற்றை ஏற்படுத்தல் அர்ச்சையில் வழிபாடு மனோவாக்காயங்களாலே விஸ்தாரமாகச் செய்தல் என்ருவாரும். இது பக்தியோகத்தில் முதற்படி. இதன் மேல் கீழ்க் கூறிய அப்யாஸம். அதன் மேல் உபாஸனம்.

अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥ ११ ॥

அதைததப்யசக்தோऽஸி கர்த்தும் மத்யோகமாச்ரித: |
ஸர்வ கர்ம பலத்யாகம் தத: குரு யதாத்மவாந் || 11 ||

अथ-இனி
मद्योगम्-என் விஷயமான பக்தி யோகத்தை
आश्रितः-குறியாகக் கொண்டு
एतत् अपि-இந்த மத்கர்ம என்பதை யும்
कर्तुम् अशक्तः असि-செய்ய வல்லனுகா மற் போனல்
ततः-அப்போது
यत आत्मवान्- அடக்கிய மனம் உடையனுய்-ஜீவாத்ம யோகத் திற்காக மனத்தைத் திருத்துகின்றவனுய்
सर्वकर्म फलत्यागम्-நிஷ்காம கர்மானுஷ்டானத்தை
कुरु-செய்து வா.

கீழ்க் கூறிய அர்ச்சனுதிகளில் இழிவதென்பது பக்தி யோகம் செய்ய இழிந்த போது முதற் செயலாகும். ஜீவாத்ம ஸாக்ஷாத்காரம் பெறவில்லையாகில் இது போதாது. அதில் இழிய வேண்டும். அதில் கீழ்ப்படியாகும் நிஷ்காமமாக நித்ய நைமித்திககாம்யானுஷ்ட்டானம். பூர்வார்த்தத்தில் 'மத்யோகமாச்ரித:' என்று பக்தியோகத்திற்காம் கீழ்க் கூறிய மத்கர்ம என்றதால், உத்தரார்த்தத்திற் சொல்லும் ஸர்வ கர்மபலத்யாகம் வேருென்றைக் குறித்து என்று தெரிவித்ததாம். அது இன்னதென்பதை யதாத்மவாந்' என்ற சொல்லும் காட்டும். கீழே முதல் ஷட்கத்தில் ஜீவாத்ம யோகத்திற்காகவே நிஷ்காம கர்மாவின் தொடக்கம் கூறப்பட்டிருப்பதை இங்கே நினைக்க. (11)

இனி, குறித்த ஜீவாத்ம யோகத்திற்கும் நிஷ்காம கர்மானுஷ்டானத்திற்கும் நடுவிலுள்ள படிகளையும் காட்டி, மேலானபடியில் ஏறமாட்டாதவனுக்குக் கீழ்ப்படியில் நிலைத்திருப்பைக் காத்துக் கொள்வதே நலம்; அது தவறினால் மேலேறவாகாது; அது நிலைத்தால் விரைவில் மேலேறலாமென்று தெளிவிக்கின்றார்—

श्रेयो हि ज्ञानमभ्यासात् ज्ञानात् ध्यानं विशिष्यते ।
ध्यानात् कर्मफलत्यागः त्यागाच्छान्तिरनन्तरम् ॥ १२ ॥

ச்ரேயோ ஹி ஜ்ஞாநம் அப்யாஸாத் ஜ்ஞாநாத் த்யானம் விசிஷ்யதே|
த்யாநாத் கர்மபலத்யாக: த்யாகாத் சாந்திரநந்தரம் || 12 ||

अभ्यासात्—முடியாமல் திணறிக் கொண்டு செய்யும் பகவச் சிந்தனையை விட
ज्ञानम्—முன்படியான ஜீவாத்ம ஸாக்ஷாத்காரமே
श्रेय:—சிறந்தது.
ज्ञानात्-தக்கவாறு அமையாத அந்த ஸாக்ஷாத்காரத்தைவிட
ध्यानं-ஜீவாத்மத்யானமே
विशिष्यते—சிறப்புறும்.
ध्यानात्—அரைகுறையான அந்த ஜீவத்யானத்தைவிட
कर्मफलत्याग:—நிஷ்காம கர்மாநுஷ்டானமே
श्रेयान्-சிறந்தது.
त्यागात्—முதற்படியான நிஷ்காம கர்மானுஷ்டானத்தினால்
अनन्तरं—உடனே
शान्तिः-மனச்சுத்தியாகும்.

கீழ்ப்படியில் சரியாக ஊன்றினவன்தான் மேற்படி ஏற முடியும். மேல் வகுப்பில் படிக்கவாகாதவனைக் கீழ்ப்படியில் நிறுத்துவதற்காக, கீழ் வகுப்பே சிறந்ததென்று சொல்லுங் கணக்கிலே இங்கே கூறுகிறார்- ஒருவன் நிஷ்காம கர்மானுஷ்டானம செய்து கொண்டே வந்தால் மனம் சுத்தமாகும். ஸத்வ குணமே மேலிடும். அந்த அனுஷ்டானத்தின் முதிர்ச்சியே கர்மயோகம். அதன் பிறகு ஜீவாத்ம த்யானம வெகுநாள் செய்ய, பிறகு ஜீவாத்ம ஸாக்ஷாத்காரம சிறிது சிறிதாக நேரும். ஜ்ஞான ஸ்வரூபனும் ஆனந்த ஸ்வரூபனும் எங்கும் பரவும் தர்மபூத ஜ்ஞானமுமுடையனும் அபஹதபாப்மா என்றவாறெல்லாம சொல்லக் கூடியவனுமாகிற ஜீவனை உள்ளபடி அனுபவிப்பது எளிதிலாகாது. அத்தகைய ஆத்மாவின் ஸாக்ஷாத்காரத்திற்குப் பிறகுச் செய்யும் (பகவத் அர்ச்சனாதிகளான ஸத்கர்மாவும்) பகவத் பரிசீலனமுமே பகவத் தியானத்திற்கு உறுப்பாகும். கீழ்ப்படியில் அமராமல், மேலெழுவதைவிட கீழ்ப்படியில் சிறிது தாமதிப்பதே பலன் பெற அனுகூலமாகுமென்றபடி. (ஆக நிஷ்காம கர்மானுஷ்டானம் தொடங்கி பகவத் பக்தி யோகம் வரையிலான படிகளெல்லாம் இந்த அத்தியாயத்திலே ஒருவாறு கூறப் பெற்றன எனத் தெளிக. (12)

நிஷ்காம கர்மாநுஷ்டானம் செய்கின்றவன் எவ்வாறு இருக்க வேண்டுமென்பதை பல ச்லோகங்களால் விரித்துரைக்கிறார்—

अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।
निर्ममो निरहङ्कारः समदुःखसुखः क्षमी ॥ १३ ॥
संतुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।
मय्यर्पितमनोबुद्धिर्यो मद्भक्तः स मे प्रियः ॥ १४ ॥

*அத்வேஷ்டா ஸர்வபூதாநாம் மைத்ர: கருண ஏவ ச |*
*நிர்மமோ நிரஹங்கார: ஸமதுக்கஸுக: க்ஷமீ || 13 ||*
*ஸந்துஷ்ட: ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிச்சய: |*
*மய்யர்ப்பிதமநோபுத்திர் யோ மத்பக்தஸ் ஸ மே ப்ரிய: || 14 ||*

सर्वभूतानाम्—எல்லா ப்ராணிகளிடமும் (த்வேஷிப்பவர்களிடமும்)
अद्वेष्टा—த்வேஷமில்லாதவன் (நமது வினைக்குத் தக்கவாறு ஈச்வரன் அளிக்கும் பலன் என்று நினைப்பவன்)
मैत्रः—விரோதிகளிடமும் சினேகம் உடையவன்
करुणः एव च—ஸமயங்களில் அவர்களிடம் கருணை கூர்பவனுமே யாகின்றவன்
निर्ममः—மமகாரமில்லாதவன்
निरहंकारः—தேஹாத்மாபிமானமில்லாதவன்
समदुःखसुखः—துக்கம் ஸுகம் எது நேர்ந்தாலும் ஒரேவிதமாயிருப்பவன்
क्षमी—சீதோஷ்ணாதிகளைப் பொறுப்பவன்
संतुष्टः—அவ்வப்போது கிடைத்த மட்டைக் கொண்டு த்ருப்தியாயிருப்பவன்
सततं योगी—எப்போதும் தேஹாதிகளைவிட வேருக ஆத்மாவைச் சிந்திப்பவன்
यतात्मा—மனத்தை யடக்கியவன்
दृढनिश्चयः—வேதப் பொருளில் தெளிவுடையவன்
मयि—என்னிடத்திலே
अर्पित मनोबुद्धिः—ஆராதிக்கப்படுகின்றவனும் பலனளிப்பவனும் நானே என இருப்பவன்
यः मद्भक्तः—என் பக்தன் எவனே
सः—அந்தக் கர்மயோகீ
मे प्रियः—எனக்கு இஷ்டமானவன்.

यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः ।
हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः ॥ १५ ॥

*யஸ்மாந்நோத்விஜதே லோகோ லோகாந்நோத்விஜதே ச ய: |*
*ஹர்ஷாமர்ஷபயோத்வேகைர் முக்தோ ய: ஸ ச மே ப்ரிய: || 15 ||*

यस्मात्—எவனிடம்
लोकः—ஒரு பிராணியும்
न उद्विजते—பயப்படாதோ (பிறர் பயப்படும்படி எவன் ஒன்றும் செய்யாதோ)
लोकात् च—உலகத்தினின்றும்
यः—எவன்
न उद्विजते—அஞ்சாமலிருக்கிருனே. (உலகமும் எவனை பயப்படுத்தாதோ)

हर्ष अमर्ष भय-उद्वेगैः—ஒவ்வொருவனைப் பற்றி களிப்பும், கோபமும், அச்சமும், அவற்றின் மூலமான செயலும்
मुक्तः—விடவாகின்றவன் (இல்லாதவன்)
यः—எவனோ,
स च—அந்தக் கர்மயோகியும்
मे प्रियः—எனக்கு இஷ்டமானவன்.

अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।
सर्वारम्भ परित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥ १६ ॥

அநபேக்ஷ: சுசிர் தக்ஷ உதாஸீநோ கதவ்யத: |
ஸர்வாரம்ப பரித்யாகீ யோ மத்பக்தஸ் ஸ மே ப்ரிய: || 16 ||

अनपेक्षः—ஆத்மாவைத் தவிர்த்து வேறொன்றில் நசையற்றவன்
शुचिः—சாஸ்த்ர ஸம்மதமான உணவால் உடல் தரிப்பவன்
दक्षः—சாஸ்த்ரம் விதித்தவற்றைச் செய்ய வல்லன்
उदासीनः—வேறு செயலில் கவனமற்றவன்
गतव्यथः—செய்யும்போது த்வந்த்வங்களைப் பொறுப்பவன்
सर्वारम्भ परित्यागी—ஆத்ம ஜ்ஞானத்திற்காகாத எந்தச் செயலையும் தொடங்காமலே விடுபவன்
यः मद्भक्तः—எந்த எனது பக்தனோ,
सः मे प्रियः—அவன் எனக்கு இஷ்டமானவன்.

यो न हृष्यति न द्वेष्टि न शोचति न कांक्षति ।
शुभाशुभपरित्यागी भक्तिमान् यः स मे प्रियः ॥ १७ ॥

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந சோசதி ந காங்க்ஷதி |
சுபாசுபபரித்யாகீ பக்திமாந் ய: ஸ மே ப்ரிய: || 17 ||

यः—எந்த கர்மயோகி
न हृष्यति—ப்ரியமானதைப் பெற்றதற்காக மகிழ்வதில்லையோ
न द्वेष्टि—அப்ரியம் நேர்ந்ததற்கு த்வேஷிப்பதில்லையோ
न शोचति—வருத்தம் நேர்ந்தால் வருந்துவதில்லையோ
न कांक्षति—ஒன்றை விரும்புவதில்லையோ,
शुभाशुभ परित्यागी—அசுபத்தைப் போல் சுபத்தையும் விடுபவனாய்
भक्तिमान् यः—பக்தியுள்ளவன் எவனோ
सः मे प्रियः—அவன் எனக்கு இஷ்டமானவன்.

समः शत्रौ च मित्रे च तथा मानावमानयोः ।
शीतोष्णसुखदुःखेषु समः संगविवर्जितः ॥ १८ ॥
तुल्यनिन्दास्तुतिर्मौनी संतुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिः भक्तिमान् मे प्रियो नरः ॥ १९ ॥

ஸமச் சத்ரௌ ச மித்ரே ச ததா மாநாவமாநயோ: |
சீதோஷ்ணஸுகதுக்கேஷு ஸம: ஸங்கவிவர்ஜித: || 18 ||
துல்யநிந்தாஸ்துதிர் மௌநீ ஸந்துஷ்டோ யேநகேநசித் |
அநிகேத: ஸ்த்திரமதி: பக்திமாந் மே ப்ரியோ நர: || 19 ||

शत्रौ च—பகைவனிடத்திலும்
मित्रे च—சினேகிதனிடத்திலும்
समः—நெருக்கியபோதும் ஸமமா யிருப்பவன்
संगविवर्जितः—ஒன்றிலும் பற்றற்ற வன், அதனுல்
तथा मानावमानयोः—அவ்வாறே மான அவமானங்களிலும்
शीत उष्ण सुखदुःखेषु—குளிர் சூடு ஸுகம் துக்கம் என்ற த்வந்த்வங் களிலும்
समः—ஸம நிலையுடையவன்
तुल्यनिन्दास्तुतिः—பழித்தல் புகழ்தல் இரண்டையும் ஸமமாகக் கொண்டவன்
मौनी—பிறரைப் பழிக்கவோ புகழ வோ நேர்ந்த போது மௌன மாயிருப்பவன்
येनकेनचित्—ஏதேனும் கிடைத்ததில்
संतुष्टः—த்ருப்தி பெற்றவன்
स्थिरमतिः—ஆத்ம விஷயத்தில் நிலை நின்ற புத்தியுடையவன்
अनिकेतः—வீடு முதலானவற்றில் விருப்பற்றவன்
भक्तिमान्—பக்தியுள்ளவன்
नरः—எனவான மனிதன்
मे प्रियः—எனக்கு இஷ்டமானவன்.

முன்னமே அத்வேஷ்டா என்னப்பட்டிருந்தும் மீண்டும் சத்ருவினிடம் ஸமன் என்றது, மாநாவமாநாதிகள் நேர்ந்த போது ஸமன் என்று மேலே மொழிவதால் அது போல் சத்ருவாய் நெருங்கின போதும் ஸமன் என்பதற்காகவாம். ஒன்றிலும் சங்கமில்லாமையே சீதோஷ்ணுதிகளைப் பொறுக்கக் காரணமாகும். மாநாவமாநம் உடலால் பிறர் செய்வது. நிந்தாஸ்துதிகள் நாவினுல். மௌநீ என்ற மௌனமாவது மனனமல்ல. அது ஸ்த்திரமதி: என்று சொல்லப் பெற்றதே. ஸங்கீர்த்தநாதிகள் செய்வதால், பேசாமை என்ற மௌனமும் சேராது. எனவே ஸந்தர்பத்திற்கிணங்க, பிறரை தான் துதியோ நிந்தையோ செய்ய நேர்ந்தாலும் செய்யாதவன் என்றதாம். க்ருஹஸ்த்தனும் கர்மயோகியாகையால் வீடில்லாதவனென்ன வொண்ணுது. உள்ள வீட்டிலும் பற்றற்றவன் என்றதாம். எல்லாவற்றிற்கும் காரணம் ஆத்மாவினிடம் ஸ்த்திரமாய் மதி நின்றதே. இவ்வாறு கர்மயோக தசையிலேயே மனிதனுக்கு வேண்டும் குணங்கள் கூறப் பெற்றன. (19)

கர்மயோகியைத் தமக்கு ப்ரியன் என்றூர், தம்மிடம் பக்தி செய்கின்றவர்களை மிகவும் ப்ரியர்களென்கிறுர். யே என்ற பன்மையாலும் து என்ற சொல்லாலும் பர்யுபாஸதே என்பதாலும் அதீவ ப்ரியா: என்பதாலும் கீழ்க் கூறியவரை விட வேறுனவர்கள், பக்தியோகம் செய்பவர், இங்கே கூறப்படுகிறுர்கள்—

**ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते ।**
**श्रद्दधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २० ॥**

*யே து தர்ம்யாம்ர்தமிதம் யதோக்தம் பர்யுபாஸதே |*
*ச்ரத்ததாநா: மத்பரமா: பக்தாஸ்தேऽதீவ மே ப்ரியா: || 20 ||*

ये तु—முன் சொன்னவரை விட வேறான எவர்கள்
श्रद्दधानाः—அதிக ஆஸ்த்தையுடையராய்
मत्परमाः—என்னையே ப்ராப்யமாகக் கொண்டவருமாய்
धर्म्य-अमृतम्—தர்ம நெறியினின்று நழுவாததும் போக்யமுமாய்
यथोक्तम्—சொன்னபடியான
इदं—இந்த பக்தி யோகத்தை
उपासते—அனுஷ்டிக்கின்றனரோ,
ते भक्ताः—அந்த பக்தர்கள்
मे—எனக்கு
अतीव प्रियाः—மிகவும் ப்ரியமானவர்களாவர்.

உபாயத்தை நிறைவேற்ற ச்ரத்தையும், என்னையே பெற விருப்பமும் கொண்டு அனுஷ்டிக்கும் பக்தியோகம் தலைசிறந்த தர்மமாகும். பலன் அளித்தே தீரும். அனுஷ்டிக்கும் போதும் போக்யமாகும். मन्मना भव मद्भक्तः என்றெல்லாம் சொன்னபடி அனுஷ்டிப்பார்களாகில், ज्ञानी त्वात्मैव என்றபடி எனக்கு மிகவும் ப்ரியராவர்.

12—ஆம் அத்தியாயம் முற்றிற்று.

பக்தியோகத்தைப் பற்றிய இரண்டாம் ஷட்கம் முற்றும்.

மேலே கீழ்க் கூறிய சேதந அசேதந ஈச்வர தத்துவங்களைத் தெளிவாக்க மூன்று அத்தியாயங்கள். அவ்வாறே ஸாத்யோபாயத்தைத் தெளிவுபடுத்தக் கடைசியாக மூன்று அத்தியாயங்கள்.

## பதின்மூன்றும் அத்தியாயம்

இங்கே ப்ரக்ருதி புருஷன் என்ற க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ தத்துவங்களை விரிவாகத் தெரிவிப்பர்.

श्रीभगवान् उवाच—பகவான் பகர்ந்ததாவது—

इदं शरीरं कौन्तेय क्षेत्रमित्यभिधीयते ।
एतद् यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः ॥ १ ॥

இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே |
ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித: || 1 ||

कौन्तेय—அர்ஜுனா
इदं शरीरम्—வெளியிற் காணும் இந்த உடல்
क्षेत्रम् इति—க்ஷேத்ரமென்று
अभिधीयते—சொல்லப்படும்.
एतद्—இதனை
यः वेत्ति—எனதென்று எவன் அறிகின்றனோ
तम्—அவனை
क्षेत्रज्ञः इति—க்ஷேத்ரஜ்ஞன் என
तद्विदः—அவனை யறிந்தவர்
प्राहुः—போதிக்கின்றனர்.

ஒவ்வொரு ப்ராணியிலும் உடல உயிர் என இரண்டு அடங்கியுள. வெளியில் காணவாகின்றது உடல். அது அறியப்படும் வஸ்துவே அல்லது அறிகின்ற தன்மையுடையதன்று. அறிவுக்கு ஆதாரமானவன்

உள்ளே உளன். அவன் இதை எனதென்று அறிகிறான். அவனுக்கு போகஸ்த்தானமாய் போகத்திற்கான வினைப் பயிர்கள் விளையுமிடமு மாகையால் க்ஷேத்ரமெனப்படும். இந்த க்ஷேத்ரத்தில் எந்த வினைப் பயிர் நன்கு விளைய நமக்கு நன்மை யென்று இவன் அறிய வேண்டும். இந்த க்ஷேத்ரஜ்ஞன் தன் இஷ்டப்படி யெல்லாம் இதை நடத்த அறி கின்றவனாகிறான். ஒருவனுடைய உடல் மற்றொருவன் காண்கிறானா னாலும் அதற்கு அவன் க்ஷேத்ரஜ்ஞனாகான் அவன் தனதாக நினைக்க மாட்டானே; அதை எப்போதும் உணர்ந்திருக்கவும் மாட்டானே. (1)

**क्षेत्रज्ञञ्चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।**
**क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत् तत् ज्ञानं मतं मम ॥ २ ॥**

க்ஷேத்ரஜ்ஞஞ்சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத |
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞாநம் யத் தத் ஜ்ஞாநம் மதம் மம || 2 ||

भारत–அர்ஜுனா
सर्वक्षेत्रेषु—எல்லா உடல்களிலும்
क्षेत्रज्ञं चापि—ஜீவனுக்கும் உள்ளிருப்பவனாகவும்
मां विद्धि–என்னை அறி.
क्षेत्रक्षेत्रज्ञयोः—உடல் உயிர் இரண்டினுடையவும்
यत् ज्ञानम्–யாதொன்று அறிவாகும்
तत् ज्ञानम्—அதே அறிவென்று
मम मतम्–எனது கொள்கை.

अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः என்றவாறு எந்த உடலிலும் ஹ்ருதயத்தில் நான் இருப்பதாகக் கீழே கூறியுள்ளேன். இப்படி க்ஷேத்ராந்தர்யாமியாவது போல் க்ஷேத்ரஜ்ஞாந்தர்யாமியும் நானென்று அறிவாயாக. இவ்வாறு க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞன் என்ற இரண்டும் உண்டு இவை என்னை அந்தர்யாமியாகக் கொண்டவையுமாம் என்ற அறிவே அறிவாம்.

இங்கே க்ஷேத்ரஜ்ஞனென்ற ஜீவனை என்னை அறி என்று பகவான் கூறியதால் ஜீவனும் பகவானும் ஒன்று என்கின்றனர் அத்வைதிகள். கீழே न त्वेवाहं என்று தொடங்கி பன்னிரண்டு அத்தியாயங்களிலும் ஜீவன் வேறு தாம் வேறாகவே சொல்லி வந்தவர் இப்போது முன்னுக்கு முரணாக ஐக்யத்தைச் சொல்லார். மேலும் 'சாபி' என்ற சொல் வீணாகும். அதனால் க்ஷேத்ரமாகவும் க்ஷேத்ரஜ்ஞனாகவும் என்னைக் கொள் என்னல் வேண்டும். ஜடமான க்ஷேத்ரத்துடன் ஈச்வரனுக்கு ஐக்யம் வாராதென்பர் அத்வைதிகளும். எனவே க்ஷேத்ரம் அவனது விபூதி என்றே விபூத்யத்யாயத்திற் சொன்னபடி கொள்ள வேண்டும். அதே போல் க்ஷேத்ரஜ்ஞனும் விபூதியென்றே இதன் பொருளாகுமல்லது ஐக்யம் பொருளாகாது. உடலைச் சொல்லும் சொல் உயிரையும் சேர்த்துச் சொல்லும் என்பதை பாஷ்யத்திலே விரிவாக நிரூபித்துள்ளார். அர்ஜுனனும் நேரில் கண்டு கூறும் போது, सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः என்று எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாகையாலே பகவான் எல்லாம் எனப்படுகிறான் என்று தன் தெளிவை வெளிப்படுத்தியுள்ளான். ஆனால் க்ஷேத்ரம்

க்ஷேத்ரஜ்ஞச என்று வியக்தமாக ஏன் கூறவில்லை யென்னில், உடலில் ஹ்ருதயத்தில் தான் இருப்பதைப் பலகால் கீழே கூறியிருப்பதால் அது தெரிந்த விஷயம். ஜீவனுக்கும் ஆத்மா என்பது தான் புதிதாக போதிப்பதாம். அணுவான ஜீவனுக்கு அந்தர்யாமியாக முடியாதே என்றும் சிலர் நினைப்பர். அதற்காகவும் இது. சந்து இருந்து உள்ளே புகவேண்டுமென்பதில்லை; தாரகனாய் நியமிக்கின்றவனாய் சேஷியாயிருப்பதே ஆத்மாவாகைக்கு வேண்டுவது; என்னால் தரிக்கப்படுகிறவன் ஜீவன் என்றது முதலான காரணங்களால் நான் ஆத்மாவாவேன் என்றறிவித்தபடி. ஆக, ஜீவன் க்ஷேத்ரத்தைத் தனதாக நினைத்திருப்பது போல், ஏழில் கூறியபடி நான் க்ஷேத்ரஜ்ஞனையும் க்ஷேத்ரத்தையும் எனதாகக் கொண்டிருக்கிறேன். இவ்வறிவே அறிவென்றதாயிற்று.

चापीति प्रयोगात् क्षेत्रं च मां विद्धीत्यर्थलाभः। उभयैक्यमद्वैतिप्रभृतिमते दुर्वचम्। अस्माकं तु उभयान्तर्यामित्वात् तादात्म्यं सुस्थम्। क्षेत्रान्तर्वर्तित्वस्य शतशः प्रागुक्तत्वात् चकारेण तत्सूचनम्। विभूत्यध्यायप्रपञ्चितरीत्या, सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः इत्यर्जुनानुभूतरीत्या चैक्यमत्र श्रोतृसुगमम्; न तु विरुद्धम्। अणौ क्षेत्रज्ञे कथमन्तर्वर्तित्वमिति शंका मा भूदिति च क्षेत्रज्ञमपि चेत्युक्तिः। आधारत्वनियन्तृत्वशेषित्वानि आत्मत्वायापेक्षितानि; नान्तःप्रवेशः अतः सूत्रे मणिगणा इवेत्युक्तदृष्टान्तमनुसृत्य रन्ध्रादि न कल्पनीयम्। न हि सूत्रवत् एकांशस्थितिः परमात्मनः; धारकत्वमात्रस्य दृष्टान्तगम्यत्वात्। एवमात्मत्वेन शेषित्वसिद्धौ, यथा क्षेत्रं क्षेत्रज्ञो ममेदमिति जानाति, तथा क्षेत्रं क्षेत्रज्ञश्चाहं ममेमे इति जानामीति कथितं भवति। तथा च सप्तमैककण्ठ्यमपि।

இனி க்ஷேத்ரமாம் தேஹம் அழிவுறும், ஆத்மா நித்யம் என்று கீழே கூறியதைத் தெளிவிக்க க்ஷேத்ரத்தின் உற்பத்தியை விரித்துரைக்கிறார்—

तत् क्षेत्रं यच्च यादृक् च यद्विकारि यतश्च यत्।
स च यो यत्प्रभावश्च तत् समासेन मे शृणु ॥ ३ ॥

தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச யத்விகாரி யதச்ச யத் |
ஸ ச யோ யத்ப்ரபாவச்ச தத் ஸமாஸேந மே ச்ருணு || 3 ||

तत् क्षेत्रं—அந்த க்ஷேத்ரமானது
यत्—என்ன த்ரவ்யமோ,
यादृक्—என்ன வஸ்துக்கள் உடையதோ,
यद्विकारि—என்ன விகாரங்களுக்குக் காரணமோ
यतः च—என்ன பலனுக்காகவோ
यत्—என்ன த்ரவ்யங்களின் சேர்க்கையோ,
स च—அந்த ஜீவனும்
यः—எத்தகைய வஸ்துவோ
यत्प्रभावः—என்ன ப்ரபாவம் உடையனோ
तत्—அதையெல்லாம்
समासेन—சுருக்கமாக
मे—என்னிடமிருந்து
शृणु—கேட்டறிவாயாக.

ஐந்தாவது ஆறாவது ச்லோகங்களினால் பூர்வார்த்தத்தின் பொருளை நன்கு தெளியலாம். அதன் மேல் ஜீவஸ்வரூபம் விரிவாகக் கூறப்படும்.(3)

வேத ஸ்ம்ருதி வேதாந்த மீமாம்ஸைகளிலே விசாரித்த விஷயமே மேலே தெளிவாகக் கூறப்படுமென்கிறார்—

ऋषिभिर्बहुधा गीतं छन्दोभिर्विविधैः पृथक् ।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥ ४ ॥

ருஷிபிர் பஹுதா கீதம் சந்தோபிர் விவிதை: ப்ருதக் |
ப்ரஹ்மஸூத்ரபதைச்சைவ ஹேதுமத்பிர் விநிச்சிதை: || 4 ||

ऋषिभिः—பராசராதி மஹர்ஷிகளாலும்
बहुधा—வெகு விசேஷங்களுடன்
गीतम्—கூறப்பட்டது
पृथक् विविधैः—தனித்தனி விசேஷங்களைக் கூறுவதால் பலவிதமான
छन्दोभिः—வேதங்களாலும்,
विनिश्चितैः—முடிவாகக் கூறும்
हेतुमद्भिः—தர்க்கங்களுடன் கூடிய
ब्रह्मसूत्रपदैः च एव—ப்ரஹ்மத்தைச் சொல்ல வந்த ஸூத்ரங்களான உத்தர மீமாம்ஸா வாக்யங்களாலும்
गीतम्—கூறப்பட்டதாம்.

महाभूतान्यहंकारो बुद्धिरव्यक्तमेव च ।
इन्द्रियाणि दशैकञ्च पञ्च चेन्द्रियगोचराः ॥ ५ ॥
इच्छा द्वेषः सुखं दुःखं संघातश्चेतनाधृतिः ।
एतत् क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥ ६ ॥

மஹாபூதாந்யஹங்காரோ புத்திரவ்யக்தமேவ ச |
இந்த்ரியாணி தசைகஞ்ச பஞ்ச சேந்த்ரியகோசரா: || 5 ||
இச்சா த்வேஷஸ் ஸுகம் துக்கம் ஸங்க்காதச் சேதநாத்ருதி: |
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகாரம் உதாஹ்ருதம் || 6 ||

महाभूतानि—பஞ்சமஹா பூதங்களும்
अहंकारः—அஹங்கார தத்துவமும்
बुद्धिः—மஹத்தத்துவமும்
अव्यक्तम् एव च—மூல ப்ரக்ருதியுமே
दश एकञ्च—பத்தும் மற்றொன்றுமான
इन्द्रियाणि—இந்த்ரியங்களும்
इन्द्रियगोचराः—இந்த்ரியங்களுக்கு விஷயங்களான
पञ्च च—சப்தாதிகள் ஐந்தும்
इच्छा द्वेषः—ராகமும் த்வேஷமும்
सुखं दुःखम्—ஸுகமும் துக்கமும்
चेतन आधृतिः—சேதனனுக்கு ஆதாரமான
संघातः—பௌதிக உருவுமாக
एतत् क्षेत्रं—கீழ்க்கூறிய க்ஷேத்ரம்
सविकारं—தனது கார்யங்களுடன்
समासेन—சுருக்கமாக
उदाहृतम्—கூறப்பெற்றது.

மண் நீர் எரி கால் வானமென்ற மஹாபூதங்கள் ஐந்து, தேஹத்தை ஆத்மாவாக நினைப்பதற்குக் காரணமான அஹங்கார தத்துவம் பஞ்ச பூத காரணமானது, அதற்குக் காரணம் புத்திதத்துவமென்கிற அசேதனம், அதற்கும் காரணம் மூல ப்ரக்ருதி அவ்யக்தம். தேஹம் என்ன

த்ரவ்யம் என்னில் இந்த த்ரவ்யங்கள் என்க. ஏவகாரம் 3ல் யत् என்பதன் விரிவு இத்துடன் முடியுமென்பதற்காக. அங்கங்கு ஏவ என்பதைச் சேர்க்கலாம். தேஹம் யाद्दक् எவற்றிற்கு ஆச்ரயமென்னில், பதினொரு இந்திரியங்களுக்கு ஆச்ரயமாம். அந்த இந்த்ரியங்களால் அறியப்பட்டு சப்தாதிகள் போகத்திற்காக தேஹத்துடன் ஸம்பந்தப்படுகிறபடியால் அவற்றிற்கும் தேஹம் ஆச்ரயமென்க. (यद्विकारि) சரீரத்தினால் வரும் விகாரங்கள்—கார்யங்கள் இச்சாத்வேஷ ஸுகதுக்கங்கள். (यतश्च) எதற்காக என்னில், ஜீவாத்மா அனுபவிப்பதற்காக, மற்றும் அவனுக்கு மோக்ஷ நன்மைக்காக. (यत्) எத்தகைய உருவென்னில், அந்தந்த சேதனனுக்குத் தக்கவாறு தேவமனுஷ்ய திர்யக்ஸ்த்தாவர வுருவாம். இப்படி, சப்தாதி குணங்களும் இச்சா த்வேஷ ஸுகதுக்கங்களாம் ஆத்ம குணங்களுமான விகாரங்களோடு க்ஷேத்ரம் கூறப்பெற்றதாம். க்ஷேத்ரம் த்ரவ்யம். விகாரம் அதன் தர்மம். (5–6)

இனி க்ஷேத்ரஜ்ஞனைக் கூற வேண்டும். ஸூக்ஷ்மமான அதனை மேற் கூறுமாறு நன்கு உணரச் சில குணங்கள் வேண்டுவனவாம். அந்தக் குணங்கள் கீழ்க் கூறிய க்ஷேத்ர மூலம் உண்டாமவையாதல் பற்றி க்ஷேத்ரத்தைக் கூறியவுடன் அந்த குணங்களைக் கூறுகிறார். பிறகு இவற்றைக் கொண்டு அறிய வேண்டும் ஜீவாத்ம ஸ்வரூபத்தை 7, 8, 9, 10, 11, ச்லோகங்களில் விளக்குவர்—

**अमानित्वमदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् ।**
**आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ ७ ॥**

அமாநித்வம் அதம்பித்வம் அஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் |
ஆசார்யோபாஸனம் சௌசம் ஸ்த்தைர்யம் ஆத்மவிநிக்ரஹ: || 7 ||

अमानित्वम्—உயர்ந்தாரைத் திரஸ்காரம் செய்யாமை
अदम्भित्वम्—டம்பத்திற்காகச் செய்யாமை
अहिंसा—நலியாமை
क्षान्तिः—பிறர் பீடிப்பதைப் பொறுத்தல்
आर्जवम्—மனோவாக்காயங்கள் ஒற்றிருக்கை
आचार्योपासनम्—ஆசார்யரிடம் பணிதல்
शौचम्—சாஸ்த்ரோக்தமான சுத்தி
स्थैर्यम्—வேதாந்தார்த்தத்தில் நிலை
आत्मविनिग्रहः—மனத்தை வேறொன்றில் விடாமை.

**इन्द्रियार्थेषु वैराग्यमनहंकार एव च ।**
**जन्ममृत्यु जराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥ ८ ॥**

இந்த்ரியார்த்தேஷு வைராக்யம் அநஹங்கார ஏவ ச |
ஜந்ம ம்ருத்யு ஜராவ்யாதி துக்க தோஷாநுதர்சநம் || 8 ||

इन्द्रियार्थेषु—வெளி விஷயங்களிலே
वैराग्यम्—பற்றின்மையும்
अनहंकारः—தேஹாத்மாபிமான மில்லாமையும்
जन्ममृत्यु—பிறப்பு இறப்பு
जरा व्याधि—மூப்பு பிணி
दुःख—மற்றும் துக்கங்கள் என்கிற
दोष—தோஷங்களை
अनुदर्शनम् एव च—கண்டவண்ணமே யிருக்கையுமே.

अससक्तिरनभिष्वङ्गः पुत्रदारगृहादिषु ।
नित्यञ्च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥ ९ ॥

அஸக்திரநபிஷ்வங்க: புத்ரதார க்ருஹாதிஷு |
நித்யஞ்ச ஸமசித்தத்வம் இஷ்டாநிஷ்டோபபத்திஷு || 9 ||

असक्तिः—ஆத்ம விஷயத்திற்கு உதவாத தன் பரிக்ரஹங்களிலே பற்றின்மையும்
पुत्रदारगृहादिषु—அதற்கு உதவும் மக்கள் மனைவி மனை முதலானவற்றிலும்
अनभिष्वङ्गः—அதிகப் பற்றின்மையும்,
इष्ट अनिष्ट उपपत्तिषु—தம் பரிக்ரஹங்களிலும் நன்மை தீமை நேரும் போதெல்லாம்
नित्यं—தொடர்ந்தே
समचित्तत्वं च—மனத்தில் விகாரமற்றிருக்கையும்.

मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥ १० ॥

மயி சாநந்யயோகேந பக்திரவ்யபிசாரிணீ |
விவிக்ததேசஸேவித்வம் அரதிர் ஜநஸம்ஸதி || 10 ||

मयि—ஸர்வேச்வரனிடத்தில்
अनन्ययोगेन—வேறொரு பலனுக்குச் சேராது
अव्यभिचारिणी—நிலையான
भक्तिः च—பக்தியும்
विविक्तदेशसेवित्वम्—ஜனங்களில்லாத இடங்களில் வாஸமும்
जन संसदि—ஜனத்திரளில்
अरतिः—வெறுப்பும்,

अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थचिन्तनम् ।
एतत् ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥ ११ ॥

அத்யாத்மஜ்ஞாநநித்யத்வம் தத்வஜ்ஞாநார்த்தசிந்தநம் |
ஏதத் ஜ்ஞாநமிதி ப்ரோக்தம் அஜ்ஞாநம் யததோऽந்யதா || 11 ||

अध्यात्म ज्ञाननित्यत्वम्—ஆத்ம விஷயமான ஜ்ஞானத்தில் நிலையும்
तत्त्वज्ञान अर्थचिन्तनम्—உண்மையறிவைப் பலனாக உடைய ஆராய்தலும்
एतत्—என்ற (அமாநித்வம் முதலான) இவையெல்லாம்
ज्ञानम् इति—ஆத்மஜ்ஞானக் கருவியாக
प्रोक्तम्—கூறப்பட்டுள்ளன.
अतः अन्यथा—இதற்கானவை யல்லாமல் வேறு பலனுக்கானது
अज्ञानम्—ஜ்ஞானத்திற்கு விரோதியாகும்.

ज्ञेयं यत् तत् प्रवक्ष्यामि यद् ज्ञात्वाऽमृतमश्नुते ।
अनादि मत्परं ब्रह्म न सत् तन्नासदुच्यते ॥ १२ ॥

ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி யத் ஜ்ஞாத்வாऽம்ருதம் அச்நுதே |
அநாதி மத்பரம் ப்ரஹ்ம ந ஸத் தந்நாஸதுச்யதே || 12 ||

यत् ज्ञात्वा—எதை யறிந்து
अमृतम् अश्नुते—மோக்ஷம் பெறுவானோ
यत् ज्ञेयम्—கீழ்க்கூறிய கருவிகளால் எது அறியப்படுமோ
तत् प्रवक्ष्यामि—அதை போதிப்பேன்.
तत्—அறிய வேண்டும் அது
ब्रह्म—அளவற்றமைக்கு உரியது
अनादि—ஆரம்பமின்றி எப்போதுமுளது
मत्परम्—என்னைத் தனக்கு மேலாக உடையது
न सत्—கார்யாவஸ்த்தையின்றியும்
नासत्—காரணாவஸ்த்தையின்றியும்
उच्यते—சுத்த நிலையுடையதாகச் சொல்லப்படும்.

ஜிவாத்மாவின் சுத்த ஸ்வரூபம் சோதிக்கப்படுகிறது. ஜீவ ப்ரஹ்ம ஐக்யமுண்டென்ற புத்தி மத்பரம் என்ற போதே விலகும், பகவான் பரன். ஜீவன் அவரன் என்பதை कर्मेति ह्यवरो योऽसौ, आराग्रमात्रो ह्यवरोऽपि दृष्टः என்ற வேதவாக்யங்களினின்று அறியலாம். ஸத், அஸத் என்ற சொற்களுக்கும் பல பொருள் உண்டு. வேதமானது காரணதசையை அஸத் என்றும், கார்ய தசையை ஸத் என்றும் ஓதும். பேசும் ஸமயமாவது ஸ்ருஷ்டி காலம். ஸத்–வர்த்தமானம் என்றால் கார்யமே. அப்போது கார்யதசை தானே உள்ளது. ஜீவனுக்கு ஸூக்ஷ்ம தசை அதாவது முழு ஜ்ஞான ஸங்கோசமுள்ள தசை காரணாவஸ்த்தை. சிறிது தேஹத்திற்கேற்ப விகாஸம் வந்திருக்கும் கார்ய தசையில். பூர்ண ஜ்ஞானவிகாஸம் வந்த தசையிலே ஸத் என்றோ அஸத் என்றோ சொல்லவாகாது. ஆக ப்ரஹ்ம பதத்தாலே அந்தப் பூரணவிகாஸ தசையைக் காட்டி அப்போது ஸத்துமன்று அஸத்துமன்று என்றதென்க—

सर्वतःपाणिपादं तत् सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥ १३ ॥

ஸர்வத: பாணிபாதம் தத் ஸர்வதோக்ஷிசிரோமுகம் |
ஸர்வத: ச்ருதிமல் லோகே ஸர்வம் ஆவ்ருத்ய திஷ்ட்டதி || 13 ||

तत्—அந்த சுத்தமான ஆத்மஸ்வரூபமானது
सर्वतः पाणिपादम्—எங்கும் கையும் காலுமிருந்தால் என்ன செய்யவாகுமோ அதைச் செய்யவல்லது.
सर्वतोक्षिशिरोमुखम्—எங்கும் கண் தலை வாய் இவற்றின் கார்யம் செய்யும்.
सर्वतः श्रुतिमत्—எங்கும் செவியுள்ளது. செவியிருந்தாலாம் செயலைச் செய்யும்.
लोके—உலகில்
सर्वम् आवृत्य—எல்லாவற்றையும் சூழ்ந்தே
तिष्ठति—இருக்கும்.

ஆத்மா அணுவானாலும் அதனுடைய ஜ்ஞானமானது எங்கும் பரவியிருப்பதால் அது மூலமாக ஆத்மாவுக்கு எங்கும் ஸம்பந்த முள்ளது. सर्वमाप्नोति सर्वशः என்று ஓதப்பெற்றதே. ஞானமிருப்பதாலே ஸங்கல்ப மாத்ரத்தாலேயே எல்லாம் செய்யும். இந்திரியங்கள் வேண்டுமென்பதில்லை. (13)

सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥ १४ ॥

ஸர்வேந்த்ரிய குணாபாஸம் ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம் |
அஸக்தம் ஸர்வப்ருச்சைவ நிர்குணம் குணபோக்த்ரு ச || 14 ||

सर्व इन्द्रिय गुण आभासम्—எல்லா இந்த்ரியங்களின் வியாபாரங்களால் வரும் ஜ்ஞானத்திற்கும் ஆதாரமாயிருப்பது.
सर्व इन्द्रियविवर्जितम्—எல்லா இந்த்ரியங்களும் வேண்டாதது.
असक्तम्-தேஹாதிகளில் பற்றற்றது.
सर्वभृत् च एव—இப்போது தேஹாதிகளை பரிப்பதுமேயாம்
निर्गुणम्—ஸத்துவ ரஜஸ்தமோ குணங்களற்றது
गुणभोक्तृ च—குணகார்யங்களை அனுபவிக்கின்றதுமாம்.

மோக்ஷதசையில் இந்த்ரியங்கள் வேண்டாமாயினும், அப்போது எல்லாம் தரிப்பதும் அந்த குணங்களின் அனுபவமும் இல்லாவிடினும், அவற்றைச் சொன்னது ஏனெனில், சிலர் ஆத்மா நிர்விகாரமென்ற கொள்கையாலே, ஜ்ஞானமோ தாரண ப்ரயத்னமோ போகமோ ஆத்மாவுக்கு ஸ்ருஷ்டி காலத்திலும் கிடையாது. மனம், அந்தக் கரணம், புத்தி என்னப்படுமதிலேயே அவைகள் உண்டென்கின்றனர். அது சரியல்ல. நிர்விகாரமாயினும் தர்மபூத ஜ்ஞானத்தின் தசைகளான இவை எப்போதும் ஆத்மாவுக்கு உண்மையில் ஒரு சமயம் (ஸம்ஸாரத்தில்) இருப்பதேயாகுமென்றறிவிக்கவாம். (14)

बहिरन्तश्च भूतानामचरं चरमेव च ।
सूक्ष्मत्वात् तदविज्ञेयं दूरस्थञ्चान्तिके च तत् ॥ १५ ॥

பஹிரந்தச்ச பூதாநாம் அசரம் சரமேவ ச |
ஸூக்ஷ்மத்வாத் தத் அவிஜ்ஞேயம் தூரஸ்த்தஞ்சாந்திகே ச தத் ||15||

तत्-அந்த ஆத்மஸ்வரூபம்
भूतानां—பஞ்சபூதங்களுக்கு
बहिः—வெளியிலும்
अन्तश्च—சிற்சிலபோது உள்ளேயும் இருப்பதும்,
चरम्—நடப்பதும்
अचरं च—நடையற்றதும்
सूक्ष्मत्वात्—வெகு நுண்ணியதாகையால்
अविज्ञेयम्—விசேஷமாக அறியப் படாததும்
दूरस्थम्-அமாநித்வாதி குணங்களில்லாதார்க்கு எட்டாததும்
तत् अन्तिके च-அதே அக்குணமுள்ளவர்க்கு அருகிலாவதும்.

உடலுடன் இருக்கும் போது பூதங்களுக்கு உள்ளே யிருக்கும். மற்றபோது வெளியிலிருக்கும். மோக்ஷத்திலும் அப்ராக்ருத சரீரம் கொண்ட போது உள்ளேயும், மற்றபோது வெளியிலுமிருப்பதாம். உடலுடன் இருந்தால் நடையும் உண்டு. இல்லையேல் நடையற்றது. चरम् என்ற சொல்லில் சாரமாவது ஸஞ்சாரம் காலால் நடையென்க. அன்றி அசைவு மட்டுமல்ல உடலில்லாமலும் ஸங்கல்ப்ப சக்தியுள்ள போது அசையுமே. ஸங்கல்ப்பமின்றி ஒன்றால் தனித்து அசைக்கப் படாததென்னலாம். மூல ப்ரக்ருதியை யறிய எவ்வளவு மனச்சுத்தி வேண்டுமோ, அவ்வளவில் கூட அறியப்படாதாகையால் அதைவிட நுண்ணியதென்க. இதனை நான் என்று எப்போதும் கண்டிருந்தாலும் விலக்ஷணமாய் இது உள்ளபடி யறியலாகாது அமாநித்வாதி குணங்கள் இராவிடில். அவை யுண்டாகில் எளிதிற் காணலாம். (15)

अविभक्तञ्च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तत् ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥ १६ ॥

*அவிபக்தஞ்ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்த்திதம் |*
*பூதபர்த்ரு ச தத் ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச || 16 ||*

भूतेषु—உடலில் (இருக்கும் போதும்)
अविभक्तम्—ஸ்வரூபம் ஒரேவிதமாய் (மாறாது)
विभक्तम् इव स्थितं च—விவேகமில்லாதார் தேவன், மனிதன் என்று தன்னை ப்ரமிப்பதாலே பிரிந்தது போலிருப்பதும்,
भूतभर्तृ च ज्ञेयम्—பஞ்சபூதங்களான உடலை தரிப்பதால் அதைவிட வேறாக அறியப்பட வேண்டியதும்
ग्रसिष्णु—உடல் வளத்திற்காக அன்னத்தை உட்கொள்ள முயற்சியுள்ளதும்
प्रभविष्णु च—உட்கொண்டவை ஸப்த தாதுக்களாக மாறக் காரணமாயுள்ளதுமாம்.
तत्—அந்த ஆத்ம ஸ்வரூபம்.

பரமாத்ம ஸ்வரூபத்தைச் சொல்வதாகில் எல்லா பூதங்களையும் பரிப்பதென்றும், ஸம்ஹரிப்பதென்றும் உண்டுபண்ணுகிறதென்றும் உத்தரார்த்தத்திற்குப் பொருள் கொள்ளலாம். அவ்விஷயத்தில் ஜீவாத்மாவுக்கு யோக்யதை கூட இல்லையாகையால், பாஷ்யத்தில் தேஹத்தை தரிப்பது அன்னத்தை உட்கொள்வது அதன் மாறுதலுக்குக் காரணமாகின்றது என்ற பொருளே கொள்ளப்பட்டது. தேஹமில்லாத போதும் இவ்விஷயத்தில மட்டும் யோக்யதை ஆத்மாவுக்கு உண்டு. (16)

ज्योतिषामपि तज्ज्योतिः तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य विष्ठितम् ॥ १७ ॥

*ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதி: தமஸ: பரமுச்யதே |*
*ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாநகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் || 17*

ज्योतिषाम् अपि–சோதிகளுக்கும்
तत् ज्योतिः–அது சோதியாம்.
तमसः–ப்ருக்ருதிக்கும்
परम् उच्यते–மேம்பட்டதாகக் கூறப்படும்
ज्ञानं ज्ञेयम्–ஜ்ஞான ஸ்வரூபமென அறியத்தக்கது.
ज्ञानगम्यम्–ஜ்ஞாநோபாயங்களாலும் அறியப்படும்
सर्वस्य–எந்த ப்ராணிக்கும்
हृदि–ஹ்ருதயத்தில்
विष्ठितम्–சிறப்பாயிருப்பதாம்.

சோதிகளாவன ஸூர்யசந்த்ராதிகள். அவை மற்ற விஷயங்களை யறிவிக்கின்றமையால் சோதியாம். அவற்றையும் அறிவிப்பதாம் இவ் வாத்மா. சூர்யாதி சோதிகள் தம் ஒளியைக் கொண்டு பொருள்களை விளக்குகின்றது போல் ஆத்மாவும் தன் ஒளியான அறிவைக் கொண்டு எல்லாம் விளக்கும். உண்மையில் சூர்யாதிகள் நேராக வஸ்துக்களை யறிவிப்பவையல்ல, கண்ணாலன்றோ நாம் காண்பது. கண்ணொளி பொருள்கள் மேல் பட்டு அவற்றின் அறிவை யுண்டுபண்ணும். அறிவை யுண்டாக்கும் சக்தி அதற்கு உள்ளதை இருள் விலக்குகிறது, ஸூர்யாதி சோதி அவ்விருளை நீக்குவதால் கண்ணொளியின் சேர்க்கை யானது சக்தியுடன் அறிவை யுண்டாக்கும். அவ்வறிவினால் வஸ்துக்கள் வ்யவஹரிக்கப்படும். அவ்வறிவுக்கு ப்ரதானகர்த்தாவும் இடமும் ஜீவனே. तमसः परमुच्यते அசேதனமான ப்ரக்ருதி சேதனமான ஜீவனுக்காகவே யாகின்றமை பற்றி ஜீவனுக்கு மேம்பாடு. வெளி வஸ்துக்கள் அறிவினால் ப்ரகாசிக்கும். ஆத்மா தானே ப்ரகாசிக்குமாகையால் ஜ்ஞான மென்க, ஞானத்திற்கு ஆதாரமுமாம். ஆத்ம ஸ்வரூபம் எப்போதும் நானென்று ஒருவாறு ப்ரகாசிப்பதானாலும், அதை நித்யம், அணு, பகவானுக்கு சேஷம், விசேஷஜ்ஞான சக்தியுள்ளது என்றெல்லா அம்சங் களுடன் அறிவது வேறு ப்ரமாணங்களைக் கொண்டே யாகையால் ஞானத்திற்கும் விஷயமாகும். இத்தகைய ஆத்மா ஸம்ஸார தசையில் உடலில் ஹ்ருதயமென்றவிடத்திலே இருப்பதாக ப்ரமாணத்தினால் அறிவதாம். (17)

இவ்வளவால் க்ஷேத்ரத்திற்குக் கார்ய காரணாவஸ்த்தைகளும் ஆத்மாவுக்கு பந்த மோக்ஷாவஸ்த்தைகளும் இவ்வாத்மாவைக் காண் பதற்கு வேண்டும் குணங்களும் கூறப் பெற்றன. மொத்தம் மூன்றே கூறப்பெற்றன என்கிறார்—

इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयञ्चोक्तं समासतः ।
मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥ १८ ॥

இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞானம் ஜ்ஞேயஞ்சோக்தம் ஸமாஸத: |
மத்பக்த ஏதத் விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே || 18 ||

इति–இவ்வாறு
क्षेत्रम्–க்ஷேத்ரமும்
तथा ज्ञानम्–அறியக் கருவியும
ज्ञेयं च அறியப்படும் க்ஷேத்ரஜ்ஞ தத்துவமும்
समासतः–சுருக்கமாக

उक्तम्—சொல்லப்பட்டன.
मद्भक्तः—என்னிடம் பக்தியுள்ளவன்
एतत् विज्ञाय—இதனை நன்கறிந்து
मद्भावाय—எனது தர்மத்திற்கு (அஸம்ஸாரியாகைக்கு)
उपपद्यते—தகுதியுறுகிறுன்.

मद्भावाय என்பது அத்வைத மதத்திற்குப் பொருந்தாது. ப்ரஹ்மத்துடன் ஐக்யம் எப்போதுமிருப்பதால் புதிதாக அது வருமென்னவொண்ணுது. மத் என்பது ஈச்வரனைக் கூறும். ஈச்வரனுடைய ஈச்வரத்வமே மத்பாவம். அது ஜீவனுக்கு வாராது. அஸம்ஸாரித்வமென்ற தர்மம் வருமென்னில், ஸம்ஸாரித்வமாவது பேதஞானம். அது ஈச்வரனுக்கும் இருக்கின்றபடியால் அஸம்ஸாரித்வம் ஈச்வர தர்மமாகாது. மத் என்பதற்கு சுத்த ப்ரஹ்மம் பொருளாகாது. புண்யபாப துக்காதிகள் எனக்கு எவ்வாறில்லையோ அவ்வாறு ஜீவனுக்கும் என்று ஈச்வரன் உரைப்பதாகில் ஸாம்யமே சொன்னதாகும். இது முழுமோக்ஷமாகாது அத்வைத மதத்தில். ஸகுண ப்ரம்ம ப்ராப்தியில் நிற்பதாம்.

अद्वैतिमते कोऽयं मद्भावो नाम? न तावत् निर्गुणब्रह्मैक्यम्; मत्पदस्य निर्गुणवाचकत्वाभावात्। ईश्वरस्य तदर्थत्वात्। तदैक्यमसंभवि। ईश्वरधर्मो मद्भाव इति चेत्, स कः? न तावत् असंसारित्वम्। यदि अद्वितीयत्वरूपमसंसारित्वमीश्वरे स्यात्, जीवेऽपि वस्तुगत्या तदस्त्येवेति न तस्योपायसाध्यत्वमिति॥ पुण्यपापदुःखराहित्यमीश्वरधर्म इति चेत्, एवं तर्हि तत्साम्यमेवोक्तं भवति; न परमतो मुख्यमोक्षः। (१८)

கீழே க்ஷேத்ரமென்று கூறப்பெற்றவை பெரும்பாலும் கார்யமாயிருப்பதால் ஜீவன் ஸம்ஸாரியாவது ஒரு ஸமயம் தொடங்கியேயாகும். அதற்கு முன் சுத்தமாயிருந்தவனுக்கு அது வருவானேன் என்ன, க்ஷேத்ரத்தில் அடங்கிய ப்ரக்ருதி என்பது அநாதியானபடியாலே ஜீவனும் அநாதியானபடியாலே ஸம்ஸாரித்வம் அனுதியென்று தெளிவிக்கிறுர்—

**प्रकृतिं पुरुषञ्चैव विद्ध्यनादी उभावपि।**
**विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसंभवान्॥ १९॥**

ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ வித்தி அநாதீ உபாவபி |
விகாராஞ்ச்ச குணும்ச்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவாந் || 19 ||

प्रकृतिं—க்ஷேத்ரத்தில் அடங்கிய மூலகாரணத்தையும்
पुरुषं च एव—புருஷனையுமே
उभौ अपि—இரண்டையும்
अनादी विद्धि—அனுதியாக அறி.
विकारान् च—ராகத்வேஷாதிகளையும்
गुणान् च एव—அவற்றைப் போக்கும் அமாநித்வாதி குணங்களையும்
प्रकृतिसंभवान्—ப்ரக்ருதிமூலம் வந்தனவாக
विद्धि—அறி.

ப்ரக்ருதியும் புருஷனும் அனுதி என்ற போது இவையிரண்டும் சேர்ந்தே அனுதி என்றும் குறித்ததாம். முதல் ஏவகாரம், ப்ரக்ருதி தவிர மற்றவைகள் அது போல் பிறவாமை என்ற அநாதித்வம் உடைய

வை யல்ல என்று அறிவிப்பதாகும். இரண்டாவது ஏவகாரத்தினுல் ஸம்ஸாரம் விலகக் காரணமான ப்ரக்ருதியிலுண்டாம் குணங்கள் நீங்கலாக ப்ரக்ருதிஸம்பவமாகாத குணங்களும் மோக்ஷத்திலுண்டென்று குறித்ததாம். **गुणान्** என்றவை ஸத்வரஜஸ்தமோகுணங்களல்ல. அவை நித்யம். ப்ரக்ருதியினின்று உண்டாமவையல்லவே. ஆகையால் ப்ரக்ருதி ஸம்பவமான குணங்கள் அமாநித்வாதிகளே. விகாராந் என்று மஹாபூதாதி த்ரவ்யங்களையும் குணாந் என்று ரூபரஸாதிகளையும் சொல்லலாமே யென்னில், அவ்வாறு பிரித்துக் கூறுதற்குப் பலன் ஒன்றுமில்லை. ராகத்வேஷாதிகளை விகாரங்களாகவும், அமாநித்வாதிகளை குணங்களாகவும் கூறினுல் ஸம்ஸாரம் மோக்ஷம் என்ற இரண்டுக்கும் காரணம் கூறியதாகும். மேலே இரண்டும் கூறப்படுமே. (19)

அசேதனமான ப்ரக்ருதியானது பரார்த்தம். அதாவது சேதனனுக்காக என்பதை விளக்குகிறுர்—

**कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।**
**पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥ २० ॥**

*கார்யகாரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே |*
*புருஷஸ்ஸுகதுக்காநாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே || 20 ||*

कार्य—சரீரமென்ன,
कारण—இந்த்ரியங்களென்ன
कर्तृत्वे—இவற்றின் செயல்கள் விஷயத்திலே
प्रकृतिः—அசேதன ப்ரக்ருதியானது
हेतुः उच्यते—ஆதாரமாயிருப்பதால் காரணமெனப்படும்.
सुखदुःखानाम्—சுகம் துக்கம் என்ற வற்றின்
भोक्तृत्वे—அனுபவ விஷயத்திலே
पुरुषः—ஜீவன்
हेतुः उच्यते—ஆதாரமாகையால் காரணமெனப்படுகிறுன்.

ப்ரக்ருதியானது உடல் மூலமும் கருவிகள் மூலமும் எல்லாம் செய்கின்றது. அதனுல் வரும் பலன் ஸுகமும் துக்கமும். அவையிரண்டும் சேதனனுக்காகையால் ப்ரக்ருதி பரார்த்தமாகிறது. இந்த ச்லோகத்தில் சொன்ன கர்த்ருத்வம், போக்த்ருத்வம் போலே ஜீவனிடம் உள்ள ப்ரயத்னமன்று. அதற்கு ப்ரக்ருதி காரணமன்றே. ப்ரக்ருதி யென்ற சொல்லுக்கு ஜீவனுக்கு அதீனமான ப்ரக்ருதி யென்ற பொருளாம். சேதனனின் ஸந்நிதானமல்லாமல் அசேதனமான ப்ரக்ருதி வ்யாபரிக்காது, மூலப்ரக்ருதி யென்ற காரணவஸ்த்தையிலே அது ஜீவனுக்கு அதீனமன்றுகையால் க்ஷேத்ரமாகப் பரிணமம்-மாறுதல் பெற்ற ப்ரக்ருதியென்று பொருள் கொள்க. ஆக ப்ரயத்னம் உள்ள சேதனனுடைய சேர்க்கையினுலே தேஹேந்த்ரியங்கள் பல வியாபாரங்கள் உள்ளனவாகின்றன, அவற்றின் மூலம் வரும் ஸுகதுக்கங்கள் சேதனனைச் சார்ந்தவை என்றதாயிற்று. தன்னிடமுள்ள வியாபாரத்திற்கு தேஹேந்த்ரியாதிகள் எந்த சேதனனுடைய ஸந்நிதானத்தினுலே காரணமாகின்றனவோ, அந்த சேதனன் அந்த வ்யாபாரத்தின் பலனை அனுபவிக்கிறுன் என்றபடி.

ஆகையால் புருஷ: என்ற சொல்லும் ஸம்ஸாரியான—புண்யபாப பரவசனான ஜீவனைச் சொல்லும். முக்தனுக்கு துக்கமில்லாமையாதலின். இதனை விளக்கி ஸம்ஸாரம் அநாதி என்பதைக் குறிக்கிறார்—

पुरुषः प्रकृतिस्थो हि भुंक्ते प्रकृतिजान् गुणान् ।
कारणं गुणसंगोऽस्य सदसद्योनिजन्मसु ॥ २१ ॥

புருஷ: ப்ரக்ருதிஸ்த்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜாந் குணாந் |
காரணம் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு || 21 ||

पुरुषः—ஜீவன்
प्रकृतिस्थः—ப்ரக்ருதியினிடம் தங்கியிருப்பதால்
प्रकृतिजान्—ப்ரக்ருதியினிடம் உண்டான
गुणान्—ஸத்வாதி குணமூலமான ஸுகாதிபலன்களை
भुंक्ते हि—அனுபவிக்கிறானே.
अस्य—இந்த ஜீவனுக்கு
सत् असत्—நல்லனவும் கெட்டனவுமான
योनि—ஜாதிகளிலே, பிறப்பிடங்களிலே
जन्मसु—பிறவி விஷயத்திலே
गुण संग:—முன்னையை வினை மூலமான அந்தந்த விஷயப்பற்றே
कारणम्—காரணமாகிறது.

ஒவ்வொரு ஜன்மத்திலுண்டாம் ஸுகதுக்கானுபவங்களுக்கு முன் ஜன்மத்திலே ஏற்பட்ட பற்றே காரணமாகையால் ஸம்ஸாரம் அநாதி. வெறும் ப்ரக்ருதி ஸம்பந்தத்தால்மட்டுமில்லை யென்றதாயிற்று. (21)

இவ்வளவு வஸ்துக்களுடன் சேர்ந்த ஜீவனுக்கு ஸ்வாதந்த்ரயமும் உண்டென்கிறார்—

उपद्रष्टाऽनुमन्ता च भर्ता भोक्ता महेश्वरः ।
परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन् पुरुषः परः ॥ २२ ॥

உபத்ரஷ்டாऽநுமந்தா ச பர்த்தா போக்தா மஹேச்வர: |
பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹேऽஸ்மிந் புருஷ: பர: || 22 ||

अस्मिन् देहे—இந்த உடலில்
परः—இதற்கு ஸ்வாமியான
पुरुषः—ஜீவனானவன்
उपद्रष्टा—தேஹவ்யாபாரத்திற்குத் தக்க ஸங்கல்ப்பம் செய்கின்றவனும்
अनुमन्ता च—தேஹமோ பிறரோ வியாபரித்த விஷயத்திலே ஸம்மதி யளிப்பவனும்
भर्ता—தேஹத்தை பரிக்கின்றவனும்
भोक्ता च—அனுபவிக்கின்றவனுமாகி (தன் தேஹ இந்த்ரியாதி விஷயங்களிலே)
महेश्वरः इति—தானே பேரீச்வரனென்றும்
परमात्मा इति च—சிறந்த ஆத்மா என்றும்
उक्तः—சொல்லப்படுகிறான்.

தேஹத்தைக் கொண்டு பல செயல்களைத் தானே ஸங்கல்ப்பித்துச் செய்கிறுனைகயாலே உபத்ரஷ்டாவாகிறுன். உறக்கம் சோர்வை முதலான ஸந்தர்ப்பங்களிலே அந்த சரீரம் போம் வழியிலே தானும் இழிந்து பயன் பெறுகிறுனைகயாலும் பிறர் செய்வதை இசைகின்று னைகயாலும் அநுமந்தா. இவ்விரண்டால் இவன் நியந்தாவாகிறு னென்பது தேறும். அதுபோல் பர்த்தா—ஆதாரமுமாகிறுன். போக்தா—சேஷியுமாகிறுன் இம் மூன்று அம்சங்கள் உடையனைகயாலே ஆத்மாவாகிறுன். தேஹேந்த்ரியமந:ப்ராணபுத்திகளுக்குத் தான் ஈச்வர னைபடியாலே மஹேச்வரனுகிறுன். देहेऽस्मिन् என்றது उपद्रष्टा என்றது முதல் ஒவ்வொன் றிலும் சேரும். இதிலே இவன் மஹேச்வரன், இதிலே இவன் பரமாத்மா. உலகுக்கெல்லாம் ஈச்வரனுய் ஆத்மாவாய் மஹேச் வரன் என்றும் பரமாத்மா என்றும் பேர் பெற்றவன் வேறிருக்க, இவ னுக்கும் இவ்வளவைக் கொண்டு இப் பெயர்களாம். (22)

இப்படி विकारांश्च गुणांश्चैव என்றதில் விகாரானுபவம் சொல்லியா யிற்று, அமாநித்வாதி குணங்களாலாம் நன்மையை நவில்கின்றுராய் முடிவான நன்மையை முதலிற் காட்டுகிறுர்—

**य एवं वेत्ति पुरुषं प्रकृतिश्च गुणैः सह ।**
**सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते ॥ २३ ॥**

*ய ஏநம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிஞ்ச குணைஸ்ஸஹ |*
*ஸர்வதா வர்த்தமாநோபி ந ஸ பூயோऽபிஜாயதே || 23 ||*

यः—எவனொருவன்
पुरुषं एवं—கீழ்க்கூறிய ஜீவாத்மாவையும்
एवं प्रकृतिं च—கூறிய ப்ரக்ருதி தத்துவத்தையும்
गुणैः सह—மேலே விவரிக்கப்படும் ஸத்வாதி குணங்களுடன்கூட
वेत्ति—விசதமாக அறிந்து அதில் முதிர்ச்சி பெற்றுனே,
सः—அந்த உபாயபூர்த்தியானவன்
सर्वथा—எந்த சரீரத்தில் எத்தகைய க்ரமத்துடன்
वर्तमानः अपि—இருப்பானுகிலும்
भूयः—மீண்டும்
न अभिजायते—ஸம்ஸாரியாகப் பிறப்பதில்லை.

ப்ராரப்த சரீரங்களில் முடிவான சரீரம் எவ்வளவு ஈனமாயிருந்தா லும் அவனுக்கு விவேகம் முதிர்ந்துவிட்ட படியால், அதே தேஹத்தில் ஸம்ஸார முடிவாகும். இந்த ச்லோகம் ஜீவாத்மானுபவம் பெற்ற வனுக்கு பரமாத்மோபாஸனமும் சேர்ந்தால் புண்யபாபங்களெல்லாம் தொலைவதால் வரும் பெரும் பேற்றையே முதலில் குறிக்கிறது. 12ம் அத்யாயத்திற் கூறியபடி ஜீவாத்ம ஞானமென்ற படியிலேறின பிறகு எல்லாம் எளிதிலாகுமென்று கருத்தாம். (23)

ஜீவாத்மாவின் தர்சனம் மோக்ஷபலனை யளிக்குமென்றுர். அந்த தர்சனத்திற்காம் உபாயங்களை படிப்படியாகக் கீழ்வரையில் இரண்டு ச்லோகங்களால் காட்டுகிறுர்—

ध्यानेनाऽऽत्मनि पश्यन्ति केचिदात्मानमात्मना ।
अन्ये सांख्येन योगेन कर्मयोगेन चापरे ॥ २४ ॥

த்யாநேநாऽऽத்மநி பச்யந்தி கேசித் ஆத்மாநமாத்மநா |
அந்யே ஸாங்க்யேந யோகேந கர்மயோகேந சாபரே || 24 ||

केचित्—மேற்படி ஏறினவர்கள்
आत्मनि आत्मानं—தன் உடலில் ஜீவாத்மாவை
आत्मना—சுத்தமான மனத்தினால்
ध्यानेन—சிரஸ்ஸான யோகத்தினால்
पश्यन्ति—நன்ருகக் காண்கின்றனர்.
अन्ये—த்யான யோகம் செய்யவாகாதவர்கள்
सांख्येन योगेन—ஜ்ஞானயோகத்தைக் கொண்டு,
अपरे च—அதுவும் செய்யவாகாதவரும்
कर्मयोगेन च—கர்மயோகத்தினாலும்
पश्यन्ति—படிப்படியாக ஏறிப் பார்க்கின்றனர்.

கர்மயோகம் முதற்படி. பிறகு ஜ்ஞானயோகம். ஜ்ஞானயோகம் செய்யத் திறம் பெற்றவரும் லோகஸங்க்ரஹத்திற்காகக் கர்மயோகமே செய்வர். அப்ரஸித்தரான சிலரே ஜ்ஞானயோகம் செய்வர். இவ்விரண்டிலொன்று நிறைவேறினால் த்யானயோகம். பிறகு ஜீவாத்மாவின் ஸாக்ஷாத்காரமாம். (24)

கர்மயோகம் செய்ய சக்தியற்றவர்க்கும் கீழ்ப்படி கூறப்படுகிறது—

अन्ये त्वेवमजानन्तः श्रुत्वाऽन्येभ्य उपासते ।
तेऽपि चातितरन्त्येव मृत्युं श्रुतिपरायणाः ॥ २५ ॥

அந்யே த்வேவம் அஜாநந்த: ச்ருத்வாऽந்யேப்ய உபாஸதே |
தேऽபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ச்ருதிபராயணா: || 25 ||

एवम् अजानन्तः—இவ்வாறு ஜீவாத்மோபதேசஜ்ஞானமில்லாத
अन्ये तु—மற்றும் சிலரோவென்னில்
अन्येभ्यः श्रुत्वा—ஆசார்யர்களிடம் ஆத்மாவைக் கேட்டு
उपासते—உபாயத்தில் இழிகின்றனர்.
श्रुतिपरायणाः—குருமுகமாகக் கேட்டதையே முக்ய லக்ஷ்யமாகக் கொண்ட
ते अपि च—அந்த நல்லோர்களும்
मृत्युम् अतितरन्ति एव—படிப்படியாக ஸம்ஸாரத்தைக் கடப்பவரேயாவர்.

ஆத்மாவை ப்ரக்ருதியினின்று பிரித்துப் பார்க்கும் முறையை விரித்துரைக்கப் போகின்றாராய், இது எளிதிலாகாதவாறு ஆத்மா ப்ரக்ருதியில் கலந்தேயிருக்கின்றதென முதலில் அறிவிக்கிறார்—

यावत् संजायते किञ्चित् सत्त्वं स्थावरजङ्गमम् ।
क्षेत्रक्षेत्रज्ञसंयोगात् तद् विद्धि भरतर्षभ ॥ २६ ॥

யாவத் ஸஞ்ஜாயதே கிஞ்சித் ஸத்வம் ஸ்த்தாவரஜங்கமம் |
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத் தத் வித்தி பரதர்ஷப || 26 ||

स्थावरजङ्गमम्—ஸ்தாவரமாகவோ ஜங்கமமாகவோ
किञ्चित् सत्त्वम्—ஒருவிதமாம் ப்ராணி
यावत् संजायते—எத்தனை உண்டாகின்றதோ.
भरतर्षभ—பரதவம்ச ச்ரேஷ்டா
तत्—அத்தனையும்
क्षेत्रक्षेत्रज्ञ संयोगात्—ப்ரக்ருதியும் ஜீவனும் சேர்ந்ததாலெனை
विद्धि—அறிவாயாக.

இப்படி க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்கள் ஒன்றாகச் சேர்ந்து தேஹாத்மாபிமானத்திற்கே காரணமாயிருப்பதால் பகுத்தறிவு பெறுதல் அரிதெனக் குறித்து, அதை நன்குக் காணவேண்டுமென்கிறார்—

**समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।**
**विनश्यत्स्वविनश्यन्तं यः पश्यति स पश्यति ॥ २७ ॥**

*ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேச்வரம் |*
*விநச்யத்ஸ்வவிநச்யந்தம் ய: பச்யதி ஸ பச்யதி || 27 ||*

सर्वेषु भूतेषु—வெவ்வேறு ஆகாரமான எல்லா தேஹங்களிலும்
परमेश्वरम्—(தனித்தனியே) தேஹாதிகளுக்கு முழு ஈச்வரனாய்
समं—சேதநனாய் ஸமமாக
तिष्ठन्तं—இருக்கின்றவனும்
विनश्यत्सु—அந்த பூதங்கள் அழிகின்றபோது
अविनश्यन्तम्—என்றும் தான் அழியாமலிருக்கின்றவனுமாக
यः पश्यति—எவன் ஜீவனைக் காண்கிறானோ
सः पश्यति—அவனே ஆத்ம தர்சனம் செய்பவன்.

அவ்வாறு பார்த்தவனே பார்த்தவன் என்பதன் கருத்தை வெளியிடுகிறார்—

**समं पश्यन् हि सर्वत्र समवस्थितमीश्वरम् ।**
**न हिनस्त्यात्मनाऽऽत्मानं ततो याति परां गतिम् ॥ २८ ॥**

*ஸமம் பச்யந் ஹி ஸர்வத்ர ஸமவஸ்த்திதமீச்வரம் |*
*ந ஹிநஸ்தி ஆத்மநாऽऽத்மாநம் ததோ யாதி பராம் கதிம் || 28 ||*

ईश्वरम्—தேஹாதிகளை நியமித்துக் கொண்டு
सर्वत्र—எல்லா பூதங்களிலும்
समवस्थितम्—இருக்கும் ஆத்மவஸ்துக்களை
समं—ஒன்றுக்கொன்று ஒத்ததாக
पश्यन् हि—காண்கிறவனன்றோ
आत्मना—மனத்தைக் கொண்டு
आत्मानम्—தன் ஸ்வரூபத்தை
न हिनस्ति—ஸம்ஸாரத்தில் அஸத்கல்பமாகாதபடி காக்கிறான்.
ततः—அவ்வறிவினால்
परां गतिम्—ப்ராப்யமான ஆத்மஸ்வரூப நிலையை
याति—பின்னே பெறுகிறான்.

எல்லா ஜீவாத்மாவையும் ஜ்ஞாநாத்யாகாரங்களாலே ஸமமாகப் பார்த்தவன் தேஹாதி ப்ராந்திமூலமான ஸம்ஸார வ்யாபாரங்களில் இழியான். பின்னே உண்மையான ஆத்ம நிலையையும் பெறுவான். (28)

ஆத்மாக்களுக்கு ஸாம்யத்தைக் கூறி ப்ரக்ருதியைக்காட்டிலும் வேறுபாட்டையும் கூறுகிறார்—

**प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।**
**यः पश्यति तथाऽऽत्मानमकर्तारं स पश्यति ॥ २९ ॥**

*ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணானி ஸர்வச: |*
*ய: பச்யதி ததாऽऽத்மாநம் அகர்தாரம் ஸ பச்யதி || 29 ||*

कर्माणि सर्वशः—நீட்டல் மடக்கல் போன்ற வெளிச் செயல்களெல்லாம்
प्रकृत्या एव—தேஹாதிகளாலே
क्रियमाणानि च—செய்யப்படுகின்றனவாகவும்
आत्मानं—ஜீவாத்மாவை
तथा अकर्तारम्—அவ்வியாபாரங்களில்லாதவனாகவும்
यः पश्यति—எவன் பார்க்கிறானோ
सः पश्यति—அவன் காண்கிறவன்.

ஆத்மா போக்தா. தேஹாதிகளே வியாபாரங்களுக்கு ஆதாரம். தேஹாதிகள் இல்லாத போது இவ்வாறு ஸம்ஸார வியாபாரங்களைச் செய்யான். தேஹாதிகள் முன் வினையின் பயனாக வந்தவை என்றபடி.

பலவிதமான மாறுதல்களும் பல தேஹங்களுக்குக் காரணமானவையும் தேஹத்திற் சார்ந்தவை யென்கிறார்—

**यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति ।**
**तत एव च विस्तारं ब्रह्म संपद्यते तदा ॥ ३० ॥**

*யதா பூதப்ர்தக்பாவம் ஏகஸ்த்தம் அநுபச்யதி |*
*தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா || 30 ||*

भूत पृथग्भावम्—உடலில் இளமை மூப்பு முதலான மாறுபாடுகளை
एकस्थम्—க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞச் சேர்க்கையில் க்ஷேத்ரம் மட்டில் இருப்பதாகவும்
तत एव—அந்த தேஹத்தினின்றே
विस्तारं च—மக்கள் முதலானவற்றின் விரிவையும்
यदा अनुपश्यति—எப்போது நன்குக் காண்கிறானோ
तदा—ஆத்மாவில் இல்லையென்று கண்ட அப்போது
ब्रह्म संपद्यते—ஜீவன் தன் நிலை பெறுவான்.

சுத்த ஸ்வபாவனாகிலும் சேர்க்கையில் மாறுதல் பெற மாட்டானோ என்ன அதற்கு மறுமாற்றம்—

**अनादित्वान्निर्गुणत्वात् परमात्माऽयमव्ययः ।**
**शरीरस्थोऽपि कौन्तेय न करोति न लिप्यते ॥ ३१ ॥**

அநாதித்வாத் நிர்குணத்வாத் பரமாத்மாऽயம் அவ்யய: |
சரீரஸ்த்தோऽபி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே || 31 ||

परमात्मा अयम्—உயர்ந்ததான இந்த ஜீவாத்மா
शरीरस्थः अपि—உடலில் சேர்ந்தே யிருப்பினும்
अनादित्वात्—தன் உரு ஒரு ஸமயம் உண்டானதன்றாகை யால்
अव्ययः—உருமாற்றம் பெறாதவனாய்
निर्गुणत्वात्—ஸத்வரஜஸ்தமோகுண மற்றிருப்பதால்
कौन्तेय—அர்ஜுனா
न करोति-செயலுக்குத் தான் ஆதார மாகிறதில்லை.
न लिप्यते—தேஹாதிகளில் வரும் கேடான தோஷங்களைப் பெறுவதுமில்லை.

உப்பளத்திற் போட்ட கட்டை உப்பாவது போல் ஜடமான ப்ரக்ருதியோடு சேர்ந்திருப்பதால் அது போலாயிடுமென்பதில்லை. (31)

எந்த இடமானாலும் சேர்க்கையால் மாறுதல் பெறாதென்பதற்கு உதாரணம் காட்டுகிறார்—

यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे तथाऽऽत्मा नोपलिप्यते ॥ ३२ ॥

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாத் ஆகாசம் நோபலிப்யதே |
ஸர்வத்ராவஸ்த்திதோ தேஹே ததாऽऽத்மா நோபலிப்யதே || 32 ||

आकाशम्—ஆகாசமானது
सर्वगतम्-எங்கும் பரவியிருந்தாலும்
सौक्ष्म्यात्—வேறொன்று தட்டாத தன்மையால்
यथा न उपलिप्यते—எப்படி ஒன்றும் பட்டுக் கெடுவதில்லையோ,
तथा आत्मा—அப்படியே ஆத்மாவும்
सर्वत्र देहे—தான் பிறக்குமிடமெல் லாம் எல்லா தேஹத்திலும்
अवस्थितः—இருப்பதானாலும்
न उपलिप्यते—தேஹஸ்வபாவமான மாறுதல்களைப் பெறாது.

வேறு வஸ்துவின் தர்மங்கள் தன்னிடம் அண்டாதபடியான நுண்மை யென்னும் தன்மை ஆகாயத்திற்கேயுள்ள போது ஆத்மா வுக்கு ஏன் இருக்கலாகாது? (32)

ஆகாயம் பரவியிருப்பது போல் ஆத்மா உடலில் முழுவிடம் பரவா மல் ஹ்ருதயத்தில் மட்டும் இருப்பதால் இவன் முழுவுடலுக்கு ஸ்வாமி யாவதெங்ஙனே என்ன, மறுமாற்றம் அருள்கிறார்—

यथा प्रकाशयत्येकः कृत्स्नं लोकमिमं रविः ।
क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत ॥ ३३ ॥

யதா ப்ரகாசயத்யேக: க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவி: |
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாசயதி பாரத || 33 ||

भारत—பரதவம்சயனே !
एकः रविः—சூர்யன் ஒருவன்
इमं कृत्स्नम्—இந்த முழு
लोकं यथा—உலகினை எப்படி
प्रकाशयति—தன் ஒளியால் சூழ்கின்றானோ,
तथा—அவ்வாறே
क्षेत्री—ஜீவன்
कृत्स्नं क्षेत्रम्—முழுவுடலையும் தலையினின்று கால்வரையில்
प्रकाशयति—தர்மபூதஜ்ஞானத்தினால் சூழ்கிறான்.

**क्षेत्रक्षेत्रज्ञयोरेवमन्तरं ज्ञानचक्षुषा ।**
**भूतप्रकृतिमोक्षञ्च ये विदुर्यान्ति ते परम् ॥ ३४ ॥**

*க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோரேவம் அந்தரம் ஜ்ஞாநசக்ஷுஷா |*
*பூதப்ரக்ருதிமோக்ஷஞ்ச யே விதுர் யாந்தி தே பரம் || 34 ||*

एवम्—இவ்வாறு
क्षेत्रक्षेत्रज्ञयोः—உடலுக்கும் உயிருக்கும்
अन्तरं—பேறுபாட்டையும்
भूत प्रकृति मोक्षं च—உடலாகும் ப்ரக்ருதியினின்று விடுபடக் கருவியையும்
ज्ञान चक्षुषा—அறிவென்ற கண்ணாலே
ये विदुः—எவர் காண்கின்றனரோ,
ते परम्—அவர்கள் உயர்ந்த ஆத்ம ஸ்வரூபத்தை
यान्ति—பெறுவர்.

ப்ரக்ருதி மோக்ஷமாவது ப்ரக்ருதியினின்று விடபடுவிக்கும் கருவி—அமாநித்வாதி குணங்கள்.

பதின்மூன்றாம் அத்தியாயம் முற்றும்.

* * * * *

## பதினான்காம் அத்தியாயம்

க்ஷேத்ரமும் க்ஷேத்ரஜ்ஞதத்துவமும் பிரித்து அறிவிக்கப் பெற்றன. य एवं वेत्ति पुरुषं प्रकृतिञ्च गुणैः सह என்று குணங்களோடே சேர்ந்தறிய வேண்டுமென்றார் கீழே. அதாவது குணங்கள் எவ்வாறு ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாகின்றன, எவ்வாறு அவற்றை விலக்குவதெனவும் அறியவேண்டுமென்றபடி. அதனை இந்த அத்தியாயத்தில் விளக்குகிறார்.

श्रीभगवान् उवाच—பகவான் சொன்னதாவது—

**परं भूयः प्रवक्ष्यामि ज्ञानानां ज्ञानमुत्तमम् ।**
**यत् ज्ञात्वा मुनयः सर्वे परां सिद्धिमितो गताः ॥ १ ॥**

*பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞாநாநாம் ஜ்ஞாநம் உத்தமம் |*
*யத் ஜ்ஞாத்வா முநய: ஸர்வே பராம் ஸித்திம் இதோ கதா: || 1 ||*

परं—சொன்னதைவிட வேறாய்
ज्ञानानाम् उत्तमम्—அறிவுகளில் உயர்ந்ததுமான
ज्ञानम्—அறிவைப் பற்றி
भूयः प्रवक्ष्यामि—மீண்டும் உரைப்பேன்.
यत् ज्ञात्वा—எந்த அறிவைப் பெற்று
सर्वे मुनयः—எல்லா முனிவர்களும்
इतः परां—இந்த ஸம்ஸாரத்திற்கு அப்பாலான
सिद्धिं गताः—பேற்றைப் பெற்றனரோ.

ஸத்துவ ரஜஸ்தமோகுணங்கள் எவ்வாறு ஸம்ஸாரத்திற்குக் காரணமாகின்றன என்பதைச் செவ்வனே அறிந்தால் விடுபட வழி புணர்ந்து வீடு பெறலாம். (1)

அவ் வீட்டை விளக்குகிறார்—

इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥ २ ॥

இதம் ஜ்ஞாநம் உபாச்ரித்ய மம ஸாதர்ம்யம் ஆகதா: |
ஸர்கேऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச || 2 ||

इदं ज्ञानम्—சொல்லப்போம் அறிவை
उपाश्रित्य—பக்திக்கு உதவியாக ப்ரக்ருதி ஜீவ அறிவுடன் சேர்த்துப்பெற்று
मम साधर्म्यम्—என்னுடன் ஸமமாகை யென்னும் மோக்ஷத்தை
आगताः—என்னிடம் வந்து பெற்றவர்
सर्गे—மறுபடி ஸ்ருஷ்டி காலங்களில்
न उपजायन्ते अपि—பிறக்கவும் ஆகார்
प्रलये—ப்ரளய காலங்களில்
न व्यथन्ति च—ஜ்ஞாநஸங்கோசாதிகளைப் பெறவும் ஆகார்.

கீழே 12-23ல் न स भूयोऽभिजायते என்று சொன்ன பலனேயாம் இது. ப்ரக்ருதி புருஷர்களை குணங்களுடன் அறிந்தவனுக்கு அப்பலனை அங்குச் சொன்னார் அந்த அத்தியாயத்திலே ப்ரக்ருதி புருஷ விவேகம் மட்டும் அறிவிக்கப் பெற்றது. குணவிவேகமும் பெற்ற பிறகுதான் அப்பலன் பெறவாகுமென்று அதனையே இங்கு மீண்டும் மொழிந்தார். (பிறவியில்லையென்ற போதே ப்ரளயமில்லை யென்பதும் தெளிவாம். ஆயினும் மோக்ஷம் சென்றவன் மீண்டும் ப்ரக்ருதியில் அவதாராதி மூலமாக ஸம்பந்தப்பட்டாலும் ப்ரளயத்தில் இவன் நிலைமைக்கு மாறுதலில்லையென, प्रलये न व्यथन्ति च என்றது. இந்த ச்லோகம் மோக்ஷத்திலும் ஜீவேச்வர பேதத்தையும் ஜீவர்கள் முக்தர்களாகியும் தனித்தனியேயிருப்பரென்பதையும் குறிக்கும்.) (2)

मम योनिर्महद्ब्रह्म तस्मिन् गर्भं दधाम्यहम् ।
संभवः सर्वभूतानां ततो भवति भारत ॥ ३ ॥

மம யோநிர் மஹத் ப்ரஹ்ம தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம் |
ஸம்பவ: ஸர்வபூதாநாம் ததோ பவதி பாரத || 3 ||

योनिः—உலகுக்குக் காரணமாகும்
मम—எனதான
महत् ब्रह्म—பெரிதாய் ப்ரஹ்மமெனப் படும் ப்ரக்ருதி.
तस्मिन् अहम्—அதனிடத்தில் நான்
गर्भं दधामि—ஜீவராசியைச் சேர்க்கிறேன்.
भारत—பரதவம்சத்தியவனே!
ततः—அதனின்று
सर्वभूतानां—எல்லா ப்ராணிகளுக்கும்
संभवः—உற்பத்தி
भवति—ஏற்படுகிறது.

ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் மட்டுமன்றி, பின்னே தொடர்ச்சியான பிறவிகளும் இந்த ப்ரக்ருதிஜீவர்களைக் கொண்டு நானே செய்கிறேன் என்கிறார்—

सर्वयोनिषु कौन्तेय मूर्तयः संभवन्ति याः ।
तासां ब्रह्म महद् योनिरहं बीजप्रदः पिता ॥ ४ ॥

ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தி யா: |
தாஸாம் ப்ரஹ்ம மஹத் யோநிரஹம் பீஜப்ரத: பிதா || 4 ||

कौन्तेय—குந்தியின் புதல்வனே !
सर्वयोनिषु—அந்தந்த யோனியில் பின்னே ப்ரளயம் வரையில்
याः मूर्तयः—என்ன உடல்கள்
संभवन्ति—உண்டாகின்றனவோ,
तासां—அம்மூர்த்திகளுக்கு
महत् ब्रह्म—பெரும் ப்ரக்ருதியே
योनिः—காரணமாகும்.
बीजप्रदः—ஜீவர்களை அங்குச் சேர்ப்பவனாய்
अहं पिता—நான் பிதாவாகிறேன்.

உலகில் அந்தந்த பிதாவுக்கு உடலை உண்டு பண்ணவும் தெரியாது. தக்கவாறு ஜீவனைச் சேர்க்கவும் தெரியாது. ஜீவனையும் அறியான்; இப்போது இவ்வாறு பிறவி யுண்டென்பதையும் அறியான். அவனுக்குப் பிதா என்று பெயர் மட்டும். உண்மையான பிதா நானே.

இவ்வாறு உற்பத்தியைக் கூறி, இதில் குணங்கள் செய்யுமதை எடுத்துரைக்கிறார்—

सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसंभवाः ।
निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥ ५ ॥

ஸத்வம் ரஜஸ் தம இதி குணா: ப்ரக்ருதிஸம்பவா: |
நிபத்நந்தி மஹாபாஹோ தேஹே தேஹிநம் அவ்யயம் || 5 ||

प्रकृतिसंभवाः—ப்ரக்ருதியில் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும்
सत्त्वं रजः—ஸத்துவம் ரஜஸ்ஸு
तमः इति गुणाः—தமஸ்ஸு என்னும் குணங்கள்
महाबाहो—பெரும் புஜமுடையனே !
अव्ययम्—இவ்வாறு தம் சேர்க்கையாலாம் அழிவுக்குத் தகாத
देहिनम्—ஜீவனை
देहे निबध्नन्ति—உடலில் பிணைக்கின்றன.

இனி அந்தந்த குணம் செய்யுமதைக் கூறுகிறார்—

तत्र सत्त्वं निर्मलत्वात् प्रकाशकमनामयम् ।
सुखसंगेन बध्नाति ज्ञानसङ्गेन चानघ ॥ ६ ॥

தத்ர ஸத்துவம் நிர்மலத்வாத் ப்ரகாசகம் அநாமயம் |
ஸுகஸங்கேந பத்நாதி ஜ்ஞானஸங்கேந சாநக || 6 ||

अनघ-குற்றமற்றவனே
तत्र—அந்த குணங்களில்
सत्त्वम्—ஸத்துவ குணமானது
निर्मलत्वात्—மற்ற குணங்களின் ஸ்வபாவமான மலமில்லாமையால்
प्रकाशकम्—நல்லறிவை யளிப்பதாய்
अनामयम्-ஆரோக்யத்திற்கும் ஹேதுவாய்
सुखसंगेन—ஸுகத்தில் பற்றை யளித்தும்
ज्ञानसंगेन च—ஞானத்திலே பற்றை யளித்தும்
बध्नाति-ஜீவனுக்கு பந்தகமாகிறது.

ஸத்துவகுணம் அறிவுக்கும் ஸுகத்திற்கும் காரணமாகி அவற்றில் ஜீவனுக்குப் பற்றுக்கும் காரணமாகிறது. உலகில் ஸுகமும் அறிவும் உண்டாவது ஸத்துவ குணத்தினலென்க. (6)

रजो रागात्मकं विद्धि तृष्णासंगसमुद्भवम् ।
तन्निबध्नाति कौन्तेय कर्मसंगेन देहिनम् ॥ ७ ॥

ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம் |
தந்நிபத்நாதி கௌந்தேய கர்மஸங்கேந தேஹிநம் || 7 ||

रजः—ரஜோகுணத்தை
रागात्मकम्-ஸ்த்ரீபுருஷக்காதலாகவும்
तृष्णा—பொதுவாக இந்த்ரிய விஷங்களில் பற்றென்ன
संग—மக்கள் போன்ருரிடம் பற்றென்ன இவற்றிற்கு
समुद्भवम्—காரணமாகவும்
विद्धि-அறிவாயாக.
कौन्तेय-குந்தீ புத்ரனே !
तत्—அந்த ரஜோகுணம்
देहिनम्—ஜீவனை
कर्मसंगेन—செயல்களில் பற்று மூலமாக
निबध्नाति-பந்தகமாம்.

காதல் ஆசை, அன்பு என்பவற்றை விளைவித்துப் பல பாடுகள் படச் செய்யும் ரஜோகுணம். (7)

तमस्त्वज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम् ।
प्रमादालस्यनिद्राभिस्तन्निबध्नाति भारत ॥ ८ ॥

தமஸ்த்வஜ்ஞாநஜம் வித்தி மோஹநம் ஸர்வதேஹிநாம் |
ப்ரமாதாலஸ்யநித்ராபி: தந்நிபத்நாதி பாரத || 8 ||

तमः तु—தமோகுணத்தையோ என்றால்
अज्ञानजम्—விபரீதஜ்ஞான மூலம் பாபத்திஞல் உண்டாவதாகவும்
सर्वदेहिनाम्-எல்லா ப்ராணிகளுக்கும்
मोहनम्—தவருன அறிவுக்குக் காரணமாகவும்
विद्धि—அறிவாயாக.
भारत—பரதவம்சப்புதல்வனே !
तत्—அந்த தமோ குணம்
प्रमाद्—கவனக்குறைவு
आलस्य—சோம்பல்
निद्राभिः-உறக்கம் இவற்றின் மூலம்
निबध्नाति—பந்தகமாகிறது.

இந்த்ரியங்கள் வேலைசெய்யாமலிருக்கை நித்ரை. அதில் வெளியிந்த்ரியங்கள் வேலையற்றிருக்கை சொப்பனம். மனத்திற்கும் வேலையில்லையாகில் உறக்கம். (சொப்பனத்தில் வஸ்துக்கள் ஸத்யம் என்றபோது வெளியிந்த்ரியங்களுக்கும் வேலையுண்டானாலும் பொதுவாகக் காண்போரின் கொள்கைப்படி இவ்வுடலில் அவை வேலை செய்யாமையைக் கொண்டு இவ்வாறு கூறியதென்க.) (8)

மூன்று குணங்களுக்கும் முக்யமான கார்யங்கள் மேலே சொல்லப்படுகிறன—

सत्त्वं सुखे सञ्जयति रजः कर्मणि भारत ।
ज्ञानमावृत्य तु तमः प्रमादे सञ्जयत्युत ॥ ९ ॥

*ஸத்துவம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத |*
*ஜ்ஞாநம் ஆவ்ருத்ய து தம: ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத || 9 ||*

भारत—பரதவம்சப் புதல்வனே!
सत्त्वं—ஸத்துவ குணமானது
सुखे संजयति—ஸுகத்திற் பற்றுக்குக் காரணமாம்.
रजः—ரஜோ குணம்
कर्मणि संजयति—கர்மாவில் பற்றுக்குக் காரணமாம்.
तमः तु—தமோ குணமோ
ज्ञानम्—நல்லறிவை
आवृत्य—வராதபடி செய்து
प्रमादे उत—செய்ய வேண்டும் முறைக்கு மாறான செயலில்
संजयति—பற்றை விளைக்கும்.

இம் மூன்று குணங்களில் ஒன்று உண்மையான அறிவுக்கும் மற்றொன்று வெளிச் செயலுக்கும், மற்றொன்று அஜ்ஞானத்திற்கும் காரணமாக நின்றால், ஒன்றோடு ஒன்று முரண்படுவதால் என்னதான் கார்யம் உண்டாகுமென்னில்—கேள்—

रजस्तमश्चाभिभूय सत्त्वं भवति भारत ।
रजः सत्त्वं तमश्चैव तमः सत्त्वं रजस्तथा ॥ १० ॥

*ரஜஸ்தமச்சாபிபூய ஸத்வம் பவதி பாரத |*
*ரஜஸ் ஸத்வம் தமச்சைவ தமஸ்ஸத்வம் ரஜஸ்ததா || 10 ||*

भारत—பரதவம்சப் புதல்வனே! ஒரு சமயம்
सत्त्वं—ஸத்துவ குணமானது
रजः तमः च—ரஜோகுண தமோ குணங்களை
अभिभूय भवति—அடக்கி மேலேறும். மற்றொரு சமயம்
रजः—ரஜோ குணமானது
सत्त्वं तमः च एव—அந்த ஸத்துவ தமோகுணங்களையே (அடக்கி எழும்.)
तथा तमः-அவ்வாறு தமோ குணமும் ஒரு சமயம்
सत्त्वं रजः—ஸத்துவகுண ரஜோ குணங்களை. (அடக்கி எழும்)

ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொன்று விஞ்சும், மற்ற இரண்டும் தாழும். விஞ்சின குணத்திற்கு ஏற்ப, கார்யம் உண்டாகும். (10)

எப்போது எது என்னில், அதை அதன் பலனைக் கொண்டு ஊஹிக்க வேண்டுமத்தனை ; அவை காணக்கூடியனவல்லவே என்கிறார்—

सर्वद्वारेषु देहेऽस्मिन् प्रकाश उपजायते ।
ज्ञानं यदा तदा विद्यात् विवृद्धं सत्त्वमित्युत ॥ ११ ॥

ஸர்வத்வாரேஷு தேஹேऽஸ்மிந் ப்ரகாச உபஜாயதே |
ஜ்ஞாநம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்துவம் இத்யுத || 11 ||

सर्वद्वारेषु—கண் முதலான எல்லா ஞானவழிகளிலும்
यदा—எப்போது
प्रकाशे—உண்மை தெளிவாம்படி
ज्ञानं उपजायते—அறிவு உண்டாகிறதோ
तदा उत—அந்த ஒருபோதில்
अस्मिन् देहे—அறிவு உண்டான உடலில்
सत्त्वं—ஸத்துவ குணமானது
विवृद्धम् इति-வளம் பெற்றிருப்பதாக
विद्यात्—அறியலாகும்.

लोभः प्रवृत्तिरारम्भः कर्मणामशमः स्पृहा ।
रजस्येतानि जायन्ते विवृद्धे भरतर्षभ ॥ १२ ॥

லோப: ப்ரவ்ருத்திராரம்ப: கர்மணாம் அசம: ஸ்ப்ருஹா |
ரஜஸ்யேதாநி ஜாயந்தே விவ்ர்த்தே பரதர்ஷப || 12 ||

लोभः—உலோபியாயிருக்கை, செலவழிக்க மனம் வராமை
प्रवृत्तिः—பலனின்றி வீணே அலைதல்
कर्मणाम् आरम्भः—பலன்களுக்காகப் பல செயல் தொடங்குவது
अशमः—இந்த்ரியங்கள் அடங்காமை
स्पृहा—விஷயங்களிலே பற்று
एतानि—இவைகள்
भरत ऋषभ—பரதவம்ச ச்ரேஷ்டனே
रजसि—ரஜோ குணமானது
विवृद्धे—விருத்தியடைந்தபோது
जायन्ते—உண்டாகும்.

अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च ।
तमस्येतानि जायन्ते विवृद्धे कुरुनन्दन ॥ १३ ॥

அப்ரகாசோऽப்ரவர்த்திச்ச ப்ரமாதோ மோஹ ஏவ ச |
தமஸ்யேதாநி ஜாயந்தே விவர்த்தே குருநந்தந || 13 ||

अप्रकाशः—அறியாமை
अप्रवृत्तिः—செயலில் இழியாமை
प्रमादः-தவறு செய்யக் காரணமான கவனக்குறைவு
मोहः च एव-புத்தி மாருட்டமெல்லாம்
कुरुनन्दन—குருவம்சப் புதல்வனே
तमसि विवृद्धे-தமோ குணம் எழுந்தால்
जायन्ते—உண்டாகும்.

ஒவ்வொரு பிறவியிலும் நடுநடுவே இருக்கும் நிலைகளில் இக் குணங்கள் காரணமாகின்றமையைக் கூறினர். இனி அந்திமகாலத்தில் குணத்தின் எழுச்சிக்கேற்ப மற்றொரு பிறவியிலும் வேறுபாடு உண்டென்கிறார்—

यदा सत्त्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत् ।
तदोत्तमविदां लोकान् अमलान् प्रतिपद्यते ॥ १४ ॥

யதா ஸத்வே ப்ரவ்ர்த்தே து ப்ரளயம் யாதி தேஹப்ர்த் |
ததோத்தமவிதாம் லோகாந் அமலாந் ப்ரதிபத்யதே || 14 ||

यदा—எந்தக் காலத்தில்
सत्त्वे तु—ஸத்துவ குணமானதே
प्रवृद्धे—விருத்தியடைந்திருக்க
देहभृत्—தேஹம் கொண்ட ஜீவன்
प्रलयं याति—மரணம் அடைகின்றானே
तदा—அப்போது-அதன் பிறகு
उत्तमविदाम्—ஜீவாத்மா பரமாத்மா என்ற உயர்ந்த விஷயங்களை அறிவாரின்
अमलान्—அழுக்கற்ற
लोकान्—குலங்களை
प्रतिपद्यते—அடைகிறான்.

ஸத்துவகுணமானது நல்லறிவு மூலமாகத்தான் உயர்ந்த லோகங்களில் வாழ்க்கையளிக்கும். மரணகாலத்தில் ஸத்துவ குணத்தின் எழுச்சியானது அவ்வறிவுண்டாகுமிடத்தில் பிறவிக்குக் காரணமாகின்றது. அப்பிறவியில் அறிவு பெற்ற பிறகு மேலுலகம் பெறலாம். இங்கே லோகாந் என்பதற்கு மேலுலகங்கள் என்ற பொருளல்ல. மேல்ச்லோகங்களை நோக்கி அதற்கு இணங்கவும் உரைப்பதாம். (14)

रजसि प्रलयं गत्वा कर्मसंगिषु जायते ।
यदा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते ॥ १५ ॥

ரஜஸி ப்ரளயம் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே |
யதா ப்ரளீநஸ்தமஸி மூடயோநிஷு ஜாயதே || 15 ||

रजसि—ரஜோ குணம் விருத்தியடைந்தபோது
प्रलयं गत्वा—மரணம் பெறில்
कर्मसंगिषु—பல பலன்களுக்காக உழைப்பவரிடையிலே
जायते—உண்டாகிறான்.
यदा—எப்போது
तमसि-தமோ குணம் அதிகமாயிருக்க
प्रलीनःतदा—அழிகிறான். அப்போது
मूढयोनिषु—அறிவற்ற மிருகம் மரம் போன்றயோனிகளில்
जायते—பிறக்கிறான்.

பிறவியைக் கண்டு அதற்குத் தக்கவாறு பூர்வஜன்ம முடிவில் குணமிருந்ததாக ஊஹிக்க வேண்டும். இவ் ஊஹம் முடிவுகாலத்தில் ஸத்துவகுணம் வளமாம்படி வழி செய்யக் காரணமாம். (15)

இவ்வாறு பிறந்தவர்களின் பின்னே பெறும் பலன்களைக் கூறுகிறார்.

कर्मणः सुकृतस्याऽऽहुः सात्त्विकं निर्मलं फलम् ।
रजसस्तु फलं दुःखम् अज्ञानं तमसः फलम् ॥ १६ ॥

கர்மண: ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்விகம் நிர்மலம் பலம்
ரஜஸஸ்து பலம் துக்கம அஜ்ஞாநம் தமஸ: பலம் || 16 ||

सुकृतस्य-ஸத்துவ குணத்திலான பிறவியில் நிஷ்காமமாகச் செய்யும்
कर्मणः-செயலுக்கு
सात्त्विकं-வளர்ந்த ஸத்துவகுண மூலமான
निर्मलं-துக்கக் கலப்பற்ற
फलं-பலனை
आहुः-சொல்லுகின்றனர்.
रजसः-ரஜோகுண மூலமான பிறவியில் செய்யும் செயலின்
फलं-பலனை
दुःखम्-துக்கமயமாகவே சொல்வார்.
तमसः-தமோகுண மூலமான பிறவியில் செய்யுமவற்றிற்கு
अज्ञानम्-மேன்மேல் அறிவற்றிருக்கையே பலனென்பர்.

सत्त्वात् संजायते ज्ञानं रजसो लोभ एव च ।
प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥ १७ ॥

ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப ஏவ ச |
ப்ரமாத மோஹௌ தமஸோ பவதோऽஜ்ஞாநமேவ ச || 17 ||

सत्त्वात्-ஸத்துவ வளர்ச்சியால்
ज्ञानं संजायते-நல்லறிவு நன்குவளரும்.
रजसः च-ரஜோ குண வளத்தாலும்
लोभः एव च-உலோபித்தனம்தான் வளரும்.
तमसः-தமோ குணவெழுச்சியால்
प्रमादमोहौ-கவனக்குறைவும் விபரீத ஞானமும்
अज्ञानम् एव च-அறிவின்மையுமே உண்டாம்.

இப்படி படிப்படியாக ஓங்க, முடிவான பலனைக் கூறுகிறார்—

ऊर्ध्वं गच्छन्ति सत्त्वस्थाः मध्ये तिष्ठन्ति राजसाः ।
जघन्यगुणवृत्तिस्थाः अधो गच्छन्ति तामसाः ॥ १८ ॥

ஊர்த்வம் கச்சந்தி ஸத்துவஸ்த்தா: மத்யே திஷ்டந்தி ராஜஸா: |
ஜகந்ய குணவ்ருத்திஸ்த்தா: அதோ கச்சந்தி தாமஸா: || 18 ||

सत्त्वस्थाः—கூறியவாறு ஸத்துவத்திலேயே நிலைத்தவர்
ऊर्ध्वं गच्छन्ति—மோக்ஷம் போகின்றனர்.
राजसाः—ரஜோ குணத்திலேயேயிருப்பவர்
मध्ये तिष्ठन्ति—தேவ மனுஷ்யாதி வடிவில் இருப்பர்.
तामसाः—தமோ குணத்திலேயே நின்றவர்
जघन्य—மிக மிக ஈனமான
गुण वृत्तिस्थाः—குணங்களிலும் செயலிலும் நிலையுற்றவராய்
अधः गच्छन्ति—பசுபக்ஷிஸ்தாவரங்களான பிறவியுறுவர்.

(மோக்ஷலோகம் மேலே ஒன்று உளதென்பதை இசையாதவர் இந்த ச்லோகத்தில் ஸத்துவ குணச்சிறப்புக்குப் பலனாக உயர்ந்த தேவலோக வாழ்வையே கூறுவர். ஸத்துவகுணம் சிறந்தால் ஆத்ம ஜ்ஞானமே வருவதால் அதன் பலனாக மோக்ஷத்தைக் கூறுவதே தகும். மோக்ஷலோகமாக வைகுண்டமாம் நித்ய விபூதியும் உளதே. எனவே விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில் கீழ்க் கூறியவாறு பதவுரையாம்.)

இனி ऊर्ध्वं गच्छन्ति என்பதன் விரிவாம். குணங்களின் செயல்களைக் கூறிய பிறகு அந்த குணங்களில் அகப்படாமல் ஆத்மாவைக் காக்க வழி கூற வேண்டுமே—

नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टाऽनुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥ १९ ॥

நாந்யம் குணேப்ய: கர்த்தாரம் யதா த்ரஷ்டாऽநுபச்யதி |
குணேப்யச்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோऽதிகச்சதி || 19 ||

द्रष्टा—அறிவுள்ள ஜீவன்
यदा—எந்த நிலையில்
गुणेभ्यः अन्यं—முக்குணங்களினும் வேறானதை
कर्तारं—காரியங்களுக்குக் கர்த்தாவாக
न अनुपश्यति—காணுமலிருக்கிறானோ
गुणेभ्यः परम्—ஆத்மாவை குணங்களுக்கு மேலாக நிர்குணமாக
वेत्ति—அறிகின்றானோ,
सः—அவன்
मद्भावम्—என்னைப்போல் குணங்களுக்கு வசமாகாமையை
अधिगच्छति—பெறுகிறான்.

मद्भावम् என்று சொன்னதை விரித்துரைக்கிறார்—

गुणान् एतान् अतीत्य त्रीन् देही देहसमुद्भवान् ।
जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥ २० ॥

குணாந் ஏதாந் அதீத்ய த்ரீந் தேஹீ தேஹஸமுத்பவாந் |
ஜந்மம்ர்த்யுஜராது:கைர் விமுக்தோऽம்ர்தமச்நுதே || 20 ||

देही—தேஹமுள்ளவன்-ஜீவன்
देहसमुद्भवान्—தேஹமாம் ப்ரக்ருதியிலிருக்கும்
एतान् गुणान्—இந்த ஸத்துவாதி குணங்களை
अतीत्य—கடந்து-கர்த்தாக்களான குணங்களைவிடத் தன்னை வேறாக அறிந்து
जन्ममृत्यु—ஜனன மரணங்களென்ன
जरा दुःखैः—மூப்பும் துயரமுமென்ன இவைகளால்
विमुक्तः—விடப்பட்டவனாய்
अमृतम्—அழியாத ஆத்ம நிலையை
अश्नुते—பெறுகிறான்.

குணங்களைக் கடந்தானென்பதற்குக் குறிப்பென்ன? அவன் நடவடிக்கை என்ன? கடப்பதற்குக் காரணமென்ன என்று அர்ஜுனன் வினவுகிறான்—

कैर्लिङ्गैस्त्रीगुणान् एतान् अतीतो भवति प्रभो ।
किमाचारः कथञ्चैतांस्त्रीन् गुणान् अतिवर्तते ॥ २१ ॥

கைர்லிங்கை ஸ்த்ரீகுணாந் ஏதாந் அதீதோ பவதி ப்ரபோ |
கிமாசார: கதஞ்சைதாந் த்ரீந் குணாந் அதிவர்த்ததே || 21 ||

प्रभो-ஸர்வேச்வரனே !
एतान् त्रिगुणान्-இந்த முக்குணங்களை
अतीतः—கடந்தவன்
कैः लिङ्गैः-அதற்கு என்ன அடையாளங்களோடு
भवति—(கூடினவன்) ஆகிருன் ?
किमाचारः-அவன் என்ன நடவடிக்கையுள்ளவன் ?
कथं—எவ் விரகிஞல்
त्रीन् गुणान्-முக்குணங்களை
अतिवर्तते च—கடக்கின்றவனுமாகிருன் ?

श्रीभगवान् उवाच—பகவானின் மறுமாற்றம்—

**प्रकाशञ्च प्रवृत्तिञ्च मोहमेव च पाण्डव ।**
**न द्वेष्टि संप्रवृत्तानि न निवृत्तानि काङ्क्षति ॥ २२ ॥**

ப்ரகாசஞ்ச ப்ரவ்ர்த்திஞ்ச மோஹமேவ ச பாண்டவ |
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ர்த்தாநி ந நிவ்ர்த்தாநி காங்க்ஷதி || 22 ||

पाण्डव-அர்ஜுனு !
प्रकाशं च-ஸத்வகார்யமான அறிவையும்
प्रवृत्तिं च-ரஜஸ்ஸின் கார்யமான செயலேயும்
मोहं एव च-தமஸ்ஸின் கார்யமான விபரீத ஜ்ஞானத்தையும்
संप्रवृत्तानि-அநிஷ்ட விஷயங்களிலே வருமவற்றை (வந்தபோது)
न द्वेष्टि—வெறுப்பதில்லே.
निवृत्तानि—இஷ்ட விஷயங்களிலே வராமலிருக்கும் அவற்றை (அவை வராதபோது)
न काङ्क्षति—விரும்புவதில்லே.

ஆத்மாவைத் தவிர வேறு விஷயங்கள் இஷ்டமானவை இஷ்டமாகாதவை என இரு வகுப்பாயிருக்கும். அவற்றில் அநிஷ்ட காரணங்கள் நேரும் போது வெறுப்பும், இஷ்டகாரணங்கள் விலகிய போது அவை கூடவேண்டுமென்ற விருப்பமும் வருவது உலகியல்பு. அங்கு அநிஷ்டமோ அதன் காரணமோ நேர்ந்தால் வெறுக்காமலும், இஷ்டமோ அதற்குக் காரணமோ விலகிஞல் அதை விரும்பாமலுமிருப்பாஞகில் அவன் குணுதீதன் என அறியலாம். இதனை விவரிப்போம். அச்சம் முதலானவற்றிற்குக் காரணமானவை அறியப்பட்டால் துக்கம் ஏற்படுகின்றபடியால் அங்கே அறிவு—ப்ரகாசம் அநிஷ்டத்திற்குக் காரணமாகிறது. அபத்யங்களிலே ப்ரவ்ருத்தி அநிஷ்டஹேது. அனுகூலமானவற்றை ப்ரதிகூலமாக நினைத்தோமாகில் அந்த மோஹம் அநிஷ்டத்தை விளைவிக்கும். இந்த ப்ரகாச ப்ரவ்ருத்தி மோஹங்கள் தகா. இவை நேர்ந்தால் வெறுப்பு உண்டாமென்பது இயற்கை. இவ்வெறுப்பு உண்டாகாமலிருக்க வேண்டும். இதுபோல்—அனுகூல விஷயங்கள் அறியப்பட்டால் ஸந்தோஷம் உண்டாகிறபடியால் அங்கே ப்ரகாசம் வேண்டியதாகிறது. மருந்து முதலானவற்றில் ப்ரவ்ருத்தி அனுகூலமாகிறது. ப்ரதிகூலமானவர்களை—நம்மை வைகின்றவர்களை நாம் அனுகூலராக நினைத்துவிட்டால் அவர்கள் விஷயத்தில் கேடு நினைக்க இழியாமலிருப்போம், அதனல் அந்நினைவே வேண்டுவது. இப்படியிருக்க

இந்த ப்ரகாச ப்ரவ்ருத்தி மோகங்கள் வராமற் போமளவில் அவை வரவேணுமென்று விரும்புவது ஸஹஜம். இவ்விருப்பமும் வராம லிருக்க வேண்டும். இந் நிலைகள் குணாதீதனென்பதற்கு அறிகுறியாகும்.

இந்நிலைகளைப் பெற வழி கூறுகிறார்—

उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते ।
गुणा वर्तन्त इत्येव योऽवतिष्ठति नेङ्गते ॥ २३ ॥

உதாஸீநவத் ஆஸீநோ குணைர் யோ ந விசால்யதே |
குணா வர்த்தந்த இத்யேவ யோऽவதிஷ்ட்டதி நேங்கதே || 23 ||

यः—எவன் (ஆத்மாவைக் காண்பதில் த்ருப்தியுற்று)
उदासीनवत् आसीनः—வேறு விஷயங்களில் கவனமற்று இருக்கின்றானோ
गुणैः—ஸத்துவாதி குணங்களாலே
न विचाल्यते—வெறுப்பு விருப்பு மூலமாக அசைக்கப்படாமலிருக்கிறானோ,
यः—எவன்
गुणाः—ஸத்துவாதி குணங்கள்
वर्तन्ते—தங்கள் செயல்களைச் செய்கின்றன
इति एव—என்றே எண்ணி
अवतिष्ठते—வாளாவிருக்கிறானோ
न इङ्गते—அவற்றின் செயலுக்குத் தக்கவாறு நடவாமலிருக்கிறானோ.

இந்த ச்லோகமும் அடுத்த ச்லோகமும் 25வது ச்லோகத்தின் நான்காம் பாதத்துடன் சேரும். (23)

समदुःखसुखः स्वस्थः समलोष्टाश्मकाञ्चनः ।
तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥ २४ ॥

ஸமதுக்கஸுக: ஸ்வஸ்த்த: ஸமலோஷ்டாச்மகாஞ்சந: |
துல்ய ப்ரியாப்ரியோ தீரஸ் துல்ய நிந்தாத்மஸம்ஸ்துதி: || 24 ||

समदुःखसुखः—துக்கத்திலும் ஸுகத்திலும் ஒரேவிதமிருப்பவன்,
स्वस्थः—தன் ஆத்மாவிலே நிலையுற்றவன்,
समलोष्ट अश्म काञ्चनः—மண்கட்டி கல் கனகமெல்லாம் ஸமமாக நினைப்பவன்,
तुल्यप्रियाप्रियः—ஸுகதுக்க காரணமான இஷ்டாநிஷ்ட வஸ்துக்களை ஸமமாகக் கொண்டவன்
धीरः—ஆத்ம விவேகமுற்றவன்
तुल्यनिन्दा आत्मसंस्तुतिः—தன்னைப் பழிப்பதையும் புகழ்வதையும் ஸமமாக நினைப்பவன்.

मानावमानयोस्तुल्यः तुल्यो मित्रारिपक्षयोः ।
सर्वारम्भपरित्यागी गुणातीतः स उच्यते ॥ २५ ॥

மாநாவமாநயோஸ்துல்ய: துல்யோ மித்ராரிபக்ஷயோ: |
ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீதஸ் ஸ உச்யதே || 25 ||

मानावमानयोः—பிறர் மனத்தாலும் உடலாலும் செய்யும் கௌரவா கௌரவங்களில்
तुल्यः—ஸம நிலையுடையவன்
मित्र अरि पक्षयोः—சினேகிதனுடையவும் த்வேஷியினுடையவும் பக்கங்களில்
तुल्यः—ஒரேவிதமிருப்பவன்
सर्व आरम्भ परित्यागी—ஆத்மாவைக் காண்பதற்கல்லாத எல்லாச் செயலையும் விட்டவன்
सः—(எவனோ) அவன்
गुणातीतः—குணங்களைக் கடந்தவனாக
उच्यते—சொல்லப்படுகிறான்.

இப்படி குணாதீதனுக்கு அறிகுறியும் ஆசாரமும் சொல்லியாயின. இந்நிலைக்கு முக்கியமான உபாயத்தை உரைக்கிறார்—

**मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।**
**स गुणान् समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते ॥ २६ ॥**

மாஞ்ச யோऽவ்யபிசாரேண பக்தியோகேந ஸேவதே |
ஸ குணாந் ஸமதீத்யைதாந் ப்ரஹ்ம பூயாய கல்பதே || 26 ||

यः—எவன் ப்ரக்ருதி வேறு ஆத்மா வேறு என்ற விவேகம் மட்டோடு நிற்காமல்
अव्यभिचारेण—வேறொன்று கலசாத
भक्तियोगेन च—பக்தியோகம் அதன் அங்கங்களெல்லாம் கொண்டு
मां सेवते—எனக்கு ஸேவை செய்கிறானோ,
सः—அவன் (அந்த பக்தி மேன்மையால்)
एतान् गुणान्—இந்த குணங்களை
समतीत्य—செவ்வனே கடந்து
ब्रह्मभूयाय—ஆத்மாவின் உண்மை நிலைக்கு
कल्पते—தகுதி பெறுகிறான்.

**ब्रह्मणो हि प्रतिष्ठाऽहममृतस्याव्ययस्य च ।**
**शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकान्तिकस्य च ॥ २७ ॥**

ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாऽஹம் அம்ருதஸ்யாவ்யயஸ்ய ச |
சாச்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச || 27 ||

हि—ஏனெனில்—
अहं—நான்
अमृतस्य—அழியாத
अव्ययस्य—ஜ்ஞான ஸங்கோசமுமில்லாத
ब्रह्मणः च—சுத்த ஜீவ நிலைக்கும் (கைவல்யத்திற்கும்)
शाश्वतस्य—வெகுகாலம் நீடிக்கும்
धर्मस्य च—தர்ம பலமான ஐச்வர்யத்திற்கும்
ऐकान्तिकस्य—பூர்ணப்ரஹ்மமொன்றின் அனுபவமேயாம்
सुखस्य च—மோக்ஷானந்தத்திற்கும்
प्रतिष्ठा—ஆதாரமாகிறேன்.

ஆத்மானுபவ விஷயமே கீழே கூறப்பட்டதால் முதலில் அதைக் கூறினார். ஐச்வர்யம் கைவல்யம் மோக்ஷம் என்ற மூன்று பலன்களும் என் விஷயமான பக்தியினாலே பெறப்பட வேண்டியிருப்பதால்

என்னிடம் பக்தியுள்ளவனுக்கு ஆத்மநிலை நன்கு கைக்கூடும் என்றபடி. மூன்று பலனகளைச் சேர்க்க மூன்று சகாரம். இவ்வாறு ப்ரக்ருதி குணங்களைப் பற்றிய விவரம் இவ்வத்தியாயத்தில் விரித்துரைக்கப் பெற்றது. (27)

பதினான்காம் அத்தியாயம் முற்றிற்று.

*-*-*-*

## பதினைந்தாம் அத்தியாயம்.

ஸம்ஸாரபந்தம் அனாதி என்று கீழே கூறினார். இனி ஸம்ஸாரத்தை ஒரு மரமாக வர்ணித்து அதனை வெட்டியெறியாத பத்தரென்ற க்ஷர ஜீவர்களுக்கும், வெட்டி விலகின அக்ஷரரென்ற முக்தர்களுக்கும மேம்பட்டவன் ஸர்வேச்வரனை புருஷோத்தமனென்கிறார். அதனால் இது புருஷோத்தமாத்தியாயம்—

श्रीभगवान् उवाच பகவான் பணிப்பதாவது—

**ऊर्ध्वमूलमधश्शाखमश्वत्थं प्राहुरव्ययम् ।**
**छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥ १ ॥**

ஊர்த்த்வமூலம் அதச்சாகம் அச்வத்தம் ப்ராஹுரவ்யயம் |
சந்தாம்ஸி யஸ்ய பர்ணாநி யஸ்தம் வேத ஸ வேதவித் || 1 ||

ऊर्ध्वमूलं—வேர் மேலாகவும்
अधश्शाखम्—கிளைகள் கீழாகவும்
अव्ययम्—ப்ரளயத்திற்குப் பிறகும் மீண்டும் படைக்கப்படுவதால் அழிவற்றதாகவும் உள்ள
अश्वत्थम्—அரசமரமாக
आहुः—எதை வேதம் ஓதுமோ,
यस्य—எந்த மரத்திற்கு
छन्दांसि—வேதங்கள்
पर्णानि—இலைகளோ,
तम्—அந்த ப்ரபஞ்சமென்ற மரத்தை
यः वेद—எவன் அறிகின்றானோ,
सः वेदवित्—அவன் வேதம் அறிந்தவனாகிறான்.

கண்ணால் காணுமளவுக்கு மட்டும் உலகை இசைந்து இதன் தன்மையை உள்ளபடி யறியாமலிருப்பர் பெரும்பாலும். வேதம் அறிந்தவர்களே இதன் உண்மையை யுணர்ந்தவராவர். இது ஒரு மரமென்னலாம். என்ன மரம்? அச்வத்தம்—அரசமரம். அரசமரம் பெலனற்றது. இன்று உள்ளது நாளைக்கு இராது என்றதாலும் ப்ரபஞ்சம் அச்வத்தமெனப்படும். பிறப்பும் அழிவும் மாறி மாறி வருமாகையால் ஒரு விதத்தில் அவ்யயமுமாகும். இதற்கு வேர் மேலே, கிளைகள் கீழே என்பது சிறப்பாம். எவ்வாறெனில், நான்முகன் மேலுலகத்தில் இருந்து கொண்டு எல்லா ப்ரஜைகளையும் படைக்கிறான். அவன் வேர். ஸர்வேச்வரனை வேரென்னலாகாது. அழிக்கும் போது வேரும் சேர்ந்து அழியவேண்டும். வேரும் வெட்டுண்பதாகவேண்டும்

படைத்த மரம் தேவ திர்யக் மனுஷ்ய ஸ்தாவரப்ராணிகள் மேலே மேலே பிறந்த வண்ணமிருப்பதால் கீழே பல கிளைகள் உள்ளதாம். ப்ரஜைகள் பாதாளம் வரையில் இறங்குகின்றனர். மேலேறல் அரிதாயிருப்பதாலும் கிளைகள் கீழே போகின்றன. இத்தனை பிரஜைகளுக்கு அவர்கள் செய்த வினைகளே காரணம். எந்த வினைக்கு எத்தகைய பிறப்பென்பதையும், உயர்ந்த பிறவியை எவ்வாறு பெறுவதென்பதையும் வேதங்களே ஓதுகின்றபடியால் வேதங்களே இலைகள். வேதம் இல்லையாகில் வினைகள் அறியப்படா. இலைகள்மூலம் உணவை உட்கொண்டு மரம் வளரும். அதுபோல் வேதம் அறிந்து அதன் மூலமே எல்லாம் படைக்கப்படுகிற படியால் வேதம் இலையாம். மரமானபடியால் எளிதில் வெட்டவாகும். இவ்வாறு அறிந்தவன் வேதவித்து என்னலாம். வேறு ப்ரமாணத்தினால் இவ்விஷயங்கள் அறியப்படாவே. (1)

படைக்கப் பெற்ற உலகைக் கீழே பொதுவாகப் பணித்தார். மேலே நித்ய ஸ்ருஷ்டி நடவாநிற்பதைக் கூறுவது இரண்டாம் ச்லோகம்.

अधश्चोर्ध्वञ्च प्रसृतास्तस्य शाखाः गुणप्रवृद्धा विषयप्रवालाः ।
अधश्च मूलान्यनुसंततानि कर्मानुबन्धीनि मनुष्यलोके ॥ २ ॥

அதச்சோர்த்வஞ்ச ப்ரஸ்ருதாஸ் தஸ்ய சாகா:
குணப்ரவ்ர்த்தா: விஷயப்ரவாளா: |
அதச்ச மூலாந்யநுஸந்ததாநி
கர்மாநுபந்தீநி மனுஷ்யலோகே || 2 ||

तस्य शाखाः—அதன் கிளைகள்
अधः च ऊर्ध्वं च—கீழும் மேலும்
प्रसृताः-பரவுகின்றன.
गुणप्रवृद्धाः—ஸத்வாதிகுணங்களால் வளம் பெறும்.
विषय प्रवालाः-சப்தாதி விஷயங்களைத் தளிர்களாக உடையவை,
अधः मनुष्यलोके-கீழே மனித வுலகில்
कर्मानुबन्धीनि—செய்யும் வினைகள் காரணமாக
मूलानि-ராகத்வேஷ வாஸனைகளாம் வேர்கள்
अनुसंततानि-தொடர்ந்து பரவுகிறன.

கீழுலகில் கிளைகளான மனுஷ்யாதிகளினின்று மனுஷ்யாதி கிளைகளும், மேலே கந்தர்வாதி கிளைகளினின்று கந்தர்வாதிகளுமாக இம்மரம் வளரா நிற்கும். ஸத்துவாதி குணங்களின் எழுச்சியால் இதற்கு எழுச்சி. உலகில் காணும் சப்தரூபரஸாதிகளான விஷயங்கள் மரத்தில் இருக்கும் அழகிய தளிர்களாம். தளிர் போல் பொறிகளைக் கவர்கின்றனவே. கிளை மேல் கிளை வருவதற்குக் காரணமென்னவெனில், கீழே மனிதவுலகில் செய்யப்பட்ட புண்யபாப கர்மாக்கள் மூலமான ராகத்வேஷாதி வாஸனைகள் வேராக நின்று எங்கும் தொடர்ந்து பரவுகின்றனவே, அவையே காரணமாம். (2)

வேதமூலமாக அறியப்பட வேண்டும் வகையிலே உலகின் நிலையை யறிவித்தார். வேதம் அறியாதார் இந்நிலையை யறியமாட்டாரென்கிருர்-

**न रूपमस्येह तथोपलभ्यते नान्तो न चादिर्न च संप्रतिष्ठा ।**

ந ரூபமஸ்யேஹ ததோபலப்யதே
நாந்தோ ந சாऽऽதிர் ந ச ஸம்ப்ரதிஷ்ட்டா |

| | |
|---|---|
| इह—வேதம் அறியாதவிடத்திலே | अन्तः—இதற்கு முடிவும் |
| अस्य—இம்மரத்திற்கு | नोपलभ्यते—காணப்படுகிறதில்லை. |
| रूपं—வடிவானது | संप्रतिष्ठा च—கர்மகாரணமான அஜ்ஞானமென்கிற ஆதாரமும் |
| तथा—பிரமன் மூலம், மற்றவை கிளை, கர்மாதிகள் வேர் என்றவாறு | नोपलभ्यते—காணப்படுகிறதில்லை. |
| न उपलभ्यते—காணப்படுகிறதில்லை. | |

வேதம் அறிந்தவர்கள் கீழ்க்கூறியபடி எல்லாம் தெளிந்து கொள்வர். பிறர்க்கு இவ்வாறு அறியவொண்ணுது. உலகம் இவ்வாறே இருக்கு மென்று நினைப்பர்.

**अश्वत्थमेनं सुविरूढमूलमसंगशस्त्रेण दृढेन छित्वा ॥ ३ ॥**
**ततः पदं तत् परिमार्गितव्यं यस्मिन् गता न निवर्तन्ति भूयः ।**

அச்வத்தமேநம் ஸுவிரூடமூலம்
அஸங்கசஸ்த்ரேண த்ருடேந ச்சித்வா || 3 ||
தத: பதம் தத் பரிமார்கிதவ்யம்
யஸ்மிந் கதா: ந நிவர்தந்தி பூய: |

| | |
|---|---|
| सुविरूढमूलम्—நன்ருகப் பலவிதமாக ஊன்றிய வேர்களையுடைய | तत् पदं—அந்த ப்ராப்யமான வஸ்து |
| एनम् अश्वत्थम्—இவ் அலசமரத்தை | परिमार्गितव्यम्—தேடப்பட வேண்டும். எத்தகைய வஸ்துவெனில்— |
| दृढेन—மழுங்காத | यस्मिन् गताः—எவ்வஸ்துவினிடம் சேர்ந்தவர் |
| असंगशस्त्रेण—உலக போகங்களிற் பற்றற்றமையென்னும் ஆயுதத்தால் | भूयः—மீண்டும் |
| छित्वा—பிளந்து விட்டு | न निवर्तन्ति—ஸம்ஸாரத்திற்குத் திரும்பமாட்டார்களோ அது. |
| ततः—அப் பற்றற்றமை மூலமாக | |

ப்ரபஞ்சத்தை வெட்டுவதாவது தன்னை வதைக்க சக்தியற்ற தாக்குகை.

விஷயப்பற்று என்பது அனுதி காலமாகத் தொடர்ந்து வாரா நிற்கிறதே. இது எங்ஙனே அறுமென்ன அருளிச் செய்கிருர்—

**तमेव चाऽऽद्यं पुरुषं प्रपद्येद्(येय) तः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥ ४ ॥**

தமேவ சாऽऽத்யம் புருஷம் ப்ரபத்யேத் யத:
(ப்ரபத்யேயத:) ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ || 4 ||

यतः—எந்த பகவான் மூலம்
प्रवृत्तिः—போகங்களிலே நோக்கு
पुराणी—அனாதியாக
प्रसृता—பரவியிருக்கிறதோ
तम् आद्यम्—அந்த முதல்வனை
पुरुषम् एव—புருஷனையே
प्रपद्येत् च—இதற்காகவும் சரணமடைய வேண்டும்.

प्रपद्येयतः என்கிற பாடத்தில் प्रपद्य इयतः என்று பதங்களைப் பிரித்து, 'அந்த புருஷனையே प्रपद्य சரணமடைந்த பிறகு (அடைவதால்) इयतः அஜ்ஞானப் பற்று ஒழியுமளவுக்கு மூலமாக வரும் प्रवृत्तिः ஸாதுக்களின் ப்ரவ்ருத்தியானது पुराणी முற்காலத்தினின்று प्रसृता வாரா நிற்கிறது, எனப்பொருள் கொள்வதாம். ப்ரபத்யே யத: எனப்பிரிக்கலாகாது, प्रपद्ये சரணமடைகின்றேன் என்று கண்ணன் கூறவாகாதே. (4)

இதனைத் தற்கால அனுபவத்தைக் கொண்டும் தெளிவிக்கிறார்—

**निर्मानमोहा जितसंगदोषाः अध्यात्मनित्याः विनिवृत्तकामाः ।**
**द्वन्द्वैर्विमुक्ताः सुखदुःखसंज्ञैर्गच्छन्त्यमूढाः पदमव्ययं तत् ॥ ५ ॥**

நிர்மாநமோஹா: ஜிதஸங்கதோஷா:
அத்யாத்மநித்யா: விநிவ்ர்த்தகாமா: |
த்வந்த்வைர் விமுக்தா: ஸுகதுக்கஸம்ஜ்ஞை:
கச்சந்த்யமூடா: பதம் அவ்யயம் தத் || 5 ||

निर्मानमोहाः—தேஹாத்மாபிமனமாம் மோஹமற்றவராய்
जितसंगदोषाः—விஷயப் பற்றென்னும் தோஷத்தை வென்றவராய்
अध्यात्मनित्याः—ஆத்ம ஞானத்திலே நிலைக்கின்றவராய்
विनिवृत्तकामाः—விஷய ஸந்நிதானத்திலும் காமம் விலகியவராய்
सुखदुःख संज्ञैः—ஸுகம் துக்கமென்ற பேருற்ற
द्वन्द्वैः—த்வந்த்வங்களால்
विमुक्ताः—விடப்பட்டவராய்
अमूढाः—மோக காரணமுமின்றி
अव्ययं—ஜ்ஞான ஸங்கோசமற்ற
तत् पदम्—அந்த ஆத்ம ஸ்வரூபத்தை
गच्छन्ति—பெறுகின்றனர்.

तत् पदम् என்று சொன்னதை விரித்து உரைக்கிறார்—

**न तत् भासयते सूर्यो न शशांको न पावकः ।**
**यद् गत्वा न निवर्तन्ते तद् धाम परमं मम ॥ ६ ॥**

ந தத் பாஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக: |
யத் கத்வா ந நிவர்த்தந்தே தத் தாம பரமம் மம || 6 ||

तत्—அந்த ஸ்வயம் ப்ரகாசமான ஆத்ம தத்துவத்தை
सूर्यः—சூரியன்
न भासयते—அறிவிக்க வல்லனல்லன்.
न शशांकः—சந்திரனும் அல்லன்.
न पावकः—அக்னியும் அல்லன்.
यत् गत्वा—எதனைப் பெற்று யோகிகள்
न निवर्तन्ते—புநராவ்ர்த்தி பெறுரோ,
तत् धाम—அந்த ஆத்மாவாம் சோதி
परमं—உயர்ந்தது
मम—எனக்கு சேஷமாம்.

கண்ணால் காணக்கூடியவற்றின் ப்ரகாசம் ஸூர்யாதிகளின் துணையால் உண்டாகும். அவ்வாறுகாமல் ஸ்வயம்ப்ரகாசமுமான ஆத்மாவை அவற்றால் காண்பது ஏது? ஆத்மாவை அதனுடைய தர்மபூத ஞானத்தைக் கொண்டு தெளிவாக அறிவதற்கும் ஸூர்யாதிகளாலாவதொன்றுமில்லை. இங்கே ப்ருஹதாரண்யகத்தில் ஜநகயாஜ்ஞவல்க்யஸம்வாதம் பாஷ்ய சந்த்ரிகைகளின் கருத்திலுள்ளது (6.3.) நினைத்தற்பாலது.(6)

ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।
मनःषष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥ ७ ॥

மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந: |
மநஷ்ஷஷ்டாநீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்த்தாநி கர்ஷதி || 7 ||

सनातनः—எப்போதும் நல்லறிவு பெற வேண்டியவனாய்
मम अंश एव—எனது அம்சமாகவே, (ஸமமாகவே)யிருக்கவாகிறவனே
जीवभूतः—அனாதி கர்மாதீனமான ஜீவனம் பெற்றவனாய்
जीवलोके—பத்த ஜீவர்களுக்கான இவ்வுலகில்
प्रकृतिस्थानि—ப்ரக்ருதி பரிணாமமான உடலிலிருக்கும்
मनः षष्ठानि—மனத்தையாறுவதாக உடைய
इन्द्रियाणि—இந்திரியங்களை
कर्षति—தான் அறிவு பெற இழுத்து உழலுகிறான்.

कर्षति என்பதை விளக்கி உடல்கள் அனாதியாகப் பல பல வரிசையாக வருகின்றன என்கிறார்—

शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।
गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाऽऽशयात् ॥ ८ ॥

சரீரம் யத் அவாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீச்வர: |
க்ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர் கந்தாநிவாऽऽசயாத் || 8 ||

ईश्वरः—சரீர இந்திரியங்களை நியமிக்கும் அதிகாரம் பெற்ற ஜீவன்
यत् शरीरम्—எந்த சரீரத்தை
अवाप्नोति—பெறுகிறானே
यत् च—எந்த உடலினின்றும்
उत्क्रामति—புறப்படுகிறானே அங்கிருந்து அங்கைக்கு
एतानि—இந்த இந்திரியங்களை,
आशयात्—மணமுள்ளவற்றினின்று
वायुः गन्धान् इव—காற்று மணங்களை போல்
गृहीत्वा—எடுத்துக் கொண்டு
संयाति—ப்ராணனுடன் செல்லுகிறான்.

அந்தந்த உடலுக்குத் தனித்தனியே இந்த்ரியங்கள் என்பதில்லை. ஓர் உடலை விட்டு மற்றோர் உடல் போம்போது ஜீவன் தனது சக்தியினாலே தனது இந்த்ரியங்களைக் கூடவே கொண்டு செல்லுகிறான். இதற்கு த்ருஷ்டாந்தம் வாயு. இதன் கருத்தாவது—காற்று பூ முதலானவற்றினின்று மணங்களைக் கொள்ளும்போது அந்தந்த த்ரவ்யத்தின்

நுண்ணிய அம்சங்களைத் தான் பிரித்து எடுக்கும். அவற்றில் மணம் இன்றியமையாமையால் இருக்கும். மணம் என்ற குணத்தை மட்டும் தனியே பிரிக்கவும் ஆகாது. அதுபோல் ஆத்மா மரணத்தில் ஓர் உடலை விட்டுப் புறப்படும்போது இந்திரியங்களைக் கொள்வதென்றால் அந்தப் பேருடலினின்று நுண்ணிய பூதங்களென்னும் பஞ்சபூத ஸூக்ஷ்மங்களை எடுத்து அவற்றினுள் இந்திரியங்களை அடக்கிக் கொண்டு புறப்படும். ஸ்வர்காதி வுலகிற் போனவுடன் அந்த பூத ஸூக்ஷ்மம் அங்கங்கு வேண்டும் உருவங்களாகப் பல வஸ்துக்களின் சேர்க்கையாலாகும். கீழ் இறங்கும்போதும் அவ்வாறே, என்றதாம். (8)

இந்திரியங்களின் பெயரைக் கூறி அவற்றினுலாவதையும் அறிவிக்கிறார்—

श्रोत्रं चक्षुः स्पर्शनञ्च रसनं घ्राणमेव च ।
अधिष्ठाय मनश्चायं विषयान् उपसेवते ॥ ९ ॥

ச்ரோத்ரம் சக்ஷுः ஸ்பர்சநஞ்ச ரஸநம் க்ராணமேவ ச |
அதிஷ்ட்டாய மநச்சாயம் விஷயாந் உபஸேவதே || 9 ||

अयम्—இந்த ஜீவன்
मनः च—மனத்தையும்
श्रोत्रं चक्षुः—காதையும் கண்ணையும்
स्पर्शनम्—த்வகிந்த்ரியத்தையும்
रसनं घ्राणं च एव—நாக்கையும் மூக்கையுமே
अधिष्ठाय—அங்கங்கு ஏவி
विषयान्—வெளி விஷயங்களை
उपसेवते—தொடர்ந்து அனுபவித்து வருகிறான்.

ஆத்ம வஸ்துவைக் காணுமல் வெளிவஸ்துக்களை அனுபவிக்க இந்த இந்த்ரியங்கள் வேண்டும். அவ்வனுபவத்தில் இழிகிறான். (9)

उत्क्रामन्तं स्थितं वाऽपि भुञ्जानं वा गुणान्वितम् ।
विमूढा नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः ॥ १० ॥

உத்க்ராமந்தம் ஸ்த்திதம் வாऽபி புஞ்ஜாநம் வா குணாந்விதம் |
விமூடா நாநுபச்யந்தி பச்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷः || 10 ||

विमूढाः—தேஹாத்மாபிமானிகள்
गुणान्वितं—குணமயமான தேஹத்துடன் சேர்ந்து
उत्क्रामन्तम्—மரணமடைந்து புறப்படுகின்றவனும்
स्थितं वा—அங்கங்கு பிறப்பவனும்
भुञ्जानं वा अपि—ஸ்த்திதிகாலத்தில் ஸுகதுக்கானுபவம் பெறுகின்ற வனுமான இவனை
न अनुपश्यन्ति—தேஹாதிகளைவிட வேறாய் ஜ்ஞாநாதாரமாகக் காணமாட்டார்.
ज्ञानचक्षुषः—அறிவென்ற கண் படைத்தவர்கள்
पश्यन्ति—காண்பர்.

ஜீவனுக்கு மரணம், ஜனனம், ஸ்த்திதி என்ற மூன்று நிலைகளிலும் தேஹத்துடன் சேர்ந்து இருப்பும் தேஹாத்மாபிமானமுமே யுள்ளது. ப்ரளயத்தில் தேஹமில்லையாலுலும் அந்த அபிமானமுமில்லாத அஜ்

ஞானமென்ற மோஹமே. உண்மையான ஆத்ம ஸ்வரூபம் எல்லா நிலை களிலும் வேறுயிருக்குமென்பதை ஜ்ஞானிகளே அறிவார்கள். (10)

சாஸ்த்ர ஜ்ஞானம் மட்டும் காண்பதற்குப் போதாதென்கிறுர்—

यतन्तो योगिनश्चैनं पश्यन्त्यात्मन्यवस्थितम् ।
यतन्तोऽप्यकृतात्मानो नैनं पश्यन्त्यचेतसः ॥ ११ ॥

யதந்தோ யோகிநச்சைவம் பச்யந்த்யாத்மந்யவஸ்த்திதம் |
யதந்தோऽப்யக்ருதாத்மாநோ நைநம் பச்யந்த்யசேதஸ: || 11 ||

आत्मनि—உடலில்
अवस्थितम् एनम्—இருக்குமிவனை
यतन्तः—முயற்சியுடைய
योगिनः—யோகிகள்
पश्यन्ति—பார்க்கின்றனர்.
यतन्तः अपि—முயற்சியுடையராலும்
अकृतात्मानः—ஆத்மத்திருத்தம் பெறுதவர்
अचेतसः—சுத்த மனமற்றவராய்
एनं—இந்த ஜீவதத்துவத்தை
न पश्यन्ति—காண்கிறுரல்லர்.

तमेव चाद्यं पुरुषं प्रपद्य என்று கீழ்க் கூறிய ப்ரபத்தியை முக்யமாகக் கொண்டு முயன்றுல் யோகிகளாகி உடலினுள் மறைந்த ஆத்மாவைத் தனியே காணலாம். அந்த ப்ரபத்தியினுல் திருத்தம் பெறுதவருக்கு மனச்சுத்தியில்லை யாகையால் என்ன விதம் முயன்றுலும் அதனைக் காணலாகாது. ஆக என்னுலேயாவதால் என்னை ஆச்ரயிக்க வேண்டும்.

இஃதென்? கீழே சூர்ய சந்த்ராதிகளுக்கு வெளி வஸ்துக்களைக் காண்பிக்க வல்லமை யிருக்கின்றதென்றேனே, அதுவும் என்னுல் தான் என்கிறுர்—

यदादित्यगतं तेजो जगद् भासयतेऽखिलम् ।
यच्चन्द्रमसि यच्चाग्नौ तत् तेजो विद्धि मामकम् ॥ १२ ॥

யத் ஆதித்யகதம் தேஜோ ஜகத் பாஸயதேऽகிலம் |
யச்சந்த்ரமஸி யச்சாக்நௌ தத் தேஜோ வித்தி மாமகம் || 12 ||

यत् तेजः—எந்த ஒளியானது
आदित्यगतम्—சூரியனிடம் இருந்து
अखिलं जगत्—எல்லா உலகையும்
भासयते—காண வைக்கின்றதோ,
यत्—எந்த ஒளி
चन्द्रमसि—சந்த்ரனிடமோ,
यत्—எந்த ஒளி
अग्नौ च—நெருப்பிலுமோ,
तत् तेजः—அவ்வொளியையெல்லாம்
मामकम्—நான் அளித்ததாக
विद्धि—அறிவாயாக.

गामाविश्य च भूतानि धारयाम्यहमोजसा ।
पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः ॥ १३ ॥

காம் ஆவிச்ய ச பூதாநி தாரயாம்யஹம் ஓஜஸா |
புஷ்ணாமி சௌஷதீஸ் ஸர்வா: ஸோமோ பூத்வா ரஸாத்மக: || 13 ||

गाम् आविश्य-பூமியினுட் புகுந்து
अहम् ओजसा-நான் எனது ஸாமர்த்தியத்தினுலே
भूतानि—பிராணிகளை
धारयामि—தரிக்கின்றேன்.
रसात्मकः—அமுதரஸ வடிவமான
सोमः भूत्वा-சந்திரனுகி
सर्वाः ओषधीः—எல்லா ஓஷதிகளையும் செடிகளையும்
पुष्णामि-போஷிக்கிறேன்.

अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।
प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥ १४ ॥

*அஹம் வைச்வாநரோ பூத்வா ப்ராணிநாம் தேஹம் ஆச்ரித: |*
*ப்ராணுபாநஸமாயுக்த: பசாம்யந்நம் சதுர்விதம் || 14 ||*

अहं-நான்
वैश्वानरः भूत्वा-வயிற்றில் அக்னியாகி
प्राण अपान समायुक्तः-ப்ராணன் அபாநன் என்ற வாயுக்களுடன் சேர்ந்து
प्राणिनां—ப்ராணிகளின்
देहम् आश्रितः-உடலில் இருந்து கொண்டு
चतुर्विधं—நான்கு வகையான
अन्नं पचामि-உணவை சமைக்கிறேன்.

ம்ருகபக்ஷி மனுஷ்யாதிகளாம் பிராணிகளின் வயிற்றிலே உணவை ஜீரணமாக்கும் அக்னியாக நானே இருந்து ப்ராணவாயு அபாநவாயு என்பவற்றோடு சேர்ந்து நான்குவிதமான உணவையும் உடல் தரிக்க வேண்டுமான ஸப்ததாதுக் களாம்படி ரஸமாக மாற்றுகிறேன், ப்ராணனுவது வெளியில் உடலினின்று விடப்படும் வாயு. 'அபாந' என்ற சொல் உட்கொள்ளப்படும் வாயுவைக் கூறும். உள்ளே யிருக்கும் கெட்ட காற்றை வெளியாக்கி உபயோகப்படும் புதிய காற்றை உட்கொள்ள வேண்டும். காற்றின் வீச்சினுல் அக்னி எழுச்சியைப் பெற்று சமைக்கும். ஆஹாரம் நாலு வகையாவது, கடித்து உட்கொள்ளப்படுவது, உறிஞ்சிக் கொள்வது, நாக்கில் தடவப்படுவது, குடிப்பது என்ற வகையாம். இவ்வாறு ப்ருதிவி ஜலம் அக்னி என்ற மூன்று பூதங்களுடவாயுவுமாகித்தான் உதவுகின்ற படியையும் உணர்த்தினுர். (14)

सर्वस्य चाहं हृदि संनिविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च ।
वेदैश्च सर्वैरहमेव वेद्यो वेदान्तकृद् वेदविदेव चाहम् ॥ १५ ॥

*ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ*
*மத்த: ஸ்ம்ருதிர் ஜ்ஞாநம் அபோஹநஞ்ச |*
*வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்யோ*
*வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம் || 15 ||*

सर्वस्य च—எல்லாருடையவும்
हृदि—ஹ்ருதயத்திலே
अहं संनिविष्टः-நான் வீற்றிருக்கிறேன்.
स्मृतिः ज्ञानम्—நினைவும் அறிவும்
अपोहनञ्च—இவ்வாருகுமென ஊஹமும் அல்லது அறிவின்மையும்

मत्तः—என்னுல் வருமவை.
अहम् एव—நானே
सर्वैः वेदैः—எல்லா வேதங்களாலும்
वेद्यः च—அறியப்பட வேண்டியவனு வேன்
अहं एव—நானே
वेदान्तकृत्—வேதமூலமான பலன் களைப் படைப்பவன்
वेदवित् च—வேதம் நன்கு அறிந்த வனுமாவேன் அதாவது. என்னைச் சொல்வது வேதமென்ப தை நானே யறிவேன்.

ப்ரபஞ்சத்தை அழியும் மரமென்று கூறி அதில் சிக்குண்ட ஜீவன் சுத்தநிலையைச் பெறுதல் பரமபுருஷனை ப்ரபத்தி செய்வதாலென்றுர், அவன்மூலமே இவனுக்கு எப்பலனுமென்றும் கூறினுர். இனி விரிவாக அந்த ஜீவர்களை இரு நிலையிலிருப்பதால் இருவகையாகப் பிரித்து அவர்களுக்கு மேம்பட்டவன் புருஷோத்தமன் நானென்று பரமார்த் தோபதேசம் செய்கிறுர்—

**द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।**
**क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥ १६ ॥**

*த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரச்சாக்ஷர ஏவ ச |*
*க்ஷர: ஸர்வாணி பூதாநி கூடஸ்த்தோऽக்ஷர உச்யதே || 16 ||*

क्षरः च—க்ஷரனென்றும்
अक्षरः च—அக்ஷரனென்றும்
इमौ—கீழே கூறப்பெற்ற
द्वौ एव पुरुषौ—இருவகையேயான புருஷர்கள்
लोके—அவர்களைக் காணவான ப்ரமாணத்திலே
प्रथितौ—ப்ரஸித்தராகின்றனர்.
सर्वाणि भूतानि—ஸம்ஸாரபந்தமுள்ள ஜீவன்கள் யாவும்
क्षरः—க்ஷரவகுப்பாவர்.
कूटस्थः—தேஹ ஸம்பந்தமூலமான விகாரங்கள் அற்று இருக் கும் ஜீவவகை
अक्षरः उच्यते-அக்ஷரமெனப்படுகிறது.

பூதாநி என்று பன்மையாகக் கூறும் போதே க்ஷர: என்ற ஒருமை ஜாதி, வகை ஒன்றே என்று கருதவாகும். பத்த ஜீவர்கள் எண்ணிறந்த வர்கள். அவ்வாறே ஸம்ஸாரபந்தம் அற்றவரும் எண்ணற்றவராகையா லே ஓர் இனம் என்பதைக் கொண்டு அக்ஷர என வொருமையாம். 'மம ஸாதர்ம்யம் ஆகதா:', 'நிர்மாநமோஹா ஜிதஸங்கதோஷா:' என்றெல் லாம் ஜீவர்கள் பலரென்று கூறப்பெற்றதே. ஜ்ஞானத்திற்கு ஸங்கோ சம்-உள்ளபடி யறியாமையே க்ஷரணம். அதன் மூலமாக ராகத்வேஷாதி கள். இது ஸம்ஸாரி ஜீவர்களுக்கு உண்டு. மோக்ஷத்திலிருப்பவருக்குச் சிறிதும் ஜ்ஞான ஸங்கோசமில்லை. அதனுல் அக்ஷரர் ஆவர். முன்னே ஜ்ஞான ஸங்கோசம் இருந்து பிறகு பூரணவிகாஸம் பெற்றவராவர். நித்ய ஸூரிகளுக்கு எப்போதுமே ஜ்ஞான ஸங்கோசமில்லையாறுலும் அவர்களுக்கும் ஜ்ஞானஸங்கோசயோக்யதை யுண்டு. பரமபுருஷருக்குப் பரதந்த்ரராகின்றனரே. ஆறுலும் அவன் நிஷ்காரணமாக அவ்வாறு

ஸங்கோசம் பெறுவிப்பதில்லையாகையால் அனாதியாகவே ஸர்வஜ்ஞரா யிருக்கின்றனர். அவர்களும் நித்ய முக்தர்களென்று முக்த கோஷ்டியாய் அக்ஷரராவர். கூடஸ்த்த என்ற சொல்லுக்குப் பல பொருள் உண்டு. கூடம்—மலையுச்சி எவ்வளவு மழை பெய்தாலும் ஓரே விதமாயிருக்கும் 'गिरयो वर्षधाराभिर्हन्यमाना न विव्यथुः' என்றபடி அசையா. அல்லது கம்மாளன் மரத்திலே புதைத்து வைத்திருக்கும் பட்டறை என்ற இரும்புக் கட்டி யும் கூடமாம். அதன் மேல் காய்ச்சின இரும்புகளை வைத்து எவ்வளவு அடி அடித்தாலும் அது நீள்வது குறுகுவதென்ற விகாரமற்றே யிருக்கும். கெட்டியாயிருப்பதால் பெருஞ் சத்தத்திற்குக் காரணமாகு மத்தனை. இனி, பல ஸந்ததிகளுக்குப் பொதுவான மூல புருஷனை கூட ஸ்த்தன் என்பது உண்டே, அது போல் முக்த ஜீவரே முன் பல யோனி களிற் பிறவிக்கு யோக்யராயிருந்ததைக் கொண்டு, அந்த யோக்யதை யுள்ளவர் கூடஸ்த்தர் என்ற பொருள் கொள்வதாம். ஈச்வரவிலக்ஷண மாக ஸம்ஸார யோக்யதையைக் காட்டும் பொருளானபடியாலே இதனையே பாஷ்யத்தில் ஆதரித்தனர் போலும். லோகபதம் ப்ரமாணத் தைச் சொல்லும் கீழ்க்கூறியதெல்லாம் உலகில் எளிதில் அறியக் கூடியதல்லவே. ஆகையால் லோகமாவது இங்கு உலகமன்று. (16)

**उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।**
**यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥ १७ ॥**

உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: |
யோ லோகத்ரயம் ஆவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர: || 17 ||

अन्यः-கீழ்க்கூறிய இருவகையாரைக் காட்டிலும் வேறுவான்
उत्तमः पुरुषः—உத்தம புருஷன்.
परमात्मा इति—அவனே பரமாத்மா என்றும்
उदाहृतः—சொல்லப்பட்டான்.
यः—எவன்
अव्यय—அழியும் ஸ்வபாவம் சிறிது மில்லாதவனாய்
ईश्वरः—ஈச்வரத்வமும் பெற்றவனாய்
लोकत्रयं—ப்ரமாண ஸித்தமான மூன்றையும்
आविश्य—புகுந்து
बिभर्ति-பரிக்கிறான்; தாங்குகிறான்.

ஒரு ஜீவனே முதலில் ஸம்ஸார தசையைப் பெற்றிருந்து பின்னே அது அற்று விளங்குகிறான். நித்ய ஸூரிகளும் ஸம்ஸார யோக்யதை யற்றிருந்தே அது இல்லாமலே விளங்குகின்றனர். இவ்வாறு இரு நிலைக்கு யோக்யரான ஜீவர்கள் போலல்லாதவன், விலக்ஷணன் என்ப பதற்காக இங்கே अन्यः என்று சிறப்பாகக் கூறினதாம். ஜீவர்கள் உடலெடுக்கும் போது அதற்கு மட்டும் ஆதாரமாவர். அவ்வாறின்றி எதற்கும் எப்போதும் ஆத்மாவாகையால் இவன் परमात्मा. மூல ப்ரக்ருதி முதலான எல்லா அசேதனங்களும் சேதனர்களும் அவனாலே தரிக்கப் படுகிறபடியால் लोकत्रयமென்பது மூவுலகை மட்டும் சொல்வதன்று.

லோகமாவது சாஸ்த்ர ப்ரமாண ஸித்தமான பொருள். அவை மூன்றையு மென்றதாம். கீழ்க்கூறிய க்ஷராக்ஷரங்களும் பொதுவாக அசேதனமும் அம் மூன்றுகும். ஆத்மா என்பதாலே ஸ்வாமித்வமும், ஆவிச்ய என்று ப்ரவேசமும் அதாவது வ்யாபித்திருக்கையும், பிபர்த்தி என்ற சொல்லால் பரணமும், ஈச்வர: என்றதால் நியமன சக்தியும், அவ்யய: என்று ஜ்ஞான ஸங்கோச ஸ்வபாவமற்றிருக்கையும் கூறப்பட்டதால், இந்த தர்மங்களுக்கு இடமாகாத க்ஷராக்ஷரங்களைவிட இவ் உத்தம புருஷனுக்கு அந்யத்வம்—வேறுபாடு விரிவாக அறிவிக்கப் பெற்றது. (17)

புருஷோத்தமன் என்ற பெயரும் வெறும் பெயரல்ல; இந்தக் காரணத்தினுலேயே என்கிருர்—

**यस्मात् क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।**
**अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥ १८ ॥**

*யஸ்மாத் க்ஷரமதீதோऽஹம் அக்ஷராதபி சோத்தம: |*
*அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: || 18 ||*

यस्मात्—எந்த காரணத்திஞல்
अहं—நான்
क्षरम् अतीतः—க்ஷரவகைக்கு மேம்பட்டவஞே
अक्षरात् अपि च—அக்ஷரவகைக்கும்
उत्तमः—மிகவும் மேம்பட்டவஞே.
अतः—அந்த காரணத்திஞல்
लोके वेदे च—ஸம்ருதிகளிலும் வேதத்திலும்
पुरुषोत्तमः—புருஷோத்தமஞக
प्रथितः अस्मि—ப்ரஸித்தியுற்றவஞகிறேன்.

க்ஷரஞகாமை யிருப்பினும் இவன் அக்ஷரஞகாமையென்? அக்ஷர வகுப்பிலே பரமாத்மாவைச் சேர்க்கலாமென்று சிலர் நினைப்பர். அது தகாதென்பதற்காக अक्षरादपि च என்ற அபிசப்தம். இங்கு லோகமாவது ஸ்ம்ருதி ப்ரமாணம். புருஷோத்தம: என்கிற சொல் ஸமாஸ பதமாகும். பலவகையாக ஸமாஸம் கொள்ளலாமென்று உரையினில் தெளிக.

**यो मामेवमसंमूढो जानाति पुरुषोत्तमम् ।**
**स सर्वविद् भजति मां सर्वभावेन भारत ॥ १९ ॥**

*யோ மாமேவமஸம்மூடோ ஜாநாதி புருஷோத்தமம் |*
*ஸ ஸர்வவித் பஜதி மாம் ஸர்வபாவேந பாரத || 19 ||*

एवं पुरुषोत्तमम्- இவ்வாறு புருஷோத்தமஞை
मां यः—என்னை எவன்
असंमूढः—மாருட்டமின்றி- வேறுபட்டவஞகவே
जानाति—தெளிகின்ருஞே,
सः—அவனே
भारत—பரதவம்சத்தியவனே!
सर्ववित्—என்னை பஜனம் செய்யும் வழியெல்லாம் அறிந்தவஞய்
सर्वभावेन—எல்லாவிதத்திஞலும்
मां भजति—என்னிடம் பக்தி செய்பவஞகிருன்.

மோக்ஷோபாயமான வழிகள் பல உள. அவற்றை யெல்லாம் அறிந்து அவற்றிலொன்றான எது தனக்கு ப்ரியமாகுமோ அவ்வழி யிலிழிந்து என்னைப் பெற வேண்டும். எந்த வழியறிபவனும் முதன் முதல் அறிய வேண்டுவதென்னவெனில், நான் கீழ்க்கூறியவாறு எவ் விதத்திலும் புருஷோத்தமன் என்பதே. இதனைத் தெளியாத போது எந்த வழியின் அறிவும் தெளிவாகாது. அத்தெளிவு இராத போது ஒரு பஜனமும் செய்யவாகாது. இது எல்லாவற்றிற்கும் மூலமாகை யால் இதைய றிந்தவன் எவ்வழியிலும் இழியிலாமாகையால் அந்தந்த வழியை யறிந்தவர் அனைவரிடமும் அவ்வழியாக பஜனம் செய்கின்றவர் அனைவரிடமும் நான் வைத்திருக்கும் ப்ரீதி சேர்ந்தால் எவ்வளவாகு மோ, அவ்வளவு ப்ரீதி இவனிடம் எனக்கென்றறிவாயாக.

**इति गुह्यतमं शास्त्रमिदमुक्तं मयाऽनघ ।**
**एतद् बुध्वा बुद्धिमान् स्यात् कृतकृत्यश्च भारत ॥ २० ॥**

*இதி குஹ்யதமம் சாஸ்த்ரம் இதம் உக்தம் மயாऽநக |*
*ஏதத் புத்வா புத்திமாந் ஸ்யாத் க்ருதக்ருத்யச்ச பாரத || 20 ||*

अनघ—குற்றமற்ற
भारत—பரதவம்சத்தியவனே!
इति—இவ்வாறு புருஷோத்தமத்வ விஷயமான
गुह्यतमं—மிக்க ரஹஸ்யமான
इदं शास्त्रम्—இந்த சாஸ்த்ரமானது
उक्तम्—குற்றமில்லாத உனக்கு உபதேசிக்கப் பெற்றது.
एतद् बुध्वा—இதனையறிந்து
बुद्धिमान्-பஜனம் செய்யும் வழிகளில் அறிவுற்றவனாகவும்
कृतकृत्यश्च-உபாயத்தை அனுஷ்டித்த வனாகவும்
स्यात्—ஆவன்.

இந்த புருஷோத்தமத்வஜ்ஞானமே எல்லா ஞானமும் உபாயா னுஷ்ட்டானமுமென்றார் கீழ். இந்த சாஸ்த்ரார்த்த ஜ்ஞானமே அடிப் படை. இந்தத் தத்துவ ஜ்ஞான மூலம் உபாய ஜ்ஞானம் உபாயா நுஷ்ட்டானமும் உண்டாமாகையாலே அவை யெல்லாம் இதுவே என்பது தகுமென்று இதனை கௌரவித்துக் கூறினபடி. இனி உபாய ஜ்ஞாநாநுஷ்ட்டானத்திற்கான விரிவு மேல் அத்தியாயங்களிலாம். அதற்கு இது குறிப்பாகும். (20)

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

*-*-*-*

## பதினாறும் அத்தியாயம்

சாஸ்த்ரத்திற்கு உட்பட்டு நடக்க வேண்டுமென்பதற்காக தேவா-ஸுரப் பிறவிகளின் பிரிவு பணிக்கப்படுகிறது.

श्रीभगवान् उवाच—பகவான் பணித்ததாவது—

अभयं सत्त्वसंशुद्धिर्ज्ञानयोगव्यवस्थितिः ।
दानं दमश्च यज्ञश्च स्वाध्यायस्तप आर्जवम् ॥ १ ॥
अहिंसा सत्यमक्रोधस्त्यागः शान्तिरपैशुनम् ।
दया भूतेष्वलोलुप्त्वं मार्दवं ह्रीरचापलम् ॥ २ ॥
तेजः क्षमा धृतिः शौचमद्रोहो नातिमानिता ।
भवन्ति संपदं दैवीमभिजातस्य पाण्डव ॥ ३ ॥

*அபயம் ஸத்வஸம்சுத்திர் ஜ்ஞாநயோகவ்யவஸ்த்திதி: |*
*தாநம் தமச்ச யஜ்ஞச்ச ஸ்வாத்யாயஸ் தப ஆர்ஜவம் || 1 ||*
*அஹிம்ஸா ஸத்யம் அக்ரோத: த்யாக: சாந்திரபைசுநம் |*
*தயா பூதேஷ்வலோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீரசாபலம் || 2 ||*
*தேஜ: க்ஷமா த்ருதி: சௌசம் அத்ரோஹோ நாதிமாநிதா |*
*பவந்தி ஸம்பதம் தைவீம் அபிஜாதஸ்ய பாண்டவ || 3 ||*

अभयम्—துக்கத்திற்குக் காரணம் கண்டும் அச்சமின்மை
सत्त्वसंशुद्धिः—மனத்தில் ரஜஸ்ஸும் தமஸ்ஸும் கலவாமை
ज्ञानयोग—ப்ரக்ருதியை விட வேருன ஆத்ம விவேகத்திலே
व्यवस्थितिः—நிலையுறுகை,
दानम्—கொடை
दमः—மனத்தை அடக்குகை
यज्ञः—நிஷ்காம யாகாதிதர்மம்
स्वाध्यायः—பரமாத்மபரமாக வேதம் ஓதல்
तपः—தவம் புரிதல்
आर्जवम्—மனோவாக்காயங்களின் ஒத்திருப்பு
अहिंसा—நலியாமை
सत्यम्—உண்மை பேசல்
अक्रोधः—பிறரை நலிவதற்கான மனக் கொதிப்பின்மை
त्यागः—ஹிதமற்றதை விடுகை
शान्तिः—வெளியிந்த்ரியங்களை அடக்குகை
अपैशुनम्-பிறருக்குக் கேடு விளைக்கும் கோட் சொல்லலில்லாமை
भूतेषु दया—பிராணிகளின் துக்கத்தைப் பொறுக்க மாட்டாமை
अलोलुप्त्वम्—விஷயப் பற்றற்றமை
मार्दवम्—நெஞ்சுரப்பின்மை
ह्रीः—தவறு செய்வதில் வெட்கம்
अचापलम्—விஷயம் அருகிலிருப்பினும் பற்றின்மை
तेजः—துர்ஜனரால் வாதிக்கப் படாத சக்தி
क्षमा—பொறுமை
धृतिः—பெரும் விபத்திலும் செய்ய வேண்டுமதில் விவேகம் நிலையுறுகை
शौचम्—உள் வெளிக் கருவிகளைச் செயலுக்கு உரியதாக்குகை
अद्रोहः—பிறருக்கு த்ரோஹம் செய்யாமை
नातिमानिता-காரணமின்றி கர்வமாக நடந்து கொள்ளவில்லாமை (என்ற குணங்கள்)
पाण्डव—அர்ஜுனு !
दैवीं संपदम्—தெய்வ நிலை பெறுதலை
अभिजातस्य-குறித்து பிறந்தவனுக்கு
भवन्ति—வருவனவாகும்.

அபயம் முதலான இந்த சிறந்த குணங்கள் உண்டாகில் அவன் தெய்வப்பிறவியுற்றவனெனத் தெளியலாம்.

**दम्भो दर्पोऽतिमानश्च क्रोधः पारुष्यमेव च ।**
**अज्ञानश्चाभिजातस्य पार्थ संपदमासुरीम् ॥ ४ ॥**

தம்போ தர்ப்போऽதிமாநச்ச க்ரோத: பாருஷ்யமேவ ச |
அஜ்ஞாநஞ்சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பதம் ஆஸுரீம் || 4 ||

दम्भः—தன்னை தார்மிகனாக எண்ணிக்க தர்மாபினயம் செய்தல்
दर्पः—செய்ய வேண்டுவதைத் தெளியாதவாறு போகத்தினால் வந்த மதம்
अतिमानः—தன குல வித்யா விஷயமான அபிமானம்
क्रोधः पारुष्यम्—கோபம், சாதுக்களுக்கு அச்சம் தரும் கடுமை என்றவை
अज्ञानं—பராவர தத்துவ ஜ்ஞானமின்மை
पार्थ—அர்ஜுனா!
आसुरीं संपदम्—அசுர தர்மத்திற்கு
अभिजातस्य—பிறந்தவனுக்கு இருக்கும்.

संपदम् என்பதற்கு செல்வமென்றே பொருளல்ல. இல்லாமல் புதிதாக நேருமதெல்லாம் ஸம்பத் என்பதன் பொருளாம். (4)

இவ்விரு வகுப்பின் குணகுணம் கூறப்படுகிறது—

**दैवी संपत् विमोक्षाय निबन्धायाऽऽसुरी मता ।**

தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாऽऽஸுரீ மதா |

दैवी संपत्—தெய்வ ஸம்பத்தானது
विमोक्षाय—மோக்ஷத்திற்கு ஸாதகமாகும்.
आसुरी(संपत्)—அசுரரைச்சார்ந்த ஸம்பத்து
निबन्धाय—அதிக ஸம்ஸார பந்தத்திற்காமென
मता—கொள்ளப்பெற்றது.

**मा शुचः संपदं दैवीमभिजातोऽसि पाण्डव ॥ ५ ॥**

மா சுச: ஸம்பதம் தைவீம் அபிஜாதோऽஸி பாண்டவ || 5 ||

पण्डव—பாண்டு மஹாராஜனின் புதல்வனே!
मा शुचः—கவலைப்படாதே.
दैवीं संपदम्—தெய்வ ஸம்பத்தைக் குறித்தே
अभिजातः असि—பிறந்திருக்கிறாய்.

உனது தகப்பன் தார்மிக ச்ரேஷ்டன். நீயும் அர்ஜுநன். (அர்ஜுன என்ற சொல்லுக்கு வெளுப்பான என்ற பொருளாம்) ஆகையால் உன் பிறப்பு தெய்வ ஸம்பத்திற்காகவே. கவலைப்படாதே—(இரு வகைகளைக் கேட்டுத் தன் நிலை யெதுவோ என்று உடனே அர்ஜுனனுக்கு முகத்திலே அச்சம் சோகம் தோற்ற அந்த சோகத்தைப் போக்க இவ் வுண்மையை அறிவித்தார். கீதையின் முதல் அத்தியாயத்திற் பிறந்த சோகம் வேறு. இது இந்த நொடியிலேயே ஒழிந்தது.)

கீதையில் உபதேசம் தொடங்கியது முதல் முமுக்ஷுக்களின் நடவடிக்கை விரிவாக போதிக்கப் பெற்றபடியால், ஆஸுர ஸம்பத்தே கூறப்படவில்லை யாகையால் அதனை விரிவாகக் கூறத் தொடங்குகிறார்—

**द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन् दैव आसुर एव च ।**
**दैवो विस्तरशः प्रोक्तः आसुरं पार्थ मे शृणु ॥ ६ ॥**

த்வௌ பூதஸர்கௌ லோகேऽஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச |
தைவோ விஸ்தரச: ப்ரோக்த: ஆஸுரம் பார்த்த மே ச்ருணு || 6 ||

पार्थ—ப்ருதையின் புத்ரனே !
अस्मिन् लोके—இப்ரக்ருதி மண்டலத்திலே
भूतसर्गौ—பிராணிகளின் படைப்பு
दैवः—தைவமென்றும்
आसुरः एव च—ஆஸுரமென்றுமே
द्वौ—இரண்டாக உள.
அவற்றில்
दैवः தைவப்படைப்பு
विस्तरशः—விரிவான சொற்களால்
प्रोक्तः—உபதேசிக்கப் பெற்றது.
आसुरं—அசுரப்பிறப்பை
मे शृणु—என்னிடம் கேள்.
(இங்கேயே விரிவாகக் கூறுவேன்)

முமுக்ஷுக்களல்லாதாரெல்லோரும் ஆஸுரர் என்று நினைத்து விட வேண்டா என்பதற்காக ஒருவாறு அறிவிக்கிறார்—

**प्रवृत्तिश्च निवृत्तिश्च जना न विदुरासुराः ।**
**न शौचं नापि चाऽऽचारो न सत्यं तेषु विद्यते ॥ ७ ॥**

ப்ரவ்ருத்திஞ்ச நிவ்ருத்திஞ்ச ஜநா ந விதுராஸுரா: |
ந சௌசம் நாபிசாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே || 7 ||

आसुराः जनाः—அசுரப்பிறவியார்
प्रवृत्तिं च—ஸம்ஸார மண்டலத்தில் ஸுகத்திற்கான சாஸ்த்ரஸம்மதமான ப்ரவ்ருத்தி மார்க்கத்தையும்
निवृत्तिं च—மோக்ஷத்திற்கான நிவ்ருத்தி மார்க்கத்தையும்
न विदुः—அறிகிறாரல்லர்.
तेषु—அந்த அஸுரர்களிடம்
न शौचं विद्यते-உள்வெளி சுத்தியில்லை.
न आचारः अपि—நித்யதர்மானுஷ்டானாதியுமில்லை
सत्यं न विद्यते—பூதஹிதமே பேசுவதென்பதுமில்லை.

**असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम् ।**
**अपरस्परसंभूतं किमन्यत् कामहेतुकम् ॥ ८ ॥**

அஸத்யம் அப்ரதிஷ்ட்டம் தே ஜகத் ஆஹுரநீச்வரம் |
அபரஸ்பரஸம்பூதம் கிமந்யத் காமஹேதுகம் || 8 ||

जगत्—உலகை
असत्यम्—ஸத்யமென்னும் ப்ரஹ்மத்தின் கார்யமாகாததாகவும்
अप्रतिष्ठम्—ப்ரஹ்மத்தினால் தரிக்கப்படாததாகவும்
अनीश्वरम्—ப்ரஹ்மத்தின் நியமனத்திற்கு உட்படாததாகவும்
आहुः—சொல்லுகிறார்கள்.

अपरस्परसंभूतम्—ஸ்த்ரீ புருஷர்களின் கலவியாலுண்டாகாதது
अन्यत् किम्—வேறென்ன ?
कामहेतुकम्—காமத்தையே காரணமாகவுடையது உலகு (என்றே சொல்லுகிறார்கள்.)

ஆகையால்

சாஸ்த்ரமும் தெய்வப் பிறவியுள்ளவரும் சொல்வதாவது—உலகெல்லாம் பரப்ரஹ்மத்தைக் காரணமாக உடையது. ப்ரஹ்மாத்மகமாகும். பூமி முதலானவற்றில் ஒவ்வொன்றுக்கும் ஆதாரத்தையாராயும் போது ப்ரஹ்மமே முடிவில் ஆதாரமாய் நிற்கும். ப்ரஹ்மத்தின் நியமன சக்தியினாலேயே உலகில் சேதநாசேதநங்களுடைய வியாபாரமெல்லாம். (இங்கே அஸத்யம், அப்ரதிஷ்ட்டம், அநீச்வரம் என்ற பதங்களினின்று, உலகத்திற்கெல்லாம் ப்ரஹ்மமே சேஷி, அதே ஆதாரம், அதே நியமனம் செய்வதென்றிப்படி சரீராத்மபாவம் ஸித்தாந்தத்தில் இசைவதும் குறிக்கப் பெற்றதென்னலாம்.) இதற்கு மாறாக இவற்றை மறுப்பர் அசுரர். அல்லது அறிந்து சொல்லாமலுமிருப்பர். இனி, உலகுக்குக் காரணமென்ன என்று கேட்டால், உலகில் ப்ராணிகள் பலவிதம் உண்டாகின்றதற்குக் காரணம் ஆண் பெண் என்ற ஜாதிகளின் சேர்க்கை யென்பது கண்கூடு, வேறென்ன வேண்டுமென்பர். அந்தச் சேர்க்கைக்குக் காமமே காரணம், காமத்திற்குக் காரணம் விஷயங்களின் அழகு இளமை முதலானவற்றின் நிலையென்றவாறு என்பர். (இங்கே அசேதநமான ஆடை, அன்னம் பாத்ரம் பண்டம் முதலானவைகள் எவ்வாறு உண்டாமென்றால் அவையும் நான்கு பூதங்கள் ஒன்றோடொன்று சேர உண்டாமவையே. அவற்றிற்கும் அவரவரின் விருப்பம் காரணமாகலாம் என்றவாறும் ச்லோகத்தின் பின் பகுதிக்குப் பொருள் கொள்ளலாம்.)

भवतु चेतनानां प्राणिनामुत्पत्तिः स्त्रीपुरुषपरस्परसंपर्कात्; संपर्कः कस्मादिति चेत्, कामादिति। अचेतनानां घटपटादीनामुत्पत्तिः कथमिति चेत्, सा पृथिव्यादिभूतानां यथायथं परस्परसंश्लेषादेव। किमन्यत् महाभूतनिरपेक्षमस्ति । यानि तु महाभूतानि तान्येवमेव दृश्यमानानि न कारणसापेक्षाणीति तेषामुन्मत्तेः तदर्थमीश्वरस्य च कल्पनादिकं केवलकल्पनामात्रमिति चोत्तरार्धाशयो ग्राह्यः।

இந்த ச்லோகத்திற்கு உலகெல்லாம் அஸத்யம்—அதாவது பொய், அப்ரதிஷ்ட்டம்—ஒருவித நிலையுமற்று க்ஷணம்தோறும் அழிவதாகும், அநீச்வரம்—ஆள்வதற்கு ப்ரபுக்களுமில்லாதது என்றவாறு பொருள் கொண்டால் உலகத்தில் அசுரர்கள் போன்ற நாஸ்திகர்களின் கொள்கைக்கு இது முரணுகுமாகையால், இவ்வாறு பொருள் கொள்ளவில்லையென்றறிக. (8)

एतां दृष्टिमवष्टभ्य नष्टात्मानोऽल्पबुद्धयः ।
प्रभवन्त्युग्रकर्माणः क्षयाय जगतोऽशुभाः(हिताः) ॥ ९ ॥

ஏதாம் த்ருஷ்டிம் அவஷ்டப்ய நஷ்டாத்மாநோऽல்பபுத்தய: |
ப்ரபவந்த்யுக்ரகர்மாண: க்ஷயாய ஜகதோऽசுபா: || 9 ||

एतां—இப்படி தெய்வமேயில்லை யென்றவிதமான
दृष्टिं—கொள்கையை
अवष्टभ्य—திடமாகக் கொண்டு
नष्टात्मानः-தேஹாதிகளைவிட வேறான ஆத்மாவைக் காணாதவராய்
अल्पबुद्धयः—ஜ்ஞாநஸங்கோச முடையராய்
उग्रकर्माणः—ஹிம்ஸை போன்ற கொடிய செயல்களை யுடையராய்
अशुभाः—தன்னலமே கொண்டு சேர்ந்தவர்களுக்கும் நன்மை செய்யாதாராய்
जगतः क्षयाय-உலகின் அழிவுக்காகவே
भवन्ति—ஆகின்றனர்.

**काममाश्रित्य दुष्पूरं दम्भमानमदान्विताः ।**
**मोहात् गृहीत्वाऽसद्ग्राहान् प्रवर्तन्तेऽशुचिव्रताः ॥ १० ॥**

*காமமாச்ரித்ய துஷ்பூரம் தம்பமாநமதாந்விதா: |*
*மோஹாத் க்ருஹீத்வா அஸத்க்ராஹாந் ப்ரவர்தந்தே அசுசிவ்ரதா: ||*

दुष्पूरम्—எவ்வளவு நிறைத்தாலும் நிறையாத
कामम्—காமமென்ற துர்குணத்தை
आश्रित्य—கொண்டு அதற்காக
मोहात्—அஜ்ஞானத்தினால்
असद्ग्राहान्—அக்ரமமாகச் சேகரித்த கருவிகளை
गृहीत्वा—உதவியாகக் கொண்டு
अशुचिव्रताः—சாஸ்த்ரங்களிற் சொல்லாத சில ஏற்பாடுகளைத் தாங்களே ஸங்கல்ப்பித்துக் கொண்டு
दम्भमानमदान्विताः-மேலுக்கான டம்பமான செயலும், கர்வமும் ஆனந்தமதமும் உடையராய்
प्रवर्तन्ते—கொடுமையில் இழிகின்றனர்.

**चिन्तामपरिमेयाञ्च प्रलयान्तामुपाश्रिताः ।**
**कामोपभोगपरमाः एतावदिति निश्चिताः ॥ ११ ॥**

*சிந்தாமபரிமேயாஞ்ச ப்ரளயாந்தாமுபாச்ரிதா: |*
*காமோபபோகபரமா: ஏதாவதிதி நிச்சிதா: || 11 ||*

(உடனே அழியப் போகின்றவரும்)
अपरिमेयाम्—அளவற்றதும்
प्रलयान्ताम्– மஹாப்ரளயம் வரும் காலம் அளவுக்குச் செய்யும் விஷயமாகவும்
चिन्तां—வெகு நீண்ட சிந்தனையை
उपाश्रिताः—தொடர்ச்சியாகக் கொண்டும்
काम उपभोगपरमाः-இவ்வளவு சிந்தைக்கும் சிற்றின்பங்களின் அனுபவத்தையே பலனாகக் கொண்டும்
(இதற்கு மாறுதல் பல இருந்தும்)
एतावत् इति—இதற்குமேல் ஒன்றுமில்லையென்று
निश्चिताः–உறுதியுடையராகின்றனர்.

தேஹாத்மவாதியானவர் தம் உடல் உள்ளவரைக்கு வேண்டுமதையாராய்ந்து அதோடு நின்றால் ஒருவாறு பொருந்தும். அஃதில்லையே.

பிரமனின் ஆயுள்முடிவுக்கான காலம் வரையில் மேல் நடப்பதற்கு ஏற்பாடுகள் செய்து, வரும் காலநிலை எப்போது எவ்வாறென்பதை யுணராமல் பலவகையான செலவுகள் செய்து எல்லாம் அழிக்கிறார்கள். எதுவும் இவ்வுலகில் யதேச்ச போகத்திற்கே யென்ற கொள்கையைத் திடமாகக் கொள்கின்றனர். (11)

**आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः ।**
**ईहन्ते कामभोगार्थमन्यायेनार्थसञ्चयान् ॥ १२ ॥**

*ஆசாபாசசதைர்பத்தா: காமக்ரோதபராயணா: |*
*ஈஹந்தே காமபோகார்த்தம் அந்யாயேநார்த்தஸஞ்சயாந் || 12 ||*

आशापाशशतैः—நூற்றுக்கணக்கான ஆசைகளாம் கயிறுகளால்
बद्धाः—கட்டப்பட்டவர்களாய்
कामक्रोध—காமத்தையும் கோபத்தையும்
परायणाः—பெரிய உபாயமாகக் கொண்டு
कामभोगार्थम्—காதல் மூலமான இன்பங்களுக்காக
अन्यायेन—தவறான வழிகளால்
अर्थसंचयान्—பலவிதமாகப் பணம் சேகரிப்பதை
ईहन्ते-குறித்து வியாபரிக்கின்றனர்.

இவர்கள் அஜ்ஞான விமோஹிதரென்று மூன்று ச்லோகங்களால் விளக்குகிறார்—

**इदमद्य मया लब्धमिमं प्राप्स्ये मनोरथम् ।**
**इदमस्तीदमपि मे भविष्यति पुनर्धनम्॥ १३ ॥**

*இதமத்ய மயா லப்த்தம் இமம் ப்ராப்ஸ்யே மநோரதம் |*
*இதமஸ்தி இதமபி மே பவிஷ்யதி புநர்த்தநம் || 13 ||*

अद्य इदम्—இப்போது இது
मया लब्धम्—என்னால் ஸாமர்த்தியமாகப் பெறப்பெற்றது
इमं मनोरथम्-இந்த விருப்பத்தையும்
प्राप्स्ये—எனது திறத்தால் பெறப் போகிறேன்.
(எவ்வாறெனில்)
इदम्—நான் பெற்ற பணம்
अस्ति—எனது ஸாமர்த்தியத்தினால் இருக்கின்றது.
इदम् धनम् अपि-மற்றும் இப்பணமும்
पुनः—இதன் மேல்
मे भविष्यति—எனக்கேயாகப் போகிறது.

**असौ मया हतः शत्रुर्हनिष्ये चापरानपि ।**

*அஸௌ மயா ஹத: சத்ருர்ஹநிஷ்யே சாபராநபி |*

असौ शत्रुः—அந்தப் பகைவன்
मया हतः—என்னால் வதைக்கப்பட்டான்.
अपरान् अपि च-மற்ற மாற்றார்களையும் கூட
हनिष्ये—வதைக்கப் போகிறேன்.

ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान् सुखी ॥ १४ ॥
ஈச்வரோऽஹம் அஹம் போகீ ஸித்தோऽஹம் பலவாந் ஸுகீ || 14 ||

ईश्वरः अहम्—ஆகையால் நான் ஸ்வதந்த்ரன் எல்லாம், ஆள்பவன்
अहं भोगी—நான் போகத்திற்காக எல்லாம் உடையனாகிறேன்.
अहं सिद्धः—என் வலத்தால் நானே எல்லாம் பெற்றேன்.
बलवान्—நானே பெலன் உள்ளவன்
सुखी—ஸுகிப்பவனும் நானே.

आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया ।
यक्ष्ये दास्यामि मोदिष्ये इत्यज्ञानविमोहिताः ॥ १५ ॥
ஆட்யோऽபிஜநவாந் அஸ்மி கோऽந்யோऽஸ்தி ஸத்ருசோ மயா |
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்யே இத்யஜ்ஞாநவிமோஹிதா: || 15 ||

आढ्यः—நானாகவே தனிகனும்
अभिजनवान् अस्मि—நல்ல குலம் உற்றவனுமாகிறேன்.
मया सदृशः—எனக்கு ஒப்பாக
अन्यः कः अस्ति—மற்ற யார் உண்டு.
यक्ष्ये—யாகமும் செய்வேன்
दास्यामि—தானமும் செய்வேன்
मोदिष्ये—இன்பங்களும் அனுபவிப்பேன்
इति—என்றவாறெல்லாம்
अज्ञानविमोहिताः—அறிவின்மையால் விசேஷ மோகம் கொண்டிருப்பர்.

अनेकचित्तविभ्रान्ताः मोहजालसमावृताः ।
प्रसक्ताः कामभोगेषु पतन्ति नरकेऽशुचौ ॥ १६ ॥
அநேகசித்தவிப்ராந்தா: மோஹஜாலஸமாவ்ருதா: |
ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகேऽசுசௌ || 16 ||

अनेक चित्तविभ्रान्ताः—கீழ்க்கூறியவாறு மனப்போக்கு உடையராய்
मोह जालसमावृताः—விபரீத மோஹ வலைகளில் சிக்குண்டு
कामभोगेषु—யதேச்ச போகங்களிலே
प्रसक्ताः—பலமாக இழிந்து
अशुचौ—கேடான
नरके—நரகத்தில்
पतन्ति—வீழ்கின்றனர்.

आत्मसंभाविताः स्तब्धाः धनमानमदान्विताः ।
यजन्ते नामयज्ञैस्ते दम्भेनाविधिपूर्वकम् ॥ १७ ॥
ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்த்தா: தநமாநமதாந்விதா: |
யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே தம்பேநாவிதிபூர்வகம் || 17 ||

आत्मसंभाविताः—தம்மாலே தாமே புகழ்ப் பெற்றவராய்
स्तब्धाः—நிறைந்தவரென்ற நோக் கால் வணக்கம் முதலான வியாபாரமற்றவராய்
धनमानमदान्विताः—தனத்தினுலும் வித் யாகுலாபிமானத்தினுலு மான கொழுப்பேறி
ते—அவர்கள்
दम्भेन—தார்மிகரென்று சொல்லிக் கொண்டு
अविधिपूर्वकम्—சாஸ்த்ர முறையை முன்னிடாமல்
नामयज्ञैः—பேருக்குமட்டுமான வீணை யாகங்களால்
यजन्ते—யாகம் செய்பவராகின்றனர்.

**अहङ्कारं बलं दर्पं कामं क्रोधञ्च संश्रिताः ।**
**मामात्मपरदेहेषु प्रद्विषन्तोऽभ्यसूयकाः ॥ १८ ॥**

*அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதஞ்ச ஸம்ச்ரிதா: |*
*மாம் ஆத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்தோऽப்யஸூயகா: || 18 ||*

अहंकारं—நானே எவ்விதத்திலும் மேலேயென்ற நோக்கும்
बलम्—தம் தேஹபலத்தையும்
दर्पम्—அதனுலான கொழுப்பையும்
कामं—தம் இஷ்டத்தையும்
क्रोधम्—அது தவறினுல் கோபத்தையும்
संश्रिताः—ப்ரதானமாகப் பெற்று
आत्मपरदेहेषु—தம்முடையவும் பிறருடையவும் தேஹங்களில் இருக்கும்
माम्—ஸர்வேச்வரனை என்னை
प्रद्विषन्तः—த்வேஷிக்கின்றுராய்
अभ्यसूयकाः—இருப்பதாக ஏற்பட்டால் உடனே பொருமை மிக்கருமாகின்றனர்.

**तान् अहं द्विषतः क्रूरान् संसारेषु नराधमान् ।**
**क्षिपाम्यजस्रमशुभान् आसुरीष्वेव योनिषु ॥ १९ ॥**

*தாந் அஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் |*
*க்ஷிபாம்யஜஸ்ரமசுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு || 19 ||*

क्रूरान्—மிகக் கொடியரும்
अशुभान्—கேடு விளைவிப்பவரும்
नराधमान्—நீசமனிசர்களுமான
तान् द्विषतः—அந்த விரோதிகளை
संसारेषु—ஸம்ஸாரங்களிலிருக்கும்
आसुरीषु योनिषु एव—அசுர குலங்களிலேயே
अजस्रम्—எப்போதும்
क्षिपामि—தள்ளுகிறேன்.

ஆஸுரஸ்வபாவத்தை அறிவித்தார், இதற்குக் காரணத்தையும் கூறி அதனை விட வேண்டுமென்கிறுர்—

**आसुरीं योनिमापन्ना मूढा जन्मनि जन्मनि ।**
**मामप्राप्यैव कौन्तेय ततो यान्त्यधमां गतिम् ॥ २० ॥**

ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி |
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் || 20 ||

कौन्तेय—குந்தியின் புத்ரனே !
आसुरीम्—அஸுரரைச் சார்ந்த
योनिम् आपन्नाः-குலத்தையடைந்தவர்
जन्मनि जन्मनि—பிறவிதோறும்
मूढाः—என் விஷயத்திலே விபரீத புத்தியுடையராய்
माम् अप्राप्य एव—என்னையடையாமலே
ततः—பெற்றிருக்கும் பிறவியினும்
अधमां—நீசமான
गतिं—துர்கதியை
यान्ति—அடைகின்றனர்.

त्रिविधं नरकस्यैतत् द्वारं नाशनमात्मनः ।
कामः क्रोधस्तथा लोभस्तस्मादेतत्त्रयं त्यजेत् ॥ २१ ॥

த்ரிவிதம் நரகஸ்யைதத் த்வாரம் நாசநமாத்மந: |
காம: க்ரோதஸ்ததா லோப: தஸ்மாதேதத்த்ரயம் த்யஜேத் || 21 ||

कामः क्रोधः—காமமும் கோபமும்
तथा लोभः—செலவு செய்ய மனம் வராமையுமாகிற
त्रिविधं एतत्—மூன்று விதமான இது
नरकस्य—கூறிய அஸுர ஸ்வபாவ மாம் நரகத்திற்கு
द्वारं—காரணமாய்
आत्मनः—ஆத்ம ஸ்வரூபத்தின்
नाशनम्—அழிவைச் செய்யும்.
तस्मात्—ஆகையினால்
एतत्त्रयम्—இம் மூன்றையும்
त्यजेत्—விட்டொழிக்க வேண்டும்.

एतैर्विमुक्तः कौन्तेय तमोद्वारैस्त्रिभिर्नरः ।
आचरत्यात्मनः श्रेयस्ततो याति परां गतिम् ॥ २२ ॥

ஏதைர்விமுக்த: கௌந்தேய தமோத்வாரைஸ்த்ரிபிர்நர: |
ஆசரத்யாத்மந: ச்ரேய: ததோ யாதி பராம் கதிம் || 22 ||

कौन्तेय—குந்தியின் புத்ரனே !
तमोद्वारैः—அஜ்ஞான விபரீத ஜ்ஞானங்களுக்குக் காரணமான
एतैः त्रिभिः—காமக்ரோத லோபங்களாம் இம் மூன்றால்
विमुक्तः नरः—விடப்பட்ட மனிதன்.
आत्मनः—தனக்கு (ஆத்மாவிற்கு)
श्रेयः आचरति—நன்மையைச் செய்கிறான்.
ततः—அதன் மூலம்
परां गतिम्—பரகதியான என்னை
याति—பெறுகிறான்.

காமக்ரோதலோபங்கள் அஸுரஸ்வபாவத்திற்குக் காரணமென்றார். முக்கியமான காரணம் சாஸ்த்ரத்தை மீறி நடப்பதே யென்கிறார்—

यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः ।
न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥ २३ ॥

*ய: சாஸ்த்ரவிதிம் உத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத: |*
*ந ஸ ஸித்திம் அவாப்நோதி ந ஸுகம் ந பராம் கதிம் || 23 ||*

शास्त्रविधिम्-வேதமாம் ஆஜ்ஞையை
उत्सृज्य—மீறி
कामकारत:—தன் இஷ்டப்படி செய்வதால்
य: वर्तते—எவன் இருப்புப் பெறுகிருனே,
स:—அந்த ஸ்வதந்த்ரன்
सिद्धिम्—மறுமைப் பலனை
न अवाप्नोति—அடையான்.
न सुखम्-இங்கும் ஸுகம் பெருன்.
न परां गतिम्—மோக்ஷ பலனையும் பெருன்.

**तस्मात् शास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ ।**
**ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥ २४ ॥**

*தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்த்திதௌ |*
*ஜ்ஞாத்வா சாஸ்த்ரவிதாநோக்தம் கர்ம கர்த்துமிஹார்ஹஸி || 24 ||*

तस्मात्—ஆகையினல்
कार्याकार्य व्यवस्थितौ-ஏற்றுக் கொள்ளத் தக்கது தகாதது என்பவற்றின் நிபந்தனை விஷயத்தில்
शास्त्रं—சாஸ்த்ரமே
ते प्रमाणम्—ஸம்ஸாரியான உனக்கு ப்ரமாணமாகும்.
इह-இவ் இருள் தருமா ஞாலத்தில்
शास्त्रविधान उक्त—சாஸ்த்ரமாம் ஆஜ்ஞையினல் அறிவிக்கப் பெற்ற
कर्म—செயலையே
कर्तुम् अर्हसि—செய்யத் தகுதியுறுகிருய்.

இவ்வாறு தேவாசுரவிபாகம் செய்து அசுரரின் கேட்டைக் கூறி சாஸ்த்ரத்திற்கு வசப்பட வேண்டுமென்ருர்.

பதினுரும் அத்தியாயம் முற்றும்.

—:*-*-*:—

## பதினேழாம் அத்தியாயம்

தெய்வப்பிறப்பு அசுரப்பிறப்பு என்ற இருவகைகளைக் கூறி, சாஸ்த்ரத்தை மீறலே அசுரஸ்வபாவத்திற்கு முக்யமான காரணமென்றும் அறிவித்து, சாஸ்த்ரத்திற்கு உட்பட்டு நடக்க வேண்டுமென்ருர் கீழ். அதன் மேல் அர்ஜுனன் வினவுகிருன்—

अर्जुन उवाच—அர்ஜுனன் கேட்பதாவது—

**ये शास्त्रविधिमुत्सृज्य यजन्ते श्रद्धयाऽन्विताः ।**
**तेषां निष्ठा तु का कृष्ण सत्त्वमाहो रजस्तमः ॥ १ ॥**

*யே சாஸ்த்ரவிதிம் உத்ஸ்ருஜ்ய யஜந்தே ச்ரத்தயாऽந்விதா: |*
*தேஷாம் நிஷ்ட்டா து கா க்ருஷ்ண ஸத்துவம் ஆஹோ ரஜஸ்தம: || 1*

कृष्ण—கண்ணபிரானே!
ये—எவர்கள்
शास्त्रविधिं—சாஸ்த்ரம் விதித்த வழியை
उत्सृज्य—விட்டும்
श्रद्धया अन्विताः—நம்பிக்கையுடையராய்
यजन्ते—யாகாதிகளைச் செய்கின்றனரோ!
तेषाम्—அவர்களுடைய
निष्ठा—நிலையானது
का—எத்தகையதாகும்
सत्त्वम्—நிலையிடம் ஸத்துவகுணமா
रजः—ரஜோகுணமா
आहो तमः—அல்லது தமோகுணமா?

தகும் தகாதென்பதை சாஸ்த்ரம் கொண்டறிய வேண்டுமென்றதை அறிந்தேன். சாஸ்த்ர விதியை விட்டே சிலர் யாகம் தவம் முதலியன செய்கின்றார்கள். காமக்ரோத மூலமாகச் செய்வதாகில் அது தவறென்னலாம். வேதபாஹ்யரேயாயினும் அல்லாதவராயினும் செய்வதை ச்ரத்தையோடு செய்வார்களாகில் ச்ரத்தைக்குப் பலன் இருந்தே தீருமே. அதனால் கேட்கிறேன், அன்னாரின் நிலைக்கு இடமானது ஸத்துவகுணமா, ரஜோகுணமா, தமோகுணமா? சாஸ்த்ர மூலமான ஞானமன்றாகையாலே தத்துவ ஜ்ஞானமாகாதென்றால், ஸத்துவம் ஆதாரமாகாது. காமக்ரோதங்களில்லை யாகையாலே தமோத்வாரத்தைக் காணோம். எந்த குணத்தினலான ச்ரத்தை இது, எவ்வாறு பலன் என்பதை யறிய விரும்புகிறேன். சாஸ்த்ர மூலமாகச் செய்வதில் சிறந்த பலன் இருக்கட்டும். 'न स सिद्धिमवाप्नोति' என்பது அத்தகைய சிறந்த பலன் இல்லாமையைக் கொண்டு என்னலாமே. ஆகையால் வேத பாஹ்யர் செய்யும் செயல்களையோ, வேதத்திற்கு உண்மையான பொருள் அறியாமல் விபரீதமாகக் கொண்டு சிலர் செய்த உபதேசத்தை நம்பியோ, தாமே ஒருவிதமாக வேறு பொருள் தர்க்கமூலமாக ஆராய்ந்தோ, பல ஸாதுக்கள் செய்திருக்கிறார்கள் என்பதை மட்டும் கொண்டோ வேதவாஸ்தவார்த்தத்திற்கு மாறாகச் சிலர் தர்மங்களென்று ச்ரத்தையுடன் செய்வார்களாகில் அவசியம் சற்றுக் குறைவாகவாகிலும் பலன் இருந்தே தீரும். தேவதைகளை யறியாமலும் செய்யும் தர்மங்களுக்கெல்லாம் தகுமாறு பலன்களை இசைந்திருக்கிறோமே, அது போலாகலாமென்றவாறு.

श्रीभगवानुवाच— பகவான் சொன்னார்—

त्रिविधा भवति श्रद्धा देहिनां सा स्वभावजा ।
सात्त्विकी राजसी चैव तामसी चेति तां शृणु ॥ २ ॥

த்ரிவிதா பவதி ச்ரத்தா தேஹிநாம் ஸா ஸ்வபாவஜா |
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ச்ருணு || 2 ||

श्रद्धा—ச்ரத்தையானது
सात्त्विकी—ஸாத்துவிகமும்
राजसी च—ராஜஸமும்
तामसी च—தாமஸமும்
इति एव—என்றே
त्रिविधा भवति—மூன்று விதமாகிறது
सा—அந்த ச்ரத்தையானது
देहिनां—தேஹ ஸம்பந்தமென்ற பிறவியுள்ளவர்களுக்கு
स्वभावजा—உடன் பிறந்த-பூர்வ கர்ம வாஸநாமூலமான ருசியிலுலாவதாம்.
तां शृणु—அதனைக் கேள்.

सत्त्वानुरूपा सर्वस्य श्रद्धा भवति भारत ।
श्रद्धामयोऽयं पुरुषो यो यच्छ्रद्धः स एव सः ॥ ३ ॥

ஸத்வாநுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி பாரத ।
ச்ரத்தாமயோऽயம் புருஷ: யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ: ॥ 3 ॥

भारत—பரத வம்சப் புதல்வனே!
सर्वस्य—எல்லோருக்கும்
श्रद्धा-ச்ரத்தையானது
सत्त्वानुरूपा भवति—மனத்தின் நிலைக்குத் தக்க வாறாகும்.
पुरुषः—ஒவ்வொருவனும்
श्रद्धामयः—ச்ரத்தைக்குத் தக்கவாறு மாறுகிறான்.
यः यच्छ्रद्धः—எவன் எவ்வித பலனை யனுபவிக்கும் தன்மையில் ச்ரத்தையுடையனோ,
सः स एव—அவன் அத்தன்மையனே யாகிறான்.

ச்ரத்தையாவது நம்பிக்கையுடன் செய்ய விரைதல். அது மனத்தி விருப்பதாகையாலே ஸத்வ என்று மனத்தைக் குறித்தார். தேஹேந்த்ரியங்களெல்லாம் கூடக் கொள்ள வேண்டியவை. அவற்றிலுள்ள ஸத்துவரஜஸ்தமோகுணங்களுக்கிடாக மனது நம்பிக்கையை யுண்டாக்கும். செயலின்றி பலன் பெறுன். செயல் நம்பிச் செய்தால் தான் உண்டு. ஆகையால் ச்ரத்தையிலுல் பலவித பலனை யனுபவிக்கும் உருக்களை யடைகிருனுகையாலே ஒவ்வொருவனும் ச்ரத்தாமயனுகிறுன். எவனுக்கு எதில் ச்ரத்தையோ, அதாவது எப்பலனையனுபவிக்கும் எவ்வுருவு உடையனுகையில் ச்ரத்தையுள்ளவனுகிறுனே, அப்பலனை யனுபவிக்கவாம் அவ்வுருவுடையனுகிறுன். உருவாவது அதற்கு வேண்டிய ஸாமக்ரியாகும். உபநிஷத்தில் மேலுலகம் செல்பவனின் ஸூக்ஷ்ம சரீரத்தை ச்ரத்தை யென்றது. ஆக ச்ரதத்தையில் ஸாத்விகராஜஸ தாமஸ பேதம் உண்டென்றதாயிற்று. (3)

இதனை விரித்துரைக்கிறுர்—

यजन्ते सात्त्विका देवान् यक्षरक्षांसि राजसाः ।
प्रेतान् भूतगणांश्चान्ये यजन्ते तामसा जनाः ॥ ४ ॥

யஜந்தே ஸாத்விகா தேவாந் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: ।
ப்ரேதாந் பூதகணும்ச்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா: ॥ 4 ॥

सात्त्विका: जना:—ஸத்வ குணமுடைய அமைப்பு உள்ளவர்
देवान् यजन्ते—தேவதைகளை ஆராதிப்பர்.
राजसा: जना:—ரஜோகுணவமைப்புள்ளவர்
यक्षरक्षांसि—யக்ஷர்களையும் அரக்கர்களையும் (ஆராதிப்பர்)
अन्ये तामसा: जना:—மற்றும் தாமஸ ப்ரக்ருதிகள்
प्रेतान्—ப்ரேதங்களையும்
भूतगणान् च—பூதகணங்களையும்
यजन्ते—ஆராதிப்பர்.

மேலுலகில் தேவர்கள் போல் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் ப்ரேதகணம் பூதகணம் என்றவாறு பல பிராணிகளின் பிரிவுகள் வேத புராண தர்ம சாஸ்த்ர ப்ரஸித்தமாயுள. அவற்றைக் குறித்துப் பல்வகையான பூஜாவிதிகளும் வகுக்கப்பட்டுள. அவற்றை ஓதித் தாங்களே அறிந்தோ அறிந்தவர்மூலம் கேட்டோ ஜனங்கள் பூஜையில் இழிகின்றனர். ஸாத்விகராயிருப்பார்க்கு தேவ பூஜையில் நோக்கு உண்டாகும். ராஜஸர்க்கு யக்ஷாதி விஷயத்தில், தாமஸருக்கு மற்றவற்றில். அவரவரின் ஸ்வபாவத்தை மாற்றுவதென்பது எளிதிலாகாது. பழக்க வழக்கம் வலித்திருக்கும். ஒவ்வொரு வகுப்பிலும் குணத்தின் ஏற்றக் குறைவுக்கேற்ப உட்பிரிவுமுண்டு. இவையெல்லாம் சாஸ்த்ரத்திற் சொன்ன வழிகளே. (4)

சாஸ்த்ரத்தை விட்டு ச்ரத்தையுடன் செய்கின்றாரின் நிலை எது, ஸத்துவமா ரஜஸ்ஸா தமஸ்ஸா என்று கேட்ட அர்ஜுனனுக்கு மூன்று வித ச்ரத்தை யுண்டென்றும் ஆனால் அவை சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டு சாஸ்த்ரம் இசைந்த தேவயக்ஷபூதாதிகளைக் குறித்த செயல்கள் விஷயமென்றும் தெரிவித்தார். இதனால் அவன் கேட்ட ச்ரத்தைக்குச் சிறிதும் பலன் இல்லையென்று தெரியவரும். அவரவர்கள் வேண்டும் பலன்கள் சிறியனவோ பெரியனவோ சாஸ்த்ரம் காட்டிய வழிகளில் பெறப்படுமென்றாரே. இதனை ஊர்ஜிதப்படுத்தி ஆஸுர கார்யங்கள் வீணாவதோடு வருத்தத்திற்கும் காரணமாமென்கிறார்—

अशास्त्रविहितं घोरं तप्यन्ते ये तपो जना: ।
दम्भाहङ्कारसंयुक्ता: कामरागबलान्विता: ॥ ५ ॥
कर्शयन्त: शरीरस्थं भूतग्राममचेतस: ।
मां चैवान्तश्शरीरस्थं तान् विद्ध्यासुरनिश्चयान् ॥ ६ ॥

அசாஸ்த்ரவிஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ ஜநா: |
தம்பாஹங்காரஸம்யுக்தா: காமராகபலாந்விதா: || 5 ||
கர்சயந்த: சரீரஸ்த்தம் பூதக்ராமம் அசேதஸ: |
மாஞ்சைவாந்தச்சரீரஸ்த்தம் தாந் வித்த்யாஸுரநிச்சயாந் || 6 ||

ये जनाः-எந்த பிறந்து கெட்டவர்கள்
अशास्त्र विहितं-வேதத்தில் விதிக்கப் படாத
घोरं तपः-பயங்கரமான தவத்தை
दम्भ-தம்மை தார்மிகராகத் தெரி விக்கும் நோக்குடனும்
अहंकार संयुक्ताः-கர்வத்துடனும் கூடி
कामराग-அவரவர்க்கு இஷ்டமான பலனில் பற்றுடன்
बल अन्विताः-சக்தியும் உடையராய்
शरीरस्थं-உடலில் அடங்கிய
भूतग्रामं-பஞ்சபூதங்களின் திரளை
कर्शयन्तः-இளைக்கச் செய்கிறவராய்
अन्तः शरीरस्थं-உடலுள் ஹ்ருதயத்தி லிருக்கும்
मां च एव-எனது அம்சமான ஜீவனை யும்
कर्शयन्तः-கஷ்டப்படுத்துகின்றாராய்
अचेतसः-விவேகமின்றி
तप्यन्ते-செய்கின்றனரோ,
तान्-அவர்களை
आसुरनिश्चयान्-முன் சொன்ன ஆஸுரமான மனத் திடம் உடையராக
विद्धि-அறிவாயாக.

சாஸ்த்ர விதியை விட்டுத் தம் இஷ்டப்படி செய்கிறவர்களுக்குப் பலன் இல்லையென்று கீழே தேறிற்று. ஆனால் அவர்களின் ப்ரசார வலையில் சிக்கு உண்டோ, சிக்குண்டாரின் துர்போதனையினாலோ, அங்குப் பலன் இருப்பதாக ப்ரமித்துப் பின்னுள்ளார் சிலர் செய்கிறவர்களுக்கு ச்ரத்தை யிருப்பதானாலும் பலன் எவ்வாறு கிடைக்கும். வஞ்சனையாகச் சொல்பவனின் சொல்லைக் கேட்டு நம்பினாலும், நம்பினவன் சொல்லைக் கேட்டு நம்பினாலும் பலனில்லை. பித்தளையைக் கொள்பவனின் ப்ராந்திக்காகப் பித்தளை பொன்னாயிடுமா? உண்மையாக எல்லாம் அறிவிக்கும் சாஸ்த்ரங்கள் சித்தமாயிருக்க, உபதேசிப்பவரும் இருக்க ஈச்வரனும் அறிவு பெறவான மனிதவுருவையளித்திருக்க, நல்வழியை யாராயாமல் பிடிவாதமாகப் பொல்லாத வழிகளில் இழிவாருக்கு, நம்பினாரே என்பதற்காக நன்மை செய்யவாகுமோ. ஆகையால் அவர்களின் ச்ரத்தை பலன் அளிக்கும் ச்ரத்தையாகாது. ச்ரத்தையாவது இது ப்ரமாணத்திற்கு இணங்கியதென்ற எண்ணத்துடன் செயலில் விரைதல். அந்த எண்ணம் தவறாயிருந்தால்கூடப் பலன் வேண்டுமென்னலாகுமோ? அவர்கள் தவம் புரிந்தாலும் யாகாதிகளைச் செய்தாலும் டம்பாஹங்காரத்துடன் செய்வதற்கு ஈடாகத்தான் முடியும். (ஜீவனை என்று சொல்லாமல் माम् என்றதால் பகவான் அவர்களிடமும் தனக்கு உள்ள அபிமானத்தைக் காட்டுகிறார். समोऽहं सर्वभूतेषु என்றவராயிற்றே. பகவானுக்கு துக்கமென்பதை யாரும் உண்டாகக முடியாது. இவ்வாறு அவர்கள் செய்வதிலும் பகவானுக்கு லீலாரஸமே; துக்கமில்லை. அதனால் தாங்கள் கெடுகிறார்களென்பதையே माम् என்றதால் அறிவிக்கிறாரென்க. இல்லையேல், அந்தச்சரீரஸ்த்தம் என்பதும் வீணாம். (5–6)

சாஸ்த்ரம் விதித்த செயல்கள் விஷயத்திலேயே ஸாத்விகம் முதலான ச்ரத்தைகளைச் சொன்னார். செய்கின்றவர்களில் ஸாத்விகாதியான பிரிவுபோலே பூஜிக்கப்படுகிறவர்களிலும் ஸாத்விகாதிவிபாகம் தன்

கடையே ஸித்திக்கும். தேவர்களிலும் ஸத்வகுணத்தின் ஏற்றக்குறைவுக்கு ஈடாக ஸாத்விகம் ஸாத்விகதரம் ஸாத்விகதமம் என்றவாறன பிரிவுகளும் உண்டு. இவ்வாறே ராஜஸதாமஸ தர்மங்களிலும். இனி தர்மாதிகளில் மற்றொரு விதமான ஸாத்விகாதி பேதம் குறிக்கப் போகிறார். ஸாத்விகதமர்கள் ஸாத்விக ச்ரேஷ்டமான தேவதையைக் குறித்து ஸாத்விகதமமாய் செய்யக்கூடியதையே ஸாத்விகமென்பர். அத்துடன் லௌகிகமான ஆஹாரத்திலேயும் ஸாத்விகாதி பிரிவுகள் உண்டென்கிறார். இதனால் ஸாத்விகதமமான செயலில் இழிவது ஸாத்விகதமமான ஆஹாரத்தை உட்கொள்வதாலாகுமென்றும், சாஸ்த்ரீய ச்ரத்தையை விட்டு ஆஸுரச்ரத்தையைக் கொள்வதற்குக் காரணம் தவறான எண்ணத்தினால், அது உண்டாவது காமக்ரோதாதிகளால், அவற்றிற்குக் காரணம் துராஹாரம். புனிதமான ஆஹாரமே கொள்பவருக்கு ஸாத்விகதமத்திலேயே நோக்கு உண்டாகும் என்றும் அறிவித்ததாம்—

आहारस्त्वपि सर्वस्य त्रिविधः संप्रकीर्तितः ।
यज्ञस्तपस्तथा दानं तेषां भेदमिमं शृणु ॥ ७ ॥

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித: |
யஜ்ஞஸ் தபஸ் ததா தாநம் தேஷாம் பேதம் இமம் ச்ருணு || 7 ||

सर्वस्य—எல்லோருக்கும் அவரவர் குணத்திற்கு ஏற்ப
प्रियः—இஷ்டமான
आहारः तु अपि—லௌகிகமான ஆஹாரம் கூட
त्रिविधः भवति—மூன்று விதமாகும்.
तथा—அவ்வாறே
यज्ञः तपः—யாகம் தவம்
दानम्—கொடை என்பவையும்
त्रिविधम्—மூன்றுவிதமாம்.
तेषां—அவற்றிலுள்ள
इमं भेदं—இந்த வித்யாஸத்தையும்
शृणु—காது கொடுத்துக் கேட்பாயாக.

ஆஹாரத்தில் ஸாத்விகமானவைகளைக் குறிக்கிறார்—

आयुस्सत्त्वबलारोग्यसुखप्रीतिविवर्धनाः ।
रस्याः स्निग्धाः स्थिरा हृद्याः आहाराः सात्त्विकप्रियाः ॥ ८ ॥

ஆயுஸ்ஸத்வ பலாரோக்ய ஸுகப்ரீதி விவர்த்தநா: |
ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்த்திரா: ஹ்ருத்யா: ஆஹாரா: ஸாத்விக ப்ரியா: ||

सात्त्विक प्रियाः—ஸத்வகுணமுள்ளவருக்கு ப்ரியமான
आहाराः—ஆஹாரங்களானவை
आयुः—ஆயுளையும்
सत्त्व—தெளிவான அறிவையும்
बल आरोग्य—பலத்தையும் ஆரோக்யத்தையும்
सुख—சுகத்தையும்
प्रीति—ஸந்தோஷகரமான செயல்களையும்
विवर्धनाः—வ்ருத்தி பண்ணுகின்றவை
रस्याः—தித்திப்பானவை
स्निग्धा—பசையுள்ளவை
स्थिराः—வெகு நாள் நிற்கும் தாதுக்களாக மாறுமவை
हृद्याः—மனத்துக்குப் பிடிப்பானவை.

कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिनः ।
आहारा राजसस्येष्टा दुःखशोकामयप्रदाः ॥ ९ ॥

கட்வம்ல லவணாத்யுஷ்ணதீக்ஷ்ணருக்ஷ விதாஹிந: |
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா: துக்க சோகாமயப்ரதா: || 9 ||

कटु–கைப்பாயும்
अम्ल–புளிப்பாயும்
लवण–மிக உப்பாயும்
अत्युष्ण–மிகச்சூடாயும்
तीक्ष्ण–மிகக்காரமாயும்
रूक्ष–ஸ்நேஹமற்றனவும் வாதம் விளைவிப்பனவும்
विदाहिनः–எரிப்பதாய் பித்தம் விளைப்பதுமானவையும்
दुःख–துக்கத்தையும்
शोक–வருத்தத்திற்குக் காரணமான செயலில் இழிவதையும்
आमय—நோய்களையும்
प्रदाः—கொடுக்குமவையுமான
आहाराः–ஆஹாரங்கள்
राजसस्य–ரஜோகுணமுள்ளவனுக்கு
इष्टाः–இஷ்டமானவை.

கீழே ஸுகப்ரீதி என்றவிடத்திற் போல் இங்கே துக்க சோக என்ற விடத்திலும் பொருள் கூறினது கொள்க. இல்லையேல் மீமிசையாம். (9)

यातयामं गतरसं पूति पर्युषितञ्च यत् ।
उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम् ॥ १० ॥

யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதஞ்ச யத் |
உச்சிஷ்டமபிசாமேத்யம் போஜநம் தாமஸப்ரியம் || 10 ||

यत् भोजनम्—எந்த ஆஹாரமானது
यातयामम्—சமையலாய் யாமத்திற்கு மேலானதோ–அதாவது உபயோகிக்கத் தகுமான காலம் கடந்ததாகிறதோ,
गतरसम्—சுவையிழந்ததோ
पूति—துர்நாற்றம் கொண்டதோ
पर्युषितं च–காலம் கடந்தவாறு வேறு ரஸம் உற்றதோ,
उच्छिष्टम् अपि—எச்சிலானதோ
अमेध्यम्–தெய்வத்திற்கு நிவேதனம் செய்யவாகாததோ
तामसप्रियम्–அதெல்லாம் தமோகுணமுள்ளவருக்கு இஷ்டமாகும்.

யாதயாமம். பொதுவாக அன்னம் முதலியன ஒரு ஜாமகாலம் உண்ணத்தகும். சில வஸ்துக்கள் நெய் முதலானவற்றில் பக்குவமானவை அதிக காலமானாலும் சாஸ்த்ரம் இசைந்தவையாம். உச்சிஷ்டமபி என்ற அபிசப்தத்தினால், சில எச்சில் உண்ணக் கூடியதானாலும் மற்றவை தகா என்று குறித்ததாம். உபநயனம் செய்து வேதம் ஓதுவித்தல், ச்ரௌதம் கற்பித்தல், வேதாந்தார்த்தோபதேசம் செய்தல் என்ற எல்லாம் ஒருவரிடத்தில் ஒரு சிடனுக்குக் கிடைக்குமாகில், அந்தச் சிறந்த ஆசார்யனின் எச்சிலை சிடன் உண்ணலாம். பர்த்தாவின் எச்சில் மனைவிக்கும், தகப்பனின் எச்சில் மகனுக்கும், மூத்தவனின் எச்சில்

இளைப்பவனுக்கும் உண்ணத்தக்கவை யென்றும் சாஸ்த்ரம் கூறும். உச்சிஷ்டம் என்ற சொல்லுக்கு எச்சில் என்ற பொருளை விட்டு, பிறருக்குப் பரிமாறியது போக மிகுதியாய் சமைத்த பாத்ரத்தில் உள்ள (எச்சிலாகாத) வஸ்து என்ற பொருள் கொள்வதாகில் மற்ற பாகவதர்களுண்ண சேஷத்தையும் பிறர் உட்கொள்ளலாம் தாமஸமாகாது— 'போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே' என்ற பாசுரத்திற்கும் கீழ்க் கூறியவாறு சாஸ்த்ரம் இசைந்த வழியில் பொருள் கொள்க. (10)

இனி யஜ்ஞத்திலே ஸாத்விகாதி பேதத்தைக் காட்டுகிறார்—யஜ்ஞம் தானம் தவம் எல்லாவற்றிலும் இந்த பேதம் ஏறக்குறைய ஒரே விதமாகத் தான் இருக்கும்—

अफलाकांक्षिभिर्यज्ञो विधिदृष्टो य इज्यते ।
यष्टव्यमेवेति मनः समाधाय स सात्त्विकः ॥ ११ ॥

அபலாகாங்க்ஷிபிர் யஜ்ஞோ விதித்ருஷ்டோ ய இஜ்யதே |
யஷ்டவ்யமேவேதி மந: ஸமாதாய ஸ ஸாத்விக: || 11 ||

विधिदृष्टः-சாஸ்த்ரம் விதித்தபடியான
यः यज्ञः—எந்த யாகமானது
अफलाकांक्षिभिः—பலன் ஒன்றையும் விரும்பாதவர்களால்
यष्टव्यम् एव इति—செய்வதே ப்ரயோஜனமென்று
मनः समाधाय—மனம் வைத்து பகவானின் ஆராதனமென்று
इज्यते—அனுஷ்டிக்கப்படுகிறதோ,
सः—அந்த யாகம்
सात्त्विकः—ஸாத்விகமாகும்.

अभिसंधाय तु फलं दम्भार्थमपि चैव यः ।
इज्यते भरतश्रेष्ठ तं यज्ञं विद्धि राजसम् ॥ १२ ॥

அபிஸந்தாய து பலம் டம்பார்த்தமபி சைவ ய: |
இஜ்யதே பரதச்ரேஷ்ட தம் யஜ்ஞம் வித்தி ராஜஸம் || 12 ||

भरतश्रेष्ठ—பரத வம்சத்தியரில் சிறந்தவனே!
यः—எந்த யஜ்ஞமானது
दम्भार्थम् अपि—டம்பத்திற்காகச் செய்யப்பட்டாலும்
फलं-சாஸ்ரத்தில் குறித்த பலனையும்
अभिसंधाय तु—விரும்பியே
इज्यते—அனுஷ்டிக்கப்படுகிறதோ
तं यज्ञं—அந்த யாகத்தை
राजसम्—ராஜஸமாக
विद्धि—அறிவாயாக.

எப் பலனுக்காக விதிக்கப்பட்டிருக்கிறதோ, அதற்கு அது காரணமாகுமென்றதில் நம்பிக்கையில்லாமல் வீணாக டம்பத்திற்காகச் சிலர் செய்வதுண்டு. அது தாமஸம். அப் பலனை விரும்பாமல் பகவானின் ஆராதனமாகச் செய்தால் ஸாத்விகம். பலனைக் கோரினால் ராஜஸமாம்.

विधिहीनमसृष्टान्नं मन्त्रहीनमदक्षिणम् ।
श्रद्धाविरहितं यज्ञं तामसं परिचक्षते ॥ १३ ॥

*விதிஹீநமஸ்ருஷ்டாந்நம் மந்த்ரஹீநமதக்ஷிணம் |*
*ச்ரத்தாவிரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே | 13 ||*

विधिहीनम्—பெரியோரின் அனுமதி போன்ற விதி யற்றதும்
असृष्टान्नम्—சாஸ்த்ரப்படி யாகாத த்ரவ்யத்தாலாவதும்
मन्त्रहीनम्—ஏற்பட்ட மந்திரங்களற்றதும்
अदक्षिणम्—தக்ஷிணையிடாததும்
श्रद्धाविरहितम्—ச்ரத்தையுடன் செய்யபடாததுமான
यज्ञं—யாகத்தை
तामसं—தாமஸமாக
परिचक्षते—சொல்லுகிறார்கள்.

சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட யாகத்தையே சாஸ்த்ரத்திற் சொன்ன பலனுக்காகவே ஒருவன் செய்வதானாலும் பெரியோருடைய அனுமதியைப் பெற்றே செய்யவேண்டும். தகாத இடத்தில் ப்ரதிக்ரஹம் செய்யாமல் சாஸ்த்ரம் இசைந்த முறையில் பெற்ற த்ரவ்யத்தைக் கொண்டு ஹவிஸ்ஸை முதலானவற்றை சேகரிக்க வேண்டும். அதற்கான மந்த்ரங்களைச் சொல்லிச் செய்ய வேண்டும். விதித்த தக்ஷிணையை ப்ரீதியுடன் அளிக்க வேண்டும். ச்ரத்தையுடன் செய்ய வேண்டும். அவ்வாறின்றி எந்த அம்சத்தில் குறைவானாலும் தாமஸமே. அதற்கு எவ்வாறு பலன் அளிப்பது என்பதைத் தக்கவாறு அளிப்பவனே அறிவான். டம்பத்திற்காகச் செய்பவரிடம் இந்த தோஷமெல்லாம இருக்கும். இது சாஸ்த்ரம் விதித்த யஜ்ஞத்தைப் பற்றியது—விதிக்கப்படாதது ஏதேனும் அவரவர் வேத பாஹ்யர்களைப் போல் கற்பனை செய்து செய்வார்களாகில் அது ஆஸுரம் அசாஸ்த்ரியம் இவ்வகுப்பினிற் கூட சேராது. (13)

यज्ञस्तपस्तथा दानम् என்று சொன்னவற்றில் யஜ்ஞம் மூன்று விதமானது போல் தவமும் மூன்றுவிதமென்று சொல்ல வேண்டும். அதற்கு முன் தவத்தை மனோவாக்காயங்களென்ற முக்கரணங்களைக் கொண்டு மூன்றாகப் பிரிக்க மூன்று ச்லோகங்கள். அதன் பிறகு ஸாத்விகாதிகளான பிரிவுகளைப் பொதுவாகப் பணிப்பர்—

देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम् ।
ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥ १४ ॥

*தேவ த்விஜகுருப்ராஜ்ஞபூஜநம் சௌசமார்ஜவம் |*
*ப்ரஹ்மசர்யம் அஹிம்ஸா ச சாரீரம் தப உச்யதே || 14 ||*

देव द्विज—தெய்வத்தையும் பூலோக தேவர்களையும்
गुरु प्राज्ञ—ஆசார்யரையும் மற்றும் ஜ்ஞானிகளையும்
पूजनं—பூசிப்பதும்
शौचं-தீர்த்தங்களில் ஸ்நானம் செய்வது போன்றதும்
आर्जवम्—மனமொத்துச் செய்வதும்
ब्रह्मचर्यम् காதலுடன் ஸ்த்ரீகளைக் காண்பது போன்றன செய்யாமையும்
अहिंसा च—பிறருக்கு வருத்தம் விளைவிப்பதைச் செய்யாமையும்
शारीरं तपः—உடலாலாம் தவமாக
उच्यते—சொல்லப்படும்.

अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितञ्च यत् ।
स्वाध्यायाभ्यसनञ्चैव वाङ्मयं तप उच्यते ॥ १५ ॥

*அநுத்வேககரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதஞ்ச யத் |*
*ஸ்வாத்யாயாப்யஸநம் சைவ வாங்மயம் தப உச்யதே || 15 ||*

अनुद्वेगकरं वाक्यम्-பிறரைப் புண்படுத்தாததும்
सत्यं-உண்மையானதும்
प्रियहितं च-இனியதும் நற்பயன் தருவதுமான
यत् वाक्यम्—சொல் யாதோ அதுவும்
स्वाध्याय-வேத வேதாங்கங்களின்
अभ्यसनम् च एव-படிப்புமே
वाङ्मयं-வாக்கென்ற கருவியினுலாம்
तपः उच्यते-தவமாகக் கூறப்படும்.

मनःप्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।
भावसंशुद्धिरित्येतत् तपो मानसमुच्यते ॥ १६ ॥

*மநப்ரஸாத: ஸௌம்யத்வம் மௌநம் ஆத்மவிநிக்ரஹ: |*
*பாவஸம்சுத்திரித்யேதத் தபோ மாநஸம் உச்யதே || 16 ||*

मनःप्रसादः-மனத்திற் கலக்கம் கோபமில்லாமையும்
सौम्यत्वं—பிறருடைய நன்மையில் நோக்கும்
मौनम्—வீண் பேச்சை யடக்குவதும்
आत्मविनिग्रहः-ஆத்ம பரமாத்ம விஷயத்திலே மனம் செலுத்தலும்
भावसंशुद्धिः—வேறு விஷயமான சிந்தையை விடுகையும்
मानसं तपः—மனத்தாலாம் தவமாக
उच्यते—கூறப்படும்.

*தவம் முக்கரணங்களாலாவதாகையால் மூவகை யென்றார். இனி அதில் ஸாத்விகாதி பிரிவுகளைப் பணிக்கிறார்—*

श्रद्धया परया तप्तं तपस्तत् त्रिविधं नरैः ।
अफलाकांक्षिभिर्युक्तैः सात्त्विकं परिचक्षते ॥ १७ ॥

*ச்ரத்தயா பரயா தப்தம் தபஸ்தத் த்ரிவிதம் நரை: |*
*அபலாகாங்க்ஷிபிர் யுக்தை: ஸாத்விகம் பரிசக்ஷதே || 17 ||*

तत् त्रिविधं—கூறிய முக்கரணங்களாலாவதாய்
अफलाकांक्षिभिः—பலனை விரும்பாத
युक्तैः—பகவானின் ஆராதனமென்ற எண்ணமுடைய
नरैः—மனிதர்களால்
परया श्रद्धया—மிக்க ச்ரத்தையுடன்
तप्तं तपः—செய்யப்படும் தவத்தை
सात्त्विकं—ஸாத்துவிகமான தவமாக
परिचक्षते—சொல்லுகின்றனர்.

सत्कारमानपूजार्थं तपो दम्भेन चैव यत् ।
क्रियते तदिह प्रोक्तं राजसं चलमध्रुवम् ॥ १८ ॥

ஸத்கார மாந பூஜார்த்தம் தபோ தம்ப்பேந சைவ யத் |
க்ரியதே ததிஹ ப்ரோக்தம் ராஜஸம் சலம் அத்ருவம் || 18 ||

यत् तपः—எந்தத் தவமானது (பிறர் செய்யும்)
सत्कार—மானஸமான மதிப்புக்காகவும்
मान—வாசிகமான புகழ்ச்சிக்காகவும்
पूजार्थम्—காயிகமான பூசைக்காகவும்
दम्भेन च एव—தற்புகழ்ச்சியுடனுமே
क्रियते—செய்யப்படுகிறதோ,
इह तत्—இம் மூன்றில் இத்தவமானது
चलम्—பலனை யனுபவிக்கும் போதும் அழியுமே யென்ற அச்சம் விளைவிப்பதாய்
अध्रुवम्—அழிவுறும் பலன் தருவதாய்
राजसं प्रोक्तम्—ராஜஸமெனப்படும்.

मूढग्राहेणाऽऽत्मनो यत् पीडया क्रियते तपः ।
परस्योत्सादनार्थं वा तत् तामसमुदाहृतम् ॥ १९ ॥

மூடக்ராஹேணாऽऽத்மநோ யத் பீடயா க்ரியதே தப: |
பரஸ்யோத்ஸாதநார்த்தம் வா தத் தாமஸமுதாஹ்ருதம் || 19 ||

मूढग्राहेण—மூடர்களுக்கு உரியதான பிடிவாதத்தால்
यत् तपः—எந்தத் தவமானது
आत्मनः पीडया—சக்தியை விஞ்சித் தனக்கே வாதையாகவும்
परस्य—பிறரை
उत्सादनार्थं वा—அழிப்பதற்காகவும்
क्रियते—செய்யப்படுகிறதோ,
तत् तामसम्—அது தாமஸமாக
उदाहृतम्—கூறப்படும்.

தனக்கு அதனால் உடல் முதலானவற்றில் கேடு உண்டாவதானாலும் அதைவிட மேலாக பிறர்கேட்டை நோக்கிச் செய்யும் தவம் தாமஸமாம். (19)

இனி தானம் (கொடை) மூன்றுவிதமாக மொழியப் பெறும்—

दातव्यमिति यत् दानं दीयतेऽनुपकारिणे ।
देशे काले च पात्रे च तत् दानं सात्त्विकं स्मृतम् ॥ २० ॥

தாதவ்யமிதி யத் தாநம் தீயதேऽநுபகாரிணே |
தேசே காலே ச பாத்ரே ச தத் தாநம் ஸாத்விகம் ஸ்ம்ருதம் || 20 ||

यत् दानम्—எந்தக் கொடையானது
दातव्यम् इति—கொடுக்க வேண்டு மென்ற நோக்கத்துடன்,
பலத்தில் விருப்பமின்றி
देशे काले च-இது தேசம் இது காலம் என்றும்
पात्रे च—இவர் பாத்ரமானவர் என்றும் நிமித்தம் அறிந்து
अनुपकारिणे-தனக்கு உபகாரம் செய்கின்றவனுக நினைக்கப் படாதவனுக்கு
दीयते—செய்யப்படுகிறதோ
तत् दानम्—அந்தக் கொடை
सात्त्विकं स्मृतम्—ஸாத்துவிகமாகக் கருதப் பெறும்.

यत् तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः ।
दीयते च परिक्लिष्टं तत् राजसमुदाहृतम् (दानं राजसं स्मृतम्) ॥ २१ ॥

யத்து ப்ரத்யுபகாரார்த்தம் பலமுத்திச்ய வா புந: |
தீயதே ச பரிக்லிஷ்டம் தத் தாநம் ராஜஸம் ஸ்ம்ருதம் || 21 ||

प्रत्युपकारार्थम्—கைம்மாறு எதிர் பார்த்தும்
फलम् उद्दिश्य—ஏதேனும் பலனைக் கோரியும்
परिक्लिष्टम्—கெட்டுப் போன த்ரவ்யாதிகளைக் கொண்டும்
यत् दीयते—என்ன தானம் செய்யப் படுமோ
तत्—அது
राजसं—ராஜஸமாக
उदाहृतम्—நினைக்கப்படும்.

अदेशकाले यत् दानम् अपात्रेभ्यश्च दीयते ।
असत्कृतम् अवज्ञातं तत् तामसमुदाहृतम् ॥ २२ ॥

அதேசகாலே யத்தாநம் அபாத்ரேப்யச்ச தீயதே |
அஸத்க்ருதம் அவஜ்ஞாதம் தத் தாமஸமுதாஹ்ருதம் || 22 ||

यत् दानम्—எந்தக் கொடையானது
अदेशकाले—தக்க தேசமும் காலமு மிராமலிருக்க
अपात्रेभ्यः-பாத்ரமாகாதவர்களுக்கு
असत्कृतम्-மர்யாதை புரஸ்காரமின்றி
अवज्ञातम्—அவமதிப்புடனும்
दीयते—செய்யப்படுமோ
तत् तामसम्—அது தாமஸமாக
उदाहृतम्—சொல்லப்படும்

லௌகிகமான ஆஹாரத்தைப் போலே சாஸ்த்ரம் விதித்த யஜ்ஞம் தவம் தானம் என்பவற்றையும் ஸாத்துவிக ராஜஸ தாமஸங்களாகப் பிரித்துத் தெளிவித்தார். இனி இந்த யஜ்ஞாதிகள் வைதிகங்களென்பதற்கு அறிகுறியாகச் சொல்ல வேண்டும சொற்களைக் காட்டுகிறார். வேதம் ஓதாத கார்யங்களில் வேதபாஹ்யர்கள் செய்யுமவற்றில் இவை சேரா—

ओं तत् सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः ।
ब्राह्मणास्तेन वेदाश्च यज्ञाश्च विहिताः पुरा ॥ २३ ॥

ஓம் தத் ஸதிதி நிர்தேசோ ப்ரஹ்மணஸ்த்ரிவித: ஸ்ம்ருத: |
ப்ராஹ்மணாஸ்தேந வேதாச்ச யஜ்ஞாச்ச விஹிதா: புரா || 23 ||

ओं तत् सत् इति—ஓமென்றும் தத் என்றும் ஸத் என்றும்
त्रिविधः—மூன்று விதமான
निर्देशः—சொல்லானது
ब्रह्मणः—வேதத்திற்கு ஸம்பந்தப் பட்டதாக
स्मृतः—கருதப் பெற்றது.
तेन—அம்மூன்றுவித சொல்லுடன் ஸம்பந்தம் பெறும்படி
ब्राह्मणाः—வேதம் ஓதுகின்றவர்களும்
वेदाः च—வேதங்களும்
यज्ञाः च—வைதிக க்ரியைகளும்
पुरा विहिताः—முன் (என்னால்) ஏற்படுத்தப் பெற்றன.

இம் மூன்று சொற்களும் வேதத்திற்கு ஸம்பந்தப்பட்டவை. இவற்றுடன் ஸம்பந்தம் வேதம் ஓதுகிறவர்களுக்கும் வேதங்களுக்கும் வைதிக க்ரியைகளுக்குமாம். இந்த ச்லோகத்தில் ब्रह्मणः स्मृतः என்பதற்கு பரப்ரஹ்மத்தைச் சொல்லக் கூடியவை என்ற பொருள் தோன்றும். உண்மையில் இச் சொற்களுக்கு பரப்ரஹ்மம் பொருள் என்பதும் ப்ரஸித்தமாகையால் அதே இங்குச் சொல்லப்படுகிறதென்னலாம். ஆனாலும் இச் சொற்கள் மூன்று என்பது எவ்வாறு தெரிந்த விஷயமோ, அது போல் பரப்ரஹ்மத்தைச் சொல்லக் கூடியவை என்பதும் தெரிந்த விஷயமாகையால் அதை பூர்வார்த்தத்தில் விதிப்பது வீணாகும். ப்ரஹ்மத்தை யறியாத கர்மிகளும் இச்சொல்லைச் சொல்வதுண்டு. மேலும் முன் ச்லோகம் வரையில் வைதிக கர்மாக்களின் ப்ரஸ்தாவமே யிருக்கிறது. மேல் ச்லோகத்திலும் यज्ञदानतपःक्रियाः என்று கர்மாக்களையே சொல்லப் போகிறார். ஆகையால் கர்மாக்களில் இச்சொற்களுக்கு ஸம்பந்தமிருப்பதாக இங்கே சொன்னால் இந்த ப்ரகரணத்துடன் சேரும். எல்லா கர்மாக்களோடு ஸம்பந்தமில்லை, வைதிக கர்மாவோடு மட்டுமென்பதற்காக ब्रह्मणः என்று வேதத்தைக் கூறினார். அனுஷ்டிக்கிற செயலுக்கும் சொல் என்ற குணத்திற்கும் எவ்வாறு ஸம்பந்தமென்னில், அனுஷ்டிக்கிறவர்கள் இச்சொற்களைச் சொல்லி யனுஷ்டிப்பதே ஒன்றோடொன்று ஸம்பந்தமாகும். இதனை யறிவிப்பதற்காக ब्राह्मणाः என்றும், அவைதிகத்திலே ஸம்பந்தமில்லை யென்பதற்காக वेदाश्च என்றும் கர்மாவோடு சேர்த்தும் உத்தரார்த்தம் பிறந்தது. இம்மூன்றில் ஓமென்பதற்கு கர்மா பொருளல்ல, அதைச் சொல்லியே கர்மாவைத் தொடங்குவது மட்டும். ஒவ்வொரு கர்மாவும் பகவானின் ப்ரீதி மூலமே பலன் அளிப்பதால் அதற்கு அறிகுறியாகவே கொள்ளலாம். இவ்விஷயம் அறியாதார்க்கும் இதனால் பலன் உண்டு. தத் ஸத் என்ற சொற்களுக்கு அந்தந்தக் கர்மாவே பொருளுமாகும். அதிலுள்ள வாசி மேலே அறிவிக்கப் பெறும். (23)

முதலில் ஓம் என்பதற்கு ஸம்பந்தத்தை விளக்குகிறார்—

**तस्मादोमित्युदाहृत्य यज्ञदानतपःक्रियाः ।**
**प्रवर्तन्ते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥ २४ ॥**

தஸ்மாத் ஓமித்யுதாஹ்ருத்ய யஜ்ஞதாநதப: க்ரியா: |
ப்ரவர்த்தந்தே விதாநோக்தா: ஸததம் ப்ரஹ்மவாதிநாம் || 24 ||

तस्मात्—இப்படி நான் விதித்திருப்பதால்
विधानोक्ताः—வேத விதிகளில் ஓதப்பெற்றனவான
ब्रह्मवादिनां—வேதம் ஓதுகின்றவர்களின்
यज्ञदानतपः क्रियाः—யஜ்ஞம் தானம் தவமென்பவை
सततम्—எப்போதும்
ओमिति—ஓமென்று
उदाहृत्य—முதலிற் சொன்ன பிறகு
प्रवर्तन्ते—நடைபெறுகின்றன.

யாகாதிகளை அனுஷ்ட்டிக்க ஆரம்பிக்கும் போது முதன்முதல் ஓமென்று சொல்லிப் பிறகே வைதிகர்கள் அவற்றைச் செய்வதாம். ஆக முன் சொல்லப்படுவதென்பதே இத்துடன் அவற்றிற்கு ஸம்பந்தமாகும். विधानोक्ताः என்பதாலே. வேத ஸம்பந்தமில்லாத யாகாதிகளுக்கு இது சேராதென்றதாம். ये शास्त्रविधिमुत्सृज्य यजन्ते श्रद्धयाऽन्विताः, तप्यन्ते ये तपो जनाः என்றவற்றிற்குச் சேராதென்றபடி. उदाहृत्य என்றதாலே அதைச் சொல்வது தான் கர்த்தர்களோடு அவற்றிற்கு ஸம்பந்தம் என்றதாயிற்று. (24)

பலனைக் கோராமல் செய்யும் வைதிக தர்மங்களுக்கு तत् என்பதோடு ஸம்பந்தமென்கிறார். அதனால் तत् என்பதற்கு அவை பொருளாகும். सत् என்பதற்கு மற்றும் சிலவற்றைப் பொருளாகக் கூறப்போகிறார்.

**तदित्यनभिसंधाय फलं यज्ञतपःक्रियाः ।**
**दानक्रियाश्च विविधाः क्रियन्ते मोक्षकांक्षिभिः ॥ २५ ॥**

ததித்யநபிஸந்தாய பலம் யஜ்ஞதப:க்ரியா: |
தாநக்ரியாச்ச விவிதா: க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி: || 25 ||

मोक्षकांक्षिभिः—மோக்ஷத்தை விரும்புகிறவர்களால்
फलम् अनभिसंधाय—வேறு பலனில் நோக்கின்றி
विविधाः—பலவிதமான
यज्ञतपःक्रियाः—யஜ்ஞங்களும் தவங்களும்
दानक्रियाः च—தானங்களும்
तत् इति—தத் என்ற சொல்லைக் கூறி
क्रियन्ते - செய்யப்படுகின்றன.

மோக்ஷத்தை விரும்புகின்றவர்களாகையால் இவர்கள் பரமாத்மாவை அறிந்தவரே. तत् என்ற சொல் பரமாத்மாவைக் கூறுமென்பது ஸஹஸ்ரநாமத்தில் ப்ரஸித்தமே. ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்பால்

வெகுதூரத்தில் இருக்கும் பரம்பொருளைத் தாம் அடைய விரும்பி யிருப்பது தெளிவாவதற்காக तत् என்ற நாமாவைக் கூறுவதாம். ஆக அப் பெருமானைப் பெற விரகாக இது செய்யப் பெறும். அல்லது அப் பெருமானின் உவப்புக்காகவே வேறு பலனுக்காகாமல் இது செய்யப் பெறும் என்று குறித்ததாகும். இப்படி तत् என்ற சொல்லை நிஷ்காம கர்மாவைக் கருதி முதலில் சொல்வதென்றதாயிற்று. (25)

இனி सत् என்ற சொல்லைச் சொல்லுமிடம் காட்ட வேண்டும். அதற்கு முன் அச் சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டென்பதை அறிவிக்கிறார்—

सद्भावे साधुभावे च सदित्येतत् प्रयुज्यते ।
प्रशस्ते कर्मणि तथा सच्छब्दः पार्थ युज्यते ॥ २६ ॥

ஸத்பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே |
ப்ரசஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே || 26 ||

पार्थ—குந்தி புத்ரனே !
सत् इति एतत्—ஸத் என்ற சொல்லானது
सद्भावे—வர்த்தமானமென்ற பொருளிலும்
साधुभावे च—நல்லதென்ற பொருளிலும்
प्रयुज्यते—ப்ரயோகிக்கப்படுகிறது.
तथा—எனவே அந்த நல்ல தன்மையென்றதாலேயே
प्रशस्ते कर्मणि—மங்களமான செயலிலும்
सच्छब्दः—ஸத் என்ற சொல்லானது
युज्यते—பொருத்தமாக ப்ரயோகிக்கப் பெறும்.

கொண்டாடத் தகுந்த கர்மாவை ஸத் என்பதென்று அறிவிக்கப் பெற்றது. கீழே நிஷ்காம கர்மாவுக்கு तत् என்ற சொல் என்றது போல் காம்ய கர்மாவுக்கு सत् என்ற சொல் என்று அறியுமாறு விரித்துரைக்க மேல் ச்லோகமாகும்—

यज्ञे तपसि दाने च स्थितिः सदिति चोच्यते ।
कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते ॥ २७ ॥

யஜ்ஞே தபஸி தானே ச ஸ்த்திதி: ஸதிதி சோச்யதே |
கர்ம சைவ ததர்த்தீயம் ஸதித்யேவாபிதீயதே || 27 ||

यज्ञे तपसि—யஜ்ஞத்திலும் தவத்திலும்
दाने च—கொடையிலும்
स्थितिः च—மனிதரின் இருப்பும்
सत् इति—ஸத் என்று
उच्यते—சொல்லப் பெறும்
तदर्थीयम्—அது மூலமாக அப்படியிருப்பவரின் பலனுக்கான
कर्म च—முன் சொன்ன யஜ்ஞாதியும்
सत् इति एव—ஸத் என்றே
अभिधीयते—சொல்லப்படும்.

கீழே ஸத்பாவம் ஸாதுபாவம் என்ற இரண்டு பொருள்கள் கூறப் பெற்றனவே. அதனின்று வர்த்தமாநம் என்பதும் நல்லது என்பதும் सत् என்ற சொல்லின் பொருள் என்றதாயிற்று. அந்த ஸத்பாவத்தை யஜ்ஞாதி கர்மாக்களில் இருப்பு என்று கொண்டால் யஜ்ஞாதிகளில் வர்தமாநரான வைதிகர்களை ஸத் என்ற பதம் கூறும். அந்த ஸத்துக் கள் கோரும் பலனுக்கான கர்ம, அப்பலனை யளிப்பதில் இருக்கும் கர்ம என்ற வழியிலும் யஜ்ஞாதி கர்மாக்கள் ஸத் என்று சொல்லப்படலா மென்றபடி. பூர்வார்த்தத்தில் நாம் விவரித்தபடி ஸ்த்திதி: என்ற சொல்லினின்று स्थाता க்களான வைதிகர்களை ஸத்பதம் சொல்வதால் तदर्थीयम् என்றவிடத்தில் तत् என்ற சொல் அவர்களைக் குறிப்பது எளிதிலாகும். இப்படி சொல்லப் பெற்று இதே ஸத்பதத்திற்குப் பொரு ளாகும் போது இதை விட்டு ப்ரஹ்மம் என்றுற் போன்ற பொருள் கொள்வது தகாது. கீழே तदिति என்ற ச்லோகத்திலே அது விஷயம் சொல்லப்பட்டிருப்பதால் இங்கே ஸத்பதத்தைப் பிரித்துச் சொல்வது வேறு பொருளுக்காகவாகையால் ப்ரஹ்மமென்ற பொருள் இங்கே பொருந்துவதுமாகாது. तदर्थीय மென்று अर्थ பதமும் அதன் மேலுள்ள ப்ரத்யயமும் நன்கு பொருந்துமாறு அவர்களின் பலனுக்கான செயல் என்றுரைப்பதாம். இதனுல் तत् என்பது நிஷ்காம கர்மாவுக்கென்று கீழே தெளிவாக ச்லோகத்தில் கூறிவிட்டபடியால் இது காம்யகர்மா வுக்கு என்று தெரியவரும். ஸத்பதம் பொதுவாக நிஷ்காமம் ஸகாமம் இரண்டையும் கூறக் கூடுமாகிலும், வர்த்தமான நிலை ப்ரக்ருதி மண்ட டலத்திலே யாகையாலே இங்கு வேண்டும் காம்ய கர்மாவை இங்கே கருதியதென்க. ஓமென்பது எல்லாவற்றிற்கும பொதுவாகும். அதற்கு பகவானைப் பொருளாகக் கொண்டு அவனது ஆஜ்ஞா ரூபம் என்று கூறலுமாம், மூன்று வேதங்களையும ஓமென்றதாகக் கொண்டு வைதிகமான கர்மா என்று பொதுவாகப் பணித்தலுமாம்.

यथा सद्भावे साधुभावे च सच्छब्दः इत्युक्त्वा वर्तमानमिति साधु इति च सच्छब्दार्थो ज्ञायते, तथा यज्ञादौ स्थितिः सदित्युच्यत इत्यतः यज्ञादौ स्थातारः पुरुषाः सच्छब्दार्थ इति सुज्ञानम्। एवं स्थितिमत्तया सच्छब्दार्थत्वेनोपस्थितानां तदर्थीयमिति तच्छब्देन ग्रहणम्, तस्य प्रकृतपरामर्शित्वात्। तेषां पुरुषाणामर्थाश्च फलानि। तदुद्देशेन विहितत्वात् तदर्थीयानि यज्ञादीनि कर्माणि। एवञ्च तत्पदस्य निष्कामविषयकत्ववत् सदित्यस्य सर्वसाधारण्यार्हस्यापि काम्ये विश्रान्तिरिह विवक्षितेति ज्ञायते। ओमित्येतत्तु उभयसाधारणम्। तद्वाच्यभगवदाज्ञारूपत्वात् सर्वत्र ओमिति प्रयोग इति वाऽस्तु, वेदत्रयमेव ओमिति गृहीत्वा तत्प्रतिपाद्यत्वं सर्वत्र यज्ञादाविति वा भवत्वित्यलम्। (27)

सत् என்ற பதத்தால் சொல்வது ஏனெனில், அச்ரத்தையாகச் செய்வது வைதிகமானாலும் வீணாய் அஸத் என்னப்படுமென்பதற்காக என்கிறார்—

**अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतञ्च यत् ।**
**असदित्युच्यते पार्थ न च तत् प्रेत्य नो इह ॥ २८ ॥**

*அச்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதஞ்ச யத் |*
*அஸதித்யுச்யதே பார்த்த ந ச தத் ப்ரேத்ய நோ இஹ || 28 ||*

पार्थ—குந்தீ புத்ரனே
हुतं—ஹோமயாகாதியோ,
दत्तं—கொடையோ
तप्तं तपः—செய்த தவமோ,
यत्—எது
अश्रद्धया कृत—ச்ரத்தையிராமல் செய்யப்படுமோ,
तत्—அது
असत् इति—அஸத் என்றே
उच्यते—சொல்லப்படும்; ஏனெனில்—
तत्—அவ்வாறு செய்தது
न प्रेत्य—புநர்ஜன்மம் வராதபடி மரணமடைந்து பெறும் மோக்ஷத்திற்குமாகாது
नो इह—ப்ரக்ருதி மண்டலத்தில் பலனுக்குமாகாது.

ச்ரத்தையோடு செய்தால் கூட ஆஸுரச் செயலுக்கு பலன் இல்லை. வீண் வருத்தமேயென்றார் கீழ். இப்போது வைதிக கர்மாவும் ச்ரத்தையிராத போது அஸத் என்றார்.

பதினேழாம் அத்தியாயம் முற்றும்.

—:*—*—*:—

## பதினெட்டாம் அத்தியாயம்

வைதிகமான கர்மாக்களே தர்மங்கள். அவற்றையே செய்ய வேண்டும். அவற்றையும் ஸாத்துவிக த்யாகத்துடன் செய்வதே சிறந்ததென்று கீழ் இரண்டு அத்தியாயங்களினின்று தெரியலாயிற்று. ஸாத்துவிக த்யாகத்துடன் செய்ய வேண்டுமென்பது முதல் ஷட்கத்திலும் பலகால் கூறப் பெற்றுள்ளது. உலகில் ஸந்நியாஸமென்றால் கர்மாக்களை அனுஷ்டிக்காமல் விடுவதென்று கூறுகின்றனர். எவ்விதமான கர்மாவை யார் விடுவதென்று தெளியாமல் எந்த கர்மாவும் தோஷமுள்ளதென்பாருமுண்டு. வேதத்திலும் த்யாகம் ஸந்நியாஸமென்ற சொற்கள் உள. இவ்விஷயத்தில் தெளிவு பெற வேண்டுமென்று மனத்திற் கொண்டு அர்ஜுனன் கீழ்க் கூறிய த்யாக ஸந்நியாஸ சப்தங்களுக்கே பொருள் தெளியாதவன் போல் அடக்கத்துடன் பரிப்ரச்னமாக பகவானைக் கேட்கிறான்—

अर्जुन उवाच—அர்ஜுனன் கேட்பதாவது—

**संन्यासस्य महाबाहो तत्त्वमिच्छामि वेदितुम् ।**
**त्यागस्य च हृषीकेश पृथक् केशिनिषूदन ॥ १ ॥**

*ஸந்ந்யாஸஸ்ய மஹாபாஹோ தத்வமிச்சாமி வேதிதும் |*
*த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக் கேசிநிஷூதந || 1 ||*

महाबाहो—திரண்ட புஜங்கள் உடையனே
हृषीकेश—இந்த்ரியங்களை ஆள் கின்றவனே
केशिनिषूदन—கேசியென்பவனை ஸம்ஹரித்தவனே !
संन्यासस्य—ஸந்நியாஸமென்பதற்கும்
त्यागस्य च—த்யாகமென்பதற்கும்
तत्त्वम्—உண்மையை
पृथक्—தனியா அன்று என்று
वेदितुम्—அறிவதற்கு
इच्छामि—விரும்புகிறேன்.

மஹாபாஹுவான படியாலே எக்கார்யமும் செய்ய வல்லரேயாகிலும் இந்திரியங்களை அடக்கியாள்வதால் சிறந்த கார்யங்களைச் செய்து கொண்டும் அவ்வாறு நடக்காத கேசி போன்ற ஆஸுர ஸ்வபாவரை அழித்துக் கொண்டும் விளங்குகிறபடியால், க்ருத்யாக்ருத்யங்களின் தெளிவை தேவரீரிடமே பெற வேண்டும். இங்கே த்யாகம் ஸந்நியாஸம் இரண்டும் ஒரு பொருளாக தேவரீர் கருதியதாக நினைக்கிறேன். ஆனால் ஸந்நியாஸமென்பதை கர்மானுஷ்டானத்தையே விட்டொழிப்பதென்ற பக்ஷமும் காண்கிறது. த்யாக என்ற சொல் போல் அன்றி ஸந்நியாஸ மென்ற சொல்லில் 'ஸம்' என்ற உபஸர்க்கம் ஒன்று சேர்ந்திருப்பதால் த்யாகத்தைவிட வேறு பொருளே அதற்குத் தகுமோ என்று தோற்று கிறது. அதை யான் பிரித்து அறிய விரும்புகிறேன். இரண்டு சொற் களுக்கும் பொருள் ஒன்றேயானால் அவ்வாறே கூறிடுக என்றபடி. (இத் துடன் ஸாத்விக த்யாகத்தின் உட்பிரிவுகளையும் கேட்க விரும்புகிறான் அர்ஜுனன். அதனால் पृथक् என்றான். கண்ணபிரானும் त्यागो हि पुरुषव्याघ्र ! त्रिविधः संप्रकीर्तितः என்று ஏற்கனவே கர்த்ருத்வத்யாக-மமதாத்யாக-பலத்யாக ரூபமாக மூன்று உட்பிரிவுகளைச் சொல்லியிருக்கிறேன் என்று கூறி விரிவாக எல்லாம் கூறி முடிவில் मामेकं शरणं व्रज என்ற கடைச்லோகத்தாலே உபாயத்வத்யாகத்தையும் சேர்த்துக் கொள் என்று உபதேசிக்கப் போகிறார். ஆக இக் கேள்விக்கு மறுமொழி கடைசிச்லோகம் வரையிலுள்ளதென்க.)

अत्र सात्त्विकत्यागरूपस्य संन्यासस्यावान्तरविधाश्च पृथक् जिज्ञासतेऽर्जुनः। अत एव त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधः संप्रकीर्तितः इति पूर्वोक्तान् कर्तृत्वत्यागममतात्यागफलत्यागान् स्मारयित्वा तद्वैशद्यविधानव्याजेन बहु प्रतिबोध्य अन्ते, 'एभिस्त्रिभिस्सह फलोपायत्वत्यागमपि घटय ; अयं संन्यासः' इति मामेकं शरणं व्रजेत्यनेनोपदेक्ष्यतीति ध्येयम्। (1)

श्रीभगवान् उवाच— பகவான் சொல்வதாவது—

**काम्यानां कर्मणां न्यासं संन्यासं कवयो विदुः ।**
**सर्वकर्मफलत्यागं प्राहुस्त्यागं विचक्षणाः ॥ २ ॥**

காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்ந்யாஸம் கவயோ விது: |
ஸர்வகர்மபலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா: || 2 ||

कवय:—புத்திக்கு எட்டாததையும் அறிகின்றவர்
त्याग संन्यासं—த்யாகம் ஸந்நியாஸ மென்பதை
काम्यानां—பலத்தை விரும்பிச் செய்யப்படும்
कर्मणां—கர்மாக்களை
न्यासम्—அடியோடு விடுவதாக
विदुः—அறிகின்றனர்.
विचक्षणाः—அது விஷயம் தர்சனம் செய்தவர்
त्याग संन्यासं—அந்த த்யாகமென்ற ஸந்நியாஸத்தை
सर्वकर्म—எல்லா கர்மாக்களின்
फलत्यागम्-பலனை மட்டும் விடுவதாக
प्राहुः—நிரூபிக்கிறார்கள்.

த்யாகமென்பதை ஸந்நியாஸமென்ற சொல்லால் सम् என்ற உபஸர்கம் சேர்த்துச் சொல்வதெதற்கு என்றால், சில கர்மாக்களை அடியோடு விட வேண்டுமென்பதற்காக. அவையாவன காம்யகர்மாக்கள். நித்ய நைமித்திகங்களை விடமுடியாதே என்கிறார்கள் ஆக்ஷேபத்திற்கு மேல் ஸமாதானம் சொல்லத் திறமை வாய்ந்ததால் கவியெனப் பெற்றவர். அதற்கு மேல் உண்மையை நன்றாகக் கண்டு விசக்ஷணரென்ற பேர் பெற்றவரோ என்றால், ஆகில் நித்ய நைமித்திகங்களை விடாமற் செய்ய வேண்டுமே. அப்போது மேலுலகங்களில் சில வாழ்க்கையை அவற்றின் பலனாக விஷ்ணு புராணாதிகளில் கூறியுள்ளதை யனுஸரித்து அப் பலனுக்காக அவற்றைச் செய்யத் தகுமா? தகாதென்றால், அவற்றின் பலனை விடுவது सम् என்பதற்குப் பொருளாக வேண்டுமாகையால் எந்த கர்மாவிலும் பலனை விடுவது தான் ஸந்நியாஸம். காம்ய கர்மாவும் பலனை விட்டால் பகவானின் ஆராதனமாகச் செய்யத் தகுமென்பர்.

இந்த ச்லோகத்திலே முதல் பாகத்தில் ஸந்யாஸ பதத்திற்குப் பொருள் பணிப்பதாகவும், இரண்டாவது பகுதியில் த்யாக சப்தத்தின் பொருள் கூறுவதாகவும் தோன்றும். ஆனால் பகவான் மேலே 'த்யாக விஷயத்தில் எனது முடிவைக் கேள்' निश्चयं शृणु मे तत्र त्यागे भरतसत्तम என்று த்யாகத்தை விரிவாகக் கூறி ஏழாவது ச்லோகத்தில் ஸந்யாஸம் த்யாகமென்ற இரண்டையும் ஒரே பொருளில் ப்ரயோகம் செய்கிறபடியால் இவ்விரு சொற்களும் முடிவில் ஒரு பொருள் தருமவை யாகையால் இங்கும், 'த்யாகமும் ஸந்யாஸமும் ஒன்று தான்; அது என்ன என்றவென்றால் பலர் பலவிதம் சொல்லுகிறார்கள்' என்று பொருள் கொள்வதே தகும். அப்போது தான் ஒன்றுக்கொன்று முரணான பக்ஷபேதம் ஸித்திக்கும். அவ்வாறின்றி ஸந்யாஸ பதத்திற்கு ஒருவர் ஒரு பொருள் பணிக்கிறார், த்யாக பதத்திற்கு வேறொருவர் வேறு பொருள் கூறுகிறாரென்றால் முரண்பாடு எளிதிற் புலப்படாது. அப்போது கவிகள் த்யாக பதத்திற்குக் கொண்ட பொருள் என்ன; விசக்ஷணர்கள் ஸந்நியாஸ பதத்திற்குக் கொண்ட வேறு பொருள் என்ன என்றும் ஆராய வேண்டியதாகும். வேறு பொருளில்லையாகில் பக்ஷபேதம் இல்லையாம்.

ஆகையால் த்யாகமென்கிற ஸந்யாஸமானது இருவிதமாக இருவரால் சொல்லப் பெற்றதென்றே இதன் பொருளாகும். (2)

த்யாகமென்கிற ஸந்நியாஸத்தின் உருவும் காரணமும் வேறுவிதம் மற்றும் சிலரால் கூறப்படுகிறது—

**त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुर्मनीषिणः ।**
**यज्ञदानतपःकर्म न त्याज्यमिति चापरे ॥ ३ ॥**

*த்யாஜ்யம் தோஷவத் இத்யேகே கர்ம ப்ராஹுர் மநீஷிண: |*
*யஜ்ஞதாநதப:கர்ம ந த்யாஜ்யம் இதி சாபரே || 3 ||*

एके मनीषिणः—ஸாங்க்யரைப் போன்ற சில யுக்திவாதிகள்
कर्म—எந்தக் கர்மாவையும்
दोषवत् इति—தோஷமுள்ளதென்ற காரணம் கூறி
त्याज्यं प्राहुः—விடப்பட வேண்டிய தாகச் சொல்வர்.
अपरे—சாஸ்த்ரத்தில் ஆழ்ந்தவரான மற்றவர்
यज्ञदानतपःकर्म—யஜ்ஞம் தானம் தவம் போன்ற வைதிக கர்மாக்கள்
न त्याज्यम्—விடத்தகாதவை யென்று
प्राहुः—சொல்வர்.

எந்த கர்மாவிலும் பெரிதாகவோ சிறிதாகவோ ஜீவஹிம்ஸை கலந்திருப்பதால், न हिंस्यात् सर्वा भूतानि என்ற வசனத்திற்கு விரோதமாக अग्नीषोमीयं पशुमालमेत இத்யாதிகளைச் செய்வதில் பாபமும் உண்டாகையால் கர்மாவை முழுமையும் விடுவதே மேலென்பர் சிலர். விதிக்கப் பெற்ற கர்மாக்களை விட்டால் அதனுல் வரும் பாபத்திற்கு ஆளாக வேண்டியிருப்பதால் விடலாகாது. இப்படி விருத்தமாக சாஸ்த்ரம் சொல்லி நம்மைத் திண்டாடச் செய்வது தகுமோ என்னில், எப்போது செய்ய வேண்டுமென்று விதிக்கின்றதோ, அதனுல் அதில் நடுவே நேரும் ஹிம்ஸையை ஹிம்ஸையாக, அதாவது பாபத்தை விளைவிப்பதாக நினைக்கக் கூடாதென்றே சாஸ்த்ரத்திற்குக் கருத்துக் கூற வேண்டுமென்பர் மற்றவர்.

எது முடிவென்னில், நான் சொல்வதே முடிவென்கிறார்—

**निश्चयं शृणु मे तत्र त्यागे भरतसत्तम ।**
**त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधः संप्रकीर्तितः ॥ ४ ॥**

*நிச்சயம் ச்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம |*
*த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித: || 4 ||*

भरतसत्तम—பரத வம்சத்திய ஸத்புருஷனே
तत्र—ஸந்யாஸமென்கிற
त्यागे—த்யாக விஷயத்திலே
निश्चयं—சாஸ்திரத்தின் முடிவை
मे शृणु—என்னிடம் கேள்.
पुरुष व्याघ्र—புருஷப் புலியே!
त्यागः—த்யாகமானது
त्रिविधः—மூன்று உட்பிரிவுகள் உடையதாக
संप्रकीर्तितः हि—முன்னமே என்னுல் மிகத் தெளிவாகச் சொல்லப் பெற்றதே.

காம்யகர்மத்யாகம், ஸர்வகர்ம பலத்யாகம், ஸர்வகர்மத்யாகம் என்று மூன்று பக்ஷங்களைக் கீழே கூறினரே, அதைக் கொண்டு இங்கே மூன்று விதமென்று சொல்லவில்லை. மேலே தாமஸராஜஸஸாத்விக த்யாகங்கள் மூன்று சொல்லப்போகிறார். संप्रकीर्तित: என்று ஏற்கனவே சொன்னதாகக் கூறியிருப்பதால் அப் பிரிவும் கொள்ளத்தகாது. இவை யிரண்டு பிரிவுகளில் பல கழிக்கப்பட வேண்டுமே. ஆதரிக்கப்பட வேண்டிய மூன்றுவித த்யாகத்தை இங்குக் கொள்வது தகும்.

'ஹி' என்பது தெரிந்த விஷயமென்றதைக் காட்டுவது போல் காரணக் குறிப்புமாகும். மூன்றுவித த்யாகத்தையே நான் ஏற்கனவே சொல்லி யிருப்பதால் என்றதாயிற்று. அதனால் என்னவெனில்—

**यज्ञदानतपःकर्म न त्याज्यं कार्यमेव तत् ।**

யஜ்ஞதாநதப:கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் |

यज्ञ दान—யஜ்ஞம் தானம்
तप: कर्म—தவம் என்றவாறான வைதிக கர்மாவானது
न त्याज्यम्—விடத்தக்கதல்ல,
तत्—அது
कार्यम् एव-செய்யப்பட வேண்டியதே.

கர்மாக்களைச் செய்துகொண்டு ஸாத்விகத்யாகம் செய்வதே ப்ரா மாணிகமான த்யாகமாகும், எல்லா கர்மாக்களையும் தோஷமுள்ளன வாகக் கூறி விடுவதோ, காம்ய கர்மாக்களையாவது பலனைக் கோராத பக்ஷத்தில் விடுவதோ த்யாகமாகாது என்று கீழ்க் கூறியவற்றில் இரண்டு பக்ஷங்கள் விலக்கப்பட்டன.

பலன் வேண்டாதபோது கர்மாக்களை எதற்காக செய்வதென்ற வினவிற்கு விடையளிக்கிறார்—

**यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥ ५ ॥**

யஜ்ஞோ தாநம் தபச்சைவ பாவநாநி மநீஷிணாம் || 5 ||

मनीषिणाम्-மனனம் செய்கிறவர்களுக்கு
तप: च एव—தவமுமே
पावनानि—பாவத்தைப் போக்கும்; பரிசுத்தமாக்கும்.
यज्ञ: दानम्-யஜ்ஞமும் தானமும்

ஏதாவது பலனை வேண்டினால் அதனை யளிக்கும் யஜ்ஞாதிகள் ஒரு பலனையும் வேண்டாமற் செய்யப் பெற்றால் வீணாவதில்லை. பகவானின் ஆராதனமாகச் செய்யப்படுவதால் அவனது உவப்பே பலனாமே. அது தவிர வேறு பலன் நமக்கு வேண்டுவதில்லை. ஆனாலும் பகவானிடத்தில் அறிவும் பக்தியும் மேன்மேல் வேண்டும். அது ஸத்வ குணச் செழிப்பால் ஆக வேண்டும், அதற்கு ரஜஸ்தமஸ்ஸுக்கள் தொலைய வேண்டும். பாபம் கழிந்தால் அல்லது அவை நீங்கா. பாபத்தைப் போக்க இந்த ஸத் கர்மங்களே பயன்படுகின்றன, பகவான் உலந்து இப் பெரும் பலனை யளிக்கிறானாகையால் இவை வீணாகா. பாபங்கள் போக வேண்டா

என்று யாராவது நினைப்பரோ. ஆகையால் பலனை வேண்டாமல் இவ்வாறு செய்வதற்கே விசேஷ பலன் என்று தெளிய வேண்டுமென்றபடி.

கர்மாநுஷ்டானத்தில் ஜீவஹிம்ஸை என்கிற தோஷம் உண்டென்று சிலர் வாதம் செய்கின்றனரே. அதற்கென்ன மறுமாற்றமெனில், அவ்வாறு குழப்பம் வேண்டா என்ற கருத்துடன் முடிவாகக் கூறுகிறார்—

**एतान्यपि तु कर्माणि संगं त्यक्त्वा फलानि च ।**
**कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम् ॥ ६ ॥**

*ஏதாந்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலாநி ச |*
*கர்த்தவ்யாநீதி மே பார்த்த நிச்சிதம் மதமுத்தமம் || 6 ||*

तु—உபாஸநத்தைவிட விலக்ஷணமாகிலும்
एतानि कर्माणि अपि—அது போல் இக்கர்மாக்களும்
संगं—மமத்வாதிகளையும்
फलानि च—அததன் பலனையும்
त्यक्त्वा—விட்டுவிட்டு
कर्तव्यानि—செய்ய வேண்டியவை
इति मे मतं—என்ற எனது கொள்கையே
पार्थ—குந்தீ புத்ரனே !
निश्चितम् उत्तमम्—உறுதியாய் உயர்ந்ததுமாகிறது.

உபாஸனம் செய்யவாகாதவர் கதியில்லாமல் கர்மாக்களைச் செய்தாலும் இதில் வல்லவர் அவற்றைச் செய்வது தகாது; பாவனமென்றாலும் ஒரு விதத்தில் பாவத்தையும் விளைக்கும் ஹிம்ஸை சேர்ந்துள்ளதே என்று நினைக்க வேண்டா. பாவனமென்ற பிறகு பாவத்திற்கு இடமேயில்லை. ஆகையால் பலஸங்க த்யாகம் செய்யாவிடில் பலனைக் கொடுப்பதால் ஸம்ஸாரத்திற் சேர்க்குமென்பதே யல்லது பாவத்தினால் ஸம்ஸாரமென்பதில்லை, பாவத்தை உண்டுபண்ணு. பாவத்தைப் போக்குவது போல் பலன் அளிக்கும் புண்யத்திற்குக் காரணமாகாமையென்கிற வைலக்ஷண்யமும் இப்போது சேருகிறது. உபாஸனம் போதுமேயென்ன வெண்ணுது. இவையின்றி உபஸனமே உதியாதே. அதற்கு இவை அனுகூலமாகையால் தான் 'மநீஷிணும் பாவநாநி' என்றேன் என்றபடி. संगं त्यक्त्वा फलानि च என்றதால் ஸாத்விகத்யாகமிராதபோது பாவத்தை விளைவிக்குமென்ற கருத்தல்ல; ஸம்ஸார பந்தமாகும் என்றே கருத்தாம்.

இப்படி நித்யம் நைமித்திகம் காம்யம் என்ற மூன்றுவிதமான கர்மாக்களும் பலனைக் கோராதபோது பாவனமென்றார். காம்யங்களையும் பலனை விட்டுச் செய்தால் விசேஷமே. செய்யவில்லையாகில் குற்றமில்லை. நித்ய நைமித்திகங்களைச் செய்யாமலிருப்பின் அதுவே பாபத்திற்குக் காரணமாகுமென்ற கருத்தாலே அவற்றை விடலாகாதென்கிறார்—

**नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते ।**
**मोहात् तस्य परित्यागस्तामसः परिकीर्तितः ॥ ७ ॥**

*நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே |*
*மோஹாத் தஸ்ய பரித்யாக: தாமஸ: பரிகீர்த்தித: || 7 ||*

नियतस्य तु—கார்யம் போலன்றி அவச்யம் செய்ய வேண்டிய தாய் நித்ய நைமித்திகமான
कर्मणः—கார்யத்திற்கு
संन्यासः—த்யாகம் என்பது (கர்மாவையே செய்யாமல் விடுகையென்பது)
न उपपद्यते—தகாது.
तस्य—அத்தகைய கர்மாவை
मोहात्—இதனை யறியாமல்
परित्यागः—விடுவதென்பது
तामसः—தாமஸத்யாகமாக
परिकीर्तितः—சொல்லப்பட்டுள்ளது.

செய்ய வேண்டிய கர்ம விஷயத்திலே செய்யத் தகாதவை என்ற எண்ணம் உண்டாகில் அது தமோகுணத்தினலாவதாம். அதனல் அந்த த்யாகம் தாமஸத்யாகமென்று பழிக்கப்படும்.

சோம்பலால் விடுகிறவன் ஒரு ஸமயம் விட்டாலும் மற்றொரு ஸமயம் செய்வான்; முழு த்யாகமில்லை. கூடாதென்று விடுகிறவன் எப்போதுமே செய்யான். இது முழு த்யாகமாவதால், தாமஸமாகும். ஸாத்விக த்யாகம் செய்பவன் தர்மத்தைச் செய்தே வருகிறுனகையால் அது ராஜஸமோ தாமஸமோ ஆகாது. இப்படி அறிவில் மாறுதலில்லாமை, சிறிது மாறுதல், முழு மாறுதல் என்ருற் போல் த்யாகத்திலும் ஸாத்விக ராஜஸதாமஸப் பிரிவாம். (இங்கே ச்லோகத்தில் கர்ம ஸந்நியாஸம் தகாது, அந்த த்யாகத்தை தாமஸத்யாகமென்பர் என்றதால் த்யாகமும் ஸந்நியாஸமும் இந்த ப்ரகரணத்தில் ஒன்றே என்பது கண்கூடு.) (7)

**दुःखमित्येव यः कर्म कायक्लेशभयात् त्यजेत् ।**
**स कृत्वा राजसं त्यागं नैव त्यागफलं लभेत् ॥ ८ ॥**

*துக்கமித்யேவ ய: கர்ம காயக்லேசபயாத் த்யஜேத் |*
*ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத் || 8 ||*

यः—யாவனொருவன் (மோக்ஷத்திற்குக் காரணமென்றறிந்தும்)
दुःखम् इति एव—பணச் செலவு என்றே
कायक्लेश भयात्—உடலுக்கு வாட்டம் என்ற அச்சத்தினலுமே
कर्म त्यजेत्—கர்மாவை விடுகின்ருன்,
सः राजसं—அவன் ராஜஸமென்ற
त्यागं कृत्वा—த்யாகம் செய்பவனுகி
त्यागफलम्—சாஸ்த்ரம் இசைந்த த்யாகத்தினலாம் பலனை (சித்த சுத்தியை)
न लभेत् एव—பெறவே மாட்டான்.

**कार्यमित्येव यत् कर्म नियतं क्रियतेऽर्जुन ।**
**संगं त्यक्त्वा फलञ्चैव स त्यागः सात्त्विको मतः ॥ ९ ॥**

*கார்யமித்யேவ யத் கர்ம நியதம் க்ரியதேऽர்ஜுந |*
*ஸங்கம் த்யக்த்வா பலஞ்சைவ ஸ த்யாகஸ் ஸாத்விகோ மத: || 9 ||*

अर्जुन—அர்ஜுனா!
नियतं कर्म—நித்ய நைமித்திகமான கர்மாவானது
संगं—தான் கர்த்தா, தனது கர்மா என்ற பற்றையும்
फलं च—பலனையும்
त्यक्त्वा एव—விட்டே
कार्यम् इति एव—செய்ய வேண்டுமென்றே
यत् क्रियते—எவ்வாறு செய்யப் படுகின்றதோ,
स त्यागः—அந்த த்யாகமானது
सात्त्विकः मतः—ஸாத்துவிகமாகக் கொள்ளப் பெற்றது.

ஸாத்விக த்யாகத்துடனே செய்ய வேண்டுமென்ற நோக்கு உடையவனுக்கு உபாயமான (காம்யமான) கர்மாவுக்கோ அபாயமான கர்மாவுக்கோ இடமில்லை யென்கிறார்—

न द्वेष्ट्यकुशलं कर्म कुशले नानुषज्यते ।
त्यागी सत्त्वसमाविष्टो मेधावी छिन्नसंशयः ॥ १० ॥

ந த்வேஷ்ட்யகுசலம் கர்ம குசலே நாநுஷஜ்யதே |
த்யாகீ ஸத்வஸமாவிஷ்டோ மேதாவீ சிந்நஸம்சய: || 10 ||

सत्त्वसमाविष्टः—ஸத்துவ குணம் நிறைந்து
त्यागी—த்யாகம் செய்கின்றவன்
मेधावी—உண்மையான அறிவுடையனாய்
छिन्नसंशयः—ஐயம் தீர்ந்தவன்
अकुशलं कर्म—(நல்லதாகாத) பாப கர்மாவை
न द्वेष्टि—வெறுப்பதில்லை.
कुशले—வேறு பலனுக்கான புண்ய கர்மாவில்
न अनुषज्यते—ஸம்பந்தப்படான்.

விடாமல் ஸாத்விக த்யாகம் செய்யுமளவுக்கு அறிவு பெற்று நடப்பவன் மோக்ஷம் நீங்கலாக வேறு பலனுக்காக ஒன்றும் செய்யாதையால் குசலகர்மாவில் இழியான். பாபத்திலும் இழியான். ஆனாலும் பாபத்தை வெறுக்கமாட்டானென்பதேன். பாபம் துணிந்து செய்வானென்னவொண்ணாதே யென்னில், அவ்வாறு கருத்தல்ல, புத்தி பூர்வகாகச் செய்யமாட்டான். தெரியாமல் ஏதேனும் செய்யப்பட்டாலும், அந்த ப்ராமாதிகமான பாபத்திற்காக, 'ஐயோ என்ன பாபம் எனக்கே தெரியாமல் செய்தேனே, என்ன பலன் அநுபவிக்க நேருமோ, ஏன் இப்படியாகிறது' என வெறுப்பைப் பெறானென்பதாம். ப்ராமாதிகமான பாபத்திற்குப் பலனை பகவான் ஸாத்விக த்யாகிகள்விஷயத்தில் அளிப்பதில்லை. இந்த உண்மையறிந்த மேதாவிக்கு அது விஷயமான ஸம்சயமுமில்லை யென்றபடி. (10)

நித்ய கர்மாக்கள் தேஹம் தரிப்பதற்கும் வேண்டியனவாகிறபடியால் யாரும் விடமுடியா என்கிறார்—

न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः ।
यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥ ११ ॥

ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கர்மாண்யசேஷத: |
யஸ்து கர்மபலத்யாகீ ஸ த்யாகீத்யபிதீயதே || 11 ||

देहभृता–தேஹம் தரிக்கின்றவனால்
कर्माणि—நித்ய கர்மாக்கள்
अशेषतः–முழுமையும்
त्यक्तु न शक्यं हि–விடமுடியாவல்லவா
यः तु—ஆகையால் எவன்
कर्मफल—கர்மாவின் பலனை மட்டும்
त्यागी—விடுகின்றவனோ
सः—அவனே
त्यागी इति–த்யாகியென்று
अभिधीयते–சொல்லப்படுகிறான்.

ஜ்ஞானத்திலே கருத்து உள்ளவனுக்கு மனம் சுத்தமாயிருக்க வேண்டும். சுத்தமான ஆஹாரத்தால் தேஹத்தை சுத்தமாக வைத்துக் கொண்டால் தான் சுத்தமாக மனத்தைக் கொள்ளலாம். ஆஹாரம் சுத்தமாவது பஞ்சமஹாயஜ்ஞங்களால் பகவானுக்கு நைவேத்யமாக்கப் படுகிறபடியால், அதற்கு ஒருவன் அதிகாரியாக வேண்டுமாகில் ஸ்னான ஸந்த்யாதி சடங்குகளைச் செய்ய வேண்டும். எனவே பல நித்ய கர்மாக்களை இவன் விட முடியாது. அதனால் கர்மத்யாகமென்றால் கர்ம பல த்யாகமென்றே பொருள் கொள்க. (11)

கேள்வி—கர்மாவைச் செய்வது கர்மாவின் பலனைவிடுவது என இரண்டும் சேரா. வயலில் விதை விதைத்தால் முளைக்காமலிருக்குமோ. ஆஹாரம் உண்டால் வயிறு நிறையாமலிருக்குமோ. அதுபோல் கர்மாவைச் செய்தால் அதன் பலன் வந்தே தீரும். ஆனால் காம்ய கர்மாவுக்கு தானே பலன், நித்ய நைமித்திகங்ளுக்குப் பலன் ஏது என்கிறீரோ, அது சரியல்ல; அவற்றிற்கும் பலன் உண்டு. விஷ்ணு புராணாதிகளில் அந்தந்த வர்ணாச்ரம தர்மத்தை ஒழுங்காக நடத்துகிறவனுக்கு மேலுலகில் நான்முகன்லோகம் தக்ஷாதிப்ராஜாபதிகளின் லோகம் என்றவாறாக லோகப்ராப்தி உண்டென்னப்பட்டதே ஆகையால் மோக்ஷம் விரும்பி வேறு பலன் வேண்டாதவர் கர்மாவை விடுவதே தகும் என்றவாறு..................இதற்கு விடையாக மேலே அருளிச்செய்கிறார்—

अनिष्टमिष्टं मिश्रञ्च त्रिविधं कर्मणः फलम् ।
भवत्यत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित् ॥ १२ ॥

அநிஷ்டமிஷ்டம் மிச்ரஞ்ச த்ரிவிதம் கர்மண: பலம் |
பவத்யத்யாகிநாம் ப்ரேத்ய ந து ஸந்நயாஸிநாம் க்வசித் || 12 ||

कर्मणः फलम्–கர்மாவின் பலன்
अनिष्टम्–இஷ்டமாகாதது
इष्टम्—வேண்டப்படுவது
मिश्रम्–இரண்டும் கலந்தது என
त्रिविधम्—மூன்று விதமாகுமது
अत्यागिनां–ஸாத்விக த்யாகம் செய்யா தவர்க்கே
भवति—வரும்.
संन्यासिनां तु-த்யாகம் செய்தவர்க்கோ என்னில்
क्वचित्–எங்கும் (எப்பலனும்)
न भवति–வாராது.

விதை விதைப்பதும் வைதிக கர்மாவைச் செய்வதும் ஒன்ருகாது. இந்த விதையினின்று இந்த முளைதான் வருமென்பது உலகில் கண்ட விஷயம். அது தானே வரக்கூடியது. கர்மாவினின்று பலன் எனபது அவ்வாறில்லை. அக் கர்மாவினுல் தேவதை ஆராதிக்கப்பட, அந்த தேவதை அதற்கு உவந்து பலன் அளிக்கும். அரசரிடத்தில் ப்ரஜைகள் ஏதோ கேட்பதென்றால், என்ன வேண்டுமோ அதைக் குறித்து அவனிடம் விண்ணப்பம் செய்வதுபோல் பலனைக் கோரியே செய்ய வேண்டும். இப்படி பலன் விரும்பாதவர், அதை வேண்டாமலே பகவான் உவந்தாற் போதுமென்றே செய்யலாமென்றும் சாஸ்த்ரம் ஓதுகிறது. அது தான் ஸாத்விகத்யாகத்துடன் செய்வதென்பது. அதற்குப் பலன் மோக்ஷமென்று முமுக்ஷுக்கள் விஷயத்தில் கூறப் பெற்றது. ஆக இவன் வேண்டாத பலனை எந்த கர்மாவும் அளிக்காதாகையால் இவனுக்கு ஸம்ஸார பந்தம் கர்மாவைச் செய்வதால் வருமென்று நினைக்க வேண்டா. ஆனல் அநிஷ்ட பலன் வாராதென்கிருரே. வேண்டா என்று சாஸ்திரம் ஓதியதையும் செய்யலாமோ என்னில், நிஷித்தமாம் கார்யத்தை எதற்காகச் செய்கிருன் ? கள்ளைக் குடிப்பதென்பது அந்த ஸமயத்தில் உண்டாம் ஒருவித உணர்ச்சியில் விருப்பத்தினுலா, பகவானின் உவப்புக்காகவா, வேண்டாமென்று அவன் சொன்னதை அவனது உவப்புக்காகச் செய்யவாகுமோ ? விதிக்கப்பட்ட கர்மாக்களை தானே உவப்புகாகச் செய்யலாமென்று சாஸ்த்ரம் கூறுகிறது. ஆகையால் கற் சமயம் நேறும் சிற்றின்பத்தை விரும்பியே அதைச் செய்வானென்றதாயிற்று. அப்படி செய்கிறவன் ஸாத்விகத்யாகம் எங்கே செய்வது. ஆகையால் நிஷித்த கர்மாவை புத்தி பூர்வமாகச் செய்ய வழியில்லை. ஆன பின்பு, அநிஷ்ட பலன் இல்லையென்றது ப்ராமாதிகமாக, அதாவது இவனுக்கே தெரியாமல் சில பாபகர்மா நேர்ந்தால் அதற்கு அனிஷ்டமான பலன் இந்த அதிகாரிவிஷயத்தில் கிடையாதென்பதைச் சொல்வதற்காக அநிஷ்டம் என்று ச்லோகத்தில் சேர்த்தாரென்க. (7வது ச்லோகத்தில் नियतस्य तु संन्यासः, परित्यागः என்று த்யாக ஸந்நியாஸங்களை ஒன்ருகக் காட்டினுற்போல் இங்கும் अत्यागिनां संन्यासिनां மென்று இரண்டும் ஒன்றெனக் குறித்தது நோக்குக.) (12)

த்யாகம் இத்தகையதென்று விளக்கினுர். அதில் பகவானைக் கர்த்தாவாகவும் தான் கர்த்தன் அல்லனென்றும் நினைக்கச் சொன்னதின் கருத்தை விளக்குகிருர். கர்த்ருத்வதயாகம் பலத்யாகம் மமதாத்யாகமென்ற மூன்றில் கர்த்ருத்வத்யாகம் நிலைத்தால் மற்ற இரண்டும் நிலைத்து விடும். அவனவன் தான் செய்ததாக நினைப்பதால்தான் தன்னுடையதாம் இக்கர்மா, இதன் பலனும் தன்னுடையதாமென நினைக்கலாகிறது. அதைத் தவிர்ந்த போது இவற்றையும் தவிர்ந்ததாம். அதனுல் கர்த்ருத்வ விஷயத்தை முக்கியமாகத் தெளிவிக்கிருர்—

**पञ्चैतानि महाबाहो कारणानि निबोध मे।**
**सांख्ये कृतान्ते प्रोक्तानि सिद्धये सर्वकर्मणाम्॥ १३॥**

*பஞ்சைதாநி மஹாபாஹோ காரணாநி நிபோத மே|*
*ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தாநி ஸித்தயே ஸர்வகர்மணாம் || 13 ||*

महाबाहो–பருத்த புஜமுடையனே
सर्वकर्मणां—எல்லாச் செயல்களுடையவும்
सिद्धये–உற்பத்திக்கு
सांख्ये कृतान्ते—ஆத்ம தத்துவ விஷயமான வைதிக ஸித்தாந்தத்தில்
प्रोक्तानि–சொல்லப் பெற்ற
एतानि पञ्च–இந்த ஐந்து
कारणानि—காரணங்களை
मे निबोध—என்னிடம் தெளிந்து கொள்.

ஸாங்க்யமாவது ஸாங்க்ய சாஸ்த்ரமென்று உலகில் வழங்குவதன்று. கீழே 'ஸாங்க்யயோகௌ' இத்யாதிகளிற் போலே ஆத்ம விஷயமாக வேதம் அறிவித்த வகையையே ஸாங்க்யமென்கிறது. இந்த ஸித்தாந்தமே உண்மையான ஸித்தாந்தம். இந்த ஸித்தாந்தத்தை இங்கே ஸாங்க்யமென்ற பெயரால் குறிப்பிட்டது காரணங்களை எண்ணிச் சொல்லுவதற்குப் பொருந்தவென்க. அதில் ஒவ்வொரு செயலுக்கும் ஐந்து காரணங்கள் வேண்டுமென்று முடிவு கூறப் பெற்றுளது. அதை விளக்குகிறேன். அவையாவன—

**अधिष्ठानं तथा कर्ता करणञ्च पृथग्विधम्।**
**विविधा च पृथक्चेष्टा दैवञ्चैवात्र पञ्चमम्॥ १४॥**

*அதிஷ்டாநம் ததா கர்த்தா கரணஞ்ச ப்ருதக்விதம் |*
*விவிதா ச ப்ருதக்சேஷ்டா தைவஞ்சைவாத்ர பஞ்சமம் || 14 ||*

अधिष्ठानम्–ஆத்மா தங்குமிடமான உடலும்
तथा कर्ता–அவ்வாறே அங்குள்ள கர்த்தாவான ஆத்மாவும்
पृथग्विधं करणञ्च–வெவ்வேறு வகையான கர்மேந்த்ரியங்களும் மனமும்
विविधा–பல உட்பிரிவை உடைய
पृथक्—தனித்தனியான
चेष्टा-ப்ராணவாயுவின் ஸஞ்சாரமும்
अत्र पञ्चमम्–இவற்றிலே ஐந்தாவதாய் முக்கியமான
दैवं च—பரமாத்மாவும்.

கர்த்தாவான ஆத்மா, தான் தனியே இருந்து கர்த்தாவாகிறதில்லை. அவனுக்கு உடல், இந்த்ரியங்கள், ப்ராணவாயு, பரமாத்மா என்ற நான்கும் வேண்டும். இவற்றையும் உடல் முதலான கருவிகளையும் அந்தந்தச் செயலை நடத்துமாறு கவனித்து ஸங்கல்பித்து ஏவுகிறவன் ஸர்வேச்வரன். அவனே எல்லாவற்றிலும் முக்கியமாகிறான். உடல்

முதலானவை ஆத்மாவுக்கு உட்பட்டவை. அவை கருவிகளாகும். இவன் கர்த்தாவாகையால் அவற்றைவிட ப்ரதான காரணமாகிறான். இவனுக்கும் மேலேயிருப்பவன் பரமாத்மா. கரணங்களாவன—வாக்கு, கை, கால் என்ற இந்த்ரியங்களும் கீழ் இந்த்ரியங்கள் இரண்டும், மனமும் ஆக ஆறு ஆம். கண் முதலான ஜ்ஞாநேந்த்ரியங்களை இங்கே கொள்ள வேண்டா. அவை செயலுக்கு நேராகக் காரணங்களல்லவே. ப்ராண வாயுவின் ஸஞ்சாரம் பலவிதம். அவற்றை சேஷ்டா என்றது. ஒரே வாயு ப்ராண—அபாந வ்யாந உதாந—ஸமாநங்களென்ற பிரிவுகளைக் கொள்வது ப்ரஸித்தம். அது போல் நாக-கூர்ம-க்ருகர-தேவதத்த தநஞ்ஜயங்களென்ற வேறு பிரிவுகளும் உண்டு. அந்தந்தப் பிரிவினால் செய்யப்படும் செயலும் வெவ்வேறாகும். (14)

शरीरवाङ्मनोभिर्यत् कर्म प्रारभते नरः ।
न्याय्यं वा विपरीतं वा पञ्चैते तस्य हेतवः ॥ १५ ॥

சரீரவாங்மநோபிர் யத் கர்ம ப்ராரபதே நர: |
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: || 15 ||

शरीरवाङ्मनोभिः—உடலாலும் வாக்கினாலும் மனத்தாலும்
न्याय्यं वा—சாஸ்த்ரத்தினின்று விலகாததோ
विपरीतं वा—அதற்கு மாறானதோ
यत् कर्म—எந்தக் கர்மாவை
नरः प्रारभते—மனிதன் தொடங்குகிறானோ
एते पञ्च—கீழ்க் கூறிய அதிஷ்டாநாதிகள் ஐந்தும்
तस्य हेतवः—அந்தந்த கர்மாவுக்குக் காரணங்களாகின்றன.

மனோவாக்காயங்களென்ற முக்கரணங்கள் மூலம் எல்லாச் செயல்களும் உண்டாகின்றன. அவற்றில் சில சாஸ்த்ரம் இசைந்தனவாம். சாஸ்த்ரத்தை மீறிச் செய்வதும் உண்டு இவற்றில் ஒவ்வொன்றுக்கும் இவ் ஐந்தும் காரணங்களாம். உலகில் காயிகம் வாசிகம் மானஸம் என மூன்றாகப் பிரிப்பர். வாசிகம் தவிர மற்ற கர்மேந்த்ரியங்கள் மூலம் ஆவதெல்லாம் காயிகத்தில் அடங்கும். அந்த இந்திரியங்கள் அன்றி தலை முதலான மற்ற அங்கங்களாலாம் செயலையும் கூட்ட காயிகம் என்ற பிரிவு அவசியமாகையால் அதிலே அவற்றையும் சேர்த்தனர். சரீரத்திலில்லாமல் இந்த்ரியத்தில் மட்டும் செயல் உண்டாகாது. வெகுதூரம் பரவும் சப்தத்திற்குக் காரணமான வாசிகத்திற்குத் தனிச் சிறப்பாம். மானஸம் உட்கருவியினால் மட்டுமாவது. ப்ராணனே உடல் கருவியெல்லாவற்றையும் தரிப்பது. அதன் துணையின்றி ஜீவன் என்ன முயன்றாலும், செயலொன்றும உண்டாகாதாகையாலே அது காரணமாகிறது. தெய்வமெனப்படும் பரமாத்மா காரணமென்பது சாஸ்த்ரம் கூறுவதால் கொள்ளக் கூடியதே. அனுபவத்தினாலேயே அறியக் கூடிய

நான்கைக் கூறி சாஸ்த்ரத்தினால் அறியக் கூடிய தெய்வத்தைக் கடைசியில் ஐந்தாவதாகக் கூட்டினார். செயல்கள் உண்டாகும் இடம் உடலும் வாக்கும் மனமும். செயலுக்குத் தாம் ஆதாரமாகாமல் அவ்விடங்களில் அவற்றை உண்டுபண்ணுபவை கர்த்தாவும் ப்ராணனும் தெய்வமும். உடலினுள் ப்ராணவாயு நமது முயற்சியின்றியே பலவிதமாக ஸஞ்சாரம் செய்கிறது. அச்செயலை இங்கே கொள்ளவில்லை, ஜீவனுடைய புத்திக்கு அதில் ஸம்பந்தமில்லையே. அனுபவத்தில் தெரியாமற் போனதால் ஐந்தாவதாகச் சொல்லப்பட்ட அந்த தெய்வந்தான் முக்கியமான தென்பதும் பஞ்சமம் என்றவிடத்திலே கருதப்பெறும். ப்ரதானகர்த்தா அவனே. அவனது ஆதீனத்தில் தான் ஜீவன் எதையும் செய்யவாகிறது.

ஆகில் நல்லது கெட்டதெல்லாம் செய்வது முக்கியமாய் பரமாத்மா என்றால் அவற்றின் பலனையும் அவன் தானே அனுபவிக்க வேண்டும்; ஜீவன் ஸுகதுக்கங்களை அனுபவிப்பதேன் என்னில்— அப்போது ஜீவனுக்கு ஸுகானுபவத்திற்கே வழியிராமற் போகுமே. அதற்காக பகவான் எந்த ஜீவனைக் கொண்டு எந்த நன்மையைச் செய்கிறானோ அதன் பலனை அந்த ஜீவனுக்குத் தந்தாலொழிய ஸுகத்திற்கு வழியில்லையாகையால் அதை ஜீவனுக்கு விரும்பினால், அதுபோல் தீமைச் செயலால் வரும் துன்பத்தையும் பெறுவதே தகும். அதை மட்டும் பகவானே பெறட்டும் என்னல் தகாது.

அவன் செய்விக்க இவன் செய்கிறானாகில் உபதேசமான சாஸ்த்ரம் எதற்காக? அந்தர்யாமியாய் உள்ளே இருந்து ஆட்டினபடி இவன் ஆடுவது தானே யாகு மென்னில், பிராணியின் ப்ரயத்னத்திற்கு இடமின்றி காற்றும் வெள்ளமும் பிராணியை அடித்துக் கொண்டு போவது போல் பகவான் இவனைத் தள்ளுவதில்லை. அசேதனமான யந்த்ரத்திலே செயலை உண்டு பண்ணுவது போல் உடலிலும் கருவிகளிலும் செயலை விளைப்பதில்லை. அப்போது ஜீவனுக்கு ஸுகதுக்கங்களைக் கொடுப்பதற்குக் காரணம் கூறப்படவாகாது. எனவே ஜீவனையே கர்த்தாவாக்குகிறான். அதாவது அறிந்து விரும்பி முயன்று செய்பவனாக்குகிறான். அவ்வறிவை அவனுக்கு விளைவிக்க உபதேசம் அவசியமாகிறது. அதனால் நல்லது கெட்டது அறிந்து விவேகம் பெற்று ஜீவன் மேலே ஏறி வருகிறான். இப்படியிருந்தும் கெடுவது உபதேசத்தைக் கவனியாமையாலாம். எல்லாம் முன் முன் பிறவியில் சேர்ந்த புண்ய பாபங்களுக்கு ஈடாக நடக்கும்.

பாபத்திற்கும் புண்யத்திற்கும் பொதுவான உடலையும் கருவியையும் பகவான் அளித்திருக்க ஏன் சிலர் பாவத்தையே செய்கின்றனரென்னில்— அதற்கு அவர்களுடைய முன்வினையே காரணமாகும். நன்மைக்கு மட்டும் ஆம்படி ஏன் பகவான் உடலை யளிக்கலாகாது என்னில், மோக்ஷத்தில் அத்தகைய உடல் தான் அளிக்கப்படுகிறது.

இங்கே முன்வினைக்குத் தக்கவாறு இவ்வாறு தான் கொடுக்க முடியும். முன் வினையையும் இவன் தானே செய்வித்தான் என்னில், உண்மையில் இவன் செய்விக்கிறவனே. ஆனாலும் கருவிகளையும் கொடுத்து உபதேச வழியையும் காட்டி ஜீவன் எவ்வாறு இழிகிறான் என்பதை அவன் பார்க்கிறான். அறிவு என்ற சக்தி இவனிடம் இருக்கிறதே. அதைக் கொண்டு இவன் எதில் முதலில் இழிகின்றானோ, அதில் இவன் இழிந்ததற்கேற்ப அவன் அனுமதித்து (ஸம்மதித்து) இவன் இஷ்டப்படி அதைத் துணையாயிருந்து நடத்திவைக்கிறான். இவனுக்காகவே அவன் நடத்திவைப்பதால் அதனால் வரும் தீமையையும் நன்மையைப் போல் இவனே பெறுவதாகும். தீயசெயல் என்று தெரிந்திருக்கும் ஈச்வரன் இவனை விலக்காமல் துணையாயிருந்து செய்விக்கலாமோ என்னில், அப்போது இவனது ஸ்வாதந்த்ர்யத்தைக் கெடுத்ததாகுமே. அது கூடாது. இவனே ஸ்வாதந்த்ரியத்தால் நாளடைவில் தேறி நன்மையிலே யிழிய வேண்டும். எவன் அவ்வாறு தேறி வந்தானோ அவன்விஷயத்தில் உத்ஸாஹமாக மேன் மேல் தானே பகவான் தனது அருள் என்ற மஹாகுணத்திற்கு வசப்பட்டு நன்மைக்கு முயன்று வருவான். ஆசைப்பட்டு இதனை இசைவதாகில், ஒருவன் ஸ்வாதந்த்ரியத்தைக் கேடான வழியிலேயே பயன்படுத்தி அசுரனாக நடப்பானாகில் அவன் விஷயத்தில் தண்டனையில் பகவான் முயல்வதும் அது போல் நியாயமென்றே கொள்ள வேண்டும்.

இங்கே ஒரு கேள்வியுண்டு. முதலில் பகவான் உதாஸீனனாயிருக்க ஜீவன் எது விஷயமாக ப்ரவ்ருத்தி செய்கிறானோ, அது விஷயத்திலே அவன் அனுமதி செய்கிறான் என்னலாகுமோ. அதுவும் பூர்வகர்மாதீனம் தானே. கர்மாவாவது முடிவில் அவனது ஸங்கல்ப்பம் தானே. ஆக அவனை உதாஸீனன் என்பது ஏங்ஙனே என்றவாறு. இதற்கு இருவிதமான மறுமாற்றம். அவன் ஸங்கற்பத்தினால்தான் ஆகிறது. உதாஸீனன் என்றால், இதையே இவன் செய்தாக வேண்டுமென்ற பிடிவாதம் பகவானுக்கில்லை யென்பது தான் பொருள் என்பது ஒன்றாகும். மற்றொன்றாவது—செயலுக்கு வேண்டும் சூழ்நிலைகளை ஏற்படுத்தும் ஈச்வரன், இந்த ஜீவன் இத்தொழிலையே செய்ய வேண்டுமென்று ஒன்றைக் குறிப்பிடுவதில்லை. ஆனாலும் ஒன்றிலேயே இவன் இழிவது அந்த தேசகால தசைகளின் வாய்ப்புக்கு இணங்கவாம். அந்த தேச காலங்களை பகவான் இவனுக்காக என்று வைக்கவில்லை. பொதுவில் பல கார்யத்திற்காக வைக்கிறான் ஆகையால் பகவான் முதலில் பொதுவான காரணமே அதனால் உதாஸீனனாகிறான் என்றதாம். அப்போது கெட்டதினின்று தடுக்கமாட்டான். இத்தகைய ஈச்வரனையே சாஸ்த்ரமூலம் நாம் அறிவது. தயை தண்டனை எல்லாம் புரிகின்றவனே ஈச்வரனாவான்.

இது விஷயத்தில் விரிவு முன்னோர்களின் மொழிகளிலாம். அவற்றின் ஸாரத்தை இங்கே ஒருவாறு உரு அமைத்துத் தெளிவித்தனம். (15)

எச்செயலுக்கும் ஐந்து காரணங்கள் உண்டென்று சொன்னது எதற்காகவோ, அதைக் கூறுகிறார்—

**तत्रैवंसति कर्तारमात्मानं केवलं तु यः ।**
**पश्यत्यकृतबुद्धित्वान्न स पश्यति दुर्मतिः ॥ १६ ॥**

*தத்ரைவம்ஸதி கர்த்தாரம் ஆத்மாநம் கேவலம் து ய: |*
*பச்யத்யக்ருதபுத்தித்வாத் ந ஸ பச்யதி துர்மதி: || 16 ||*

एवं सति—இப்படி பகவானின் அனுமதியால் கர்த்தாவாகின்ற போது
तत्र—அந்தக் கார்ய விஷயத்திலே
केवलं आत्मानं—தன்னை மட்டும்
कर्तारं—கர்த்தனாக
यः तु पश्यति—யாவனொருவன் பார்க்கிறானோ,
सः दुर्मतिः—விபரீத புத்தியுடையனான அவன்
अकृतबुद्धित्वात्—தெளிவான அறிவு பெறப்படவில்லையாகையால்
न पश्यति—கர்த்தாவைக் காண்பவனல்லன்.

ஐந்து காரணங்களில் ஜீவாத்மாவைமட்டும் கர்த்தா என்ற சொல்லால் கீழே கூறினார். அதனால் மற்றவை துணையானவை, இவன் கர்த்தா என்று தெரியவரும். உண்மையில் இவனுக்கே அறிவும் முயற்சியும் இருப்பதால் இவனே கர்த்தா என்ன வேண்டும். உடல் முதலானவற்றில் க்ரியை உண்டாவதானாலும் அதற்கான ப்ரயத்னமென்ற முயற்சி ஜீவாத்மாவினிடமேயுள்ளது. அசேதனங்களுக்கு இல்லை. ஆனால் ஸர்வேச்வரனுடைய ஸங்கற்பம் ப்ரதானகாரணமாகையால் அவனுக்கு அடங்கிய கர்த்தாவாகவும் கொள்ளவேண்டும் இப்படியிருக்கத் தன்னைமட்டும் கர்த்தாவாகக் கொள்வது தவறு. உண்மையில் கர்த்ருத்வமிராத உடலிலும் இந்திரியங்களிலும் கர்த்ருத்வத்தை ஏறிட வேண்டும். அவற்றிலும், அங்குள்ள ஸத்துவ ரஜஸதமோ குணங்களுக்குத் தக்கவாறு செயல்கள் உண்டாவதால் குணங்களைக் கர்த்தாவாக நினைக்க வேண்டுமென்றும் நவின்றார். नवद्वारे पुरे देही नैव कुर्वन् न कारयन्, इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्ते इति धारयन्, गुणा गुणेषु वर्तन्त इति मत्वा न सज्जते என்றவாறு. ஏனெனில், அந்தந்த உடல் முதலானவற்றிற்கு இணங்கவல்லவோ வர்ணாச்ரம தர்மங்களும் சாஸ்த்ரத்திற்கு உடன்பட்டிருக்கையும். முக்தனான பிறகு இவற்றிற்குத் தக்க வியாபாரம் இவனிடம் இல்லை. ப்ரக்ருதிமண்டலத்தில் செய்வதெல்லாம் துணையான இவற்றின் போக்குக்குத் தக்கவாறே. இப்படி கர்த்தவாக மாட்டாத அவற்றிலேயே கர்த்ருத்வத்தை ஏறிடும்போது உண்மையில் ப்ரதான கர்த்தாவான பரமாத்மாவினிடம் அதைக் கொள்வதில் தடை என்ன? 'அவனால் என்ன, எல்லாம் சூழ்நிலைப்படி நடக்கிறது' என்ற மதத்தில் இழிந்து ப்ரதான கர்த்தாவான அவனை மறந்திருக்கும் வரையில் மோக்ஷம் இல்லை. எதற்கும் அவனே ப்ரதான கர்த்தா என்று அவனை ஸ்வதந்த்ரனாகவும் தன்னை அவனுக்கே முக்ய பரதந்

த்ரனுகவும் ஒவ்வொரு க்ஷணத்திலும் நினைத்தே எல்லாம் செய்கின்ற ஸுமதிக்கு அவன் மோக்ஷம் அளிக்க விரைகிறான். ஆகையால் தன்னை மட்டும் கூட்டிக் கொள்ளாமலும் அவனையே ப்ரதான காரணமாகக் கொண்டு அவனிடம் मयि सर्वाणि संन्यस्याध्यात्मचेतसा என்றபடி ஸாத்துவிக த்யாகம் செய்தும் எதையும் செய்ய வேண்டுமென்று சொன்னதாயிற்று. இப்படி கீழ்க் கூறிய ஸாத்விக த்யாகத்துடன் இதற்குச் சேர்த்தியைத் தெளிக. (16)

यस्य नाहंकृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते ।
हत्वाऽपि स इमान् लोकान् न हन्ति न निबध्यते ॥ १७ ॥

யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர் யஸ்ய ந லிப்யதே |
ஹத்வாऽபி ஸ இமாந் லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே || 17 ||

यस्य भाव:—எவனுடைய எண்ணமானது
न अहंकृत:—நானென்ற அபிமானத்தினுலாகவில்லையோ
यस्य बुद्धि:—எவனது புத்தியானது
न लिप्यते—கர்மாவையும் பலனையும் தனதாகக் கொள்ளவில்லையோ, என்னுடையதல்ல என்றவாறு உளதோ
स:—அந்த த்யாகி, போரில்
इमान् लोकान्—இவ் உலகங்களையெல்லாம்
हत्वा अपि—கொன்றாலும்
न हन्ति—கொல்லுகிறானல்லன் ;
न निबध्यते—மோக்ஷ விரோதியான பலனால் கட்டுண்ணப் படமாட்டான்.

கர்த்ருத்வம், பலன், மமதை என்ற மூன்றையும் த்யாகம் செய்து கீழ்க் கூறியவாறு செயல்களைச் செய்பவனுக்கு பலனை யனுபவிப்பதென்ற ஸம்ஸாரபந்தம் கிடையாதாகையாலே இந்த பீஷ்ம த்ரோணாதிகளான எதிரிகளை மட்டுமென்பதென். எல்லா உலகங்களும் எதிர்த்து நின்றால் கூட அவற்றைக் கொல்வதால் ஸம்ஸார பந்தத்திற்கு ஆளாக மாட்டான. நிஷித்தமான செயலாகில் ஸாத்விக த்யாகத்துடன் செய்ய வாகாது. சாஸ்த்ரம் விதித்த யுத்தத்தை நடத்துவதில் கொலை என்கிற தோஷத்திற்கு இடமில்லையாகிலும பலனில் நசையும் தான் செய்வதாக எண்ணமுமுண்டாகில் தகாத சிலவற்றைச் செய்யவும் மனம் துணியும். ஸம்ஸார பந்தமும் நேரும். பலனை விட்டவனுக்கு வெற்றி தோல்வி எல்லாம் ஒன்றே யாகையால் ஒழுங்காக எல்லாம் நடக்குமாகையால் கொலையென்ற குற்றத்திற்குச் சிறிதும் இடமில்லை. ஸாத்விக த்யாகம் செய்த படியால் ஸம்ஸார பந்தமுமில்லை யென்றபடி. (17)

இது வரையில் கூறப்பட்ட த்யாகமானது ஸத்துவ குணத்தில் செழிப்பாலாவதொன்றாகையால் கர்மாவில் ஸாத்விகாதியான பிரிவைப் பணிக்கப் போகின்றாராய் கர்மவிதி வகையைக் கூறுகிறார், அதில் அடங்கிய சிலவற்றில் ஸாத்விகாதி பேதம் சொல்வதற்கு இது அனுகூலமாகுமாதலான்—

ज्ञानं ज्ञेयं परिज्ञाता त्रिविधा कर्मचोदना ।
करणं कर्म कर्तेति त्रिविधः कर्मसंग्रहः ॥ १८ ॥

ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்மசோதநா |
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித: கர்மஸங்க்ரஹ: || 18 ||

कर्मचोदना—கர்மாவை விதிக்கும் சாஸ்த்ரமானது
ज्ञानम्—அறிவு
ज्ञेयम्—அறியப்பட வேண்டியது
परिज्ञाता—தெளிவாய் அறிகின்றவன்
इति त्रिविधा—என்ற மூன்றை உட்கொண்டதாகும்.
कर्मसंग्रहः—கர்மாவின் ஸித்தியானது
करणं—அதற்கு வேண்டும் த்ரவ்யம் முதலானவை
कर्म—அந்த கர்ம
कर्ता—அதைச் செய்கின்றவன்
इति त्रिविधः—என்ற மூன்றைக் கொண்டதாகும்.

சாஸ்த்ரமானது அறிகின்றவனுக்கு அறிய வேண்டுமவற்றில் அறிவைத் தரும். கர்மாவைப் பெறலென்பது அதற்கு வேண்டும் த்ரவ்யத்தைக் கொண்டு அனுஷ்டிக்கிறவன் கர்மாவைச் செய்த போதே யாகுமாகையால் இதற்கும் மூன்று வேண்டும்.

கீழ்க் கூறிய ஆறு பிரிவுகளில் மூன்றை முக்கியமாகக் காட்டுகிறார். அவற்றில் ஸாத்விகாதி பேதங்களைக் கூறுவதற்காக—

ज्ञानं कर्म च कर्ता च त्रिधैव गुणभेदतः ।
प्रोच्यते गुणसंख्याने यथावच्छृणु तान्यपि ॥ १९ ॥

ஜ்ஞாநம் கர்ம ச கர்த்தா ச த்ரிதைவ குணபேதத: |
ப்ரோச்யதே குணஸங்க்யாநே யதாவச் ச்ருணு தாந்யபி || 19 ||

ज्ञानं—(கீழ்க் கூறிய ஆறில்) அறிவும்
कर्म च—செயலும்
कर्ता च—செய்கின்றவனும்
गुणसंख्याने—ஸத்வாதி குணங்களின் கார்யத்தை எண்ணும் போது
गुणभेदतः—மூன்று குணமாகையால்
त्रिधा एव—மூன்றாகவே
प्रोच्यते—பிரித்துச் சொல்லப்படுகிறது.
तानि अपि—அவற்றையும்
यथावत् शृणु—உள்ளபடி கேட்பாயாக.

ஸத்வாதி குணங்கள் செய்யும் கார்யமென்ன என்றபோது அதனைக் காண்பிப்பதற்காக ஜ்ஞானம் கர்ம கர்த்தா என்ற மூன்றில் அப்பிரிவு தெரிவிக்கப்படும். கர்ம சோதனையிற் சொன்ன மூன்றில் ஞானமொன்றைச் சொன்னால் போதும். ஜ்ஞேயமும் கர்மாவும், ஜ்ஞாதாவும் கர்த்தாவுமொன்றாகையால் கர்மஸங்க்ரஹத்திற்கான மூன்றில் அடங்கிவிடும். இதன் மூன்றில் கரணமென்பது கர்மாவில் ஸாத்விகாதி பேதம் சொல்லும் போது அதில் அடங்கிவிடும். ஆக ஆறில் மூன்றே கூறப்பட வேண்டியவை. (19)

முதலில் ஜ்ஞானத்தில் ஸாத்விகாதி பேதத்தைக் கூற மூன்று ச்லோகங்கள்—

**सर्वभूतेषु येनैकं भावमव्ययमीक्षते ।**
**अविभक्तं विभक्तेषु तत् ज्ञानं विद्धि सात्त्विकम् ॥ २० ॥**

*ஸர்வபூதேஷு யேநைகம் பாவம் அவ்யயமீக்ஷதே |*
*அவிபக்தம் விபக்தேஷு தத் ஜ்ஞாநம் வித்தி ஸாத்விகம் || 20 ||*

सर्वे भूतेषु—கர்மானுஷ்டானம் செய்கின்ற எல்லா ப்ரஜைகளில்
विभक्तेषु—வர்ணம் உரு முதலானவற்றில் பல பிரிவு கொண்டவர்களில்
अविभक्तं—அதுபோல் பிரிவின்றி
अव्ययम्-அங்குப் போல் அழிவுமின்றி
एकम्—ஒரே விதமாயிருக்கும்
भावम्—ஆத்ம வஸ்துவை
येन—எந்த ஜ்ஞானத்தினால்
ईक्षते—க்ரஹிக்கின்றானோ,
तत् ज्ञानम्—அந்த ஜ்ஞானத்தை
सात्त्विकं विद्धि—ஸத்துவ குண மூலமாமெனை அறிந்து கொள்.

ஸாத்துவிக த்யாகத்துடன் செய்வது கர்ம யோகாதிகளுக்காகவாகையால், ஒரேவிதமாய் ஜீவாத்மாக்கள் இருக்கின்றனர்–தேஹத்திலுள்ள பிரிவுகளையெல்லாம் ஆத்மாக்களில் கொள்ளக் கூடாதென்று தெளிந்திருக்க வேண்டும். இதே இதன் பொருள். கர்மாவை யனுஷ்டிக்க கர்மஜ்ஞானம் வேண்டுமென்பது ஸாத்விகராஜஸதாமஸகர்மாக்களில் எல்லாவற்றிலுமாமாகையால் அதை இங்குக் கூற அவசியமில்லை. (20)

**पृथक्त्वेन तु यद्ज्ञानं नाना भावान् पृथग्विधान् ।**
**वेत्ति सर्वेषु भूतेषु तद्ज्ञानं विद्धि राजसम् ॥ २१ ॥**

*ப்ருதக்த்வேந து யத் ஞாநம் நாநாபாவாந் ப்ருதக்விதாந் |*
*வேத்தி ஸர்வேஷு பூதேஷு தத் ஞாநம் வித்தி ராஜஸம் || 21 ||*

यत् ज्ञानम्—எந்த ஜ்ஞானமானது
सर्वेषु भूतेषु—எல்லா பிராணிகளிடமுள்ள
भावान्—ஆத்ம வஸ்துக்களை அவரவர் வேண்டும் பலனுக்குத் தக்கவாறு
पृथक्त्वेन—வெவ்வேறு இனமாகவும்
नाना- வெவ்வேறு குணமுள்ளனவாகவும்
पृथग्विधान्—வெவ்வேறு பலனில் நோக்கு உள்ளனவாகவும்
वेत्ति—அறிந்து கொள்ளுமோ,
तत् ज्ञानम्—அந்த அறிவை
राजसं विद्धि—ராஜஸஜ்ஞானமாகக் கொள்.

வெவ்வேறு பலனுக்காக அந்தந்த வர்ணாச்ரமங்களுக்கு உரிய வெவ்வேறு கர்மாக்களில் இறங்குகின்றவர் தேஹத்தில் பல வேறுபாடு உள்ளது போல் ஆத்மாக்களிலும் (கர்மானுகுணமாக ஏற்பட்ட) வாசியுண்டு என்று நினைத்திருப்பார். கீழ் ச்லோகத்தில் एकं भावम् என்று

தற்கு மாருக नाना भावान् என்ருர். எப்போதும் ஜீவாத்மாக்கள் பலரே. ஆனுலும் முமுக்ஷுக்கள் எல்லா ஆத்மாவையும் ஒரே விதமாக நினைப்பர், ஜ்ஞாநாநந்தமாய் எல்லாம் பரமாத்ம சேஷமாயிருப்பதால். மற்ற பேருக்கு அத்தெளிவு இல்லையாகையால் ஒவ்வோர் ஆத்மா ஒவ்வொரு விதமாயிருக்கும் புண்ய பாபங்கள் பலவிதம் செய்திருப்பதாலென்று நினைப்பர் என்கிற வாசியைக் கொண்டு இவ்வாறு கூறினதென்க. पृथग्विधान् என்றது பல பலன்களில் ஈடுபட்டிருப்பர் என்றறிவிக்கவாம்.

यत्तु कृत्स्नवदेकस्मिन् कार्ये सक्तमहेतुकम् ।
अतत्त्वार्थवदल्पञ्च तत् तामसमुदाहृतम् ॥ २२ ॥

யத்து க்ருத்ஸ்நவத் ஏகஸ்மிந் கார்யே ஸக்தம் அஹேதுகம் |
அதத்வார்த்தவத் அல்பஞ்ச தத் தாமஸம் உதாஹ்ருதம் || 22 ||

यत्—எந்த ஜ்ஞானமானது
अतत्त्वार्थवत्—விபரீதமாக வஸ்துவை க்ரஹித்ததாய்
अल्पं च-சொற்ப பலனுக்காகின்றதுமாயிருந்தே
एकस्मिन् कार्ये-ஒரு சிறிய கார்யத்தில்
कृत्स्नवत्—முழுமையான சிறந்த கார்யத்திற் போலே
सक्तम्—பற்றுள்ளதோ
अहेतुकम्-அவ்வாறிழிவதற்குத் தக்க காரணமுமற்றதோ,
तत्—அந்த ஞானம்
तामसम् उदाहृतम्—தாமஸமென்னப்படும்.

பூதப்ரேதகணங்களின் ஆராதனத்திலிழிவதும் அதனாலாம் பலனை மிகப் பெரிதாக நினைப்பதும் வேறு முக்கியமானவற்றை கவனிக்காமையும் தாமஸ ஞானமுள்ளவருக்கே யாகும். (22)

ஞானம், கர்ம, கர்த்தா என்ற மூன்றில் ஞானத்திலுள்ள பிரிவுகள் பணிக்கப் பெற்றன. அடுத்தது கர்ம—

नियतं संगरहितम् अरागद्वेषतः कृतम् ।
अफलप्रेप्सुना कर्म यत् तत् सात्त्विकमुच्यते ॥ २३ ॥

நியதம் ஸங்கரஹிதம் அராகத்வேஷத: க்ருதம் !
அபலப்ரேப்ஸுநா கர்ம யத் தத் ஸாத்விகம் உச்யதே || 23 ||

नियतं—தன் வர்ணாச்ரம நிலைக்குத் தக்கதும்
संगरहितं—நான் கர்த்தா என்றாற் போன்ற பற்றற்றதும்
अरागद्वेषतः—புகழில் ஆசை பழியில் த்வேஷமென்ற காரணமின்றி
अफलप्रेप्सुना—பலன் பெற வேண்டுமென்ற விருப்ப மற்றவனால்
कृतं—செய்யப் பெற்றதுமாம்
यत् कर्म—எந்தச் செயலோ,
सात्त्विकम्—ஸாத்விகமாக
तत् उच्यते—அது சொல்லப்படும்.

यत्तु कामेप्सुना कर्म साहंकारेण वा पुनः ।
क्रियते बहुलायासं तत् राजसमुदाहृतम् ।। २४ ।।

யத் து காமேப்ஸுனா கர்ம ஸாஹங்காரேண வா புந: |
க்ரியதே பஹுளாயாஸம் தத் ராஜஸம் உதாஹ்ருதம் || 24 ||

यत् तु कर्म—எந்த கர்மாவானது
कामेप्सुना—பலன் பெற விரும்பியவனுல்
साहंकारेण वा पुनः—நானே காரண மென்ற அஹங்காரமுமுடையவனுல்
बहुलायासं—பலனுக்கு மேலான பிரயாஸையுடன்
क्रियते—செய்யப்படுகிறதோ,
तत्—அந்த கர்ம
राजसम् उदाहृतम्—ராஜஸமாகக் கூறப்படும்.

பாதம் பூர்த்தியாவதற்காக पुनः என்றதென சாங்கர பாஷ்யத்திலுள்ளது. நமது பாஷ்யத்தில் 'யத்து புந:' என்று சேர்க்கப்பட்டது. விசேஷமொன்றுமில்லாமையால் वा पुनः என்று இருப்பதால் அஹங்காரத்துடன் அதாவது நானே சாதிக்கிறேன் என்ற அபிமானத்துடன் சேராமற்போனாலும் சேர்ந்தாலும் பலத்தில் நசை யிருப்பதால் ராஜஸமே என்ற கருத்துமாம்—

अनुबन्धं क्षयं हिंसामनवेक्ष्य च पौरुषम् ।
मोहादारभ्यते कर्म यत् तत् तामसमुच्यते ।। २५ ।।

அநுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாம் அநவேக்ஷ்ய ச பௌருஷம் |
மோஹாத் ஆரப்யதே கர்ம யத் தத் தாமஸம் உச்யதே || 25 ||

अनुबन्धं-பின்னுல்வரும் கேட்டையும்
क्षयम्-செய்யும்போதிருக்கும் பணச் செலவையும்
हिंसाम्—பல ஜீவஹிம்ஸையையும்
पौरुषं च—தனது சக்தியையும்
अनवेक्ष्य—கவனியாமல்
मोहात्-ஸர்வேச்வரன் கர்த்தா என்பதை யறியாமல்
यत् कर्म—எந்தக் கர்ம
आरभ्यते—செய்யப்படுகிறதோ
तामसं—தாமஸமாக
तत् उच्यते—அது கூறப்படும்.

கர்மாவில் ஸாத்விகாதி பிரிவு பணிக்கப் பெற்றது. இனி கர்த்தாவின் விஷயத்தில் அப் பிரிவு—

मुक्तसंगोऽनहंवादी धृत्युत्साहसमन्वितः ।
सिद्ध्यसिद्ध्योर्निर्विकारः कर्ता सात्त्विक उच्यते ।। २६ ।।

முக்தஸங்கோऽநஹம்வாதீ த்ருத்யுத்ஸாஹஸமந்வித: |
ஸித்த்யஸித்த்யோர் நிர்விகார: கர்த்தா ஸாத்விக உச்யதே || 26 ||

मुक्तसंगः—பலனிற் பற்றை விட்டவன்
अनहंवादी—தான் கர்த்தா என்றுதவன்
धृति उत्साह समन्वितः—இடையில் வரும் தடையைப் பொறுத்துத் துணிவும் பலமான முயற்சியுமுடையவன்
सिद्धि असिद्ध्योः—தன் முயற்சிப்படி நிறைவேறினாலும் இல்லையானாலும் அவற்றில்
निर्विकारः—சித்தத்தில் கலக்கமற்றவன்
सात्त्विकः कर्ता उच्यते—ஸாத்துவிக கர்த்தாவாகக் கூறப்படுகிறான்.

रागी कर्मफलप्रेप्सुः लुब्धो हिंसात्मकोऽशुचिः ।
हर्षशोकान्वितः कर्ता राजसः परिकीर्तितः ॥ २७ ॥

ராகீ கர்மபலப்ரேப்ஸு: லுப்தோ ஹிம்ஸாத்மகோऽசுசி: |
ஹர்ஷசோகாந்வித: கர்த்தா ராஜஸ: பரிகீர்த்தித: || 27 ||

रागी—புகழில் நோக்கு உடையன்
कर्मफल प्रेप्सुः—கர்மாவுக்கு சாஸ்த்ரம் ஓதின பலனையும் பெற விரும்பினவன்
लुब्धः—பணச் செலவில் மனமிராதவன்
हिंसात्मकः—ஹிம்ஸித்து வேலை வாங்குகிறவன்
अशुचिः—கர்மானுஷ்டானத்திற்கு உரிய சுத்தி யற்றவன்
हर्षशोकान्वितः—கார்யம் நிறைவேறினால் மகிழ்ச்சியும் இல்லையேல் வருத்தமும் உடையவன்
राजसः कर्ता—ராஜஸ கர்தாவாக
परिकीर्तितः—கூறப்படுகிறான்.

अयुक्तः पापकृत् स्तब्धः शठो नैकृतिकोऽलसः ।
विषादी दीर्घसूत्री च कर्ता तामस उच्यते ॥ २८ ॥

அயுக்த: பாபக்ருத் ஸ்தப்த்த: சடோ நைக்ருதிகோऽலஸ: |
விஷாதீ தீர்க்கஸூத்ரீ ச கர்த்தா தாமஸ உச்யதே || 28 ||

अयुक्तः—சாஸ்த்ரீய கர்மாவுக்குத் தகாதவன் (அக்ருத்யம் செய்பவன்)
प्राकृतः—அதற்கான அறிவற்றவன்
स्तब्धः—தொடங்காமையிலே நோக்கு உடையவன்
शठः—பிறர்க்குக் கேடான செயலில் இழிபவன்
नैकृतिकः—வஞ்சனை செய்பவன்
अलसः—ஆரம்பித்த பிறகும் சுறுசுறுப்பில்லாதவன்
विषादी—மிக்க சோர்வு உடையவன்
दीर्घसूत्री च—பிறர்கேட்டைப் பற்றி வெகுநீண்ட ஆலோசனையில் ஆழ்ந்தவனுமானவன்
तामसः कर्ता—தாமஸ கர்த்தாவாக
उच्यते—சொல்லப்படுகிறான்.

இப்படி ஞானம், கர்ம, கர்த்தா என்ற மூன்றில் ஸாத்விகாதி பேதம் தொடங்கியது சொல்லியாயிற்று. இடையில் धृत्युत्साहसमन्वितः என்று த்ருதி கூறப்பெற்றதே அதிலும் அதற்கு மூலமான நிச்சயமாம் புத்தியிலும் ஸாத்விகாதி பேதத்தை மேலே சொல்லுகிறார். அதன் மேல் இதற்கெல்லாம் முடிவான பலன் ஸுகமாகையால் அதிலுள்ள ஸாத்விகாதிபேதத்தையும் அறிவிப்பார். நிச்சயமாவது ஐயப்பாடற்ற அறிவு. கீழே ஜ்ஞானமென்று கூறியது வேறு. இது வேறு. அது ஆத்மாவைப் பற்றிய அறிவு ; இது மோக்ஷத்திற்கும் மற்ற பலனுக்கும் ஏற்றவாறு சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கர்மாவைப் பற்றி சாஸ்த்ர மூலமாகப் பெற்ற தெளிவு. இத் தெளிவும் யதார்த்தமாயுமிருக்கலாம், மாறுபட்டுமிருக்கலாமென்பது மேலே தெளியப் பெறும்—

बुद्धेर्भेदं धृतेश्चैव गुणतस्त्रिविधं शृणु ।
प्रोच्यमानमशेषेण पृथक्त्वेन धनञ्जय ॥ २९ ॥

புத்தேர் பேதம் த்ருதேச்சைவ குணதஸ் த்ரிவிதம் ச்ருணு |
ப்ரோச்யமாநம் அசேஷேண ப்ருதக்த்வேந தநஞ்ஜய || 29 ||

धनञ्जय—அர்ஜுனா !
गुणतः—ஸத்துவாதி குணங்களால்
त्रिविधं—மூன்று விதமான
बुद्धेः धृतेः च—புத்தியினுடையவும் தரிப்பினுடையவும்
भेदम्—உட் பிரிவு
पृथक्त्वेन—பிரிவுபடி
प्रोच्यमानम्—சொல்லப்படுவதை
अशेषेण—முழுமையும்
शृणु—கேட்பாயாக.

புத்தியாவது இந்த வாக்யத்திற்கு இது தான் பொருள் என்று ஐயமற அறிதல். அதில்லாதபோது அனுஷ்டானம் செய்யவாகாது. த்ருதியாவது தொடங்கின செயலை என்ன இடையூறு நேர்ந்தாலும் விடாமல் நடத்திவருவதென்ற மனத்திடம். (29)

प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये ।
बन्धं मोक्षं च या वेत्ति बुद्धिः सा पार्थ सात्त्विकी ॥ ३० ॥

ப்ரவ்ருத்திஞ்ச நிவ்ருத்திஞ்ச கார்யாகார்யே பயாபயே |
பந்தம் மோக்ஷஞ்ச யா வேத்தி புத்திஸ் ஸா பார்த்த ஸாத்விகீ || 30 ||

पार्थ—அர்ஜுனா !
प्रवृत्तिं च—மோக்ஷம் தவிர மற்ற பலனுக்கான தர்மத்தையும்
निवृत्तिं च—மோக்ஷ தர்மத்தையும்
कार्य-अकार्ये—தேச காலங்களுக்கேற்ப தகுமதையும் தகாததையும்
भय-अभये—பயத்திற்கும் பயமின்மைக்கும் இடத்தையும
बन्धं—ஸம்ஸார பந்தத்தையும்
मोक्षं च—மோக்ஷம் இன்னதென்பதையும்
या वेत्ति—எந்த புத்தி உள்ளபடி க்ரஹிக்குமோ
सा बुद्धिः—அந்த புத்தியானது
सात्त्विकी—ஸாத்துவிகமாகும்.

மோக்ஷம் நீங்கலாக மற்ற பலனுக்காகச் செய்யும் தர்மமெல்லாம் ப்ர வ்ருத்தி தர்மமாகும். மோக்ஷத்திற்கான கர்மயோகம் முதலான தர்மங் கள் யாவும் நம்மதப்படி நிவ்ருத்தி தர்மமாகும். அவற்றைச் செய்யும் போது, தேசம், காலம், தனது தசை எல்லாம் கண்டு அததற்கு இணங்க நடத்த வேண்டும். ஸர்வேச்வரனின் ஆணையை மீறினால் அபாயம், அதன் படி நடந்தால் தான் அபயம் என்ற விவேகமும் வேண்டும். ஸம்ஸார மாவது என்ன, மோக்ஷமாவது என்ன என்று பலனைப் பற்றிய தெளி வும் வேண்டும். தர்மாநுஷ்டானம் செய்பவருக்கு அறிய வேண்டு மிவை யெல்லாம் சிறிதும் மாறுதலின்றி செவ்வனே அறியப் பெறுமா கில், அந்த புத்தியை ஸாத்த்விக புத்தியென்று தெளிவதாம். (மேல் ச்லோகத்தில் தர்மம் அதர்மம் என இரண்டு சொல்லப்படுகிற படியால் இங்கும் அதர்ம விஷயத்திலே தெளிவு சொல்லப்பட வேண்டுமே யென்னில்—ஆம், भयाभये என்றதால் அதுவும் சொல்லப்பட்டதெனக. கார்யாகார்ய பதத்திற்கு இரண்டு ச்லோகங்களிலும் பொருள் ஒன்றே யாவதற்காக, தர்மாதர்மங்கள் என்ற பொருள் கொள்ளவில்லை) (30)

**यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च ।**
**अयथावत् प्रजानाति बुद्धिः सा पार्थ राजसी ॥ ३१ ॥**

*யயா தர்மம் அதர்மஞ்ச கார்யஞ்சாகார்யமேவ ச |*
*அயதாவத் ப்ரஜாநாதி புத்திஸ் ஸா பார்த்த ராஜஸீ || 31 ||*

पार्थ—அர்ஜுநா!
यया...எந்த புத்தியினால்
धर्मं अधर्मं च—தர்மாதர்மங்களையும்
कार्यम् अकार्यं च एव—கால தேசங்களுக் கிணங்க செய்யத் தக்க தையும் தகாததையுமே
अयथावत्—உள்ளவிதமன்றி வேறு விதமாக
प्रजानाति—க்ரஹிக்கிறதோ
सा बुद्धिः—அந்த புத்தியானது
राजसी—ராஜஸமாகும்.

ரஜோகுணம் புத்தியின் மாறாட்டத்திற்குக் காரணமாகும். தர்மத் தை தர்மமென்று அறிந்தாலும் அதன் படிகளை-அதற்குள்ள விசேஷங் களை யறியாமற்போனால், அதற்கு அங்கங்களான த்ரவ்யம் தேவதை முதலானவற்றிலே மாறாட்டம் உண்டாகில் ராஜஸ புத்தியாகும். இவ் வாறே அதர்மத்தை அதர்மமென்றறிந்தாலும், எவ்வாறு செய்தால், யார் செய்தால், எந்த தேசகாலங்களில் செய்தால் அதர்மமாகுமென்று தெளிய வேண்டும். இல்லையேல் ராஜஸ புத்தியாம். (31)

**अधर्मं धर्ममिति या मन्यते तमसाऽऽवृता ।**
**सर्वार्थान् विपरीतांश्च बुद्धिः सा पार्थ तामसी ॥ ३२ ॥**

*அதர்மம் தர்மமிதி யா மந்யதே தமஸாऽऽவ்ருதா |*
*ஸர்வார்த்தாந் விபரீதாம்ச்ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ || 32 ||*

पार्थ—அர்ஜுனா!
या बुद्धिः—எந்த புத்தியானது
तमसा आवृता—தமோ குணத்தால் சூழப் பெற்றதாய்
अधर्मं धर्मम्—அதர்மத்தை தர்மமாக
धर्मम् अधर्मम्—தர்மத்தை அதர்மமாக
इति—இந்த ப்ரகாரமாகவே
सर्वार्थान् च—எல்லா வஸ்துக்களையும்
विपरीतान्—வெவ்வேறு வஸ்துவாக
मन्यते—க்ரஹிக்கின்றதோ
सा तामसी—அது தாமஸ புத்தியாம்.

इति என்பதை உத்தரார்த்தத்தில் சேர்க்க. धर्मं इति என்று ப்ரதமை யாகில் உள்ளவிடத்திலே சேரும். सर्वार्थान् என்பதே போதுமாயிருக்க अधर्मं धर्मम् என்று இதை எடுத்துக் கூறியது அர்ஜுனனுக்கு இப்போது யுத்தத்தில் அதர்ம புத்தியும், பிக்ஷையாம் அதர்மத்திலே தர்மபுத்தியும் வந்தது தவறு என்று குறிப்பிடவாம். அதற்காகவே पार्थ என்று விளித்ததுமாம். (32)

இனி த்ருதியின் மூன்று வகைகள்—

धृत्या यया धारयते मनःप्राणेन्द्रियक्रियाः ।
योगेनाऽव्यभिचारिण्या धृतिः सा पार्थ सात्त्विकी ॥ ३३ ॥

த்ருத்யா யயா தாரயதே மந:ப்ராணேந்த்ரியக்ரியா: |
யோகேநாவ்யாபிசாரிண்யா த்ருதி: ஸா பார்த்த ஸாத்விகீ || 33 ||

पार्थ—அர்ஜுனா!
योगेन—யோகமென்ற பலனுடன்
अव्यभिचारिण्या—விட்டுப் பிரியாத
यया धृत्या—எந்த தரிப்பினால்
योगेन—மோக்ஷத்திறகான யோக மென்ற பலன் காரணமாக
मनः—மனமென்ன
प्राण—ப்ராணனென்ன
इन्द्रिय—இந்திரியங்களென்ன
क्रियाः—இவற்றின் செயல்களை
धारयते—விடாமலிருக்கிறானோ,
सा धृतिः—அந்த தரிப்பானது
सात्त्विकी—ஸாத்விகமாகும்.

'தாரயதே' என்பதற்கு, 'நவிமுஞ்சதி' என்பது பொருளென 35வது ச்லோகத்தில் விளங்கும். (33)

यया तु धर्मकामार्थान् धृत्या धारयतेऽर्जुन ।
प्रसंगेन फलाकांक्षी धृतिः सा पार्थ राजसी ॥ ३४ ॥

யயா து தர்மகாமார்த்தாந் த்ருத்யா தாரயதேऽர்ஜுந |
ப்ரஸங்கேந பலாகாங்க்ஷீ த்ருதி: ஸா பார்த்த ராஜஸீ || 34 ||

अर्जुन—அர்ஜுனா!
फल आकांक्षी—பலனை விரும்புகின்றானாய்
प्रसंगेन—பெரும் பற்றுடன்
धर्मकामार्थान्—தர்மார்த்தகாமங்களை
यया धृत्या—எவ்வித தரிப்பினால்
धारयते—விடாமலிருக்கிறானோ
सा धृतिः—அந்த தரிப்பானது
राजसी—ரஜோகுணத்தினாலாம்.

यया स्वप्नं भयं शोकं विषादं मदमेव च ।
न विमुञ्चति दुर्मेधाः धृतिः सा पार्थ तामसी ॥ ३५ ॥

*யயா ஸ்வப்நம் பயம் சோகம் விஷாதம் மதமேவச|*
*ந விமுஞ்சதி துர்மேதா: த்ருதிஸ் ஸா பார்த்த தாமஸீ || 35 ||*

पार्थ—அர்ஜுனா !
यया—எந்த த்ருதியினால்
स्वप्नं मदं—உறக்கம் விஷயானுபவத்தால் வந்த திமிறு இவற்றிற்கானவையும்
शोकं विषादं भयं—சோகம் வருத்தம் அச்சம் என்பவற்றைத் தரும் விஷயங்களைப் பற்றியுமான
मनः प्राणेन्द्रियक्रियाः—மனம் ப்ராணன் இந்த்ரியம் இவற்றின் செயல்களை
दुर्मेधाः—புத்திக்கேடு உடையனாய்
न विमुञ्चति—விடாமலிருக்கிறானோ,
सा धृतिः तामसी—அந்த தரிப்பு தாமஸமாகும்.

உறக்கத்திலும் மதத்திலும் ஸுகாபிமானமுண்டு அது ஒரு வகுப்பு. பயமாவது வரும் கேட்டை நினைத்து வரும் வருத்தம். சோகமாவது முன் ஏற்பட்ட நஷ்டத்திற்கான வருத்தம். விஷாதமாவது அவை நீங்கலாக வர்த்தமான விஷயமான வருத்தமாம். (35)

இனி, பலனான ஸுகத்தில் ஸாத்விகாதி பிரிவு பணிக்கப்படும்—

सुखं त्विदानीं त्रिविधं शृणु मे भरतर्षभ ।

*ஸுகம் த்விதாநீம் த்ரிவிதம் ச்ருணு மே பரதர்ஷப |*

भरतर्षभ—பரத வம்சத்தில் ச்ரேஷ்டனே !
सुखं तु—கீழ்க் கூறியவற்றிற்கெல்லாம் பலனாய் முக்கியமான ஸுகத்தை
त्रिविधं—மூன்று விதமாக
इदानीम्—இப்போது
मे शृणु—என்னிடம் கேள்.

अभ्यासात् रमते यत्र दुःखान्तञ्च निगच्छति ॥ ३६ ॥
यत् तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् ।
तत् सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥ ३७ ॥

*அப்யாஸாத் ரமதே யத்ர துக்காந்தஞ்ச நிகச்சதி || 36 ||*
*யத் தத் அக்ரே விஷமிவ பரிணாமேऽம்ருதோபமம் |*
*தத் ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தம் ஆத்மபுத்திப்ரஸாதஜம் || 37 ||*

अभ्यासात्—வெகு காலப் பயற்சியால்
यत्र—எந்த ஸுகத்தில்
रमते—ப்ரீதி பெறுகிறானோ
दुःख अन्तं च—துக்கத்தின் அழிவுக்கும்
निगच्छति-முடிவெல்லை பெறுகிறானோ,
यत् तत्—எந்த ஸுகம்
अग्रे—யோகத்தின் தொடக்கத்தில்
विषम् इव விஷம்போல் துக்கமாயும்

परिणामे—மேன்மேல் வளரும்போது மாகுமோ,
अमृत-उपमम्—அமுதுபோல் இனிது
आत्मबुद्धि—ஆத்ம விஷயமான அறிவின்
प्रसादजम्—தெளிவினின்றுலான
तत् सुखम्—அந்த ஸுகமானது
सात्त्विकं प्रोक्तम्—ஸாத்துவிகமாகச் சொல்லப்படும்.

ஆத்ம விஷயமான ஸுகம் எளிதிற் பெறப்படமாட்டாது. வெகு காலப் பயிற்சி வேண்டும். முதலில் வெகுநாள் பிரயாசை பெரிதாயும், பலன் தெரியாமையால் கஷ்டமாகவுமிருக்கும். ஆயினும் நாளேறவேற ஸுகம் அனுபவத்திற்கு வந்து அமுதம் போல் மிக்க இனிதாகும். முதலில் பிரயாசையானாலும் பின்னே மிக்க ஸுகமாகின்றதே மனிதருக்கு வேண்டுவது. இவ்வாறு இருப்பது ஆதமாவின் அறிவு மூலமாய் ஆத்ம விஷயமான ஸுகமே. அதே ஸாத்விகமாகும். இந்த ஸுகத்தை இவ்வுடலுடன் இருந்தே ஸத்துவ குணச் சிறப்பால் பெறலாம். இவ்வாறே பரமாத்மானுபவஸுகமுமென்க. (ஆத்ம என்ற சொல் பொதுவாகும்)

विषयेन्द्रियसंयोगाद् यत् तत् अग्रेऽमृतोपमम् ।
परिणामे विषमिव तत् सुखं राजसं स्मृतम् ॥ ३८ ॥

விஷயேந்த்ரியஸம்யோகாத் யத் தத் அக்ரேऽம்ருதோபமம் |
பரிணாமே விஷமிவ தத் ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் || 38 ||

विषय—வெளிவிஷயங்களுடன்
इन्द्रियसंयोगात्—இந்த்ரியங்களின் சேர்க்கையால்
यत् तत्—எந்த ஸுகம்
अग्रे अमृतोपमं—அனுபவ காலத்தில் அமுதம் போலும்
परिणामे—அனுபவத்திற்குப் பிறகு சக்தியீனமும் நரகாதிகளும் நேரும்போது
विषम् इव—விஷம் போலவுமாகின்றதோ,
तत् सुखम्—அந்த ஐங்கருவி காட்டும் இன்பம்
राजसं स्मृतम्—ராஜஸமாகக் கொள்ளப்பட்டது.

இம்மை மறுமையின்பங்கள் கண் வாய் முதலான இந்த்ரியங்களால் அனுபவிக்கப் படுகின்றவை. பிரமனின் உலகு வரையிலுள்ள ஐச்வர்யமெனப் பட்டவை எல்லாம் இந்த ராஜஸ ஸுகமேயாகும். (38)

यदग्रे चानुबन्धे च सुखं मोहनमात्मनः ।
निद्रालस्यप्रमादोत्थं तत् तामसमुदाहृतम् ॥ ३९ ॥

யத் அக்ரே சானுபந்தே ச ஸுகம் மோஹநமாத்மந: |
நித்ராலஸ்யப்ரமாதோத்தம் தத் தாமஸம் உதாஹ்ருதம் || 39 ||

यत् सुखं—எந்த ஸுகமானது
अग्रे च—அனுபவ காலத்திலும்
अनुबन्धे च—பிற்காலத்திலும்
आत्मनः—தனக்கு
मोहनम्—அஜ்ஞானத்திற்கே காரணமாமோ
निद्रा आलस्य—உறக்கம், சோம்பல்
प्रमाद उत्थम्—கவனக்குறைவு இவைகளாலான
तत्—அந்த ஸுகமானது
तामसं—தாமஸமாக
उदाहृतम्—சொல்லப்படும்.

சிலர் உறக்கம், சோம்பல், முக்கியமான விஷயங்களை கவனிக்காமை என்பவற்றையே பாராட்டுவார்கள். அங்கே பெருத்த ஸுகமிருப்பதாக அவர்கள் எண்ணம். அதெல்லாம் மேன்மேல் அறிவைப் பெருமைக்கும் அதனாலே விபரீதமாக நினைப்புக்கும் காரணமாகும். இது தாமஸஸுகமாகும்.

ஆக உள்ள வாழ்நாளில் தாமஸராஜஸங்களை விட்டு ஆத்மானுபவ ஸுகத்திற்கானவற்றைப் பெற வேண்டுமென்றதாயிற்று—

ஆத்மாவுக்கு இயற்கையாய் தர்மபூதஞானவிகாஸத்தினாலாம் பூர்ண ஸுகானுபவத்திற்கு ப்ரக்ருதி மண்டலத்தில் இடமில்லை யென்ற கருத்தினாலே மொத்தமாக மொழிகின்றார்—

न तदस्ति पृथिव्यां वा दिवि देवेषु वा पुनः ।
सत्त्वं प्रकृतिजैर्मुक्तं यदेभिः स्यात् त्रिभिर्गुणैः ॥ ४० ॥

ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புந: |
ஸத்வம் ப்ரக்ருதிஜைர் முக்தம் யத் ஏபிஸ் ஸ்யாத் த்ரிபிர்குணை: ||40||

एभिः—கீழ்க்கூறிய
त्रिभिः गुणैः—மூன்று குணங்களால்
यत् सत्त्वं—யாதொரு ஜீவன்
मुक्तं स्यात्—விடப்பட்டிருக்குமோ,
तत्—அந்த ஜீவன்
पृथिव्यां वा—இவ்வுலகில் ப்ராணிகளிலோ
दिवि देवेषु वा पुनः—மேலுலகில் தேவர்களிலோகூட
न अस्ति—இல்லை.

முக் குணம் விட்ட சேதனன் வேறிடத்திலிருப்பது 'இங்கில்லை' என்ற இச் சொற் போக்கில் குறிக்கப்படும். அது பரமபதத்திலாம். (40)

த்யாகம் ஸந்நியாஸம் என்ற சொல்லின் பொருளைச் செவ்வனே அறிய விரும்பிய அர்ஜுனனுக்கு ஸாத்விக த்யாகமே ஸந்நியாஸம் என்று தெளிவை யளிப்பாராய், ஸத்வரஜஸ்தமோ குணங்களாலான பிரிவுகளைப் பலவற்றிற்குப் பணித்து, ஆத்ம ஜ்ஞான மூலமான ஸுகத்திற்காக அதனைக் கைப்பற்ற வேண்டுமென்று குறிப்பிட்டார். இனி அதுவும் சாஸ்த்ரத்தில் ஓதப்பட்ட தர்மங்களிலே செய்யப்படும்போது அவனவன் வர்ணாச்ரம தர்மத்தை விட்டு வேறொரு வைதிக தர்மத்தில் கொள்ளப்பட்டால் பயனற்றதே யென்பதற்காக நான்கு வர்ணங்களுக்கு தர்மம் பிரிக்கப்பட்டிருப்பதைப் பணித்தருளுகிறார். அப்போது தான் அர்ஜுனன் தன் நிலையை மீறலாகாதென நன்கு தெளிவான்—

ब्राह्मणक्षत्रियविशां शूद्राणाञ्च परन्तप ।
कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवैर्गुणैः ॥ ४१ ॥

ப்ராஹ்மணக்ஷத்ரியவிசாம் சூத்ராணாஞ்ச பரந்தப |
கர்மாணி ப்ரவிபக்தாநி ஸ்வபாவப்ரபவைர் குணை: || 41 ||

परन्तप—சத்ருக்களை வதைப்பவனே!
ब्राह्मणक्षत्रियविशां—அந்தணர் க்ஷத்ரியர் வைச்யர் என்பவருக்கும்
शूद्राणां च—சூத்தரர்களுக்கும்
कर्माणि—தொழில்கள்
स्वभावप्रभवैः—அந்தந்த ஜாதிப் பிறப்புக்குக் காரணமாகக் கொண்டதில் வெவ்வேறான
गुणैः—ஸத்துவரஜஸ்தமோ குணங்களால்
प्रविभक्तानि—வெவ்வேறாகப் பிரிக்கப் பெற்றன.

பிறப்பென்பது பூர்வ கர்மாவுக்கு இணங்கவேயாகும். அந்தந்த வர்ணப் பிறவிக்குத் தக்க முன் பிறவியில் அவரவர் செய்த கர்மாவுக்கு இணங்க அவரவருக்குப் பிறவியை யளிப்பதற்காக ஸத்வாதி குணங்களில் ஏற்றத் தாழ்வு ஏற்படுத்தப்படுகிறது. ஸ்வபாவமாவது அந்தந்த வர்ணத்திற்கான தன்மை; பிறப்பிலிருந்தே அவ்வாறாகைக்குக் காரணமான தனிப்பட்ட விசேஷம். அது இங்கே கர்மாவாகும். அந்தந்த குணப் பிரிவை முன்னிட்டு அந்தந்த வர்ணமென்ற வியவஹாரமாம். அதற்கிணங்க செயலும் பிரிக்கப்பட்டுள்ளது. அவரவர் அந்தந்தச் செயலில் ஊற்றம் கொள்ளவேண்டும். (41)

शमो दमस्तपः शौचं क्षान्तिरार्जवमेव च ।
ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्राह्मं कर्म स्वभावजम् ॥ ४२ ॥

சமோ தமஸ் தபச் சௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச |
ஜ்ஞாநம் விஜ்ஞாநம் ஆஸ்திக்யம் ப்ராஹ்மம் கர்ம ஸ்வபாவஜம்||42||

शमः—வெளியிந்திரியங்களை அடக்கலும்
दमः—மனத்தை அடக்குவதும்
तपः—அதிக ஸௌகானுபவத்திலீழியாமல் உடல் புஷ்டி பெறாதவாறு சாஸ்த்ரமிசைந்த வழியிலிருப்பும்
शौचम्—சாஸ்த்ர விதியனுஷ்டிக்கவான புனிதத் தன்மையும்
क्षान्तिः—பிறர் ஹிம்ஸித்தாலும் பொறுப்பதும்
आर्जवम्—மனோ வாக்காயங்கள் ஒத்திருக்கையும்
ज्ञानं—கீழ் மேல் தத்துவங்களின் தன்மையறிவும்
विज्ञानम्—உயர்ந்த தத்துவத்தை யுள்ளபடியறிகையும்
आस्तिक्यम्—வேதவேதாந்தங்களின் பொருளில் தெளிவாலான நம்பிக்கையும்
ब्राह्मं—பிராம்மணனைச் சார்ந்த
स्वभावजं—பூர்வகர்ம மூலமான
कर्म—செயலாகும்.

ப்ராஹ்மணனாகப் பிறந்தவன், தான் இவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்று தெளிவானாக. எவ்வாறெனில்— வெளி யிந்திரியங்களைக் கண்டபடி விடலாகாது. மனத்தையும் ஒழுங்காக நிறுத்த வேண்டும். உடலுக்கு, கண்ட ஆஹாரத்தைக் கொடாமல் உடலுக்குக் கொழுப்பேறாதபடி சாஸ்த்ரம் ஓதின வழியிலே உபவாஸாதிகளைச் செய்து வருவதே தவமாகும். ஸ்னானாதிகளைச் செய்து, யாரையும் தொடாமல் எப்போதும் சுத்தமாயிருக்க வேண்டும். பொறுக்க வேண்டும். மனத்திற்கு மாறான பேச்சும் செயலும் தகா. அதற்கொத்தே செய்ய வேண்டும். எது விஷயத்திலும் உண்மை உணரப் பாடுபட வேண்டும். பரதத்துவத்தை உணர வேண்டும். வேதத்திற்குப் புறம்பான மதங்கள், வேதத்திற்குத் தவறான பொருள் கொண்ட மதங்கள் என்பவற்றைப் புறக்கணித்து உள்ளபடி யறிவதில் நம்பிக்கை வருமளவுக்கான முயற்சி வேண்டும். இவை ப்ராஹ்மன தர்மமாம். ப்ராஹ்மணனாய்ப் பிறந்த பிறகு இச் செயல்களில் இழியாமலிருப்பது அவனுக்குக் குற்றமாகும்.

(शमो दम: என்ற இரண்டு சொற்களுக்கும் பொதுவாக அடக்கமென்பதே பொருள். ஒரே சொல்லால் எல்லா அடக்கத்தையும் கொள்ளலாமாகிலும் இரண்டாகப் பிரித்துக் கூறுவது உள் வெளி என்ற இந்த்ரியப் பிரிவை முன்னிட்டாம். அவற்றில் வெளி யிந்திரியங்களை முன்னே அடக்க வேண்டும். பிறகு மனத்திலும் தவறான எண்ணமும் வராதபடி அதையும் நன்கு திருத்த வேண்டுமென்ற முறையைக் கொண்டு முதற் சொல்லுக்கு வெளி யடக்கமும் இரண்டாம் சொல்லுக்கு உள்ளடக்கமும் பொருளாகக் கொள்வது பெரும்பாலுமாம். அதனால் दमश्शम: என்று ப்ரயோகித்தால் தமம் வெளி யிந்த்ரியங்களை யடக்கல், சமம் உள் இந்திரியத்தை யடக்குவது என்பர். உபநிஷத்தில் प्रशान्तचित्ताय शमान्विताय என்ற விடத்திலே சமமென்று வெளியிந்த்ரிய நிக்ரஹத்தையும் சொல்லிற்று. அங்கே சித்த ப்ரசமமென்று உள் இந்திரியம் அடக்கப்படுவதை முதலில் சொல்லிவிட்டப்படியால் அவ்வாறே பொருள் கொள்ள வேண்டியதாயிற்று. எனவே முன்பின் ஸந்தர்ப்பத்திற் கிணங்க முதலில் மனச் சாந்தியும் பின்னே மற்ற இந்திரிய சாந்தியுங்கூட சொல்லப்படலாமென்றதாயிற்று. அதனால் தான் 16-1-2ல் தமமாவது மனத்தை யடக்குவது சாந்தியாவது வெளியிந்த்ரியத்தை யடக்குவது என்று மனச் சாந்தியை முன்னே பாஷ்யத்தில் அருளினார்.)

**शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम् ।**
**दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥ ४३ ॥**

*சௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயநம் |*
*தாநம் ஈச்வரபாவச்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் || 43 ||*

शौर्यं — போரில் பயமின்றி புகுதலும்
तेजः—பகைவரைப் பரிபவிப்பதும்
धृतिः— இடையூறு நேர்ந்தாலும் செயலை விடாமற் கொள்வதும்
दाक्ष्यम्—செய்வதில் சுறுசுறுப்பும்
युद्धे अपि—போரில் தனக்கு அழி வென்று நினைத்தபோதும்
अपलायनं च—அஞ்சி ஓடாமையும்
दानम्—கொடையும
ईश्वरभावः च—ஆள்கையும்
स्वभावजम्—இயற்கையிலேற்பட்ட
क्षात्रं कर्म—க்ஷத்ரிய ஜாதியின் செய லாகும்.

कृषि गौरक्ष्य वाणिज्यं वैश्यं कर्म स्वभावजम् ।
परिचर्यात्मकं कर्म शूद्रस्यापि स्वभावजम् ॥ ४४ ॥

க்ருஷி கௌரக்ஷ்ய வாணிஜ்யம் வைச்யம் கர்ம ஸ்வபாவஜம் |
பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் || 44 ||

कृषि—பயிர்த்தொழிலும்
गौरक्ष्य—மாடு மேய்ப்பதும்
वाणिज्यम्—வர்த்தகமும்
स्वभावजम्—இயற்கைத் தொழிலான
वैश्यं कर्म—வைச்யரின் செயலாம்.
शूद्रस्य अपि— சூத்ர ஜாதிக்கும்
स्वभावजम्—இயற்கையாலானது
परिचर्यात्मकं कर्म—முன் வர்ணத் தினர்க்கு வேண்டுமான வற்றைச் செய்து கொடுக் கும் முறையிலேயாம் செய லெல்லாமாகும்.

கௌரக்ஷ்யமாவது गोरक्षत्वं கோக்களைக் காக்கை. வட்டி ஜீவனமும் கூட்டுக. (கோ-மாடு-பணம். அதனை வட்டிக்கு விட்டுக் காப்பது என்னலு மாம்.) நாலு வர்ணத்தினர்க்கும் நிச்சலும் ஸ்நானம் முதலான ஆன்னிகச் சடங்கு அவரவர்களுக்கு சாஸ்த்ரம் ஓதினபடி யுண்டு. அது தெரிந்த விஷயம ; பொதுவானது. அதிகப்படியானவையே இங்குச் சொல்லப் பெற்றன. ஆகையால் சூத்ரர்களுக்கும் ஸ்நானம் பூசை யெல்லாம் உண்டு. இங்கே பிராஹ்மணனுக்குப் போல் சமதமாதிக ளெல்லாம் மூன்று வர்ணத்தார்க்கும் வேண்டுவனவேயானாலும் மற்ற தொழில்கள்காரணமாக இவை அவர்களுக்குக் குறைவாகுமாகிலும் பிராஹ்மணனுக்கு இவையே முழுமையும் என்றறிவிக்கவும் பிராஹ்மண னுக்கு எளிதிற் பெறவாகுமென்றும் கருத்தால் அவ்வாறு கூறியதாம்.

இப் பிரிவுகளைச் சொன்னது எதற்காகவோ அதனை விளக்குகிறார்—

स्वेस्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः ।
स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥ ४५ ॥

ஸ்வேஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர: |
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தத் ச்ருணு || 45 ||

स्वेस्वे—தன் தன் வர்ணத்திற்கான
कर्मणि—செயலில்
अभिरतः नरः—ஈடுபட்ட மனிதன்
संसिद्धिं—பரம பலனை
लभते—பெறுகிறான்.
स्वकर्मनिरतः—தனக்குரிய செயலிலீடு பட்டவன்
यथा सिद्धिं—எப்படி பலனை
विन्दति—அடைகிறானோ
तत् शृणु—அந்த வழியைக் கேள்

கீழ்க்கூறிய வர்ண தர்மங்களைச் செய்பவன் மோக்ஷ பலனைப் பெறுவான். அது எவ்வாறெனில் அதனை மேலே விரித்துரைப்பேன், கேள்—

यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम् ।
स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ॥ ४६ ॥

யத: ப்ரவ்ருத்திர் பூதாநாம் யேந ஸர்வமிதம் ததம் |
ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்தி மாநவ: || 46 ||

भूतानां—பிராணிகளுக்கு
प्रवृत्तिः—உத்பத்தி ஸ்த்திதி வியாபாரமெல்லாம்
यतः—எவனுக்கு அதீனமோ,
येन—எவனால்
इदं सर्वम्—இதெல்லாம்
ततं—வியாபிக்கப் பெற்றதோ,
तम्—அந்த ஸர்வேச்வரனை
स्वकर्मणा—தனக்கு விதிக்கப் பெற்ற செயலால்
अभ्यर्च्य—செவ்வனே ஆராதித்து
मानवः—மனிதன்
सिद्धिं विन्दति—பலன் பெறுகிறான்.

வர்ணாச்ரம தர்மங்கள் விதிக்கப்பட்டவை அனுஷ்டிக்கப்படும்போது பல தேவதைகளைக் குறிக்கும் மந்த்ரங்கள் சொல்லப்படுகின்றன. அவற்றில் சொன்ன அந்தந்த தேவதைக்கே அதது ஆராதனமாகிறதென்ற எண்ணத்துடன் செய்தால்கூட நித்யகர்மானுஷ்டானம் நடத்தியதாகும். ஆனாலும் அவ்வாறு செய்தால் மோக்ஷபலன் பெறப்படமாட்டாது. முமுக்ஷுவானவன் ஏகாந்தியாக வேண்டும். தனக்கும் அந்தந்த தேவதைக்கும் உற்பத்தி ஸ்த்திதி வியாபாரமெல்லாம் ஸர்வேச்வரனை என்னாலாகிறபடியால் நானே எங்கும் பரவி அந்தர்யாமியானபடியால் அந்தந்த தேவதாந்தர்யாமியான நானே ஆராத்யன் என்றும் எனக்கு அதீனமாய் நான் ஏவியே தான் கர்த்தா என்றும் ஸாத்விகத்யாகத்துடன் அதைச் செய்து வரவேண்டும். அதுதான் நேராக எனது ஆராதனமாய் வேறு பலனை வேண்டாமலும் செய்யப்படுவதால் अभ्यर्चनமாகும். அவ்வாறு செய்வதால் பலன் பெறத் தகுதி யுறுகிறான். (46)

இந்த வர்ணாச்ரமதர்மம் அவனவனுக்கு உரியதே அனுஷ்ட்டிக்கப் படவேணடுமென்பதுபோல் மோக்ஷத்திற்கு முக்யோபாயமான கர்மயோக ஜ்ஞானயோகாதிகள் அனுஷ்டிக்கப்படவேண்டுமென்று கீழே கூறினேனே; அவற்றையும் தன் நிலைக்குத் தக்கது எதென்று ஆராய்ந்து செய்ய வேண்டும். அதை மாற்றினாலும் பலனில்லையென்கிறார்—

श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात् स्वनुष्ठितात् ।
स्वभावनियतं कर्म कुर्वन् नाप्नोति किल्बिषम् ॥ ४७ ॥

ச்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத் |
ஸ்வபாவநியதம் கர்ம குர்வந் நாப்நோதி கில்பிஷம் || 47 ||

स्वधर्मः—கர்மயோகிக்கு தன் தர்மமான கர்மயோகம்
विगुणः—சரிவர அனுஷ்டிக்கப் படாமல் சிறிது குறைவாயினும்
स्वनुष्ठितात्—நன்ருக அனுஷ்டிக்கப் பட்டது போலிருக்கும்
परधर्मात्—ஜ்ஞானயோகி பக்தி யோகிகளுக்கான தர்மத்தைவிட
श्रेयान्—சிறந்ததாகும்.
स्वभावनियतं—தனக்கு உரியதாக சாஸ்த்ரம் கூறிய
कर्म—செயலை
कुर्वन्—செய்கின்றவன்
किल्बिषं—பாபமான ஸம்ஸாரத்தை
न आप्नोति—பெருன் (வேருென்றைச் செய்கிறவன் ஸம்ஸாரத்தையே பெற்றிருப்பான்.)

சிலருக்கு ஆத்மபரமாத்மோபதேசம் பெற்றவுடனே கர்மயோகமெதற்கு. அறிவு பெற்றிருப்பதால் ஞானயோகமே செய்யலாமேயென்று தோன்றும். ஆலயம் நிருமித்து அர்ச்சையின் வழிபாடுகளைச் செய்வதை मत्कर्मपरमो भव என்று விதித்திருப்பதால் கர்மயோகமில்லாமலே பக்தி யோகமே செய்யலாமேயென்றுகூட நினைப்பர். தொடக்கத்தில் அதெல்லாம் நன்ருக நடந்தேறுவதாகக் கூட தோன்றும். எல்லாம் வைச்வாநரவித்யையில் அரைகுறையாக இழிந்தவர் பலர் நம் அனுஷ்டானமே சரியென்று நினைத்து நாளேற வேற திண்டாடினாற்போல் பலன் பெருமல் திண்டாடுவர். ஆதலால் கர்மயோகம் செய்வதே அந்த அதிகாரிக்குத் தகும். இல்லையேல், நித்யகர்மானுஷ்டானத்தை விட்டால் குற்றம்போல் குற்றம் இல்லையாகையாலே வேறு கேடொன்றுமில்லையானாலும், இவன் ஸம்ஸாரம் கடக்க வழியற்றிருப்பதால் ஸம்ஸாரத்தைக் கடப்பானல்லன். இதே இவனுக்கு நரகமாகையால் வேறென்ன பாபம் வேண்டும் என்றபடி. (இந்த ச்லோகம் ஒரு வர்ணத்திலிருப்பவன் வேறு வர்ணதர்மத்தைச் செய்யலாகாதென்ற பொருளதல்ல. அது முன் ச்லோகத்திலேயே தீர்ந்ததாம். ச்ரேயாந் என்ற பதம் சேராது. பிறவர்ண தர்மத்தைவிட சிறந்ததென்ருல் அதுவும் குற்றமாகாதென்று தோன்றுமே. அது பொருந்தாதே. மேலும் இதே ச்லோகம் முன்னமே (3-35) யுளது. அங்கு என்ன பொருளோ, அதே இங்குமாம். (47)

'தைவமேவாபரே யஜ்ஞம்' என்று தொடங்கிக் கீழே கூறப் பெற்ற பலவித கர்மயோகங்களில் எதைச் செய்வதானாலும் தக்கவாறு உடலுக்குப் பிரயாசை, பொருட்செலவு, பிறருடைய ஸஹாயமின்றி செய்யவாகாமை யென்ற தோஷங்கள் உள. ஜ்ஞானயோகமென்ருல் உட்கார்ந்தபடி செய்துவிடலாமென்ற கேள்விக்கு மறுமாற்றம்—

सहजं कर्म कौन्तेय सदोषमपि न त्यजेत् ।
सर्वारम्भा हि दोषेण धूमेनाग्निरिवाऽऽवृताः ॥ ४८ ॥

ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபி ந த்யஜேத் |
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேநாக்நிரிவாऽऽவ்ருதா: || 48 ||

कौन्तेय—குந்தியின் புதல்வனே!
सदोषम् अपि—(நீ நினைக்கிறபடி) சில கஷ்டங்கள் உள்ளதானாலும்
सहजं—இயற்கையானதால் எளிதிற் செய்யவான
कर्म—கர்மயோகத்தை
न त्यजेत्—விடலாகாது.
सर्वे आरम्भाः—எல்லா தொடக்கங் களும்
अग्निः धूमेन—நெருப்புப் புகையினாற் போல்
दोषेण—ஏதேனும் தோஷத்தால்
आवृताः हि—சூழப்பட்டுள்ளன வல்லவோ.

சில கஷ்டங்கள் இருப்பினும் கர்மயோகம் செய்வது ஸுலபம். செயல் என்பது சரீரத்துடன் பிறந்தது. வேலை செய்வதென்பது ஜன்ம பரம் பரையாக நடந்துவருவதால் அந்த வாஸனை திடமாயுள்ளது. அறிவிருப் பதால் ஜ்ஞானயோகமென்பது ஸுகமென்று தோன்றும். உட்கார்ந்த பிறகு இந்த்ரியங்களும் மனதும் நின்ற இடத்தில் நிற்கா. போகப் போக தான் அதிலுள்ள கஷ்டம் தெரியும். ஆகையால் நல்ல அறிவு பெற்றவனும் கர்மயோகம் செய்வதே கூடுவதாம். தோஷ மில்லாத கார்யமென்றுமே யில்லை. புகையின்றி நெருப்பைப் பெறுதல் அரிது. புகையை நீக்க வழி தேடுவதுபோல் கஷ்டங்களைக் கழிப்பவனாய் கர்மானுஷ்டானத்திலிழிவதே தகும். (48)

எந்த கர்மாவும் ஒவ்வொரு பலனுக்காக விதிக்கப்பட்டுள்ள படியால் அதைச் செய்யத் தொடங்கினால் அந்தப் பலனிலும் மனம் போகுமே. திருப்புவதில் பிரயாசை யுண்டே. அதைவிட செய்யாமலேயிருந்தால் மீளலாமென்னில். எனினும் பலனில் நசையின்றிச் செய்யும் பழக்கந் தான் வேண்டுமென்கிறார்—

असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।
नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥ ४९ ॥

அஸக்தபுத்திஸ் ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹ: |
நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸேநாதிகச்சதி || 49 ||

सर्वत्र—பலன் முதலானவற்றில்
असक्तबुद्धिः—பற்றற்ற புத்தியுடையனாய்
जितात्मा—மனத்தை வென்றவனாய்
विगतस्पृहः—(சொப்பனத்திலும்) தனதென்கிற ஆசையற்றவன்
संन्यासेन—த்யாகமென்று கீழ்க்கூறியதை அனுஷ்டிப்பதாலேயே
परमां नैष्कर्म्यसिद्धिं—ஞானயோகத்திற்குப் பிறகான யோக தசையை
अधिगच्छति—பெற்றுவிடுகிறான்.

பலன் முதலானவற்றை விடும்படி மனத்தைத் திருத்தவேண்டும். நாளடைவில் ஞானயோகம் செய்ய வேண்டுமென்று ஆசையும அவனு

க்குப் போய்விடும். தொடங்கின கர்மயோகத்திலேயே ஆஸனத்தில் அமர்ந்து ஆத்மாவைக் காணச் செய்யவேண்டுவதான யோகத்திற்குத் தன்னைத் தக்கவனாக்கிக் கொள்வான். ஸித்தியாவது இந்த்ரியங்கள் வெளியிற் செல்லாமல் மனம் நிம்மதியாருக்கும் நிலை. (49)

सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाऽऽप्नोति निबोध मे ।
समासेन तु कौन्तेय निष्ठा ज्ञानस्य या परा ॥ ५० ॥

ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம ததாऽऽப்நோதி நிபோத மே |
ஸமாஸேந து கௌந்தேய நிஷ்டா ஜ்ஞாநஸ்ய யா பரா || 50 ||

कौन्तेय—குந்திபுத்ரனே!
सिद्धिं प्राप्तः—யோகம் செய்ய யோக்யதை பெற்றவன்,
ज्ञानस्य—உண்டான் அறிவு
या परा निष्ठा—எது முக்கிய லக்ஷ்யமோ
ब्रह्म—அந்த ஆத்மாவை
यथा आप्नोति—எப்படி அடைவானோ, அனுபவிப்பானோ
तथा—அந்த வழியை
समासेन तु—சுருக்கமாகவே
मे निबोध—என்னிடமிருந்து அறிவாயாக.

யோகம் செய்யத் தகுதியுற்றவன் எப்படி யோகம் செய்து ஜீவாத்மாவைக் காணலாமென்பதைச் சுருக்கமாகச் சொல்வேன். (ஏற்கனவே சொல்லியிருப்பதை முடிவிலும் மீண்டும் நினைப்பூட்டுகிறேன்) கேள். (50)

இனி மூன்று ச்லோகங்கள் சேர்ந்து ஒரே வாக்யமாகும்—

बुद्ध्या विशुद्धया युक्तो धृत्याऽऽत्मानं नियम्य च ।
शब्दादीन् विषयांस्त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च ॥ ५१ ॥

புத்யா விசுத்தயா யுக்தோ த்ருத்யாऽऽத்மாநம் நியம்ய ச |
சப்தாதீந் விஷயாந் த்யக்த்வா ராகத்வேஷௌ வ்யுதஸ்ய ச || 51 ||

विशुद्धया—ஆத்ம தத்வ விஷயத்தில் தெளிவான
बुद्ध्या युक्तः-புத்தியுடன் கூடினவனாய்
धृत्या—விஷயங்களில் விழாதபடி செய்வதாலே
आत्मानं नियम्य च—மனத்தை யோகத்திற்காக்கியும்
शब्दादीन् विषयान्—சப்தம் முதலான வெளி விஷயங்களை
त्यक्त्वा—அப்புறப்படுத்தியும்
रागद्वेषौ—அவை விஷயமாக மனத்திலுண்டாம் ஆசை த்வேஷங்களை
व्युदस्य च—விலக்கியும்.

विविक्तसेवी लघ्वाशी यतवाक्कायमानसः ।
ध्यानयोगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः ॥ ५२ ॥

விவிக்தஸேவீ லக்வாசீ யதவாக்காயமாநஸ: |
த்யாநயோகபரோ நித்யம் வைராக்யம் ஸமுபாச்ரித: || 52 ||

विविक्तसेवी—த்யானத்திற்கு விரோதிகளில்லாத இடம் அடைந்தவனாய்
लघ्वाशी—இலகுவாக ஆஹாரம் உட்கொள்பவனாய்
यतवाक्कायमानसः—வாக்கு உடல் மனம் மூன்றையும் த்யானத்திற்கு ஆக்கின்றவனாய்,
नित्यं ध्यानयोगपरः—ஒவ்வொரு நாளும் த்யானம் செய்வதில் இழிபவனாய்
वैराग्यं समुपाश्रितः—மற்ற விஷயங்களிலே தோஷங்களை யாராய்ந்து பற்றற்றவனாய்,

**अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम् ।**
**विमुच्य निर्ममः शान्तो ब्रह्मभूयाय कल्पते ॥ ५३ ॥**

*அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம் |*
*விமுச்ய நிர்மம: சாந்தோ ப்ரஹ்மபூயாய கல்பதே || 53 ||*

अहंकारं—தேஹாதிகளில் ஆத்மாபிமானத்தையும்
बलम्—அதை வளர்க்கும் துர்வாஸநா பலத்தையும்
दर्पम्—அது மூலமான கொழுப்பையும்
कामं—காமத்தையும்
क्रोधं—கோபத்தையும்
परिग्रहम्—அவற்றிற்குக் காரணமான வஸ்துக்களையும்
विमुच्य—விட்டுவிட்டு
निर्ममः—தனதென்ற புத்தியையும் (மமகாரத்தையும்) விட்டு
शान्तः—ஆத்ம யோகம் செய்பவனாய்
ब्रह्मभूयाय कल्पते—ஆத்மானுபவம் பெறவாகிறான்.

இங்கே ப்ரஹ்மமென்றது ஜீவாத்மாவை. ஏற்கனவே இவன் ஜீவாத்மாவாக இருப்பவனே. இப்போது ப்ரஹ்மபாவமாவது தன் ஸ்வரூபத்தின் அனுபவம் பெறுகையாம். எதற்காக இந்த ஜீவாத்ம ஸாக்ஷாத்காரத்தை இவன் விரும்புவதோ, அந்த பக்தியோகத்தை யருளிச் செய்கிறார் மேலே. இந்த 53, 54, 55, 56 ச்லோகங்கள் நான்கும் பூர்ண கீதையின் ஸாரமாம்.

**ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न कांक्षति ।**
**समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् ॥ ५४ ॥**

*ப்ரஹ்மபூத: ப்ரஸந்நாத்மா ந சோசதி ந காங்க்ஷதி |*
*ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் || 54 ||*

ब्रह्मभूतः—தன் ஸ்வரூபத்தை அனுபவிப்பானாய்
प्रसन्नात्मा—நிர்மலமான ஸ்வரூபமுடையனாய், வாஸநாதிகளின் பெலனுமற்றவன்
न शोचति—வேறொன்றின் நஷ்டத்திற்கு சோகிப்பதில்லை
न कांक्षति—வெளி வஸ்து ஒன்றை விரும்புவதுமில்லை.
सर्वेषु भूतेषु—எல்லாவற்றிலும்

समः—ஸமமானவன், எல்லாம் நம க்கு வேண்டாதவையே என் றிருப்பவனாய், தன் ஆத்ம ஸ்வரூபத்தையும் தான் விரும் பாதவன்
परां मद्भक्तिं—என் விஷயமான பர பக்தியை
लभते—பெறுகிறான்.

கீழ்க்கூறிய ப்ரஹ்ம பாவமானது பகவத் விஷயத்திலே பெற வேண்டும் பக்தி யோகத்திற்குக் காரணமான முன் நிலை. ஜீவப்ரஹ்மைக்யம் சொல்லும் அத்வைதிகள்படி இவனுக்கு ப்ரஹ்ம பாவம் வந்துவிட்டால் பிறகு உலகுமில்லை, உலகையாளும் ஈச்வரனுமில்லை. அந் நிலையில் ஸர்வாத்மாக்களிடமும் ஸமமாயிருந்து பகவானிடத்திற் சிறந்த பக்தி பெறுகிறானென்பது சேராது. இதனின்று ப்ரமாணங்களிற் பணிக்கப் பெறும் ப்ரஹ்ம பாவமானது ஜீவன் பரப்ரஹ்மத்திற்கு ஒப்பான தனது நிலைமையை யனுபவித்தல் அல்லது தனது நிலைமையைப் பெறுகையே அன்றி ஜீவன் பரப்ரஹ்மமாகுனென்பது பொருளல்ல என்பது தெளியப் பெறும்.

ஜீவ ஸாக்ஷாத்காரமென்ற ப்ரஹ்மபாவத்திற்குப் பிறகு பகவத் விஷயத்திலே பர பக்தியைப் பெறுவதாமென்றார். பர பக்தியென்ற உபாயததிஞல் பெறப்படும் பலனை யருளிச் செய்கிறார் மேலே—

भक्त्या मामभिजानाति यावान् यश्चास्मि तत्त्वतः ।
ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम् ॥ ५५ ॥

*பக்த்யா மாமபிஜாநாதி யாவாந் யச்சாஸ்மி தத்வத: |*
*ததோ மாம் தத்வதோ ஜ்ஞாத்வா விசதே ததநந்தரம் || 55 ||*

तत्त्वतः—உண்மையில்
यः यावान् च—எவனாகவும் எவ்வளவு குண வைபவங்கள் உடையனாகவும்
अस्मि—நான் இருக்கிறேனோ
माम्—அப்படிப்பட்ட என்னை
भक्त्या—கீழ்க் கூறிய பக்தியினால்,
तत्वतः—உள்ளபடி
अभिजानाति—காண்கிறான்.
तत्त्वतः—உள்ளபடி
मां ज्ञात्वा—என்னைக் கண்டு
तदनन्तरम्—அதன் பிறகு உடனே
ततः—கீழ்க் கூறிய பர பக்தி முதிர்ச்சியால்
मां विशते—என்னிடம் புகுகிறான்.

பர பக்தியென்ற பக்தியோகம் மேன்மேல் வளர்ந்து வாரா நிற்க, பகவான் இவனுக்கு மோக்ஷம் அளிக்கக் காலம் குறுகியதென்று கண்ட போது அபார கருணையாலே தன்னைத் தனது குண விபூதி பூர்த்தியுடன் இவன் காணும்படி செய்கிறான். அந்த பரிபூர்ண ஸாக்ஷாத்காரம் தத் காலத்தில் வருவதே பர ஜ்ஞானமெனப்படும். அதனையே இங்கே

अभिजानाति என்றுர். यावान् यश्चास्मि என்றதாலே தானும் தனது குணங்களும் விபூதிகளும் ஸத்யம், பொய்யல்ல என்றதாயிற்று. இக் காட்சியை விட மனம் வராமலிருக்கிருன் பக்தன் என்று இவனது அவாவின் கனத்தை காட்ட ज्ञात्वा तदनन्तरम् என்று அதன் தொடர்ச்சியைக் குறித்தது. இனி அவனைப் பெற்றல்லது தரிக்கமாட்டாமல் திருவாணை நின்னுணை யென்று வளைத்து நிர்பந்திக்கு மளவுக்கான அவாவினுல் அந்திம காலத்தில் यं योगिनः प्राणवियोगकाले यत्नेन चित्ते विनिवेशयन्ति என்றவாறு பர பக்தியைத் தொடரச் செய்கிருன். அந்த பர பக்தியால் பகவத் ப்ராப்தி யென்கைக்காக ततः என்றது. பர ஜ்ஞானத்திற்குப் பின்னுன அதுவே பரமபக்தி. அபிஜ்ஞையாவது ப்ரத்யக்ஷம். (55)

ஸாத்விக த்யாகத்துடன் கர்மானுஷ்டானம் செய்பவனுக்கு மோக்ஷமென்றுல் அதனுல் மட்டும் மோக்ஷமென்பதில்லை. வர்ணுச்ரம தர்மத்துடன் கர்மயோகத்தை ஆத்மாவலோகனம் பெறுமளவுக்குச் செய்து பகவத் விஷயமான பரபக்தியைப் பெற்று பகவான் அனுக்ரஹிக்கும்படிக்கு வந்த போதே மோக்ஷம் என்று இதுவரையில் சுருக்கமாக இங்கே தெரிவிக்கப் பெற்றது. இதற்கு நித்ய நைமித்திக கர்மாக்கள் மட்டுமின்றி காம்ய கர்மாக்களையும் கூட்டலாம், ஆனுல் ஸாத்விக த்யாகம் வேண்டுமென்கிருர். मां विशते என்று என்னை அடைகிருனென்றது நான் நிலையாக வீற்றிருக்குமிடத்திலே என்னை யடைகிருனென்பதே என்றும் விரித்துரைக்கிருர்—

सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः ।
मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम् ॥ ५६ ॥

ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணே மத்வ்யபாச்ரய: |
மத்ப்ரஸாதாத் அவாப்நோதி சாச்வதம் பதம் அவ்யயம் || 56 ||

सदा—எப்போதும்
मद्व्यपाश्रयः—என்னையே கர்த்ருத்வாதிகளுக்கு ஆச்ரயமாகக் கொண்டு
सर्वकर्माणि अपि—நித்ய நைமித்திகங்களைப் போல் காம்யங்களையும்
कुर्वाणः—செய்கின்றவன்
मत्प्रसादात्—எனது அனுக்ரஹத்தினுல், (நான் நிக்ரஹ ஸங்கல்பமெல்லாம் விட்டபோது)
शाश्वतम्—சாச்வதமான
पदं—அடைய வேண்டுமென்னை
अव्ययम्—அழிவின்றி
अवाप्नोति—அடைகிருன்.

ஸாத்விக த்யாகம் செய்யும் போதே गुणा गुणेषु वर्तन्ते என்றபடி ப்ரக்ருதியே செய்கிறதாக நினைப்பதோடு நிற்காமல் நானே கர்த்தா, கர்மாவும் பலனும் எனதே, தனதல்ல என்ற எண்ணத்துடன் செய்வதாலும் அதிகமான கைங்கர்யங்களை எனது அனுக்ரஹம் பெற அவன் செய்வதாலும் அவனுக்கு வரும் ஜீவாத்மஸாக்ஷாத்காரம் பரபக்தியிலே

அவனை மூட்டுமாகையால் பரபக்தியால் என்னைப் பெறுகிறான். இங்கே யனுபவிப்பதே பெரிதல்ல, நான் சாச்வதமாய் ப்ராப்யனா கின்றமை சாச்வதமான பரமபதத்திலே. அவ்விடம் சென்று அங்கே எங்கும் பரவிய பரமாத்ம ஸ்வருபத்தைக் காண்பதன்றி, செய்யும் கைங் கர்யங்களுக்கெல்லாம் இலக்காய், आस्ते विष्णुरचिन्त्यात्मा என்றபடி திருமா மணி மண்டபத்தில் பெருந்திருவோலக்கத்தில் சாச்வதமாய் பரவாஸு தேவ ரூபத்துடன் வீற்றிருக்கும் என் தாளிணைக் கீழ் வந்து புகுகிறான் இதுவே मां विशते என்றவிடத்தில் विशते என்ற பதத்தால் அறிவிக்கப் பெற்றது என்று இதன் கருத்தாகும். (56)

இப்படி மோக்ஷத்திற்கு அடிப்படை கர்மானுஷ்டானமென்று எல்லோருக்குமாகப் பொதுவாகப் பணித்து இம் முழு உபதேசத்தின் நோக்கை—அதாவது அர்ஜுனன் இக் கர்மானுஷ்ட்டானத்தில் இழிய வேண்டுமென்பதை அவனுக்கு அறிவிக்கிறார்—

चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः ।
बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव ॥ ५७ ॥

சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பர: |
புத்தியோகம் உபாச்ரித்ய மச்சித்த: ஸததம் பவ || 57 ||

चेतसा—நீ எனக்கு சேஷ பூதன் பர தந்த்ரன் என்ற மனத்துடன்
सर्वकर्माणि—செயல்களையெல்லாம்
मयि संन्यस्य—என்னிடம் அர்ப்பணம் செய்து
मत्परः—என்னையே ப்ராப்யமாக நினைத்து
बुद्धियोगम्—இந்த புத்தியை
उपाश्रित्य—கடைவரையில் விடாமற் பிடித்து
मच्चित्तः—என்னையே மனத்திற் கொண்டவனாக
सततं भव—எப்போதும் இரு.

இரண்டாவது அத்தியாயத்தில் முதலியே புத்தியோகம் சொல்லப் பெற்றது கர்மானுஷ்ட்டானத்திற்கு அங்கமாக. सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥ दूरेण ह्यवरं कर्म बुद्धियोगात् धनञ्जय என்றவாறு. முடிவாக பகவான் அளிக்கும் புத்தியோகம் 'ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते என்னப் பெற்றது. எல்லாமே மோக்ஷத்திற்கு வேண்டுமாகையால் இங்கே புத்தி யோகமென்று அவ்வனைத்தும் கருதப் பெற்றாலும் விரோதமில்லை. கர்மானுஷ்ட்டானத்திற்கான புத்தியோகம் விடாமற் கொள்ளப்படும். (57)

मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात् तरिष्यसि ।

மச்சித்தஸ் ஸர்வதுர்காணி மத்ப்ரஸாதாத் தரிஷ்யஸி |

मच्चित्तः—கூறியவாறு என்னிடம் மனம் வைத்தவனாய்
सर्व दुर्गाणि—ஸம்ஸாரத்தில் கடக்க முடியாதவற்றை யெல்லாம்
मत्प्रसादात्—எனது அனுக்ரஹத்தால்
तरिष्यसि—கடப்பாய்.

अथ चेत् त्वमहंकारान्न श्रोष्यसि विनंक्ष्यसि ॥ ५८ ॥

அத சேத் த்வம் அஹங்காராத் ந ச்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி || 58 ||

अथ त्वं—அன்றி நீ
अहंकारात्—நீ நினைத்திருப்பதே சரி என்ற கர்வத்தினால்
न श्रोष्यसि चेत्—சொன்னதைக் கேட்கப்போகிறாயல்லையாகில், சொன்னபடி நடக்கவில்லையாகில்
विनंक्ष्यसि—கெடுவாய்.

இதனை விரைத்துரைக்கிறார்—

यद्यहंकारमाश्रित्य न योत्स्य इति मन्यसे ।
मिथ्यैष व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति ॥ ५९ ॥

யத்யஹங்காரம் ஆச்ரித்ய ந யோத்ஸ்ய இதி மந்யஸே |
மித்யைஷ வ்யவஸாயஸ் தே ப்ரக்ருதிஸ் த்வாம் நியோக்ஷ்யதி || 59 ||

अहंकारम्—தன்னை எல்லாமறிந்தவனாக நினைப்பதாலான கர்வத்தை
आश्रित्य—ப்ரதானமாக்கி
न योत्स्ये इति—நான் யுத்தம் செய்யப் போகிறதில்லையென்று
मन्यसे यदि—நினைப்பாயாகில்
ते एष—உனது இந்த
व्यवसाय:—தீர்மானமானது
मिथ्या—நிலைக்காது-பொய்யாகும். மாறிவிடும். எவ்வாறெனில்,
प्रकृति:—உனது ஸ்வபாவம்
त्वां नियोक्ष्यति—உன்னைப் போரில் ஏவும்-உன்னால் செய்யாமலிருக்க முடியாது.

ப்ரக்ருதி ஏவுமென்பதை விரித்து உரைக்கிறார்—

स्वभावजेन कौन्तेय निबद्धः स्वेन कर्मणा ।
कर्तुं नेच्छसि यन्मोहात् करिष्यस्यवशोऽपि तत् ॥ ६० ॥

ஸ்வபாவஜேந கௌந்தேய நிபத்த: ஸ்வேந கர்மணா |
கர்த்தும் நேச்சஸி யந் மோஹாத் கரிஷ்யஸ்யவசோऽபி தத் || 60 ||

कौन्तेय—வீரனைப் பெறும் குந்தியின் புதல்வனே!
यत्—எதை
मोहात्—அஜ்ஞானத்தினால்
कर्तुं न इच्छसि-செய்ய விரும்பாமலிருக்கிறாயோ,
तत् अपि—அதையும்
स्वभावजेन—க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் என்று கீழே கூறப்பட்ட, க்ஷத்ரிய ஸ்வபாவத்திற்கான
स्वेन कर्मणा-சௌர்யம் தேசு என்றாற் போன்ற உனது செயலால்
निबद्ध:—வசப்படுத்தப்பட்டு
अवश:—உனக்கு நீ வசமின்றியே
तत् करिष्यसि—அதைச் செய்யப் போகிறாய்.

ஸர்வேச்வரனை உமது சொல்லே எனக்கு நியாயமாகப் படாமல் நான் ஸ்வதந்த்ரனைபோது அசேதநமான ப்ரக்ருதியாவது என்னை நியமிப்பதாவது—கட்டுப்படுத்துவதாவது எங்ஙனே என்றான் அர்ஜு-

னன். அதற்கு—நீ சொல்வது உண்மை. க்ருஷ்ண வேஷத்திலே உன்னை என் வழியில் கொண்டு வர எனுலை முடியவில்லை. அந்தர்யாமி வேஷத்திலே உன்னை யாள்வேன் ஆனால் இந்த வேஷத்தில் உன்னையாள்வது, ப்ரியன், தோழன், அத்தைமகன் என்றெல்லாம் அன்பினால். அந்த வேஷத்தில் ஆள்வது உன் கர்மானு குணமாக. ப்ரக்ருதி ஆளுமென்றால் அது மூலமாக நான் ஆளவேன் என்பதே என அருளிச் செய்கிறார்—

**ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।**
**भ्रामयन् सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥ ६१ ॥**

*ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேऽர்ஜுந திஷ்டதி |*
*ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா || 61 ||*

अर्जुन—அர்ஜுனா !
ईश्वरः—எல்லோரையும் நியமிக்கின்றவன்
सर्वभूतानां—எல்லா ப்ராணிகளுடையவும்
हृद्देशे—அறிவுக்கு மூலஸ்த்தானமான ஹ்ருதயமென்றவிடத்திலே
यन्त्र आरूढानि—உடல் கருவி யெல்லாம் சேர்ந்து யந்த்ரம் போன்றவற்றிலே ஏறியிருக்கும் அந்த ப்ராணிகளை
मायया—ஸத்வ ரஜஸ்தமோ குணங்களை யுடைய மாயையால்—அவரவருக்கான குணத்திற்குத் தக்கவாறு
भ्रामयन्—ப்ரவர்த்திக்கச் செய்கின்றவனாய்
तिष्ठति—நிலைத்திருக்கிறான்.

நான் ஒரு ஸமயம் அருகிலிருப்பேன்; அப்பாலும் செல்வேன். உன்னை எக்காலத்திலும் யந்த்ரத்தில் வஸ்துவை வைத்து ஆட்டுகின்றது போல் ஆட்டுகின்றவன் எல்லா ப்ராணிகளுக்கும் ஹ்ருதயத்திலே அதற்காகவே நிலைத்திருக்கும் ஈச்வரனே. பிராணிகளின் இஷ்டப்படி அவன் செய்வதில்லை. அவர்களுக்கு மாயை எந்த குணத்தை முக்கியமாக்கிச் சேர்ந்திருக்கின்றது என்பதை கவனிக்கிறான். க்ஷத்ரியனுக்கு ரஜோகுணம் ஸ்வபாவத்தில் ஏற்பட்டதால் அதற்கிணங்க ஏவுவான். யந்த்ரத்தை ஒருவன் ஒழுங்காக வைத்து முடுக்கினால் யந்த்ரம் அதை மீறி வேலை செய்யாமலிருக்கவாமோ. அதுபோல் எந்த ப்ராணியும் அவன் ஆட்டி வைப்பதற்கு இணங்காமலிக்க முடியாது. அவனும் பக்ஷபாதமாக யாதும் செய்யான். முன்வினைமூலமான குணத்திற்கு இணங்கவே செய்வான். அவன் ஏவுகின்றானகில், நீ போர் புரியாமல் வாளாவிருக்கை முடியாது (हृद्देशे என்றது எல்லா இந்த்ரியங்களுக்கும் நரம்புகள் ஹ்ருதயத்தினின்றே போவதால், அந்தந்த நரம்பின் அசைவுக்கு ஏற்ப இந்த்ரியம வேலை செய்வதால், அதை ஆட்டுவதற்காக அங்கே ஈச்வரன் இழுக்கிறான. அஙகேயே ஜீவனும் இருப்பதால் அவ

னிடம் அறிவை அருகில் இருந்தே உண்டுபண்ணுகிறான் என்பதற்காக. இங்கே ஈச்வரன் என்றது தன்னையே. கீழே सर्वस्य चाहं हृदि संनिविष्टः मत्तः स्मृतिर्ज्ञानमपोहनञ्च என்று கூறியுள்ளாரே. படர்க்கையாகச் சொன்னது நானும் அந்தர்யாமியும் ஒன்றென்ற எண்ணம் இராமற் போனாலும் ஹ்ருதயத்திலுள்ளிருப்பவன் செய்விக்கிறான்; உனது அஹங்காரப்படி ஒன்றும் நடக்காதென்பதை தெரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காகவுமாம். (61)

நீர் சொன்னதைக் கேட்காத போது ஈச்வரன் ஆட்டினபடி தான் நான் நடக்க வேண்டுமாகில், பிறகு அவன் செய்யும் நியமனம் என் இஷ்டத்திற்கு மாறாகவும் ஸம்ஸார பந்தத்திற்கே காரணமாகவுமானால் நான் என்ன செய்வதென்கிறான் அர்ஜுனன். அதன் மேல் அருளிச் செய்கிறார்—

तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।
तत्प्रसादात् परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥ ६२ ॥

தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேந பாரத |
தத்ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்த்தாநம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் ||62||

भारत—பரத வம்சப் புதல்வனே!
तम् एव—அந்த அந்தர்யாமியையே
सर्वभावेन—எவ்விதத்தாலும்
शरणं गच्छ—சரணமாகப் பற்று.
तत्प्रसादात्—அவனது அனுக்ரஹத்திறைல்
परां शान्ति—கர்ம பந்தத்தினின்று விடுதலையையும்
शाश्वतं स्थानं—பரமபதத்தையும்
प्राप्स्यसि—அடைவாய்.

மாயையைக் கொண்டு ஆட்டுகிறபடியால் மாயையைக் கடக்க வழி தேட வேண்டும். அவ் வழியை முன்னமே சொன்னேன் मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते என்று. நான் இப்போது கண்ணனாயிருக்கும்போதே என்னையே சரணடைந்தால் நான் சொன்னபடி நடக்க வேண்டும். இல்லையாகில் பின்னே நீ நினைக்கும்போது நான் இல்லையே என்று நீ கவலைப்பட வேண்டா. உனக்கு வேண்டியபோது, க்ருஷ்ணா என்றே கதற வேண்டுமென்பதில்லை. அந்த ஸ்வாமியையே விளித்து அவனைச் சரண் அடைவாயாக. அவனை யனுஸரித்து நடந்து கொள்வாயாக. அவனுக்கு நீ அனுகூலனானால் அவன் ஸம்ஸார நிவ்ருத்திக்கும் மோக்ஷஸ்த்தானமான பரமபதம் பெறுகைக்கும் வழி செய்வான். தைவ ஸம்பத்து உடைய உனக்கு எப்படியும் நற் கதி நிச்சயமாக உண்டு. (62)

इति ते ज्ञानमाख्यातं गुह्याद् गुह्यतरं मया ।
विमृश्यैतदशेषेण यथेच्छसि तथा कुरु ॥ ६३ ॥

இதி தே ஜ்ஞாநம் ஆக்யாதம் குஹ்யாத் குஹ்யதரம் மயா |
விம்ருச்யைதத் அசேஷேண யதேச்சஸி ததா குரு || 63 ||

इति—இவ்வாறு
मया—என்னால்
गुह्यात्–ப்ரவ்ருத்தி தர்மமான சாஸ்த்ரார்த்தத்தை விட
गुह्यतरं—இரஹஸ்யமான
ज्ञानम्—ஜ்ஞானமயமான நிவ்ருத்தி தர்மமானது
आख्यातम्—உபதேசிக்கப்பட்டது.
एतत् अशेषेण—இதையெல்லாம்
विमृश्य – நன்கு பராமரித்து
यथा इच्छसि–எப்படி விரும்புகிறாயோ,
तथा कुरु—அவ்வாறு செய்.

கொலையென்பது போரில் செய்யப் பெற்றாலும் பாபந்தானே என்று அஞ்சினாய். அது இரஹஸ்யமறியாமையால் வந்த அச்சம். அதற்காக, 'स्वर्गद्वारमपावृतं सुखिनः क्षत्रियाः पार्थ लभन्ते युद्धमीदृशम्', 'युद्धे चाप्यपलायनम्' என்று குஹ்யம்—இரஹஸ்யம் சொல்லப் பெற்றது. அத்துடன் நிற்காமல் ராஜ்யத்தில் நசையற்று முமுக்ஷுவான உனக்குத் தக்கவாறு குஹ்யதரமான நிவ்ருத்திதர்மம் நன்கு விளக்கப்பெற்றது. அதில் கர்மயோகம் ஜ்ஞான யோகம் பக்தியோகம் என்ற நிலையில் எதிலும் போர் என்ற நைமித்திக தர்மம் உன்னை விடாதென்று நிரூபித்தேன். எல்லாம் ஆராய்ந்து உன் இஷ்டப்படி செய். ப்ரவ்ருத்தி தர்மமென்ற குஹ்யத்தில் நின்றாலும் குற்றமில்லை, ஸம்ஸாரபந்தத்தில் வெறுப்பு உண்டாகில் நிவ்ருத்தி தர்மமே செய்யலாம். அதிலும் பக்தியோகத்தைப் பற்றிச் சிந்திக்காமல் விஷயப்பற்று மட்டும் அற்று ஜீவாத்ம தத்துவம் பெற்றால் போதுமென்று ஞானயோகத்திற்கான கர்மயோகம் செய்வதாகக் கொண்டு அதற்காகப் போர் புரிவதானாலும் சரி. நான் சொன்னதைக் கேட்காமல் அஹங்காரியாய் விலகினாலும் உன்னை ஈச்வரன் மாயையைக் கொண்டு அதாவது உன் க்ஷத்ரிய ஸ்வபாவத்தைக் கொண்டு செய்விப்பானாகையாலே ப்ரக்ருதி உன்னை அதில் ஆட்டிவிடுமென்றேன். அப்போது ப்ரவ்ருத்தி தர்மமாகும். பாபமில்லை. ஸம்ஸாரபந்தம்விடாது. அவ்வாறே செய்து உனக்குப் பின்னே புத்தி பிறந்த பிறகு அந்த ஈச்வரனைச் சரணமடைந்து கொள்ளலாமென்று நினைத்தாயாகில் அப்படியே செய். எல்லாம் விட்டு பக்தியோகத்தில் நசையுடன் அதற்காக ஜீவாத்மாவலோகனத்தில் இழிந்தாலும் சரி, உன் இஷ்டம். (63)

यथेच्छसि तथा कुरु इत्यस्याशयस्तावत्—स्वधर्ममपि चावेक्ष्येत्यवश्यकर्तव्यत्वमुक्तम्, फलकामनायामपि हतो वा प्राप्स्यसि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम्। कैवल्येच्छायामपि कर्मयोगाङ्गतयाऽनुष्ठेयमेव युद्धम्। शिष्टतया व्यपदिष्टत्वं ते नास्तीति कृत्वा यदि ज्ञानयोगेऽवतरसि, तदाऽपि स्वधर्मस्तदङ्गम्। साक्षान्मोक्षकामनया भक्तियोगेऽभिलाषेऽपि ततः प्राक् तदर्थात्मावलोकनार्थकर्मयोगादिशेषतयेदमस्त्येव। अतो यथेच्छसि तथेदमवश्यं कुरु इति।

அர்ஜுனன் தயங்கினான், 'யச்ச்ரேயஸ் ஸ்யாத் நிச்சிதம் ப்ரூஹி தந்மே' என்று விண்ணப்பம் செய்தேனே. அப்படியிருக்க, உன் இஷ்டப்படி செய் என்று முடித்து என்னைக் கைவிடலாமோ என்று நினைத்தான். அதன்மேல் முடிவாக உபதேசிக்கிறார்—

सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः।
इष्टोऽसि दृढमिति ततो वक्ष्यामि ते हितम्॥ ६४॥

ஸர்வகுஹ்யதமம் பூய: ச்ருணு மே பரமம் வச: |
இஷ்டோ஽ஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் || 64 ||

सर्वगुह्यतमं–கீழ்க் கூறியவற்றில் மிக்க ரஹஸ்யமான
परमं वचः—சிறந்த உபதேசத்தை
भूयः मे शृणु—மீண்டும் என்னிடம் கேள்.
दृढं—மிகவும்
मे इष्टः असि—எனக்கு ப்ரியனாகிறாய்
इति ततः—என்கிற காரணத்தினாலே
ते हितम्–உனக்கு வேண்டும் முக்கிய ஹிதத்தை
वक्ष्यामि—சொல்வேன்.

பக்தியோகம் மிக்க இரஹஸ்யமாகையால் அதைப் பற்றிய உபதேசமும் மிக்க ரஹஸ்யமாகிறது. உன் இஷ்டப்படி செய் என்றேனே; அதனின்று உன்னிடம் ப்ரீதி எனக்குக் குறைவென நினைக்க வேண்டா. இப்போர் பலவித நோக்குடன் நடத்தப்படலாமென்பதற்காகச் சொன்னேன். நீ பற்ற வேண்டிய வழி ஒன்று தான். தயங்க வேண்டா. (பக்தி யோக விஷயமான) முக்கியமாக உபதேசம் செய்தேனே; அதையே மீண்டும் சொல்வேன். இங்கே பக்தியோகத்தைச் சொல்வதால் கர்ம யோகாதிகளை விட்டும் செய்யலாமென்ற கருத்தல்ல; காம்யமான போரோ, ஜீவாத்மாவைக் காண்பதற்கான கர்மாவிற் சேர்ந்த போரோ புரியாமல் பக்தியோகம் மேலே வரவேண்டுமென்ற குறிப்புடன் அதற்கேற்றவாறு கர்மாவைச் செய் என்பதற்காக பக்தியோகத்தை குஹ்யதமத்தைக் கூறுவதென்க.)

नानामार्गसूचनात् किंकर्तव्यतामूढ इवालक्ष्यतार्जुनः । अतस्तस्मै पुनराह–काम्यतया नित्यतया वा युद्धकरणस्यापि वैदिकतया गुह्यत्वात् तदुक्त्वा गुह्यतमो निवृत्तिधर्मोऽपि नाना प्रागुक्तः । तत्रापि कैवल्यार्थतां विसृज्य मोक्षार्थभक्तियोगप्राधान्यं परिकल्प्यैव कर्मयोगे प्रवृत्य युद्धं कार्यमिति ॥

**मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।**
**मामेवैष्यसि भद्रं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥ ६५ ॥**

மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு |
மாமேவைஷ்யஸி பத்ரம் தே ப்ரதிஜாநே ப்ரியோஸி மே || 65 ||

मद्भक्तः-என்னிடம் பக்தியுடையனாய், என்னையே ப்ராப்யமாகக் கொண்டு
(இம் மூன்றும் செய். அதாவது)
मन्मना भव—என்னை த்யானம் செய்திரு.
मद्याजी—பூஜாதிகளை எனக்கே செய்.
मां नमस्कुरु—என்னை வணங்கியிரு.
माम् एव एष्यसि—என்னையே பெறுவாய்.
ते भद्रम्—உனக்கு மங்களம்.
प्रतिजाने—ப்ரதிஜ்ஞை செய்கிறேன்.
मे प्रियः असि—எனக்கு நீ இஷ்டனாகிறாய்.

தைலத்தின் தாரையைப் போலே இடைவிடாமல், எதிரில் தோற்றம் போன்றதான த்யானம் என் விஷயமாகச் செய்வது என்னையே பெற வேண்டுமென்ற நோக்குடன் இருக்கவேண்டும். வேறு பலனை விரும்பாமை मद्भक्तः என்னப்படுகிறது. அவ்வாறே மத்பக்தனுய் யாக நமஸ்காராதிகளைச் செய்து வா. யாகமாவது பூஜாவிதி சாஸ்த்ரத்தில் சொல்லியது. நமஸ்காரம் பெரியவனுக்குச் சிறியவன் செய்வதென்பது உலகத்திலேயே தெரிந்த விஷயம். (இங்கே, मामेव என்ற ஏவகாரமும் 'பத்ரம் தே' என்பதும் எதற்காக என்னில், உன் இஷ்டப்படி வேறுவிதம் செய்தால், அதாவது மற்ற அரசர்களைப் போல் காம்யமாகப் போர் நடத்தினல், அல்லது ஜீவாத்ம ப்ராப்திக்காகச் செய்தால், அல்லது பொதுவாக, செய்யாமற் போனுல் பாபமென்ற நோக்குமாத்திரத்தினுல் செய்தால், என்னைப் பெறுவாய் என்று சொல்லமாட்டேன். அப்போது உனக்கு எனக்காக ஸம்ஸாரபந்தம் தொடர்வதால் மங்களம் இல்லை. என் சொற்படி செய். என்னையே அடைவாய்.) இவ்வளவு கேட்டும் போர் நடுவில் ருத்ர பூஜைக்கு ப்ரயத்னம் செய்தான். அப்போது கண்ணன், உபதேசத்தை மறந்திருப்பானென்று என்னையே பூசிக்கலாமென்ருர். தீர்த்தன் உலகளந்த சேவடிமேல் பூந்தாமம் சேர்த்து பார்த்தன் தெளிந்தது அப்போது. இவ்வாறு வரப்போவதை மனத்திற் கொண்டு भद्रंते प्रतिजाने என்கிருரெனவும் கொள்க. (65)

இவ்வளவு பெரிய போரை நடத்தும் போது பழைய துர்வாஸனையாலே பலனில் நசையும், ஜயாபஜயங்களில் ஸமத்வபுத்தியிராமல் புத்திமாருட்டமும் நேரிடுமென்கிற எண்ணத்தினுலும், ஸாத்விக த்யாகத்தில் மற்ருென்றும் சொல்ல வேண்டியிருப்பதாலும் தர்மானுஷ்டானம் செய்யும் முறையை மறுபடியும் அருளிச் செய்கிருர்.

**सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज ।**
**अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥ ६६ ॥**

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ |
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: || 66 ||

सर्वधर्मान्—நிவ்ருத்தி தர்மங்களாகச் சொன்ன கர்மயோக ஜ்ஞான யோக பக்தியோகங்களை
परित्यज्य—ஸாத்விகத்யாகமாக விட்டு,
एकं माम्—கர்த்தாவும் ஆராத்யனும் ப்ராப்யனும் ஒருவனே என்னவான என்னை
शरणं व्रज—உபாயமாகவும் பற்று.
अहं त्वा—நான் உன்னை
सर्वपापेभ्यः—மோக்ஷம் பெறத் தடையான அநுதிபுண்ய பாபங்கள் எல்லாவற்றினின்றும்
मोक्षयिष्यामि—விடுவிப்பேன்.
मा शुचः—வருத்தப்படாதே.

மோக்ஷத்திற்கு முக்கிய காரணமான யோகமோ, அதற்கு அங்கமான மற்ற யோகமோ கர்மாவோ எல்லாம், கீழ்க் கூறியபடி. பலம் கர்த்ருத்வம் மமதை யென்பவற்றை விட்டே அனுஷ்டிக்கப்பட வேண்டும். அவ்வாறு அனுஷ்டித்தே மோக்ஷம் பெறுவதேயானாலும் மோக்ஷத்திற்கு அதனை உபாயமாக நினைக்காமல், செய்யும் உன்னையோ மற்றும் அங்கங்களை யோ கூட உபாயமாக நினைக்காமல் என்னையே உபாயமாக நினைக்க வேண்டும். ஏனெனில், அததற்கு அந்தந்த சக்தியை யளிப்பவன் நானே. அதுவே யன்றி, அந்த அனுஷ்டானத்தை உவந்து பலன் அளிப்பவனும் நானே. எனது ஸங்கல்பமில்லையாகில் அந்த அசேதன வஸ்து எவ்வாறு பலன் அளிக்கும்? கீழே கூறிய மூன்றுவித த்யாகத்துடன் இப்போது பலோ(फलो)பாயத்வ த்யாகமும் சேர்க்கப்படுகிறது. த்யாக–ஸந்நியாஸ விஷயமாக நீ இவ் அத்தியாயத்தின் தொடக்கத்தில் கேட்ட கேள்விக்குக் கூற வேண்டியது மொத்தம் இப்போது கூறப்பட்டது. இவ்வாறு அனுஷ்ட்டித்தால் உன்னை விடுவிப்பவன் நான்; இனிக் கவலைப்படாதே என்றபடி.

இதெல்லாம் கூட 'ब्रह्मार्पणं ब्रह्महविः' என்கிற ச்லோகத்தின்படி முன்னமே மொழியப் பெற்றதென்று கொண்டால் இந்த ச்லோகத்திற்கு வேறு பொருள் கொள்க. இப்போது சரணம் வ்ரஜ என்பது ஸர்வ சாஸ்த்ரலோக ப்ரஸித்தமான சரணாகதி என்ற மஹாதர்மத்தைச் சொன்னதாகும். சரணாகதியென்பது—முக்கியமாகச் செய்ய வேண்டிய உபாயத்தை யனுஷ்டிக்கமாட்டாதவன், நான் சக்தியற்றவன், அந்த உபாயத்தை யனுஷ்டித்தால் பெறப்படும் பலனை அது இல்லாத போதே க்ருபை கூர்ந்து எனக்குத் தந்தருள வேணுமென்ற ப்ரார்த்தனா ரூபமான விஜ்ஞாபனம். பக்தியோகம் செய்கின்றவனும் அப்போதைக் கப்போது அதற்கு இடையூறான பல பாபங்களைப் போக்க ப்ராயச்சித்தங்களைச் செய்து வரவேணும். அந்தப் பாபங்களை உபாய விரோதி பாபம் என்பர். அவற்றிற்கு ப்ராயச்சித்தமாயுள்ளவை க்ருச்ச்ரம், சாந்த்ராயணம் கூச்மாண்டஹோமம் ஜ்யோதிஷ்டோம யாகம் போன்ற வையாம். பல நாள் பல த்ரவ்யங்களைக் கொண்டு பலர் துணையில் பெரும் தேஹப் பிரயாசையுடன் செய்யப்பட வேண்டுமவற்றை, தான் விரைவில் செய்யமாட்டாமையை உணர்ந்து அடியோடு விட்டு ப்ரபத்தியைச் செய்வதாம். ஆக ச்லோகத்தின் பொருளாவது—

ஸர்வதர்மாந்—க்ருச்ச்ரம், சாந்த்ராயணம் போன்ற ப்ராயச்சித்தங்களை, பரித்யஜ்ய–செய்ய முடியாமையால் அடியோடு விட்டு, மாம் ஏகம்—எல்லா தர்மங்களுக்கும் பலன் அளிக்கும் என்னையே, சரணம் வ்ரஜ—சரணமாக அடை; அஹம் த்வா—நான் உன்னை, ஸர்வபாபேப்ய:—அந்தந்த ப்ராயச்சித்தத்தால் போக்க வேண்டிய பாபங்களினின்று, மோக்ஷயிஷ்யாமி–விடுவிப்பேன். மா சுச:—கவலைப்படாதே, என்றவாறு.

பக்தியோகம் என்ற மோக்ஷோபாயத்தைச் செய்யமாட்டாதவன் அதை விட்டு ப்ரபத்தியை யனுஷ்டித்து மோக்ஷபலனைப் பெறலா மென்பதை भक्त्या परमया वाऽपि प्रपत्त्या वा महामते । प्राप्योऽहं नान्यथा प्राप्यो मम कैङ्कर्य-लिप्सुभिः ॥ என்றபடி ஸ்ரீபாஞ்சராத்ரம் முதலான க்ரந்தங்கள் கூறுகின்றன வாகையால், அதை இந்த ச்லோகத்தின் பொருளாக பாஷ்யகாரர் ஏன் அருளிச் செய்யவில்லை யென்னவேணடா. கத்யத்தில், सर्वधर्मांश्च संत्यज्य सर्वकामांश्च साक्षरान् । लोकविक्रान्त चरणौ शरणं तेऽव्रजं विभो என்ருற் போன்ற ப்ரமாணங்களைக் காட்டி அவ்வாறே ப்ரபத்தியை யனுஷ்டித்திருப்ப தால் பாஷ்யகாரர் அதை இசையவில்லை யென்னவொண்ணுது. இங்கே அதைக் கூறவில்லையே யென்னவுமொண்ணுது. பொதுவாக, எந்தெந்த உபாயம் செய்ய முடியவில்லையோ அதததற்கு ப்ரபத்தி பண்ணலாமென் பதே இரண்டாவது யோஜனையின் கருத்தாகையால் பக்திக்காகவும் பண்ணலாமென்று தனியே சொல்ல வேண்டுவதில்லை. பக்தி என்பதும் பெரிய ப்ராயச்சித்தம் என்பதையும் ஸ்ரீபாஷ்யத்தில் அருளிச் செய்துள் ளார். இப்பொருளின் விரிவை இரஹஸ்ய க்ரந்தங்களில் கண்டு கொள்வது.

ஸ்ரீக்ருஷ்ண பகவான் அருளிச் செய்த ஹிதோபதேசத்தில் இது கடைசி ச்லோகமாகையால் இதற்கு சரம ச்லோகமென்றும் சரம ரஹஸ்யமென்றும் பெயர் வழங்கப்படுகிறது. (66)

உபதேசம் முடிந்துவிட்டது. சிஷ்யனுன அர்ஜுனன் தான் பெற்ற உபதேசத்தைப் பிறர்க்கு உபதேசிப்பதானல் அதற்குச் சில நிபந்தனைகள் தெரிந்திருக்க வேண்டுமென்று கருதி அதை யறிவிக்கிருர். பின்னுள்ளாரும் கீதாரஹஸ்யத்தைக் கண்டபடி இறைக்காமல் காக்க இந்த வசனங்களே ப்ரமாணமாகின்றன. முதலில் எவருக்கு உபதேசிக்க லாகாதென்பதை முக்கியமாகக் கூறுகிருர்—

**इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन ।**
**न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ॥ ६७ ॥**

இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந |
ந சாசுச்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோऽப்யஸூயதி || 67 ||

इदम्—உனக்கு நான் உபதேசித்த இந்த ரஹஸ்யம்
अतपस्काय—கீழ்க்கூறிய சாரீரவாசிக மானஸ தவம் போன்ற தில்லாதவனுக்கு
ते न वाच्यम्—நீ சொல்லத்தகாது;
अभक्ताय—(தவமுள்ளவனுகிலும) பக்தியில்லாதவனுக்கு
न कदाचन—ஒரு பொழுதும் சொல்ல லாகாது.
பக்தனுயிருப்பினும் अशुश्रूषवे—பணிவிடை செய்யுமள வுக்கு ச்ரத்தையில்லாத வனுக்கு

न वाच्यम्—சொல்லலாகாது.
यः माम्—எவன் என் விஷயத்திலே
अभ्यसूयति—பொறாமையுள்ளவனோ (நாஸ்திகனோ தேவாந்தர பக்தனோ)
तस्मै च न—அவனுக்கும் சொல்ல லாகாது.

अभ्यसूयवे என்று ஒரே பதம் ப்ரயோகிக்காமல் தனி வாக்யமாக நீட்டியது அவன் மிகவும் தகாதவன். அவனுக்குச் சொன்னால் தோஷம் அதிகம் என்றறிவிப்பதற்காகவென்க. (67)

தக்க அதிகாரிக்கு உபதேசித்தால் நல்ல பலனுமுண்டென்கிறார்—

**य इदं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति ।**
**भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः ॥ ६८ ॥**

*ய இதம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷ்வபிதாஸ்யதி |*
*பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்சய: || 68 ||*

इदं-கீழ்க்கூறிய
परमं गुह्यम्-பரம ரஹஸ்யத்தை
मद्भक्तेषु-என் பக்தர்களிடம்
यः अभिधास्यति-எவன் சொல்வானோ
मयि-அவன் என் விஷயமான
परां भक्तिम्-பரபக்தியை
कृत्वा-செய்து
माम् एष्यति एव-என்னைத் திண்ணம் பெறுவான்
असंशयः—ஸம்சயமில்லை.

**न च तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः ।**
**भविता न च मे तस्मादन्यः प्रियतरो भुवि ॥ ६९ ॥**

*ந ச தஸ்மாந் மநுஷ்யேஷு கச்சிந் மே ப்ரியக்ருத்தம: |*
*பவிதா ந ச மே தஸ்மாத் அந்ய: ப்ரியதரோ புவி || 69 ||*

मनुष्येषु—மனிதர்களில்
मे प्रियकृत्तमः—எனக்கு ப்ரியம் செய்பவரிற் சிறந்தவன்
तस्मात् अन्यः—உபதேசிப்பவனைக் காட்டிலும் வேறானவன்
न च कश्चित् भविता—எவனு மாகான்.
तस्मात् अन्यः—அவனைவிட வெறொருவன்
भुवि—பூமியில்
मे प्रियतरः न च—எனக்கு மிகவும் இஷ்டமானவனும் ஆகான்.

உபதேசிப்பவனுக்குப் பலன் அருளினார். கற்பவனுக்குப் பலனைப் பணிக்கிறார்—

**अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः ।**
**ज्ञानयज्ञेन तेनाहमिष्टः स्यामिति मे मतिः ॥ ७० ॥**

*அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம் ஸம்வாதம் ஆவயோ: |*
*ஜ்ஞாநயஜ்ஞேந தேநாஹம் இஷ்டஸ்ஸ்யாமிதி மே மதி: || 70 ||*

इमं धर्म्यम्—இந்தப் பெரும் தர்மத்தைப் பற்றிய
आवयोः संवादं-நமது ஸம்பாஷணையை
यः अध्येष्यते—எவன் படிப்பானே,
तेन अहम्—அவனால் நான்
ज्ञानयज्ञेन —ஜ்ஞானயஜ்ஞமென்ற பக்தியோகத்தினால்
इष्टः—ஆராதிக்கப் பெற்றவனாக
स्याम् इति—ஆவேன் என
मे मतिः—எனது கருத்தாம்.

श्रेयान् द्रव्यमयात् यज्ञात् ज्ञानयज्ञः परंतप என்ற ஜீவாத்ம ஜ்ஞானமாம் யஜ்ஞமன்றி, ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते என்னப்பட்ட பக்தியோகமே இங்கு ஜ்ஞானயோகம். படித்த மட்டிலே அது செய்ததாகுமோ என்னில், அதனால் தான் मे मतिः என்றது. இவனிடம், செய்தவனிடம் போல் ப்ரீதி வைக்கிறான் எம்பெருமான். உடனே அந்த நிலைக்கு இவனும் வருவானாதலான். (70)

படிப்பவனுக்குப் பலன் சொன்னார், கேட்பவனுக்கும் அதைக் கூறுகிறார்—

श्रद्धावान् अनसूयुश्च शृणुयादपि यो नरः ।
सोऽपि मुक्तः शुभान् लोकान् प्राप्नुयात् पुण्यकर्मणाम् ॥ ७१ ॥

*ச்ரத்தாவாந் அநஸூயுச்ச ச்ருணுயாதபி யோ நர: |*
*ஸோऽபி முக்த: சுபாந் லோகாந் ப்ராப்நுயாத் புண்யகர்மணாம் ||71||*

यः नरः—எந்த மனிதன்
श्रद्धावान्—அக்கரையுள்ளவன்
अनसूयुः च-பொறாமையில்லாதவனும்
शृणुयात् अपि—காதால் கேட்பது மட்டும் செய்கிறானோ
सः अपि—அவனும் கூட
मुक्तः—பாபங்களினின்று விடுபட்டு
पुण्यकर्मणां—பக்தர்களுடைய
शुभान् लोकान्—நல்ல குமாரங்களை
प्राप्नुयात्—நன்கு சேருவான்.

கீதையைக் கேட்பவன் வைராக்யமுடையவனாகிறானாதலால் இவன் ஸ்வர்கம் முதலான லோகங்களை யடைகிறானென்னவொண்ணாது. அந்த தோஷமற்றவன் என்பதற்காக मुक्तः என்றது என்றும் கூறலாம். ஆதலால் மேலே பக்தி பெறப் பாங்காக பக்தர்களுடன் சேர்த்தியே पुण्यकर्मणाम् என்று கூறப்படும். காம்ய கர்மாக்களைச் செய்பவரை யல்ல.

உபதேசம் செய்ய வேண்டுமிடமும் பலனும் கூறப்பெற்றது. இவனுக்கு இந்த உபதேசம் இப்போது செய்தது எதற்காகவோ, அது உண்டாயிற்று என்பதை அவன்மூலமே அறிய விரும்பிக் கேட்கிறார்—

कच्चिदेतत् श्रुतं पार्थ त्वयैकाग्रेण चेतसा ।
कच्चिदज्ञानसंमोहः प्रनष्टस्ते धनञ्जय ॥ ७२ ॥

*கச்சித் ஏதத் ச்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா |*
*கச்சித் அஜ்ஞாநஸம்மோஹ: ப்ரநஷ்டஸ்தே தநஞ்ஜய || 72 ||*

पार्थ—குந்தீபுத்ரனே !
एतत् त्वया—நான் கூறியது உன்னால்
एकाग्रेण चेतसा—ஊற்றமுள்ள மனத்துடன்
कच्चित् श्रुतम्—கேட்கப் பெற்றதா?
धनञ्जय-வென்று தனம் பெறுபவனே!
ते अज्ञान संमोहः—தத்துவம் உணராமையால் வந்த உனது விபரீத ஜ்ஞானம்
कच्चित् प्रनष्टः-முழுமையும் ஒழிந்ததா?

பகவானின் பேச்சு முற்றிற்று.

अर्जुन उवाच—அர்ஜுனன் விண்ணப்பம் செய்கிறான்—

**नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाऽच्युत ।**
**स्थितोऽस्मि गतसंदेहः करिष्ये वचनं तव ॥ ७३ ॥**

*நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்லப்த்தா த்வத்ப்ரஸாதாந் மயாऽச்யுத |*
*ஸ்த்திதோऽஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ || 73 ||*

अच्युत-ஆச்ரிதரை விடாதவனே !
त्वत्प्रसादात्-உமது அனுக்ரஹத்தால்
मोहः-விபரீத ஜ்ஞானம்
नष्टः-தொலைந்தது.
स्मृतिः—தத்துவஹித புருஷார்த்த அறிவு
लब्धः-பெறப்பட்டது.
गतसंदेहः-ஐயமெல்லாம் தீர்ந்து
स्थितः अस्मि-உண்மையில் நின்றேன்.
तव वचनं-தேவரீர் சொற்படி
करिष्ये—செய்யப் போகிறேன்.

स्मृतिः என்றதாலே யாரோ முன் உபதேசித்திருக்க, பிறகு இவரிடமிருந்து அதை நினைத்துக் கொண்டான் என்பதில்லை. ஸ்ரீக்ருஷ்ணனே தத்துவங்களையும் கர்மயோகாதிகளான ஹிதங்களையும் முதன்முதல் உபதேசித்தாரானாலும் பன்னிப்பன்னி யருளியதால் இனி மறவாதபடி வேண்டும்போது ஆராய்தலுக்கு ஏற்றவாறு கொண்டேன் என்பதற்காக स्मृतिः நினைவு என்றான். கடைசியில் தயங்கின அர்ஜுனனுக்கு सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः என்று மீண்டும் சொல்லக் கேட்டதாலும் ஸ்ம்ருதி என்றது தகும். करिष्ये वचनं तव மோக்ஷத்திற்கான பக்தியோகம் ज्ञानयज्ञेन तेनाहम् என்று கொண்டாடப் பட்டதை நான் பெறும்படி ஸாத்விக த்யாகத்துடன் போரை மிக்க ச்ரத்தையுடன் நடத்துவேனென்றபடி.

க்ருஷ்ணார்ஜுநஸம்வாதம் முற்றிற்று.

सञ्जय उवाच—ஸஞ்ஜயர் சொல்வதாவது—

**इत्यहं वासुदेवस्य पार्थस्य च महात्मनः ।**
**संवादमिममश्रौषमद्भुतं रोमहर्षणम् ॥ ७४ ॥**

*இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்ய ச மஹாத்மந: |*
*ஸம்வாதமிமம் அச்ரௌஷம் அத்புதம் ரோமஹர்ஷணம் || 74 ||*

वासुदेवस्य–கண்ணபிரானுடையவும்
महात्मनः पार्थस्य–மஹாபுத்திமானை அர்ஜுனனுடையவும்
अद्भुतम्–ஆச்சர்யமாய்
रोमहर्षणं–மயிர் சிலிர்க்கவுமான
इति इमम्—இதுவரையில் கூறியபடியான
संवादं—ஸம்பாஷணையை
अहम् अश्रौषम्—நான் நேரில் கேட்டேன்.

மஹாராஜரே! இப்போது உமக்கு நான் சொன்ன இந்த க்ருஷ்ணார்ஜுந ஸம்பாஷணையானது முதன்முதல் நான் கேட்கும்போது ஆச்சர்யமாய் மயிர் சிலிர்க்குமளவுக்கு ஆனந்தம் விளைவிப்பதாயுமிருந்தது. உமக்கு இப்போது எந்த நிலையோ? (துர்யோதனனுக்கு வெற்றியிலே நோக்கான உமக்கு தத்துவஹித விஷயம் செவியிற் பட்டதோ இல்லையோ). (74)

எனது காதில் அந்த ஸம்பாஷணை எப்படி விழுந்ததுஎன்கிறீரோ; கேண்மின்—

व्यासप्रसादात् श्रुतवान् एतद्गुह्यमहं परम् ।
योगं योगेश्वरात् कृष्णात् साक्षात् कथयतः स्वयम् ॥ ७५ ॥

வ்யாஸப்ரஸாதாத் ச்ருதவாந் ஏதத் குஹ்யம் அஹம் பரம் |
யோகம் யோகேச்வராத் க்ருஷ்ணாத் ஸாக்ஷாத் கதயத: ஸ்வயம் ||75||

अहं व्यास प्रसादात्—நான் வியாஸரின் அனுக்ரஹத்தினால் (திவ்யமான செவி பெற்று)
एतत् गुह्यम्—இந்த ரஹஸ்யமான
परं योगम्—சிறந்த யோகத்தை
स्वयं कथयतः—தன் வாயாற் சொன்ன
योग ईश्वरात्—பிறருக்கும் கல்யாண குணங்களை ஸங்கல்பிக்கும்படி குணபூர்ணனை
कृष्णात्–ஸ்ரீக்ருஷ்ணனிடத்தினின்றே
साक्षात् श्रुतवान्–நேராக கேட்டேன்.

राजन् संस्मृत्य संस्मृत्य संवादमिममद्भुतम् ।
केशवार्जुनयोः पुण्यं हृष्यामि च मुहुर्मुहुः ॥ ७६ ॥

ராஜந் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாதம் இமம் அத்புதம் |
கேசவார்ஜுநயோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு: || 76 ||

राजन्—மஹாராஜரே!
इमम् अद्भुतम्—இந்த அற்புதமான
पुण्यं—பவித்ரமுமான
केशव अर्जुनयोः—ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனர்களின்
संवादम्—ஸம்பாஷணையை
संस्मृत्य संस्मृत्य—நினைத்து நினைத்து
मुहुर्मुहुः—மீண்டும் மீண்டும்
हृष्यामि च—ஆனந்தமுற்றவண்ணமுமிருக்கிறேன்.

तच्च संस्मृत्य संस्मृत्य रूपमत्यद्भुतं हरेः ।
विस्मयो मे महान् राजन् हृष्यामि च पुनः पुनः ॥ ७७ ॥

தச்ச ஸம்ஸம்ருத்ய ஸம்ஸ்ருத்ய ரூபம் அத்யத்புதம் ஹரே: |
விஸ்மயோ மே மஹாந் ராஜந் ஹ்ருஷ்யாமி ச புந: புந: || 77 ||

तत्—வ்யாஸானுக்ரஹத்தால் என்னால் பார்க்கப் பெற்ற
अत्यद्भुतं—அவர்களின் ஸம்வாதத்திற்கு மேல் ஆச்சர்யமான
हरेः रूपं-பகவானின் விச்வரூபத்தை
संस्मृत्यसंस्मृत्य च-நினைத்து நினைத்தும்
(हृष्यतः)मे-மகிழ்ச்சியுறும் எனக்கு
राजन्—மஹாராஜரே !
महान् विस्मयः—மிக்க வியப்பு.
पुनःपुनः—மீண்டும் மீண்டும்
हृष्यामि च—மகிழ்ந்தும் வருகிறேன்.

ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனுக்கு நற்குணயோகம் அளித்தான். அர்ஜுனனும் நழுவின வில்லை நேர்த்தியாக ஏந்தினான். இனி அவர் பக்ஷத்திலே வெற்றி யென்று வெளிப்படையாகவே கூறுகிறார்—

यत्र योगेश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः ।
तत्र श्रीर्विजयो भूतिर्ध्रुवा नीतिर्मतिर्मम ॥ ७८ ॥

யத்ர யோகேச்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தநுர்த்தர: |
தத்ர ச்ரீர் விஜயோ பூதி: த்ருவா நீதிர்மதிர்மம || 78 ||

இவ்வாறு எல்லா உபநிஷத்துக்களின் ஸாரமான
பகவத்கீதாபர்வம் முற்றும்.

यत्र—எந்த பக்கத்திலே
योग ईश्वरः—ஸர்வசேதநாசேதநங்களுக்கும் ஸ்வபாவங்களை யளிக்கும் ஸர்வேச்வரனை
कृष्णः—க்ருஷ்ணன் விளங்குகிறானோ
यत्र पार्थः-எப் பக்கத்தில் அர்ஜுனன்
धनुर्धरः—வில் ஏந்தியிருக்கின்றானோ,
तत्र-அந்தப் பக்கத்திலே
श्रीः विजयः-செல்வம் வெற்றி
भूतिः -ஆளும் சக்தி.
ध्रुवा नीतिः-நிலையுறும் நியாயமும்
इति-என்றே
मम मतिः-எனது திடமான புத்தி.

ஸ்ரீபகவத் கீதையில் முதல் ச்லோகம் த்ருதராஷ்ட்ரனின் கேள்வி, போர் புரியும் நோக்குடன் குருக்ஷேத்ரம் புகுந்த இரு வகுப்பினரும் என்ன செய்தார்கள் என்றவாறு. இதற்கு ஸஞ்ஜயர் விரிவாகச் சொல்லி வருவதில் இப்போது ஸ்ரீக்ருஷ்ணன் செய்த கீதோபதேசம் வரையிலான பாகம் ஆயிற்று. இதற்கு மேல் நடந்த வரலாற்றை மேலே சொல்லப் போகிறார். இடையில் க்ருஷ்ணன் அர்ஜுனன் இருவர் சேர்ந்த பக்கத்தில்தான் வெற்றி, நியாயம் எல்லாம் என்ற இவருடைய ஆராய்ச்சியின் முடிவைச் சொல்வது அவசியமில்லை. அப்படியிருக்க இதைச் சொன்னதின்று, த்ருதராஷ்ட்ரனுக்கு முன் கேள்வி கேட்கும் போதே எப்படியாவது தன் மக்களுக்கு வெற்றி வரவேண்டுமென்ற விருப்பம் இருப்பது தெரிந்து, ஸமயத்தில் க்ருஷ்ணார்ஜுனர்களின் ப்ரபாவ ஸங்கல்ப்

பங்களைப் பரக்கப் பணித்தவிடத்திலே இனி அவன் விருப்பம் நிறைவேறு தென்று அறிவித்தல் நலமென்று நினைத்துச் சொன்னாரெனத் தேறும்.

ச்லோகத்தில் यत्र என்ற சொல் ஒன்றே போதுமாயிருக்க இருதரம் அச்சொல் இருப்பதனின்று க்ருஷ்ணனோ அர்ஜுனனோ ஒருவர் இருந்தாலும் கூட அந்தப் பக்கத்திற்கே ஜயம் என்றறிவித்ததாம். धनुर्धरः என்றதையும் சேர்த்துப் பார்க்கும் போது வேறொன்றும் குறித்ததாகும். அதாவது—உமது மகன் துர்யோதனன் கண்ணனிடம் போயிருந்த போது, 'ஆயுதமின்றி வெறுமனே நான் வந்திருக்க ஸம்மதமானால் வேண்டுமவருக்கு வருகிறேன்' என்று அவர் சொன்னாரே. அப்போது நீர் என் பக்கம் அவ்வாறு வந்தால் போதுமென்று துர்யோதனன் இசைந்து அழைத்திருந்தால், இந்த அர்ஜுனன் போரின் தொடக்கத்திலே புத்தி கலங்கியவன் உபதேசம் செய்பவரில்லாமையாலே போரை நிறுத்திப் போயிருப்பான்; உங்களுக்கு வெற்றி வந்திருக்கும். அதுவின்றி கண்ணன் அவன் பக்கம் செல்லும்படி உன் மகன் விட்டபடியால் இப்போது பூர்ணோபதேசம் பெற்று தனுர்த்தரனாய் நின்றுவிட்டான். இனி உங்களுக்கு நன்மை ஏதென்றவாறும். 'மதிர்மம', எனது எண்ணம் இது. உமக்கு எப்படி மனத்திற்படுமோ அவ்வாறு நீர் கொள்ளலாமென்றதாம். ध्रुवा என்பது மதிக்கும் சேரும். எனது புத்தி இது இதற்குமேல் நடப்பதனின்றும் திடமாகவே நிற்கிறது என்றதாம்.

अभिनवदेशिक इत्थं नाम्ना श्रीवीरराघवो वात्स्यः ।
गीतार्थमन्ववादीत् संग्रहतो भाष्यचन्द्रिकाप्रोक्तम् ॥
सारथ्यमर्जुनस्याऽऽजौ कुर्वन् गीतामृतं ददौ ।
लोकत्रयोपकाराय तस्मै कृष्णात्मने नमः ॥

ஸ்ரீக்ருஷ்ணாய பரமாத்மநே நம:

சுபமஸ்து



ஸ்ரீ:

## தனியன்கள்

(1) யத்பதாம்போருஹ த்யாந வித்வஸ்தாசேஷகல்மஷ: |
வஸ்துதாம் உபயாதோऽஹம் யாமுநேயம் நமாமி தம் ||

(யாவரொருவரின் திருவடித் தாமரைகளை த்யானம் செய்ததால் வினைகள் அனைத்தும் தொலையப் பெற்று யானும் ஒரு வஸ்துவானேன், ஆளவந்தார் எனப்படும் அவரை யான் வணங்குகின்றேன்.)

(1) கட்டப் பொருள் விரித்த காசினியில் நான்மறையின்
இட்டப் பொருள் இயம்பும் இன்பொருளை-[சிட்டர் தொழும்
வேதாந்த தேசிகனை மேவுவார்தங்கள் திருப்
பாதாம்புய மடியேன் பற்று.

(முன்னும் பின்னும் போல் அனுபவிக்கும்போதும் துக்கத் துடனே கலந்தே யிருக்கும் பொருள்களையே எங்கும் பரப்பும் பூமி யிலே, பிரயாஸப்பட்டு அறிய வேண்டும் பொருள்களை விரித்துக் கூறும் நான்கு வேதங்களுக்கும் இஷ்டங்களான தத்துவ ஹித புருஷார்த் தங்களை உபதேசிப்பவரும், பரமப்ராப்யரும், நல்லொழுக்கமுள்ளவர் களால் தொழப்படுகின்றவரும், நான்மறையின் பொருளை கீதை வாயி லாகக் கூறும் இனிய பொருளான கண்ணபிரானை சிஷ்டர்களுடன் தொழுகின்றவரும், அந்த இனிய பொருளாம் கண்ணனை திருவேங்கட முடையானின் அவதாரமுமேயான ஸ்ரீதேசிகனென்ற ஆசார்யரிடம் பக்தியுள்ளவர்களின் திருவடித்தாமரையே அடியேனுக்கு அடைக் கலமாம்.)

(2) கீதை மொழிந்தருளும் வேதாந்ததேசிகனார்
பாதாரவிந்தமலர் பற்று.

(ஸ்ரீ பகவத்கீதையின் பொருளைப் பல வுரைகளாலே பரக்க அருளிச் செய்த ஸ்ரீநிகமாந்த மஹா தேசிகனுடைய திருவடித் தாமரைப்பூவே எனக்கு போக்கியமாகும்.)

ஸ்ரீ

ஸ்ரீக்ருஷ்ணய பரமாத்மநே நம:

# கீதாஸாரம்

## கீதார்த்த ஸங்க்ரஹம்

ஆளவந்தார் அருளிய ச்லோகங்களும்
ஸ்ரீதேசிகன் அருளிய பாசுரங்களும்

*-*-*-*

ஸ்ரீக்ருஷ்ண நாத யாமுந யதிவர நிகமாந்தகுருமுகாந் அகிலாந் |
ப்ரணிபத்ய குருவரேண்யாந் கீதாஸாரம் ப்ரவக்ஷ்யாம: ||

கண்ணபிரான் திருவாய்மலர்ந்தருளிய கீதைக்கு நிகரான சாஸ்திரம் ஒன்றுமில்லையென்பது எல்லோரும் இசைந்ததே. இது மஹாபாரதத்தில் இருப்பதாம். பரத வம்சத்தினரான பாண்டவர்களும் துர்யோதனாதிகளும் போர் புரியச் சேர்ந்தபோது அர்ஜுனனை வியாஜமாக்கி உலகினுக்கு இவ்வுபதேசம் செய்ய எம்பெருமானுக்கு வாய்த்தது. தான் அறிய அரியனாயிருத்தலைப் போக்க அவதாரம் செய்தது போதாதென்று, கல்பந்தோறும் பிரமனுக்குத் தான் உபதேசம் செய்யும் வேதமென்கிற சாஸ்திரத்தையும் எளிதில் எல்லோரும் அறியும்படி அவதரிப்பித்தருளினான். வேதவுலகிலுள்ள பொருள்களெல்லாம் கீதாசூரியனின் ஒளியைக் கொண்டே தெளிவாக அறியப்படுகின்றன. எம்பெருமானுடைய குணங்கள் அவதாரத்தில் ஒளி பெறுவதுபோல் வேதம் தத்துவ ஹித புருஷார்த்தங்களை ஓதும் வகை கீதையினின்றே தெளிவாம்.

இந்த கீதாசாஸ்திரத்திற்குப் பலர் பலவிதமாகப் பொருள் கூறினர். அவையெல்லாம் பொய்யெனத் தெளியுமாறு ஸம்ப்ரதாயமாய் வந்த மெய்யான பொருளை வெகு அழகாக முப்பத்திரண்டு ச்லோகங்களிலே ஆளவந்தார் சுருக்கியருளினார். இத் தெளிவை நன்கு வரப்பெற்று இதனுக்கு இணங்க எம்பெருமானார் கீதாபாஷ்யம் விரிவாக அருளினாரென்பது அந்த பாஷ்யத்திலே அவர்தம்மாலே உரைக்கப்பட்டதேயாம். அந்த முப்பத்திரண்டு ச்லோகமான கீதார்த்த ஸங்க்ரஹம் என்கிற நூலுக்கு, கீதாபாஷ்யத்தில் அக்ஷரம் அக்ஷரமாக ஊன்றி, பொருள்களையெல்லாம் தாத்பர்யசந்திரிகை என்ற உரையிட்டுப் பரக்க அருளின ஸ்ரீதேசிகன் கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷை என்கிற உரையும் அருளியுள்ளார். தமிழில் இதில் முதல் ச்லோகத்திற்கும், பதினெட்டு அத்தியாயங்களின் பொருளைச் சுருக்கும் பதினெட்டு ச்லோகங்களுக்கும் மொழிபெயர்ப்பாகப் பாட்டுக்களையிட்டு 21 பட்டுக்கள் அடங்கிய ப்ரபந்தத்தையும் ஸ்ரீதேசிகன் அருளினார். இந்த இரண்டு கீதார்த்தஸங்க்ரஹங்களை உரைதந்துக் கொண்டு கீதாஸாரம் வெளியிடப்படுகிறது.

(1) ஸ்வதர்ம ஜ்ஞாந வைராக்ய ஸாத்ய பக்த்யேக கோசர:
நாராயண: பரம் ப்ரஹ்ம கீதாசாஸ்த்ரே ஸமீரித: ||

(ஜீவனால்) தனக்குரிய தர்மாநுஷ்டானம், அறிவு, வைராக்கியம் இவற்றைக் கொண்டு ஸாதித்துப் பெறப்படும் பக்தி யோகத்திற்கு ஒரே இலக்காயிருக்கும் பரப்ரஹ்மம் எனப்படும் திருமாலானவன் கீதை என்கிற சாஸ்த்ரத்தில் நன்கு உபதேசிக்கப்பட்டிருக்கிறான்.

அவனவனுக்கு ஏற்பட்ட வர்ணாச்ரம தர்மமும் கர்மயோகமும் ஸ்வ தர்மம். அவனவன் தன் ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றிப் பெற்ற ஞான யோகமும் பரமாத்மாவின் ச்ரவண மனனாதிகளும் ஸ்வஜ்ஞானம். தான் செய்யும் தர்மங்களுக்கோ ஞானயோகத்திற்கோ ஐச்வர்யம் கைவல்யம் என்றவற்றைப் பலனாகக் கோராமலிருப்பதும் உலகப் பற்றை விட்டிருப்பதும் வைராக்கியம். கர்மயோகமோ ஞானயோகமோ தன் ஆத்ம ஸ்வரூபத்தைக் காண விரகாகும். பிறகு ஆத்மாவுக்கு அந்தராத்மாவான பரமாத்மவிஷயமாக பக்தியோகம் செய்வதாம். அந்த பக்தியோகம் ஒன்றே பரமாத்மாவைப் பெற வழி. கர்மயோகமோ ஞானயோகமோ மட்டும் போதா. அந்த பக்திக்கும் அவன் ஒருவனே இலக்காக வேண்டும். வேறொரு தேவதையை பஜனம் பண்ணி மோக்ஷம் பெற முடியாது. பக்திக்கு இலக்கு–பக்தியினால் அடையப்பட வேண்டியவன் அவனே. அந்த பரமாத்மாவை பரப்ரஹ்மம் என்று பொதுவிலே வேதங்களில் சிலவிடத்தில் ஓதினாலும் திருமாலே அவன் என்பது, விசாரிப்பவருக்கு, வேதத்தினின்றே விளங்கும். கீதை யென்கிற சாஸ்திரம் ஐயமற அதை விளங்கச் செய்யும். நாராயணனுடைய அவதாரமான கண்ணன் உபதேசிக்கும் போது எனக்கு மேலொன்றுமில்லை யென்றும் என்னையே பஜனம் செய், சரணமாகப் பற்று என்றும் எல்லாம் விரிவாக உபதேசித்தனனே. உபநிஷத்துக்களின் மீமாம்ஸையான ப்ரம்ம ஸூத்திரத்திற்கு உபாயமும் உபேயமுமான ப்ரஹ்மமே முக்யமான பொருள். அவன் உபாயமாவது பக்திக்கு அவனே இலக்கான போதாம், பக்தி ஜீவாத்மாவைக் கண்ட பிறகு செய்யப் பெறுவதாம், அதைக் காண்பது கர்மயோக ஜ்ஞான யோகங்களாலாம். அதற்காகவே அவை யென்றும் கூறப்படும். அவ்வாறே கீதா சாஸ்த்ரத்திற்கும் அத்தகைய ப்ரம்மமே பொருளாம். கீதாசாஸ்த்ரமில்லையாகில் அந்தந்த யோகங்களின் நிலையும் பலனும் நன்கு உணரப்படமாட்டா. அவ்வாறே தத்துவ நிலையுமென்றபடி.

தேசிகப் பிரபந்தத்தில் இந்த ச்லோகத்தின் பொருளை உரைக்கும் முதற் பாசுரமாவது—

1. கருமமும் ஞானமுங்கொண்டெழும் காதலுக் கோரிலக்கென்று
அருமறையுச்சியு ளாதரித்தோதும் அரும் பிரமம்
திருமாலென்று தானுரைத்தான் திருமகளோடு வரும்
தருமமுகந்த தனஞ்சயனுக்கவன் சாரதியே.

தர்மம் உகந்த தனஞ்சயனுக்கு—இன்னது தர்மமெனத் தெளிய விரும்பின அர்ஜுனனைக் குறித்து அவன் சாரதி தான்—போரில் அவ னுக்கு ஸாரதியாய அவனே, கருமமும் ஞானமும் கொண்டு—கர்ம யோகஞானயோகாதிகள் கை வந்த பிறகு, எழும் காதலுக்கு—உண் டாகி வளரும் பக்தியோகத்திற்கு, ஓர் இலக்கு என்று—ஒன்றே லக்ஷ்யம் (விஷயமும் பலனும்) என்று அரு மறை உச்சியுள்—அறிவதற்கு அரியனவான வேதாந்தங்களில் ஆதரித்து ஓதும்—கருத்துடனும் வாத் ஸல்யத்துடனும் ஓதப்படுகிற அரு பிரமம்—வேறு வைகயில் அறியவும் அடையவும் முடியாத பிரம்மமே திருமகளோடு வரும் திருமால்—லக்ஷ்மி தேவியோடு அவதரிக்கும் நாராயணனும், என்று உரைத்தான்—என்று விரிவாக உபதேசித்தான். அதுவே கீதை.

'பக்தியோகமவதாரயாமாஸ' என்று பக்தியை ப்ரதானமாக அருளினர் பாஷ்யகாரர். ஆகையால் தத்துவம் ஹிதம் இவை இரண் டும் கீதாசாஸ்திரத்தில் முக்கியம். அந்த பரப்ரம்மம் ஸ்ரீமந் நாராயண னே என்பதும் இங்கே நன்கு அறியப்படுவதால் அதுவும் விதேய மாம். ஆக கர்மயோகம், ஞானயோகம், அதனால் வரும் பக்தியோகம், அதற்கு இலக்கான ப்ரஹ்மம் என்ற விஷயங்களைச் சொல்லி இப்படி உபநிஷத்துக்களில் உபதேசிக்கப்பட்ட ப்ரம்மமும் அவதரித்தருளும் திருமாலும் ஒன்றென உபதேசிக்கின்றது கீதாசாஸ்த்ரமென்றதா யிற்று. கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையில் விரிவு காண்க. (1)

முழு கீதையின் பொருள் இன்னதென்று கூறப்பெற்றது. இந்த கீதை 18 அத்யாயங்கள் கொண்டது. இதனை மூன்று பாகங்களாகப் பிரிப்பர். ஒவ்வொரு பாகத்திலும் ஆறு அத்தியாயங்கள் அடங்கும். முதற் பாகத்தில் ஜீவதத்துவமும் அது விஷயமான யோகமும் சொல்லப் படும்; இடைப் பாகத்தில் பரமாத்ம தத்துவ ஹிதங்களை விரிவாக எடுத்துரைத்து உபதேசத்தை திடப்படுத்தும். மூன்றாம் பாகத்தில் முன்பாகங்களின் பொருள் விரிவாம். அதில் முதற் பாகமான முதல் ஆறு அத்யாயங்களின் பொருளைப் பொதுவாகப் பணிப்பது 2-ஆம் ச்லோகம்.

(2.) ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்ட்டே யோகலக்ஷ்யே ஸுஸம்ஸ்க்ருதே.
ஆத்மாநுபூதி ஸித்த்யர்த்தே பூர்வ ஷட்கேந சோதிதே.

புஷ்கலமான ஸாத்விக த்யாகத்துடன் செய்யப்படுகின்றனவாய், மனதை ஆத்மாவில் நிறுத்துவதை நோக்காகவுமுடையனராய் அதன் மூலம் ஜீவனைக் காண்பதற்குமான ஞானம், கர்மம் என்ற இரு யோகங்கள் முதல் ஆறு அத்யாயங்களில் விதிக்கப்படும்.

முதல் ஆறு அத்யாயமான பாகம் ஜீவாத்மாவின் அனுபவத்திற்கு வேண்டுவதைச் சொல்லுகிறதென்றபடி, நிஷ்டையாவது—நிலைப்பு—உபாயம். யோகம் என்கிற சொல்லுக்குப் பொதுவாக உபாயமென்றது பொருள். ஆகையாலேயே கர்மயோகம், ஞானயோகம் என்கிறது.

இங்கே 'யோகலக்ஷ்யே' என்ற விடத்தில் யோகமாவது யோக சாஸ்த்திரத்தில் சொல்லியபடி ஆஸனத்திலமர்ந்து இந்திரியங்களை அடக்கி மனத்தைக் குறிப்பான இடத்தில் நிறுத்துவது, மனது சலியாமல் ஜீவாத்ம விஷயத்தில் நிற்பதற்கு கர்மயோக ஞானயோகங்கள் செய்யப் பட வேண்டும். அதன் பிறகு ஆனந்த ரூபமான ஆத்மாவின் தத்துவம் அனுபவத்திற்கு வரும்.

இடைப்பாகத்தின் பொருள் கூறும் ச்லோகம் மேலது:—

(3.) மத்யமே பகவத் தத்த்வ யாதாத்ம்யாவாப்தி ஸித்தயே |
ஜ்ஞாந கர்மாபிநிர்வர்த்யோ பக்தியோக: ப்ரகீர்த்தித: ||

கீழ்ச் சொன்ன ஞானயோக கர்மயோகங்களால் ஆத்ம தர்சனம் மூலம் பெறுவிக்கப்படும் பக்தியோகமானது, பகவானென்கிற தத்துவத்தை ஸர்வத்திற்கும் ஆத்மாவாக உள்ளபடி யெல்லாம் அனுபவிப்பதாகிற பயனைப் பெறுதற்காக இடையிலே நன்கு உபதேசிக்கப்படுகிறது.

கரும்பில் வேர்பற்றும் தலைப்பாகமும் போக இடையிலுள்ளது வெகு ரஸமாயிருப்பது போல் கீதையில் இந்த இடைப்பாகமாம். (3)

(4.) ப்ரதாந புருஷ வ்யக்த ஸர்வேச்வர விவேசநம் |
கர்ம தீ: பக்திரித்யாதி: பூர்வசேஷ: அந்திமோதித: ||

ப்ரபஞ்ச காரணமாய் ப்ரதானமெனப்படும் மூலப்ரகிருதி, புருஷர்களெனப்படும் ஜீவர்கள், ப்ரபஞ்சமாகிற வ்யக்தம், ஸர்வேச்வரன் என்கிற தத்துவங்களில் விவேகமும், கர்மாநுஷ்டானம், ஜ்ஞானம், பக்தியோகம் என்ற உபாயங்களும், அவற்றைச் சார்ந்த ஸத்துவகுணதி விசேஷமுமான முந்திய இரண்டு பாகங்களுக்கும் வேண்டியவை கடைப்பாகமான ஆறு அத்தியாயங்களில் கூறப்பட்டன. பொதுவாகப் பூர்வசேஷத்தைப் பகர்வது இதன் கார்யம். (4)

இப்படி மூன்று பாகங்களாகப் பிரித்து கீதார்த்தம் கூறப்பெற்றது. இனி கீதை பதினெட்டு அத்தியாயங்கள் கொண்டதாகையால் ஒவ்வோர் அத்தியாயத்தில் உரைக்கப் பெற்றது என்ன என்பது விரித்துரைக்கப் படுகிறது. ஒவ்வோர் அத்யாயத்திற்கு ஒவ்வொரு விஷயத்திலே நோக்கு என்பதை ஸ்ரீ தேசிகன் கடைசியாகத் தாத்பர்யசந்த்ரிகையில் அருளியுள்ளார். அதை யிங்கும் கடைசியில் கூறுவம். இந்தக் கீதையில் இரண்டாம் அத்தியாயம் முதற்கொண்டே தத்துவ ஹிதோபதேசம் செய்யப்படும், முதல் அத்தியாயமானது அந்த உபதேசம் ஏன் அப்போது ஏற்பட்டதென்றதை யறிவிக்கப் பிறந்தது. ஆக அது சாஸ்திரத்திற்கு உபோத்காதம்–பூமிகை. அர்ஜுனன் கவலையுற்றான்; அந்தக் கவலையைத் தீர்க்க உபதேசம் வந்ததென்ன வேண்டும். அதில் கவலையுற்றதை மட்டும் முதல் அத்யாயத்திலே மொழிந்து, அதன் மேல் கண்ணன் இஃதென்ன என்று கேட்டதையும், அர்ஜுனன் மீண்டும் தன் கருத்தை வெளியிட்டு தர்மத்தை நன்கறியாமல் தடுமாற்றம் உற்று,

'உபதேசம் செய்தருள வேண்டு'மென்று கண்ணபிரானிடம் சிஷ்யனுய்ச் சரணமடைந்ததையும் இரண்டாவது அத்யாயத்தின் தொடக்கத்திலே கூறி உபதேசம் செய்ததில் சிறிதையும் அதிலேயே சேர்த்தருளினுர் வியாஸபகவான். ஆளவந்தார் இந்த இரண்டாம் அத்யாயத்தில் உபதேச பாகம் விரிவாயிருப்பதால் கண்ணனை யடைக்கலம் கொண்டது வரை பூமிகையாகக் கூடுவதால் 2வது அத்யாயத்தில் அதற்காக உள்ள 10ச்லோகங்களையும் முதல் அத்யாய விஷயத்தோடு சேர்த்து முழு பூமி கைக்காக ஒரு ச்லோகம் அருளிச் செய்கிருர். ஆகையாலேயே மேல் வரும் ச்லோகத்தில் 'முதல் அத்யாயத்திஞல்' என்ற சொல் இல்லை. மேல் ஒவ்வோர் அத்யாயத்தையும் குறிப்பிடுவர்.

(5.) அஸ்த்தாநஸ்நேஹ காருண்ய தர்மாதர்மப(தி)யாகுலம் |
பார்த்தம் ப்ரபந்நம் உத்திச்ய சாஸ்த்ராவதரணம் க்ருதம் ||

தகாத இடத்திலான சினேகம் தயை என்பவைகளாலும், தர்மத் திலே இது அதர்மமென்கிற அச்சத்திஞலும் கலக்க முற்றவனும் சரணு கதி செய்தவனுமான குந்திபுத்ரனை அர்ஜுனனைக் குறித்து தத்துவ ஹிதோபதேசத்தின் தொடக்கம் செய்யப்பெற்றது.

'தர்மாதர்மபய' என்றவிடத்தில் 'தர்மாதர்மதியா என்ற பாடமும் ப்ரஸித்தமானது. அப்போது தர்மத்தில் அஸ்த்தாநஸ்நேஹ காருண் யங்காளாலுண்டான அதர்ம புத்தியிஞலே எனவுரைப்பர். 'உத்திச்ய'. கலங்கினவனைத்தெளிவிக்க வேண்டியது அவசியம். குந்தீபுத்ரனைபடி யாலே குடல்துவக்கிஞல் தத்வோபதேசம் செய்யவும் முன் வந்தார். எது ச்ரேயஸ்ஸோ, அதை உபதேசிக்கவேண்டுமென்று கூறிச் சரணு கதனுய்விட்டபடியாலே ச்ரேயஸ் ப்ரேயஸ் என்ற இரண்டில் ச்ரேயஸ் ஸென்ற மோக்ஷஸாதனமானது பற்றி பரதத்துவஹிதங்களை உபதேசிகக் வேண்டுமென்று உபநிஷத்தாகிற வேதாந்த சாஸ்திரத்தையே உப தேசித்தருளினுர். உபநிஷத்துக்களே கீதையாக வடிவெடுத்திருப்பது பற்றியே கீதா என்று ஸ்த்ரீலிங்கமாகவே கூறி, 'பகவத்கீதாஸு உப நிஷத்ஸு' என்பர். அர்த்தப்ரஹ்மத்தின் அவதாரம் கண்ணபிரான்; சப்தப்ரஹ்மத்தின் அவதாரம் கீதை. அவனது அவதாரம் ஏதோ ஒன்றை வியாஜமாக்கி கீதோபதேசம் முதலிய பல நன்மைகளைச் செய்தது. வேதசாஸ்த்ரம் அர்ஜுனனை வியாஜமாக்கி கீதையாக அவதரித்து உல கத்தினையே உய்விக்கின்றது. இந்த விசேஷம், 'உத்திச்ய' அவதரணம்' என்கிற சொற்களில் த்வனிக்கும். ஆகவே உத்திச்ய என்பதற்கு வியாஜ மாக்கி எனவும் பொருள் கொள்வர்.

(5) இதற்கான பிரபந்தப் பாசுரமாவது:—

2. உகவையடைந்த உறவுடையார் பொரலுற்ற அந்நாள்
தகவுடன் அன்பு கரை புரளத் தருமத்தளவில் |
மிகவுளம் அஞ்சி விழுந்து அடி சேர்ந்த விசயனுக்கோர்
நகையுடன் உண்மை யுரைக்க அமைந்தனன் நாரணனே ||

உகவை அடைந்த உறவு உடையார்—ஐச்வர்யச் செருக்காலே மகிழ்ச்சி
யுற்ற பந்துக்கள்
பொரல் உற்ற அ நாள் —முன் போரில் இறங்கி நின்றபோது
தகவுட ன் அன்பு கரை புரள—தன்னால் அழிய இருக்கும் அவர்களிடம்
தனக்கு தயையும் சினேகமும் கரைபுரண்டு ப்ரவேசித்ததால்
தருமத்து அளவில்—தர்மத்திலடங்கியதான போர் புரிதலென்பதிலும்
மிக உளம் அஞ்சி—இது அதர்மம் என்று அச்சம் அதிகமாகப் பெற்று
விழுந்து அடிசேர்ந்த விசயனுக்கு—தெண்டனிட்டுத் திருவடியைப்
பற்றின அர்ஜுனனுக்கு
நாரணன் ஓர் நகையுடன்—கண்ணபிரான் ஒப்பற்ற புன்சிரிப்புடன்
உண்மை உரைக்க அமைந்தனன்—தத்துவோபதேசம் செய்யலானான்.

பிறர் போரில் வந்திழிந்த பிறகு தகவும் அன்பும் தகாவாகையாலே ஆஸ்த்தாநஸ்நேஹ காருண்யங்கள் இவை. 'அஞ்சி' என்றதால் 'பய' என்ற பாடமும் கருதப் பெற்றது. விசயனுக்கு, தான் ஜயசீலனானபடி யாலே தோல்வியுறுவேனென்கிற அச்சத்திற்கு இடமில்லை. ஆகையாலே அவர்களின் உகவையைப் போக்குகிறோமே என்று தகவுற்றான். ஓர் நகையுடன் 'ப்ரஹஸந்இவ' என்ற சொல்லின் உரை இது. (2)

(6.) நித்யாத்மாஸங்ககர்மேஹா கோசரா ஸாங்க்ய யோகதீ: ।
த்விதீயே ஸ்த்திததீலக்ஷா ப்ரோக்தா தந்மோஹ சாந்தயே ॥

நித்யமான ஆத்மா என்ன, பற்றற்ற கர்மாநுஷ்டான மென்ன இவை விஷயமாய், ஸ்த்திதப்ரஜ்ஞத்வதசையைப் பயனாகவுமுடைய, ஆத்மா கர்மயோகம் என்பவற்றின் அறிவானது அந்த அர்ஜுனனின் மோஹம் ஒழிதற்காக 2ஆம் அத்யாயத்தில் உபதேசிக்கப் பெற்றது.

'ஏஷா தேऽபிஹிதா ஸாங்க்யே புத்திர்யோகே த்விமாம் ச்ருணு' என்று 39ஆம் ச்லோகம் வரையில் ஸாங்க்யமென்ற ஆத்ம தத்துவத்தின் ஜ்ஞானம் சொல்லப்பட்டதாகவும், மேலே கர்மயோக விஷயத்தில் புத்தி நிலையைச் சொல்லப் போவதாகவும் அருளினதற்கேற்ப இங்கே, 'ஸாங்க்ய யோகதீ: ப்ரோக்தா' என்றது. இப்படி ஆத்மஜ்ஞானத்துடன் கர்மயோகத்தை யறிந்து அநுஷ்டித்தால் வரும் பயன் ஸ்த்தித ப்ரஜ்ஞத்வ மென்கிற ஞானயோகம். அதாவது—'ஸமாதாவசலா புத்தி: ததா யோக மவாப்ஸ்யஸி (59) என்றபடி மனத்தில் நின்ற ஆத்மபுத்தி. அதன் பிறகு ஆத்ம ஸாக்ஷாத்காரம். அது இந்த கீதா ச்லோகத்தில் யோகமென்னப் பட்டது.

3. உடலமழிந்திடும் உள்ளுயிர் ஒன்றழியாதென்னைப் போல்
விடுமது பற்று விடாதது அடைத்த கிரிசைகளே.
கடுக உனக்குயிர் காட்டும் நினைவு அதனால் உளதாம்.
விடு மயலென்று விசயனைத் தேற்றினன் வித்தகனே.

உரை:—தேகமெல்லாம் அழிவுறும். அதனுள்ளே இருக்கும் ஜீவாத்மாவானது பரமாத்மாவான என்னைப் போலே ஒன்றாய்—அவயவங

களற்றதாகையாலே அழிவதில்லை. ஆகிலென்? ஞானமே போதுமே யென்னில், கர்மானுஷ்டானத்தினுல் வரும் பலன்களையே முதலில் நாம் விரும்பாமலிருக்க வேண்டும்; கர்மங்களை விடலாகாது. நம்மை விடாதது கர்மங்களே, ஆத்ம தத்துவத்தை ஸாக்ஷாத்கரிக்கக் காரணமான ஞானயோகமென்கிற நினைவு கர்மாநுஷ்டானத்தினுலேயே வருவதாம். உனக்கு மயல் இருப்பதாலே நீ கர்மாநுஷ்டானம் செய்து அதை விடுவாயாக. அப்படி செய்யவே மயல் விடும்; ஜ்ஞானயோகமும் பெறப்படும்.

இந்த அத்தியாயத்தில் தேஹம் அநித்யமென்பதை விரிவாகச் சொல்லியிருப்பதால் 'நித்யாத்ம' என்ற ஸங்க்ரஹம் இப் பாட்டில் உடலமழிந்திடும் என்ற அடியால் விரித்துரைக்கப்பட்டது. 'ந த்வேவாஹம் ஜாது நாஸம்' என்று அழியாமைக்குத் தன்னை த்ருஷ்டாந்தமாக அருளினுகையால் 'எனைப்போல்' என்றது. விடுமது இன்னதென்ற பிறகு, விடாததெது எனவரும் கேள்வியை யனுசரித்து விடாதது என ஒருமை. விடாதது எதுவென்னில், நித்யம் மட்டுமல்ல; பல கிரிசைகளும். அவற்றில் போரும் சேருமென்றபடி.

(7.) அஸக்த்யா லோகரக்ஷாயை குணேஷு ஆரோப்ய கர்த்ருதாம்|
ஸர்வேச்வரே வா ந்யஸ்ய உக்தா த்ருதீயே கர்மகார்யதா ||

ஜ்ஞானயோகாதிகாரியும் அநதிகாரிகளைக் காப்பதற்காக தன்னிடமுள்ள கர்த்தா என்ற தன்மையை ஸத்துவ ரஜஸ்தமோ குணங்களில் ஏறிட்டு குணங்களுக்கும் ஈச்வரனை பகவானிடத்திலாவது அதைச் சேர்த்துவிட்டு வேறு பலனில் பற்றற்று கர்மங்களைச் செய்ய வேண்டுமென்பது மூன்ரும் அத்தியாயத்தில் மொழியப் பெற்றது.

கர்மயோகத்திற்குப் பிறகு ஞர்னயோகம் செய்ய வேண்டுமென்பதேயில்லை. ஞானயோகாதிகாரியும் பலத்தில் பற்றற்று கர்மயோகமே செய்யலாம். இல்லாவிட்டால் ஞானயோகம் செய்யமாட்டாதவரும் ஞானயோகமே சிறந்ததென்று மயங்கி அதைச் செய்யத் தொடங்கி அழிவர். ஆனுல் அப்படி செய்கின்றவன் பலத்தில் பற்றற்றுச் செய்வதுபோல் கர்த்ருத்வத்யாகத்துடனும் செய்வதாம். இந்தக் கர்மங்களுக்கு நான் கருத்தனல்லன்; ப்ரக்ருதியின் குணங்களுக்கு நான் பவ்யப்பட்டிருப்பதால் தானே நான் செய்யவேண்டியதாகிறது. ஆக அந்த குணமே கர்த்தா; அல்லது அந்த குணங்களுக்கு அந்த சக்தியும் ஸர்வேச்வரனுலாகிறமையாலும், அவனே என்னையும் உள்ளே புகுந்து நியமிப்பதாலும் அவன்தான் கர்த்தா என்று கொள்ளவேண்டும்; ஆக அவன் நியமித்ததால் குணங்களுக்கு உட்பட்டு நான் கர்த்தாவாகிறேன் என்கிற விவேகத்துடன் செய்யவேண்டுமென்றபடி. இப்படி மூன்ரும் அத்தியாயம்.

4. சங்கம் தவிர்ந்து சகம் சதிர் பெற்ற (பெறத்) தனஞ்சயனே!
பொங்கும் குணங்கள் புணர்ப்பனைத்தும் புகவிட்டவற்றுள்
நங்கண் உரைத்த கிரிசையெலாமெனவும் நவின்ருர்
எங்கும் அறிவர்களே யென்று நாத னியம்பினனே.

தனஞ்சயனே ! சங்கம் தவிர்ந்து—ஓ அர்ஜுனா பலனில் பற்றை விட்டு
பொங்கும் குணங்கள்—இரண்டை அடக்கி ஒன்று மேலாகும் ஸத்துவாதி குணங்களின்
புணர்ப்பு அனைத்தும்—சேர்க்கையாலான எல்லாக் கார்யங்களையும்
அவற்றுள் புகவிட்டு—அந்த குணங்களுக்கே சேர்ந்தனவாக்கியும
உரைத்த கிரிசை எலாம்—சாஸ்த்ர ஸம்மதமாய், நாமும் சொன்ன எல்லாச் செயல்களும்
நம்கண் என உம்—எம்மிடத்தில் இருப்பன என்று-எமக்கு ஆதீனமென்று நினைத்தும்,
சகம் சதிர் பெற—லோகம் திறம் பெற-(திறமாக லோகம் கர்மயோகத்தில் பற்று வைப்பதற்காக)
நவின்றூர்—மீண்டும் அவற்றையே செய்கின்றவர்
எங்கும் அறிவர்களே—கர்மயோக தசையிலும் ஞான யோகிகளே ஆவர்
என்று நாதன் இயம்பினன்—என்றவாறு ஸர்வேச்வரன் அருளினன்.

'அஸக்த்யா' என்ற ஸங்க்ரஹத்திற்கு மொழிபெயர்ப்பு சங்கம் தவிர்ந்து' என்பது. 'லோகரக்ஷாயை' என்பதற்கு, 'சங்கம் சதிர் பெற' என்பது. ஆகையால் 'பெற்ற' என்ற பாடம் கொண்டு ஜகத்திலே ஸாமர்த்தியம் பெற்ற அர்ஜுனனே என்று அவனுக்கு வீணே விசேஷணமாக்க வேண்டா. பெற்ற என்ற பாடத்திலே லோக ரக்ஷை என்ற பொருள் கொள்ளக் கூடுமாகிலும், பற்ற என்றவாறு வேறு பாடம் கூடுமாகிலும் கொள்க. பெற என்ற பாடமாகில் சகம் சதிராகக் கர்மயோகத்தைப் பற்ற என்றது பொருள். இனி, பெற்ற என்றே பாடம் கொள்ளில், சகம் சதிர் பெற்ற—லோகம் உன்னை அனுஸரிக்கும்படி சிஷ்டனாகப் பேர் பெற்ற (சிஷ்டதயா வ்யபதிஷ்ட) என்றதாய் அர்ஜுனனுக்கு விசேஷணமாம். 'நவின்றூர்'. நவிலுதல், பயிலுதல், மேன்மேல் கிரிசையே செய்தல். 'புணர்ப்பனைத்தும்.' 'குணா: குணேஷு வர்த்தந்தே' என்ற விடத்திற் கொண்ட பொருள் கொள்க. அவற்றுள் புகவிடுதலாவது—அவையுள்ள போதே தான் செய்வதால் அவற்றையே கர்த்தாவாக பாவிக்கையாகும்.

(8.) பரஸங்காத் ஸ்வஸ்வபாவோக்தி: கர்மணோऽகர்மதாऽஸ்ய ச |
பேதா: ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் சதுர்த்தாத்யாய உச்யதே ||

நான்காம் அத்தியாயத்திலே கர்மயோகம் ஞானமாதல் சொல்லப்படுகிறது. கர்மயோகத்தின் பிரிவுகளும் சொல்லப்படுகின்றன. கர்மயோகத்திலடங்கிய ஞானபாகத்தின் பெருமையும் சொல்லப்படுகிறது, சொல்லவேண்டிய விஷயத்தோடு ஸம்பந்தமிராவிட்டாலும் ஏதோ கேள்விக்கு அவகாசம் ஏற்பட்டுக் கேட்டதாலே அவதார தசையிலும் மாறாத தனது நிலையைப் பற்றிய பேச்சும் அவச்யமாகி முதலில் உள்ளது.

ஏற்கனவே கர்மயோகத்தை சூர்யனுக்கு நான் உபதேசம் செய்ய அவன் மூலம், மனுமுதலான அரசர் பரம்பரையில் இது விளங்கிற்

றென்று கண்ணன் தொடங்கவே, 'இப்போது பிறந்த நீர் அப்போது அவனுக்குச் சொன்னதெங்ஙனம்' என்று அர்ஜுனன் வினவ, தனக்குப் பற்பல ஜன்மங்கள் உண்டென்றும் ஜன்மாந்தர விஷயங்களும் தனக்கு எப்போதும் ப்ரத்யக்ஷமாகவேயிருக்குமென்றும் தொடங்கி, தன்னுடையது சாமான்ய பிறப்பன்று; அவதாரமேயென்று அவதார ரஹஸ்யத்தை வெளியிட்டருளினான். இது ப்ரக்ருத விஷயத்திற்கு நன்கு ஸம்பந்தப் பட்டதன்றாகிலும் வினா எழவே விடையாக வந்ததாம். பிறகு முன் அத்தியாயத்திற் சொன்ன கர்மயோகம் ஞானரூபமாவதையும், அதாவது—ஞானம் சேர்ந்தேயிருப்பதையும், அக் கர்மயோகத்தில் த்ரவ்ய யஜ்ஞம், தபோயஜ்ஞமென்றவாறான உட்பிரிவுகளையும் கர்மயோகத்தில் அடங்கிய ஞானாம்சம் ப்ரதானமாய் பவித்ரமானது போன்ற மேன்மைகளையும் மொழிந்தருளினானென்றபடி.

5 பிறவாமை தந்திடத்தானே பிறக்கும் பெருமைகளும்
துறவாக்கிரிசைகள் தூமதிதன்னால் துலங்குகையும்
இறவா வுயிர் நன்நிலை கண்டிடும் உலகின்நிலையும்
மறைவாழ மாயவன் நேயனுக்கன்றறிவித்தனனே.

மறைவாழும் மாயவன்—வேதங்களால் வாழ்க்கை பெற்றவனான மாயேச்வரன்

பிறவாமை தந்திட—ஜீவர்களுக்கு மாயையில் பிறக்காமையை அனுக்ரஹிக்க

தானே பிறக்கும் பெருமைகளும்—ஸ்வேச்சையால் செய்யும் அவதாரத்தின் ரஹஸ்யங்களையும்,

துறவா கிரிசைகள்—ஞானியும் விடக்கூடாத த்ரவ்யயஜ்ஞம் முதலான கர்மயோகங்கள் யாவும்

தூ மதி தன்னால் துலங்குகையும்—பவித்ரமான ஆத்மஜ்ஞானமும் ப்ரம்ம ஞானமும் சேர்ந்து விளங்குவதையும்

இறவா உயிர் நல் நிலை—அழியாத ஜீவாத்மாவின் சுத்தமான தன்மையை

கண்டிடும் உலகின் நிலையும்—காண்பதாம் கர்மயோகிகளின் சிறப்பையும்

நேயனுச்கு அன்று அறிவித்தனன்.—ப்ரியனான அர்ஜுனனுக்கு அப்போது உபதேசித்தனன்.

நான்காம் அத்தியாயத்திலே அவதார ரஹஸ்யோபதேசத்திற்குப் பிறகு, கர்மயோகம் ஜீவாத்ம ஜ்ஞானத்தாலும் பரப்ரம்மஞானத்தாலும் (23-24) ஞானாகாரமாவதும், கர்மயோகத்தில் தேவார்ச்சை முதலான பல உட்பிரிவுகளும் (25-32), கீழ்ச்சொன்ன ஞானாம்சத்திற்குள்ள ஏற்றமும் சொல்லப்பெற்றன. அவற்றில் ஞானாகாரமாவதைச் சொன்னதோடு ஞானச்சிறப்பைச் சொல்லுவதையும் இணைத்துக் கொள்ள வேண்டும் (33–தா—சந்திரிகை,). இடையில் கர்மயோகத்தின் உட்பிரிவுகளைச் சொன்னது எந்த கர்மயோகத்திலும் ஞானம் விடப்படமாட்டாதென்று தெரிவிப்பதற்காகவே என்கிற கருத்தைக்

காட்ட இப் பாசுரத்திலே, ஸங்க்ரஹ ச்லோகத்தில் குறித்த கர்மயோகப் பிரிவுகளை 'துறவாக்கிரிசைகள்' என்று முன்னே எடுத்துப் பிறகு ஞானா காரத்வத்தை யருளினதென்க. இப்போது, 'குரு கர்மைவ தஸ்மாத் த்வம்', 'கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யம் ச விகர்மண:. அகர் மணச்ச போத்தவ்யம்' என்கிற க்ரமத்தையும் பற்றினதாம். முதலில் ஞானச் சேர்த்தியால் ஞாநாகாரமாவதைச் சொல்லி, 'அந்த ஞானம் கர்ம யோகம் செய்துவரும்போதே மேன்மேல் வளர்ந்து ஸாக்ஷாத்காரம் வரையிலாம், ஸம்சயமெல்லாம் சாந்தமாகும், ஆனந்த ஸ்வரூபானுபவம் பெறப்படு'மென்று அத்யாயத்தின் முடிவிலே சொல்லிற்று. ஆக இவ் வத்தியாயத்திற்கு ஞானச் சேர்த்திச் சிறப்பைச் சொல்வதில் நோக் கென்க. தாமதி—"ந ஹி ஜ்ஞாநேந ஸத்ருசம் பவித்ரம் இஹ வித்யதே."

(9) கர்மயோகஸ்ய ஸௌகர்யம் சைக்ர்யம் காச்சந தத்விதா: |
ப்ரஹ்மஜ்ஞாந ப்ரகாரச்ச பஞ்சமாத்யாய உச்யதே ||

கர்மயோகம் ஸுகமாகச் செய்யப்படுவதும் கர்மயோகம் ஞான யோகத்தினும் விரைவில் பலன் அளிப்பதும் ஐந்தாம் அத்தியாயத்திற் சொல்லப்படுகிறது. அவ்வாறே கர்மயோகத்திற்குச் சில அங்கங்களும், ஆத்மாவின் ஸமதர்சனத்திற்குக் காரணமும் கூறப்படுகின்றன.

'ஸந்ந்யாஸஸ்து' என்கிற (6) ச்லோகத்திலே ஞானயோகத்தை அனுஷ்டிப்பதில் அருமையைச் சொல்வதால் கர்மயோகம் எளிதில் செய்யப்படுவதும், 'நசிரேணாதிகச்சதி' என்று அதனால் பலன் விரைவில் கிடைப்பதும் சொல்லப்பெற்றன. பலன் விரைவிற்கிடைப்பதானாலும் அனுஷ்டிப்பதில் அருமை உண்டாகில் விடவேண்டியதாகும். அதுவு மில்லையேயென வறிவிக்க, மூன்றும் அத்யாயத்திலே தெரிவித்த ஸௌ கர்யத்தை இங்கும் மீண்டும் குறித்தது. கர்மயோகம் செய்வது, தான் கர்த்தன் அல்லன் என்பது போன்ற சில எண்ணங்களை அங்கங்களாகக் கூட்டிக்கொண்டு என்று மூன்றும் அத்யாயத்திற் சொன்னதையும் விரித் துரைத்தது (8–19). பிறகு ஆத்மாவைக் காண்கைக்கு வேண்டும் சில அம்சங்கள் (20–26) ஹர்ஷம் பயம் அற்றிருக்கை போன்றனவும் நான் காம் அத்யாயத்திற் சொன்னதின் விரிவாம். (27–28.) யோகம் செய்யும் முறையும் ஆறும் அத்தியாயத்தில் விரித்துரைப்பதற்கு இங்கு ஸங்க்ரஹ மாம். ஆக சைக்ர்யம்—விரைவு இங்கு ப்ரதானமான பொருளாம்.

6 கண்டெளிதாம் கருமம் உயிர்காட்டக் கடுகுதலும்
மண்டி அதன்படியில் மனங்கொள்ளும் வரிசைகளும்
கண்டறியா உயிரைக் காணலுற்ற நினைவுகளும்
வண்துவரேசன் இயம்பினன் வாசவன்மைந்தனுக்கே.

கண்டுஎளிதாம் கருமம்—கண்ணெதிரே தோற்றுவதால் ஸுகமாய்ச் செய்யப்படும் கர்மயோகம்

உயிர்காட்ட கடுகுதலும்—விரைவில் ஆத்மாவைக் காண விரகாதலையும்

அதன் படியில் மண்டி—கர்மயோகத்தின் அங்கங்களில் நோக்குண்டு மனங்கொள்ளும் வரிசைகளும்—நினைக்கப்படுமவற்றையும் கண்டறியா உயிரை-முன் அனுபவத்திற்கு வராத ஆதம தத்துவத்தின் காணல் உற்ற நினைவுகளுப்-தர்சனத்திற்கு விரகான எண்ணங்களையும் பரமோதாரனை கண்ணன் பார்த்தனுக்கு உபதேசித்தருளினான்.

'ஸௌகர்யம்' என்ற ஸங்க்ரஹத்தை 'எளிதாம்' என்று உரைத்தார். இது மூன்றும் அத்யாயத்திலே சொல்லப்பட்டதென்ற பாஷ்யகாரர் திருவுள்ளத்திற்கு இணங்கத் தனியே பிரிக்கப்படவில்லை. வரிசைகள்—நான் கருத்தன் அல்லன்; தேஹேந்த்ரியாதிகளே செய்கின்றன; பரப்ரம்மம் செய்விக்கிறது; பலன் வேண்டா; இது எனதல்ல; எல்லா ஆத்மாக்களும் ஸமமாம் என்றாற் போன்றனவாம். நினைவுகள்—ப்ரியாப்ரியங்களை ஸமமாக நினைக்கை, விஷயங்கள் துக்கஹேது என்கை, காமக்ரோதங்களுக்கு இடமேற்பட்டபோது அவற்றை வெல்ல விவேகிக்கை போன்றன.

(10) யோகாப்யாஸவிதிர் யோகீ சதுர்த்தா யோகஸாதநம் |
யோகஸித்தி: ஸ்வயோகஸ்ய பாரம்யம் ஷஷ்ட்ட(டே) உச்யதே ||

ஞானயோகியும் கர்மயோகியும் ஆத்மாவைக் காண யோகம் செய்யும் முறை ஆறுவது அத்தியாயத்தில் சொல்லப்படுகிறது. ஸமமாகக் காண்கை என்பது நான்கு விதமாகையால் யோகி நால்வகையராகையும், யோகத்திற்கான அப்யாஸமும் வைராக்யமும், இடையில் யோகத்தையிழந்தவனுக்கும் வேறு நற்பயனும், மீண்டும் யோகபூர்த்தியும், பரமாத்மாவான தன் விஷயமான யோகத்தின் மேம்பாடுங்கூட சொல்லப்பட்டனவாம்.

விரிவாக யோகாப்யாஸத்தை விதிப்பதொன்றே ஆறும் அத்தியாயத்திற்கு முக்கியமானதென்று பாஷ்யகாரரின் திருவுள்ளம். ஐந்தாம் அத்தியாயத்தில் ப்ரஸ்தாவம் இருந்தாலும் அங்கே இந்த யோகாப்யாஸ விதி விஷயமாகச் சேர்க்கவில்லை யென்பதும் அதனாலேயாம்.

7 யோகமுயற்சியும் யோகிற் சமநிலை நால்வகையும்
யோகின் உபாயமும் யோகுதனல்வரும் பேறுகளும்
யோகுதனில் தன் திறமுடையோகுதன் முக்கியமும்
நாகணையோகி நவின்றனன் நன்முடி வீரனுக்கே.

யோகு-யோகம். நன்முடி-கிரீடி. அதிசயித்த கிரீடமுடையன். கர்மயோகியும் ஜ்ஞான யோகியும் ஜீவாத்ம ஸ்வரூபத்தைக் காண எவ்விதம் யோகம் செய்யவேண்டுமென்றதையும் (1—28). ஜ்ஞான ஸ்வரூபமாயிருப்பதாலே எல்லா ஜீவாத்மாக்களும் ஸமர், புண்ய பாபங்களெல்லாம் கழிந்த தசையில் பரமாத்மாவும் இவ்வாத்மாக்களும் ஸமர், பூர்ண ஞானவிகாஸம் அப்போது பெறுவதாலும் எல்லோரும் ஸமர் என்பனவும், தன் ஸுகதுக்கங்களுக்கும் பிறரின் ஸுகதுக்கங்களுக்கும்

வாசியைப் பெருமலிருக்கையுமாகிற நான்கு ஸமதர்சன நிலைகளை முறையே படிப்படியாகவும் (29–32), இந்த யோகத்திற்கு அப்யாஸமும் வைராக்யமும் காரணமென்பதையும் (33–36), யோகத்தினின்று நழுவினவனுக்கு எம்பெருமான், பெரும்புண்யம் டண்ணினவனுக்கு அளிக்கும் ஐச்வர்ய பலனை யளித்து வைராக்யம் பெறுவித்து, பெற்ற யோகாம்சத்தை அழியாது காத்துச் சிறந்த ஜன்மம் பெறுத்திப் பூர்த்தி செய்கிறமையையும் (37–46), (ஏழாம் அத்யாயத்தினின்று சொல்லப் படவிருக்கும்) தன்விஷயமான பக்தியோகம் அதற்கு மேலானதென்பதையும் (47) பாம்பணையிற் பள்ளிகொண்டு யோகம் செய்யும் பிரான் பார்த்தனுக்கு உபதேசித்தருளினான், இப்படி ஜீவ விஷயம் முற்றிற்று.

(11) ஸ்வயாதாத்ம்யம் ப்ரக்ருத்யாऽஸ்ய திரோதி: சரணாகதி: |
பக்தபேத: ப்ரபுத்தஸ்ய ச்ரைஷ்ட்யம் ஸப்தம உச்யதே ||

தான் சேதநாசேதநங்களுக்கெல்லாம் ஆத்மாவாய் காரணமாயிருத்தலும் தன் மாயையாலே அவ்வுண்மையின் மறைவும் அம்மறைவை நீக்க பக்தர் சரணாகதி செய்வதென்றும் தன் பக்தர் நாலுவகையரென்பதும் அவரில் முமுக்ஷுவுக்கு மேம்பாடும் ஏழாம் அத்தியாயத்தில் சொல்லப்பெறும்.

8 தானின்ற உண்மையைத் தன் தனிமாயை மறைத்தமையும்
தானன்றி மாயைதனைத் தவிர்ப்பான் விரகற்றமையும்
மேனின்ற பக்தர்கள் நால்வரில் ஞானிதன் மேன்மைகளும்
தேனின்றசெங்கழலான் தெளிவித்தனன் பார்த்தனுக்கே.

தேன்நின்ற செம்கழலான்—தேன் தங்குகின்ற செந்தாமரை போன்ற திருவடியுடைய கண்ணன்

தான்நின்ற உண்மையை—தானே ஸூக்ஷ்ம சேதநாசேதநவிசிஷ்டனாகவும் நின்ற தத்துவநிலை(யைச் சொல்லி) அந்நிலையை

தன் தனிமாயை மறைத்தமையும்—தனது ஒப்பற்ற மாயையாம் ப்ரக்ருதி மறைத்த படியையும்

மாயைதனை தவிர்ப்பான்—அந்த மாயையைக் கடக்கச் செய்தற்கு

தான் அன்றி விரகு அற்றமையும்—தன்னைத் தவிர உபாயமில்லாமையையும்

மேல்நின்ற பத்தர்கள் நால்வரில்—தேவதாந்தர பக்தர்களுக்கு மேலான நான்குவித பக்தர்களில்

ஞானிதன் மேன்மைகளும்—ஞானியான முமுக்ஷுவின் பெருமைகளையும்

பார்த்தனுக்கு தெளிவித்தனன்–அர்ஜுனனுக்கு உபதேசித்தருளினான்.

'உண்மையை' என்றது 'மறைத்தமை' என்றதோடு சேர்வதானாலும் 'உண்மையும்' என்றருளினவண்ணமேயாம். இவ்வாறே 'நால்வரில்' என்றது 'ஞானி'யென்றதோடு சேர்ந்தாலும் 'நால்வரும்' என்ற வண்ணமேயாம். ஆக ஸங்க்ரஹப்படியே இது. மேன்மைகளாவன,

'ஜ்ஞாநீது ஆத்மைவ மே ம தம். நித்யயுக்த: ஏக பக்திர் விசிஷ்யதே. 'ஸ மஹாத்மா ஸுதுர்லப:' என்றவாறும்.

(12) ஐச்வர்யாக்ஷரயாதாத்ம்ய பகவச்சரணார்த்திநாம் |
வேத்யோபாதேய பாவாநாம் அஷ்டமே பேத உச்யதே ||

ப்ராக்ருதபோகமென்ன, ஆத்ம தத்துவமென்ன, ச்ரிய:பதியின் திருவடியென்ன இவற்றை விரும்புகின்ற பக்தர்களுக்குத் (தக்கபடி) அறிய வேண்டும் விஷயங்களும் அனுஷ்டிக்க வேண்டும் விஷயங்களும் வெவ்வேறனமை எட்டாம் அத்தியாயத்தில் எடுத்துரைக்கப் பெற்றது.

ஆர்த்தன், அர்த்தார்த்தி, ஜிஜ்ஞாஸு, ஜ்ஞாநி என்கிற நால்வகைப் பக்தரில் முதலிரண்டு பேருக்கும் ஓரேவிதமாகவே அறிய வேண்டுவதை எட்டாவதில் சொல்வதால் ஐச்வர்ய என்று ஒன்றாக்கினது.

9 ஆராத செல்வமும் ஆருயிர் காணும் அரும்பயனும்
பேராது தன் கழற்கீழமரும் பெருவாழ்ச்சிகளும்
சோராதுகந்தவர் தூமதிகொள்வதும் செய்வனவும்
தேராவிசயனுக்குத் திருநாரணன் செப்பினனே.

ஆராத செல்வமும்—ஆர்தல்–அனுபவித்தல். ப்ரம்மாதிகளும் அனுபவியாத ஐச்வர்யத்தையும்,
ஆர் உயிர் காணும் அரும்பயனும்—அபஹதபாப்மத்வாதி குணங்கள் நிறைந்த ஜீவதத்துவத்தைக் காண்பதாகிற அரிய கைவல்ய புருஷார்தத்தையும்,
தன்கழல் கீழ் பேராது—தன்னுடைய திருவடியில் அகலாமல்
அமரும் பெரு வாழ்ச்சிகளும்—தாஸ்யம் செய்கையாம் பரிபூர்ணனந்த வாழ்வுகளையும்,
சோராது உகந்தவர்—பலன் வரும்வரை விடாமல் அபேக்ஷிப்பவர்கள்
தூ மதி கொள்வதும் செய்வனவும்–தன் விஷயமாம் தெளிவான ஞானத்திஞல் க்ரஹிக்கிறவற்றையும் அனுஷ்டிக்க வேண்டியவற்றையும்
தேரா விசயனுக்கு திருநாரணன் செப்பினன்—உபதேசமின்றி தெளியாத அர்ஜுனனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் உரைத்தான்.

(13) ஸ்வமாஹாத்ம்யம் மநுஷ்யத்வே பரத்வம் ச மஹாத்மநாம் |
விசேஷோ நவமே யோகோ பக்திரூப: ப்ரகீர்த்தித: ||

தான் எங்கும் பரவி பரமாத்மாவாயிருத்தலும் அவதாரத்திலும் பரத்வம் அழியாமையும் அஸுராதிகளைப் போலன்றி பக்தர்களுக்கு உள்ள வாசியும் சொல்லப் பெற்றன. பக்தி யென்கிற உபாஸனம் செய்யுமது நன்கு உபதேசிக்கப் பெற்றது.

10 தன் மேன்மையும் தன் பிறப்பில் தளராத் தனி நிலையும்
பன் மேனி நண்ணினன்பால் பிரியா அன்பராசைகளும்

புன்மேனி விண்ணவர்பால் புரியாத தன் பத்திமையும்
நன்மேனி நாரணன்தான் நரனுக்கு நவின்றனனே.

தன் மேன்மையும்—பராதீனமின்றி எல்லாம் தரித்தல் ஸ்ருஷ்டித்தல் அகர்மவச்யத்வம் முதலான தனது ப்ரபாவங்களையும்
பிறப்பில் தளரா—எத்தகைய அவதாரத்திலும் சிறிதும் குறையாமையாம் தன் தனி நிலையும்—தனது இயற்கைக் குணமும்
பல்மேனி நண்ணினன் பால்—வ்யஷ்டி, ஸமஷ்டி, சொல், பொருள், பந்துக்கள் பிற என்ற பல உருவங்களிலும் அந்தர்யாமியான தன்னிடம்
பிரியா அன்பர்—விடப்படாத அன்பையுடைய மஹாத்மாக்களுக்கு
ஆசைகளும்—கீர்த்தன அர்ச்சன ப்ரணம பஜநாதிகளிலே பற்றையும்
புல்மேனி விண்ணவர்பால்—ப்ராக்ருதசரீரமுடைய தேவாதாந்தரங்களிடம்
புரியாத தன் பத்திமையும்-பண்ணுமல் தன்னிடம் அன்பர் பண்ணும் பக்தி யோகத்தையும்
நல்மேனி நாரணன்தான்—அப்ராக்ருத திருமேனியையுடைய நாராயணன் தானே
நரனுக்கு நவின்றனன்—நரனின் அவதாரமான அர்ஜுனனுக்கு உபதேசித்தான்.

'பன்மேனி நண்ணினன்' என்றது. 'ப்ருதக்த்வேந பஹுதா விச்வதோமுகம்' (15) என்று தொடங்கி, 'ஸதஸச்சாஹமர்ஜுந (19)' என்ற வரையிலாக வ்யஷ்டி ஸமஷ்டி த்ரவ்ய க்ரியா சேதநாசேதந ஸர்வாந்தர்யாமித்வத்தைச் சொல்லி எல்லாம் அவனுக்கு உடலென்றதாலே. அப்படி எந்த வஸ்துவைக் காணும்போதும் அந்தர்யாமி அவனே அவர்களுக்கு புத்தியில் கோசரமாவதால், மிக அன்பராகின்றவர் கொண்ட ஆசைகளாவன—'ஸததம் 'கீர்த்தயந்தோ மாம்' என்ற பஜனப்ராகாரங்களிலும். பகவானைப் பெறுதலாகிய யோகத்திலும், மீண்டு ப்ரக்ருதிக்குத் திரும்பாமையாம் அபுநராவ்ருத்தியிலுமுள்ளவை. ஆக ஸங்க்ரஹத்தில் விசேஷ: என்றதன் விரிவாமிது. இவர்களுக்கு தேவதாந்தர விஷயத்தில் ஆசை பிறப்பதில்லையென்பதும் விசேஷமாம். இவ்வத்தியாயத்திற்கு இப்படி பக்தியோகிகளுக்குப் பிறரைக் காட்டிலுமுள்ள வேறுபாட்டை விளக்கி பக்தியோக விதியிலே நோக்காம்.

(14) ஸ்வகல்யாண குணாநந்த்ய க்ருத்ஸ்ந ஸ்வாதீநதாமதி: |
பக்த்யுத்பத்தி விவ்ருத்த்யர்த்தா விஸ்தீர்ணா தசமோதிதா ||

கீழ்ச்சொன்ன பக்தி உண்டாகும் வகையும் வளர்ச்சியும் எதற்குப் பலனுகுமோ, அந்தத் தெளிவு தனக்குக் கல்யாண குணங்கள் அளவற்றவை யென்றும் தனக்கு எல்லாம் அதீனம் என்றும் வரும் தெளிவு. விரிவாகப் பத்தாம் அத்தியாயத்தில் பேசப் பெற்றது.

*11 எல்லையிலாத தன் சீலமா மின்னமுதக்கடலும்*
*எல்லையிலாத விபூதியெலாம் தனதானமையும்*
*எல்லையில்பத்திதனை யெழுவிக்கத் திருவருளால்*
*எல்லையிலீசனியம்பினன் இந்திரன் மைந்தனுக்கே.*

*எல்லை இலாத தன் சீலம் ஆம்—தனது அளவற்றகல்யாண குணமாகிய இன் அமுதம் கடலும்—கடல் போன்ற இனிய அமுதத்திரளையும்,*
*எல்லை இலாத விபூதி எலாம்—எண்ணற்ற ப்ரபஞ்ச வஸ்துக்கள் யாவும் தனது ஆனமையும்—தன் நியமனத்திற்கு உட்படுகையையும்*
*எல்லை இல் பத்திதனை எழுவிக்க திருவருளால்—தன்னிடம் அளவற்ற பக்தி உண்டாகி வளர வேண்டுமென்று திருவுளம் கொண்டு*
*எல்லை இல் ஈசன்—ஸ்வரூப ரூப குண விபவங்களில் எல்லையற்ற பரமன் இந்திரன்மைந்தனுக்கு இயம்பினன்—அர்ஜுனனுக்கு அருளினான்.*

*பத்த முக்தாதி சேதனர்களைப் போலன்றியிருப்பவன் ஸர்வ லோகேச்வரன் என்று அறிந்தபோதே உண்டாம் பக்தியானது—எல்லோருடைய ப்ரவ்ருத்தி நிவர்த்திகளான மனோவ்ருத்திகள் உள்பட செயல்களெல்லாம் அவனது ஸங்கல்பத்திற்கே அதீனங்களென்று விரிவாக அறிவதாலும் பக்தர்கள் ஒருவருக்கொருவர் அவன்விஷயமாகப் பேசிக் கொண்டு களிப்பதாலும, அத்தகைய அதிகாரிகளிடம் எம்பெருமான் விசேஷானுக்ரஹம் செய்ய முன் வருவதாலும். சிறந்த வஸ்துக்களிலே எம்பெருமானின் அம்சம் மிகவாயிருப்பது கண்டு கொண்டாடுவதாலும் மேன்மேல் வளர்ச்சி பெறுமென்க.*

*(15) ஏகாதசே ஸ்வ யாதாத்ம்ய ஸாக்ஷாத்காராவலோகநம் |*
*தத்தம் உக்தம் விதிப்ராப்த்யோ: பக்த்யேகோபாயதா ததா ||*

*ஸர்வசேதநாசேதந விசிஷ்டனான தன் நிலையை நேரில் காண்கைக்கு வேண்டும் கண்ணானது அளிக்கப் பெற்றது 11வது அத்யாயத்தில் பணிக்கப்பட்டது. அவனை அறிதற்கும் அடைதற்கும் பக்தி ஒன்றே உபாயமென்பதும் அப்படியே பணிக்கப்பட்டது.*

*'உக்தம்' என்கிற ப்ராசீன பாடமே தகும். பதினோராம் அத்யாயத்திலே கொடுக்கப்பட்டதென்னல் கூடுமோ? கொடுத்தது சொல்லப்பட்டது பதினோராம் அத்யாயத்திலே என்னலே சரியானது. விதி-ப்ராப்த்யோ: என்றதோடு தர்சனமும் சேர்ப்பதாம். 'ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும ச பரந்தப' என்று மூன்றும் சொல்லப்பட்டனவே. ஏற்கனவே, 'த்ரஷ்டும் த்வதந்யேந' என்று தர்சனம் சொல்லப்பட்டதென வறிவிக்க இங்கே இரண்டை முக்கியமாக்கினதாம்.*

*12 எல்லாம் தனக்கு உருவா யிலங்கும்வகை தானுரைத்துச்*
*சொல்லால் அறிந்தது சோராமல் கண்டிட வேண்டுமென்ற*
*வில்லாளனுக்கு அன்று மெய்க்கண் கொடுத்து இது வேறுண்டோ*
*நல்லார்கள் காண்பர் என்றும் நவின்றான் நங்கள் நாயகனே.*

தனக்கு உரு ஆய் எல்லாம்—தன் விபூதியாக ப்ரபஞ்சமெல்லாம்
இலங்குவகை தான் உரைத்து—விளங்குதலைத் தான் சொல்லவே
சொல்லால் அறிந்தது—இவர் செல்வித்தான் கேட்டறிந்ததை
சோராமல் கண்டிட வேண்டும் என்ற வில்லாளனுக்கு—ஈச்வரத்தன்மை
சிறிதும் விடாமல் நேரில் காண வேண்டின அர்ஜுனனைக் குறித்து
அன்று மெய் கண் கொடுத்து–அப்போதே திவ்ய சக்ஷுஸ்ஸை அளித்து
(அவன் கண்டனுபவித்துத் திகைத்தபோது)
இது நல்லார்கள் காண்பர்—பக்தியுள்ளவரே இவ்வகையைக் காண வல்லர்;
வேறு உண்டே?—தானம் அத்யயநம் என்றாற் போன்றவை போதா என்றும் நங்கள் நாயகனை கண்ணன் அருளினான்.

'ந வேதயஜ்ஞாத்யயநை:...த்ருஷ்டும் த்வத் அந்யேந' என்ற ச்லோகத்தை யிங்கே கருதினதாம். 'ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்த்வேந 'ப்ரவேஷ்டும் ச' என்று மேலே சொன்னதும் கருத்திலுள்ளதாம். 'உரைத்து' என்றது 10 ஆம் அத்தியாயத்தில் உரைத்திருத்தலால். இது' என்றது 'காண்பர்' என்றதோடு சேரத்தகும்.

(16) பக்தே: ச்ரைஷ்ட்யம் உபாயோக்தி: அசக்தஸ்யாத்மநிஷ்டதா |
தத்ப்ரகாராஸ்த்வதிப்ரீதி: பக்தே த்வாதச உச்யதே ||

ஆத்மயோகத்தைவிட பக்தியோகத்திற்கு விரைவில் தன் பலனை யளிப்பதாலுள்ள மேம்பாடு பன்னிரண்டாம் அத்தியாயத்தில் சொல்லப்படும். பக்தி யோகத்திற்கு விரகாக பகவத் குண சிந்தனத்தையும் அவன்விஷயமான வழிபாட்டையும் சொல்வதுமாம். அவ்வளவிலும் சக்தியற்றவனுக்கு ஜீவாத்மானுபவஸம்பாதநத்திலே நிற்கையும் அதற்காகக் கர்மயோகம் செய்பவன் இருக்க வேண்டும் படிகளும், தன் விஷயமான பக்தி யோகியினிடமே தனக்குச் சிறந்த ப்ரீதியும் சொல்லப்படும்.
கர்மயோகிக்கு வேண்டும் படிகளாவன 'அத்வேஷ்டா ஸர்வபூதாநாம்' (13) என்று தொடங்கி சொல்லப்பெற்றவை—ஸர்வப்ராணிகளிடமும் த்வேஷமற்றிருக்கை, சிநேகம், தயை முதலியன.

13 தன்கழலிற் பத்தி தாழாததும் அதன் காரணமாம்
இன் குண சிந்தையும் ஈதறியார்க்கு அவ்வடிமைகளும்
தன் கருமங்கள் அறியாதவர்க்கு இலகும் நிலையும்
தன் கழலன்பர்க்கு நல்லவன் சாற்றினன் பார்த்தனுக்கே.

தன் கழலில் பத்தி—தன் திருவடிவிஷயத்தில் அனுஷ்டிக்கப்படும் பக்தி
தாழாததும்— ஆத்மயோகம் போலாகாது. பலனுக்குத் தாமதிக்காதென் பதையும்
அதன் காரணம் ஆம்—அந்த பக்தியைச் செய்ய உதவுகின்றதான
இன் குணசிந்தையும்—போக்கியமான பகவத்குணங்களினாராய்ச்சியையும்.

ஈது அறியார்க்கு—இந்த சிந்தை செய்யவியலாதவர்க்கு
அ அடிமைகளும்—நந்தனவனம் வளர்த்தல், மாலை புனைதல் போன்ற பகவத்கைங்கர்யங்களையும்
தன் கருமங்கள் அறியாதவர்க்கு— அவற்றையும் அறியாமலிருப்பவர்க்கு
இலகு நிலையும் – ஆத்மஸாக்ஷாத்காரம், அதற்கான ஞானயோகம், கர்ம யோகம், அதற்கு வல்லமை பெறுகை போன்ற நிலைகளையும்
தன்கழல்அன்பர்க்கு நல்லவன்—தன்பக்தரிடம்அதிப்ரீதியுடைய பிரான்
பார்த்தனுக்கு சாற்றினன்—அர்ஜுனனுக்கு இனி ஐயத்திற்கு இடமிராத படி திடமாக அருளினான்.

தம் கருமங்கள் என்ற பாடமில்லையாகையால் தன் என்றது பரமாத்ம விஷயமான என்ற பொருளதாம். மேலே 'அறியாதவற்கு' என்று ஒருமையாகப் பாடம் கொள்ளில் தன் என்பது ஜீவனைச் சொல்வதாம். 'அதிப்ரீதிர் பக்தே' என்ற ஸங்கரஹத்திற் சொன்ன கடைச்லோகப் பொருளைக் குறிக்க இங்கே, 'தன் கழலன்பர்க்கு நல்லவன்' என்றவாறு கூறினதென்க.

(14) தேஹ ஸ்வரூபம் ஆத்மாப்தி ஹேது: ஆத்ம விசோதநம் |
பந்த ஹேது: விவேகச்ச த்ரயோாதச உதீர்யதே ||

தேஹமாகியுள்ள க்ஷேத்ர தத்துவ விஷயமான விரிவும், ஆத்ம ஜ்ஞானத்திற்காக க்ஷேத்ர கார்யங்களிலே கொள்ளவேண்டிய அமாநித்வாதி குணங்களும், ஸம்ஸார மோக்ஷ தசைகளில் ஆத்மாவின் பாகுபாடும், ஸம்ஸாரத்திற்குக் காரணமான குண ஸங்கமும், தேஹாதிகளினின்று பிரித்து ஆத்மாவைப் பார்க்குமதுவும் 13ஆம் அத்தியாத்தில் அறிவிக்கப் பெறும்.

**14** ஊனின்படியும் உயிரின் பிரிவும் உயிர் பெறுவார்
ஞானம் பெற(று)வகையும் ஞானமீன்ற உயிர்ப்பயனும்
ஊன் நின்றதற்கு அடியும் உயிர்வேறிடும் உள்விரகும்
தேன் நின்ற பாதன் தெளிவித்தனன் சிலைப் பார்த்தனுக்கே.

ஊனின் படி உம்—தேஹத்திற்குத் காரணமும் கார்யமுமான ஸர்வ க்ஷேத்ர விஷயங்களையும்
உயிரின் பிரிவு உம்—க்ஷேத்ரத்தையறிகின்றபடியால் அசேதனத்தினின்று சேதனத்திற்குள்ள வேறுபாட்டையும்
உயிர் பெறுவார்—ஆத்மாவை யடைய விரும்புகின்றவர்கள்
ஞானம் பெற வகையும்—அதன் அறிவைப் பெற, வேண்டும் அமாநித்வாதி குணங்களையும்
ஞானம் ஈன்ற உயிர் பயனும்—க்ஷேத்ரம் வேறு, க்ஷேத்ரஜ்ஞன் வேறென்ற ஞான மூலம் பெற்ற உயிரின் விவேசன முறையையும்
ஊன் நின்றதற்கு அடியும்—தேஹஸம்பந்தத் தொடர்ச்சிக்குக் காரணம் அநாதிப்ரக்ருதி ஸம்பந்தமென்பதையும்

உயிர் வேறிடும் உள் விரகும்—வேறென்கிற தெளிவுக்கான ஸர்வாத்ம ஸாம்ய த்யானமாகிற அந்தரங்க ஸாதனத்தையும்
தேன் தங்கும் திருவடியுடைய பிரான் காண்டீவமேந்தின பார்த்தனுக்குத் கூறியருளினன்.

'உயிர்ப் பயன்' என்றது ஆத்ம விசோதநம் என்று ஸங்க்ரஹத்திற் சொன்னதேயாம். இது, 'ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி' (12-18) என்று தொடங்கி யுரைத்ததாம். தொடக்கத்தில், 'யத் ஜ்ஞாத்வா அம்ருதம் அச்நுதே' என்றும், முடிவில், 'மத்பாவாயோபகல்ப்பதே' என்றும் பயனுள் படச் சொன்னதால் பயன் என்ற சொல்லைச் சொன்னாலும் ஆத்ம சோதனமே கருதப் பெற்றதாம்.

(18) குணபந்தவிதா தேஷாம் கர்த்ருத்வம் தந்நிவர்த்தநம் |
கதித்ரய ஸ்வமூலத்வம் சதுர்தசே உதீர்யதே ||

ஸத்வாதி குணங்கள் மூன்றில் எது எந்தக் கார்யத்தைப் பண்ணி ஸம்ஸார காரணமாகிறதென்பதும், ஜீவன் கர்த்தனல்லன், குணங்களே என்பதும், ராகத்வேஷாதிகள் அற்றிருக்கை பகவத்பக்தி முதலானவற்றால் அவற்றை விலக்குவதும், ஐச்வர்ய கைவல்ய மோக்ஷங்கள் தனக்கு அதீனங்களென்பதும் 14ஆம் அத்தியாயத்தில் சொல்லப்பெறும்.

15 முக்குணமே உயிர் முற்றவும் கட்டிட மூண்டமையும்
முக்குணமே அனைத்தும் வினை கொள்ள முயன்றமையும்
முக்குண மாயை கடத்தலும் முக்கதி தந்தளிப்பும்
முக்குணமற்ற பிரான் மொழிந்தான் முடியோன் தனக்கே.

மு குணம் ஏ—ஸத்துவ ரஜஸ் தமோ குணங்களே
உயிர் முற்றவும் கட்டிட—எல்லா உயிர்களையும் ஸம்ஸாரத்திலுட்படுத்த
முயன்றமையும்—தந்தம் கார்யங்களை உண்டாக்குவதையும்
அந்த முக்குணமே
வினை அனைத்தும் கொள்ள முயன்றமையும்—ஜீவர் செய்வதாகத் தோன்று மெல்லாச் செயல்களையும் பற்ற கர்த்ருத்வம் பெற்றுள்ளமையையும்
மு குணம் மாயை கடத்தலும்—இந்த குணங்களையுடைய மாயாஸம்பந்தம் நீக்கும்படியையும்
மு.கதி. தந்தளிப்பும்— ஐச்வர்ய–கைவல்ய–மோக்ஷங்களைக் கொடுத்தருள்வதையும்
முக்குணம் அற்ற—இந்த மூன்று குணங்களுக்கு வசப்படாத பிரான்
கிரீடியான அர்ஜுனனுக்கு அறிவித்தருளினன்.

(19) அசிந்மிச்ராத் விசுத்தாச் ச சேதநாத் புருஷோத்தம: |
வ்யாபநாத் பரணாத் ஸ்வாம்யாத் அந்ய: பஞ்சதசோதித: ||

எங்கும் பரவியிருத்தலாலும், தரித்தலாலும், சேஷியாயிருத்தலாலும், ப்ரகிருதி ஸம்பந்தமுடைய ஜீவனினும் அந்த ஸம்பந்தமற்ற முக்த ஜீவனினும் வேறுபட்டவனாய் புருஷோத்தமனெனப் படுகிறவன் பதினைந்தாம் அத்தியாயத்தில் சொல்லப் பெற்றான்.

பிரகிருதியையும் புருஷனையும் பிரித்துக் கூறிற்று 13ஆம் அத்தியாயம், பிரகிருதியோடு புருஷனுக்குச் சேர்க்கை அநாதி, இது பகவத் பக்தியால் நீங்கும் என்றது 14ஆம் அத்தியாயம். அந்த பகவான் புருஷோத்தமன், இந்த பத்தன், இவனுக்கு மேலான முத்தன் என்கிற எல்லா ஜீவன்களினும் வேறானவன், எல்லாம் ஆள்கின்றவன் என்கிறது 15ஆம் அத்தியாயம். இப்படி தத்துவ நிரூபணமாம்.

16 மூவெட்டினும் அதில் மோகமடைந்த உயிர்களினும்
நாவெட்டெழுத்தோடு நல்வீடு நண்ணின நம்பரினும்
மேவெட்டு வன்குணவிண்ணோர்களினும் விசயனுக்குத்
தாவிட்டுலகளந்தான் தனை வேறென்று சாற்றினனே.

மூ எட்டினும்—24 தத்துவமாயிருக்கும் அசேதநத்தைக் காட்டிலும்
அதில் மோகம் அடைந்த உயிர்களினும்-ஸம்ஸாரி ஜீவர்களைக்காட்டிலும்
நா எட்டெழுத்தொடு—பொலிவுற்ற திருவஷ்டாக்ஷரத்தினால்
நல் வீடு நண்ணின நம்பரினும்–பகவத் ஸாயுஜ்யம் பெற்ற பக்தர்களைக் காட்டிலும்
மேவு எட்டு வல் குணம்—குணங்களெட்டு சிறந்து
விண்ணோர்களிலும்—அபஹதபாப்மத்வாதிகள் பொருந்தப் பெற்ற நித்யரான பரமபத வாஸிகளைக் காட்டிலும்
தனை வேறு என்று—தன்னை வேறாகவே—புருஷோத்தமனாகவே
தாவிட்டு உலகு அளந்தான்—திருவடியால் கடந்து முன் உலகை அளந்தவனான கண்ணன்
விசயனுக்கு சாற்றினன்—அர்ஜுனனுக்கு விரிவாகத் தெரிவித்தான்.

'யஸ்மாத் க்ஷரம் அதீதோऽஹம்' என்கிற ச்லோகத்தினால் க்ஷர புருஷர்கள் ஸம்ஸாரிகள், அக்ஷர புருஷர்கள் முக்தர்கள் ஆக இவ்விரு வகை ஜீவர்களுக்கே மேலாகப் புருஷோத்தமன் சொல்லப்பட்டிருந்தாலும் இதற்கு முன்'யோ லோகத்ரயமாவிச்ய' என்று அசேதனத்தைக்காட்டிலும் வேறுபட்டவனென்று தெரிவித்திருக்கிறதன்றோ. அங்கே லோகமென்பதால் பரமாணத்தினாலறியப்படும் வஸ்து என்று அசேதனம், பத்தன், முக்தன் என்ற மூன்று லோகங்கள் கொள்ளப்பட்டனவே. ப்ரம்மமே அசேதனமாகவும் சேதனமாகவும் பரிணமிக்கிறதென்ற மதம் இதனால் நீக்கப்படுவதற்காக இங்கே இவ்வளவு சொல்லி தத்துவத்ரயமுண்டென்கிறது கீதை. வைகுண்டமும் அங்கே நித்ய ஸூரிகளும் இருப்பதை வேறு பிரமாணங்களைக் கொண்டு ஆராயும் போது தன் கடையாகவே நித்யஸூரி வேறு, ஸர்வேச்வரன் வேறென்பதும் விளங்குமென அறிவிக்க அதனையும் பாட்டிற் சேர்த்தது. ஆக புருஷோத்தம: என்றவிடத்தில் உத் என்றது பந்தத்தினின்று விடுபட்ட ஜீவனை; அதாவது முக்தனை; உத்தர என்பது நித்யஸூரி வர்க்கத்தை. உத்தமனுவான் திருமாலொரு புருஷனே.

(20) தேவாஸுர விபாகோக்தி பூர்விகா சாஸ்த்ரவச்யதா |
தத்த்வாநுஷ்ட்டாந விஜ்ஞாந ஸ்த்தேம்நே ஷோடச உச்யதே. ||

ப்ராணி ஸ்ருஷ்டியில் தேவாம்சம் அஸுராம்சமென்ற இரு பிரிவு களைச் சொல்வதை முன்னிட்டு, தத்துவ விஷயத்திலும் ஆசரணை விஷயத்திலும் அறிவுநிலை பெறுதற்காக, சாஸ்த்ரத்திற்கு உட்பட்டிருக்க வேண்டுமென்ற விஷயம் பதினாறும் அத்தியாயத்திற் பணிக்கப்பெற்றது.

பூர்வகம் என்ற பாடமுண்டாகில் பொருள் அநாயாஸமாகப் பெறப் படும். பூர்விகா என்ற பாடத்தில் விபாகம் சொல்லிச் சொல்லப்பட வேண்டிய ஒன்றதாம்.

17 ஆணை மருதவர் தேவர், அல்லா வழக்கோர் அசுரர்
கோணை மராத குணச் செல்வ! நீ குறிக்கொள் மறையைப்
பேணிய தத்துவமும் பிணியற்ற கிரிசைகளும்
காண் இதனால் விசயா! என்று கண்ணன் இயம்பினனே!

ஆணை மருதவர் தேவர்–ஈச்வராஜ்ஞையை மீருதவர் தெய்வ ஸம்பத்து டையராவர்.
அல்லா வழக்கோர் அசுரர்—மீறுகையாம் நடத்தையுடையவர் அசுர ஸம்பத்தையுடையவராவர்.
கோணை மராத குண செல்வ! விசயா!—கோணல் கலப்பற்ற நற்குண ஸம்பத்து உடையனே! ஓ அர்ஜுனா!
நீ மறையை குறிக்கொள்—நீ வேதத்தையே ஆஜ்ஞையின் குறிப்பாகத் தெரிந்து கொள். (ஆகவே)
பேணிய தத்துவமும்—முன்னோர் ஆதரித்திருக்கும் தத்துவங்களென்ன,
பிணி அற்ற கிரிசைகளும்—கேடில்லாத செயல்களென்ன இவற்றை
இதனால் காண்—இந்த வேத மூல ப்ரமாணத்தைக் கொண்டே தெளி வாயாக

என்று கண்ணன் இயம்பினன்—எனச் சொன்னான் கண்ணபிரான்.

தான் தெய்வ ஸம்பத்து உடையனோ, அல்லனோ என்று அஞ்சின அர்ஜுனனுக்கு 'மா சுச: ஸம்பதம் தைவீம் அபிஜாதோऽஸி' என்று தேறுதல் செய்தமையை யறிவிக்க, 'கோணை மராத குணச் செல்வ!' என்றது. ஸத்துவ குணச் செல்வமென்றதாலே ஸாத்விக த்யாகத் துடன் ஆசரணைக்குத் தக்க ஞானச் சிறப்பு பெறுபவனென்றதாயிற்று. 'தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்த்திதௌ' என்ற கடைச்லோகத்திலே நல் வழக்கு அல் வழக்கு என்றவை மட்டும் கருதப்பட்டனவல்ல; செய்ய வேண்டும் செயலும் மற்றும் தத்துவமுங் கூடவாம்; 'அஸத்யம்' 'அப்ரதிஷ்ட்டம்' என்று அசுரருக்குத் தத்துவ மாறாட்டமும் கூறப்பட்டதே. 'தத்வாநுஷ்டாந விஜ்ஞாந' என்று ஸங்க்ரஹத்திலும அருளப் பெற்றதே என்று, 'பேணிய' இத்யாதி அருளினதாம்.

(21) அசாஸ்த்ரம் ஆஸுரம் க்ருத்ஸ்நம் சாஸ்த்ரீயம் குணத: ப்ருதக் |
லக்ஷணம் சாஸ்த்ரஸித்தஸ்ய த்ரிதா ஸப்ததசோதிதம் ||

தான்தோன்றியாகக் கற்பனை செய்தாலும், பிறர் சொன்னதைக் கேட்டு மயங்கினாலும் சாஸ்த்ரம் இசையாதவையெல்லாம் ஆஸுரமே யாம். சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டது ஸாத்விகம் ராஜஸம், தாமஸம், என மூன்று விதமாகும். சாஸ்த்ர ஸம்மதத்தைச் செய்வதற்கு அறிகுறி யாக மூன்று சொற்கள் ஏற்பட்டுள்ளன. (இம்மூன்றுக்கு இம்மூன்று என் பதில்லை) 17ஆம் அத்யாயத்திற் சொன்னது இப்படி மூன்று விதமாம்.

18 மறை பொருந்தாதவை வல்லசுரர்க்கு வகுத்தமையும்
மறை பொருந்தும் நிலையின் வன்குணப்படி மூவகையும்
மறை நிலை தன்னை வகுக்கும் குறி மூன்றின் மேன்மையும் அம்
மறை யுமிழ்ந்தான் உரைத்தான் வாசவன் தன் சிறுவனுக்கே.

அ மறை உமிழ்ந்தான்—அனாதியான வேதத்தை ப்ரளயத்தில் மறைத்து வெளியிட்ட பிரான்
மறை பொருந்தாதவை—வேதத்திற்கு ஸம்மதமாகாத செயல்கள்
வல் அசுரர்க்கு வகுத்தமையும்—கொடிய அஸுரர்களுக்கே ஆகின்றமை யையும்
மறை பொருந்தும் நிலையில்—வேதத்திற்கு ஸம்மதமான செயல்களில்—
வல் குணப்படி மூ வகையும்—ஸத்வாதிகளான—மூன்று குணங்களில் மிக்கவான குணத்திற்கேற்ப மூன்று பிரிவுகளையும்
மறை நிலை தன்னை வகுக்கும்—இது வைதிக தர்மமென்று பிரித்துக் காட்டும்
குறி மூன்றின் மேன்மையும்—மூன்று அடையாளங்களின் பொருட் சுவையையும்
வாஸவனென்ற இந்திரனின் குமாரனை அர்ஜுனக்கு அருளினான்.

வைதிக தர்மக் குறிகள் மூன்றாவன—ப்ரணவமும், தத், ஸத் என்ற சொற்களாம்.

(22) ஈச்வரே கர்த்ருதா புத்தி: ஸத்த்வோபாதேயதாऽந்திமே |
ஸ்வ கர்ம பரிணமச்ச சாஸ்த்ரஸாரார்த்த உச்யதே ||

ஸர்வேச்வரனே ஸ்ர்வ கர்த்தா என்றவாறான ஸாத்விக த்யாக தத் துவமும் ஜ்ஞாந-கர்ம-ஸுகாதிகளில் யாவற்றிலும் ஸாத்விகமே கொ ள்ளத்தகுமென்பதும், அவனவனுக்குக்குள்ள வர்ணச்ரம தர்மமே ஸாத் விகமாகச் செய்யப்பட மோக்ஷம் வரையிலாகையும், பகவானைப் பெற உபாயமாம் முக்கிய சாஸ்த்ரார்த்தமும் 18-ஆவதான கடை அத்தியாயத் தில் கூறப்பெறும்.

19 சத்துவ வீடுடை நற்கருமம்தா னுகந்தமையும்
சத்துவ முள்ளது தான் குறிக்கொள் வகை செய்ததுவும்
சத்துவ நற்கிரிசைப் பயனும் சரணாகதியும்
சத்துவமே தருவானுரைத்தான் தனிப் பார்த்தனுக்கே.

சத்துவம் வீடு உடை—ஸாத்விக த்யாகத்துடன் கூடின

நல் கருமம்—ஸ்வவர்ணாச்ரம தர்மாதிகளைச் செய்வதே
தான் உகந்தமையும்—த்யாக ஸந்நியாசமென்ற சொற்களின் பொருளாமென்ற தனது சித்தாந்தத்தையும்
சத்துவமுள்ளது—ஞானம், செயல், ஸுகம் என்றாற் போன்ற எல்லாவற்றிலும் ஸாத்துவிகமானவற்றை
தான் குறிக்கொள்—ஒவ்வொரு ஜீவனும் இலக்கணத்தோடறிவதற்கான வகை தான் செய்தது உம்—பிரிவுகளைத் தான் ஏற்படுத்தியிருத்தலையும்
சத்துவம் நல் கிரிசை பயன் உம்—ஸாத்துவிக ஸ்வதர்மங்களே மோக்ஷத்தை முடிவில் விளைப்பதையும்
சரணாகதி உம்—சக்தியற்றவர் கதியின்மை காரணமாக எதைப் பெறுவதற்கும் சரணாகதி செய்யலாமென்பதையும்
சத்துவமே தருவான்—ஒவ்வொரு ஜீவனுக்கும் ஸ்த்தையைப் பெறுதலையருள்விக்கும் பிரான்
தனி பார்த்தனுக்கு—ஒப்பற்ற அர்ஜுனனுக்கு
உரைத்தான்—முடிவாக விரித்துக் கூறி யருளினன்.

இங்கு முதலடியில் மொழிந்ததும் 'ஈச்வரே கர்த்ருதா புத்தி:' என்ற ஸங்க்ரஹார்த்தமும் முடிவிலொன்றேயாம். ஒவ்வொரு கார்யத்திற்கும் ஐந்து விதமான காரணங்களை வகுத்து ஈச்வரனே முக்கியமான காரணமென்று சொன்ன வரை (17) யிலுள்ளதெல்லாம் இங்கே கொள்ளப்படும். ச்லோகம் 18 முதல் 40 வரையில், அறிவு, அறியப்படுவது, அறிகிறவன், செயல், செய்கருவி, செய்கிறவன், தத்துவ ஹித புருஷார்த்த ஜ்ஞானம், விடாமுயற்சி, ஸுகம் என்பவற்றில் ஸாத்துவிகம் வகுத்துரைக்கப்பட்டது. மேலே அவனவனுக்கு ஸாத்துவிகச் செயல் அவனவனது வர்ணாச்ரம தர்மத்திற்கு மாறாகக் கூடாதென்றது. பிறகு 47லிருந்து கர்மயோகமே செய்துகொண்டு யோகத்தினால் ஜீவதத்துவத்தைக் கண்ட பிறகு பக்தி யோகத்திலிழிந்து பரமாத்மாவை அவருடைய சாச்வத ஸ்தானம் சென்று பெறுவாயென்று முடித்துவிட்டு, மீண்டும் கீதா சாஸ்திரத்தின் ஸாரத்தை மனத்தில் நிறுத்துவதற்காக 64 தொடங்கி, 'தன் விஷயத்தில் பக்தியுடன் எதையும் செய்ய வேண்டுமென்றும், 'செய்ய முடியாத கார்யங்களான போது ஜீவன் கதியற்றமையை உணர்ந்து நொந்து சரணாகதி செய்ய வேண்டும், எல்லா வினைகளையும் விலக்கி யருள் புரிவேன்' என்றும் சிறந்த சிஷ்யனான அர்ஜுனனுக்கு அருளிச் செய்தார்.

இதனால் எல்லா ஜீவர்களும் ஸத்தையைப் பெற வாய்த்தது. ஆக 'சத்துவமே தருவான்' ஸத்துவ குணத்தைத் தருமவன் என்பதைவிட ஜீவனுக்கு மோக்ஷமாம் ஸத்தையை யளிக்குமவன் எனப் பொருள் கொள்ளலாம். தனிப் பார்த்தனுக்கு. ஹிதோபதேசம் செய்யவே அவதரித்த பிரானுக்குப் பார்த்தன் ஒருவனே சரியான சிஷ்யனாகத் தோன்றினான். முன்னும் இவன் நரனாயிருந்து கேட்டிருப்பவன், அவனுக்காகச்

செய்த உபதேசம் நமக்கும் நின்றதென மேற்பாட்டிலே அருளிச் செய்வர். அத்தியாயங்களின் அர்த்தம் முடிந்தது.

கீதையில் முக்கியமாகச் சொல்லப்பட்டவை கர்மயோகம், ஞான யோகம், பக்தி யோகம் என்ற மூன்றும். அவை யாவை, அவை எவ்வாறு செய்யப்பட வேண்டும, அவற்றின் பலன்கள் யாவை என்ற விஷயங் களைச் சுருங்க விளங்கஆளவந்தார் அருளிச் செய்கிறார்.

கர்மயோக: தபஸ்தீர்த்த தாநயஜ்ஞாதி ஸேவநம் |

கர்மயோகமாவது, தவம், தீர்த்தயாத்திரை, தானதர்மம், யஜ்ஞா நுஷ்டானம், தேவார்ச்சனம், பாராயணம் என்றாற் போன்றவற்றில் ஏதேனுமொன்றைப் பலன் பெறுமளவு விடாமற் செய்தலாகும்.

ஜ்ஞாநயோகோ ஜிதஸ்வாந்தை: பரிசுத்தாத்மநி ஸ்த்திதி: || 23

ஜ்ஞான யோகமாவது-கர்மயோகம் செய்ததனால் ராகத்வேஷாதி கள் அற்று சுத்தமான மனதைப் பெற்றவர்கள் ஏற்கனவே சாஸ்த்ரத் தைக் கொண்டு தேஹாதிகளினின்றும் வேறாக இலக்கணங்களோடு அறியப் பெற்ற ஆத்ம ஸ்வரூபத்தையே எப்பொழுதும் சிந்தித்திருக் கையாம்.

பக்தியோக: பரைகாந்த ப்ரீத்யா த்யாநாதிஷு ஸ்த்திதி: |

பக்தியோகமாவது பரமாத்மா ஒருவனிடத்திலே ப்ரீதியை வைத்து அவனைப் பற்றிய த்யான ஸங்கீர்த்தன ப்ரணாமங்களைச் செய்தலாம்.

த்ரயாணாம் அபி யோகாநாம் த்ரிபி: அந்யோந்ய ஸங்கம: || 24

இம்மூன்றிலும் மூன்றும் ஒருவாறு கலந்திருக்கும்: கர்மயோகம் செய்கின்றவனும் ஆத்ம ஸ்வரூபத்தின் அறிவையும் பகவானிடத்தில் ப்ரீதி, கீர்த்தனம் ப்ரணாமம் போன்றவற்றையும் விடான் ; ஞான யோகம் செய்பவனும் தவம், பாராயணம் போன்றவற்றையும் அதற் காகச் சிறிது செய்துகொண்டும் பகவத் ப்ரீதி முதலானவற்றைப் பெற்றுமிருப்பான் ; பக்தியோகத்தில் இழிந்தவனும் அச் செயல்களை யும் ஆத்மஸ்வரூபவுணர்வையும் கொண்டவனேயாவான். ஆகிலும் அந்தந்த யோகததில் அந்தந்த அம்சம் ப்ரதானமாய் நிற்கும்.

நித்ய நைமித்திகாநாம் ச பராராதந ரூபிணாம். (ஸங்கம:).

ஒவ்வொரு யோகம் செய்பவனும் பகவானுக்கு ஆராதனமிவை அவனை உவப்பிக்குமவை என்ற நோக்கத்துடன் நித்யம நைமித்திகம் என்ற ஸ்வவர்ணாச்ரமதர்மங்களை விடாமற் செய்யவேண்டும்.

ஆத்ம த்ருஷ்டே: த்ரயோபி ஏதே யோகத்வாரேண ஸாதகா. || 25

கர்ம யோகமும் நேராக ஜீவாத்ம ஸ்வரூபத்தைக் காணக் கருவி யாகும் ; ஞான யோகமுமாம். அவையின்றி பகவத் பக்தி யோகமும் ஒருவாறு அநுஷ்டிக்கப்பட ஜீவாத்ம ஸ்வரூபத்தைக் காண்பதாம். ஆனால் இம் மூன்றில் ஒன்றைச் செய்வதோடு சிறிது காலம் ஆஸனத்

தில் அமர்ந்து வெளியிந்திரியங்களை அடக்கி மனத்தைத் தன் ஆத்ம ஸ்வருபத்திலே நிறுத்தி வைப்பதென்கிற ஆத்மயோகம் இன்றியமையாததென்க.

நிரஸ்த நிகிலாஜ்ஞாநோ த்ருஷ்ட்வா ஆத்மாநம் பராநுகம் |
ப்ரதிலப்ய பராம் பக்திம் தயைவ ஆப்நோதி தத் பதம் || 26

தேஹமே ஆத்மா என்ற விபரீத ஞானமும், ஆத்மாவொன்றே என்கிற விபரீதஞானமும் நீங்க நன்கறிந்து, உண்மையில் பரமாத்மாவுக்கு சேஷமான ஆத்மஸ்வரூபத்தைக் கீழ்ச்சொன்ன வழியினால் கண்டு அவனது அநுக்ரஹத்தினாலே பரபக்தியோகத்தை யனுஷ்டித்துப் பெற்று அதனாலேயே அவனது ஸ்தானமாம் பரமபதம் பெறுகிறான். ஆக பக்தியோக மொன்றுக்கே பகவத் ப்ராப்தியென்பது பலனாகும். கர்மயோகமோ ஞானயோகமோ மட்டும் அதனைப் பெறுவிக்காதென்றபடி.

பக்தியோக: ததர்த்தீ சேத் ஸமக்ர ஐச்வர்ய ஸாதக: |

ஒருவன் ஐச்வர்யமென்ற பலனை விரும்பினானாகில் அவனுக்கு பக்தியோகமே ப்ரும்மருத்ராதிகளும் பெறமாட்டாத பூர்ணைச்வர்ய பலனையுங்கூட பெறுவிக்கும்.

ஆத்மார்த்தீ சேத் த்ரயோ பி ஏதே தத்கைவல்யஸ்ய ஸாதகா: || 27

ஒருவன் கைவல்யத்தை விரும்புவானாகில், கர்மயோகம், ஞானயோகம், பக்தி யோகமென்ற மூன்றில் ஏதேனுமொன்று, அவனுக்கு விஷயானுபவம் பகவதனுபவமொன்றுமின்றி தனி ஆத்மானுபவமொன்றேயாம் கைவல்ய பலத்தையும் அளிக்கும். முன்னே, 'ஆத்மத்ருஷ்டேஸ் த்ரயோऽப்யேதே' என்றவிடத்தில் சரீரத்தோடிருக்கும்போதே ஆத்மஸ்வரூபத்தைக் காண்கை கூறப்பெற்றது. இவ்விடத்தில் சரீரம் கழிந்த பிறகு ஓரிடம் சென்று அனுபவிக்கப் பெறும் கைவல்ய பலன் சொன்னதெனத் தெளிக.

ஐகாந்த்யம் பகவத்யேஷாம் ஸமாநம் அதிகாரிணாம் |
யாவத்ப்ராப்தி பரார்த்தீ சேத் தத் ஏவ அத்யந்தம் அச்நுதே || 28

பகவத் பக்தியினாலேயே ஐச்வர்யம், கைவல்யம், மோக்ஷமென்கிற பலன்களிலொன்றைப் பெறும் அதிகாரிகள் எல்லோரும் ஏகாந்திகள்—அப்பலன் பெறும்வரை வேறொரு தேவதையைப் பற்றாதவராவர். பரமபதத்தையே விரும்பினவன் அதனையே முடிவின்றி அடைகிறான். மற்ற பலன்கள்போல் இதற்கு முடிவில்லை. ஆகையாலேயே இவனுடைய ஐகாந்தியத்திற்கும் முடிவில்லை. கர்மயோகிகளும் ஞானயோகிகளுங்கூட ஏகாந்திகளே.

ஜ்ஞாநீ து பரமைகாந்தீ ததாயத்தாத்ம ஜீவந: |
தத்ஸம்ச்லேஷ வியோகைக ஸுகதுக்கஸ் தேகதீ: || 29

பகவத் த்யாந யோகோக்தி வந்தந ஸ்துதி கீர்த்தநை: |
லப்தாத்மா தத்கதப்ராண மநோ-புத்தி-இந்த்ரியக்ரிய: || 30

நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித: |
உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம்அபீ: || 31

பகவதனுபவம் ஒழிந்த பலனைப் பலனாக நினைக்காமையால் ஞானியானவன், பகவானைக்கூட வேறு பலனுக்காகப் பற்றாமலிருக்கை உண்டானபோது பரமைகாந்தி எனப்படுகின்றவனாய், தனது தேஹ யாத்ரை தன் கர்மாவின்படி அவனுக்கு அதீனமென்றிருப்பவனாய், அவனது அனுபவ கைங்கர்யங்களைப் பெறுதலே ஸுகமாய், அவற்றை விட்ட சிறு பொழுதும் துக்கமாய், கைங்கர்யம் செய்யவியலாதபோதும் அவனையே சிந்திப்பவனாய், அவனை த்யானித்தல், ஆலயம் முதலான இடத்தில் அவனை அணுகுதல், கேட்பவருக்கு அவனை யறிவித்தல், வணங்குதல், துதித்தல், நாமஸங்கீர்த்தனம் என்றவையே தனக்கு இருப்பாய், மூச்சு விடுதல், மனத்தினால் ஒன்று நினைத்தல், ஒன்றைச் செய்ய முடிவு செய்தல், இந்த்ரியங்களைக் கொண்டு ஒன்று செய்தல் எல்லாம் அவனுக்கேயாம்படி யிருப்பவனாய், தனதான வர்ணாச்ரம தர்மம் தொடக்கமாக பக்தியோகம் வரையில் எப்போது எதைச் செய்தாலும், அவனிடத்தில் தான் வைத்திருக்கும் அன்பே உத்ஸாஹமாகச் செய்விக்கச் செய்கின்றவனாய், 'எதைச் செய்தாலும், 'இதனால் நேராகப் பலன் பெறுதல் இல்லை. எல்லாம் வியாஜம். ஸித்தோபாயமான அவன் அனுக்ரஹிக்க வேணும்' என்று அவனையே உபாயமாக்கிக் கொண்டு அளவற்ற காருண்ய ஸௌசீல்ய வாதஸல்யாதி குணக்கடலான அவனை யாச்ரயித்த தனக்கு இதற்கு முன் செய்துள்ள எத்தகைய வினைகளாலும், எவராலும், எங்கும் தீங்கு நேராதென்று அச்சமற்றிருப்பான்.

ஏகாந்தாத்யந்த தாஸ்யைகரதி: தத்பதமாப்நுயாத் |
தத்ப்ரதாநமிதம் சாஸ்த்ரம் இதி கீதார்த்த ஸங்க்ரஹ: || 32

இத்தகைய ஞானியாய் அவனொருவனுக்கே ஒழுவில்காலமெல்லாம் உடனாய் வழுவிலா அடிமை செய்வதிலொன்றிலே விருப்பம் உற்றவன் அவன் திருவடி யடைவான். வேறு பலன்களையும் பகர்வதானாலும் இந்த பகவத்கீதா சாஸ்த்ரத்திற்கு இஃதொன்றிலே முக்கிய நோக்காம். அதனாலேயே ஜீவாத்மாவின் ஸாக்ஷாத்காரத்திற்கு விரகு சொல்லி அதன் பிறகே பரமாத்ம(ஸ்வரூப)பக்தியை உபதேசித்தது. இவ்வாறு கீதார்த்த ஸங்க்ரஹம் முற்றும்.

ஸ்ரீ பகவத்யாமுநமுநயே நம:

பகவத் கீதையின் முடிவில், கண்ணபிரானுக்கும் அர்ஜுனனுக்கு மாக நடந்த கீதாஸம்வாதத்தை பக்தர்க்கு உரைப்பவர்க்கும், ஓதுகின்ற வர்க்கும், கேட்பவர்க்கும் பரபக்தியுண்டாகி மோக்ஷமுண்டு என்று கண்ணபிரானே (69–71) அருளிச் செய்திருப்பதையும் ஒரு பாசுரத்திலே பகர்ந்து பலனை யறிவிக்கிறார். அங்கே, 'உரைத்தவனுக்கு பக்தி யோகத்தினால் பகவத் ப்ராப்தி; ஓதுகின்றவனுக்கு அந்த ஓதுதலே ஜ்ஞாந யஜ்ஞாநுஷ்டானமாம்; ச்ரத்தையுடனும், பொறுமையின்றியும் கேட்பவன் புண்ய லோகங்களை யடைகிறானென்று வெவ்வேறு பலன்கள் கூறப்பட்டனபோல் தோன்றினாலும் ஒரு பலனே ஒருவாறாகும்படி பாஷ்யத்திலே உரைத்திருப்பதால் அதற்கு இணங்க இங்கும் அருளிச் செய்கிறார்.

20. வன்பற்றறுக்கு மருந்தென்று மாயவன் தானுரைத்த
இன்பக் கடலமுதாமென நின்ற இக் கீதைதனை
அன்பர்க்குரைப்பவர் கேட்பவர் ஆதரித்தோதுமவர்
துன்பக்கடலுள் துளங்குகை நீங்கித் துலங்குவரே.

வல் பற்று—ஐச்வர்ய பலன்களில் வரும் வலிதான ஆசையை
அறுக்கும் மருந்து என்று—வேர் அறுக்க இதே மருந்தாகும் என்று
மாயவன் தான் உரைத்த–மாயையில் புகுத்தும் பிரானே அருளிச்செய்த
இன்பம் கடல் அமுது ஆம்–இன்பத்திரளாம் பாற்கடலினின்று கடைந்த அமிருத (மிகபோக்ய) மாம் இது
என நின்ற இ கீதைதனை—என்று மஹாபாரதாதிகளிற் புகழ்பெற்ற இந்த ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதத்தை
அன்பர்க்கு உரைப்பவர்—பகவத் பக்தர்களுக்கு போதிக்கின்றவரும்
ஆதரித்து கேட்பவர் ஓதுமவர்—ச்ரத்தையுடன் செவிகொடுத்து அறிகின்றவரும், படிப்பவரும்
துன்பம் கடலுள்—துக்கமயமான ஸம்ஸாரக் கடலிலே
துளங்குகை நீங்கி—தடுமாறுதல் ஒழிவதால்
துலங்குவர்—ஒளிபொருந்தி யிருப்பர்.

இன்பக் கடலாவது உபநிஷத்துக்களின் திரள். அதினின்று கடைந்தெடுத்த அமுதம் கீதோபநிஷத்தான ஸ்ரீக்ருஷ்ணோபதேசம். இதனை மஹாபாரதத்தில் அடங்கிய அமுதத்தின் ஸர்வஸாரமாக்கினார் வியாஸ மஹர்ஷி. ஆக ஸ்ரீக்ருஷ்ணோபதேசமானது இந்த கீதாக்ரந்தத்தின் ஸாரம்; கடையப்பட்ட உபநிஷத் ஸமுத்ரத்திற்கும் ஸாரம். இதே 'பாரதாம்ருதஸர்வஸ்வகீதாயா: மதிதஸ்ய ச. ஸாரம் உத்த்ருத்ய க்ருஷ்ணேந அர்ஜுநஸ்ய முகே ஹுதம்' என்கிற (பீஷ்ம–43) ச்லோகம் பாரதத்தில் உண்டாகில் அதற்குப் பொருளாம்.

இந்தப் பிரபந்தம் அருளினதற்குப் பலன் குறித்தருளுகிறார்:—

21 தீதற்ற நற்குணப்பாற்கடல் தாமரைச் செம்மலர்மேல்
மாதுற்ற மார்பன் மருவ இன் கீதையின் வண்பொருளைக்
கோதற்ற நால்மறைமௌலியின் ஆசிரியன் குறித்தான்
காதல் துணிவுடையார் கற்கும் வண்ணம் கருத்துடனே.

இன் கீதையின்—இனியதான இந்த கீதா சாஸ்திரத்தின்
வண் பொருளை—விலக்ஷணமான அர்த்தத்தை
தீது அற்ற நல்குணம்—நிக்ரஹமின்றி அனுக்ரஹமே வடிவான—
பாற்கடல் தாமரை—திருப்பாற்கடலில் இருக்கும் தாமரையின்
செம் மலர் மேல் மாது-செந்தாமரைப் பூவில் வாசம் செய்யும் திருமகள்
உற்ற மார்பன் மருவ—காதலுடன் அம்மலருக்கு மேலாகப் பற்றின திருமார்பையுடைய பிரான் உவக்கும்படி
கோது அற்ற—குற்றம் சிறிதுமில்லாத
நால்மறை மௌலியின் ஆசிரியன்—நான்கு வேதங்களின் முடிவான வேதங்களுக்கு—ஆசார்யர் (வேதாந்த தேசிகன்)
காதல் துணிவு உடையார்—பக்தி ப்ரபத்திகளை ஆதரிக்குமவர்
கற்கும் வண்ணம்—அப்யஸித்து அறியும்படியாக
கருத்துடன்—ஆளவந்தாருடையவும் எம்பெருமானாருடையவும் கருத்தில் கருத்துடனும், படிப்பவரிடம் ப்ரீதியுடனும்
குறித்தான்—இப்பிரபந்தத்தில் தெரிவித்தார்.

(இது ஸ்ரீ உத்தமூர் தி. வீரராகவாசார்யர் இயற்றிய கீதாஸாரத்தில் ஒரு பாகம்.)

சுபமஸ்து

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:



# अथ श्रीमद्भगवद्गीताश्लोकान्तर्गतपदानाम्-अकारादिवर्णानुक्रमः

पदानि अ० श्लो०

पदानि अ० श्लो०



**पा.**



**पि.**



**पी.**



**पु.**

पदानि अ० श्लो०



पदानि अ० श्लो०



पदानि अ० श्लो०



पदानि अ० श्लो०



**मा**

पदानि अ० श्लो०

सहजम् १८—४८
सहदेवः १—१६
सहयज्ञाः ३—१०
सहसा १—१३
सहस्रकृत्वः ११—३९
सहस्रबाहो ११—४६
सहस्रयुगपर्यन्तम् ८—१७
सहस्रशः ११—५
सहस्रेषु ७—३
संकरस्य ३—२४
सकरः १—४२
संकल्पप्रभवान् ६—२४
संख्ये १—४७; २—४
संग्रहेण ८—११
संघातः १३—६
संजय १—१
संजयः १—२, २४, ४७;
२—१, ९; ११—९,
३५, ५०; १८—७४
संजनयन् १—१२
संजयति १४—९, ९
संजायते २—६२;
१३—२६; १४—१७
संज्ञार्थम् १—७
संतरिष्यसि ४—३६
संतुष्टः ३—१७;
१२—१४, १९
संदृश्यन्ते ११—२७
संनियम्य १२—४
संनिविष्टः १५—१५
संन्यसनात् ३—४
संन्यस्य ३—३०; ५—१३;
१२—६; १८—५७
संन्यासयोग-
युक्तात्मा ९—२८
संन्यासस्य १८—१
संन्यासम् ५—१; ६—२;
१८—२
संन्यासः ५—२, ६;

पदानि अ० श्लो०

संन्यासिनाम् १८—१२
संन्यासी ६—१
संन्यासेन १८—४९
संपत् १६—५
संपदम् १६— ३, ४, ५
सपद्यते १३—३०
संपश्यन् ३—२०
सप्रकीर्तितः १८—४
संप्रतिष्ठा १५—३
संप्रवृत्तानि १४—२२
सप्रेक्ष्य ६—१३
संप्लुतोदके २—४६
सबन्धिनः १—३४
सभवन्ति १४—४
संभवः १४—३
सभवामि ४—६, ८
संभावितस्य २—३४
संमोहम् ७—२७
संमोहः २—६३
समोहात् २—६३
संयतेन्द्रियः ४—३९
सयमताम् १०—२९
सयमाग्निषु ४—२६
सयमी २—६९
सयम्य २—६१; ३—६;
६—१४; ८—१२
संयाति २—२२; १५—८
संवादम् १८—७०, ७४, ७६
संवृत्तः ११—५१
संशयस्य ६—३९
संशयम् ४—४२; ६—३९
संशयः ८—५; १०—७;
१२—८
संशयात्मनः ४—४०
संशयात्मा ४—४०
संशितव्रताः ४—२८
संशुद्धकिल्बिषः ६—४५
संश्रिताः १६—१८
संसारेषु १६—१९
३—२०;

पदानि अ० श्लो०

८—१५; १८—४५
ससिद्धौ ६—४३
सस्तभ्य ३—४३
संस्पर्शजाः ५—२२
संस्मृत्य १८—७६, ७६
७७, ७०
संहरते २—५८

## स.

सः १—१३, १९, २७;
८—१५, २१, ७०, ७१;
३—६, ७, १२, १५, २१,
४२; ४—२, ३, ९, १४,
१८, १८, २०; ५—३,
५, १०, २१, २३, २३,
२४, २८; ६—१, २३, ३०,
३१, ३२, ४४, ४७;
७—१७, १८, १९, २२;
८—५, १०, १३, १९,
२०, २२; ९—३०, ३०;
१०—३, ७; ११—१४,
५५; १२—१४, १५,
१६, १७; १३—३,
२३, २७, २९; १४—१९,
२५, २६; १५—१, १९;
१६—२३; १७—३, ३,
११; १८—८, ९, ११,
१६, १७, ७१

## सा.

सा २—६९; ६—१९;
११—१२; १७—२;
१८—३०, ३१, ३२,
३३, ३४, ३५
साक्षात् १८—७५
साक्षी ९—१८
सागरः १०—२४
सात्यकिः १—१७
सात्त्विकप्रियाः १७—८
सात्त्विकम् १४—१६;
१७—१७, २०;
१८—२०, २३, ३७

पदानि अ० श्लो०

सात्त्विकः १७—११;
१८—९, २६
सात्त्विकाः ७-१२; १७—४
मात्त्विकी १७—२;
१८—३०, ३३
साधर्म्यम् १४—२
साधिभूताधिदैवम् ७—३०
माधियज्ञम् ७—३०
साधुभावे १७—२६
साधुषु ६—९
साधुः ९—३०
साधूनाम् ४—८
साध्याः ११—२२
साम ९—१७
सामर्थ्यम् २—३६
सामवेदः १०—२२
सामासिकस्य १०—३३
साम्नाम् १०—३५
साम्ये ५—१९
साम्येन ६—३३
साहकारेण १८—२४
साख्ययोगौ ५—४
साख्यम् ५—५
साख्यानाम् ३—३
सांख्ये २—३९; १८—१३
सांख्येन १३—२४
सांख्यैः ५—५

## सि.

सिद्धये ७—३; १८—१३
सिद्धसंघाः ११—३६
सिद्धः १६—१४
सिद्धानाम् ७—३;
१०—२६
सिद्धिम् ३—४; ४—१२;
१२—१०; १४—१;
१६—२३; १८—४५,
४६, ५०
सिद्धिः ४—१२
सिद्धौ ४—२२
सिद्ध्यसिद्ध्योः २—४८;

समाप्तिमगमदयं श्रीमद्भगवद्गीताश्लोकान्तर्गतपदानां वर्णानुक्रमः ।

## BOOKS READY FOR SALE

| No. | Title | Rs. | P. |
|---|---|---|---|
| 1. | Sri Bhashya with Sruta Prakasika | 50 | 00 |
| 2. | Sri Bhashya with Bhashyartha Darpana | 25 | 00 |
| 3. | Vedanta Dipa | 4 | 00 |
| 4. | Paramartha Bhushana | 25 | 00 |
| 5. | Vaiseshika Darsana with Rasayana | 7 | 00 |
| 6. | Tarkasangraha with Sukha Pravesini | 1 | 00 |
| 7. | Upayukta Parayana | 2 | 50 |
| 8. | Rakshagranthas — by Srimad Vedanta Desika | 10 | 00 |
| 9. | Seswara Mimamsa and Mimamsa Paduka with Commentary | 10 | 00 |
| 10. | Yadavabhyudaya with Appayya Dikshita's Commentary and Tamil Translation | 40 | 00 |
| 11. | Paduka Sahasra with " " | 35 | 00 |
| 12. | Sankalpa Suryodaya with Sanskrit and Tamil Commentaries | 30 | 00 |
| 13. | Subhashita Nivi " " | 15 | 00 |
| 14. | Sri Bhagavad Gita with Sri Ramanuja Bhashya & Sri Desika's Commentary and footnotes | 35 | 00 |
| 15. | ஸ்ரீ பகவத்கீதை தமிழ் பெயர்ப்பு—கீதார்த்தம் | 20 | 00 |

**All other Sri Desika's works are being published.**

# Ubhaya Vedanta Granthamala

**25, Nathamuni Street, T. Nagar**

**Madras - 17**